உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## ஆரணிய காண்டம்

(முதற் பகுதி)







அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1963

# உள்ளுறை

# கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

*தலைவர் :*

பேராசிரியர், வித்துவான், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A.,B.L.

*உறுப்பினர்கள் :*

பேராசிரியர், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

திருவாளர் பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

,, நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

,, மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்

,, பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்

*செயலாளர் :*

திரு. கி. இராமாநுஜையங்கார் அவர்கள்

# ஆரணிய காண்டம்

## பதிப்புரை

(பேராசிரியர், வித்துவான், கோ. சுப்பிரமணிய பிள்ளை, M.A., B.L.
தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர், அண்ணமலைப் பல்கலைக் கழகம்)

வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக் கொன்று
வண்டமிழ்மா முனிகொடுத்த வரிவில் வாங்கிக்
கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கிக்
கரனோடு தூடணன்றன் உயிரை வாங்கிச்
சிலைவணக்கி மான்மறிய எய்தான் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
தலைவணக்கிக் கைகூப்பி யேத்த வல்லார்
திரிதலால் தவமுடைத்தித் தரணிதானே.

(குலசேகரர். 10. 5.)

“ திருவுடைய திசைக்கருமம் திருத்தப்போய்த் தண்டகாரணியம் புகுந்து, மறைமுனிவர்க்கு ‘அஞ்சேல்மின்’ என்று அருள்கொடுத்து, வெங்கண் விறல் விராதன் உக வில் குனித்து, வண்தமிழ் மாமுனி கொடுத்த வரிவில் வாங்கிப் புலர்ந்தெழுந்த காமத்தால் தன் ‘சீதைக்கு நேராவன்’ என்று பொன்னிறங்கொண்ட சுடுசினத்த சூர்ப்பணகை கொடிமூக்கும் காதிரண்டும் கூரார்ந்தவாளால் ஈரா விடுத்துக் கரனோடு தூடணன்றன் உயிரை வாங்கி, அவள் கதறித் தலையில் அங்கைவைத்து மலையிலங்கை ஓடிப்புக, கொடுமையில் கடுவிசையரக்கன், அலைமலி வேற்கண்ணளை அகல்விப்பான் ஓருருவாய மானையமைத்துச் செங்கற்பொடிக் கூறைச் சிற்றெயிற்று முற்றல்மூங்கில் மூன்று தண்டத்தனாய் வஞ்சித்து, இலைக்குரம்பில் தனியிருப்பில் கனிவாய்த் திருவினைப்பிரித்து, நீள்கடல்சூழ் இலங்கையுள் அரக்கர்குடிக்கு நஞ்சாகக் கொடுபோய் வம்புலாம் கடிகாவில் சிறையாவைக்க, அயோத்தியர்கோன், மாயமான் மாயச் செற்று, அலைமலி வேற்கண்ணளை அகன்று தளர்வெய்திச் சடாயுவை வைகுந்தத்தேற்றிக் கங்குலும் பகலும் கண் துயிலின்றிக் கானகம்படி உலாவியுலாவிக் கணையொன்றினால் கவந்தனை மடித்துச் சவரிதந்த கனி உவந்து ” (பாசுரப்படி ராமாயணம்) என்பது இக் காண்டத்தின் நுவல்பொருட் சுருக்கமாகும்.

இராமாவதார நூலின் மூன்ருவது பெரும் பிரிவாகிய இக்காண்டத்துள் அமைந்த படலம் 11. பாடல் 1,200. கதையுறுப்பினர்,

சரபங்கர், அகத்தியர், சடாயு, சபரி என்னும் தக்காரும், விராதன், சூர்ப்பணகை, கரன், திரிசிரன், தூடணன், மாரீசன், இராவணன், அயோமுகி, கவந்தன் என்னும் தீயோரும் ஆவர்.

தக்காருள், சரபங்கர் முன்வருகிறூர். சத்தியலோக வாழ்வையும், 'அற்பம், கருதேன்; என் அருந்தவமோ கற்பம் பல சென்றது', 'சிறுகா பெருகா நிலேயோ திரியா – குறுகா நெடுகா குணம் வேறுபடா – உறுகால்கிளர் பூதமெலாம் உகினும் – மறுகா நெறி எய்துவென்' என்னும் சரபங்கர் கூற்ருல் அவர் தவத்தின் மாண்பும், புன்பயன் விழையா நன்மதிவீறும் புலனுகும். இவர் கூற்றைச் சில சொற்களால் பொருட்செறிவுடைய உரையாடலாகவும், "குறுகா நீளா இறுதிகூடா எனேயூழி – சிறுகா பெருகா அளவிலின்பஞ்சேர்ந்தாலும் – மறுகாலின்றி மாயோன்! உனக்கே யாளாகும் – சிறு காலத்தை யுறுமோ அந்தோ! தெரியிலே" (திருவாய்மொழி–6. 9. 10) என்னும் அருளிச் செயலின் சொற்பொருளமைதி யுடையதாகவும் அமைத்த ஆசிரியர் கவித்திறம் படிக்குந்தோறும் இன்பம் பயப்பதாகும்.

அடுத்துவருபவர் அகத்தியர். இவர் முக்காலமு முணர்ந்தவர்; செயற்கரிய பல செயல்களேச் செய்தவர்; உலக நலமே குறிக்கோளாகக் கொண்டவர்; ஈசனிகரா யுலகு சீர்பெற இருந்தவர்; தமிழை என்றுமுள தாக்கித்தந்த பெருந்தவர். அரக்கரை அழிக்குங் குறிக்கோளுடைய இராமனுக்கு அதற்கேற்ற இடம் பஞ்சவடி என்று கூறி, மேருவில்லும் முப்புரமெரித்த அம்பும் வழங்கியருளியவர். அரக்கரழிவுக்கெல்லாம் மூலகாரணமாகிய சூர்ப்பணகை வரவு இவர் குறித்த பஞ்சவடிதீரத்திலே நிகழ்ந்தமை இங்கு நோக்கத்தகும்.

அப்பால் சடாயு பேசப்படுகிறூர். இவர் சம்பாதியின் தம்பி; கழுகுகளுக்கு அரசர்; பேராற்றலர்; உலகெங்கும் தன்னுணே செலுத்திய தசரதனுகிய தந்தையைப் பிரிந்த இராமனுக்கு உற்றுழியுதவும் தந்தையாக வந்து உதவியவர். இராவணன் சானகியைக் கவர்ந்து செல்வதறிந்து அவனேடு பொருது அவனுற்றலேயெல்லாம் அழித்த நிலேயில், அவன் தெய்வவாள்கொண்டு தாக்க, நிலேயாத புலேயுடம்பு விட்டு, நிலேத்த புகழுடம்பெய்தி மீட்சியில் வீடும் பெற்றவர்; இவர் தகுதிகொண்டு இவர்க்கு இராமன் பிரமமேத முறையால் இறுதிக் கடனியற்றினன் என்பர். இவரைப் பெரிய உடையார் என்ற சிறப்புப் பெயரால் வழங்குவர் பெரியோர்.

இக்காண்டத்தின் முடிவில் வருபவர் தவமுதியாரான சபரி என்பவராவர். இவர், மதங்கமுனிவரிடம் பயின்றவர்; யோக நிலே கைவந்தவர். தாய்மாரைப் பிரிந்து வனம்புகுந்த இராமனுக்குத் தவப்பெருந் தாயாகி விருந்தூட்டும் பேறுபெற்றவர்; பிராட்டியைத்

தேடும்பணியில் உதவிபுரியத்தக்க சுக்கிரீவன் இருப்பிடத்தையும் அதற்குச் செல்லும் நெறியினையும் இராமனுக்கு விரித்துரைத்தவர்; இராமன் வருவதை எதிர்பார்த்துக் காத்திருந்து, அவனைக் கண்டு மகிழ்ந்து விருந்தூட்டி உரையாடியபின் யோக நெறியினால் வீடு பெற்றவர்.

இனி விராதனும் கவந்தனும் முன்னைத் தீவினையால் இழிபிறவி யெய்தி இராமனருளால் உய்திபெற்றார். சூர்ப்பணகையும் அயோமுகி யும் அரக்கமகளிர். இருவரும் முறையே இராமன்மீதும் இலக்குவன் மீதும் கொண்ட பொருந்தாக் காமத்தால், தீங்கியற்றியமையால் ஒறுக்கப்பட்டவர்கள். கரன், திரிசிரன், தூடணன் என்போர், சூர்ப்பணகை மூலமாக மூண்டபோரில் இராமனால் கொல்லப் பட்டவர். மாரீசன் வஞ்சனையே உருவான ஓர் அரக்கன்; இராவண னுக்கு மாமன் முறையினன்; சீதையைக் கவர்தற்கு நினைந்த இராவ ணன் வேண்டுகோளின்படி பொன்மானுருவொடு வந்து இராமனை நெடுந்தூரம் பிரித்துச் சென்று, பின் இராமன் கணையால் இறந் தவன். இராவணன் இலங்கையரசன்; அரக்கன்; எல்லையற்ற பேராற்றலன்; பெருந்தவத்தால் பெற்ற நிறைந்த வாழ்நாளும் வரங்களும் உடையவன். சூர்ப்பணகை வாய்மொழியால் சீதையின் அழகெல்லாம் கேட்டு, அத்தேவிபால் காதல்கொண்டு அவளை யடைய மாரீசனுதவிபெற்றுத் துறவி வேடத்தோடு சீதையிருந்த பன்னசாலையுட்புக்கு அவளைக் கவர்ந்து சென்று இலங்கையிற் சிறை வைத்த கொடியோன்; 'விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தா ரிற்—றீமை புரிந்தொழுகுவார்', 'எனைத்துணையராயினு மென்னாம் தினைத்துணையும் தேரான் பிறனில்புகல்' (143, 144) 'வலியில் நிலை மையான் வல்லுருவம் பெற்றம் - புலியின்றோல் போர்த்து மேய்ந் தற்று' (273) என்னும் பொய்யாமொழிக்கு எடுத்துக்காட்டாய் நிற்பவன்.

தக்கோரைத் தலையளித்தலும், தீயோரை ஒறுத்தலும், புகல் புகுந்தாரைக் கைவிடாது காத்தலும் இந்நூல் நுவலும் பொருள் களுள் சிறந்தனவாகும்.

அவற்றுள், சரபங்கர்க்கும் சடாயுவுக்கும் சபரிக்கும் அருளியது தக்கோரை யளித்ததாகும். விராதன், சூர்ப்பணகை, கரனாதியர், மாரீசன், அயோமுகி, கவந்தன் என்போரை ஒறுத்தது தீயோரைத் தெறுதலாகும். 'அருளுடை வீர நின் னபயம் யாம்' என்ற தண்டக வனத்துறை தாபதர்க்கு, 'சூரறுத்தவனும் சுடர்நேமியும் - ஊர் அறுத்தவொருவனும் ஓம்பினும் — ஆர் அறத்தினொ டன்றி நின்றா ரவர் — வேரறுப்பன் வெருவன்மின்' என்று இராமன் அவரொடு

பத்தாண்டுகள் தங்கி அவரிடர்களைந்துதவியது புகல் புகுந்தாரைக் கைவிடாது காத்தலாகும்.

நாடக நூலமைதிகொண்டு நோக்கின் இக்காண்ட நுவல் பொருள், இராவணனிழைத்த தீமையென்னும் வித்து (முளைக் கொண்டு) நாற்ருகும் பிரதிமுகம் என்னும் சந்தியாகும்.

கடவுள் வாழ்த்தும், இராமனைநோக்கி விராதனும், இந்திரனும், கவந்தனும் துதிக்கும் பகுதிகளும் அரிய மறை முடிவுகளை இனிது தெளிய விளக்குவனவாய் அமைந்துள்ளன.

சரபங்கர்க்கும் இந்திரனுக்கும், இராமனுக்கும் சூர்ப்பணகைக் கும், இராவணனுக்கும் சூர்ப்பணகைக்கும் இடையே நிகழும் உரை யாடலையும், பஞ்சவடியின் அமைதியினையும், இராவணன் கொலு விருக்கும் நிலையினையும் ஆசிரியர் உரைக்கும்முறை படிக்குந்தோறும் இன்பம் பயக்கும்.

சூர்ப்பணகை இராமன்பால் அன்பு செய்தனளாயினும், அது, தன்னின்பம் ஒன்றே கருதி நிகழ்ந்தமையின் பயன் விளையாதா யிற்று. அயோமுகி இலக்குவன்பாற் கொண்ட காதலும் அத்தன் மையதே.

இக்காண்டத்தின் ஒவ்வொரு படல முன்னுரையுள்ளும் அப் படலத்தால் அறியவேண்டிய பொருள்கள் விரித்து விளக்கப்பட் டுள்ளன.

அண்ணுமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுவரும் கம்பராமாய ணப் பதிப்புள், இது ஆரணிய காண்டத்தின் முதற்பகுதியாகும்.

இதனுள், விராதன் வதைப் படலம் முதல் கரன் வதைப் படலம் முடிய ஆறு படலங்கள் அமைந்துள்ளன.

அவற்றுள் விராதன் வதைப் படலத்துக்கும் கரன் வதைப் படலத்துக்கும் தமிழ் - ஆராய்ச்சித்துறை விரிவுரையாளர் திரு. கி. இராமாநுஜையங்காரவர்களும், சரபங்கன் பிறப்பு நீங்கு படலத் துக்குத் தமிழ்-ஆராய்ச்சித்துறை விரிவுரையாளர் சிரோமணி வித்து வான் P. S. இராமாநுஜாசாரியார் அவர்களும், அகத்தியப் படலம், சடாயு காண் படலம், சூர்ப்பணகைப் படலம் என்பவற்றுக்குத் தமிழ்-ஆராய்ச்சித்துறை விரிவுரையாளர் வித்துவான் திரு. செ. வேங்கட ராமச் செட்டியாரவர்களும் உரை வரைந்துள்ளார்கள்.

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் தலைமையில், திரு. கி. இராமாநுஜையங்கார், சிரோமணி,

வித்துவான், திரு. P. S. இராமாநுஜாசாரியர், வித்துவான் திரு. செ. வேங்கடராமச் செட்டியார், புலவர் திரு. சோம. இளவரசு, புலவர் திரு. K. இராமச்சந்திரன் என்போர் ஆரணிய காண்டத்தின் அச்சுப் புத்தகங்களோடு 32 ஓலைச் சுவடிகளை ஒப்புநோக்கித் தொகுத்த பாட வேறுபாடுகள், இதன்கண் பிற்சேர்க்கையாகத் தரப்பெற்றுள்ளன.

சொல்லின் செல்வர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் இக்கம்பராமாயணப் பதிப்புக் குழுவின் தலைவராக இருந்து ஏழு ஆண்டுகள் நற்பணி புரிந்து வந்தார்கள். அவர்கள் மறைவு ஈடு செய்தற்கரியதொரு பேரிழப்பாகும். இந்த ஆரணிய காண்டத்தின் முதற்பகுதி ஆராய்ச்சி நடக்கும்பொழுதெல்லாம் உடன் இருந்த அவர்களை இப் பகுதிப்பணி முற்றுப்பெறுந் தறுவாயில் பிரிய நேர்ந்தது குறித்துப் பெரிதும் வருந்துகின்ற நிலையில் இப் பதிப்புக் குழுவின் இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப் பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச் சுவடிகளைக் கொடுத்துதவிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கும், தஞ்சைச் சரசுவதிமகால் நூல் நிலையத்தார்க்கும் பல்கலைக் கழகத்தின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்தகைய தமிழ்த் தொண்டுகள் சிறப்பாக நிகழ்தற்கு வேண்டிய பொருளுதவியினைப் புரிந்துவரும் இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுவினர் பெரிதும் பாராட்டற்கு உரியவராவர். இவ்வாறே கம்பராமாயணத்தின் ஏனைய காண்டங்களும் திருத்தமாக வெளிவரும் வண்ணம் இந்தியப் பேரரசும் தமிழ் நாட்டு அரசாங்கமும் ஆவனபுரிந்து ஆதரித்துவரும் என நம்புகிறேன்.

இதனைக் கண்கவர் வனப்புடன் அச்சிட்டுதவிய சென்னைக் கமர்ஷியல் அச்சகத்தார் பணி பாராட்டற்குரியதாகும்.

**கோ. சுப்பிரமணியம்**
தலைவர், கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

உ

# மூன்றாவது
# ஆரணிய காண்டம்

## கடவுள்வாழ்த்து

2605. பேதி யாதுநிமிர் பேதவுரு வம்பிறழ்கிலா
★ வோதி யோதியுண ருந்தொறு முணர்ச்சியுதவும்
வேதம் வேதியர் விரிஞ்சன்முத லோர்தெரிகிலா
வாதி நாதரவ ரெம்மறிவி னுக்கறிவரோ.

பேதியாது நிமிர் பேத உருவம் பிறழ்கிலா,
ஓதி ஓதி உணருந்தொறும் உணர்ச்சி உதவும்,
வேதம் வேதியர் விரிஞ்சன்முதலோர் தெரிகிலா,
ஆதி நாதர் அவர் எம் அறிவினுக்கு அறிவு அரோ.

பொழிப்பு:—தன்மை வேறுபடாமல் வளரும் வேறுபாடுடைய உருவுடைப் பொருள்கள் நீங்காதிருக்கின்ற—நூல்களைப் பலகாலும் பயின்று அறியுந்தோறும் உண்மையறிவை அருளுகின்ற—வேதங் களும் வேதியரும் பிரமன் முதலிய தேவரும் அறியாத—உலக காரண ராகிய தலைவர் (எவர்) அவர் எம் அறிவுக்கு அறிவாய் விளங்குபவர்.

குறிப்பு:—இயங்குதிணையும் நிலைத்திணையுமாய்ப் பலவேறு வகைப்பட்ட வடிவுடைய பொருள்கள் தோறும் அப்பொருள்களின் தன்மை வேறுபடாமலும், அப்பொருள்களின்கண் உறையும் தன் தன்மை வேறுபடாமலும் நீக்கமற நிறைந்து தங்குபவனும், நூல் களைப் பலகாலும் பயின்று தெளியுந்தோறும் உண்மையறிவை அருள்பவனும், வேதங்களாலும் வேதியராலும் பிரமன் முதலிய தேவராலும் அறியப்படாதவனும் உலக காரணனும் ஆகிய தலைவன் எவன்? அவன் என் அறிவுக்கு அறிவாய்விளங்குபவன்; அவனருளால் எய்திய அறிவினால் யான் மேற்கொண்ட இராம கதை இயற்றுத லாகிய பணி இனிது நிறைவுறும் என்றவாறு. பிறழ்கிலா, உதவும், தெரிகிலா என்னும் எச்சங்கள் ஆதிநாதர் என்னும் பெயர்கொண்டு முடிந்தன. ஆதி – காரணம். பேதியாது - வேறுபடாமல்; அது, (நிமிர்பேதவுருவுடையவற்றில் தங்கியமையால், ஆதிநாதனாகிய) தன் தன்மை வேறுபடாமல் எனவும், நிமிர் பேத வுருஉடையவற்றின் தன்மை வேறுபடாமல் எனவும் கொள்ள நின்றது. நிமிர் பேதவுருவம்

என்றது பஞ்சபூதக் கலப்பால் உண்டாகி அளவற்றவையாய் உள்ள இயங்குதிணையும் நிலைத்திணையும் ஆகிய பலவேறு உருவுடைப் பொருள்களை. இவற்றையே, ‘வானின்றிழிந்து வரம்பிகந்த மா பூதத்தின் வைப்பு’ (1399) என்று முன்னும் கூறினர்; ‘ஒன்றினே டொன்றொவ்வாப் பூதங்கள்’ (2652) என்று பின்னும் கூறுவர். நிமிர் பேதவுருவம் பிறழ்கிலா ஆதிநாதர் என்பது, அளவற்றனவாய் வேறுபட்டனவாய் உள்ள உருவுடைப் பொருள்கள் எல்லாவற்றுள்ளும் (சிறிதும்) நீங்காது தங்கிய ஆதிநாதர் எனவும், அளவற்றனவாய் வேறுபட்டனவாய் உள்ள உருவுடைப் பொருள்களெல்லாம் நீங்காது தங்கிய ஆதிநாதர் எனவும், நாராயணன் என்னும் பெயர்க்கு வடமொழியாளர் இருவகையாற் கொள்ளும் பொருளும் தோன்ற அமைந்தது. பிறழ்கிலா – நீங்காத; அதாவது நீங்காது தங்கிய என்றபடி. ஓதியோதி என்ற தொடரின் முன் நூல்கள் என்னும் செயப்படுபொருள் வருவித்துரைக்கலா யிற்று. உணர்ச்சி - மெய்யுணர்வு. அதாவது தத்துவஞானம். வேதம் என்னும் சொல் அறிவிப்பது என்று பொருள்படும். செய்வன தவிர்வனவற்றை விதி விலக்குகளால் அறிவிக்கும் நூல் வேதம் என்று பெயர் பெற்றது. வேதியர் - வேதம் கூறிய முறையே ஒழுகுபவர். விரிஞ்சன் - பிரமன். உலக காரணனும் தலைவனும் என்பது புலப்பட ஆதிநாதர் என்றார். ஆதிநாதர் என்னும் பெயர்க்கும் அவர் என்னும் சுட்டுப் பெயர்க்கும் இடையே எவர் என்னும் வினைப்பெயரை வருவித்து, ஆதிநாதர் எவர் அவர் என இயைக்க. இவ்வாறே, ‘அலகிலா விளையாட்டுடையார் எவர் அவர் தலைவர்’ என வினைப்பெயரை இடையே வருவித்துக்கொள்ளும்படி, ‘அலகிலா விளையாட்டுடையாரவர் தலைவர்’ (1) என முன்னும் கூறியமை காண லாம். பேதியாது நிமிர் பேதவுருவம் பிறழ்கிலா ஆதிநாதர் எவர் அவர், ஓதியோதி உணருந்தொறும் உணர்ச்சியுதவும் ஆதிநாதர் எவர் அவர், வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா ஆதி நாதர் எவர் அவர் எம் அறிவினுக்கு அறிவு என முற்றுவிக்க. பேதி யாதுநிமிர் பேதவுருவம் பிறழ்கிலா ஆதிநாதர் எவர் அவர் எம் அறிவினுக்கு அறிவு, ஓதியோதி உணருந்தொறும் உணர்ச்சியுதவும் ஆதிநாதர் எவர் அவர் எம் அறிவினுக்கறிவு, வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா ஆதிநாதர் எவர் அவர் எம் அறிவி னுக்கு அறிவு எனத் தனித்தனி முற்றுவித்தலும் அமையும். இங்கு, ‘உயர்வற வுயர்நலம் உடையவன் யவன் அவன், மயர்வற மதிநலம் அருளினன் யவன் அவன், அயர்வறும் அமரர்கள் அதிபதி யவன் அவன், துயரறு சுடரடி தொழுதெழென் மனனே’ (திருவாய்மொழி 1. 1. 1) என்னும் அருளிச்செயற் பாசுரமும் அதன் உரையும் நோக் கத்தகும். எம் தனித் தன்மைப் பன்மை; கவிஞர் இங்ஙனம் கூறுதல் மரபு; உலகத்தாரையும் உளப்படுத்திக் கூறியதும் ஆம். உயிர்கள்

தாமே அறியாமல் இறைவன் அறிவிக்க அறிதலின் இறைவனை 'எம் மறிவினுக்கறிவு' என்றார். கில் இரண்டனுள் முன்னது பொருளற்ற இடைச்சொல்; பின்னது ஆற்றலுணர்த்தும் இடைச்சொல். அரோ அசை.

பேதியாது நிமிர் பேதவுருவம் பிறழ்கிலா ஆதிநாதர் என்பது, "தன்னுள் அனைத்துலகும் நிற்க, நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்" (திருவாய்மொழி 9. 6. 4) என்று ஆன்றோர் அருளியதைத் தழுவியமைந்தது. 'தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்றசுடர்' (சரபங்கன். 27), 'தன்னுளே உலகங்களெவையுந் தந்தவை, தன்னுளே நின்றுதான் அவற்றுட்டங்குவான்' (யுத்த. இரணியன்வதை. 59) என்று ஆசிரியர் பிற இடங்களிற் கூறுவனவும் இங்கு நோக்கத்தகும்.

ஓதியோதி யுணருந்தொறும் உணர்ச்சியுதவும் ஆதிநாதர் என்பது, 'மயர்வற மதிநலம் அருளினன் யவன் அவன்' (திருவாய்மொழி. 1.1.1.) என்னும் அருளிச் செயலின் கருத்தமைதியுடையது. 'ஆய்ந்த வுணர்வின் உணர்வே' (சரபங்கன். 27), 'அறிவினுக்கறிவு மாயினான்' (இரணியன்வதை. 76) என்று ஆசிரியர் மேலும் கூறுவர்.

'வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா ஆதிநாதர்' என்பதனொடு, 'முனிவரும் அமரரும் முழுதுணர்ந்தவர்களும் மற்றும் முற்றும், நினைவருந்தகையர்' (யுத்த. இராவணன் மந்திரப். 85)' 'எனக்கும் நான்முகத் தொருவற்கும் யாரினும் உயர்ந்த, தனக்குந் தன்னிலை யறிவரும் ஒரு தனித்தலைவன்' (யுத்த. இரணியன்வதைப். 33) என்று ஆசிரியர் பின் கூறுவனவும் ஒத்த கருத்துடையன.

ஓதியோதி யுணருந்தொறும் உணர்ச்சியுதவும் ஆதிதேவர் என்று கொண்டு, தமது திருநாமங்களைப் பலமுறை உச்சரித்துத் தியானஞ் செய்யும் பொழுதெல்லாம் தத்துவஞானத்தைக் கொடுக்கும் ஆதி தேவர் என்றும் பொருளுரைப்பர் வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியரவர்கள்.

'ஓதியோதி யுணருந்தொறும் உணர்ச்சியுதவும்' என்பதை வேதத்துக்கு விசேடணமாக்கிப் 'பலமுறை பாராயணஞ் செய்து ஆசார்யோபதேசத்தாலே உளங்கொண்ட பொருள்களைச் சிந்தித்துத் தெளியும் பொழுதெல்லாம் மெய்யுணர்வை மேலும் மேலும் கொடுக்கின்ற வேதம்' என்று பொருள் வரைந்தார் மு. ரா. கந்தசாமிக் கவிராயரவர்கள்.

மேல் எடுத்துக் காட்டிய உரைப்படி இரண்டாம் அடியையன்றி, முதலடியையும் வேதம் என்பது கொண்டு முடிவதாக்கி, '(மூலமான

தான் தனது இயற்கை) மாறுபடாமல் (மேலே கிளைத்து) வளர்ந்த (சாகைகளான) பலவகைப்பட்ட (அங்க) வடிவங்கள் (தன்னுடனும், அவை தம்முள்ளும்) மாறுபடுதல் இல்லாத வேதம்' என்றும் பொருள்கொள்ளலாம் என்பது கம்பராமாயணசாரம்.

"எம் அறிவினுக்கு அறிவு என்றது, 'பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்' என்றவாறு பத்தராகிய எமக்கு அறியப்படுமவன் என்றபடி. அறியப்படுபொருளை அறிவு என்றது ஆகுபெயர்" என்பது வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் உரை.

'வேதம் வேதியர் விரிஞ்சன் முதலியோராலும் அறியப்படாத தேவர் எளியேமாகிய எம் அறிவுக்கு அறியப்படுவாரோ? அறியப்படார்' என்று 3, 4ஆம் அடிகளுக்குப் பொருள் கூறுவாரும் உண்டு.

ஆதிநாதர் அவர் என்பதனுள் அவர் என்பதனைப் பகுதிப்பொருள் விகுதி என்பாரும் உளர்.

ஒரு தெய்வத்தின் இயற்பெயர் கூறி வாழ்த்தாது, பரம்பொருளின் இயல்பு கூறுவதாய் அமைந்த இச்செய்யுள், சடகோபர் அருளிய திருவாய்மொழியின் முதற் பதிகத்துப் பயின்ற சொல்லும் தொடரும் பொருளும் முறையும் தழுவி அமைந்தது.

இச் செய்யுள், தாம் இயற்றப்புக்க நூல் இனிது முற்றுமாறு ஆசிரியர் கூறிய ஏற்புடைக் கடவுள் வாழ்த்தாகும். வழிபடு கடவுள் வாழ்த்து எனினும் அமையும்.

நூலின் தொடக்கத்து மட்டுமன்றி நூலின் பேருறுப்புக்கள் தொடங்குமிடத்தும் கடவுள்வாழ்த்துக் கூறுவது உண்டு. நன்னூலுள் எழுத்ததிகாரத்தின் தொடக்கத்திலும் சொல்லதிகாரத்தின் தொடக்கத்திலும் கடவுள்வாழ்த்துக் கூறப்பட்டிருத்தல் காணலாம். இம் முறைகொண்டு ஆசிரியர் காண்டந்தோறும் தொடக்கத்தே கடவுள்வாழ்த்துக் கூறியுள்ளார். வில்லிபுத்தூரர் பாரதத்தே அந்நூலின் பேருறுப்பாகிய பருவங்களின் தொடக்கத்திலும் சிற்றுறுப்பாகிய சருக்கங்களின் தொடக்கத்திலும் கடவுள் வாழ்த்து அமைந்தமையும் இங்கு நோக்கத்தகும்.

—

# 1. விராதன் வதைப் படலம்

இராமன் முதலியோர் ஆரணியத்துள் உறைந்த காலத்து நிகழ்ந்தவைகளைப் பேசுதலின் இப்பகுதி ஆரணிய காண்டம் என்று பெயர்பெற்றது. ஆரணியம்—காடு; அஃது இங்கே தண்டக வனத்தைக் குறித்தது. இக்காண்டத்தின் நுவல் பொருள்களுள் தலையாயது, புகல் புகுந்தோரைப் புரத்தல் என்று பெரியோர் கூறுவர். புகல் புகுந்தோர்க்கு நல்லன புரிதலும், அவர் பகையா யுள்ளவற்றை ஒழித்தலும் ஆகிய இரண்டும் புகல் புகுந்தோரைப் புரத்தலாகும். தண்டகவனத்துறை தவத்தினர் அரக்கரை அஞ்சி இராமன்பாற் புகல் புகுந்தமையும், அவர்க்கு இராமன் அபயம் நல்கினமையும் இக்காண்டத்து அகத்தியப் படலத்து 3 முதல் 25 வரையுள்ள செய்யுட்களால் அறியப்படும். புகல் புகுந்தோரைப் புரப்பார்க்குத் தோளாற்றலும் தாளாற்றலும் வேண்டும். அவ் விரண்டும் இராமன்பால் ஒருங்கமைந்தமை, பாலகாண்டத்துத் தாடகை வதத்தாலும் அகலிகை சாப நீக்கத்தாலும் விளங்கக் 'கைவண்ணம் அங்குக் கண்டேன் கால்வண்ணம் இங்குக் கண்டேன்' என்று விசுவாமித்திர முனிவன் வியந்து பேசுவா னுயினன். மறக்கடை யரக்கனுகிய விராதனுடைய பேராற்றலழித்த இராமன் தோளாற்றலும், அவன் சாப வன்பிணி போக்கிய இராமன் தாளாற்றலும் கண்டு வியந்தோர் இலக்குவனும், பிராட்டியும் ஆவர். விராதனை வென்று அவன் சாபமும் நீக்கிய இராமன் பேராற்றலை நினைந்து நினைந்து பிராட்டி வருந்தினமை, "வெவ்விராதனை மேல்வருந் தீவினை வவ்வி மாற்றருஞ் சாபமு மாற்றிய அவ்விராமனை உன்னித் தன் ஆருயிர் செவ்விராதுணர் வோய்ந்துடல் தேம்புவாள்" என்று சுந்தரகாண்டத்தும் (358) பேசப் படும். விராதன் வதை முதலியவை புகல்புகுந்தோருடைய பகை தெறுதலாகும். பின்வரும் சரபங்கன் பிறப்பு நீங்கு படலம் சவரி பிறப்பு நீங்கு படலம் முதலியவை அவர் விரும்பிய பேற்றினை யளித்ததாகக் கொள்ளலாம்.

விராதன் என்னும் அரக்கனை இராமன் போர் செய்து கொன் றமை பேசுதலின் இப்பகுதி விராதன் வதைப் படலம் என்று வழங்கப்பெற்றது. இப்படலத்துள் அமைந்த செய்யுள் 72. சந்தம் 3. புகுந்த மிகைச் செய்யுள் 12.

இப்படலத்தின் முதல் நான்கு செய்யுட்கள், இராமன் முதலியோர் அத்திரிமுனிவர் உறையுளில் அம்முனிவராலும் அவர் பத்தினியாகிய அனசூயையாலும் பாராட்டி உபசரிக்கப்பெற்றுத் தங்கினமை பேசுவன. பின்வரும் 14 செய்யுட்கள், விராதனுடைய பேருருவும் வலியும் சீற்றமும் தோற்றமும் புலப்படக் காட்டும் ஓவியங்களாகத் திகழ்வன. அப்பால் இராமனுக்கும் விராதனுக்கும் இடையே நிகழ்ந்த போர் 26 செய்யுட்களால் பேசப்படுகிறது. அதன் பின், இராமன் திருவடி தீண்டுதலால் நல்லறிவு வரப்பெற்ற விராதன் இராமனைத் துதிக்கும் 16 பாடல்களும் வேதம் உபநிடதம் முதலியவற்றின் சாரமான முடிபொருள்களை உணர்த்துவனவாயும் இராமனுடைய பெருமையை விளக்குவனவாயும் அமைந்துள்ளன. விராதன் இராமனிடம் தன் சரிதம் தானே கூறும் முறையில் அமைந்த இறுதிப் பன்னிரண்டு செய்யுட்களும், நல்லறிவு தலைப் பட்ட நிலையில் விராதன் தன் பண்டை நிலை விளக்கும் சிறிய சித்திரங்களாகும்.

இப்படலத்தின் சிறந்த கதாபாத்திரமாக விளங்குபவன் விராதன். இவன் பண்டு தும்புரு என்னும் பெயருடைய கந்தருவனாயிருந்தவன்; குபேரனுடைய பணியாளன்; அரம்பையின் ஆடலிலும் அழகிலும் ஈடுபட்டுக் காதல் விஞ்சித் தன் பணியினை மறந்தமையால் குபேரனால் 'அரக்கனாகுக' என்று சபிக்கப்பட்டவன். குபேரனை வணங்கி யிரந்து, 'இராமன் தாள் தீண்டலால் அரக்கனுரு நீங்கும்' என்று சாபம் நீங்குதற்குரிய வழியும் பெற்றவன்; உயிர்களையெல்லாம் நலிந்து தின்னும் கிலிஞ்சன் என்னும் அரக்கனுக்கு மகனாகப் பிறந்து, தண்டகவனத்தைத் தனக்கு உறைவிடமாகக் கொண்டு தங்கியவன். ஒரு லட்சத்து இருபத்தையாயிரம் யானைகளின் ஆற்றல் உடையவன்; 'வெய்யோர் யாரே வீர விராதன் துணை வெய்யோர்' (மாரீசன் வதை. 184) என்று மாரீசனால் எடுத்துப் பேசப்பட்ட வீரமும் கொடுமையும் மிக்கவன்; பின் இராவணன் செய்யும் பிராட்டியைப் பிரித்தலாகிய தீச் செயலைச் செய்ய முற்பட்டவன். இராமன் தண்டக வனத்துட் புக்கவுடன் இவ்விராதன் எதிர்ப்படுகிறான். இராமலக்குவரை நோக்கி 'நில்லும் நில்லும்' என்று சொல்லிக்கொண்டு வந்து, சீதாதேவியைக் கவர்ந்து வான்வழி விரைகிறான். அதுகண்ட இராம லக்குவர் சினந்து தோளில் உள்ள வில்லை இடக் கரத்தே பிடித்து வலக்கையால் அம்பைப் பற்றியவராய் விராதனைத் தொடர்ந்து, 'அடா! எங்கே தப்பி ஓடுகிறாய்? திரும்பு' என்று கூற, விராதன், 'பிரமன் தந்த வரத்தால் நான் இறவேன்; படை ஒன்றும் இன்றியே என்னால் முடிக்கப்படாத வினை இல்லை; உங்களுக்கு உயிர்ப்பிச்சை தந்தேன்; இவளை விட்டுச் செல்வீராக' என்கிறான்.

இராமன் அவ்விராதனுடைய அறியாமையை நினைந்து முறுவல் பூத்தவனாய், 'இவன் வலியழிந்து ஒழிவான்' என்று எண்ணித் தன் வில்லின் நாணொலியை எழுப்புகிறான். அவ்வொலி கேட்ட விராதன், பூனைவாய்ப்பட்ட கிளிபோலப் பதறிக் கதறும் சீதாபிராட்டியை விட்டுச் சற்றே நின்று நினைந்து வெகுண்டு இராமனெதிர் தன் கொடிய சூலப்படையைச் சுழற்றி யெறிகிறான். தேவரும் யாவரும் நடுங்க வந்த அச்சூலம், இராமன் எய்த ஓரம்பால் இரண்டு துண்டமாகி, பின் நிகழ இருக்கும் அரக்கரழிவை முன் அறிவிக்கும் தூமகேதுவைப்போல் விழுகிறது. தன் சூலம் இற்றது கண்ட விராதன் புழுங்கி மலைகளையெல்லாம் பறித்து இராமலக்குவர்மேல் எறிகின்றான். இராமன் வாளிகளால் அம்மலைகள் பிளப்புண்டு மீண்டு விராதனுடலிற் பட்ட பட்ட இடமெங்கும் புண்ணாக, அவன் ஓர் மராமரத்தை வேரொடும் இறுத்தெடுத்து, அதுகொண்டு இராமனைத் தாக்க வருகிறான். இராமன் நான்கு அம்புகளால் அம்மராமரத்தைத் துணித்து வீழ்த்தி, விராதன் மார்பின்மேல் ஆறு அம்பும் தோளின்மேல் ஆறு அம்பும் புக்கு அழுந்தும்படி ஏவுகிறான். உடலெங்கும் இராமனம்பு தைத்துப் பதிய நின்ற விராதன், தன் உடல் முழுதும் முட்களையுடைய எய்ப்பன்றிபோல்வானாய்த் தன் மெய்யிற் பதிந்த அம்புகள் சிந்திச் சிதறி விழும்படி தன் உடலைச் சிலிர்ப்பானாயினன். இராமன் கணைகளால் தன் உடலினின்றும் குருதியாறு பெருகியோட, விராதன் சிறிது சோர்வுற்றனன். அந்நிலையில் இராமலக்குவர், 'இவன் வரபலமுடையான்; படைக்கலங்களை ஏவுதலால் சாகான்; மேலும் போர் செய்வான்; இவன் கைகளை வெட்டிவிடுவோம்' என்று வாளை உருவிக்கொண்டு அவன் தோளில் ஏறினர். அவ்வளவில் விராதன் உணர்ச்சியுற்றவனாய், அவரைத் தோளின்மேல் தாங்கிக்கொண்டு, தன் முன்னை வேகத்தினும் பத்து மடங்கு மிக்க வேகத்துடன் விண்மிசை யெழுந்து செல்லுகிறான். மிகப்பெரிய விராதனுருவம் மகாமேருபோலக் காணப்படுகிறது. அவன் தோள்மேல் உள்ள இருவரும் மேருமலையை வலம் வரும் சந்திர சூரியரைப்போல விளங்குகிறார்கள். இராமலக்குவர் பலராம கிருட்டினரைப் போலவும் அவரைத் தோள் மீது தாங்கி நிற்கும் விராதன் கருடன் போலவும் காணப்படுகின்றனர்.

விராதன் அவர்களைத் தோளிற் கொண்டு செல்லலும், சீதாபிராட்டி, சேவலைப் பிரிந்த அன்னப்பேடு போல வருந்திப் புழுதியில் விழுந்தெழுந்து, தனக்கு உதவும் வேறு துணையின்மையால் விரைந்து விராதனைத் தொடர்ந்து, 'அறவொழுக்கமும் அன்பும் உடைய இவர்களை விட்டு என்னையே உண்ணுக' என்று கூறிச் சோர்ந்து விழுந்தனள். பிராட்டியின் துயர்நிலை கண்ட

இலக்குவன், இராமனைத் தொழுது, 'தேவி வருந்த இவ்வாறு விளையாடுதல் பழுது' என்று கூற, இராமன், 'இவனைக் கொல்லுதல் பெரிய காரியமன்று; நாம் செல்லவேண்டிய வழியை இவனை ஊர்ந்து இனிதே கடக்கலாம் என்று கருதினேன்' என்று கூறி, விராதனைத் தன் தாளால் எற்ற விராதன் விழுந்தான். இராம லக்குவர் அவன் தோள்களை வாளால் வெட்டி வீழ்த்தினர். தோளிழந்து குருதி ஆருகப் பெருகிய நிலையிலும் அவன் சாகாமல் அவ்விருவரையும் பற்ற நெருங்கினன். அதுகண்ட இராமன் இவனை இந்நிலத்தே புதைத்தலே முறையென்ருன். இலக்குவன் குழி அகழ்ந்தான். இராமன் அதில் நன்னீர் தெளித்து விராத னுடல் அக்குழியில் விழும்படி தன் காலால் எற்றித் தள்ளினுன். அவ்வளவில் விராதன், சாபத்தால் உற்றதாய்ப் பிறவித் துன்பங் களையெல்லாம் தந்த அரக்கனுரு நீங்கி, நிகழ்ந்தவற்றை யுணர்ந்து தேவனைப்போல வான்மிசை விளங்கினன். பொறிவழிச் சென்று புலன்களிற் படியும் மனத்தால் அறிவரிய பொய்தீரொழுக்க நெறியின்கண் நிலைத்த நினைவாற் பெறும் அறிவினும், பண்டுதொட் டமைந்த நீங்காத பத்திமையாற் பெறும் அறிவினும் மேம்பட்ட மெய்யறிவு தலைப்பட விராதன் இராமனைப் பரம்பொருளாக அறிந்து துதிப்பானுயினன். துதித்த விராதனியல் கண்ட இராமன் 'நீ யார்?' என்ன, அவன் தன் பண்டை வரலாறு கூறினுன் என்பது இப் படலத்தின் கதைச்சுருக்கம். இராமனுக்கும் விராதனுக்கும் இடையே நிகழ்ந்த போரினை, அறத்திற்கும் மறத்திற்கும் இடையே மூண்ட பெரும் போரின் தொடக்கமாகவும் கொள்ளலாம்.

வான்மீகத்துள் விராதன் வதை ஆரணிய காண்டத்தின் முதல் நான்கு சருக்கங்களால் பேசப்படுகிறது. அதில் ஒரு சுலோகத்தில் விராதன் தோற்றம் பேசப்பட்டது. வான்மீகத்துள் விராதனை 'நீ யார்?' என்று இலக்குவன் வினவியதாக உள்ளது. விராதன் பிராட்டியைக் கவர்ந்த நிலையில் வருந்திய இராமன் இளவலை நோக்கிக் 'கைகேயியின் எண்ணம் நிறைவேறி விட்டது' என்று தொடங்கிக் கூறும் கூற்று, இராமன் சால்புக்கு ஒவ்வாதென்று கம்பரால் விடப்பட்டது போலும்.

---

# 1. விராதன் வதைப் படலம்

## இராமன் முதலியோர் அத்திரி முனிவரின் உறையுளை அணுகுதல்

**2606.** முத்தி ருத்திய திருத்தியன
மொய்ந்நகையொடுஞ்
சித்தி ரக்குனி சிலைக்குமரர்
சென்றணுகினு
ரத்தி ரிப்பெய ருந்தவ
னிருந்தவமைதிப்
பத்தி ரப்பழு மரப்பொழி
றுவன்றுபழுவம்.

முத்து இருத்திய திருத்தி அன மொய்ந் நகையொடும்
சித்திரக் குனி சிலைக் குமரர் சென்று அணுகினர்,
அத்திரிப் பெயர் அருந்தவன் இருந்த அமைதிப்
பத்திரப் பழுமரப் பொழில் துவன்று பழுவம்.

பொ :—சிறந்த வளைந்த வில்லேந்திய இளைஞராகிய இராம லக்குவர், ஒழுங்குபடுத்திப் பதித்த முத்துக்களைப் போன்ற நெருங்கிய பற்களையுடைய சீதாபிராட்டியுடன் சென்று, அத்திரி என்னும் பெயர்பெற்ற அருந்தவன் தங்கிய நிறைவுடைய அழகிய பழமரங்கள் உள்ள சோலைகள் செறிந்த வனத்தை அடைந்தனர்.

கு :—குமரர் மொய்ந்நகையொடும் சென்று, பழுவம் அணுகினர் என இயையும். திருத்தி இருத்திய முத்து அன மொய்ந்நகை எனக் கூட்டுக. சித்திரச்சிலை குனிசிலை என்க. சித்திரம்-சிறப்பு, (பிங்கலநிகண்டு). அருந்தவன் இருந்த பழுவம், பத்திரப் பழுவம், பழுமரப் பொழில் துவன்று பழுவம் என்று கொள்க. . அமைதி-நிறைவு. பத்திரம்-அழகு. துவன்றுதல்-செறிதல். பழுவம்-வனம். (1)

## அத்திரிமுனிவன் இராமன் முதலியோரை எதிர்கொள்ளல்

**2607.** திக்கு றுஞ்செறி பரந்தெரிய நின்றதிரள்பொற்
கைக்கு றுங்கண்மலை போற்குமரர் காமமுதலா
முக்கு றும்பற வெறிந்தவினை வான்முனிவனைப்
புக்கி றைஞ்சின ரருந்தவனும் வந்துபுகலும்.

திக்கு உறும் செறி பரம் தெரிய நின்ற திரள் பொன்
கைக் குறுங்கண் மலே போல் குமரர், காமம் முதல் ஆம்
முக்குறும்பு அற எறிந்த வினே வால் முனிவனேப்
புக்கு இறைஞ்சினர்; அருந்தவனும் வந்து புகலும்.

பொ :—திசைகளில் உள்ளவையும், மிக்க (பூமி) பாரம் புலப்படத் தாங்கி நின்றனவும், திரண்ட அழகிய (துதிக்)கையினேயும் சிறிய கண்களேயும் உடையனவுமான யானேகளே ஒத்த இராமலக்குவர், காமம் முதலிய மூன்று பகையும் அடியோடொழியும்படி அழித்த தூய (தவச்) செயலேயுடைய அத்திரி முனிவனே (அவன் உறையும்) வனத்துள் புகுந்து, (அவன் தங்கிய சாலே நோக்கி) வணங்கினர்; (பிறரால்) செய்தற்கரிய தவத்தைச் செய்பவனுன அம்முனிவனும், (இவர் வரவு கண்டு) தன் இருக்கையினின்று எதிர்வந்து கூறுவானுயினன்.

கு :—திக்கு உறும் மலே, செறிபரம் தெரிய நின்ற மலே, திரள் பொற் கைக் குறுங்கண்மலே என இயையும். திக்குறும்...குறுங்கண் மலே என்றது திசையானேகளே. செறிபரம்-மிக்க பாரம். 'திக்குறுஞ் செறிபரந் தெரிய நின்ற திரள்பொற்கைக் குறுங்கண் மலேபோற் குமரர்" என்பதனுள், திக்குறும், செறிபரம் தெரிய நின்ற என்னும் தொடர்களேக் குமரர்க்கு அடையாக்கி, திக்கு உறும் குமரர், செறிபரம் தெரிய நின்ற குமரர் என்று கொண்டு, (யாவர்க்கும்) புகலிடமாகப் பொருந்திய மிக்க கடவுட்டன்மை வெளிப்பட நின்ற குமரர் என்று பொருள் கொள்ளலும் அமையும். திக்கு-புகலிடம். 'மற்றெருதிக்கிலர்' (உபதேசகாண்டம். சிவராம. 42), 'திக்கு வேறில்லேயுன்றன் பாதத்திலே புகுந்தேன்' (இராம நாடகம். யுத்த. தரு. 13. சரணம். 4.) என்பவற்றுள்ளும் திக்கு, புகலிடம் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். இங்ஙனம் கொள்ளின் செறி பரம் என்பதற்கு மிக்க கடவுட்டன்மை என்பது பொருளாம். காமம் முதலாம் முக்குறும்பு என்றது காமம் வெகுளி மயக்கம் என்னும் முப்பகையினே. முக்குறும்பும் என உம்மைவிரிக்க. 'முக்குறும்பு அற எறிந்த வினே வான் முனிவன்' என்றது அத்திரியென்னும் பெயர்க்கு விளக்கங் கூறியவாறு. திரி-மூன்று. அ-இன்மை அன்மை மறுதலே குறித்து வரும் ந என்னும் அவ்வியயத் திரிபு. அத்திரி-(காமம் வெகுளி மயக்கம் என்னும்) மூன்று(ம்) அற்றவன். வால்வினே என மாற்றுக. வால்வினே - தூய (தவச்) செயல். அருந்தவன் என்பது அவன் என்னும் சுட்டளவாய் நின்றது. உம்மை-உயர்வுசிறப்பு. (2)

## அத்திரி முனிவனுடைய உவகையுரை

2608. குமரர் நீரிவ ணடைந்துதவு கொள்கையெளிதோ
வமரர் யாவரொடு மெவ்வுலகும் வந்தவளவோ
வெமரின் யார்தவ முயன்றனர்க ளென்றுருகினன்
தமரெ லாம்வர வுவந்தனைய தன்மைமுனிவன்.

“குமரர்! நீர் இவண் அடைந்து உதவு கொள்கை எளிதோ?
அமரர் யாவரொடும் எவ்வுலகும் வந்த அளவோ?
எமரின் யார் தவம் முயன்றனர்கள்?” என்று உருகினன்,
தமர் எலாம் வர உவந்தனைய தன்மை முனிவன்.

பொ:—சுற்றத்தாரெல்லாரும் ஒருங்குவர(க் கண்டு) மகிழ்ந்தாற் போன்ற தன்மையினையுடைய அத்திரிமுனிவன், (இராமலக்குவரை நோக்கி) “மக்காள்! நீவிர் யாங்கள் உறையும் இவ்வனத்தே வந்து காட்சி தந்த நிகழ்ச்சி எளியதன்று; தேவர்கள் எல்லாரோடும் அவர் உறையும் எல்லாவுலகங்களும் எதிர்ப்பட்ட நிலையினும் பெரியது; (இத்தகைய நும்வரவு கிட்டுதற்குரிய பெருந்) தவத்தை எங்களுள் எவர் செய்தனரோ?” என்று கூறி மனங் கரைவானுயினுன்.

கு:—முனிவன் உருகினுன் என இயையும். தமரெலாம் வரவுவந்தனைய தன்மை முனிவன் என்றது, ஒரு காலத்தில் ஓரிடத்தில் ஒருங்குவரக் காணும் வாய்ப்பின்றி, வேறு வேறு நாடு நகரங்களிற் சென்று தங்கிய சுற்றத்தாரெல்லாம் ஒரு காலத்தில் ஓரிடத்தில் ஒருங்குவரக் கண்டால் உளதாகும் மகிழ்ச்சிபோலும் மகிழ்ச்சியையுடைய முனிவன் என்றவாறு. இராமன் முதலியோர் வரவு அத்திரி முனிவற்குச் சுற்றத்தாரெல்லாம் ஒருங்குவரக் கண்டபோது விளையும் மகிழ்ச்சியைத் தந்தது என்றபடி. குமரர் அண்மைவிளி. யாங்கள் அரிதின் முயன்று நீவிர் இருக்குமிடத்துப் போந்து காண்பதன்றி, நீவிர் வலிய வந்து காட்சியளித்த நிகழ்ச்சி பெரும் பேருகும் என்பது புலப்பட, நீர் இவண் அடைந்து உதவுகொள்கை எளிதோ என்ருன். கொள்கை-நிகழ்ச்சி; ‘புகுந்த கொள்கை உடனுறைந்தறிந்தானென்ன’ (யுத்த. முதற்போர். 132) எனப் பின்னும், கொள்கை என்பது நிகழ்ச்சி என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். எல்லாவுலகங்களினும் மேம்பட்ட அழியாத வீட்டுலகில் வாழும் தேவதேவனுன இறைவனும் தேவியும் அவரை அகலாது எல்லாப் பணியும் புரியும் ஆதிசேடனுமே இராமனுகவும் சீதாபிராட்டியாகவும் இலக்குவனுகவும் தோன்றியுள்ளாராதலின் அவர் வரவு எல்லாத் தேவரும் எல்லாவுலகும் எதிர்ப்பட்ட நிலையினும் பெரிதாயிற்று.

எமரின் யார் தவம் முயன்றனர்கள் என்றது, நும் வரவு கிட்டுதற்குரிய தகுதி என்பால் இல்லை; என் இனத்தவரான முனிவர் தவப் பயனாக நும் வரவு கிட்டியதாதல் வேண்டும்; அத்தவத்தைச் செய்த முனிவர் யார்! என்று வியந்து கூறியவாறு. இங்கு "நிலஞ் செய்தவமென்றுணரினன்று நெடியோய்! என் நலஞ்செய்வினை யுண்டெனினும் அன்று; நகர் நீ யான், வலஞ்செய்து வணங்க வெளிவந்த விதுமுந்தென் குலஞ்செய்தவம்" (323) என்று சக்கரவர்த்தி கூறியதும் நோக்கத்தகும். 'எமரின் யார் தவம் முயன்றனர்கள்' என்பதற்கு நும் காட்சி கிட்டப் பெற்ற எங்களைப்போலத் தவஞ் செய்தவர்கள் பிறரில்லை என்று பொருள் கொள்ளலும் ஆகும். (3)

இதன்பின், 23, 25, 29, 43, 52 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் ஐந்தும் காணப்படுகின்றன.

2608 (a) ஆதி யானிட மமர்ந்தவளை யன்பினணையா
ஏதி லின்னவநு சூயையை யிறைஞ்சவிறையோய்
வேத கீதமவை வெண்கடல் வெறிப்பருபுவி
ஓது முன்பிறவி யோனமதி தண்டமுமிழ்வோய்.

2608 (b) உன் நலங்கிளர வோகிமேல் யோகசயனன்
தன்ன தன்ன சரிதத்தயல் சமைத்தவினையின்
உன்னி யுன்னிமறை யுச்சமதி கீத மதுர
துன்னி மாதவி யுவந்தபரன் வேகமுதவி.

2608 (c) பருதி யைத்தருமுன் னத்திரி பதத்தநுசைகை
கருதி யுய்த்திடுதல் காணுதி கவந்தமலையோய்
சுருதி யுய்த்தகல னைப்பொதி சுமந்துகொளனுத்
தருதி லங்கணை சயத்தரசி சாருமெனலும்.

2608 (d) பாற்கடற்பணிப் பாம்பணைப் பரம்பரமனை
யேற்கை யேத்தியிவ ணெய்துதலி னென்னையெதிர
லாற்க வண்பொதிய சைந்தென கரத்திலணையா
வூர்க்க முன்பணி யுவந்தரு ளெனப் பெரிதரோ.

2608 (e) அன்ற றக்கடலழித்தகல நின்றனிதரோ
சென்று தக்கபனி சேர்முனி திறத்தெனினரோ
வென்றி கற்குமொழி மேலிடுதல் வேண்டுதலிரோ
இன்றி தற்கொரிறை யெல்லைபொரு ளள்ளுமுளரோ.

## இராமன் முதலியோர் தண்டகவனத்திற் புகுதல்

**2609.** அன்ன மாமுனியொ டன்றவ னுறைந்தவனரும்
பன்னி கற்பினன சூயைபணி யாலணிகலன்
றுன்னு தூசினொடு சந்திவை சுமந்தசனகன்
பொன்னொ டேகியவர் தண்டக வனம்புகுதலும்.

அன்ன மா முனியொடு அன்று அவண் உறைந்து, அவன் அரும்
பன்னி, கற்பின் அனசூயை பணியால், அணிகலன்,
துன்னு தூசினொடு, சந்து, இவை சுமந்த சனகன்
பொன்னொடு ஏகி, அவர் தண்டகவனம் புகுதலும்.

பொ:—அக்குமரர், அத்தகைப் பெருமை வாய்ந்த அத்திரி முனிவனுடன் அன்று (அவன் உறையுளாகிய) அவ்விடத்தே தங்கி, (வழி நாள்) அவன் பெருமை வாய்ந்த மனையாளாகிய (யாவரும்) பாராட்டிப் பேசும் கற்பினையுடைய அனசூயையின் கட்டளையால் ஆபரணங்களும் பொருந்திய உடைகளும் சந்தனமும் ஆகிய இவற்றைத் தரித்த சனகன் மகளான சீதாபிராட்டியுடன் சென்று, தண்டக வனத்திற் புக்க அளவில்.

கு :—பன்னி - பத்தினி = மனையாள் ; பத்நி என்னும் வடசொல் பன்னி எனத் திரிந்தது. அனசூயை என்பது அத்திரி முனிவன் மனையாளின் பெயர். அச்சொல் அழுக்காறற்றவள் என்று பொருள் படும். அசூயை - அழுக்காறு. முன்நின்ற அன் மறுதலைப் பொருளுணர்த்தும். பணி - கட்டளை. துன்னு தூசு - பொருந்திய (ஏற்ற) உடை. சந்து - சந்தனம். சுமந்த - தரித்த = தாங்கிய. அணிகலன் என்றது பூண் வகைகளை. தூசு என்றது உடை வகைகளை. சந்து என்றது பூச்சு வகைகளை. இவற்றோடு சூடுவனவும் கொள்க. இவை யெல்லாவற்றையும் பொதுவினையால் சுமந்த என்றார். இவற்றின் மிகுதிபற்றிச் சுமந்த என்றார் என்னினும் ஆம். அனசூயை பணியால் அணிகலன் துன்னு தூசினொடு சந்திவை சுமந்த சனகன் பொன் என்றமையால், அயோத்தியினின்று புறப்பட்டது முதல் அத்திரி முனிவனுறையுளை அடையும்வரை சீதாபிராட்டி மரவுரியுடுத்து விரத வொழுக்கமே மேற்கொண்டிருந்தமை புலப்படும். 'அனையவேலை யகன்மனை யெய்தினள், புனையுஞ் சீரந் துணிந்து புனைந்தனள்' (1919), 'சீரைசுற்றித் திருமகள் பின்செல' (1925) என்று ஆசிரியர் முன் கூறினமையும் நோக்கத்தகும். இச்செய்யுள் முதல் இப்படலத்தின் 18-ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர். குமரர் தண்டகவனம் புகுதலும், விராதனெனும் அக்கொடுந் தொழிலினன், சாரவந்து, எதிர்விலங்கினன் என இயைந்து முடியும். (4)

23, 25, 29, 43, 52 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இச்செய்யுளின்பின் பின்வரும் மூன்று மிகைச் செய்யுட்கள் காணப்படுகின்றன.

2609. (a) யோச னைப்புகுத யோகிமுனி யோக வரையின்
பாச பத்தரிடர் பற்றறவ கற்று பழையோர்
ஓசை யுற்றபொரு ளுற்றன வெனப்பெரிதுவந்
தாசை யுற்றவ ரறிந்தன ரடைந்தனரவண்.

2609. (b) ஆதி நான்மறையி னுளரை யடித்தொழில்புரிந்
தேது நீரிலிடை யெய்தியது நாதமெனலும்
ஓதி யோயுளர்ப் புரந்தரர துட்சி மடவார்
மாத மாண்டவியன் மாயையினில் வஞ்சநடமே.

2609. (c) விண்ணை யாளிசெய்த மாயையினில் மெய்யில் மடவார்,
அண்ணல் மாமுனிவ னேடுமென லப்பினடமாம்
எண்ண வுன்னியதை யெய்தின ரிறைஞ்சி யவணின்
நண்ணி வைகினர் அகன்றன ரசைந்தனனரோ.

## விராதன் இராமலக்குவரை எதிர்தல் 2610—2623

**2610.** எட்டொ டெட்டுமத மாகரி யிரட்டியரிமா
வட்ட வெங்கண்வரை யாளிபதி னுறுவலியிற்
கிட்ட விட்டிடை கிடந்தன செறிந்த வொருகைத்
தொட்ட முத்தலை யயிற்றொழின் மிடற்கழுவொடே.

எட்டொடு எட்டு மத மா கரி, இரட்டி அரிமா,
வட்ட வெம் கண் வரை ஆளி பதினுறு, வலியின்
கிட்டவிட்டு இடை கிடந்தன, செறிந்த ஒருகைத்
தொட்ட முத்தலை அயில் தொழில் மிடல் கழுவொடே.

பொ :—மதங்கொண்ட பெரிய பதினறு யானைகளும், முப்பத்திரண்டு சிங்கங்களும், கொடிய கண்களை யுடையனவும், மலையில் வாழ்வனவும் ஆன பதினறு யாளிகளும் தன் வலிமையால் தம்முள் ஒன்றோடொன்று பொருந்தும்படி கோக்கப்பட்டுக் கிடந்தனவாய் நெருங்கிய ஒரு கையிலே பிடித்த கூர்மையும் வேலைப்பாடும் அமைந்த மூன்று தலையினை உடைய வலிய சூலப்படையுடன்.

கு :—எட்டொடு எட்டு - பதினறு. இரட்டி - இருமடங்கு. அதாவது யானைக்குச் சொல்லிய பதினறு என்னும் எண்ணின் இருமடங்காகிய முப்பத்திரண்டு என்று கொள்ளத்தகும். அரிமா - சிங்கம்.

வரை - மலை. ஆளி - ஒரு விலங்கு; யானைபோல் துதிக்கையும் சிங்கம்போல் வலிமையும் உடையது; இது யாளி எனவும் வழங்கப் படும். கிட்டவிட்டுக் கிடந்தன செறிந்த கழு, ஒருகைத் தொட்ட கழு, அயிற்கழு, தொழிற்கழு, முத்தலைக்கழு, மிடற்கழு என்க. தொடுதல் - பிடித்தல். முத்தலைக்கழு - மூன்று கவர்களையுடைய சூலம். அயில் - கூர்மை. தொழில் - வேலைப்பாடு. மிடல் - வலிமை. விராதன், யானைகளையும் சிங்கங்களையும், ஆளிகளையும், தன் ஒரு கையிற் பிடித்த சூலத்தின் கவர்களில் அவை ஒன்றேடொன்று நெருங்கிக் கிடக்கும்படி குத்தித் தூக்கிக்கொண்டது தன் உணவின் பொருட்டு என்று கொள்ளத்தகும். 2623-ஆம் பாடலில் உள்ள விராதன் என்னும் எழுவாயினை இங்கே கொண்டு, விராதன், கழு வொடு முடுகி,......வந்து விலங்கினன் என்று முடிக்க. (5)

2611. செஞ்சு டர்ச்செறி மயிர்ச்சுருள் செறிந்தசெனிய
னஞ்சு வெற்புருவு பெற்றிடை நடந்ததெனமா
மஞ்சு சுற்றிய வயங்குகிரி வாதவிசையிற்
பஞ்சு பட்டது படப்படியின் மேன்முடுகியே.

செஞ்சுடர்ச் செறி மயிர்ச் சுருள் செறிந்த செனியன்,
நஞ்சு வெற்பு உருவு பெற்று இடை நடந்தது என, மா
மஞ்சு சுற்றிய வயங்கு கிரி வாத விசையில்
பஞ்சு பட்டது படப் படியின்மேல் முடுகியே.

பொ :—செவ்வொளி மிக்க அடர்ந்த சுருட்டைமயிர் பொருந்திய தலையை உடையவனாகி, விடம் மலைவடிவம் பெற்று (க்காட்டின்) இடையே நடந்தாற்போலப் பெரிய மேகம்வளைத்த விளக்கம் வாய்ந்த மலைகள், காற்றின் வேகத்தால் பஞ்சுபோல் நிலை கெடும் படி மண்மிசையே விரைந்து.

கு :—அரக்கருடைய சிகை செந்நிறம் வாய்ந்ததாகலின் செஞ் சுடர்ச் செறி மயிர்ச்சுருள் என்றார். செறிதல் - பொருந்துதல். சென்னி - தலை; சென்னி என்பது செனியென்றானது விகாரம். மஞ்சு - மேகம். வயங்குதல் - நெடுந்தூரத்துள்ளார்க்கும் புலனாகும் தோற்றப் பொலிவுடையதாதல். கிரி - மலை. வாதம் - காற்று. படி - பூமி. முடுகுதல் - விரைதல். (6)

2612. புண்டு ளங்கியன கண்கள்கனல் பொங்கமழைசூழ்
விண்டு ளங்கிட விலங்கல்கள் குலுங்கவெயிலுங்

கண்டு ளங்கதி குறைந்திட நெடுங்கடல்சுலா
மண்டு ளங்கவய வந்தகன் மனந்தளரவே.

புண் துளங்கியன கண்கள் கனல் பொங்க, மழை சூழ்
விண் துளங்கிட, விலங்கல்கள் குலுங்க, வெயிலும்
கண்டு உளம் கதி குறைந்திட, நெடுங்கடல் சுலாம்
மண் துளங்க, வய அந்தகன் மனம் தளரவே.

பொ :—புண் விளங்கினாற்போன்ற கண்களினின்று சினக்கனல் மிக்கெழ, மேகங்கள் சூழ்கின்ற ஆகாயமும் நடுங்க, மலைகளும் குலுங்க, சூரியனும் (இவன் விரைவை) நோக்கி ஊக்கமும் வேகமும் குறைய, நெடிய கடல் சூழ்ந்த நிலமும் நடுங்க, வெற்றியையுடைய இயமனும் இவன் வரவுகண்டு மனத்தளர்ச்சியடைய.

கு :—புண்டுளங்கியனகண் என்றது, புண்போல் விளங்கும் கண் என்றவாறு. கண்ணோட்டமில்லாத கண்களாதலின் புண்துளங்கியன கண்கள் என்றார். 'கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்' (577). 'கண்ணிற் கணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேற், புண்ணென் றுணரப்படும்' (575) என்னும் திருக்குறள்களும் இங்கே நோக்கத் தக்கன. புண்போலச் செந்நிறம் வாய்ந்து விளங்குதலின் புண் துளங்கியன கண்கள் என்றார் எனலும் ஆம். துளங்கல் - விளங்கு தல். கனல் - நெருப்பு. பொங்குதல் - மிகுதல். மழை - மேகம். துளங்கல் (2, 4) - நடுங்குதல். விலங்கல் - மலை. வெயில் - சூரியன், உள்ளம் உளம் என்றானது; விகாரம். உள்ளம் - மனம்; இங்கே ஆகுபெயராய் உள்ளத்தின் பண்பான ஊக்கத்தை உணர்த்தியது. 'உள்ளம் உடைமை உடைமை' (592) என்னும் திருக்குறளில் உள்ளம் ஊக்கம் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். கதி - வேகம். சுலாம் - சூழ்ந்த. வயம் - வெற்றி. அந்தகன் - இயமன். விண்ணும் விலங்கல்களும் மண்ணும் அந்தகனும் என உம்மை விரித்து, நடுங்காத விண்ணும் மண்ணும் நடுங்க, குலுங்காத விலங் கல்களும் குலுங்க, மனந்தளராத இயமனும் மனம் தளர என்று பொருள் கொள்ளத்தகும். (7)

2613. புக்க வாளரி முழங்குசெவி யின்பொறியுறப்
பக்க மின்னுமணி மேருசிக ரங்குழைபடச்
செக்கர் வான்மழை நிகர்க்கவெதி ருற்றசெருவத்
துக்க வீரருதி ரத்தினெளிர் செச்சையினொடே.

புக்க வாள் அரி முழங்கு செவியின் பொறி உறப்
பக்கம் மின்னும் மணி மேரு சிகரம் குழை படச்
செக்கர் வான் மழை நிகர்க்க, எதிர் உற்ற செரு அத்து
உக்க வீரர் உதிரத்தின் ஒளிர் செச்சையினொடே.

பொ :—கொடிய சிங்கங்கள் (மலைமுழை யென்று கருதி உள்ளே) புகுந்தனவாய் முழங்குகின்ற காதுகளில், பக்கங்களிலெல்லாம் மணிகள் மிகவும் ஒளி வீசுகின்ற மேருமலையின் சிகரம் குண்டலங்களாக இசைய, நேர்பட்ட போரில் மாறுபட்டு வந்த வீரருடலினின்று சிந்தித் தெறித்த குருதியால் செவ்வானத்தொடு கூடிய மேகம்போல விளங்குகின்ற சட்டையுடன்.

கு :—வாள் அரிபுக்க முழங்குசெவி எனவும், மணி பக்கம் உற மின்னும் மேரு சிகரம் எனவும், எதிர் உற்ற செருவத்து, உக்க வீரர் உதிரத்தின் செக்கர்வான் மழை நிகர்க்க ஒளிர் செச்சை எனவும் இயையும். அரி - சிங்கம். புக்க - புக்கனவாய்; முற்றெச்சம். செவியின் பொறி - காது. இன் அல்வழிச்சாரியை. குழை - குண்டலம். செரு - போர். அத்து - சாரியை. நிகர்க்க - ஒக்க. உகுதல் - சிந்துதல். உதிரம் - இரத்தம். ஒளிர்தல் - விளங்குதல். செச்சை - சட்டை. 'ஒன்றியவுதிரச் செச்சை' (1080) என்பது சீவக சிந்தாமணி. கரிய விராதன் உருவுக்கு மேகமும், அவன் மார்பிற் பூண்ட பகைவீரர் குருதிபடிந்த சட்டைக்குச் செவ்வானும் உவமை. விராதன் காதுகள் மலை முழைபோலப் பெரியவாயிருந்தமையின் சிங்கங்கள் அவற்றில் புக்கு முழங்கலாயின. (8)

**2614.** படையொ டாடவர்கள்
பாய்புரவி மால்களிறுதேர்
நடைய வாளரிகள்
கோளுழுவை நண்ணியவெலா
மடைய வாரியர
வால்சை யனேகவிதவன்
றொடையன் மாலைதுயல்
வந்துலவு தோள்பொலியவே.

படையொடு ஆடவர்கள், பாய் புரவி, மால் களிறு, தேர்,
நடைய வாள் அரிகள், கோள் உழுவை, நண்ணிய எலாம்
அடைய வாரி, அரவால் அசை அனேக வித வன்
தொடையல் மாலை துயல்வந்து உலவு தோள் பொலியவே.

பொ :—படைக்கலங்களோடு அவற்றைத் தாங்கிய வீரர்களையும் பாய்ந்து செல்லும் குதிரைகளையும் மதமயக்கம் உள்ள களிற்றி யானைகளையும் தேர்களையும் பெருமித நடையுடைய கொடிய சிங்கங் களையும் வலிய புலிகளையும் மற்றும் தன்னை அடுத்த எல்லாவற்றையும் ஒருங்கு கைக்கொண்டு பாம்பினால் முடிந்த பலவகையான வலிய தொடுக்கப்பட்ட (கதம்ப) மாலைகள் தொங்கி அசைகின்ற தோள்கள் விளங்க.

கு :—ஆடவர் என்றது இங்கே வீரரை. பீடு நடையுடையன வாதலின் நடைய வாளரிகள் என்றார். கோள் - வலிமை. உழுவை - புலி. அடைய - முழுவதும். வாரி - கைக்கொண்டு. அரவு - பாம்பு. அசைத்தல் - முடிதல். தொடையல் மாலை - தொடுக்கப்பட்ட மாலை. துயல்வருதல் - தொங்குதல். உலவுதல் - அசைதல். செச்சையினொடு (2613) அனேகவித வன்றொடையல் (கதம்பம்) மாலை துயல் வந்துலவுதோள் பொலிய என இயைக்க. (9)

**2615.** குன்று துன்றின
வெனக்குமுறு கோபமதமா
வொன்றொ டொன்றிடை
யடுக்கின தடக்கையுதவப்
பின்று கின்றபில
னிற்பெரிய வாயினொருபான்
மென்று தின்றுவிளி
யாதுவிரி யும்பசியொடே.

குன்று துன்றின எனக் குமுறு கோப மத மா
ஒன்றொடு ஒன்று இடை அடுக்கின தடக்கை உதவப்
பின்று கின்ற பிலனின் பெரிய வாயின் ஒருபால்
மென்று தின்று விளியாது விரியும் பசியொடே.

பொ :—மலைகள் (ஒன்றோடொன்று) நெருங்கினாற்போலத் தன் னிடம் ஒன்றோடொன்று (நெருங்க) அடுக்கப்பட்ட முழங்குகின்ற சினமும் மதமும் பொருந்திய யானைகளைப் பெரியகை கொடுக்க நீண்ட குகையினும் பெரிதான வாயின் ஒரு பகுதியில் அடங்க மென்று தின்றும் தணியாது மிகுகின்ற பசியுடன்.

கு :—குன்று துன்றினவென ஒன்றொடொன்று இடை அடுக்கின குமுறு கோப மதமா தடக்கை உதவ என இயைக்க. துன்றுதல் - நெருங்குதல். பின்றுதல் - நீண்டதாதல். பிலன் - குகை. வாயின்

ஒருபால் என்றது கடைவாயினை. தின்றும் என உம்மை விரிக்க. விளிதல் இங்கே தணிதல் என்ற பொருளிற் பயின்றது. (10)

**2616.** பன்ன காதிபர் பணுமணி பறித்தவைபகுத்
தன்ன வானவர் விமானமிடை யிட்டரவிடைத்
துன்னு கோளிநெடு தாரகை தொடுத்ததுழனிச்
சன்ன வீரமிடை மின்னுதட மார்பிநெடுமே.

பன்ன காதிபர் பணுமணி பறித்து அவை பகுத்து,
அன்ன வானவர் விமானம் இடையிட்டு, அரவிடைத்
துன்னு கோளிநெடு தாரகை தொடுத்த துழனிச்
சன்னவீரம் இடை மின்னு தடமார்பிநெடுமே.

பொ :—பாம்பின் தோலில், அட்டமா நாகங்களைவென்று அவற்றின் படத்திலுள்ள இரத்தினங்களைப் பறித்து அவற்றைப் பாகுபாடு செய்து (பதித்து) வைத்து, அவ்வாறு வென்று கைக்கொண்ட தேவருடைய விமானங்களை இடையே தொங்கவிட்டு, நெருங்கிய கோள்களோடு நட்சத்திரங்களையும் தொடுத்த ஒலியுள்ள சன்னவீரம் என்னும் வெற்றிமாலை (மற்றை அணிகலன்களுக்கு) இடையே விளங்கும் பெரிய மார்பினுடன்.

கு :—பன்னகம் - பாம்பு. அதிபர் - தலைவர். பன்னக அதிபர் என்பது வடமொழித் தீர்க்கசந்தி விதியால், பன்னகாதிபர் என்றாயிற்று. பணம் - படம். கோள் - நவக்கிரகம். தாரகை - நட்சத்திரம். சன்னவீரம் சுந்தர காண்டம் 414-ஆம் செய்யுளிலும் கூறப்பட்டுள்ளது. (11)

**2617.** பம்பு செக்கரெரி யொக்குமயிர் பக்கமெரியக்
கும்ப முற்றவுயர் நெற்றியின் விசித்தொளிகுலா
வும்ப ருக்கரசன் மால்கரியி னோடையெயிறுண்
கிம்பு ரிப்பெரிய தோள்வளையொ டுங்கிளரவே.

பம்பு செக்கர் எரி ஒக்கும் மயிர் பக்கம் எரியக்
கும்பம் உற்ற உயர் நெற்றியின் விசித்து, ஒளி குலா
உம்பருக்கு அரசன் மால் கரியின் ஓடை, எயிறு உண்
கிம்புரிப் பெரிய தோள்வளையொடும் கிளரவே.

பொ :—பரவிய செவ்வானத்தையும் நெருப்பையும் ஒக்கும் (தலை) மயிர் பக்கங்களில் விளங்க, குடம் போன்ற உயர்ந்த நெற்றியில் கட்டப்பட்டு ஒளிதழையும், தேவர்க்கு அரசனான இந்திரனுடைய (அயிராவதமென்னும்) பெரிய யானையின் நெற்றிப்பட்டம், அதன் கொம்புகள் பூண்ட கிம்புரிகளாகிய தோள்வளைகளோடும் விளங்க.

கு :—பம்புதல் - பரவுதல். செக்கரும் எரியும் என உம்மை விரிக்க. விராதன் தலையிலுள்ள உரோமத்துக்குச் செக்கரும் எரியும் நிறத்தால் உவமமாயின. கும்பம் - குடம். விசித்தல் - கட்டுதல். ஒளிகுலாவு ஓடை, உம்பருக்கரசன் மால்கரியின் ஓடை எனவும், ஒளி குலாவு கிம்புரி, உம்பருக்கு அரசன் மால் கரியின் எயிறு உண் கிம்புரி எனவும் இயைக்க. குலாவுதல் - விளங்குதல். உம்பருக்கு அரசன் - இந்திரன். உம்பருக்கு அரசன் மால்கரி - அயிராவதம். ஓடை - யானையின் நெற்றிப்பட்டம். கிம்புரி - யானைக் கொம்பில் இடும்பூண். கிளர்தல் - விளங்குதல். விராதன் தன் நெற்றிப் பட்டமாக இந்திரனுடைய அயிராவதத்தின் ஓடையையும், தோள் வளைகளாக அதன் கொம்பிற் கட்டிய கிம்புரியையும் அணிந்துகொண்டு விளங்கினன் என்றவாறு. இதனல் விராதன் இந்திரனை வென்றவன் என்பது பெறப்படும். (12)

**2618.** தங்கு திண்கரிய காளிமை தழைந்துதவழப்
பொங்கு வெங்கொடுமை யென்பது புழுங்கியெழமா
மங்கு பாதகம் விடங்கனல் வயங்கிநிமிரக்
கங்குல் பூசிவரு கின்றகலி காலமெனவே.

தங்கு திண் கரிய காளிமை தழைந்து தவழப்
பொங்கு வெம் கொடுமை என்பது புழுங்கி எழ, மா
மங்கு பாதகம் விடம் கனல் வயங்கி நிமிரக்
கங்குல் பூசி வருகின்ற கலிகாலம் எனவே.

பொ :—கிளர்கின்ற மிக்க கொடுமை வெகுண்டெழப் பெருமை குறையும் பாவம் விடம் போலவும் நெருப்புப் போலவும் மிக்கு ஓங்கப் பொருந்திய திண்ணிய மிக்க கருமை நிறம் தழைந்து பரவ, இரவோடு கூடிவருகின்ற கலிகாலம் போல.

கு :—கொடுமை புழுங்கி எழ, பாதகம் விடம் கனல் வயங்கி நிமிரக் காளிமை தழைந்து தவழக் கங்குல் பூசிவருகின்ற கலிகாலம் : என இயைக்க. தங்குதல் - பொருந்துதல். காளிமை என்பதற்குக் கருமை என்று பொருளாதலின், கரிய காளிமை என்பது ‘மிக்க

கருமை' என்று பொருள்படும். வெம்கொடுமை - மிக்க கொடுமை புழுங்குதல் - வெகுளுதல்; 'முக்கணன் புதல்வனை வேறெனப் புழுங்கி' (சீபரி. 260) என்பது தணிகைப் புராணம். மா - பெருமை. மங்குதல் - குறைதல். மங்கும் மாபாதகம் என்று கொண்டு, உடையாருடைய ஒளி கெடும்படி செய்யும் பொய், கொலை, களவு, கள், காமம் என்னும் ஐம்பெரும் பாவம் என்று பொருளுரைத் தலும் ஆம். வயங்குதல் - மிகுதல்; 'அணி நிழல் வயங்கு......மதி' (3.51) என்பது பரிபாடல். நிமிர்தல் - ஓங்குதல். கங்குல் - இரவு. பூசுதல் - இயைதல்; 'ஆயிர முரு மொன்றுகப் பூசின பிழம்பு' (யுத்த. நிகும்பலை. 93) எனப் பின்னும் பூசுதல் இயைதல் என்னும் பொருளிற் பயின்றது. கொடுமை வெகுண்டெழ, பாவம் சினந்து ஓங்க, தன் உடலின் கருமை நிறம் தழைந்து பரவ வருகின்ற விராதனுக்கு, கொடுமை வளரப் பாவம் ஓங்க, இரவோடு இயைந்து வரும் கலிகாலம் உவமமாயிற்று. 'கங்குல் பூசிவருகின்ற கலிகாலம்' என்பதனோடு, 'பொய்வினைக் குதவும் வாழ்க்கை யரக்கரைப் பொருந்தி, அன்னார் செய்வினைக் குதவும் நட்பாற் செல்பவர்த் தடுப்பதேய்க்கும் மைவிளக்கியதே யன்ன வயங்கிருள்' (1977) என ஆசிரியர் முன்னே கூறியதும் நோக்கத்தகும். (13)

**2619.** செற்ற வாளுழுவை வன்செறிய தட்டிருகுறச்
சுற்றி வாரணவு ரித்தொகுதி நீவிதொடரக்
கொற்ற மேவுதிசை யானையின்ம ணிக்குலமுடைக்
கற்றை மாசுண முரித்தவுரி கச்சொளிரவே.

செற்ற வாள் உழுவை வன் செறி அதள் திருகுறச்
சுற்றி, வாரண உரித் தொகுதி நீவி தொடரக்
கொற்றம் மேவு திசை யானையின் மணிக்குலம் உடைக்
கற்றை மாசுணம் உரித்த உரி கச்சு ஒளிரவே.

பொ:—தன்னால் கொல்லப்பட்ட கொடிய புலியின் வலிய செறிந்த (பல) தோல்கள் (மேலாடையாக இரு தலைப்பும்) மாறு பட்டமையவும், தன்னால் கொல்லப்பட்ட யானைகளின் தோலின் தொகுதி உடலைச் சுற்றி ஆடையாக இணைந்திருக்கவும், மலைப் பாம்புகளை உரித்துக் கொண்ட தோல்கள், தன்னால் வெற்றி கொள்ளப்பட்ட திசையானைகளின் மணிகளாகிய சலங்கைகள் கோக்கப்பட்ட அரைப் பட்டிகையாக விளங்கவும்.

கு:—செற்றல் - கொல்லுதல். உழுவை - புலி. செறிதல் - பலவாகத் தொகுதல். அதள் - தோல். திருகுதல் - மாறுபடுதல்.

வாரணவுரி - யானைத்தோல். நீவி - உடை. தொடர்தல் - இசைதல். செற்ற என்பது வாரணத்தோடும் கூட்டப்பட்டது. வாரணவுரித் தொகுதி என்றதற்கு ஏற்ப, வன் செறியதள் என்பதற்கு வலிய செறிந்த (பல) தோல்கள் என்று பொருள் கொள்ளலாயிற்று. மாசுணம் உரித்த உரிக்கற்றை என இயைக்க. மாசுணம் - மலைப் பாம்பு. உரிக்கற்றை – தோலின்றொகுதி. கச்சு – அரைப்பட்டிகை. ஒளிர்தல்-விளங்குதல். இதனால் மிகப் பருத்த உடலுடைய விராதன், பல புலித் தோல்களை இணைத்து மேலாடையாகவும், பல யானைத் தோல்களை இணைத்து அரையில் உடையாகவும், பல பாம்புத் தோல்களை இணைத்து அரைப் பட்டிகையாகவும் அணிந்து வந்தமை புலப்படும். கற்றை மாசுணம் விரித்து வரி கச்சு ஒளிர என்று பாடங்கொண்டு, அதற்கிசைய, மலைப்பாம்பை விரித்து அதனால் (அந்த அரையாடையின் மேல்) கட்டிய இடைக்கச்சு விளங்கவும் என்று உரைகண்டாரும் உண்டு. எனினும் முன், ‘செற்றவா ளுழுவை வன்செறியதள் திருகுற’ ‘வாரண வுரித்தொகுதி நீவி தொடர’ என்றவற்றோடு இயைபுடைய ‘கற்றை மாசுணம் உரித்த உரி கச்சு ஒளிர’ என்ற பாடங்கொண்டு, மலைப்பாம்புகளை உரித்துக் கொண்ட தோல்கள் அரைப் பட்டிகையாக விளங்கவும் என்று பொருள் கொள்ளலாயிற்று. இக்காலத்தும் பாம்புத் தோலால் அமைந்த அரைப் பட்டிகை காணப்படுவதுண்டு. (14)

**2620.** செங்க ணங்கவர வின்பொருவில் செம்மணிவிராய்
வெங்க ணங்கவல யங்களும் விலங்கவிரவிச்
சங்க ணங்கிய சலஞ்சல மலம்புதவளக்
கங்க ணங்களு மிலங்கிய கரம்பிறழவே.

செங்கண் அங்க அரவின் பொரு இல் செம்மணி விராய்,
வெங்கண் அங்க வலயங்களும் விலங்க, விரவிச்
சங்கு அணங்கிய சலஞ்சலம் அலம்பு தவளக்
கங்கணங்களும் இலங்கிய கரம், பிறழவே.

பொ :—சிவந்த கண்களையும் உடலையும் உடைய பாம்பின் ஒப்பற்ற செந்நிறம் வாய்ந்த இரத்தினங்கள் (பதிக்கப்பட்டுப்) பொருந்திக் கொடிய கண்ணோடுகூடிய உறுப்பினையுடைய வளைகளும் ஒளி வீச, (ஆயிரம்) வலம்புரிச் சங்குகள் நெருக்கமாக இணைந்து சூழ்ந்த சலஞ்சலம் என்னும் சங்குகளா(லா)கிய ஒலிக்கின்ற வெண்ணிறமுடைய கங்கணங்களும் விளங்கிய கைகள் புடைபெயர்ந் தசைய.

கு :—அங்கம்–(1) உடல், (2) உறுப்பு. பொரு-ஒப்பு. விராவுதல்–பொருந்துதல். வெங்கண் அங்கவலயம் – கொடிய கண்ணொடு கூடிய உறுப்பினை யுடைய வளை; இது, பாம்பின் தலை வடிவமாக அமைந்த பூட்டுவாயினையுடைய வளையைக் குறித்தது. வலயம் – முன்கையிலணியும் வளை. விலங்குதல் - ஒளி வீசுதல். சங்கு விரவி அணங்கிய சலஞ்சலம் என இயைக்க. சங்கு விரவி அணங்கிய சலஞ்சலம் என்றது ஆயிரம் வலம்புரிச் சங்குகளால் நெருங்கி இசைந்து சூழப்பட்ட சலஞ்சலம் என்றவாறு. சலஞ்சலம் – சங்கினத்தில் ஒன்று. அலம்புதல் – ஒலித்தல். தவளம் – வெண்மை. கங்கணம் – முன்கை யணிவகையுள் ஒன்று. இலங்குதல் – விளங்குதல். கரம் - கை. பிறழ்தல் – புடைபெயர்தல். வலயம் என்பதற்குத் தோள்வளை என்று பொருள் கண்டாரும் உண்டு. 'கிம்புரிப் பெரிய தோள்வளை யொடுங்கிளரவே.' (2617) என்று தோள்வளை முன்பு கூறப்பட்டமையால் இங்கே வலயம் என்றது முன் கையில் அணியும் வளையினை என்று கொள்ளுதலே அமைவுடையதாகும். இதனால், மாணிக்க வளைகளும் சங்க வளைகளும் விளங்கும் கைகள் புடைபெயர்ந்து அசைய விராதன் வருதல் கூறியவாறு. (15)

**2621.** முந்து வெள்ளிமலை
பொன்னின்மலை யோடுமுரணப்
பந்த முந்துகழல்
பாடுபட வூடுபடர்வோன்
வந்து மண்ணினிடை
யோனெனினும் வானினிடையோர்
சிந்தை யுள்ளும்விழி
யுள்ளுமுள னென்றதிறலோன்.

முந்து வெள்ளி மலை பொன்னின் மலையோடும் முரணப்
பந்தம் உந்து கழல் பாடுபட ஊடு படர்வோன்,
வந்து மண்ணின் இடையோன் எனினும், வானின் இடையோர்
சிந்தையுள்ளும் விழியுள்ளும் உளன் என்ற திறலோன்.

பொ :—சிறந்த வெள்ளி மலையோடும் பொன் மலையோடும் மாறுபடும்படி கட்டிய வீரக்கழல் ஒலிக்க, வனத்திடை திரிபவனான அவன், தான் தோன்றிய மண்ணுலகிலுள்ளானெனினும், வானுலகிலுள்ள தேவர்களுடைய மனத்துள்ளும் கண்ணுள்ளும் உள்ளான் என்று சொல்லத்தக்க ஆற்றலுடையான்.

கு :—முந்துதல்-மேம்படுதல். வெள்ளிமலை-கயிலை. பொன்னின் மலையோடும் என்பதனுள் ஓடும் என்பதனைப் பிரித்து வெள்ளிமலை என்பதனோடும் கூட்டுக. பொன்னின் மலை – மேரு. பொன்னின் மலை என்பதனுள் இன் அல்வழிச் சாரியை. முரணுதல்-மாறுபடுதல். பந்தம் உந்து - கட்டுதல் பொருந்திய; உந்துதல் என்பது விகுதி கெட்டு உந்து எனப் பகுதி மாத்திரமாய் நின்றது; 'தானந்தோறும் உந்திடுங் கரணம்' (சி. சி. 4.34. சிவஞா) என்பதனுள் உந்துதல் என்பது பொருந்துதல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். கழல் – இங்கே வீரக்கழலை உணர்த்தி நின்றது. பாடுபடுதல் – ஒலித்தல்; 'பாடினருவிப் பயங்கெழு மீமிசை' (278) என்பது மலைபடுகடாம். விராதன் அணிந்த வீரக் கழல்கள், வெள்ளியாலும் பொன்னாலும் இயன்று, மிகப்பெரிய அவனுருவத்துக் கிசையப் பெரிய உருவமுடையவாக இருந்தமையின், நிறத்தாலும் உருவத்தாலும் வெள்ளி மலையோடும் பொன்னின் மலையோடும் முரணுவன வாயின என்க. வந்த மண்ணினிடையோனெனினும் வானினிடையோர் சிந்தையுள்ளும் விழியுள்ளும் உளன் என்ற திறலோன் என்பது, விராதன், இராமனை ஒத்த பேராற்றலுடையான் என மற்றொரு பொருளும் தொனிக்க நின்றது. இப்பொருளில் என்ற என்பது உவமவுருபு. இராமன், தான் தோன்றிய மண்ணுலகில் உள்ளானாயினும், தன்னுடைய உயர் குணங்களால் விண்ணுலகிலுள்ளாராகிய தேவர்களுடைய மனத்துள்ளும் விழியுள்ளும் உளனாதல் போல, விராதனும் தான் தோன்றிய மண்ணுலகில் உள்ளானாயினும் அவன் கொடுமையால் எழுந்த அச்சத்தால் வானுலகிலுள்ள தேவர்களுடைய நெஞ்சிலும் கண்ணிலும் உளனாயினன். விராதன் கொடுமையால் அஞ்சிய தேவர்கள் எப்பொழுதும் அவனையே நினைந்தும், காணப்படும் பொருள்களையெல்லாம் அவனாகவே கண்டும் வருந்துவாராயினர் என்றவாறு. மண், வான் என்பவை மண்ணுலகு வானுலகு என்று பொருள்படும். இடை ஏழாம் வேற்றுமை யுருபு. (16)

2622. பூத மத்தனையு மோர்வடிவு கொண்டபுதிதென்
றோத வொத்தவுரு வத்தனுரு மொத்தகுரலன்
காத லித்தயன ளித்தகடை யிட்டகணிதப்
பாத லக்கமத வெற்பவை படைத்தவலியான்.

'பூதம் அத்தனையும் ஓர் வடிவு கொண்ட புதிது!' என்று
ஓத ஒத்த உருவத்தன், உரும் ஒத்த குரலன்,
காதலித்து அயன் அளித்த கடை இட்ட கணிதப்
பாத லக்கம் மதவெற்பு அவை படைத்த வலியான்.

பொ :—‘ எல்லாப் பூதகணங்களும் (இயைந்து) கொண்ட புதிதாகிய ஒரு வடிவம்’ என்று சொல்லத்தக்க உருவத்தையும், இடி முழக்கம் போலும் குரலையும், பிரமன் விரும்பிக் கொடுத்த ஒன்றே கால் இலக்கம் மத யானைகளின் ஆற்றலையும் உடையனாய்.

கு :—பூதம் அத்தனையும் கொண்ட புதிது ஓர் வடிவு எனவும், அயன் காதலித்து அளித்த எனவும் இயைக்க. பூதம் - பேருருவுடைய வுயிர். விராதனுடைய வுருவின் பெருமையை விளக்கப், பூதம் அத்தனையும் கொண்ட புதிது ஓர் வடிவு என்று ஓத ஒத்த உரு என்றனர். பூதகணங்களெல்லாம் இயைந்து புதிதாக ஒரு உருவங் கொண்டாற்போன்ற மிகப் பெரிய உருவுடையன் என்றவாறு. தனை-அளவு. காதலித்து-விரும்பி. கடையிட்ட கணிதப் பாதலக்கம்-இறுதியில் இடப்பட்ட எண்ணாகிய கால் என்பதனையுடைய லட்சம்; அது ஒன்றேகால் லக்கம். பாதம் – கால். எண்களை இம்முறையாலும் கூறுவது வழக்கு; ‘அரை கடையிட்டமைவுற்ற முக்கோடி’ (யுத்த. இராவணன் வதை. 243) என்பர் பின்னும். மதவெற்பு – மதத்தையுடைய மலை—யானை. வெற்பாகிய அவை என்க. (17)

2623. சார வந்தயல் விலங்கினன் மரங்கடரையில்
பேர வன்கிரி பிளந்துக வளர்ந்திகல்பெரு
வீர வெஞ்சிலையி னோரெதிர் விராதனெனுமக்
கோர வெங்கணுரு மேறன கொடுந்தொழிலினான்.

சார வந்து, அயல் விலங்கினன்; மரங்கள் தரையில்
பேர, வன் கிரி பிளந்து உக, வளர்ந்து, இகல் பெரு
வீர வெம் சிலையினோர் எதிர் விராதன் எனும் அக்
கோர வெங்கண் உருமேறு அன கொடுந்தொழிலினான்.

பொ :—விராதன் என்று சொல்லப்படும், வெவ்விய கண்களையும் இடியேறு போலும் கொடிய செயலையும் உடைய அவன், மரங்கள் தரையில் பெயர்ந்து விழுமாறும், திண்ணிய மலைகள் பிளவு பட்டுச் சிதறுமாறும் ஓங்கி, போரைப் பெருத வீரத்தன்மை வாய்ந்த வெய்ய வில்லையுடையவராகிய இராம லக்குவர் முன்பு அண்மையில் எதிர்ப்பட்டுத் தடுத்தவனாகி.

கு:—விராதன் எனும் அக் கோர வெங்கண் உருமேறன கொடுந் தொழிலினான், மரங்கள் தரையில் பேர, வன்கிரி பிளந்து உக. வளர்ந்து, இகல்பெரு வீர வெஞ்சிலையினோ ரெதிர் அயல் சார வந்து விலங்கினன் என இயைக்க. விலங்கினன், ‘நில்லும் நில்லும் என

வந்து' எனப் பின்வரும் பாட்டொடு தொடரும். விலங்குதல் - தடுத்தல். விலங்கினன் - தடுத்தவனாய்; முற்றெச்சம். விராதன் வரும் வேகத்தால் மரங்கள் பெயர்ந்து விழுவனவாயின. அவன் எற்றுதலால் மலைகள் பிளந்து உகுவனவாயின. இராம லக்குவரொடு போர் செய்யத்தக்க பெருவீரர் இன்மையின் இகல்பெரு வீர வெஞ்சிலையினோர் என்றார். (18)

விராதன் சீதாபிராட்டியைக் கைக்கொண்டு செல்லுதல்

2624. நில்லு நில்லுமென
வந்துநிண முண்டநெடுவெண்
பல்லும் வல்லெயிறு
மின்னுபகு வாய்முழைதிறந்
தல்லி புல்லுமல
ரன்னமனை யாளையொருகைச்
சொல்லு மெல்லையின்
முகந்துயர் விசும்புதொடர.

"நில்லும், நில்லும்" என வந்து, நிணம் உண்ட நெடு வெண்
பல்லும் வல் எயிறும் மின்னு பகு வாய் முழை திறந்து,
அல்லி புல்லும் மலர் அன்னம் அனையாளை ஒரு கைச்
சொல்லும் எல்லையின் முகந்து, உயர் விசும்பு தொடர.

பொ:—இறைச்சியை உண்ட நீண்ட வெள்ளிய கோரப் பற்களும் வலிய பிற பற்களும் ஒளிர்கின்ற பிளந்த வாயாகிய குகையைத் திறந்து, 'நில்லும் நில்லும்' என்று (சொல்லிக் கொண்டே) வந்து, ஒரு சொற் சொல்லுமளவில், அகவிதழொடு கூடிய தாமரை மலரில் தங்கிய அன்னம் போல்வாளாகிய சீதாபிராட்டியை ஒரு கையிற் கொண்டு உயர்ந்த வான்வழிச் செல்ல.

கு:—நிணம் உண்ட நெடுவெண் பல்லும் வல்லெயிறும் மின்னு பகுவாய் முழைதிறந்து, 'நில்லும் நில்லும்' என வந்து என இயைக்க. நிணம் - இறைச்சி. நெடுவெண்பல் என்று கோர தந்தம் கூறப்பட்டமையால், வல்லெயிறு என்றது பிற பற்களை. பகுவாய் - பிளந்த வாய். முழை - குகை. பகுவாய் முழை உருவகம். அல்லி - அகவிதழ். மலர் இங்கே தாமரையைக் குறித்தது. முகந்து-கொண்டு. (19)

### விராதனை நோக்கி இராமலக்குவர் கூறுதல்

2625. காளை மைந்தரது
கண்டுகதம் வந்துகதுவத்
தோளில் வெஞ்சிலை
யிடங்கொடு தொடர்ந்துசுடர்வாய்
வாளி தங்கிய
வலங்கையவர் வஞ்சனையடா
மீடி யெங்ககறி
யென்பது விளம்பவவனும்.

காளை மைந்தர் அது கண்டு, கதம் வந்து கதுவத்
தோளில் வெம் சிலை இடம் கொடு தொடர்ந்து, சுடர் வாய்
வாளி தங்கிய வலங்கையவர், வஞ்சனை, "அடா!
மீள்தி; எங்கு அகல்தி?" என்பது விளம்ப, அவனும்.

பொ :—காளைப் பருவமுடைய மைந்தராகிய இராமலக்குவர், விராதன் அவ்வாறு விண்மிசைச் செல்லுதல் கண்டு, சினம் வந்து பற்ற, தோளில் உள்ள வில்லை இடக்கையிற் பிடித்து, ஒளிவாய்ந்த அம்புகள் பொருந்திய வலக்கரத்தை யுடையராய், அவ்வஞ்சகனைத் தொடர்ந்து, 'அடா! திரும்பு; எங்கே ஓடுகிருய்?' என்பது கூற, அவனும்,

கு :—சிலை இடம்கொடு, வாளிதங்கிய வலங்கையர் அவ்வஞ்சனைத் தொடர்ந்து என இயைக்க. கதம் - சினம். கதுவுதல் - பற்றுதல். இடம் - இடக்கை. சுடர் - ஒளி. வாளி - அம்பு. வலங்கை - வலக்கை. வலங்கையவர் - வலக்கையையுடையவராய்; முற்றெச்சம். வாளிதங்கிய வலங்கையவர் என்பதற்கு, சிலை இடம் கொடு என்பதற்கு ஏற்ப, வாளியை வலக்கையிற்கொண்டு என்று பொருள் கொள்ளத்தகும். மீள் + தி, அகல் + தி என்பவை மீடி, அகறி யென்ருயினமை புணர்ச்சி விகாரம். (20)

### இராமலக்குவரை நோக்கி விராதன் கூறுதல்

2626. ஆதி நான்முகன் வரத்தினெனை தாவியகலேன்
ஏதி யாவதுவு மின்றியுல கியாவுமிகலிற்
சாதி யாதனவு மில்லையுயிர் தந்தனெனடா
போதிர் மாதிவளை யுந்தியினி தென்றுபுகல.

'' ஆதி நான்முகன் வரத்தின் எனது ஆவி அகலேன் ;
ஏதி யாவதுவும் இன்றி உலகு யாவும் இகலில்,
சாதியாதனவும் இல்லை ; உயிர் தந்தனென், அடா !
போதிர், மாது இவளை உந்தி, இனிது '' என்று புகல.

பொ :—' அடா ! முதன்மையுடைய பிரமன் கொடுத்த வரத்தால் உயிர் நீங்கேன் ; எல்லாவுலகங்களிலும் போரில் படைக்கலம் எதுவும் இல்லாமலே என்னால் அழிக்கப்படாதனவும் இல்லை ; உங்களுக்கு உயிர்(ப் பிச்சை) தந்தேன் ; இந்தப் பெண்ணை விட்டு விட்டு, நீங்கள் இனிதுபோய்ச் சேருங்கள்' என்று விராதன் கூற.

கு :—உலகு யாவும் இகலின், ஏதி யாவதுவும் இன்றிச் சாதி யாதனவும் இல்லை எனவும், மாது இவளை உந்தி இனிது போதிர் எனவும் கூட்டுக. ஆதி - முதன்மை ; பழமையும் ஆம். ஏதி - படைக் கலம். யாதும் என்பது, யாவதுவும் என விரித்தல் விகாரம் பெற்றது. சாதித்தல் - அழித்தல்; 'கஞ்சனைச் சாதிப்பதற்கு' (3. 5. 5) என்னும் திருவாய்மொழியில் சாதித்தல் - அழித்தல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். அடா, போதிர் என்றது ஒருமைப்பன்மை மயக்கம். உந்துதல் - கைவிடுதல்.

(21)

## இராமன் நாணொலி எழுப்பல் 2627—2628

2627. வீர னுஞ்சிறிது மென்முறுவல் வெண்ணிலவுகப்
போர றிந்தில னிவன்றனது பொற்புமுரணுந்
தீரு மெஞ்சியென நெஞ்சினுறு சிந்தைதெரியப்
பார வெஞ்சிலையி னாணொலி படைத்தபொழுதே.

வீரனும் சிறிது மெல் முறுவல் வெண் நிலவு உகப்
'' போர் அறிந்திலன் இவன் ; தனது பொற்பும், முரணும்
தீரும், எஞ்சி '' என, நெஞ்சின் உறு சிந்தை தெரியப்
பார வெம் சிலையின் நாண் ஒலி படைத்த பொழுதே.

பொ :—வீரனான இராமனும், புன்சிரிப்பாகிய வெள்ளிய நிலவு சிறிது வெளிப்பட, (இவன் என்) போர்த்திறமையை அறிந்தா னில்லை ; இவனுடைய பொலிவும் வலிமையும் குறைந்தழியும் என்று தன் மனத்தில் எழுந்த நினைவு புலப்படும்படி கனத்த வெய்ய தன் வில்லின் நாணோசையை எழுப்பிய அக்கணமே.

கு :—வீரன் என்றது இராமனை. மென்முறுவல் - புன்சிரிப்பு. மென்முறுவல் வெண்ணிலவு உருவகம். முன் பாட்டில் வந்த விராதன் பேச்சால் இராமன் புன்முறுவல் பூத்தனன் என்க. உகுதல் இங்கே வெளிப்படுதல் என்று பொருள் தந்தது. இவன் என்பதை முன்னும் கூட்டி, இவன் போர் அறிந்திலன்; இவன்றனது பொற்பும் முரணும் எஞ்சித்தீரும் என இயைக்க. தெரிய - புலப்பட. பாரம் - கனம். நாணொலி படைத்தல் - நாணொலியுண்டாக்குதல். (22)

2628. இலைகொள் வேலடலி
ராமனெழு மேகவுருவன்
சிலைகொ ணாணெடிய
கோதையொலி யேறுதிரைநீர்
மலைக ணீடுதல
நாகர்பிலம் வானமுதலா
முலக மேழுமுரு
மேறென வொலித்துரறவே.

இலை கொள் வேல் அடல் இராமன், எழு மேக உருவன்,
சிலை கொள் நாண் நெடிய கோதை ஒலியேறு, திரைநீர்
மலைகள் நீடு தலம், நாகர் பிலம், வானம் முதல் ஆம்
உலகம் ஏழும் உருமேறு என ஒலித்து உரறவே.

பொ :—இலைவடிவமான தலையினையுடைய வேற்படையையும் வலிமையையும் உடையவனும், (கருக்கொண்டு) எழுகின்ற மேகம் போலும் கரிய நிறம் வாய்ந்தவனுமான இராமனுடைய வில்லில் ஏற்றிய நாணில் நீண்ட விரலுறை உராய்தலால் எழுந்த பேரொலியானது, அலைகளையுடைய கடலாற் சூழப்பட்டதும் மலைகளோடு கூடியதுமான நிலவுலகும், நாகர் வாழும் இடமான பாதலமும், வானுலகமும் முதலாகவுள்ள ஏழுலகத்தும் இடியேறுபோல் ஒலித்து முழங்க.

கு :—இலை - இலைவடிவு. அடல் - வலிமை. கோதை - வில்வீரர் விரலிலணியும் உறை ; 'முரிச்சிலையும் முரட்கோதையுங் கட்டி' (776) என்பது பாரதவெண்பா. ஒலியேறு - பேரொலி. திரை - அலை. திரை நீர் என்றது இங்கே கடலை உணர்த்தியது. தலம் - நிலவுலகம். பிலம் - பாதலம். உருமேறு - இடியேறு. உரறுதல் - முழங்குதல் ; 'உருமுரறு கருவிய பெருமலை பிற்பட' (357) என்பது மலைபடுகடாம். (23)

சீதாபிராட்டியை விட்டு இராமனை நோக்கி விராதன் வெகுளல்

2629. வஞ்ச கக்கொடிய பூசைநெடு வாயின்மறுகும்
பஞ்ச ரக்கிளி யெனக்கதறு பாவையைவிடா
நெஞ்சு ளுக்கின னெனச்சிறிது நின்றுநினையா
வஞ்ச னக்கிரி யனுனெதி ரரக்கனழலா.

வஞ்சகக் கொடிய பூசை நெடு வாயில் மறுகும்
பஞ்சரக் கிளி எனக் கதறு பாவையை விடா,
நெஞ்சு உளுக்கினன் எனச் சிறிது நின்று நினையா,
அஞ்சனக் கிரி அனுன் எதிர் அரக்கன் அழலா.

பொ:—அரக்கனுகிய விராதன், வஞ்சகத்தன்மையுடைய பூனையின் பெரிய வாயில் அகப்பட்டுக் கலங்கும் கூட்டுக் கிளிபோலக் கதறுகின்ற சீதாபிராட்டியை விட்டு, மனஞ் சிதைந்தவன்போலச் சற்றே நின்று எண்ணி, அஞ்சன மலைபோல்பவனுன இராமனெதிரே சினந்து.

கு:—அரக்கன், விடா நினையா அழலா திரிசிகைப் படை திரித்தெறிய எனப் பின்வரும் பாடலோடு இயையும். பூசை - பூனை; 'பூசை முற்றவு நக்குபு புக்கென' (4) என்றுர் முன்னும். மறுகுதல் - கலங்குதல். பஞ்சரம் - கூடு. பாவை என்பது உவமையாகு பெயராய்ச் சீதாபிராட்டியை உணர்த்தியது. உளுக்குதல் - சிதைதல். அஞ்சனக்கரி - மைம்மலை; அஞ்சனக்கிரியனுன் என்றது இராமனை; 'அஞ்சனக்குன்ற மன்னவழகன்' (1980) என்றுர் முன்னும். 'அஞ்சனக்கிரியே யருளாய்' (சூர்ப்பணகைப். 86) 'அஞ்சனக் குன்ற மென்னவந்தான்' (மாரீசன் வதை. 149) என்பர் பின்னும். அழலுதல் - சினத்தல். பூனை பதுங்கியிருந்து கிளியைக் கவர்ந்து கொண்டு செல்லுதல்போல, விராதனும் பிராட்டியைக் கவர்ந்து கொண்டு செல்லத் தலைப்பட்டான் எனவும், கூட்டுக்கிளி தன் இனத்தை நாடிச் செல்லாது, தன்னை ஆதரித்து வளர்ப்பவனிடம் அவனை மகிழ்வித்துத் தங்குதல்போலச் சீதாபிராட்டியும், தன் சுற்றம் முதலியவற்றைக் கைவிட்டுத் தனக்கு எல்லா நலமும் நல்கும் தன் நாயகனுன இராமனைத் தொடர்ந்து வந்து, தன் சொற் செயல்களால் அவனை மகிழ்வித்து அவனுெடு தங்குதலின், சீதாபிராட்டிக்குப் பஞ்சரக்கிளி உவமையாயிற்று எனவும் விளக்கம் வரைந்தார் மு. ரா. கந்தசாமிக் கவிராயர். (24)

## விராதன் இராமன்மேற் சூலப்படையை எறிதல்

2630. பேய்மு கப்பிணி யறப்பகைஞர் பெட்பினுதிரந்
தோய்மு கத்தது கனத்தது சுடர்க்கு திரையின்
வாய்மு கத்திடை நிமிர்ந்துவட வேலைபருகுந்
தீமு கத்திரி சிகைப்படை திரித்தெறியவே.

பேய் முகப் பிணி அறப் பகைஞர் பெட்பின் உதிரம்
தோய் முகத்தது, கனத்தது, சுடர்க் குதிரையின்
வாய் முகத்திடை நிமிர்ந்து வட வேலை பருகும்
தீ முகத் திரிசிகைப் படை திரித்து எறியவே.

பொ :—பேய்களின் பசிப்பிணி நீங்கும்படி பகைவர் சோரியில் விருப்பொடு தோய்ந்த நுனியையுடையதும், பாரமானதும், விளங்குகின்ற குதிரையின் சிறந்த முகத்தின்கண் வளர்ந்து, (நிலமகளின்) முத்துவடம்போன்ற கடலின் நீரை (மிகாதவாறு) பருகுகின்ற வடவைத் தீயைத் தன்கண் கொண்டிருப்பதுமான முத்தலை வேலைச் சுழற்றி (இராமன்மீது) எறிதலும்.

கு :—முகம் - இடம். பேய்முகப் பிணி - பேயின்பால் உள்ளதாகிய பசிநோய். பெட்பு - விருப்பம். பகைவர் உதிரம் பெட்பின் தோய் முகத்தது என மாற்றி இயைக்க. வேல், பகைவருடலைத் தடிந்து பேய்க்கு உணவாகவும் அவர் குருதியை உண்ணு நீராகவும் உதவுதலால், பேய்முகப் பிணியறப் பகைவர் பெட்பின் உதிரம் தோய் முகத்தது என்றார். கனம் - பாரம். சுடர்தல் - விளங்குதல். நிமிர்தல் - வளர்தல்; 'ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி' (1160) என்பது தேவாரம். வேலை - கடல். பருகுதல் - உண்ணுதல். வேலை பருகும் தீ என்றது வடவை என்னும் நெருப்பினை. இது, குதிரை முகமுடையது; கடல் எல்லை கடந்து பெருகாதவாறு அதனிடை நின்று பருகித் தடுப்பது. திரிசிகைப்படை - முத்தலைவேல். திரி - மூன்று. சிகை - தலை. படை - வேல். திரித்தல் - சுழற்றுதல். (25)

## இராமனும் விராதனும் பொருதல் 2631—2633

2631. திசையும் வானவரு
நின்றதிசை மாவுமுலகு
மசையு மாலமென
வன்னவயின் மின்னிவரலும்

வசையின் மேருமுதன்
மால்வரைக ளேழின்வலிசால்
விசைய வார்சிலை
யிராமனொரு வாளிவிடவே.

திசையும், வானவரும், நின்ற திசை மாவும், உலகும்
அசையும் ஆலம் என, அன்ன அயில் மின்னி வரலும்,
வசை இல் மேரு முதல் மால் வரைகள் ஏழின் வலி சால்
விசைய வார் சிலை இராமன் ஒரு வாளி விடவே.

பொ :—அந்தச் சூலம், எட்டுத்திசையும், அத்திசைகளின் காவலரான தேவர்களும் அத்திசைகளில் நின்ற யானைகளும் எல்லா உலகும் நடுங்கும் (கொடிய) ஆலகால விடத்தைப்போல ஒளிவீசிக் கொண்டு வந்த அளவில், குற்றமற்ற மேரு முதலிய பெரிய குல மலைகள் ஏழின் ஆற்றல் மிக்க பெரிய வெற்றிவில்லைத் தாங்கிய இராமன் ஓர் அம்பை ஏவ.

கு :—முன்னே திசையும் பின்னே திசைமாவும் அமைந்ததற்கேற்ப இடைநின்ற வானவர் என்பதற்கு அத்திசைகளின் காவலரான தேவர்களும் என்று பொருள் கொள்ளலாயிற்று. திசைமா - திக்கியானைகள்; அவை ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம் என்பவைகளாம். அசைதல் - நடுங்குதல். ஆலம் - விடம், இங்கே ஆலகாலத்தை உணர்த்திற்று. அன்ன - அந்த. அயில் - சூலம். மால் வரைகள் ஏழாவன: மேரு, கயிலை, மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம் என்பனவாம். விசயம் என்பது எதுகைக்கிசைய விசையம் என மொழியிடைப் போலியாயிற்று. (26)

**2632.** இற்ற தின்றொடிவ்
வரக்கர்குல மென்றுபகலே
வெற்ற விண்ணினிடை
நின்றுநெடு மீன்விழுவபோற்
சுற்ற மைந்தசுட
ரெஃகம திரண்டுதுணியா
வற்ற கண்டமவை
யாசையின தந்தமுறவே.

'இற்றது இன்ஞேடு இவ் அரக்கர் குலம்' என்று, பகலே
வெற்ற விண்ணினிடை நின்று நெடுமீன் விழுவ போல்,
சுற்று அமைந்த சுடர் எஃகம் அது இரண்டு துணியா
அற்ற கண்டம் அவை ஆசையினது அந்தம் உறவே.

பொ :—'இன்ஞேடு இந்த அரக்கர் கூட்டம் அழிந்தது என்று பகற்பொழுதிலே வெறுமையாகிய விண்ணினின்று பெரிய வால் மீன்கள் விழுவனபோல, ஒளி தழுவியமைந்த அந்தச் சூலமானது இரண்டு கூருக அறுபட்ட துண்டங்கள் திசைகளின் எல்லையை அடைய.

கு :—இற்றது என்றது விரைவும் தெளிவும்பற்றி; கால வழுவமைதி. பகற்போதில் விண்மீன் விழுதல் பின் நிகழும் கேட்டை அறிவிக்கும் உற்பாதமாகும். ஒளிவாய்ந்த விராதன் சூலம் இரண்டு துண்டாய் இற்றுவிழுதல், பகற்போதில் விண்மீன் விழுதலாகிய உற்பாதமாகி, அரக்கர்குலத்துக்குப் பின் நிகழவிருக்கும் தீங்கை முன் அறிவிப்பதாயிற்று என்றவாறு. வெற்ற - வெறுமையான = நட்சத்திரங்கள் இல்லாத. நெடுமீன் - பெரிய வால் மீன்கள். எஃகம் - சூலம். கண்டம் - துண்டம். கண்டமவை எஃகமது என்பவற்றுள் அவை அது என்பவை பகுதிப்பொருள் விகுதியாய் நின்றன. ஆசை - திசை. அந்தம் - எல்லே. (27)

2633. சூரொ டுங்கயி றுணிந்திறுதல் கண்டுசிறிதும்
போரொ டுங்கிலன் மறங்கொடு புழுங்கிநிருதன்
பாரொ டுங்குறு கரங்கொடு பருப்பதமெலாம்
வேரொ டுங்கடி தெடுத்தெதிர் விசைத்துவிடலும்.

சூர் ஒடுங்கு அயில் துணிந்து இறுதல் கண்டு, சிறிதும்
போர் ஒடுங்கிலன், மறம்கொடு புழுங்கி, நிருதன்,
பார் ஒடுங்குறு கரங்கொடு பருப்பதம் எலாம்
வேரொடும் கடிது எடுத்து எதிர்விசைத்து விடலும்.

பொ :—விராதன், சூர் என்னும் கொடுந்தெய்வமும் அடங்கும் (வீறுடைய தன்) சூலம் துண்டுபட்டு ஒடிந்தமைகண்டு, போர் செய்தலில் சிறிதும் தளர்ச்சியடையாதவஞய், வீரத்தால் சினந்து பூமி(ப் பரப்பும் சிறிதாகி) ஒடுங்கும் கைகளால் மலேகள் பலவற்றையும் விரைந்து வேரோடு பறித்தெடுத்து இராமனெதிர் உரத்து எறிந்த நிலேயில்.

கு :—நிருதன், கண்டு, புழுங்கி, எடுத்து விசைத்துவிடலும் என இயையும். நிருதன் - அரக்கன்; இங்கே விராதனேச் சுட்டி நின்றது.

சூர் - கொடுந்தெய்வம்; 'உருமுஞ்சூரும் இரைதேர் அரவமும்' (குறிஞ்சிப். 255) என்பதனுள் சூர் என்பதற்குக் கொடுந்தெய்வம் என்று பொருள் கொண்டார் நச்சினார்க்கினியர். சூரும் எனச் சிறப்பும்மை விரிக்க. பருப்பதம் - மலை. விசைத்துவிடுதல் - உரத்து எறிதல்; 'கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்தெறிந்த' (பெரும்பாண். 437) என்பதனுள் விசைத்தெறிந்த - என்பதற்கு உரத்துக் கொட்டின என்று நச்சினார்கினியர் பொருள் வரைந்ததும் இங்கு நோக்கத்தகும். (28)

**2634.** வட்ட மிட்டகிரி யற்றுக வயங்குவயிரக்
கட்ட மைந்தகதிர் வாளியெதி ரேகடவலான்
விட்ட விட்டமலை மீளவவன் மெய்யின்விசையாற்
பட்ட பட்டவிட மெங்குமுட லூறுபடலும்.

வட்டம் இட்ட கிரி அற்று உக, வயங்கு வயிரக்
கட்டு அமைந்த கதிர்வாளி எதிரே கடவலான்,
விட்ட விட்ட மலை மீள, அவன் மெய்யின், விசையால்
பட்ட பட்ட இடம் எங்கும் உடல் ஊறு படலும்.

பொ:—(விராதனால் எறியப்பட்டுத் தன்னைச்) சூழ்ந்து வருகின்ற மலைகள் சிதைந்து சிந்தும்படி, விளக்கம் மிக்க உறுதியான கட்டுக்கள் பொருந்திய ஒளியினையுடைய அம்புகளை அம்மலைகளுக்கு எதிராக இராமன் எய்ததனால், அவ்வரக்கன் ஓயாமல் எறிந்த மலைகளெல்லாம் திரும்ப, அவை வேகமாக அவன் உடலிற்பட்ட பட்ட இடங்களிலெல்லாம் உடல் ஊறுபட்ட அளவில்.

கு:—கடவுதல் - ஏவுதல். ஊறு - காயம். (29)

**2635.** ஓம ராமரை யொருங்குமுணர் வோருணர்வுறும்
நாம ராமவரை நல்லற நிறுத்தநணுகித்
தாம ராவணை துறந்துதரை நின்றவரையோர்
மாம ராமர மிறுத்ததுகொ டெற்றவரலும்.

ஓம் அ ராமரை, ஒருங்கும் உணர்வோர் உணர்வுறும்
நாமர் ஆம் அவரை, நல் அறம் நிறுத்த நணுகித்
தாம் அரா அணை துறந்து தரை நின்றவரை, ஓர்
மா மராமரம் இறுத்து, அதுகொடு எற்ற வரலும்.

பொ :—ஒரு பெரிய மராமரத்தை வேரோடு பறித்து, அதனுல், ஒன்றுபட்ட வுணர்வினையுடைய ஞானிகள் எண்ணுகின்ற திருநாமங் களையுடையவரும் சிறந்த அறத்தை நிலைநிறுத்தும் பொருட்டு, (திருப்பாற்கடலில்) அரவணை நீங்கித் தரைமிசைத் தோன்றி நின்ற வரும் பிரணவத்தின் பொருளாக விளங்குபவரும் ஆகிய இராமனைத் தாக்கவந்த அளவில்.

கு :—ஓர் மா மராமரம் இறுத்து, அதுகொடு, ஒருங்கும் உணர் வோர் உணர்வுறும் நாமராமவரை, நல்லறம் நிறுத்த அராவணை துறந்து தரை நணுகி நின்றவரை ஓமராமரை எற்ற வரலும் எனக் கூட்டுக. ஒருங்குதல் - ஒன்றுபடுதல். இராமன் அறம் நிறுவ வந்தமை, 'மறைகளும் முனிவர் யாரும்......துணிபொருள் துணி விற்றூக்கி, அறைகழலிராமனுகி யறநெறி நிறுத்தவந்த இறை' (கிட்கிந்தா. வாலிவதைப். 132) எனவும், 'அறந்தலை நிறுத்தி...... தீயோர் இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத்தேக வீண்டுப் பிறந்தனன் தன் பொற்பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்' (சுந்தர. 1123) எனவும் இந்நூலிலேயே பின்பு கூறப்படுதலால் விளங்கும். ஓம் - அ ராமர் - ஓம் என்னும் பிரணவ எழுத்தில் அதன் பொரு ளாய் நின்ற இராமன். தாம் - அசை. (30)

**2636.** ஏறு சேவக னிரண்டினெ டிரண்டுகணையால்
வேறு வேறுதுணி செய்தது விழுத்திவிசையான்
மாறு மாறுநிமிர் தோளிடையு மார்பினிடையும்
ஆறு மாறுமயில் வெங்கணை யழுத்தவவனும்.

ஏறு சேவகன் இரண்டினெடு இரண்டு கணையால்
வேறு வேறு துணி செய்து, அது விழுத்தி, விசையால்
மாறு மாறு நிமிர் தோளிடையும் மார்பினிடையும்
ஆறும் ஆறும் அயில் வெங்கணை அழுத்த, அவனும்.

பொ :—ஒருகாலைக் கொருகால் வளர்ச்சியடைகின்ற வீரத்தை யுடையவனுன இராமன், நான்கு அம்புகளால் அம் மராமரத்தை வேறு வேருகத் துண்டித்து வீழ்த்தி, (மேலும்) அவன் முதுகிடும்படி அவனுடைய உயர்ந்த தோள்களிலும் மார்பிலும் பன்னிரண்டு கூரிய கொடிய அம்புகளை வேகத்தோடு (சென்று) அழுந்தும்படி ஏவ, அவ்விராதனும்.

கு :—ஏறுதல் - வள்ர்தல். சேவகன் - வீரன். மாறும் ஆறு - முதுகிடும்படி. மாறுதல் - முதுகிடுதல்; 'மாருமைந்தின் ஊறுபடத்

தாக்கி' (மலைபடுகடாம். 332) என்பதனுள் மாறு என்பதற்கு நச்சினார்க்கினியர் முதுகிடாத என்று பொருளுரைத்தமையும் இங்கு நோக்கத்தகும். (31)

2637. மொய்த்த முட்டனது
டற்றலை முளைத்தமுடுகிக்
கைத்த வற்றினிமி
ரக்கடிது கன்றிவிசிறு
மெய்த்த மெய்ப்பெரிய
கேழலென வெங்கும்விசையிற்
றைத்த வக்கணை
தெறிப்பமெய் சிலிர்த்துதறவே.

மொய்த்த முள் தனது உடல் தலை முளைத்த, முடுகிக்
கைத்தவற்றின் நிமிரக் கடிது கன்றி விசிறும்
எய்த்த மெய்ப் பெரிய கேழல் என எங்கும் விசையின்
தைத்த அக்கணை தெறிப்ப மெய் சிலிர்த்து உதறவே.

பொ:—தன் உடலின்கண் தோன்றிய அடர்ந்த முட்கள் விரைந்து பகைவிலங்கின்மேல் நீண்டு தைக்கும்படி மிகவும் சினந்து தன்னுடலைச் சிலிர்க்கின்ற இளைப்புற்ற பெரிய முள்ளம்பன்றிபோல, விராதன் தன் உடலெங்கும் விசையாகத் தைத்த அக்கணைகள் சிதறி விழும்படி தன் உடலைச் சிலிர்த்து உதற.

கு:—தனது உடற்றலை முளைத்த மொய்த்தமுள் என இயையும். முடுகி - விரைந்து. கைத்தவற்றின் - தன்னால் வெறுக்கப்பட்ட பகைவிலங்குகளின்மேல். கைத்தல் - வெறுத்தல். நிமிர்தல் - நீளுதல். கேழல் இங்கே எய்ப்பன்றியைக் குறித்தது. முள்ளம்பன்றி தனக்கு ஊறுவிளைக்கும் பகைவிலங்கு முதலியவை தன்னை நெருங்கின அளவில் தன் உடலைச் சிலிர்த்து, அவ்வுடலிலுள்ள முட்கள் நீண்டு பகைவிலங்குகளின் உடலில் தைத்துக் கிழிக்கச் செய்யும் இயல்புடையது. இராமன் எய்த அம்புகள் உடலில் தைக்கப்பெற்று முள்ளம்பன்றி போன்றிருந்த விராதன், தன் உடலில் தைத்து அழுந்திய இராமனம்புகள் உதிரும்படி அப் பன்றிபோல் தன்னுடலைச் சிலிர்த்தனன் என்றவாறு. (32)

2638. எரியின் வார்கணை யிராமன்விட வெங்குநிலையா
துருவி யோடமற மோடுதல்செ யாவுணர்வின
னருவி பாயும்வரை போற்குருதி யாறுபெருகிச்
சொரிய வேகவலி கெட்டுணர்வு சோர்வுறுதலும்.

எரியின் வார் கணை இராமன் விட, எங்கும் நிலையாது
உருவி ஓட, மறம் ஓடுதல் செயா உணர்வினன்,
அருவி பாயும் வரை போல் குருதி ஆறு பெருகிச்
சொரிய, வேக வலி கெட்டு, உணர்வு சோர்வுறுதலும்.

பொ :—வலியழியாத வுணர்வுடைய விராதன், தன் உடலெங்கும் நெருப்பையொத்த நீண்ட அம்புகளை இராமன் எய்ய, அவ்வம்புகள் தன் உடலில் தங்காது உருவிச் செல்லுதலால் மலையினின்று வீழும் அருவிபோலத் தன் உடலினின்று குருதியாறு பெருகிச் சிந்தத் தன்னுடைய கடுமையான வலிமையழிந்து அறிவும் தளர்ந்த அளவில்.

கு :—மறம் ஓடுதல் செயாவுணர்வினன், எங்கும் எரியின் வார் கணை இராமன்விட, (அவை) உருவியோட குருதியாறு பெருகிச் சொரிய வலிகெட்டு உணர்வு சோர்வுறுதலும் என இயைக்க. எரியின் வார்கணை அக்கினியத்திரமும் ஆம். செய்யா என்பது செயா என இடைக்குறைந்து நின்றது. வேகம் - கடுமை. வேகவலி என்பதற்கு வேகமும் வலிமையும் என்று பொருள் கொள்ளலும் ஆம். (33)

2639. மெய்வ ரத்தினன் மிடற்படை விடப்படுகிலன்
செய்யு மற்றுமிக லென்றுசின வாளுருவிவன்
கைது ணித்துமென முந்துகடு கிப்படர்புயத்
தெய்வின் மற்பொருவு தோளிருவ ரேறநிருதன்.

“மெய் வரத்தினன் மிடல் படை விடப் படுகிலன்
செய்யும் மற்றும் இகல்” என்று, சின வாள் உருவி, “வன்
கை துணித்தும்” என முந்து கடுகிப் படர் புயத்து
எய்வில் மல் பொருவு தோள் இருவர் ஏற, நிருதன்.

பொ :—அம்புகளை எய்கின்ற விற்றொழிலும் மற்றொழிலும் பொருந்திய தோள்களையுடைய இராமலக்குவர்களாகிய இருவரும், ‘இவன் தவறாத வரமுடையன்; (ஆதலால்) வலியபடைக்கலங்களை ஏவுதலால் இறந்தொழியான்; மேலும் போர் செய்வான்’ என்று எண்ணி, சினத்தினையுடைய வாளை உறையினின்று நீக்கி, “இவ

னுடைய வலிய கைகளை வெட்டிவிடுவாம்" என்று அவ் விராத னெதிர் விரைந்து அவனுடைய பருத்த தோள்களில் ஏற, அவன்.

கு :—வில் மல் என்பவை விற்றொழிலையும் மற்றொழிலையும் குறித் தன. பொருவுதல் - பொருந்துதல். இருவரும் என உம்மை விரிக்க. தவறாது பயனளித்தலின் மெய்வரம் என்றார். மிடல் - வலிமை. உடையாரது சினத்தினை உடைமைமேல் ஏற்றிச் சின வாள் என்றார். படர்தல் - பருத்தல். நிருதன் என்பது அவன் என்னும் சுட்டளவாய் நின்றது. (34)

**2640.** உண்டெ ழுந்தவுணர்
வவ்வயி னுணர்ந்துமுடுகித்
தண்டெ ழுந்தனைய
தோள்கொடு சுமந்துதழுவிப்
பண்டெ ழுந்தனது
வன்கதி பதிற்றின்முடுகிக்
கொண்டெ ழுந்தனன்
விழுந்தழி கொழுங்குருதியான்.

உண்டு எழுந்த உணர்வு அவ்வயின் உணர்ந்து முடுகித்
தண்டு எழுந்து அனைய தோள் கொடு சுமந்து தழுவிப்
பண்டு எழும் தனது வன்கதி பதிற்றின் முடுகிக்
கொண்டு எழுந்தனன், விழுந்து அழி கொழுங் குருதியான்.

பொ :—பெருகிச் சிந்துகின்ற மிக்க குருதியையுடையவனாகிய அவ்விராதன், அவ்விடத்து, (முன்பு சோர்ந்தவுணர்வு) மீட்டும் உள்ளதாய்த் தோன்றிய உணர்ச்சியால், இராமலக்குவர் தன்மீது உள்ளனர் என்று அறிந்து, விரைந்து, ஓங்கிய தண்டாயுதம் போன்ற தன் தோள்களால் அவரைப்பற்றித் தாங்கிக்கொண்டு முன்பு தன்னிடம் உள்ள கொடிய வேகத்தினும் பத்துமடங்கு விரை வுடையனாய் எழுந்து.

கு :—விழுந்தழி கொழுங் குருதியான், அவ்வயின் உணர்ந்து தழுவிச் சுமந்துகொண்டு முடுகி எழுந்தனன் என இயைக்க. கதி - விரைவு. எழுந்தனன் - எழுந்து; முற்றெச்சம். முடுகிச் சாரிகை திரிந்தனன் எனப் பின்வரும் பாடலுடன் இணைந்து முடியும். (35)

**2641.** முந்து வான்முக
டுறக்கடிது முட்டிமுடுகிச்
சிந்து சோரியொடு
சாரிகை திரிந்தனனரோ
வந்து மேருவினை
நாடொறும் வலஞ்செய்துழல்வோ
ரிந்து சூரியரை
யொத்திருவ ரும்பொலியவே.

முந்து வான் முகடு உறக் கடிது முட்டி முடுகிச்
சிந்து சோரியொடு சாரிகை திரிந்தனன் அரோ,
வந்து மேருவினை நாள் தொறும் வலம் செய்து உழல்வோர்
இந்து சூரியரை ஒத்து இருவரும் பொலியவே.

பொ :—மகாமேருமலையை நாள்தோறும் வலஞ்செய்து திரிபவ ராகிய சந்திர சூரியர்களைப்போன்று, இராம லக்குவராகிய இருவரும் இரண்டு தோளிலும் விளங்க, உயர்ந்த வான முகட்டைப் பொருந்த (வளர்ந்து) முட்டி, வழிகின்ற உதிரத்தோடு மிகவும் விரைந்து வட்டமாகத் திரிந்தான்.

கு :—இருவரும் பொலிய முடுகிச் சாரிகை திரிந்தனன் என இயையும். இந்து - சந்திரன். இருவர் என்றது இராம லக்குவரை. கருமையும் பெருமையும் உடைய விராதனுடல் சோரிபொழிய நின்ற நிலையில் அதற்குப் பொன்மலையாகிய மேரு உவமமாயிற்று. கலைநிறைவும் தண்ணளியும் உடைமையால் இராமனுக்குச் சந்திரனும், பொன்னிறமும் சுடுசினமும் உடைமையால் இலக்குவ னுக்குச் சூரியனும் உவமை. இந்து சூரியர் என்பது கபில பரணர் என்பது போல உயர்திணை உம்மைத் தொகையாய்ப் பலர்பால் விகுதி பெற்றது. சோரி - இரத்தம். சாரிகை - வட்டமிட்டோடல்.
(36)

விராதன் இராம லக்குவருடன் விண்மிசைச் செல்லல்

**2642.** சுவண வண்ணனெடு
கண்ணன்மிசை கொள்ளவிசைதோ
யவண விண்ணிடை
யெழுந்துபடர் கின்றவனறஞ்

சிவண வன்னசிறை
முன்னவரொ டேகுசெலவத்
துவண னென்னுநெடு
மன்னவனு மொத்தனனரோ.

சுவண வண்ணனொடு கண்ணன் மிசைகொள்ள, இசை தோய்
அவண விண்ணிடை எழுந்து, படர்கின்றவன், அறம்
சிவண, அன்ன சிறைமுன் அவரொடு ஏகு செலவத்து
உவணன் என்னும் நெடும் மன்னவனும் ஒத்தனன் அரோ.

பொ :—பொன்னிறமுடைய இலக்குவனோடு இராமன் (தன் தோள்) மீது தங்க, ஒலியொடுகூடிய அப்புறத்ததாகிய வானின்கண் எழும்பிச் செல்கின்ற விராதன், அறத்தொடு பொருந்த அந்த (வாணனுடைய) சிறைக்கூடத்தின் முன் (பலராமனும் கண்ணனு மாகிய) அவரோடு செல்லுகின்ற விரைவுடைய கருடன் என்று சொல்லப்படும் பெரியோனான பறவையரசனையும் ஒத்து விளங்கினான்.

கு :—சுவணவண்ணன் என்றது இலக்குவனை. கண்ணன் என்பது கிருஷ்ணன் என்னும் வடமொழியின் சிதைந்த வுரு வென்பர் ; அச்சொல் கருநிற முடையான் என்று பொருள்படும். இங்கே கண்ணன் என்பது இராமனைக் குறித்து நின்றது. ஆசிரியர் இராமனைக் கண்ணன் என்ற பெயர் கொண்டும் சுட்டிச் செல்வர் ; 'கண்ணனைக் கண்ணின் நோக்கி' (2055), 'ஞானக் கண்ணருள் செய்கண்ணன்' (சூர்ப்பணகைப். 35), 'கருணையங் கோயிலுளிருந்த கண்ணனை' (யுத்த. விபீடணன் அடைக்கலப். 50) என்பவை நோக்கத்தகும். இசை - ஒலி. இசைதோய் விண், அவண விண் என்க. ஆகாயத்துக்கு ஒலி இயல்பாதலால் இசைதோய் விண் என்றார். விண்மிசைச் சேணிடைச் செல்கின்றான் என்பார் அவண விண்மிசை யெழுந்து படர்கின்றவன் என்றார். சிவணுதல் - பொருந்துதல். அன்ன - அத்தன்மையுள்ள. அன்ன சிறை யென்றது வாணாசுரனுடைய சோணிதபுரத்திலுள்ள சிறைக்கூடத்தை. பண்டே அறிந்ததாதலின் அன்ன சிறை என்றார். அவர் என்றது பலராமனை யும் கிருட்டிணனையும். செலவு - விரைவு. செலவத்து என்பதனுள் அத்து சாரியை. உவணன் - கருடன். அன்ன சிறை முன் அவரொ டேகு செலவத்துவணன் என்பது, பாகவதக் கதையொன்றை உட்கொண்டது. அக்கதை, பண்டு வாணன் என்னும் பெயரையுடைய அசுரன் ஒருவன் தன் ஆயிரங் கைகளாலும் மாயிரு ஞாலமெல்லாம் வென்று தன்னடிப்படுத்துச் சோணிதபுரத்தில் இருந்து அரசு செலுத்தி வருவானாயினன். அவன் மகள் உஷை என்பாள் தன்

கனவில் தோன்றிய பேரழகன் ஒருவன்பால் காதல்கொண்டு, தோழி சித்திரலேகை என்பவளால் தன் கனவில் தோன்றிய அழகன், கண்ணனுடைய பேரன் அனிருத்தன் என்று தெரிந்து அவனை நனவில் கூடப் பெருமையால் மிகவும் வருந்தியிருந்தாள். மாயம் வல்ல தோழி சித்திரலேகை, ஒருநாளிரவு துவாரகையுள் அனிருத்தன் மாளிகைபுக்கு அவன் உறங்கும்போது அவனைக் கட்டிலோடு தூக்கிச் சென்று உஷையின்பால் உய்க்க, உஷை அவனோடு மகிழ்ந்து தங்கினாள். அஃதறிந்த வாணன் அனிருத்தனொடு போர் செய்து வெல்ல முடியாமையால் மறைந்து நின்று நாகாத்திரத்தை ஏவி அவனைப் பிணித்துச் சிறையிட்டனன். பேரன் சிறைப்பட்டமை நாரதன் மூலம் அறிந்த கண்ணன் தன் அண்ணன் பலராமனுடன் கருடனை யூர்ந்து விரைந்து சோணிதபுரம் சென்று வாணனொடு பொருது வென்று அனிருத்தனைச் சிறைமீட்டருளினன் என்பதாம். பிற்பட்ட கிருஷ்ணாவதார சரிதம் முற்பட்ட இராமாவதார சரித நிகழ்ச்சிக்கு உவமம் ஆகாதென்று கொண்டு இவ்வடிகளுக்கு வேறு பொருள் கூறுவாரும் உண்டு. ஆசிரியர் இவ்விரண்டவதார காலத்துக்கும் பிற்பட்டவராதலின் பிற்பட்ட நிகழ்ச்சியை முற்பட்ட நிகழ்ச்சிக்கு உவமை கூறுதல் வழுவாகாதென்பர். விராதனுக்குக் கருடன் உவமை. இருவரைத் தாங்கிச் செல்லுதல் பொதுத்தன்மை. (37)

### சீதாபிராட்டி வருந்துதல்

**2643.** மாத யாவுடைய தன்கணவன்
வஞ்சன்வினையிற்
போத லோடுமல மந்தனள்
புலர்ந்துபொடியிற்
கோதை யோடுமொசி கொம்பென
விழுந்தனள்குலச்
சீதை சேவல்பிடி யுண்டசிறை
யன்னமனையாள்.

மா தயா உடைய தன் கணவன் வஞ்சன் வினையின்
போதலோடும் அலமந்தனள், புலர்ந்து பொடியில்
கோதையோடும் ஒசி கொம்பு என விழுந்தனள் குலச்
சீதை, சேவல் பிடியுண்ட சிறை அன்னம் அனையாள்.

பொ :—பெருங் கருணையாளனான தன் கணவன், தீயோனான விராதனுடைய கொடிய செயலால் வான்வழிச் சென்ற அளவில், ஆண் அன்னம் பிறரால் பிடிக்கப்பட்டுப் பிரிவுற்ற பேடையன்னம்

போல்வாளான நற்குடிப் பிறந்த சீதாபிராட்டி மனங்கலங்கி வாட்ட முற்றுக் கூந்தலொடு துவண்டு விழுகின்ற பூங்கொம்புபோலப் புழுதியில் விழுந்தாள்.

கு :—மா தயாவுடைய தன் கணவன் வஞ்சன் வினையில் போத லோடும், சேவல் பிடியுண்ட சிறையன்னம் அனையாள், குலச் சீதை, அலமந்தனள் புலர்ந்து, கோதையோடும் ஒசி கொம்பென, பொடியில் விழுந்தனள் என இயையும். தயா - கருணை ; வடசொல். அலமருதல் - மனங்கலங்குதல். புலர்தல் – வாடுதல். பொடி - புழுதி. கோதை - குழல். ஒசிதல் - துவளல். குலம் - குடிப்பிறப்பு. குலச் சீதை என்றமையால் பிராட்டியின் ஒழுக்கமேம்பாடு சுட்டியவாறு. (38)

## சீதாபிராட்டி விராதனை நோக்கிக் கூறுதல்

**2644.** பின்னை யேதுமுத
வுந்துணைபெ ருளுரைபெருண்
மின்னை யேயிடை
நுடங்கிட விரைந்துதொடர்வா
ளன்னை யேயனைய
வன்பினற வோர்கடமைவிட்
டென்னை யேநுகர்தி
யென்றன ளெழுந்துவிழுவாள்.

பின்னை ஏதும் உதவும் துணை பெருள் உரை பெருள்
மின்னை ஏய் இடை நுடங்கிட விரைந்து தொடர்வாள்,
'அன்னையே அனைய அன்பின் அறவோர்கள்தமை விட்டு
என்னையே நுகர்தி' என்றனள் எழுந்து விழுவாள்.

பொ :—கீழே விழுந்த பிராட்டி, பின்பு மீண்டும் எழுந்து, தனக்கு உதவி செய்யும் துணை யாதொன்றும் பெருதவளாய் ஆறுதல் மொழி யொன்றும் பெருதவளாய், மின்னலையொத்த இடை துவளும் படி விரைந்து தொடர்ந்து, விராதனை நோக்கி, 'தாய் போன்ற அன்புடைய அறவுருவினராகிய இவர்களை விட்டு என்னையே உண்ணுக' என்று கூறினுள்.

கு :—பின்னை - பின்பு. நுடங்குதல் – துவளுதல். தொடர்வாள் – தொடர்பவளாகி. விழுவாள், பின்னை எழுந்து, விரைந்து தொடர் வாள், என்றனள் என இயைக்க. நுகர்தல் - உண்ணுதல். (39)

## இராமனிடம் இலக்குவன் கூறுதல்

**2645.** அழுது வாய்குழறி யாருயி ரழுங்கியுலையு
மெழுது பாவையனை யாணிலை யுணர்ந்திளையவன்
தொழுது தேவிதுயர் கூரவிளை யாடரெழிலோ
பழுது வாழியென வூழிமுதல் வன்பகர்வுறும்

அழுது வாய் குழறி ஆர் உயிர் அழுங்கி உலையும்
எழுது பாவை அனையாள் நிலை உணர்ந்து, இளையவன்
தொழுது, 'தேவி துயர்கூர விளையாடல் தொழிலோ!
பழுது; வாழி' என, ஊழிமுதல்வன் பகர்வுறும்.

பொ :—(விராதன் இராமலக்குவரைக் கொண்டேகுதலால்) அழுது சொற்கள் பிறழ்ந்து அரியவுயிரும் கெடுதலுற்று வருந்துகின்ற ஓவியப்பாவை போல்பவளான சீதாபிராட்டியின் நிலையினை இலக்குவன் அறிந்து, இராமனைத் தொழுது, 'தேவி துன்பம் மிக அடையும்படி விளையாடுதல் செய்யத் தகுமோ! இவ்வாறு விளையாடுதல் குற்றமாகும். தீதிலதாகுக' என்று கூற, இராமன் கூறுவான்.

கு :—அழுங்கல் - கெடுதல். உலைதல் – வருந்துதல். ஊழி முதல்வன்-எல்லாம் அழியும் ஊழிக்காலத்தும் அழியாத தலைவன்; கடவுள். 'ஊழி முதல்வன் ஒருவனே' (திருவாய்மொழி 10·8·9) என்பது அருளிச் செயல். ஊழி முதல்வன் என்பது இங்கே கடவுளின் அமிசமான இராமனை உணர்த்தியது. (40)

## இராமன் கழலால் உந்த விராதன் விழுதல்

**2646.** ஏக நின்றநெறி
யெல்லைகடி தேறியினிதிற்
போக னன்றென
நினைந்தன னிவன்பொருவிலோய்
சாக லின்றுபொரு
ளன்றென நகுந்தகைமையோன்
வேக வெங்கழலி
னுந்தலும் விராதன்விழவே.

'ஏக நின்ற நெறி எல்லை கடிது ஏறி, இனிதின்
போகல் நன்று என நினைந்தனன்; இவன், பொரு இலோய்!
சாகல் இன்று பொருளன்று' என நகும் தகைமையோன்,
வேக வெம் கழலின் உந்தலும், விராதன் விழவே.

பொ :—'ஒப்பார் இல்லாதவனே! நாம் செல்லவேண்டிய வழியின் எல்லையை இவன்மேல் ஏறி விரைவாகவும் இனிதாகவும் செல்லுதல் நல்லதென்று எண்ணினேன்; இப்பொழுது இவன் இறப்பது ஒரு காரியமன்று' என்று சொல்லிச் சிரித்தவனுய்த் தன் வலிய அடியால் வேகமாக உதைத்த அளவில் விராதன் கீழே விழ.

கு :—நெறி – வழி. கடிது ஏகி – விரைந்து சென்று. பொரு – ஒப்பு. பொருள் - காரியம்; 'ஒரு பொருள் சொல்லுவதுடையேன்' (8) என்பது கலித்தொகை. 'நிற்கிது பொருளெனவுணர்கிலென்' (475) என்று ஆசிரியர் முன்னே கூறியதும் நோக்கத்தகும். கழல் – ஆகுபெயராய் அடியை உணர்த்திற்று. உந்துதல் – உதைத்தல். (41)

### தோள்களைத் துணித்து விராதனை மண்ணிடைப் புதைத்தல்
### 2647—2649

**2647.** தோளி ரண்டும்வடி வாள்கொடு
துணித்துவிசையான்
மீளி மொய்ம்பினர் குதித்தலும்
வெகுண்டுபுருவத்
தேளி ரண்டுநெரி யச்சினவு
செங்கணரவக்
கோளி ரண்டுசுட ருந்தொடர்
வதிற்குறுகலும்.

தோள் இரண்டும் வடி வாள்கொடு துணித்து விசையால்
மீளி மொய்ம்பினர் குதித்தலும், வெகுண்டு, புருவத்
தேள் இரண்டும் நெரியச் சினவு செங்கண் அரவக்
கோள், இரண்டு சுடரும் தொடர்வதில் குறுகலும்.

பொ :—வலிய தோள்களையுடைய இராமலக்குவர், அவ்விராதனுடைய இரண்டு தோளையும் கூரிய வாளால் துணித்து விரைந்து குதித்த அளவில், விராதன் சினந்து, தன்னுடைய தேள்போலும் இரண்டு புருவமும் நெரிய, வெகுளுகின்ற சிவந்த கண்ணையுடைய பாம்பா(கிய கேது என்னும் கிரகமா)னது இரண்டு சுடரையும் பற்றுவதற்குத் தொடர்தல்போல அவரை நெருங்கின அளவில்.

கு :—மீளிமை - வலிமை. மொய்ம்பு – தோள்; 'பூந்தாது மொய்ம்பினவாக' (88) என்பது கலித்தொகை. மீளிமொய்ம்பினர் என்பதற்குக் கூற்றுவன்போலும் வலிமையுடையவர் என்று

பொருள் கூறலும் அமையும். இப்பொருளில் மீளி - கூற்று. மொய்ம்பு-வலிமை. சினவுதல் – வெகுளல். இரண்டு சுடர் என்றது சந்திர சூரியரை. செங்கண் அரவக்கோள் (ஒன்று) இரண்டு சுடரும் தொடர்வதில் என்றது இல்பொருள் உவமை. (42)

**2648.** புண்ணி டைப்பொழி யுயிர்ப்புனல்
பொலிந்துவரவும்
விண்ணி டைப்படர்தல் விட்டெழு
விகற்பநினையா
வெண்ணு டைக்குரிசி லெண்ணியிளை
யோயிவனையிம்
மண்ணி டைக்கடிது பொத்துதல்
வழக்கெனலுமே.

புண் இடைப் பொழி உயிர்ப்புனல் பொலிந்து வரவும்
விண் இடைப் படர்தல் விட்டு எழு விகற்பம் நினையா,
எண் உடைக் குரிசில், எண்ணி, இளையோய்! 'இவனை இம்
மண் இடைக் கடிது பொத்துதல் வழக்கு' எனலுமே.

பொ: —(அம்புதைத்த) புண்ணினின்று சொரிகின்ற உயிர்க்கு உறுதிதரும் இரத்தம், (நிலமெங்கும் பரவுமாறு) மிக்குவரவும் (விராதன்) சாகாமல், மீட்டும் எழுகின்ற மாறுபாட்டை நினைந்து, கருமச் சூழ்ச்சியுடைய இராமன், (விராதனை ஒழித்தற்குரிய நெறியை) ஆலோசித்து, தம்பீ! இவனை இந்நிலத்தே விரைவிற் புதைத்தலே முறை என்று சொல்லுதலும்.

கு :—உயிர்ப்புனல் – உயிருக்கு உறுதிதரும் செந்நீர்; குருதி. பொலிதல் - மிகுதல்; 'கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கை' (மதுரைக் காஞ்சி 171) என்பதனுள், பொலிந்த என்பதற்கு மிக்க என்று நச்சினார்க்கினியர் பொருள் வரைந்தது காணலாம். விண்ணிடைப் படர்தல் - மேலுலகடைதல்; அது சாதல் என்று பொருள்பட நின்றது. விகற்பம் – மாறுபாடு. எண் – கருமச்சூழ்ச்சி; 'எண் சேர்ந்த நெஞ்சத்திடனுடையார்' (திருக்குறள். 910) என்பதனுள் எண் என்பதற்குப் பரிமேலழகர் உரையும் நோக்கத்தகும். பொத்துதல்–புதைத்தல். வழக்கு-முறை. எண்ணுடைக்குரிசில் என்பதனுள் உடைய என்னும் பெயரெச்சம் இறுதி தொக்கது. (43)

2649. மதநல் யானையனை யானிலம் வகிர்ந்தகுழிவாய்
நதமு லாவுநளி நீர்வயி னழுந்தநவைதீ
ரதவ மாய்நறுநெ யுண்டுலகி லன்பர்கருதிற்
றுதவு சேவடியி னுலமல னுந்துதலுமே.

மத நல் யானை அனையான் நிலம் வகிர்ந்த குழிவாய்
நதம் உலாவும் நளிநீர் வயின் அழுந்த நவை தீர்
அதவம் ஆய் நறு நெய் உண்டு உலகில் அன்பர் கருதிற்று
உதவு சேவடியினுல் அமலன் உந்துதலுமே.

பொ :—(நெய்யினை முகந்து வேள்வித் தீயில் பெய்யும்) குற்ற மற்ற அத்திக்கட்டை (யாலாகிய சுருவம்) ஆகி, (அதனுற் பெய்யும்) நெய்யினையுண்டு, உலகின்கண் அன்பர்கள் நினைந்ததனைக் கொடுக்கும் (இறைவனமிசமான) குற்றமற்ற இராமன், மதத்தையுடைய நல்ல யானை போல்பவனுன இலக்குவன் நிலத்தைக் கீண்டமைத்த குழியின்கண், மேற்கு நோக்கிச் செல்லுகின்ற ஆற்றின் பரவிய பெருமை வாய்ந்த நீரில் அழுந்தும்படி, (தன்னுடைய) செவ்விய திருவடியால் எற்றிய அளவில்.

கு :—நவைதீர் அதவமாய் நறுநெய் உண்டு, உலகில் அன்பர் கருதிற்று உதவும் அமலன், மதநல்யானையனையான் நிலம் வகிர்ந்த குழிவாய் நதமுலாவு நளிநீர்வயின் அழுந்த, சேவடியினுல் உந்துதலும் என இயையும். நதம் - மேற்கு நோக்கிச் செல்லும் ஆறு. நளி - பெருமை; குழிவாய்...நளிநீர்வயின் என்றமையால் குழியினிடத்து அது தூய்தாதற் பொருட்டு நதமுலாவு நளிநீர் தெளித்தமை பெறப்படும். விராதன் புதையுண்ட இடம் நதம் என்ற சொல்லாற் குறிக்கப்படுகிறது. மேற்கு நோக்கிச் செல்லும் ஆறுகளுள் எந்த ஆற்றை அடுத்து விராதன் புதைக்கப்பட்டான் என்பது ஆராய்தற்குரியது. இறைவன், வேள்வியாகவும் வேள்வியிற் பயன்படும் பொருள்களாகவும் விளங்குகிருன் என்பர். நவை - குற்றம். அதவம் - அத்திமரம்; இங்கே அத்திக்கட்டையாலான கருவியை உணர்த்திற்று. அமலன் என்றது இராமனை. உந்துதல் – எற்றுதல். உந்துதலும் விளங்கினுன் என வருஞ்செய்யுளொடு இயைந்து முடிவுறும். (44)

### விராதன் சாபம் நீங்கி விண்மிசைத் தோன்றல்

**2650.** பட்ட தன்மையு
முணர்ந்துபடர் சாபமிடமுன்
கட்ட வன்பிறவி
தந்தகடை யானவுடருன்
விட்டு விண்ணிடை
விளங்கினன் விரிஞ்சனெனவோர்
முட்டை தந்ததனில்
வந்தமுதன் முன்னவனினே.

பட்ட தன்மையும் உணர்ந்து, படர் சாபம் இட முன்
கட்ட வன் பிறவி தந்த கடை ஆன உடல்தான்
விட்டு, விண்ணிடை விளங்கினன்; விரிஞ்சன் என ஓர்
முட்டை தந்து, அதனில் வந்த முதல் முன்னவனினே.

பொ :—அவ்விராதன், முன்னே (குபேரன்) பெரிய சாபத்தைக் கொடுக்க, அதனால் வலிய பிறவித் துன்பங்களை யூட்டிய இழிந்த அரக்கனுரு நீங்கி, நிகழ்ந்தவற்றை உணர்ந்து, ஒப்பற்ற அண்டத்தைப் படைத்து அதில் பிரமன் என்று சொல்லும்படி தோன்றிய முழுமுதற் கடவுள்போல ஆகாயத்தில் விளங்கினான்.

கு :—சாபம் - குபேரனால் தும்புருவுக்கு இடப்பட்டதாகப் பின் கூறும் நிகழ்ச்சி. வன்பிறவிக் கட்டம் தந்த கடையான உடல் எனவும், ஓர் முட்டை தந்து அதில் விரிஞ்சனென வந்த முதல் முன்னவன் எனவும் இயைக்க. கடை – இழிவு. விரிஞ்சன் - பிரமன். முட்டை – அண்டம். முதல் முன்னவன் – உலக காரணனான முழுமுதற் கடவுள். தும்புரு விராதனாகிப் பின் பண்டை நிலை அடைந்தமைக்கு முழுமுதற் கடவுள் அண்டத்தைப் படைத்து அதில் பிரமனாகத் தோன்றியமை உவமம். (45)

### விராதன் இராமனைத் துதித்தல் 2651—2665

**2651.** பொறியி னென்றியயல் சென்றுதிரி புந்தியுணரா
நெறியி னென்றிநிலை நின்றநினை வுண்டதனினும்
பிறிவி லன்புநனி பண்டுடைய பெற்றிதனினு
மறிவு வந்துதவ நம்பனை யறிந்துபகர்வான்

பொறியின் ஒன்றி அயல் சென்று திரி புந்தி உணரா
நெறியின் ஒன்றி நிலைநின்ற நினைவு உண்டு அதனினும்,
பிறிவு இல் அன்பு நனி பண்டு உடைய பெற்றிதனினும்,
அறிவு வந்து உதவ, நம்பனை அறிந்து பகர்வான்.

பொ :—பொறிகளில் ஒன்றிப் புறத்தே (புலன்களில்) சென்று திரிகின்ற அறிவால் அறியமுடியாத (ஐந்தவித்தான் கூறிய) ஒழுக்க நெறியிலே பொருந்தி (இடையறுது) நிலைத்த நினைவாகிய அதனாலும், (இறைவன்பால்) முன்பே அமைந்த நீக்கமில்லாத அன்பினாலும் (மெய்யறிவு விளைவது) உண்டு; அவ்வறிவினும் மேம்பட்ட இராமனருளால் உளதாகிய மெய்யறிவு வந்துகூட, நம்பன் ஆன இராமனை (இறைவன் என்று) தெரிந்து விராதன் கூறுவான்.

கு :—பொறி என்றது மெய் வாய் கண் மூக்கு செவி என்பவற்றை. அயல் என்றது சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் புலங்களை. அயல்சேறலாவது, 'வாய் அவனையல்லது வாழ்த்தாது, கை உலகம் தாயவனையல்லது தாம் தொழா—பேய்முலை நஞ்சு, ஊணாகவுண்டான் உருவொடு பேர் அல்லால், காணா கண் கேளா செவி' (பொய்கையாழ்வார் முதல் திருவந்தாதி. 11) என்று சென்று பற்றத்தக்க இறைவனை விட்டுப் புலங்களிலே சென்று படிதலாம். புந்தி - அறிவு; மனமும் ஆம். பொறியின் ஒன்றி அயல் சென்று திரி புந்தி உணரா நெறி என்றது, பொறிவாயில் ஐந்தவித்தான் கூறிய பொய்தீர் ஒழுக்க நெறியினை. அது, இறைவனை அடைதற்கு அவனையே சாதனமாகப் பற்றும் நெறியாம். நெறியின் ஒன்றி நிலை நின்ற நினைவு - அந்நெறியின்கண் இடையறுது நிலைத்த நினைவு. பொறியினொன்றி அயல் சென்று திரிபுந்தியுணரா நெறியின் ஒன்றி நிலை நின்ற நினைவாலும், இறைவன்பால் நீங்காதமைந்த பத்திமையாலும் மெய்யறிவு தலைப்படுவதுண்டு; அவ்விருவகையாலும் விளையும் மெய்யறிவினும் இராமனருளால் விராதன்பெற்ற உண்மையறிவு சிறந்ததென்றவாறு. முன்னிரண்டடியும், 'பொறிவாயிலைந் தவித்தான் பொய்தீரொழுக்க நெறிநின்ருர் நீடுவாழ்வார்' (6) என்னும் திருக்குறட்பாவைத் தழுவியமைந்தது. பிரிவு என்பது எதுகைக் கேற்பப் பிறிவு என நின்றது; 'பிறியார் பிறிவேதென்னும்' (1724) என்ருர் முன்னும். நம்பு - நசை; விருப்பம். நம்பன் – விரும்பப்படுபவன்; இறைவன். நம்பன் என்பது இங்கே இறைவன் அமிசமான இராமனையுணர்த்தியது. (46)

2652. வேதங்க ளறைகின்ற
★ வுலகெங்கும் விரிந்தனவுன்
பாதங்க ளிவையென்னிற்
படிவங்க ளெப்படியோ
வோதங்கொள் கடலன்றி
யொன்றினே டொன்றெவ்வாப்
பூதங்க டொறுமுறைந்தா
லவையுன்னைப் பொறுக்குமோ.

வேதங்கள் அறைகின்ற உலகு எங்கும் விரிந்தன உன்
பாதங்கள் இவை என்னில், படிவங்கள் எப்படியோ!
ஓதம் கொள் கடல் அன்றி, ஒன்றினேடு ஒன்று ஒவ்வாப்
பூதங்கள் தொறும் உறைந்தால் அவை உன்னைப் பொறுக்குமோ.

பொ :—(தீயவனாகிய எனக்கும் பேறு நல்கிய) இவை, வேதங்களால் போற்றப்பெற்றனவும், உலகமெல்லாம் விரிந்து பரவி அளந்தனவுமான உன் அடியிணைகள் என்றால், உன்னுடைய வடிவங்கள் எத்தன்மையுடையனவோ! குளிர்ந்த கடலின்கண் உறைதலே அன்றி, குணம் முதலியவற்றால் ஒன்றுடன் ஒன்று ஒவ்வாதனவான பூதங்கள் எல்லாவற்றுள்ளும் நீ நீங்காது தங்கினால், அவை உன்னைத் தாங்கவல்லனவோ? வல்லன அல்ல.

கு :—இருக்கு எசுர், சாமம், அதர்வம் எனப் பலவாதலின் வேதங்கள் என்றார்; வடமொழியிலும் தென்மொழியிலும் உள்ளவை அடங்க வேதங்கள் என்றார் எனலும் ஆம். இவை வேதங்கள் அறைகின்ற பாதங்கள், உலகெங்கும் விரிந்தன(வாகிய) பாதங்கள், உன் பாதங்கள் என இயைக்க. தன்னை உய்யக் கொண்டவை யாதலின் முந்துற அடிகளையே பேசுவானாயினன். வேதங்கள், இறைவனடியிணைகளின் பெருமையினையும், உயிர்கள் அவ்வடியிணைகளை அடைந்து உய்தற்குரிய நெறிகளையுமே விரிப்பன. ‘கற்றதனாலாய பயன் என்கொல்? வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்,’ ‘மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார்’ (திருக்குறள். 2, 3), ‘உயர்வற வுயர்நலம் உடையவன் யவனவன் ......துயரறு சுடரடி தொழுதெழென் மனனே’ (திருவாய்மொழி. 1.1.1.), ‘பரனடிமேல் குருகூர்ச் சடகோபன் சொன்ன நிரனிறை யாயிரத்திப் பத்தும்’ (திருவாய். 1.1.10), ‘முகில்வண்ணன் அடிமேல் சொன்ன சொன் மாலை ஆயிரத்துள் இப்பத்தும் வல்லார், முகில்வண்ணவானத் திமையவர் சூழ இருப்பர் பேரின்ப வெள்ளத்தே’ (திருவாய்மொழி. 7.2.11) என்பவை தமிழ்மறை. படிவம் -

வடிவம். அன்பால் நினைபவர்க்கு அவரவர் விரும்பிய வடிவொடு காட்சியளித்தருளுதலின் படிவங்கள் என்றார். படிவங்கள் எப்படியோ என்றது அவற்றின் பெருமை சொல்லுதற்கரிது என்றவாறு. ஓதம் - குளிர்ச்சி. கடல் என்றது இறைவன் பாம்பணையில் அறிதுயில் கொள்ளும் திருப்பாற்கடலையும் ஆலிலையில் குழவியுருவாய் அறிதுயில் கொள்ளும் ஊழிக்காலக் கடல் வெள்ளத்தையும் குறிக்கும். பூதங்கள் என்றது, நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்பவற்றை. ஒன்றினோடொன்று ஒவ்வாமையாவது தத்தம் குணஞ்செயல்களால் வேறுபடுதலாம். பூதங்கள் தோறும் உறைந்தால் அவை உன்னைப் பொறுக்குமோ என்றது அப்பூதங்களின் உள்ளே தங்குவதோடு அவற்றைத் தாங்கவல்லவனும் நீ என்றவாறு. இறைவன் ஒன்றினோடொன் றொவ்வாப் பூதங்கள்தொறும் உறைதல், 'திட விசும் பெரிவளி நீர்நில மிவைமிசைப், படர்பொருள் முழுவதும் ஆய் அவையவைதொறும், உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன், சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே' (திருவாய்மொழி. 1.1.7) என்று சடகோபராலும், 'பூநிலாய வைந்துமாய்ப் புனற்கண் நின்ற நான்குமாய்த், தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்த காலிரண்டுமாய், மீநிலாய தொன்றுமாகி வேறுவேறு தன்மையாய், நீ நிலாய வண்ண நின்னை யார் நினைக்க வல்லரே' (திருச்சந்த விருத்தம் 1) என்று திருமழிசையாழ்வாராலும் பேசப்பட்டது; 'வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும், ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறனும் உளன் என்ப' (1733) என்றார் ஆசிரியரும். இதனால், பார்க்கும் இடமெங்கும் ஒரு நீக்கம் அற நிறைந்திருத்தல், அளவில் ஆற்றலுடைமை, எல்லாவற்றையும் தாங்கி நிற்றல் முதலிய இறைவனுக்குரிய இயல்புகளை விராதன் இராமன்பால் கண்டு வியந்து துதித்தவாறு காணலாம். (47)

**2653.** கடுத்தகராங் கதுவநிமிர்
கையெடுத்து மெய்கலங்கி
யுடுத்ததிசை யனைத்தினுஞ்சென்
றொலிகொள்ள வுறுதுயரா
லடுத்தபெருந் தனிமூலத்
தரும்பரமே பரமேயென்
றெடுத்தொருவா ரணமழைப்ப
நீயோவன் றேனென்றாய்.

கடுத்த கராம் கதுவ, நிமிர்
கை எடுத்து மெய் கலங்கி
உடுத்த திசை அனைத்தினும் சென்று
ஒலி கொள்ள, உறு துயரால்
'அடுத்த பெருந் தனி மூலத்து
அரும்பரமே! பரமே!' என்று
எடுத்து, ஒரு வாரணம் அழைப்ப,
நீயோ அன்று 'ஏன்?' என்றாய்.

பொ :—சினங்கொண்ட முதலை காலைப் பற்றுதலால் பெரிய துதிக்கையை மேலெழத் தூக்கி உடல் நைந்து சூழ்ந்த திசையெல்லாம் சென்று எதிரொலி எழும்படி, மிக்க துன்பத்தால் ஒரு யானை, 'அல்லற்காலத்துக் கிட்டி வந்து உதவிக் காக்கின்ற பெரிய ஒப்பற்ற மூலமான அரிய பரம்பொருளே! பரம்பொருளே!' என்று கூக்குரலிட்டழைக்க, நீயன்றோ அன்று 'ஏன்' என்று சென்று இடர் நீக்கினை!

கு :—இதனுள் கசேந்திரன் என்னும் யானையின் இடர் நீக்கிய செய்தி பேசப்படுகிறது. கடுப்பு - சினம். கராம் - முதலை. கதுவுதல்—பற்றுதல். முதலை காலைக் கதுவ எனச் செயப்படுபொருள் வருவித்துரைக்கப்பட்டது. உறுதுயர் - மிக்க துன்பம். தன் கையிலுள்ள மலரின் செவ்வி மாறுமுன் அதனை இறைவன் அடியிணையில் இடும் வாய்ப்பிழந்தமையால் யானை உறுதுயர் எய்தியது. அடுத்தல் - கிட்டுதல். அடுத்த என்றது இங்கே கிட்டி வந்து உதவிக் காக்கின்ற என்றவாறு. மூலம் - காரணம்; அத்து சாரியை. பரம் - மேலானது; அஃது இங்கே கடவுளை உணர்த்தி நின்றது. பரமே! பரமே! என்பது அச்சம் பற்றிய அடுக்கு. எடுத்தல் - உரத்துச் சொல்லுதல். ஒரு வாரணம் அடுத்த பெருந்தனி மூலத்து அரும் பரமே! பரமே! என்று எடுத்து அழைப்ப நீயன்றோ ஏனென்றாய் என இயைக்க. அடுத்த ஒரு வாரணம் எனக்கொண்டு தன் தொண்டுக்குத் தடை உண்டாகப்பெற்ற யானை என்று பொருள் கொள்ளலும் ஆம். ஏன் என்றாய் என்றது ஏன் என்று சென்று இடர் நீக்கினாய் என்றவாறு. விராதன், யானைபோலச் செருக்குமிக்கு வன்பு செய்த தனக்கும் வலிய வந்து சாப நீக்கந் தந்து உய்வித்த செயல்கண்டு வியந்து, பண்டு அன்பு செய்த கசேந்திரன் என்னும் யானை அழைக்க வந்து அதன் இடர் தீர்த்தவனும் இராமனே என்று துணிந்து, வாரணம் அழைப்ப நீயோ அன்று ஏன் என்றாய் என்று கூறுவானாயினன். யானை அழைப்ப, திருமால் ஏன் என்று அதன் எதிர் சென்று இடர் தீர்த்தமை, 'மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான் வேட்கையினோடு சென்றிழிந்த, கானமர் வேழம் கையெடுத்தலறக் கராவதன்

காலினைக் கதுவ, ஆனையின் துயரம் தீரப் புள்ளூர்ந்து சென்று நின்றுழி தொட்டான்' (பெரிய திருமொழி. 2.3.9) என்று திருமங்கையாழ்வாரால் பேசப்பட்டது; 'மூலமே என்ற கரி முன்வந்திடர் தொலைத்து, நீலமேகம்போல நின்றான்' (திருவேங்கடமாலை. காப்பு) என்று பிள்ளைப் பெருமாளையங்காரும், 'வேதத்தின் முன்னின்றான் வேழம் முதலே என அழைப்ப, என்னென்றான் எங்கட்கிறை', 'மால் யானை, முந்தருளும் வேத முதலே என அழைப்ப, வந்தருளும் செந்தாமரை' (நளவெண்பா. காப்பு) என்று புகழேந்தியும் கூறுதல் காணலாம். வாரணம் அழைக்க உதவிய வரலாறு:— பண்டு தென்னாடாண்ட இந்த்ரத்யும்நன் என்பான், அகத்தியரை அவமதித்து அவர் சாபத்தால் யானையாயினன். அந்த யானை முன்னை நல்வினைப்பயனால் திருமால் பத்தியுடையதாய் நாடொறும் தாமரைப் பூக்களால் திருமாலை அருச்சித்து வழிபட்டு வந்தது. ஒரு நாள் அந்த யானை தாமரைப்பூப் பறித்தற்கு ஒரு குளத்தில் இறங்கியது. ஹூஹூ என்னும் கந்தருவன், தேவலன் என்னும் முனிவனை அவமதித்து அவனால் சபிக்கப்பட்டு, முதலையாய் அக் குளத்தில் வசித்தனன். பூப்பறித்தற்குக் குளத்தில் இறங்கிய யானையை அம்முதலை காலைக் கவ்விக்கொண்டது. அதனால் வருந்திய யானை முதலையின் பிடியினின்று தன்னை விடுவித்துக்கொள்ள முடியாமல் கையைத் தலைமிசைத் தூக்கி நின்று 'ஆதிமூலமே' என்று கூவிற்று. உடனே திருமால் அதனெதிர் தோன்றிச் சக்கரத்தால் முதலையைக் கொன்று யானையின் இடரை நீக்கினன் என்பதாம். (48)

**2654.** புறங்காண வகங்காணப்
பொதுமுகத்தி னருணோக்க
மிறங்காத தாமரைக்க
ணெம்பெருமாஅ னியம்புதியா
லறங்காத்தற் குனக்கொருவ
ராருமொரு துணையின்றிக்
கறங்காகு மெனத்திரிய
நீயேயோ கடவாய்தான்.

புறம் காண அகம் காணப் பொது முகத்தின் அருள் நோக்கம் இறங்காத தாமரைக் கண் எம்பெருமாஅன்! இயம்புதியால்; அறம் காத்தற்கு உனக்கு ஒருவர் ஆரும் ஒரு துணை இன்றிக் கறங்கு ஆகும் எனத் திரிய நீயேயோ கடவாய்! தான்.

பொ :—(உயிர்களின்) வெளித் தோற்றங் காணுதலாலும் மன நினைவு காணுதலாலும் பொதுவான முகத்தின் கண் உள்ள அருளுேக்கம் குறையாத தாமரை மலர்போலும் கண்களையுடைய எம் தலைவனே ! உதவி செய்வார் ஆரொருவரும் இல்லாமல், அறத்தைக் காக்கும்பொருட்டுக் கறங்குபோலும் என்று கூறும்படி, நீயோ திரியக்கடவாய் !

கு :—புறம் - வெளிவேடம். அகம் - மனநினைவு. 'புறம் குன்றி கண்டனையரேனும் அகம் குன்றி மூக்கிற் கரியார் உடைத்து' (277) என்னும் திருக்குறளில் அகம் புறம் என்பவற்றுக்குப் பரிமேலழகர் எழுதிய பொருள் இங்கு நோக்கத்தகும். காண என்னும் செய வெனெச்சம் ஏதுப்பொருளிற் பயின்றது. பொது நோக்கு முகத்தின் அருளுேக்கு என இயைக்க. பொதுநோக்காவது யாவர் மாட்டும் ஒரு தன்மைத்தாய நோக்கு; 'பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின், அது நோக்கி வாழ்வார் பலர்' (528) என்பது திருக்குறள். அருள் நோக்கம்-அருட்பார்வை. முகத்து இன் அருளுேக்கம் என்பதனுள் அத்தும் இன்னும் சாரியை. இனிய அருளுேக்கம் என்று கொள்ளலுமாம். பொதுமுகத்தினருளுேக்கம் இறங்காத என்றது, உயிர்களின் பொருந்தாத வேடங்கண்ட நிலையினும், தவருன மனநினைவு கண்ட நிலையினும் அருளுேக்கம் குறைதல் கூடும். அங்கும் குறையாத அருளுேக்குடைய என்றவாறு. காணுங்கால் அச்சமும் அருவருப்பும் எழும் உருவமும் அடாத சொல்லும் நினைவும் செயலும் உடைய தனக்கும் அருளியது கொண்டே, 'புறங் காண அகங்காணப் பொது முகத்தின் அருளுேக்கம் இறங்காத தாமரைக்கண் எம் பெருமாஅன்' என்று இராமனை விராதன் விளித்தனன். கறங்கு - காற்ருடி. திரிதல் - சுழலுதல். 46-ஆம் பாட்டில் கூறியபடி அறிவு வந்து உதவியமையால், விராதன் திருமாலே அறங்காத்தற்கு இராமனுக அவதரித்தமை தெரிந்து பேசுவானுயினன். ஆரொருவரும் துணையின்றி, அறங்காத்தற்குக் கறங்காகும் என நீயேயோ திரியக் கடவாய்: என இயைக்க. தான் அசை. பின்னிரண்டடிகளால், துணையாவாரில்லாத இராமன் நிலை கண்டு விராதன் இரங்கியவாறு; இராமன், எல்லாம் வல்ல இறைவனே என்று அறிந்தும் அவனுக்குத் துணையின்மை கண்டிரங்கியது, அவன்பால் விராதன் கொண்ட பத்தி மிகுதியால் விளைந்தது. (49)

**2655.** துறப்பதே தொழிலாகத்
தோன்றினேர் தோன்றியக்கான்
மறப்பரோ தம்மையது
வன்ருகி மற்றவர்போற்

பிறப்பரோ வெவர்க்குந்தாம்
பெற்றபதம் பெறலரிதோ
விறப்பதே பிறப்பதே
யெனும்விளையாட் டினிதுகந்தோய்.

துறப்பதே தொழில் ஆகத் தோன்றினோர் தோன்றியக்கால்,
மறப்பரோ தம்மை? அது அன்றாகி, மற்றவர்போல்
பிறப்பரோ? எவர்க்கும் தாம் பெற்ற பதம் பெறல் அரிதோ?
இறப்பதே பிறப்பதே எனும் விளையாட்டு இனிது உகந்தோய்!

பொ :—(துன்பம் மிக்க) இறத்தல் பிறத்தல் என்று சொல்லப்படும் விளையாட்டை இனிதாக விரும்பியவனே! (விருப்பு வெறுப்புக்களை) விடுவதனையே செயலாகக் கொண்டு (தம் இச்சையால்) தோன்றியவர், தோன்றிய பொழுது தம்மை மறப்பரோ? (மறவார்;) தம் இச்சையாலன்றி வினைவயப்பட்டவர்போலப் பிறப்பரோ? (பிறவார்; அவ்வாறு தம் இச்சையால் தோன்றிய) எவர்க்கும் தாம் முன்பே பெற்றுத் தம் உடைமையான பதவியை மீட்டும் பெறுவது அரிதாகுமோ? (அரிதாகாது).

கு :—விளையாட்டு இனிது உகந்தோய்! துறப்பதே தொழிலாகத் தோன்றினோர் தோன்றியக்கால் தம்மை மறப்பரோ? அது அன்றாகி மற்றவர்போல் பிறப்பரோ? (அத்தோன்றினோர்) எவர்க்கும் தாம் பெற்ற பதம் பெறல் அரிதோ? என இயைக்க. இறப்பதே பிறப்பதே எனும் விளையாட்டு இனிது உகந்தோய்! என்பது இராமனை விராதன் தன்முகமாக்கிக் கொள்ளும் விளி. இறப்பதே பிறப்பதே எனும் விளையாட்டு இனிதுகந்தோய்! என்றதனால் இறத்தலும் பிறத்தலும் துன்பம் தருவன என்பதும், அவற்றை வினைவயத்தாலன்றித் தன் இச்சையால் மேற்கொண்டவன் இராமன் என்பதும் பெறப்படும். உகத்தல் – விரும்புதல். துறத்தல் என்னும் வினைக்குரிய விருப்பு வெறுப்பு என்னும் செயப்படுபொருள் வருவித்துரைக்கலாயிற்று. துறப்பதே தொழிலாக(க்கொண்டு) தோன்றினோர் என்றதனால் அவ்வாறு தோன்றுதல் வினைவயத்தாலன்றித் தம் இச்சையால் என்பது பெறப்படும். உலக நலன் கருதி இறைவனும் அவன் அருள்பெற்றோருமாகத் தோன்றினோர் பலராதலின், தோன்றினோர் எனப் பன்மைபடக் கூறினர். தம்மை என்றது தம் முன்னை நிலையை. அது அன்றாகி என்றது தம் இச்சையாலன்றி என்றவாறு. மற்றவர் என்றது வினைவயப்பட்டோரை. தம்மை மறப்பரோ என்றது தம்மை மறவார் என்றவாறு. அதுவன்றி மற்றவர்போல் பிறப்பரோ என்றது தம் இச்சையாலன்றி வினைவயப்பட்டவர்போல இன்பதுன்ப நுகர்ச்சியுடையராய்ப் பிறவார் என்றவாறு.

தோன்றினோர் எவர்க்கும் தாம் பெற்ற பதம் பெறல் அரிதோ என்றது அவர்க்கு அப்பதம் அடைதல் அரிதன்றென்றவாறு. இது இராமன் துறவுக்கோலம் நோக்கிக் கூறியது. பதம் – பதவி. இது, பொதுப் பொருளால் சிறப்புப் பொருளைத் துணியும் வேற்றுப் பொருள் வைப்பணி வகை தழுவி யமைந்தது. விருப்பு வெறுப்பற்ற வீட்டுலகத்திலுள்ளோர், பிறப்பதில்லை. அவர் உலக நலன் கருதித் தம் இச்சையால் இம்மண்ணுலகில் தோன்றினால், தம் முன்னை நிலையை மறவார்; தம் இச்சையாலன்றி வினைவயப்பட்டுப் பிறந்தார் போல இன்ப துன்ப நுகர்ச்சியுடையராய்ப் பிறவார்; அவ்வாறு தோன்றினோர் எவர்க்கும் மீட்டும் தம் முன்னைப் பதவியை அடைதல் எளிதே. அங்ஙனம் இருப்பவும் உலக நலன் கருதி உன் இச்சையால் பிறந்த நீ உன் முன்னை நிலையை மறந்தமை ஏன்? வினைவயப் பட்டுப் பிறந்தவர்போல இன்பதுன்ப உணர்ச்சியுற்றமையேன்? உனக்குரிய முன்னைப் பதவியை அடைதல் எளிதாயிருக்கவும் நீ தவமேற்கொண்டது ஏன்? என்று வியப்புற்று வினவுவானாயினான் எனத் துணி பொருள் விரித்துக்கொள்ளத்தகும். மறப்பரோ? பிறப்பரோ? அரிதோ? என்பவற்றுள் ஓகாரம் எதிர்மறைப் பொருள் உணர்த்தி நின்றது. இறப்பதே பிறப்பதே என்பவற்றுள் ஏகாரம் எண்ணுப் பொருளிற் பயின்றது. (50)

2656. பனிநின்ற பெரும்பிறவிக்
கடல்கடக்கும் படிபற்றி
நனிநின்ற சமயத்தோ
ரெல்லாரு நன்றென்னத்
தனிநின்ற தத்துவத்தின்
றகைமூர்த்தி நீயாகி
லினிநின்ற முதற்றேவ
ரென்கொண்டென் செய்வாரே.

பனி நின்ற பெரும் பிறவிக் கடல் கடக்கும் படி பற்றி
நனி நின்ற சமயத்தோர் எல்லாரும் 'நன்று' என்னத்
தனி நின்ற தத்துவத்தின் தகை மூர்த்தி நீ ஆகில்
இனி நின்ற முதல் தேவர் என்கொண்டு என்செய்வாரே?

பொ:—நீங்காத துன்பத்தை விளைக்கும் பெரிய பிறவியாகிய கடலைக் கடக்கும் நெறிகளைப் பலவாக மேற்கொண்டு நின்ற சமயத்தார் எல்லாராலும் 'நன்று' என்று பாராட்டும்படி ஒப்பற்றுவிளங்கிய

மெய்ம்மையின் அழகிய வடிவையுடையவன் நீ ஆயின், பெருந்தேவர் என நின்ற பிறர், இனி எத்தகுதியால் யாது செய்யவல்லார் ?

கு :—பனி துன்பம். படி - நெறி ; உபாயம். தத்துவம் – மெய்ம்மை; ‘ தத்துவமான நெறி ’ (29) என்பது நான்மணிக்கடிகை. தகை – அழகு. மூர்த்தி – வடிவுடையான். முதல்தேவர் என் கொண்டு என் செய்வாரே என்றது அத்தேவர்பால் ஒரு தகுதியும் இல்லை ; அவரால் செய்யத்தக்கது ஒன்றும் இல்லை என்றவாறு. அறங்களுட் சிறந்தது மெய்ம்மை; அது, பிறவியறுக்கும் நினைவுடைய ராய்த் தத்தம் சமய முறைப்படி ஒரொரு நெறியை மேற்கொண் டொழுகுவோர் யாவராலும் ஒருங்கு நன்றென்று பாராட்டப்படு வது ; அம்மெய்ம்மையின் வடிவாக விளங்குபவன் நீயே. ஆயின் இனிப் பிறதேவர் எத்தகுதியால் யாது செய்ய வல்லார். அவரால் ஒரு பயனும் இல்லை என விரித்துரைத்துக் கொள்ளல் தகும். இங்கு ‘யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத் தொன்றும் வாய்மை யின் நல்ல பிற’ (300) என்னும் திருக்குறளும், அதற்குப் பரிமேலழ கர் தரும் விளக்கமும் நோக்கத்தகும். (51)

**2657.** ஓயாத மலரயனே முதலாக வுளராகி
மாயாத வானவர்க்கு மற்ருெழிந்த மன்னுயிர்க்கு
நீயாதி முதற்ருதை நெறிமுறையா லீன்றெடுத்த
தாயாவார் யாவரே தருமத்தின் றனிமூர்த்தி.

ஓயாத மலர் அயனே முதல் ஆக உளர் ஆகி,
மாயாத வானவர்க்கும் மற்று ஒழிந்த மன் உயிர்க்கும்
நீ ஆதி முதல் தாதை, நெறி முறையால் ஈன்று எடுத்த
தாய் ஆவார் யாவரே ? தருமத்தின் தனி மூர்த்தி !

பொ :—ஒப்பற்ற அறவுருவானவனே ! படைத்தற்ருெழிலில் ஓய்வடையாத, தாமரைப்பூவில் தோன்றிய பிரமன் முதலாக உள்ள வராகி, அழிவற்றவருமான தேவர்களுக்கும் அவரல்லாத நிலைபேறு டைய பிறவுயிர்களுக்கும் நீயே சிறந்த தந்தையாக விளங்குகிருய் ! (அவ்வாருயின்) அவ்வுயிர்களை வரன்முறையால் பெற்று வளர்த்த தாயாகுவோர் எவர் ? (கூறுவாயாக.)

கு :—இராமனை உலகத் தோற்றத்துக்கு முதற் காரணமான இறைவனுகக் கருதி நீயாதி முதற்ருதை என்ருன். மற்று அசை நிலை. உயிர்க்கு அழிவு இல்லையாதலின் மன்னுயிர் எனலாயிற்று. தாயாவார் யாவர் ? என்றது தாயாவார் பிறரில்லை என்றவாறு.

எனவே உயிர்க்கெல்லாம் தந்தையுந் தாயுமாய் விளங்குபவன் நீயே என்று இராமன் பெருமை புலப்படுத்தியவாறு. 'என்னைப் பெற்ற அத்தாயாய்த் தந்தையாய் அறியாதன அறிவித்த அத்தா' (2·3·2) என்பது திருவாய்மொழி. (52)

2658. நீயாதி பரம்பரமு
நின்னவே யுலகங்க
ளாயாத சமயமுநின்
னடியவே யயலில்லை
தீயாரி னொளித்தியால்
வெளிநின்றாற் றீங்குண்டோ
வீயாத பெருமாய
விளையாட்டும் வேண்டுமோ.

நீ ஆதி பரம்பரமும்; நின்னவே உலகங்கள்;
ஆயாத சமயமும் நின் அடியவே; அயல் இல்லை;
தீயாரின் ஒளித்தியால், வெளி நின்றால் தீங்கு உண்டோ?
வீயாத பெரு மாய விளையாட்டும் வேண்டுமோ?

பொ:—மேலான பரம்பொருளும் நீயே; உலகங்களெல்லாம் உன் உடைமையே; உன் யல்பினை ஆராய்ந்து முடிவு காணாத புறமதங்களும் நின் அடிகளைப் பற்றிப் பேசுவனவேயாம்,-வேறில்லை; அப்படியிருக்கவும், நீ தீயவர்களைப்போல மறைகிறாய்; மறையாது (யாவரும் காணும்படி) வெளி நின்றால் (உனக்கோ அல்லது உன்னைக் காண்பவர்க்கோ) தீங்கு உண்டாகுமோ; (இவ்வாறு) அழியாத பெரிய ஆச்சரியத்தை விளக்கும் விளையாட்டும் வேண்டுவதுதானோ? அன்றே.

கு:—பரம் - (முன்னது) மேன்மை, (பின்னது) பரம்பொருள் = எல்லாம் வல்ல இறைவன். சமயம் - மதம். 'விளம்பும் ஆறு சமயமும் அவையாகியும் மற்றும் தன்பால் அளந்து காண்டற்கு அரியனாகிய ஆதிப்பிரான்' (4.10.9) என்பது திருவாய்மொழியாதலால் ஆயாத சமயம் என்பதற்கு, 'உன் இயல்பினை ஆராய்ந்து முடிவு காணாத புறமதங்கள் என்று பொருள் கூறலாயிற்று. ஆயாத சமயமும் நின் அடியவே என்பது புற மதங்களும் உன் கழல் வணக்கத்தையே பேசுவனவாகும் என்றவாறு. அங்கங்கே பெய்யும் மழைநீர் பின் கடலிலே சென்று சேருமாறுபோல, அயற்றெய்வங்களை வணங்கும் வணக்கமும் முடிவில், பரம்பொருளை வணங்கியதாகுமாதலால்

ஆயாத சமயமும் நின் அடியயவே என்ருர். இங்கு, 'வணங்கும் துறைகள் பல பலவாக்கி மதிவிகற்பால், பிணங்கும் சமயம் பல பல ஆக்கி, அவையவைதோ – றணங்கும் பலபலவாக்கி நின் மூர்த்தி பரப்பிவைத்தாய்', (திருவிருத்தம். 96), 'சமணரும் சாக்கியரும், வலிந்து வாது செய்வீர்களும் மற்றும் நும் தெய்வமும் ஆகி நின்ருன்' (திருவாய்மொழி. 4·10·5) 'நும் நும் கவிகொண்டு நும் நும் இட்டா தெய்வம் ஏத்திஞல்,செம்மின் சுடர் முடி எம் திருமாலுக்குச் சேருமே' (திருவாய் மொழி. 3.9.6.) என்னும் அருளிச் செயல்களும் நோக்கத் தகும். தீங்குண்டோ என்றது தீங்கில்லை என்றபடி. வீதல் – அழி தல். மாயம் - ஆச்சரியம். விளையாட்டும் வேண்டுமோ என்றது, இவ் விளையாட்டை எதன் பொருட்டு மேற்கொண்டனை? என்றவாறு. நீ எல்லாம் வல்ல இறைவன், உலகங்கள் உன்னுடைமை, சமய வாதிகள் அனைவரும் உன்கழல் வணங்குபவரே, அவ்வாறிருக்க நீ வெளிப்படாது மறைந்ததேன்? இவ்விளையாட்டினை ஏன் மேற் கொண்டனை? என்று இராமனை நோக்கி விராதன் வினவுவா ஞயினன். (53)

**2659.** தாய்தன்னை யறியாத
கன்றில்லை தன்கன்றை
யாயு மறியு
முலகின்ரு யாகினைய
நீயறிதி யெப்பொருளு
மவையுன்னை நிலையறியா
மாயையிது வென்கொலோ
வாராதே வரவல்லாய்.

தாய் தன்னை அறியாத கன்று இல்லை; தன் கன்றை
ஆயும் அறியும்; உலகின் தாயாகின், ஐய!
நீ அறிதி எப்பொருளும்; அவை உன்னை நிலை அறியா;
மாயை இது என்கொலோ? வாராதே வரவல்லாய்!

பொ:—ஐய! வாராதே வரவல்லாய்! தன்னை ஈன்ற தாயை அறியாத கன்று இல்லை; தன் கன்றைத் தாய்ப் பசுவும் அறியும்; (உன்னிடமிருந்து உலகு தோன்றுதலின்) நீ உலகின் தாயாஞய், ஆயின், நீ (உன்னிடமிருந்து தோன்றிய) எல்லாப் பொருள்களையும் அறிகின்ருய்; அப்பொருள்கள் உன்னை இன்ன நிலையுடையை என்று அறியா; (இவ்வாறு அவை உன்னை அறிய முடியாமல் நீ செய்த) இம்மாயை எதன்பொருட்டு.

கு :—தாய் ஆய் என்பவை தாய்ப்பசு என்னும் பொருளிற் பயின்றன. தாய்தன்னை என்பதனுள் தன் சாரியை. 'தாய் தன்னை அறியாத கன்று இல்லை' என்பதனோடு, 'பல்லாவுள் உய்த்துவிடினும் குழக்கன்று வல்லதாம் தாய் நாடிக் கோடலை' (101) என்னும் நாலடியார்ப் பாடலும் நோக்கத்தகும். கொல் ஓ அசை நிலை. வாராதே வரவல்லாய் என்றது, அடியவர்பால் வருதற்கு அரியவன் போலிருந்துகொண்டே எளியனாய் வரும் ஆற்றல் உடையவனே! என்றவாறு. இங்கு, 'வாராதாய்போல் வருவானே' (6.10.9.) என்னும் திருவாய்மொழியும், அதற்கு 'அடைந்தார்க்கு, 'இவன் கிட்ட அரியன்' என்றிருக்கச் செய்தே உட்புகுந்திருக்கும்படியைச் சொல்லிற்று' என அமைந்த ஈட்டு விளக்கமும் நோக்கத்தகும். (54)

**2660.** பன்னலா மென்றுலகம்
பலபலவு நினையுமா
லுன்னலாற் பெருந்தெய்வ
முயர்ந்துளோ ரொழுக்கன்றே
யன்னவூர் தியைமுதலா
மந்தணர்மாட் டருந்தெய்வ
நின்னலா வில்லாமை
நெறிநின்ருர் நினையாரோ.

'பன்னல் ஆம்' என்று உலகம், பலபலவும் நினையுமால்;
உன் அலால் பெருந்தெய்வம் உயர்ந்துளோர் ஒழுக்கன்றே;
அன்னவூர்தியை முதலாம் அந்தணர்மாட்டு அருந்தெய்வம்
நின் அலால் இல்லாமை நெறி நின்ருர் நினையாரோ.

பொ :—உலகம் பல பல தெய்வங்களையும் துதித்து வழிபடுதல் பொருந்துமென்று நினையும்; (ஆயினும்), அன்னத்தை ஊர்பவனை பிரமனைத் தலைவனாகக் கொண்ட அந்தணரிடம் (அவர்களால் வணங்கப்படும்) சிறந்த தெய்வமாக நின்னையொழிய வேறு தெய்வம் இல்லை என்பதை நன்னெறியினின்று பிறழாத மேலோர் அறிவர்; ஆதலால், உன்னையன்றி வேறொரு பெருந் தெய்வம் உளது என்று கொள்ளுதல் அம்மேலோருடைய நடைமுறையன்று.

கு :—உலகம் என்பது இங்கே மெய்யறிவில்லாத மக்களை உணர்த்தியது. பன்னுதல் - துதித்தல். பலபல என்றது பலபல தெய்வங்களை. மெய்யறிவில்லாத மக்கள் நிலைக்கு ஏற்ப, அவர் வணங்கும் தெய்வங்களும் பலபலவாயின. உன்னையல்லால் நின்னை

யல்லால் என்பவை உன்னலால் நின்னலால் என விகாரப்பட்டு நின்றன. தன்னினும் மேம்பட்டதொரு தெய்வம் இல்லாதது பெருந்தெய்வம் அருந்தெய்வம் என்று சொல்லப்படும். உயர்ந்துளோர் நெறிநின்ருேர் என்றது மெய்யுணர்வுடையாரை. அன்னவூர்தி - அன்னமாகிய ஊர்தியை யுடையான். அந்தணர் - அழகிய தண்ணளியுடையார்; அந்தத்தை அணவுவார் என்று உரைத்தலும் அமையும். அந்தம் இங்கே வேத முடிவைக் குறித்தது. நினையாரோ என்பதனுள் ஓகாரம் எதிர்மறைப் பொருள் பட்டது; நினைவார் என்றவாறு. நினைதல் இங்கே அறிதல். இனி, 'அன்னவூர்தியை முதலாம் அந்தணர்மாட்டு அருந்தெய்வம் நின்னலால் இல்லாமை' என்பதற்கு, 'பிரமன் முதலியோ ருள்ளத்துறையும் சிறந்த தெய்வம் நின்னையன்றி வேறில்லாமை' என்று பொருளுரைத்தலும் அமையும். (55)

**2661.** பொருவரிய சமயங்கள்
புகல்கின்ற புத்தேளி
ரிருவினையு முடையார்போ
லருந்தவநின் றியற்றுவார்
திருவுறையு மணிமார்ப
நினக்கென்னை செயற்பால
வொருவினையு மில்லார்போ
லுறங்குதியா லுறங்காதாய்.

பொரு அரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்,
இரு வினையும் உடையார்போல் அருந்தவம் நின்று இயற்றுவார்;
திரு உறையும் மணிமார்ப! நினக்கு என்னை செயற்பால?
ஒரு வினையும் இல்லார்போல் உறங்குதியால் உறங்காதாய்!

பொ:—திருமகள் நீங்காது தங்கிய அழகிய மார்பையுடையவனே! (அறிவாற்றல்கள்) ஒடுங்காதவனே!! ஒன்றுடனென்று ஒவ்வாத புறச் சமயங்கள் கூறும் கடவுளர் இரு வினைகளையும் உடைய மக்களைப் போலச் செயற்கரிய தவத்தை ஒழியாது செய்வர்; உனக்கோ செய்யத்தக்கது ஒன்றுமில்லை; ஆதலால், செய்யத்தக்க செயல் யாதொன்றும் இல்லாதவரைப்போல உறங்குகின்ருய்.

கு:—பொரு - ஒப்பு. சமயங்கள் என்றது புறச்சமயங்களை. புத்தேளிர் - கடவுளர். இருவினை - பாவபுண்ணியங்கள். புத்தேளிர் அருந்தவமியற்றுதல், 'பிரமனும் உன்னைக் காண்பான் எண்ணிலா வூழியூழி தவஞ்செய்தார்' (திருமாலை. 44) என்று அருளிச் செயலிலும்

பேசப்பட்டது. உறங்குதல் - ஒடுங்குதல். திருவுறையு மணிமார்ப என்பது, 'அகலகில்லேன் இறையுமென்று அலர்மேன் மங்கையுறை மார்பா' (திருவாய்மொழி. 6. 10. 10) என்னும் அருளிச் செயலைத் தழுவியமைந்தது. நினக்கு என்னை செயற்பால என்றது, (எல்லாம் நீ நினைத்த மாத்திரத்தே நிகழ்தலால்) நீ முயன்று செய்யத்தக்க செயல் ஒன்றுமில்லை என்றவாறு. (56)

**2662.** அரவாகிச் சுமத்தியா
லயிலெயிற்றி னேந்துதியா
லொருவாயின் விழுங்குதியா
லோரடியா லொளித்தியாற்
றிருவான நிலமகளை
யிஃதறிந்தாற் சீருளோ
மருவாருந் துழாயலங்கன்
மணிமார்பின் வைகுவாள்.

அரவு ஆகிச் சுமத்தியால், அயில் எயிற்றின் ஏந்துதியால்,
ஒரு வாயின் விழுங்குதியால், ஓர் அடியால் ஒளித்தியால்,
திரு ஆன நிலமகளை ; இஃது அறிந்தால் சீருளோ?
மரு ஆரும் துழாய் அலங்கல் மணிமார்பின் வைகுவாள்.

பொ :—சிறந்த பூமியாகிய தேவியை நீ ஆதிசேடனாகிச் சுமக்கின்றாய் ; (வராகமாகிக்) கூரிய கொம்புகளால் தாங்குகின்றாய் ; பிரளய காலத்தில் ஒரு வாயிற்கொண்டு விழுங்குகிறாய் ; வாமனனாகி (அளப்பது போல) ஓரடியால் மறைக்கின்றாய் ; உன்னுடைய இச் செயல்களை அறிந்தால், நறுமணம் வாய்ந்த திருத்துழாய் மாலையும் கவுத்துப மணியும் பொருந்திய உன் மார்பில் அகலாது தங்குபவளான இலக்குமி சினமடையாளோ ?

கு :—அரவு இங்கே ஆதிசேடனைக் குறித்தது. ஆதிசேடனும் திருமாலமிசமானவன் என்று பகவற்கீதை கூறும். எயிறு என்றது வராகத்தின் கொம்பினை. திரு - சிறப்பு. மரு - நறுமணம். சீருளோ? என்றது திருமகள் சீற்றம் (ஊடல்) கொள்ளுமாறு நீ இவ்வாறு செய்ததென் என்றவாறு. (57)

**2663.** மெய்யைத்தான் சிறிதுணர்ந்து
நீவிதித்த மன்னுயிர்க
ளுய்யத்தா னாகாதோ
வுனக்கென்ன குறையுண்டோ
வையத்தார் வானத்தார்
மழுவாளிக் கன்றளித்த
வையத்தாற் சிறிதையந்
தவிர்ந்தாரு முளரையா.

மெய்யைத்தான் சிறிது உணர்ந்து நீ விதித்த மன்னுயிர்கள்
உய்யத்தான் ஆகாதோ? உனக்கு என்ன குறை உண்டோ?
வையத்தார் வானத்தார் மழு ஆளிக்கு அன்று அளித்த
ஐயத்தால் சிறிது ஐயம் தவிர்ந்தாரும் உளர். ஐயா!

பொ:—ஐயா! உன்னால் படைக்கப்பட்ட நிலைபேறுடைய உயிர்கள், (நீயே பரம்பொருள் என்கிற) உண்மையைச் சிறிது தெரிந்து உய்தல் கூடாதோ? (அவர்கள் அவ்வாறு உய்ந்தால்) உனக்கு என்ன குறை உண்டாகும்? மழுப்படையையுடைய சிவ பெருமானுக்கு அக்காலத்து நீ இட்ட பிச்சையால் மண்ணுலகத் தாருள்ளும் விண்ணுலகத்தாருள்ளும் சிறிது ஐயம் நீங்கினவரும் உண்டு.

கு:—விதித்தல் - படைத்தல். ஐயம் - முன்னது பிச்சை; பின்னது இதுவோ அதுவோ என்னும் கவர்த்த உணர்வு. உனக்கு என்ன குறை உண்டு? என்றது உனக்கு ஒரு குறையும் இல்லை என்றவாறு. உண்டோ என்பதில் ஓ அசை. ஐயந் தவிர்ந்தாரும் உளர் என்றத னால் ஐயந் தவிராதாரும் உண்மை பெறப்படும். இதனால் எல்லா வுயிர்களும் ஐயம் முழுதும் நீங்கி நீயே பரம்பொருளென்று தெளிந்து உய்ய அருளவேண்டும் என்று அறிவு வந்த நிலையில் உயிர்களின் துன்பங் கண்டு விராதன் இரங்கிக் கூறியவாறு. மூன்று நான்காம் அடியிற் குறித்த கதை வருமாறு: முன் ஒரு காலத்தில் சிவபெரு மான் பிரமன் தலைகளுள் ஒன்றைக் கொய்தனன்; கொய்த தலை, பிரமன் சாபத்தால் சிவபெருமான் கைத்தலத்தை விட்டு நீங்காத தாயிற்று. ஒருவர் இடும் பிச்சையால் அந்தப் பிரம கபாலம் நிரம்பி னால் அது கையை விட்டு நீங்கும் என்று (சாபம் நீங்க) நிபந்தனை விதிக்கப்பட்டது. பலரும் அதில் பிச்சையிட்டும் அது நிரம்பவில்லை. திருமால் 'அக்ஷயம்' என்று சொல்லி அதில் பிச்சையிட்ட அளவில் அது நிரம்பிற்று; கையை விட்டு நீங்கிற்று என்பதாம். (58)

**2664.** அன்னமா யருமறைக
ளறைந்தாய்நீ யவையுன்னை
முன்னமா ரோதுவித்தா
ரெல்லாரு முடிந்தாரோ
பின்னமா யொன்றுதல்
பிரிந்தேயோ பிரியாதோ
வென்னமா மாயமிவை
யேனமாய் மண்ணிடந்தாய்.

அன்னம் ஆய் அருமறைகள் அறைந்தாய் நீ, அவை உன்னை
முன்னம் ஆர் ஓதுவித்தார்? எல்லாரும் முடிந்தாரோ?
பின்னம் ஆய் ஒன்றுதல், பிரிந்தேயோ? பிரியாதோ?
என்ன மா மாயம் இவை ஏனமாய் மண் இடந்தாய்!

பொ:—வராகமாகி நிலத்தைக் கொம்பினால் இடந்தெடுத்தவனே! நீ அன்னமாகிப் பிரமனுக்கு அறிதற்கரிய வேதங்களைக் கற்பித்தனையே, அவ்வேதங்களை முன்னே உனக்குக் கற்பித்தவர் ஆர்? கற்பித்த அவரெல்லாம் இறந்துவிட்டனரோ? காணப்படும் பொருள்களில் வேறுபட்டும் ஒன்றுபட்டும் நீ இருத்தல் அப்பொருள்களைப் பிரிந்தோ? பிரியாமலோ? வேறும் ஒன்றும் இருக்கும் இத்தன்மைகளை உடையனுதல் என்ன பெரிய மாயை?

கு:—ஆசிரியர் பரம்பரையை அறிந்து கொள்ளுதல் வழக்காதலின் முன்னம் ஆர் ஓதுவித்தார்? என்றான். ஆர் ஓதுவித்தார் என்ற வினவுக்கு விடை பெருமையின், எல்லாரும் முடிந்தாரோ? என்றான். இதனால் அறிவுறுத்துவாரின்றித் தானே அறியும் இயற்கையறிவும் முற்றறிவும் உடையவன் நீ என்பது பெறப்படும். பின்னம் – வேறுபாடு. ஏனம் - வராகம். இடத்தல் - குத்தியெடுத்தல். (59)

**2665.** ஒப்பிறையும் பெறலரிய
வொருவாமுன் னுவந்துறையு
மப்புறையு டுறந்தடியே
னருந்தவத்தா லணுகுதலா
லிப்பிறவிக் கடல்கடந்தே
னினிப்பிறவே னிருவினையுந்
துப்புறழு நீர்த்தசுடர்த்
திருவடியாற் றுடைத்தாய்நீ.

ஒப்பு இறையும் பெறல் அரிய
ஒருவா! முன் உவந்து உறையும்
அப்பு உறையுள் துறந்து, அடியேன்
அருந்தவத்தால் அணுகுதலால்,
இப் பிறவிக் கடல் கடந்தேன்;
இனிப் பிறவேன்; இரு வினையும்
துப்பு உறழும் நீர்த்த சுடர்த்
திருவடியால் துடைத்தாய் நீ.

பொ :—சிறிதும் ஒப்பார் இல்லாத ஒருவனே! நீ முன்னே விரும்பித் தங்கிய கடலாகிய இடத்தை விட்டு நீங்கி அடியேனுடைய அரிய தவத்தால் என் எதிர்வந்தமையால், இந்தப் பிறவியாகிய கடலைத் தாண்டிவிட்டேன்; இனிப் பிறவியை அடையேன்; என்னுடைய இரு வினைகளையும், பவளத்தை ஒக்கும் பண்புடைய ஒளி மிக்க உன் திருவடிகளால் எளிதே போக்கினுய்.

கு :—இறையும் ஒப்பு பெறலரிய ஒருவா என இயையும். இறை—சிறிதும். ஒப்பு – ஒப்புடையார். இறையும் ஒப்பு பெறலரிய ஒருவா என்பதற்கு இறைவனும் (பரம் பொருளும்) ஒப்பாகாத ஒருவனே! என்று பொருளுரைத்தலும் ஆம். ஒப்பாரில்லாமை கூறவே மிக்கார் இல்லாமையும் பெறப்படும். அப்பு – நீர்; அது கடல் என்று பொருள்பட நின்றது. உறையுள் - பள்ளி கொள்ளும் இடம். 'கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கி' (601) என்ருர் முன்னும். இருவினையும் அவையூட்டும் பயனை நுகர்ந்தல்லது விலக்குதற்கரிய வலியுடையவாதலின், இருவினையும் என்ருன். உறழ்தல் - ஒத்தல். நீர் – தன்மை. துப்பு - பவளம். நல்வினையும் வீடடைதற்குத் தடையாதலின் இருவினையும் துடைத்தாய் என்ருன். சுடர் - ஒளி. துடைத்தல் – எளிதே போக்குதல். இச்செய்யுள், 'பனிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டோடி வந்தென் மனக் கடலில் வாழவல்ல மாய மணாள நம்பீ, (பெரியாழ்வார் திருமொழி. 5.4.9.), 'பறவையேறு பரம்புருடா நீ யென்னைக் கைக்கொண்ட பின், பிறவி யென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதமாகின்றதால்' (ஷை. 5. 4. 2) என்னும் அருளிச்செயற் பாசுரங்களைத் தழுவியமைந்தமை நோக்கத்தகும். (60)

'உன் வரலாறு கூறுக' என இராமன் விராதனை வினவுதல்

2666. இற்றெலா மியம்பினு
★ னிற்றலோடு நீயிவ்வா
றுற்றவா றுணர்த்தெனு
வெற்றியான் விளம்பினுன்.

இற்று எலாம் இயம்பினன்
நிற்றலோடும் ‘ நீ இவ்வாறு
உற்ற ஆறு உணர்த்து’ என
வெற்றியான் விளம்பினன்.

பொ :—(விராதன்) இத்தன்மையுடைய (இராமன் பெருமைகள்) எல்லாவற்றையும் சொல்லித் துதித்து நின்ற அளவில், வெற்றி வீரனை இராமன், ‘நீ இவ்வாறு அரக்கனை வரலாற்றைச் சொல்லுக’ என்று கூறினன்.

கு :—இற்று எலாம் என்றது ஒருமைப் பன்மை மயக்கம். வரத்தால், விளியாத பேராற்றலுடைய விராதனையும் வென்றமையின் வெற்றியான் என்றார். (61)

## விராதன் தன்சரிதம் கூறுதல் 2667—2675

**2667.** கள்ள மாய வாழ்வெலாம்
விள்ள ஞானம் வீசுதாள்
வள்ளல் வாழி கேளென
வுள்ள வாறு ணர்த்தினன்.

கள்ளம் மாய, வாழ்வு எலாம்
விள்ள, ஞானம் வீசு தாள்
வள்ளல்! வாழி! கேள்! என
உள்ள ஆறு உணர்த்தினன்.

பொ :—‘என் வஞ்சம் ஒழியவும், என் பிறவிகளனைத்தும் அழியவும் அறிவை மிகவும் எனக்குத் தந்த திருவடிகளையுடைய வள்ளலே! நீ வாழ்க! கேட்பாயாக’ என்று உள்ளபடி (தன் சரிதம்) கூறினன்.

கு :—கள்ளம் - வஞ்சகம் ; பொய்யும் ஆம். மாய்தல் - அழிதல். வாழ்வு என்பது பிறவியைச் சுட்டி நின்றது. விள்ளுதல் - சிதைதல்; கெடுதல். கள்ளம் ஆய வாழ்வு எலாம் விள்ள என்று கொண்டு, பொய்யான உலக வாழ்வெல்லாம் அழிய என்றும் பொருள் கொள்ளலாம். வாழி அசையுமாம். (62)

2668. இம்ப ருற்றி தெய்தினேன்
வெம்பு விற்கை வீரபேர்
தும்பு ருத்த னதன்சூ
ழம்ப ரத்து ளேனரோ.

இம்பர் உற்று இது எய்தினேன்,
வெம்பு விற்கை வீர! பேர்
தும்புரு; தனதன் சூழ்
அம்பரத்து உளேன் அரோ.

பொ :—வெம்புகின்ற வில்லையுடைய வீரனே! இந் நிலத்தே வந்து உன்னுல் சாப நீக்கம் பெற்ற யான், தும்புரு என்னும் பெயருடையேன்; குபேரனுக்குரியதான வானுலகில் வாழ்வேன்.

கு :—வெம்புதல் - சினத்தல். தனதன் - குபேரன். சூழ்தல் - வளைதல்; எல்லைகட்டி உரிமையாக்கிக் கொள்ளுதல். அம்பரம் - ஆகாயம்; இங்கு வானுலகம் என்னும் பொருளிற் பயின்றது. (63)

2669. ஆட ரம்பை நீடரங்
கூடு நின்று பாடலா
லூடு வந்து கூடவிக்
கூடு வந்து கூடினேன்.

ஆடு அரம்பை நீடு அரங்கு
ஊடு நின்று பாடலால்,
ஊடு உவந்து கூட, இக்
கூடு வந்து கூடினேன்.

பொ :—ஆடல் புரிபவளான அரம்பை, பெரிய அரங்கினிடை நின்று பாடுதலால் மகிழ்ந்து, (குபேரனுக்குப் பணிபுரிந்து கொண்டிருந்த யான் அதனைக் கைவிட்டு) இடையே அவளைக் கூடினமையால், இவ்வரக்கனுடலில் வந்து சேர்ந்தேன்.

கு :—அரங்கு - ஆடுமிடம். அரங்கூடு - அரங்கினிடையே. ஊடு - (தன் பணியின்) இடையே. கூடு – உடல். முன்னே உயிர் நீங்கி விழுந்து கிடக்கும் தன் பழைய உடலை இக்கூடு என்று சுட்டுகின்ருன். (64)

2670. கரக்க வந்த காமநோய்
துரக்க வந்த தோமினு
லிரக்க மின்றி யேவினு
னரக்கன் மைந்த னுயினேன்.

கரக்க வந்த காமநோய்
துரக்க, வந்த தோமினுல்,
இரக்கம் இன்றி ஏவினுன்;
அரக்கன் மைந்தன் ஆயினேன்.

பொ :—(அறிவு) மறையும்படி உண்டாகிய ஆசைநோய், என்னைச் செலுத்த, அதனுல் விளைந்த குற்றத்தால், (குபேரன்) என்பால் கருணையின்றிச் சபித்தான்; அச்சாபத்தால் அரக்கன் மகனுனேன்.

கு :—கரத்தல் - மறைத்தல். துரத்தல் - செலுத்துதல். தோம் - குற்றம். (65)

2671. அன்ன யக்க னுதியா
யின்ன றீரு மீகையா
னின்ன தாளி னீங்குமென்
றுன்னு மெற் குணர்த்தினுன்.

அன்ன யக்கன், ஆதியாய்!
இன்னல் தீரும் ஈகையான்
நின்ன தாளின் நீங்கும் என்று
உன்னும் எற்கு உணர்த்தினுன்.

பொ :—எவர்க்கும் முன்னேனே! (சாபத்தினுல் விளையும்) துன்பம் நீங்கும் உதவி செய்பவனுன அக் குபேரன், உன்னுடைய திருவடியால்_இவ்வரக்கப் பிறவி கழியும் என்று, (அவனருளையே) நினையும் எனக்குத் தெரிவித்தான்.

கு :—யக்கன் - இயக்கன். இயக்கர் தேவர்களுள் ஒரு பிரிவினர். அன்ன யக்கன் - அவ்வியக்கன்; இது குபேரனைச் சுட்டியது. இன்னல் - துன்பம். தீர்தல் - நீங்குதல். ஈகை - கொடை; இங்கே உதவியைக் குறித்தது. நின்ன - உன்னுடைய; இது, விராதன் இராமனை நோக்கிக் கூறியது. தாள் – திருவடி. உன்னுதல் - நினைதல். எற்கு - எனக்கு. (66)

2672. வலஞ்செய் திந்த வானெலா
நலிஞ்சு தின்னு நாமவேற்
பொலிஞ்ச வென்றி பூணுமக்
கிலிஞ்சன் மைந்த னுயினேன்.

வலம் செய்து இந்த வான் எலாம்
நலிஞ்சு தின்னும் நாம வேல்
பொலிஞ்ச வென்றி பூணும் அக்
கிலிஞ்சன் மைந்தன் ஆயினேன்.

பொ:—இவ்வுலகனைத்தையும் சுற்றிவந்து, அங்குள்ள உயிர்களை யெல்லாம் வருத்தித் தின்னுகின்ற, அச்சந்தரும் வேலால் சிறந்த வெற்றியைக் கொண்ட அந்தக் கிலிஞ்சன் என்னும் அரக்கனுடைய மகன் ஆனேன்.

கு:—இந்த வானெலாம் வலஞ்செய்து என இயைக்க. வானிடை நின்று பேசுகின்றுனுதலின், இவ்வானெலாம் என்று சுட்டிக் கூறுவா னுயினன். தின்னுதலும் வென்றி பூணுதலும் கிலிஞ்சன் செயல்கள். வலஞ்செய்தல் - சுற்றி வருதல். நலிஞ்சு - வருத்தி. நாமம் - அச்சம். நலிந்து பொலிந்த என்பவை நலிஞ்சு பொலிஞ்ச எனப் போலி யாயின. கிலிஞ்சன் கொடுமை எங்கும் பரவி எல்லாராலும் அறியப் பட்டமையின் அக்கிலிஞ்சன் எனச் சுட்டோடியைத்துக் கூறினுன். (67)

2673. அன்று மூல மாதியா
வின்று காறு மேழையே
னன்று தீது நாடலே
னின்று தீய நேடினேன்.

அன்று மூலம்! ஆதியா
இன்று காறும் ஏழையேன்,
நன்று தீது நாடலேன்,
நின்று தீய நேடினேன்.

பொ :—உலக காரணனே! அறிவிலியாகிய யான் (கிலிஞ்சன் மகனுன) அன்று முதல் இன்றுவரை நன்மை தீமைகளை ஆராயாமல் தீயநெறியில் நிலைத்து நின்று பழியையே தேடிக்கொண்டேன்.

கு :—மூலம் - (உலகத் தோற்றத்துக்குக்) காரணம் ; மூலமே என்பது அண்மை விளியாய் மூலம் என நின்றது. ஆதி – தொடக்கம். இன்று காறும் - இன்றுவரை. நாடுதல் - ஆராய்தல். தீய என்றது பழியைத் தருஞ் செய்கைகளை. நேடுதல் - தேடுதல். 'கெடுத்த தொரு மணி நேடும் பஃறலை யரவின்,' (சுந்தர. 425) என்பதில் நேடுதல் தேடுதல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். (68)

2674. தூண்ட நின்ற தொன்மைதான்
வேண்ட நின்ற வேதநூல்
பூண்ட நின் பொலங்கொடா
டீண்ட வின்று தேறினேன்.

தூண்ட நின்ற தொன்மைதான்
வேண்ட நின்ற வேத நூல்
பூண்ட நின் பொலம் கொள் தாள்
தீண்ட இன்று தேறினேன்.

பொ :—என்பாற் பொருந்திய பழவினை (என்னைச்) செலுத்தலால், எல்லாரும் விரும்பும்படி என்றும் உளவாய வேதங்கள் அணிகலமாகக் கொண்ட உன் அழகிய திருவடிகளால் தீண்டப்பெற்று, இன்று (மயக்கம் நீங்கித்) தெளிந்தேன்.

கு :—நின்ற தொன்மைதான் தூண்ட என இயைக்க. தூண்டுதல் - செலுத்துதல். தொன்மை - பழவினை. தான் அசை. வேண்டுதல் - விரும்புதல். பொலம் - அழகு. தீண்ட - தீண்டலால். (69)

2675. திறத்தின் வந்த தீதெலா
மறுத்த வுன்னை யாதனே
னொறுத்த தன்மை யூழியாய்
பொறுத்தி யென்று போயினான்.

திறத்தின் வந்த தீது எலாம்
அறுத்த உன்னை ஆதனேன்
ஒறுத்த தன்மை ஊழியாய்!
பொறுத்தி என்று போயினான்.

பொ :—'ஊழிமுதல்வனே! அறிவிலியாகிய யான், வகைவகையாக (என்பால்) வந்து சேர்ந்த தீமை எல்லாவற்றையும் போக்கிய

உன்னைத் துன்புறுத்தியதைப் பொறுத்தருளுக' என்று கூறித் தன் உலகுக்குப் போனான்.

கு :—திறம் - வகை. அறுத்தல் - ஒழித்தல். ஆதன் - அறிவிலி. ஒறுத்தல் - துன்புறுத்தல். ஊழி - உககமுடியுங்காலம். (70)

## இராமன் முதலியோர் அப்பாற் செல்லுதல்

2676. தேவு காதல் சீரியோ
னாவி போயி னானெனப்
பூவு லாவு பூவையோ
டேவ லாரு மேகினார்.

'தேவு காதல் சீரியோன்
ஆவி போயினான்' எனப்
பூ உலாவு பூவையோடு
ஏ வலாரும் ஏகினார்.

பொ :—'தெய்வக் காதலாற் சிறந்தவனாகிய இவன் உயிர் நீங்கினான்' என்று, அம்பு எய்வதில் வல்லவரான இராம லக்குவரும், தாமரைப் பூவில் விளங்கும் மகளான இலக்குமியின் அமிசமாய்த் தோன்றிய சீதாபிராட்டியுடன் அத்தண்டக வனத்துள் மேலும் சென்றனர்.

கு :—தேவு - தெய்வம். காதல் - அன்பு. பூவை - நாகணவாய்ப் புள்; உவமையாகுபெயராய்ப் பெண்ணை உணர்த்தியது. ஏ - அம்பு. ஏகுதல் - செல்லுதல். (71)

## இராமன் முதலியோர் ஒரு சோலையில் தங்குதல்

2677. கைகொள் கால வேலினார்
மெய்கொள் வேத மெய்யர்வாழ்
மொய்கொள் சோலை முன்னினார்
வைக லானும் வைகினார்.

கை கொள் கால வேலினார்,
மெய் கொள் வேத மெய்யர் வாழ்
மொய் கொள் சோலை முன்னினார்,
வைகல் தானும் வைகினார்.

பொ :—கைக்கொண்ட காலன் வடிவான வேற்படையினை யுடைய இராமலக்குவர், உண்மையே பேசும் வேதவுருவினரான முனிவர்கள் வாழும் மரங்கள் அடர்ந்த சோலையை அணுகியவராய், அன்று அங்கே தங்கினார்கள்.

கு :—காலவேல் - (எதிர்ந்தார் உயிரைக் கவர்தலால்) இயமன் வடிவான வேற்படை; 'காலன் வடிவாய வேலான் மனம்' (2.103) என்பது நளவெண்பா. மொய் - நெருக்கம். முன்னுதல் - அணுகுதல். வைகல் - நாள். வைகுதல் - தங்குதல். தான் உம் என்பவை அசைகள். 'வேலினார்......சோலை முன்னினார், வைகலானும் வைகினான்' என்று பாடங் கொண்டு, 'வேற்படையுடைய இராமலக்குவர்... சோலையை அடைந்தார்கள்; நாள் செய்வானாகிய சூரியனும் அத்தமித்தான்' என்று பொருள் கொள்ளலும் ஆம். இப்பொருள் கொள்ளுமிடத்து, முன்னுதல் - அடைதல்; வைகலான் - சூரியன்; வைகல் – நாள்; நாள் செய்வானை வைகலான் என்றார் என்று கொள்க. வைகுதல் - அத்தமித்தல். (72)

விராதன் வதைப் படலம் முற்றிற்று.

---

# 2. சரபங்கன் பிறப்பு நீங்கு படலம்

சரபங்கர் என்ற முனிவர் பிறவி நீங்கி முத்தியடைந்த வரலாற்றினைக் கூறும் உட்பிரிவாதல்பற்றி இப்பகுதி சரபங்கன் பிறப்புநீங்கு படலம் என்னும் பெயர்த்தாயிற்று. கணைக்குப் பொதுப் பெயரான சரம் என்ற சொல் ஈண்டுச் சிறப்பான காமனுடைய பாணத்தைக் குறிப்பதாகக் கொண்டு, காமபாணத்தை வென்றவன் என்ற காரணம் பற்றிச் சரபங்கன் என்று அழைக்கப்பட்டான். காமம் என்னும் குற்றத்தைத் தன்பாற் சாராது நீக்கி வென்றவன் எனவே, உபலக்கணத்தால் அக்குற்றத்தோ டொத்த வெகுளி மயக்கம் முதலிய ஏனைய குற்றமுமற்றவன் என்று கொள்ளலாம்.

சரவங்கன் பிறப்பு நீங்கு படலம் எனவும், சரபங்கப் படலம் எனவும், சரபங்கர் பிறப்பு நீங்கு படலம் எனவும் இப்படலப் பெயர் குறிக்கப்பெற்றுள்ளது.

## படலப் பொருட் சுருக்கம்

விராதன் இராமனால் சாபந்தீர்ந்து நற்கதி பெற்றுச் சென்ற பின், இராமன், சீதையுடனும், இலக்குவனுடனும் சரபங்க முனி தவம் புரியும் வனத்தை அணுகினான். அதுபோது, இந்திரன், பிரமனது கட்டளையால் முனிவரைப் பிரமலோகம் அழைத்துச்செல்ல அங்கு வந்தான். முனிவரும் இந்திரனை முறையின் வரவேற்று உபசரித்து, 'நீ இவண் வந்த காரணம் யாது?' என்று வினவ, இந்திரன் பிரமனது கட்டளையைத் தெரிவித்தான். 'பிரமலோகம் ஒரு குறிப்பிட்ட கால அளவொடு நின்று அழிதன்மாலையது; என்றும் அழியாப் பரமபதத்தைப் பெற விரும்பி யான் பல காலமாய்த் தவமியற்றி வருகிறேன். எனவே அப் பரமபதத்தையே யான் எய்துவன்' என்று முனிவர் இந்திரனிடம் கூறுமளவில், இராமன் முதலியோரும் அவ் வாச்சிரமத்திற் கருகிலுள்ள சோலையை அடைந்தனர். அங்குள்ள சூழ்நிலையைக் கண்டு, இந்திரன் முனிவர் பால் வந்துள்ளதை உய்த்துணர்ந்த இராமன், சீதையையும் இலக்குவனையும் அச் சோலைப்புறத்தே இருக்கச் செய்து, தனியே அச் சோலையினுட் சென்றான்.

அந்நிலையில் இந்திரன் இராமனைத் தொலைவில் கண்டு வணங்கிப் போற்றி, முனிவரிடம் விடைபெற்றுத் தன் நகர் சார்ந்தான். பின்னர், தன்னை நோக்கி வந்த இராமனை முனிவர் எதிர்கொண்டழைத்து, அவனால் வணங்கப் பெற்றுப் பேரானந்த மடைந்தார். பிறகு சீதை

யையும் இலக்குவனையும் அழைக்க அவர்களும் எய்தினர். அம் மூவரும் முனிவர் அறவுரை பகரச் செவியுற்று இரவைக் கழித்தனர். மறுநாட் காலை 'இந்திரன் பிரமனது கட்டளையால் என்னைச் சத்திய லோகம் அழைத்தான். நான் பரமபதம் பெறும் அவாவினால் அங்குச் செல்ல மறுத்தேன். உன்னை நேரிற் கண்டு களித்துப் பின்னர் வீடுபெற விரும்பியிருந்தேன். அவ்வாறே உன்னைக் காணப் பெற்றேன். எனக்குப் பரமபதத்தை அருளுக' என்று முனிவர் இராமனிடம் கூறித் தம் மனையாளுடன் தீப் புகுந்து வீட்டின்பத்தைப் பெற்றார் என்ற கதைப் பகுதியுடன் இப்படலம் முடிவுறுகிறது.

## வான்மீகப் போக்கும் வேறுபாடும்

சரபங்கரின் ஆச்சிரமத்திற்கு வரும் இராமனைக் கண்ணுற்ற இந்திரன், 'இராமன் என்னைக் கண்டு பேசாமுன்னமே யான் இவ்விடம் விட்டகலல் வேண்டும். இவன் அவதார நோக்கத்தை நிறைவேற்றியபின் இவனைக் காண்பேன்' என்ற நோக்கத்துடன் தன் நாடு சென்றான். இந்திரன் வந்து மீண்டதைப் பற்றி இராமன் முனிவரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டான். முனிவர் தாம் புரிந்த தவப் பயன்களை இராமனுக்கு அளித்தார். இராமன் முனிவரிடம், தான் அவ்வனத்தில் தங்கி வாழ்தற்குரிய இடத்தைக் குறிக்குமாறு வேண்ட, அவர், சுதீக்கணன் என்ற முனிவரைச் சென்றடையுமாறும், அவரே எல்லா நலன்களையும் அளிப்பார் என்றும் கூறி, தீயிடைப்புக்கு முத்தியடைந்ததாக வான்மீகம் கூறுகிறது.

முனிவரது ஆச்சிரமத்தின் புறத்தேயுள்ள சூழலைக் கண்ட இராமன், ஆச்சிரமத்தினுள் இந்திரன் வந்திருத்தலை உய்த்துணர்ந்து இலக்குவனிடம் விளக்கிக் கூறுமாற்றான் இந்திர வருணனை முதனூலில் இராமன் முகமாக அமைந்துள்ளது. கம்பனில் கவிக் கூற்றாக உள்ளது.

அவதார நிலையில், 'என்னைக் கன்மவயத்தாற் பிறவி எடுத்த ஏனைய மனிதரைப் போலவே எண்ணுகின்றேன்' என்ற கோட்பாட்டுடன், தன் இறைமைக் குணம் புலப்படாவாறே பெரும்பாலும் செயலாற்றிவரும் இராமனை, அவன் நோக்கத்துக்கு மாறாக, 'பணிந்து போற்றுதல் முறையன்று' என்றும், 'இராமன் செய்து முடிக்கவேண்டிய அரிய செயலை இந்திரன், நிறைவேற்றிய பின்பு இவனைக் காண்பேன்' என்றும் கருதி விண்ணுலகு சென்றது தக்கதேயாம்.

இராமனைப் பற்றிக் கூறுமிடங்களிலெல்லாம், அவனது பர தத்துவ நிலையைப் பரக்கப் பேசிவரும் கம்பர், தமது காவியத்தில், சரபங்காச்சிரமத்தில் இராமனைக் கண்டும் காணாதவன் போல

இந்திரன் தன்னொடு சென்றதாக அமைப்பது முறையன்றாகலின், இந்திரன் தொலைவில் நின்று செய்யும் தோத்திரம் இடம்பெறுவது மிகப் பொருத்தமுடைத்தாம்.

எல்லாப்பொருளின்கண்ணும் உறைதல் (ஸர்வாந்தர்யாமித்வம்) இழிகுணமின்மை, எண்ணற்ற நற்குணமுடைமை, உண்மையைக் கடைப்பிடித்தல் (ஸத்யவ்ரதத்வம்) அடியவர்க் கெளிமை (ஆச்ரித பாரதந்திரியம்) முதலிய தன்மைகளை விரித்துக் கூறும் வேதாந்த நூல்கள், ஆழ்வார் ஆசார்யர்களின் அருளிச் செயல்கள் முதலிய வற்றிற் காணப்பெறும் கருத்துக்கள் பொதிந்துள்ள இத் தோத்திரப் பகுதி மீண்டும் மீண்டும் படித்துச் சுவைத்தற்குரியதாம்.

சரபங்கர் பிரமலோகம் எய்தியதாகவும், பிரமன் நல்வரவு கூறி அழைத்துச் சென்றதாகவும் முதனூலை மேலோட்டமாகப் பார்ப்பவர் கூறுதற் கிடமிருப்பினும் வியாக்கியான ஆசிரியர்களின் ஆராய்ச்சிக் குறிப்புக்களை ஆராய்ந்து தேர்ந்து, முனிவர் பரமபதத்தை விரும்பியே தவம் செய்தார் என்பதையும் அவர் சென்றடைந்ததும் அஃதே என்பதையும் திறம்பட விளக்கமாக நம் கவிச்சக்கரவர்த்தி அமைத் தமை பாராட்டுதற்குரியதாகும்.

---

# 2. சரபங்கன் பிறப்பு நீங்கு படலம்

இராமன் முதலியோர் சரபங்கமுனிவர் ஆச்சிரமத்தை அடைதல்

2678. குரவங் குவிகோங் கலர்கொம் பினெடு
☆ மிரவங் கணுகும் பொழுதெய் தினராற்
சரவங் கனிருந் துதவங் கருது
மரவங் கிளர்கோங் கொளிர்வா சவனம்.

குரவம் குவி கோங்கு அலர் கொம்பினெடும்
இரவு அங்கு அணுகும்பொழுது எய்தினர் ஆல்;
சரவங்கன் இருந்து தவம் கருதும்
மரவம் கிளர் கோங்கு ஒளிர் வாச வனம்.

பொ :—(இராம இலக்குவர்கள்) இரவுப்பொழுது அங்கு வந்தெய்தியபோது, குராமரத்தின் அரும்பும் கோங்குமரத்தின் குவிந்த அரும்பும் (கூந்தலின்கண்) அலர்ந்துள்ள பூங்கொம்பு போன்ற சீதையுடன் சரபங்க முனிவர் இருந்து தவம்புரிகின்ற, குங்குமமரம் ஓங்கியுள்ளதும் கோங்கு மரங்கள் திகழ்வதும் நறுமணம் பொருந்தியதுமாகிய ஆச்சிரமத்தை அடைந்தனர்.

கு :—முன் படலத்து இறுதிப் பாடலில், வினை முதலாகக் கூறப்பட்ட, வேலினர் என்ற சொல்லை வருவித்துப் பொருள் கூறப்பட்டது. சரபங்காச்சிரமம் இருந்த சோலையை அச் செய்யுளில் மொய்கொள் சோலை என்றாராகலின், மற்றையிடத்தை அணுகுமுன்னரே அச்சோலையில் இருள் எய்திற்று என்பார் இரவு அங்கு அணுகும்பொழுது என்றார். குரா அரும்பும் கோங்கு அரும்பும் ஒரே கொம்பில் அலர்ந்துள்ளது போல் விளங்கும் சீதை என்று இல்பொருளுவமம் அமையுமாறு கூறுதலும் ஒன்று. சரவங்கன்—சரபங்கன்; எதுகை நோக்கிய விகாரம். காமபாணத்தை வென்றவன் என்று பொருள். காமத்தை வென்றவன் எனவே, அதனடியாகத் தோன்றும் வெகுளி மயக்கங்களையும் வென்றவன் என்பது கூறாமலே பெறப்படும்; காமம் நிறைவேறாதொழியின் வெகுளியும், வெகுளி முற்றிய நிலையில் மயக்கமும் உண்டாவது பற்றி வெகுளி மயக்கங்களுக்குக் காமமே அடிப்படையாம் என்பவாகலின். சரம் என்பதால் ஐந்து என்ற எண்ணைக் கொண்டு ஐம்புலன்களை வென்றவன் என்றுரைப்பினுமாம். ஏனைமக்கள் கருத்துப் போலாது கடுந் தவம் புரியும் முனிவர் தம் கருத்து, செயற்படாதொழியா தாகலின்,

தவம் கருதும் என்பதற்குத் தவம் புரியும் என்று பொருள் வரையலாயிற்று. தவம் - பலபடியாகவும் மெய்யை வருத்தி மனத்தைப் பரம் பொருளிற் செலுத்தும் செயல். இராம இலக்குவர்கள், சரபங்கன் வதிந்து வரும் வனத்தை எய்திய செய்தி, மொய்கொள் சோலை முன்னினுர் என்று முற்பாடலில் குறிக்கப்பெற்றமையால், வாசவனம் என வனத்தைக் கூறினுரேனும் அதன் கண்ணுள்ள ஆச்சிரமத்தைக் கொள்ளுதலே பொருத்த முடைத்து. ஆல்: அசை. (1)

## இந்திரன் வருதல்

2679. செவ்வே லவர்சென் றனர்சே ரலுறு
மவ்வே லையினெய் தினனு யிரமாந்
தவ்வா திரவும் பொலிதா மரையின்
வெவ்வே றலர்கண் ணினன்விண் ணவர்கோன்.

செவ்வேலவர் சென்றனர், சேரல் உறும்
அவ்வேலையின் எய்தினன்—ஆயிரம் ஆம்
தவ்வாது இரவும் பொலி தாமரையின்
வெவ்வேறு அலர் கண்ணினன் விண்ணவர் கோன்.

பொ :—செம்மை பொருந்திய வேலினையுடைய இராம லட்சுமணர் (சரபங்காச்சிரமத்தைச்) சென்று அடைகின்ற அந்த வேளையில் ஆயிரமாகிய – இரவிலும் கூம்பாது விளங்கும் தாமரை மலர் போன்று தனித்தனியே பொலிகின்ற - கண்களையுடைய இந்திரன் வந்தான்.

கு :—செம்மை - பகைவர் குருதி தோய்தலாலாய செந்நிறம்; கூர்மை எனினுமாம். சென்றனர், முற்றெச்சம். ஒரு செயல் சிறந்த இரு பயன்களை விளைப்பின் சிறப்பு மிக்கதாகலின், சரபங்கரைக் கண்டு பிரமன் கட்டளையைக்கூற நிலவுலகத்தே வருதல், அவதார நிலையில் ஆதிதேவனைக் கண்டு களித்துப் போற்றுதலாகிய மற்றொரு பயனைத் தருவது பற்றி, காலந் தாழ்த்தாது வந்தெய்தினுன் என்பார் சேரலுறும் அவ்வேலையின் எய்தினன் என்றுர்.'தவ்வாது இரவும் பொலி தாமரையின்' என்பது இல் பொருளுவமம் தழுவியது. (2)

## இந்திரனை வருணித்தல் 2680—2690

2680. அன்னச் செலவிற் படிமே லயல்சூழ்
பொன்னிற் பொலிவா ரணிபூ ணொளிமேன்

மின்னிற் செறிகற் றைவிரிந் தனபோற்
பின்னிச் சுடரும் பிறழ்பே ரொளியான்.

அன்னச் செலவின் படிமேல் அயல் சூழ்,
பொன்னின் பொலிவார், அணி பூண் ஒளிமேல்,
மின்னின் செறி கற்றை விரிந்தன போல்,
பின்னிச் சுடரும் பிறழ் பேர் ஒளியான்.

பொ :—அன்னப் பறவையின் நடையை ஒத்த நடையினெடு நிலமிசைப் பக்கத்தே சூழ்ந்து வருகின்ற, பொன்னைப் போன்ற ஒளியுள்ள மங்கையரால் (தன் உடலில்) அணியப்பெற்ற அணிகலன்களின் ஒளிமீது, மின்னல்களின் நெருக்கமான தொகுதி பரவியது போல், தன் மேனியின் ஒளி கலந்து விளங்கும், மிகுதியான சிறந்த (தோற்றப்) பொலிவினை உடையவனும்;

கு :—இச்செய்யுள் முதல் பதினெரு செய்யுட்கள் ஒரு தொடராகி, பன்னிரண்டாவது செய்யுளில் நின்ருன் என்ற வினைகொண்டு முடியும். தன் உடலில் தெய்வ மகளிரால் அணியப்பட்ட அணிகலன்களின் ஒளிமீது, பரவி விளங்கும் உடலொளியுடையான் எனவே, அழகுபடுத்த வந்த அணிகளுக்கே அழகைக் கொடுக்கும் பேரொளி வாய்ந்தவன் எனச் சிறப்பித்துக் கூறியபடியாம். உடலும் அணிகளும் ஒன்றுக்கொன்று பொலிவைத் தருவனவாயிருந்தன என்பது கருத்து. "பார்வதியின் கழுத்தும் அதில் ஒளிரும் முத்துமாலையும் ஒன்றை யொன்று அழகுறச் செய்தலால், அலங்காரமாந் தன்மை அலங்கரிக்கப்பெறுந் தன்மை என்பன, இரண்டிற்கும் பொது வாயின" என்ற கருத்துள்ள குமாரசம்பவப் பகுதி இங்கு ஒப்பு நோக்கத்தகும். (3)

2681. வானிற் பொலிதோ கையர்கண் மலர்வான்
கானிற் படர்கட் களிவண் டொடுதார்
மேனித் திருநா ரதன்வீ ணையிசைத்
தேனிற் படியுஞ் செவிவண் டுடையான்.

வானில் பொலி தோகையர் கண் மலர் வான்
கானில் படர் கண் களி வண்டொடு, தார்
மேனித் திரு நாரதன் வீணை இசைத்
தேனில் படியும் செவி வண்டு உடையான்.

பொ :—வானுலகிற்றிகழும் மகளிரின் கண்களாகிய சிறந்த மலர்க் காட்டில் படியும் (தன்) கண்களாகிய களிக்கும் வண்டுகளையும், மாலை அணிந்த மேனியையும் திருவினையுமுடைய நாரதன் வீணையின் இசைத் தேனில் தோய்கின்ற செவிகளாகிய வண்டுகளையும் உடையவனும்;

கு :—இந்திரனுடைய கண்களும் செவிகளும் வண்டுகளாக உருவகிக்கப் பெற்றன. கண்களாகிய வண்டுகள் அரமகளிரின் கண்மலர்க் கானிற் சென்றதால் சிற்றின்ப விளைவும், நாரதனின் தெய்வப் பாடல்களாகிய தேனில் செவிவண்டு படிவதால் பேரின்ப விளைவும் ஒருங்கே தோன்றின என்க. சூழ்ந்துள்ள பல மகளிரின் கண்களையும் ஒரே சமயத்தில் கண்டு களிக்கும் வாய்ப்பு ஆயிரம் கண் களைப் பெற்றவனுக்குச் சிறப்பாயமைந்தமை புலப்படுத்தியவாறு.
(4)

2682. அனையின் றுறையைம் பதொடைம் பதுநூல்
வினையின் றொகைவேள் விநிரப் பியமா
முனைவன் முதுதே வரின்மூ வரலார்
புனையும் முடிதுன் றுபொலங் கழலான்.

அனையின் துறை ஐம்பதொடு ஐம்பது நூல்
வினையின் தொகை வேள்வி நிரப்பிய மா
முனைவன், முது தேவரின் மூவர் அலார்
புனையும் முடி துன்று பொலம் கழலான்.

பொ :—(வேள்வித்) தீயில், (வேத) நூலிற் கூறிய (உறுப்பாகிய) செயல்களின் தொகுதியுடன் நூறு யாகங்களையும் நிறைவேற்றிய சிறந்த தலைவனும், முதிய தேவருள் (பிரம விட்டுணு ருத்திரர்) மூவரல்லாத (மற்ற)வர் அணிந்த மகுடங்கள் (தலை பணியுங்கால்) பொருந்தும் பொற்கழலை உடையவனும்;

கு :—அனை - அனல், நெருப்பு. அனல் என்பது எதுகை நோக்கி அனைஎனத் திரிந்ததென்பர். நித்தியம், நைமித்திகம், காமியம் என்று மூவகைப் பிரிவுள்ள செயல்களுள், பயனைக் கருதி மேற்கொள்ளுதற் குரிய மூன்றுவதில், உறுப்பாக உள்ள செயல்களிலோ, முதற் செயலிலோ சிறிதேனும் தவறு நேர்ந்துழி அத்தவறு முழுச் செயலையும் சாருமாதலின், பயன் கிட்டாது என்பது மறைப்பொருளை ஆய்ந்து தேரும் மீமாஞ்சை நூலின் முடிவு; ஆதலின் யாண்டும் ஒரு சிறிதும் குறை நேராவாறு மிக்க விழிப்புடன் மிக அரிதின் நூறு யாகங்களைச் செய்து முடித்தமை மாமுனைவனாதற்குக் காரணமாயிற்று.

மாமுனைவனுயினமை, முதுதேவரின்...கழலானுதற்குக் காரணமாக உள்ளது. சதமகன், சதக்கிரது என்பவை போன்ற பெயர்கள் நூறு யாகங்களைச் செய்து முடித்தவன் என்று காரணப் பெயர்களாக இந்திரனுக்கு அமைந்தவையாம். (5)

2683. செம்மா மலரா ணிகர்தே வியொடு
முன்மா மதவெண் ணிறமுன் னுயர்தாள்
வெம்மா மிசையான் விரிவெள் ளிவிளங்
கம்மா மலையண் ணலையே யனையான்.

செம் மா மலராள் நிகர் தேவியொடும்
மும் மா மத வெண் நிறம் முன் உயர் தாள்
வெம் மா மிசையான், விரி வெள்ளி விளங்கு
அம் மா மலை அண்ணலையே அனையான்.

பொ :—சிவந்த பெரிய (தாமரை) மலரிலிருக்கும் திருமகளை யொத்த (சசீ) தேவியுடன், மிக்க மூன்று மதப் பெருக்கையும் வெண் மையான நிறத்தையும் உயர்ந்துள்ள முன்னங் கால்களையும் வெப்பத் தையுமுடைய (ஐராவதமென்ற) யானைமீதுள்ளவனும், ஒளிவீசும் வெள்ளிமயமாக விளங்கும் அப் பெரிய மலையிலுள்ள (பார்வதியொடு கூடிய) பெருமானையே போன்றவனும்;

கு :—இந்திராணியுடன் சேர்ந்த இந்திரன் என்றதற்கேற்ப, உபமானப் பகுதியில் பார்வதியொடுகூடிய (சிவபெருமான்) என வருவித்துரைக்கலாயிற்று. ஐராவதத்தின்மீது இந்திராணியுடன் வீற்றிருக்கும் இந்திரன், கயிலையங்கிரியில் உமையொடு அமர்ந் திருக்கும் சிவபிரான் போன்று விளங்கினான் என்க. மும்மதம்—காது, கன்னம், பீசம் என்பவற்றில் தோன்றும் மதநீர்; காது, துதிக்கை, பீசம் என்பவற்றில் தோன்றுவதென்பாரும் உளர். மதம் தோன்றிய யானையின் உடல் வெப்பமுற்றிருக்குமாதலின் வெம் மா என்றார். வெம்மை – வெப்பம்; அழகு, கொடுமை எனினுமாம். (6)

2684. தானின் றயனின் றுளிர்தண் கதிரோன்
யானின் றதெனென் றுளியெஞ் சிடமா
வானின் றபெரும் பதம்வந் துருவாய்
மேனின் றெனநின் றுளிர்வெண் குடையான்.

தான் நின்று, அயல் நின்று ஒளிர் தண் கதிரோன்,
'யான் நின்றது என் ?' என்று ஒளி எஞ்சிட, மா
வான் நின்ற பெரும் பதம் வந்து உருவாய்
மேல் நின்றென நின்று ஒளிர் வெண்குடையான்.

பொ :—அருகில் நின்று ஒளிவீசும் குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன், '(குடையாகிய) தான் நிற்பவும் இங்கு யான் (ஒளிவீசி) நிற்பது என்ன பயனுடைத்து?' என்று (வருந்தி) ஒளி குன்றும்படியும் மேலே பொருந்திய மிகப் பெரிய இடமான பரமபதம் (குடை) உருவுடன் வந்து (இந்திரன் முடியின்மேல்) பொருந்தி யிருந்ததென்னுமாறும் நிலைத்து விளங்கும் வெண்கொற்றக் குடையை உடையவனும் ;

கு :—அயல் நின்று ஒளிர் தண் கதிரோன் 'தான் நின்று, யான் நின்றது என்' என்று ஒளி எஞ்சிட, நின்று ஒளிர் வெண்குடை எனவும், மாவான் நின்ற பெரும்பதம் வந்து உருவாய் மேல் நின் றென நின்று ஒளிர் வெண்குடை எனவும் இயையும். தான் என்றது குடையினை. நிற்ப என்றது நின்று எனத் திரிந்து நின்றது. (திருக் குறள் 11–பரிமேலழகருரை). சந்திரனிடத்துக் களங்கமிருத்தலின், அதன் ஒளியைவிட, தூய வெண்ணிறமுள்ள குடையினொளி சிறப்புற் றிருக்குமாதலின், சந்திரன் அதைக் கண்டு நாணி வருந்தினன் என்க. சத்துவ முதலிய மூன்று குணங்களுள் பின்னைய இரண்டின் தொடர்பற்ற பரமபதம் மிகத்தூய வெண்மையுள்ளதாயிருக்குமாத லாலும், வான் நின்ற மா பெரும்பதம் என்ற தொடரின் சிறப்பாலும் பெரும்பதமென்பது வைகுந்தத்தைக் குறித்ததென்க. தனித்த சத்துவகுணமுடைமை 'குணம் வேறுபடா' (2697) என்று பின்னர்க் கூறுமாற்றானும் உணரலாம். பரமபதமே குடையுருவுடன் வந்துளதோ என்னும்படி ஒளிர்வது என்பது தற்குறிப் பேற்றந் தழுவியது. (7)

2685. திசைகட் டியமால் கரிதெட் டமதப்
பசைகட் டினகிட் டினபற் பலபோர்
விசைகட் டழிதா னவர்விட் டகல்பே
ரிசைகட் டியவொத் திவர்சா மரையான்.

திசை கட்டிய மால் கரி தெட்ட மதப்
பசை கட்டின கிட்டின பற்பல போர்,
விசை கட்டு அழி தானவர் விட்டு அகல் பேர்
இசை கட்டிய ஒத்து, இவர் சாமரையான்.

பொ :—திசைகளில் கட்டப்பட்ட பெரிய யானைகளின் முதிர்ந்த மதநீர்ப் பசையொடு தொடர்புடையவாக நெருங்கிய பற்பல போர்களில், விரைவும் திண்மையும் அழிந்த அசுரர்களை விட்டு அகன்ற மிகுந்த கீர்த்தியை (ச் சேர்த்து)க் கட்டியவை போன்று விளங்கும் வெண்சாமரைகளை உடையவனும் ;

கு :—திசைகளின் எல்லைவரை அசுரர்களைத் துரத்தி நெருக்கிய போர் என்க. வெற்றி கொள்ளப்பட்டவர்க்குரியவை வென்றவனைச் சாரும் ஆதலின், வலிமை முதலியவற்றால் பெற்றுள்ள அசுரர்களின் கீர்த்திகளை, அவரை வென்ற இந்திரன் தனக்குரியவாக்கி, அவற்றை ஒருசேரத் தொகுத்துக் கட்டியவைபோல விளங்கும் சாமரை என்க. தானவர் – தனு என்பவளின் மைந்தர் ; தத்திதாந்தச் சொல். சமரம் என்ற வெண் கவரிமானுடைய வால்மயிர் தூய வெண்ணிறமுடையவாகலின், அவற்றாற் செய்யப்பெற்ற சாமரைகளை, கீர்த்தியை வெண்ணிறமுடையதாகக் கூறும் கவிமரபிற்கேற்ப இங்ஙனம் தற்குறிப்பேற்றமாகக் கூறினர். (8)

2686. தீர்விற் றிரிசெங் கதிர்தங் குவதோ
ரூருற் றதெனப் பொலியொண் முடியான்
போர்வித் தகனே மிபொறுத் தவன்மா
மார்விற் றிருவிற் பொலிமா லையினன்.

தீர்வு இல் திரி செம் கதிர் தங்குவது ஓர்
ஊர் உற்றது எனப் பொலி ஒள் முடியான் ;
போர் வித்தகன் நேமி பொறுத்தவன் மா
மார்வில் திருவின் பொலி மாலையினன்.

பொ :—தீர்தலின்றித் திரியும் செஞ்ஞாயிறு நிலையாகத் தங்குதற்கு ஒரு ஊரினைப் பெற்றது என்னுமாறு, விளங்கும் ஒள்ளிய கிரீடத்தையுடையவனும், போர்த்தொழிற்றேர்ச்சியுள்ளவனும், சக்கரப் படையேந்தியவனுடைய அகன்ற மார்பில் உள்ள திருமகள் போல் விளங்கும் மாலையை உடையவனும் ;

கு :—கிரீடத்திற்கு ஞாயிறு உவமை. எப்பொழுதும் திரியும் இயல்பினனாகிய கதிரவன், திரிதலின்றித் தங்கியிருக்கும் ஊரைப் பெற்று வந்துற்றதென என்று கூறியது இல் பொருளுவமம் தழுவி வந்ததாகும். போர்வித்தகனை நேமி பொறுத்தவன் எனத் திருமாலைச் சிறப்பித்தலுமொன்று. திருமாலின் மார்பில் திருமகள்

விளங்குமாறு இந்திரன் மார்பில் மாலை விளங்கிற்றென்க. மார்வு - மார்பு; எதுகை நோக்கி வந்த விகாரம். (9)

2687. செற்றிக் கதிரிற் பொலிசெம் மணியின்
கற்றைச் சுடர்விட் டெரிகஞ் சுகியான்
வெற்றித் திருவின் குளிர்வெண் ணகைபோற்
சுற்றிக் கிளருஞ் சுடர்தோள் வளையான்.

செற்றிக் கதிரின் பொலி செம் மணியின்
கற்றைச் சுடர் விட்டு எரி கஞ்சுகியான்
வெற்றித்திருவின் குளிர் வெண் நகை போல்
சுற்றிக் கிளரும் சுடர் தோள்வளையான்.

பொ :—செதுக்கப்பெற்று, சூரியனைப்போற் பிரகாசிக்கின்ற சிவந்த இரத்தினங்களுடைய ஒளித்தொகுதி வீசி விளங்கும் கவசத்தையுடையவனும்; வீரலட்சுமியின் குளிர்ந்த வெண்முறுவல் போல நாற்புறமும் ஒளிவீசும் தோள்வளையை உடையவனும்;

கு :—இரத்தினங்களைச் செதுக்கச் செதுக்க ஒளி மிகுமென்ப. வெற்றித்திரு வைகுமிடமாக மார்பையும் தோளையும் கூறுவது கவிமரபாதலின், தோள்வளையின் ஒளிக்குத் தோளில் தங்கிய திருவின் முறுவலை உவமையாக்கினர். செம்மணியின் சுடர்க்கற்றை என்றும், சுற்றிச் சுடர் கிளரும் என்றும் இயைத்துப் பொருள் கூறலாயிற்று. (10)

2688. பல்லா யிரமா மணிபா டமுறுந்
தொல்லா ரணிகால் சுடரின் றொகைதா
மெல்லா முடனா யெழலா லொருதன்
வில்லா லொளிர்மே கமெனப் பொலிவான்.

பல் ஆயிரம் மா மணி பாடம் உறும்
தொல் ஆர் அணி கால் சுடரின் தொகை தாம்
எல்லாம் உடனாய் எழலால், ஒரு தன்
வில்லால் ஒளிர் மேகம் எனப் பொலிவான்.

பொ :—பல ஆயிரக்கணக்கில் உள்ள சிறந்த இரத்தினங்கள் ஒளிரும் - தொன்மை மிக்க - அணிகலன்கள் வெளியிடும் கிரணங்களின் தொகுதி முழுவதும் ஒருமிக்க எழுவதால், தனது ஒப்பற்ற வில்லோடு பொலிவுறும் மேகம் போல் விளங்குபவனும்;

கு :—கருநிறமுள்ள தன் உடலில், பலவண்ண ஒளியை வீசும் இரத்திநாபரணங்களால் திகழும் இந்திரன், வானவில்லோடு கூடிய காளமேகம் போன்று பொலிவுற்றான் என்க. பாடம் – ஒளி. தாம்; அசை. தன்வில் – இந்திரதனு ; வானவில். (11)

**2689.** மானா வுலகந் தனின்மன் றல்பொருந்
தேனா றுநலஞ் செறிதொங் கலினான்
மீனோ டுகடுத் துயர்வென் றியவாம்
வானா டியர்கண் ணெனும்வா ளுடையான்.

மானா உலகந்தனில் மன்றல் பொரும்
தேன் நாறு நலம் செறி தொங்கலினான்
மீனோடு கடுத்து உயர் வென்றிய ஆம்
வான் நாடியர் கண் எனும் வாள் உடையான்.

பொ :—(ஒன்றோடொன்று) ஒத்திராத உலகங்களில் மணம் வீசுவதும் தேன் தோன்றியுள்ளதும் அழகு மிக்கதுமான மாலையை உடையவனும், மீனை யொத்துள்ளதும் சிறந்த வெற்றியை உடையதுமான தேவமகளிர் கண் போன்ற வாட்படையை உடையவனும் ;

கு :—இடவகையானும் வாழ்பவர் வேறுபாட்டானும் உலகங்கள், தம்முள் ஒவ்வாமை பற்றி மானாவுலகம் என்றார். மணம் வீசும் மாலை, தேன்நாறு மாலை, நலம் செறி மாலை என்க. நாறுதல் – தோன்றுதல்; ‘திருநாறு விளக்கத்து’(பதிற்றுப் 52.13.) உருவம், ஒளி, வருத்தற்றொழில் முதலியவை தேவமகளிர் கண்ணுக்கும் வாட்படைக்கும் பொதுத் தன்மைகளாம். தேவமகளிர், இந்திரன் மேனியழகைக் கண்டு களித்தலால், அவர்தம் கண்களாகிய வாள்களைத் தன் மேலுடையவன் என்றுரைப்பாருமுளர். (12)

**2690.** வெல்வா னசையால் விசையால் விடுநா
ளெல்வான் சுடர்மா லையிரா வணன்மே
னெல்வா லுமரு தநிறம் பிறழா
வல்வாய் மடியா வயிரப் படையான்.

வெல்வான் நசையால் விசையால் விடும்நாள்,
எல் வான் சுடர் மாலை இராவணன்மேல்,
நெல்வாலும் அருத நிறம் பிறழா
வல்வாய் மடியா வயிரப்படையான்.

பொ :—சூரியன் போன்ற மிக்க ஒளியுள்ள மாலையினையுடைய இராவணன் மீது, வெல்லுதற்கு விருப்பினால் விரைவுடன் ஏவிய போதும், நெல் முனையளவும் முறியாததும் வண்ணம் மாறுபடாததும் மடங்காத வலிய நுனியையுடையதுமான வச்சிராயுதத்தையுடையவனும்; (ஆகிய அவ்விந்திரன்,)

கு :—மிக்கவன்மை பொருந்திய இராவணன்மேல் விரைந்து வீசியபோதும் வாய் மடிதல் முதலிய எவ்வகை மாறுதலுமடையாத வலிய படையென்க. நெல் வால் என்பது மிகச் சிறிய அளவினைக் குறிப்பது. மடியா வல்வாய் என இயைக்க. மூன்றாம் பாடல் முதல் இப்பாட்டல் முடிய உள்ள பதினொரு பாடல்களில் இந்திரனைச் சிறப்பிக்க வந்த பேரொளியான், செவி வண்டுடையான்......வயிரப்படையான் என்ற அடைகளுக்கு, இரண்டாம் பாடலிற் கூறிய விண்ணவர் கோன் என்ற பெயர்ச் சொல்லை வருவித்து அடுத்த பாடலில் உள்ள நின்றான் என்பதனோடியைக்க. (13)

### முனிவர் இந்திரனை வினவுதல்

2691. நின்றா னெதிர்நின் றநெடுந் தவனுஞ்
சென்றா னெதிர்கொண் டுசிறப் பமையா
வென்றா னிவணெய் தியவா றெனலும்
பொன்றா தபொலங் கழலோன் புகலும்.

நின்றான்; எதிர் நின்ற நெடுந்தவனும்
சென்றான் எதிர்கொண்டு சிறப்பு அமையா,
'என் தான் இவண் எய்திய ஆறு?' எனலும்,
பொன்றாத பொலம் கழலோன் புகலும்.

பொ :—(சரபங்காச்சிரமத்திற்குச் சென்று) நின்றான். எதிரே நின்ற நெடிய தவமுடைய சரபங்கரும் (நின்ற இந்திரனைச்) சிறபபுப் பொருந்துமாறு எதிர்கொண்டு (அழைத்துச்) சென்றார். (பிறகு இந்திரனை நோக்கி, நீ) இங்கு வந்த காரணம் யாது? என்று கேட்டதும், அழியாத எழிலையுடைய வீரக்கழலின(னான இந்திர)ன் (பின்வருமாறு) கூறுவான்.

கு :—நின்றான் என்பதற்கு முற்பாடலிற் கூறியாங்கு விண்ணவர் கோன் என்பது எழுவாயாகும். முனிவர், தம்மை நோக்கிவரும் இந்திரனைச் சிறிது எதிர் சென்று இனிய முகத்துடன் இன்சொற் கூறி வரவேற்று அழைத்து வந்தார் என்பார் 'சென்றான்......சிறப்பமையா' என்றார். (14)

இந்திரன் மறுமொழி 2692—2694

2692. நின்ஞ லியனீ திநெடுந் தவமின்
றென்ஞ னும்விளம் பரிதென் றுணர்வா
னந்நான் முகனின் னேயழைத் தனஞல்
பொன்ஞர் சடைமா தவபோ துதியால்.

'நின்ஞல் இயல் நீதி நெடுந்தவம் இன்று
என்ஞனும் விளம்பரிது' என்று உணர்வான்
அந் நான்முகன் நின்னே அழைத்தனன் ஆல்,
பொன் ஆர் சடை மாதவ! போதுதி ஆல்.

பொ :—பொன்னிறம் பொருந்திய சடையுடைய மிக்க தவத்தோனே! அப்பிரமன், உன்ஞலியற்றப்பட்ட முறையான நெடுந் தவம் இற்றை நிலேயில், என்ஞலும் (இத்தன்மைத்தென்று அறுதியிட்டுக்) கூற இயலாது என்று உணர்ந்தவஞக, உன்னே (சத்திய லோகத்திற்கு வருமாறு) அழைத்தான். (நீ) வருக.

கு :—மறை பயில்வனவும் கலேமகள் நிலேத்துள்ளனவுமான நான்கு நாவினேயுடைய பிரமனும் உனது தவத்தின் சீர்மையை இயம்புதற்காற்ருதவன் எனவே ஏனேயோர் கூறுந்தரத்ததன்று உன் தவப்பெருமை என உணர்த்தியவாறு. ஆல் இரண்டும் அசை. (15)

2693. எந்தா யுலகியா வையுமெவ் வுயிருந்
தந்தா னுறையுந் நெறிதந் தனஞ
னந்தா தபெருந் தவநா டதுநீ
வந்தா யெனினின் னெதிரே வருவான்.

எந்தாய்! உலகு யாவையும் எவ்வுயிரும்
தந்தான் உறையும் நெறி தந்தனன் ஆல்
நந்தாத பெரும் தவ நாடு அது நீ
வந்தாய் எனின் நின் எதிரே வருவான்.

பொ :—எந்தையே! உலகனேத்தையும் (அங்குள்ள) எல்லா உயிரையும் படைத்தவ(ஞகிய நான்முக)ன் வதியும் இடத்தை (உனக்கு வாழ்விடமாக)க் கொடுத்தான். கெடுதியற்ற அந்தப் பெரிய தவ(த்தாலடைதற்குரிய) நாட்டிற்கு நீ வந்தால் (அவன்) உன் எதிரில் (அழைத்தற்கு) வருவான்.

கு :—தவ முதலியவற்ருல், தந்தைபோல் மதித்தற்குரியனுதல் பற்றி எந்தாய் என விளித்தான். பிரமலோகம் பெறலரிது என்று சிறப்பித்துக் கூறுவான் நந்தாத பெருந்தவநாடு என்ருன். நந்தாத பெருந்தவ! என்று முனிவரை விளித்ததாயும் கொள்வர். பிரமன் உன்னைச் சிறப்பாக எதிர்கொண்டழைப்பானென்பது கருத்து. வந்தாய்; காலவழுவமைதி. (16)

2694. எல்லா வுலகிற் குமுயர்ந் தமையான்
சொல்லா வகைநீ யுணர்தொன் மையையா
னல்லா ளுடனே நடநீ யெனலு
மல்லே னெனவா லறிவா னறைவான்.

எல்லா உலகிற்கும் உயர்ந்தமை, யான்
சொல்லா வகை நீ உணர் தொன்மையை; ஆல்
நல்லாளுடனே நட நீ எனலும்
அல்லேன் என வால் அறிவான் அறைவான்.

பொ :—(பிரமலோகம் ஏனைய) எல்லா உலகத்தினும் சிறந்திருத்தலை, யான் கூருவாறு நீ அறியும் வகையில் தொன்மை வாய்ந்துள்ளனை. (ஆதலால்) நீ நலமுடைய நின் மனைவியுடன், காலந் தாழ்த்தாது வருக என்று கூறிய அளவில் (யான் அங்குச் செல்ல விருப்புடையவன்) அல்லேன் என்று மெய்யுணர்வையுடையனுகிய சரபங்கன் (பின்வருமாறு) சொல்லுவான்.

கு :—பிரமலோகத்தின் சிறப்பை நான் கூருமலே உணரும் அறிவாற்றலுடையை ஆதலின் உடனே வருக! என்று இந்திரன் கூறியதும், முனிவன் மெய்யறிவு கொண்டு தெளிந்து தன் இசைவின்மையைப் பின் வருஞ் செய்யுளிற் கூறுமாறு கூறுவானுயினனென்க. (17)

சரபங்கரது மறுமொழி 2695—2697

2695. சொற்பொங் குபெரும் புகழோய் தொழின்மாய்
சிற்பங் களின்வீ வனசேர் குவெனே
வற்பங் கருதே னெனருந் தவமோ
கற்பம் பலசென் றதுகா ணுதியால்.

சொல் பொங்கு பெரும் புகழோய்! தொழில் மாய்
சிற்பங்களின் வீவன சேர்குவெனே?

அற்பம் கருதேன் என் அருந்தவமோ
கற்பம் பல சென்றது காணுதி ஆல்!

பொ :—(யாவராலும் பாராட்டிச்) சொல்லப்பட்டு விளங்கும் மிக்க புகழினையுடையோய்! (வண்ண முதலிய) வேலைப்பாடு (கால அளவில்) மாய்தற்குரிய சித்திரங்களைப்போல அழிதன்மாலையவற்றைச் சென்றடைவேனோ? (அடையேன்; ஏனெனில், யான்) அற்பமானதை(ப்பெற) விரும்பேன். செய்தற்கரிய என் தவமோ பலகற்ப காலத்தினைக் கடந்து சென்றுள்ளது. (இதனை நீ) அறிவாய்.

கு:—சிறந்த சிற்பியால் கண்கவர் வேலைப்பாடமையுமாறு முயன்று அமைக்கப்பெற்ற சிற்பங்கள் தொடக்கத்தில் சில காலம் வனப்புடன் தோற்றமளிப்பினும், நாளடைவில் அத்தொழிற்றிறமனைத்தும் நிலையாது அழிவதுபோல, பிரமலோக வாழ்வும் குறிப்பிட்ட சில காலம் சென்றதும் அழிவுற்று மீண்டும் பிறவியைப் பயப்பது உறுதியாகலின், அவ்வாழ்வை நான் விரும்பவில்லை; உயர்வுள்ளல் சிறந்ததாகலின், எல்லாவற்றினும் உயர்ந்த நாட்டைப் பெறக் கருதி, கருதியதைக் கருதியாங்கு செயற்படுத்திப் பல கற்பமாகத் தவமியற்றியுள்ளேன். பிரமலோக வாழ்வைவிடச் சிறந்த வீட்டுலக வாழ்விற்குரிய தவமன்றோ என்னால் இயற்றப்பட்டுள்ள தென்பது கருத்து.

45-ஆம் பிரதியில் இப்பாடலும் மேற்பாடலும் முறையே 19, 18-ஆம் பாடலாக வரையப்பட்டுள்ளன. (18)

**2696.** சொற்றுந் தரமன் றிதுசூழ் கழலாய்
பெற்றும் பெறுகில் லதொர்பெற் றியதே.
மற்றென் பலசொல் லிவண்வந் துதவ
முற்றும் பகரு னுமுடித் தனனால்.

சொற்றும் தரம் அன்று இது; சூழ் கழலாய்!
பெற்றும் பெறுகில்லது ஓர் பெற்றியதே;
மற்று என் பல சொல்: இவண் வந்து தவம்
முற்றும் பகல் தானும் முடித்தனன் ஆல்.

பொ :—கட்டிய கழலுடையவனே! (உன்னாற் சிறப்பித்துக் கூறப்பெறும் பிரமலோகம்) பெறப்படினும் பெறாததோடொத்த தன்மையதேயாம், (என்னும்) இச்செய்தி சிறப்பாக எடுத்துக் கூறும் தரத்ததன்று, வேறு பலபடியாகக் கூறுதல் என்ன பயனுடைத்து? இங்கு வந்து (யான் கருதிய வீட்டுலகை அளிக்கும் ஆற்றல் பொருந்திய) தவம் முற்றுப்பெறும் கால முழுதும் (தவஞ்செய்து) முடித்துள்ளேன்.

கு :—போர்த் தேர்ச்சி முதலியவற்ருல் வானுலகைப்பெற்ற உன் போன்ருர்க்குப் பிரம உலகம் உயர்ந்ததாகத் தோன்றுமல்லாது, தவ வன்மை பெற்ற என் போலியர்க்கு அற்பமாகவே தோன்றும். அன்ஞேர் சிறந்த வீட்டுலகையே கருதுவர் என்பான் சூழ்கழலாய் என விளித்து, யான். 'இவண் வந்து......முடித்தனன்' என்ருன். (19)

2697. சிறுகா லையிலா நிலையோ திரியா
குறுகா நெடுகா குணம்வே றுபடா
வுறுகால் கிளர்பூ தமெலா முகினு
மறுகா நெறியெய் துவென்வா னுடையாய்.

சிறு காலை இலா, நிலையோ திரியா,
குறுகா, நெடுகா, குணம் வேறுபடா
உறு கால் கிளர் பூதம் எலாம் உகினும்,
மறுகா நெறி எய்துவென்; வானுடையாய்!

பொ :—வானுலகை ஆள்பவனே! சிறிய கால எல்லை இல்லாததும், நிலையாய தன்மை மாறுபடாததும், சுருங்காததும், வளர்தலில்லாததும் (சத்துவ) குணம் மாருததும் விளங்கும் பூதங்கள் அனைத்தும் வலிய காற்றினுல் அழியும் பொழுதும் அழியாததுமான இடத்தை அடைவேன்.

கு :—வீட்டுலகின்கண் எஞ்ஞான்றும் ஆயிரக்கணக்கான கதிரவன் தோன்றினுற்போன்ற பேரொளி திகழுமாதலின், இரவு பகல் முதலிய சிறிய காலவரையறை இல்லை எனவும், வீடு பெற்றவர் இளமை முதுமை முதலிய பருவ மாறுபாடின்றி நிலைத்த யெளவனப் பருவத்தவராகவே இருத்தலின், நிலையோ திரியா எனவும் கூறினுன். (20)

## இராமன் முதலியோர் சரபங்காச்சிரமத்தினுள் நிகழ்ந்துள்ளதை ஆராய்தல்

2698. என்றின் னவிளம் பிடுமெல் லையின்வாய்
வன்றிண் சிலைவீ ரரும்வந் தணுகா
வொன்றுங் கிளரோ தையினு லுணர்வார்
நின்றென் னைகொலின் னதெனு நினைவார்.

என்று இன்ன விளம்பிடும் எல்லையின்வாய்,
வன் திண் சிலை வீரரும் வந்து அணுகா,
ஒன்றும் கிளர் ஓதையினல் உணர்வார்,
நின்று என்னை கொல் இன்னது ? என நினைவார்.

பொ :—என்று இவ்வார்த்தைகளைக் கூறுமளவில், வலிய திண்மையான வில்லையுடைய வீர(ரான இராம இலக்குவ)ரும் (அங்கு) வந்தணுகி, பொருந்தி ஓங்கிய ஓசையால் (அதன் காரணத்தை) உணர்பவராகி (தயங்கி) நின்று, இது யாதாயிருக்கும் என்று எண்ணுவார் (ஆயினர்).

கு:—வன்மையைச் சிலைக்கும், திண்மையை வீரர்க்கும் பொருந்து மாறு பொருள் கூறுவாருமுளர். ஒன்றுதல் - பொருந்துதல். (21)

சரபங்கரிடம் இந்திரன் வந்திருத்தலை உய்த்துணர்தல்

2699. கொம்பொத் தனநா லொளிர்கோள் வயிரக்
கம்பக் கரிநின் றதுகண் டனமா
லிம்பர்த் தலைமா தவர்பா லிவனு
மும்பர்க் கரசெய் தினனென் றுணரா.

கொம்பு ஒத்தன நால் ஒளிர் கோள் வயிரக்
கம்பக் கரி நின்றது கண்டனம் ஆல்,
'இம்பர்த்தலை மாதவர்பால் இவன் ஆம்
உம்பர்க்கு அரசு எய்தினன்' என்று உணரா.

பொ :—ஒளிர்தலைக் கொண்டவையும் வயிரக் கற்க(ள் பதித்த பூண்க)ளை யுடையனவும் (தம்முள் ஒன்றையொன்று) ஒத்துள்ளனவு மாகிய நான்கு தந்தங்களுள்ளதும் கட்டுத்தறியிற் கட்டப்பெறுவது மாய் நிற்கும் யானையைக் காண்கின்றேம். இவ்வுலகின்கண் சிறந்த தவத்தின (ரான சரபங்க)ரிடம் விண்ணவர்க் கரசனாகிய இவன் வந்துள்ளான் என்று தெளிந்து ;

கு :—இதுவும் அடுத்த இரு செய்யுள்களும் ஒரு தொடர். இந்திரனுக்கே உரியதான ஐராவதம் புறத்தே நிற்றல் கண்டு, அவன் ஆச்சிரமத்தினுள் இருத்தல்வேண்டும் என்று அநுமான அளவையால் உணர்ந்தனரென்க. கம்பம் - கட்டுத்தறி. இவன் : உலகறிசுட்டு. (22)

## இராமன் தனித்துச் சோலையுட் புகுதல்

**2700.** மானே யனையா ளொடுமைந் தனையப்
பூநேர் பொழிலின் புறனே நிறுவா
வானே றெனவா ளரியே றிதெனத்
தானே யவகன் பொழில்சா ருதலும்.

மானே அனையாளொடு மைந்தனை அப்
பூ நேர் பொழிலின் புறனே நிறுவா,
ஆன் ஏறு என ஆள் அரி ஏறு இது எனத்
தானே அவ் அகன் பொழில் சாருதலும்.

பொ :—மானையொத்த சீதையுடன் இலக்குவனை மலர் நிறைந்த அச்சோலையின் புறத்தே நிறுத்தி, 'இது இடபம்' என்னுமாறும் (இது) 'வலிய ஆண் சிங்கம்' என்னுமாறும் தான்மட்டும் அகன்ற அச்சோலையைச் சேர்ந்த அளவில் ;

கு :—நீண்ட கண்களும் வெருண்ட நோக்குமுடைமையால் மானேயனையாள் என்றார். பெருமிதத்துடனும் மிகுந்த வன்மை புலப்படுமாறும் நடத்தலும், பிற்புறம் நிகழ்வதை அடிக்கடி நோக்கிச் செல்லுதலும் பற்றி இடபம் எனவும் ஆண் சிங்கம் எனவும் சிறப்பித்தார். (23)

## இந்திரன் இராமனைக் காண்டல்

**2701.** கண்டா மவையா யிரமுங் கதுவக்
கண்டா மரைபோற் கருஞா யிறெனக்
கண்டா னிமையோ ரிறைகா சினியின்
கண்டா னருநான் மறையின் கனியை.

கண் தாம் அவை ஆயிரமும் கதுவக்
கண் தாமரை போல் கரு ஞாயிறு எனக்
கண்டான் இமையோர் இறை காசினியின்
கண் தான் அரும் நான்மறையின் கனியை.

பொ:—தேவர்க்குத் தலைவ(னான இந்திர)ன், (தன்) கண்களாகிய தாமரைக்குக் கரிய ஞாயிறு போன்றவனும், உணர்தற்கரிய நான்கு மறைக (ளாகிய மரங்க) ளின் கனி போன்றவனுமாகிய (திருமாலின் அவதாரமாகிய இராக) வனை இந்நிலவுலகின்கண் அந்த ஆயிரம் கண்களும் பொருந்துமாறு பார்த்தான்.

கு :—'கொம்பொத்தன' என்ற செய்யுளில் உள்ள 'உணரா' என்பதை முன் செய்யுளில் நிறுவா, சாருதலும் என்பவற்றொடியைத்து, இச்செய்யுளில் இமையோரிறை கண்டான் என்று பொருண் முடிவு செய்க. தோள் கண்டார் தோளே கண்டார் என்னும்படி இராமன் திருமேனியழகை முடிவுறக் காணவியலாத ஏனையோர் போலாது, தான் பெற்ற ஆயிரம் கண்களும் பயனுறும்படி திருவடிமுதல் திருமுடிவரை ஒருங்கே கண்டு இன்புற்றான் என்பார் கண்...கதுவக்...கண்டான் என்றார். அக்கண்கள் மகிழ்ச்சியால் மலர்ந்து நோக்கின என்பது தோன்ற, இராமனை ஞாயிருகவும் கண்களைத் தாமரையாகவும் குறித்தார். போல்: அசை. இராமன் திருமேனி கருமையாகவும் சூரியன் போன்ற பொலிவுடையதாகவுமிருந்தமை பற்றிக் 'கருஞாயிறு' என்று உவமித்தார். மறை யாவும் இறைவன் உவத்தற்குரிய கன்மவகைகளையும், அவன் திருவடி நிழலையடைதற்குரிய நெறி வகைகளையும், உணர்த்துவதால் எல்லாப் பொருளுக்கு முதற் பொருளான பரம்பொருளை உணர்த்துவதிலேயே கருத்துடையவாகலின் 'நான்மறையின் கனியை' என்றார். (24)

### இந்திரன் இராமனைத் தொழுதல்

**2702.** காணா மனநொந் துகவன் றனனா
லாணா தனையந் தணர்நா யகனை
நாணா ளும்வணங் கியநன் முடியாற்
றூணா கியதோள் கொடவற் றொழுவான்.

காணா மனம் நொந்து கவன்றனன் ஆல்,
ஆள் நாதனை அந்தணர் நாயகனை
நாள் நாளும் வணங்கிய நல் முடியால்,
தூண் ஆகிய தோள் கொடு அவற்றொழுவான்.

பொ :—(இராமனைக்) கண்டு மனம் புழுங்கி வருந்தினனாக, ஆளுதற்றொழிலுடையாருள் மேம்பட்ட(வனும்) சிறந்த தண்ணளியுடையோர் தலைவ(னுமான திருமாலி)னை நாடோறும் வணங்கி வந்த சிறந்த முடியாலும் தூண்போன்ற கைகளாலும் அவ்விராமனைத் தொழுதான்.

கு :—பரமபதத்திருந்த பரத்துவநிலையொடு அவதார நிலையில் மணிமுடி துறந்து சடைமுடியணிந்து கல்லும் முள்ளும் நிரம்பிய கான்வழியைக் காலாற் கடக்க நேர்ந்த எளிய நிலையைக் கணிசிக்க மனநொந்தனனென்க. தேவதேவனாதலின் திருமாலை, நாடோறும்

இந்திரன் முடிபணிந்து வணங்கியவ னென்றார். ஆதிநாதனை வணங்கியபடியால் நன்முடியால் எனச் சிறப்பித்தார். நீண்டு திரண்டு வலிவுடனிருத்தல் பற்றித் தூணுகிய தோள் என்றார். (25)

## இராமன் பெருமை பற்றிய கவிக்கூற்று

2703. துவசமார் தொல்லமருட் டுன்னுரைச் செற்றுஞ்
★ சுருதிப் பெருங்கடலின் சொற்பொருள் கற்பித்துந்
திவசமா நல்லறத்தின் செந்நெறியி னுய்த்துந்
திருவளித்தும் வீடளித்துஞ் சிங்காமைத் தங்கள்
கவசமா யாருயிராய்க் கண்ணுய்மெய்த் தவமாய்க்
கடையிலா ஞானமாய்க் காப்பானைக் காணு
வவசமாய்ச் சிந்தையழிந் தயலே நின்று
னறியாதான் போல வறிந்தவெலாஞ் சொல்வான்.

துவசம் ஆர் தொல் அமருள் துன்னுரைச் செற்றும்
சுருதிப் பெருங் கடலின் சொல் பொருள் கற்பித்தும்
திவசம் ஆம் நல் அறத்தின் செம் நெறியின் உய்த்தும்
திரு அளித்தும் வீடு அளித்தும் சிங்காமைத் தங்கள்
கவசமாய் ஆருயிராய்க் கண்ணுய் மெய்த் தவமாய்க்
கடை இலா ஞானமாய்க் காப்பானைக் காணு
அவசமாய்ச் சிந்தை அழிந்து அயலே நின்றுன்
அறியாதான் போல அறிந்த எலாம் சொல்வான்.

பொ:—கொடி நெருங்கிய தொன்மையான போரின்கண் பகைவரைத் தொலைத்தும், பெரிய கடல் போன்ற மறைகளின் சொல்லையும் பொருளையும் அறிவித்தும், நாடோறும் செய்தற்குரியதாகிய —நன்மை பயக்கும்—அறத்தின் செவ்விய வழியிற் செலுத்தியும், செல்வத்தை ஈந்தும், வீட்டினைப் பயந்தும், அழியாவாறு தங்களைக் கவசமாகவும் அரிய உயிராகவும், கல்வியறிவாகவும் உண்மைத் தவமாகவும் ஈறில்லாத (மெய்) அறிவாகவும் (இருந்து) காக்கின்ற (வனும் ஆகிய பரம்பொருளா யிருந்தும் கொண்டுள்ள வடிவத்திற்கேற்ப) அறியாதவன் போல் பக்கத்திலிருப்பவனைக் கண்டு, தன்வயமற்றுச் சிந்தை தளர்ந்து (அவனைப்பற்றித் தான்) அறிந்துகொண்டவற்றை முழுவதும் சொல்பவனுனன்.

கு:—பிரமனிடமிருந்து மறைகளைக் கவர்ந்து சென்ற மது, கைடவன் என்ற அரக்கர்களைப் போர் தொலைத்து மறைகளை மீட்டுக்

கொணர்ந்து அயக்கிரீவ தேவனைப் பிரமனுக்கு அவற்றை உபதேசித்தருளிய வரலாறு முதலடியிற் குறிக்கப் பெற்றதாம். 'நால்வேதப் பொருளையெல்லாம் பரிமுகமா யருளிய வெம்பரமன்' (பெரியதிரு. 7.8.2) என்றார் பெரியாரும். திவசமா நல்லறம் - நாடோறும் மேற்கொள்ளுதற்குரிய நித்தியகன்ம முதலியவை. காலந்தாழ்த்தல், தற்புகழ்ச்சி, வெகுளி முதலிய குற்றமின்றி நல்லறத்தைச் செய்வித்தென்க. இம்முறையில், இறைவன் மகிழ்ச்சியைத் தவிர வேறு பயனைக் கருதாது நல்லறங்களைச் செய்தார்க்கு மறுமையில் வீட்டின்பத்தை யளிக்குமவன், இம்மையில் வறுமை, பிணி முதலிய துன்பத்தை நீக்கிச் செல்வ முதலிய நன்மையையும் அளிக்கிறான் என்பது திருவளித்தும் வீடளித்தும் என்பதாற் கூறப்பட்டது. காப்பானை என்பதனைக் கவசமாய், ஆருயிராய்க் கடையிலா ஞானமாய் என்ற ஒவ்வொன்றோடும் இயைத்துப் பொருளுரைக்க. கண்ணுடையர் கற்றோர் என்பவாகலின், கல்வியைக் கண் என்றாராயிற்று. எனவே கண்ணாய் என்பதற்கு உலகியற் கல்வியறிவாய் எனவும், பின்னர், கடையிலா ஞானமாய் என்புழித் தத்துவ அறிவாய் எனவும் பொருள் வரையலாயிற்று. இறைவனுடைய பெருமைகளையே பேசுதற்கெழுந்த மறைகளாலும் உள்ளவாறு அறிந்து போற்றுதற்கரிய குணச்சிறப்புடையவனும் யோகியர்க்கும் புலப்படா அருமையுடையவனும், உலகனைத்தினுமுள்ளவற்றைப் பாகுபாட்டுடன் காட்சியளவையாலறியும் ஞானச் சுடராகியவனுமான பரம்பொருளாயிருந்தும் கொண்ட வேடத்துக்கியையச் சிற்றறிவுடையான்போல் அபிநயித்து நிற்பவனைக் கண்டதும் மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலிய மெய்ப்பாட்டுடன், தான் அவனைப்பற்றித் தெரிந்துகொண்ட அளவில் போற்றத் தொடங்கினான் என்க. (26)

## இந்திரன் இராமனைத் துதித்தல் 2704—2708

**2704.** தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற
சுடரே தொடக்கறுத்தோர் சுற்றமே பற்றி
நீந்த வரிய நெடுங்கருணைக் கெல்லா
நிலயமே வேத நெறிமுறையி னேடி
யாய்ந்த வுணர்வி னுணர்வே பகையா
லலைப்புண் டடியே மடிபோற்ற வந்நா
ளீந்த வரமுதவ வெய்தினையே யெந்தா
யிருநிலத்த வோநின் னிணையடித் தாமரைதாம்.

தோய்ந்தும் பொருள் அனைத்தும் தோயாது நின்ற
சுடரே! தொடக்கு அறுத்தோர் சுற்றமே! பற்றி,
நீந்த அரிய நெடுங் கருணைக்கு எல்லாம்
நிலயமே! வேதநெறி முறையின் நேடி
ஆய்ந்த உணர்வின் உணர்வே! பகையால்
அலைப்புண்டு அடியேம் அடிபோற்ற, அந்நாள்
ஈந்த வரம் உதவ எய்தினையே! எந்தாய்!
இரு நிலத்தவோ நின் இணை அடித் தாமரை? தாம்.

பொ :—எல்லாப் பொருளிலும் கலந்திருந்தும் கலவாது நிற்கும் ஒளியே! (உன்னையே சுற்றமாகப்) பற்றிக்கொண்டு (உடற்றொடர் புடையார்மாட்டுப்) பற்றை நீக்கிக் கொண்டாரின் உறவே! கரை காணுதற்கியலாத மிக்க கருணையனைத்திற்கும் உறைவிடமே! மறை (வகுத்த) வழியின் முறையிலே தேடி ஆராய்ந்து பெற்ற உணர்வு கொண்டு உணரத் தக்கவனே! அடியவர்களாகிய யாம் பகைவரால் நலியப்பட்டு, திருவடிகளை ஏத்த, அந்நாளில் (எங்களுக்குக்) கொடுத்த வரத்தின்படி உதவிபுரிய (பரமபதத்தை விட்டு நிலவுலகத்துக்கு) வந்தருளினையே! எந்தையே! உன் தாமரை போன்ற இரு திருவடிகளும், கரிய அஞ்ஞானமிக்க நிலவுலகத்துப் பொருந்தத் தக்கனவோ?

கு:—தோய்ந்தும் தோயாது நிற்றலாவது:—உலகிலுள்ள பொருளனைத்திலும் கலந்துறைந்தும், அப்பொருள்களின் குற்ற நற்றங்கள் தன்கட் சாராது சுயவொளியுடன் திகழ்ந்திருத்தல். ஏதேனுமொன்றைப் பற்றியிருக்கும் இயல்புள்ள மனத்தை இறைவனைப் பற்றுமாறு செய்தலால் உலகில் தொடக்கு அறுத்ததென்க. "பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு" (குறள் 350) என்பது ஒப்புநோக்கத்தகும். இறைவனுடைய கருணை முதலிய கல்யாண குணங்கள் அவனை விட்டு நீங்காது எப்போதும் அவனிடம் நிலைத்துள்ளவை யாகலின் 'நீந்தவரிய' என்றார். நீந்துதல்-நீந்திக் கரையடைதல். இறைவனுடைய நிலை, அவனை யடைதற்குரிய நெறி முதலியவற்றை வேதங்கள் உணர்த்துவதால், அவற்றிற் கூறிய நெறிமுறையின் ஆராய்ந்து பெற்ற தத்துவ உணர்வு கொண்டு அறியத்தகும் பரம்பொருளே என்று போற்றினான். ஒப்புயர்வில்லா உயர்ந்த உலகத்தினின்றும் மிகத் தாழ்ந்த இடத்தே வந்து கருணையால் அவதரித்தான் என்பதைப் பாராட்டிப் பேசுமிடமாதலானும், 'இருள் தருமா ஞாலம்' என்று அறிவின்மை மலிந்துள்ளதாகக் கூறப்பட்டிருத்தலானும் இரு நிலம் என்பதற்குக் கரிய அஞ்ஞானமிக்க நிலம் எனக் கொள்ளலாயிற்று. மனிதப் பிறவியெடுத்தும் மனிதத்தன்மையைக் கடந்து பல செயல்களைப் புரிந்த

அளவிலும் 'அறிவிலிகள் மனிதப் பிறப்பை ஏற்ற என்னை அவமதிக்கின்றனர்' என்று கண்ணனும் கீதையில் மனம் நொந்து கூறுவது கருதத்தக்கது. உன் அடியவராகிய தேவர்களே நிலவுலகத்தினிழிவு தோன்ற, நிலந்தோயாதிருக்க, தேவதேவனை நீ இங்குப் பிறந்து ஆண்டுகள் பல கழிக்கத் துணிந்தனையே என இராமனது எளிமைக் குணச் சிறப்பைக் கண்டு வியந்தவாறு. (27)

**2705.** மேவா தவரில்லை மேவினரு மில்லை
வெளியோ டிருளில்லை மேல்கீழு மில்லை
மூவாமை யில்லை மூத்தமையு மில்லை
முதலிடையோ டீறில்லை முன்னொடு பின்னில்லை
தேவாவிங் கிவ்வோ நின் றொன்று நிலை யென்றாற்
சிலையேந்தி வந்தெம்மைச் சேவடிக ணோவக்
காவா தொழியிற் பழிபெரிதோ வன்றேற்
கருங்கடலிற் கண்வளராய் கைம்மாறு முண்டோ.

மேவாதவர் இல்லை, மேவினரும் இல்லை,
வெளியோடு இருள் இல்லை, மேல் கீழும் இல்லை,
மூவாமை இல்லை, மூத்தமையும் இல்லை,
முதல் இடையோடு ஈறு இல்லை, முன்னொடு பின் இல்லை,
தேவா இங்கு இவ்வோ நின் தொன்று நிலை என்றால்,
சிலை ஏந்தி வந்து எம்மைச் சேவடிகள் நோவக்
காவாது ஒழியின் பழி பெரிதோ அன்றேல்
கருங் கடலில் கண்வளராய்! கைம்மாறும் உண்டோ?

பொ:—பெரிய கடலிடை அறிதுயில் கொள்ளும் தேவனே! (உனக்குப்) பகைவர் இல்லை, நண்பரும் இல்லை, (உன் உலகத்தில் சூரிய சந்திரர்களின் தோற்ற மறைவு காரணமான) ஒளியும் இருளும் இல்லை, (உன் திருமேனி எங்கும் நிறைந்து வியாபித்துளதால் அதற்கு) மேற்புறமும் கீழ்ப்புறமும் இல்லை, (உனக்கு) இளமையுமில்லை; முதுமையுமில்லை; முதலும் இடையும் இறுதியும் இல்லை; முன்னும் பின்னும் இல்லை. உனது (அவதாரத்துக்கு முந்திய) பழைய நிலை இதுவாயின், வில்லெடுத்து, சிவந்த திருவடிகள் நோகும்படி வந்து எங்களைக் காக்காமற் போனால் (உனக்கு எய்தும்) பழி பெரியதாமோ? அல்லது (எங்களைப் புரத்தலால் நீ பெறும்) எதிருதவியும் உண்டோ?

கு:—எவர்பாலும் விருப்பும் வெறுப்புமின்றி நடுநிலையுடன் சான்ருக நின்றிருப்பவனுதலின், இறைவனுக்கு மேவாதவர் மேவினர்கள் இல்லை என்க. இறைவன், பொருளனைத்தையும் ஒருங்கே காட்சியளவையால் எப்பொழுதும் தானுகவே அறிபவனுகை லின், அவ்ன் பொருளைக் காண்பதற்குக் கருவியாக ஒளியும், தடை யாக இருளும் இருப்பதில்லை என்ற கருத்துடன் வெளியோடிரு ளில்லை என்று கூறினதாகவும் கொள்ளலாம். நித்தியமாக இருப்ப வனுதலின், அவனுக்கு முன்னுள்ளதும் பின்னுள்ளதும் இல்லை என்ருன். எங்கும் நிறைந்துள்ளமையின் முற்புறமும் பிற்புறமும் இல்லை என்பாரும் உளர். தொன்று நிலை – பழைய நிலை பரமபதத் துள்ள நிலை; இறைநிலை. பரற்கற்களும் முட்களும் நிறைந்த கான்வழி நடக்கும் செந்தாமரைத் திருவடிகள் துன்புறும் என்று கொண்டு சேவடிகளேவை என்றது, பேரன்பு மிகுதியாற் கூறியவாறு. அடியார்கள் இறைவனுக்குப் பல்லாண்டு பாடுதல் முதலிய செயலும் இக்கருத்துப் பற்றியதேயாகும். இழிகுணமும், அடைதற்குரிய பேறுமில்லாதவனென்பார் பழி பெரிதோ? கைம்மாறுமுண்டோ? என்ருர். இழிகுணத்துக்கு எதிர்த்தட்டான கல்யாணகுணமுடைமை, அடைதற்குரிய எல்லா நற்பேற்றினையும் பெற்றமை என்ற தன்மைகள் இதனுல் புலப்படுத்தியவாறு. எனவே, அடியவர்கள் திறத்துப் பேரருள் காரணமாகவே உனது அவதாரமென்று போற்றினுனயிற்று. (28)

**2706.** நாழி நவைதீ ருலகெலா மாக
நளினத்து நீதந்த நான்முகனுர் தாமே
யூழி பலபலவு நின்றளந்தா லொன்று
முலவாப் பெருங்குணத்த வுத்தமனே மேனுட்
டாழி தரையாகத் தண்டயிர் நீராகத்
தடவரையே மத்தாகத் தாமரைக்கை நோவ
வாழி கடைந்தமுத மெங்களுக்கே யீந்தா
யவுணர்கடா நின்னடிமை யல்லாமை யுண்டோ.

நாழி நவை தீர் உலகு எலாம் ஆக,
நளினத்து நீ தந்த நான்முகனுர் தாமே,
ஊழி பல பலவும் நின்று அளந்தால், ஒன்றும்
உலவாப் பெருங்குணத்த உத்தமனே! மேல் நாள்,

தாழி தரை ஆகத் தண் தயிர் நீர் ஆகத்
தடவரையே மத்து ஆகத் தாமரைக்கை நோவ,
ஆழி கடைந்து அமுதம் எங்களுக்கே ஈந்தாய்;
அவுணர்கள்தாம் நின் அடிமை அல்லாமை உண்டோ?

பொ :—'நீ (உன் திருவுந்தித்) தாமரையில் தோற்றுவித்த பிரம தேவன்தானும், உலகனைத்தையும் குற்ற நீங்கிய அளவுகருவியாகக் கொண்டு பற்பல கற்பகால முழுதும் தொடர்ந்து அளந்தாலும், (நின் கணக்கற்ற குணங்களுள்) ஒரு குணமும் (அளவிட்டு) முடியாத மிக்க குணமுடைய மேலோனே! முற்காலத்தில் நிலம் (தயிர்த்) தாழியாகவும் தண்ணீர் தயிராகவும் பெரிய மலையே மத்தாகவும் (செய்து) தாமரை மலர்போன்ற (உன்) கை நோகுமாறு கடலைக் கடைந்து (அதினின்றும் தோன்றிய) அமுதத்தை எங்களுக்கே கொடுத்தாய்; அசுரர் உன் அடியராகாமை உளதோ?'

கு :—எல்லா உலகங்களையும் சராசரப் பொருள்களுடன் படைக்கும் ஆற்றல் கொண்ட நான்முகனும், ஒரு குணத்தையேனும் கணக்கிட்டறிய மாட்டாதவன் என்னும்படி, அவ்வாறான அளவற்ற பல குணங்களையுடையவனென்பார் 'ஒன்றும் உலவாப் பெருங்குணத்த' உத்தமன் என்றார். 'தாமரைக்கைநோவ' என்பதற்கு, முன் செய்யுளிற் 'சேவடிகள் நோவ' என்றவிடத்துக் கூறியாங்குக் கருத்துரைக்க. இறைவனுக்குப் பகை நட்புக்கள் இல்லையாயினும், நல்லோருக்கு அருளுதலும், தீய கருத்துக் கொண்டவரைத் தண்டித்தலும் இறைமையியல்பாதற்கேற்ப, வஞ்சக் கருத்துக் கொண்ட அசுரர்களை வஞ்சித்துத் தேவருக்கே அமுதளித்தானெனக் கொள்ளுதல் வேண்டும். (29)

**2707.** ஒன்றாகி மூலத் துருவம் பலவாகி
யுணர்வு முயிரும் பிறிதாகி யூழி
சென்று சறுங்காலத் தந்நிலைய தாகித்
திறத்துலகந் தானாகிச் செஞ்செவே நின்ற
நன்றாய ஞானத் தனிக்கொழுந்தே நங்க
ணவைதீர்க்கு நாயகமே நல்வினையே நோக்கி
நின்றாரைக் காத்தி யயலோரைக் காய்தி
நிலையில்லாத் தீவினையு நீதந்த தன்றே.

'ஒன்று ஆகி மூலத்து உருவம் பல ஆகி
உணர்வும் உயிரும் பிறிது ஆகி ஊழி
சென்று ஆசு அறும் காலத்து அந்நிலையது ஆகித்
திறத்து உலகம் தான் ஆகிச் செஞ்செவே நின்ற
நன்று ஆய ஞானத் தனிக்கொழுந்தே! நங்கள்
நவை தீர்க்கும் நாயகமே நல்வினையே நோக்கி
நின்றாரைக் காத்தி அயலோரைக் காய்தி
நிலை இல்லாத் தீவினையும் நீ தந்தது அன்றே?'

பொ :—'முதலில் ஒன்றாக இருந்து, (பின்பு) பல வடிவங்களாகி (அவ்வடிவங்களில்) அறிவும் உயிரும் வெவ்வேறாகி, பலகாலம் கடந்து முடிவுறுங்காலத்து, அந்த (முதல்) நிலையிலுள்ளவாறாகி, (மீண்டும் படைக்குங்கால்) பலவகைப்பட்ட உலகமாகி, மிகவும் செம்மையாய் நின்ற நல்ல அறிவின் ஒப்பற்ற கொழுந்தே! எங்கள் குறையினைப் போக்கும் தலைவனே! நற்கருமங்களையே கருதி நிற்ப வரைக் காக்கின்றாய்; (அவ்வாறன்றித் தீய செயல்களை நோக்கும்) மற்றவர்களை அழிக்கின்றாய்; நிலைத்தல் அற்ற தீச்செயலும் நீ படைத்ததன்றோ?'

கு :—படைப்புக்கு முன்னைய நிலையில், அண்டங்களையும் அவற்று ளடங்கிய பொருளனைத்தையும் தன்னகத்தே கொண்டு தனித்திருந்த நிலை, 'ஒன்றாகி மூலத்து' என்பதாலும், படைத்தற்றொழிலை மேற் கொள்ளுநிலையில் பல வடிவங்களாயும் அந்த ஒவ்வொரு வடிவங் களிலும் ஒன்றையொன்று ஒத்திராத அறிவாகவும் உயிராகவும் நின்று பலகாலம் உலகங்கள் இயங்குநிலை, 'உருவம்......பிறிதாகி' என்பதாலும், இங்ஙனமே மீண்டு மீண்டும் பிரளய நிலையும் படைக்கு நிலையும் மாறி மாறி வருவதென்பது, 'ஆசறும்......தானாகி' என்ற பகுதியாலும் உணர்த்தப் பெறுகின்றன. செம்மையாய் நின்ற நல்ல ஞானம் – ஐயம் திரிபு முதலிய குற்றமற்ற தூய அறிவு. தருமப் பற்றுடையார் நல்வினையையும், ஏனையோர் தீவினையையும் மேற் கொள்ளுதலால், அறவோரைக் காத்தலும் மற்றவரை யழித்தலும் இறைவனது இயல்பாம். இருவினைகளையும் நீயே படைத்திருக்க முன்னதை மேற்கொண்டார் காக்கப்படுதலும் பின்னதை மேற் கொண்டார் அழிக்கப்படுதலும் எங்ஙனம்? என்று புகழாப் புகழ்ச்சி யால், அறவோரைக் காத்தல் என்ற பண்பினைப் போற்றியவாறு.
(30)

2708. வல்லே வரம்பில்லாத மாயவினை தன்னுன்
மயங்கினரோ டெய்தி மதிமயங்கி மேனு
ளல்லே யிறையவனீ யாதியெனப் பேதுற்
றலமருவே முன்னே யறப்பய னுண்டாக
வெல்லே வலயங்க ணின்னுழையென் றந்நா
ளெரியோனைத் தீண்டி யெழுவ ரெனநின்ற
தொல்லே முதன்முனிவர் சூளுற்ற போதே
தொகைநின்றவையந் துடைத்திலையோ வெந்தாய்.

'வல்லே வரம்பு இல்லாத மாயவினைதன்னுல்
மயங்கினரோடு எய்தி, மதிமயங்கி, மேல் நாள்,
அல்லே இறையவன் நீ ஆதி எனப் பேதுற்று
அலமருவேம், முன்னே அறப்பயன் உண்டாக,
'எல்லே வலயங்கள் நின்னுழை' என்று, அந்நாள்,
எரியோனைத் தீண்டி எழுவர் என நின்ற
தொல்லே முதல் முனிவர் சூளுற்றபோதே
தொகை நின்ற ஐயம் துடைத்திலையோ ? எந்தாய்!'

பொ :—'எந்தையே! முன்னொரு காலத்தில், வலிமை வாய்ந்த எல்லேயற்ற மாய வினையினுல், நீயே முதற்கடவுள் என்றும், (நீ முதற்கடவுள்) அல்லே என்றும் (இரு பிரிவினராக) வேறுபட்டு இரண்டனுள் ஒன்றைத் தெளியாதவரோடு (சேர்ந்து) அறிவு கலங்கி வந்து தடுமாறுகின்ற எங்கள் முன்னர், பண்டைய நல்வினைப்பயன் தோன்ற, அக்காலத்து, 'எல்லேகளுடன்கூடிய உலகங்கள் நின்னிடத்தே உள்ளன' என்று எழுவர் என்று நிலே பெற்ற, பழைய, முதன்மை வாய்ந்த முனிவர், தீயைத் தொட்டுச் சூளுறவு செய்த பொழுதே (முன்னர்) தொக்குநின்ற ஐயுறவினைத் தீர்த்தனையல்லேயோ ?

கு :—ஒரு சாரார், திருமால் ஆதிதேவன் என்றும் மற்றொரு சாரார் அவன் ஆதிதேவனல்லன் என்றும் கூற, இரு வாதத்தையுஞ் செவியுற்றூர்க்கு ஆதிதேவனே அல்லனே என்று ஐயம் நிகழும்; தெளிந்த அறிவு உண்டாதற்குப் பண்டைய நல்வினை காரணமா மென்பது புலப்படுத்தியவாறு. தம் சித்தாந்தை உறுதிப்படுத்தற்குக் கைகளே உயர்த்திக்கொண்டும், நீர், தீ முதலியவற்றைத் தொட்டுக் கொண்டும் சூளுறவு செய்தல் பெரியோர் இயல்பு. இப்பாடலிற் குறிப்பிட்ட வரலாற்றினைப் பலரும் பலபடியாக விரித்துரைப்பர். வல்லே - வலிமை. (31)

## இந்திரன் தன்னுலகு சென்றமை

2709. இன்னன பலநினை ந் தேத்தின னியம்பாத்
★ துன்னுத லிடையுள தெனநனி துணிவான்
றன்னிகர் முனிவனைத் தரவிடை யென்னுப்
பொன்னெளிர் நெடுமுடிப் புரந்தரன் போனன்.

இன்னன பல நினைந்து ஏத்தினன் இயம்பாத்
'துன்னுதல் இடை உளது' என நனி துணிவான்,
தன் நிகர் முனிவனைத் 'தர விடை' என்னுப்
பொன் ஒளிர் நெடு முடிப் புரந்தரன் போனன்.

பொ:—அழகியதும் ஒளிர்வதுமான நீண்ட கிரீடத்தையுடைய இந்திரன், இன்னோன்ன பலவற்றை (மனத்திற்) கருதி (வாயினுற்) கூறிப் புகழ்ந்து, 'இடைக்காலத்தே பொருந்துவதொரு நிகழ்ச்சி உள்ளது' என்று நன்கு துணிந்து, தன்னை யொத்த முனிவனிடம் 'விடை தருக' எனக் கூறிச் சென்ருன்.

கு:—கருதுதல் இயம்புதல் என்ற மனமொழிகளின் செயல்கள் உபலக்கணத்தால் மெய்யின் செயலாகிய பணிதலேயுங் குறிப்பன வாகக் கொண்டு, மனமொழி மெய்களாற் போற்றினனென்க. முனிவன் தவப்பயனுகக் கருதிய வீட்டுலகத் தலைவனுன இராமன் நேரில் வந்திருத்தல் காரணமாகச் சிறந்த நிகழ்ச்சியொன்று உண்டாம் என்று துணிந்து, தான் இந்நிலையில் அங்கு இடையூருக இருத்தல் வேண்டாம் என்ற எண்ணத்துடன் இந்திரன் விடை பெற்றுச் சென்ருன் என்பது கருத்து. ஏத்தினன், துணிவான்: முற்றெச்சங்கள். (32)

## முனிவன் இராமனை எதிர்சென்றழைத்துச் சிறப்பித்தல்

2710. போனவ னகநிலே புலமையி னுணர்வான்
வானவர் தலைவனை வரவெதிர் கொண்டா
னுனவ னடிதொழ வருள்வர வழுதான்
ருனுடை யிடவகை தழுவின னுழைவான்.

போனவன் அகநிலை புலமையின் உணர்வான்,
வானவர் தலைவனை வர எதிர்கொண்டான் ;
ஆனவன் அடி தொழ, அருள்வர அழுதான்
தான் உடை இடவகை தழுவினன் நுழைவான்.

பொ :—(சரபங்கன், தன்னிடம் விடைபெற்றுத் தேவலோகம்) சென்ற இந்திரனது மனநிலையை(த்தவவன்மையாலாய) அறிவானுணர்ந்து, நித்திய சூரிகள் தலைவ(னான திருமாலின் அவதாரமான இராம)னை, வரும்பொழுது எதிர்சென்றழைத்து, (அவ்வாறு அழைக்கப்பட்ட) இராமன், அடிபணிய, தான் உடைமையாக(ப் பெற) வகுத்துள்ள இடத்தை யெய்தப் போகின்றவனாக (இராமனை) அன்பு மிகத் தழுவி (மகிழ்ச்சி மேலீட்டால்) அழுதான்.

கு :—இடவகை நுழைவான் அருள்வரத் தழுவினன் அழுதான் என்று இயைக்க. இராமன் சரபங்கனைக் காண வருவதால், அவ்விருவரும் அளவளாவுதற்குத் தான் தடையாக இருத்தல் வேண்டா என்ற கருத்துடன் இந்திரன் சென்றான் என்பதை முனிவன் புலமையின் உணர்ந்தான் என்க. பரம்பொருளான இராமன் முனிவனைத் தேடிவர, முனிவன் எதிர் சென்றழைத்துத் தழுவும் இன்பத்தைப் பெற்றதால், இனி அவன் வீட்டின்பம் பெறுதல் உறுதி என்பார், 'தானுடை......நுழைவான்' என்றார். (33)

### இராமன் முதலிய மூவரும் சரபங்கன் ஆச்சிரமத்தையடைதல்

**2711.** ஏழையு மிளவலும் வருகென வினிதா
வாழிய வவரொடும் வந்தனன் மகிழ்வா
லூழியின் முதன்முனி யுறையுளை யணுக
வாழியி லறிதுயி லவனென மகிழ்வான்.

'ஏழையும் இளவலும் வருக' என, 'இனிதா
வாழிய' அவரொடும் வந்தனன் மகிழ்வால்
ஊழியின் முதல், முனி உறையுளை அணுக
ஆழியில் அறிதுயிலவன் என மகிழ்வான்.

பொ :—'இனிதே வாழ்க ! சீதையும் இலக்குவனும் வருக' என்று (முனிவன்) கூற, தொன்மை வாய்ந்த (திருமாலின் அவதாரமான இராக)வன் மகிழ்ச்சியுடன் அவர்களோடு வந்து, முனிவனது ஆச்சிரமத்தையடைய, (அவன் இராமனைத் திருப்பாற்) கடலில் யோக நித்திரை புரிபவனெனத் தெளிந்து மகிழ்வுற்றான்.

கு :—பெண் என்னும் பொருளைக் கூறும் ஏழை என்ற சொல் ஈண்டுச் சீதையை உணர்த்திற்று. சீதையையும் இலக்குவனையும் புறத்தே நிறுத்தித் தனியே இராமன் வந்தானாதலின், அவர்களையும் அழைத்து வருமாறு முனிவன் பணித்தானென்க. 'தத்துவ ஞானி என்பால் அன்பு நிறைந்தவன் : அவனிடம் யானும் அன்பு

பூண்டவன்' என்னும் பகவற்கீதைக் கருத்துக்கேற்ப, முனிவனைக் கிட்டியபோது பெருமகிழ்ச்சியுற்ருன் என்பார், வந்தனன் மகிழ்வால் என்ருர். பூதவுடலைத் துறந்தபின் மறுமையில் காணுதற்குரிய இறைவன், இம்மையிலேயே சரபங்கனை நாடி வந்தது பெறுதற்கரிய பேறும் என்ற கருத்தை, ஊழியின்...அணுக என்பதாற் பெற வைத்தார். 'புகலுறு விதியான் மேயினை' (2717) என்பதும் ஒப்பு நோக்கத் தகும். ஊழியின் முதல்-இராமன். 'ஊழி முதல்வ னுருவம் போல்' (திருப்பாவை 4). ஊழியின் முதல் முனி என இயைத்து, நெடுங்காலமாய்த் தவம் புரியும் முதல்முனி என்று கருத்துரைப் பாரும் உளர். முனிவனுறையுளை யெய்திய இராமன், திருப்பாற் கடலில் பள்ளிகொண்ட திருமால் போல மகிழ்ந்தான் என்பாரும் உளர். (34)

## முனிவன் அறவுரை பகர்தல்

**2712.** அவ்வயி னழகனும் வைகின னறிஞன்
செவ்விய வறவுரை செவிவயி னுகரா
நவ்வியின் விழியவ ளொடுநனி யிருளைக்
கவ்விய நிசியொரு கடையுறு மளவில்.

அவ்வயின் அழகனும் வைகினன், அறிஞன்
செவ்விய அறவுரை செவிவயின் நுகரா
நவ்வியின் விழியவளொடும், நனி இருளைக்
கவ்விய நிசி ஒரு கடையுறும் அளவில்.

பொ :—அங்கு இராமனும், தத்துவ உணர்வின(ருகிய முனிவ)னுடைய செம்மையான தரும வார்த்தைகளைப் பெண்மானின் விழி போன்ற விழியையுடையாளொடு செவி சாய்த்துத் தங்கியிருந்தான். இருளை மிகுதியாகவுடைய இரவு ஒரு முடிவை அடையும்பொழுது.

கு :—அறவுரை என்பதற்குத் தக, அறிஞன் என்பதற்குத் தத்துவ ஞானி என்ற பொருள் கொள்ளுதல் பொருந்தும். விழியவளொடும் என்ற உம்மையால் இலக்குவனைக் கொள்ளலாயிற்று. சீதையைக் கூறியது இலட்சுமணனுக்கும் உபலட்சணம் என்ருர் சிலர். கடையுறும் அளவில் என்பது அடுத்த செய்யுளொடு இயைந்து முடிவுறும். (35)

### கதிரவன் தோற்றம்

2713. விலகிடு நிழலினன் வெயில்விரி யயில்வா
ளிலகிடு சுடரவ னிசையன திசைதோ
யலகிட லரியத னவிர்கர நிரையா
லுலகிடு நிறையிரு ளுறையினை யுரிவான்.

விலகிடும் நிழலினன் வெயில் விரி அயில் வாள்
இலகிடு சுடரவன் இசையன திசை தோய்
அலகிடல் அரிய தன் அவிர் கரநிரையால்
உலகிடு நிறை இருள் உறையினை உரிவான்.

பொ :—விளங்குகின்ற ஒளியையுடைய கதிரவன், வெயிலைப் பரப்பும் கூரிய வாள் போன்றதும் ஒளிரும் (திருமேனியின்) காந்தியையுடைய (இராக)வன் புகழ்போல் திசையனைத்திலும் பரவி யிருப்பதும் அளவிடுதற்கரியதுமான தனது விளங்கும் கிரண வரிசையால் உலகிலுள்ள மிக்க இருளாகிய உறையை நீக்கினான்.

கு :—ஒளிமிக்க சூரியனுக்கும் தோற்றப் பொலிவுள்ள இராமனுக்கும் ஒப்புமை கூறியவாறு. 'இராகவன் தோன்றினானென வெய்யவன் தோன்றினான்' என்பர் பின்னும் (சூர்ப்ப. 88). எல்லாத் திசையிலும் பரவுதல் அளவிடற்கருமை என்பன சூரிய கிரணங்கட்கும் இராமன் புகழ்க்கும் பொதுத் தன்மைகளாம். (36)

### முனிவன் எரிபுகுதற்குத் துணிதல்

2714. ஆயிடை யறிஞனு மவனெதி ரழுவத்
தீயிடை நுழைவதொர் தெளிவினை யுடையா
னீவிடை தருகென நிறுவின னெறியாற்
காயெரி வரன்முறை கடிதினி லிடுவான்.

ஆயிடை அறிஞனும் அவன் எதிர் அழுவத்
தீயிடை நுழைவது ஒர் தெளிவினை உடையான்
நீ விடை தருகென நிறுவினன் நெறியால்
காய் எரி வரன்முறை கடிதினில் இடுவான்.

பொ :—அப்பொழுது மெய்யுணர்வினனான சரபங்கனும் இராமன் முன்னிலையில், மிகுந்த தீயின்கட் புகு(ந்து உடலை விடு)வது என்ற உறுதியுடையனாக 'முறைப்படி (கொழுந்துவிட்டு) எரியும் தீயின்கண் விரைவில் (யான் உடலை இடுதற்கு) விடை அளிப்பாயாக' என்று கூறி(த் தீயை) முறைப்படி அமைத்தான்.

கு :—இராமனது இறைமை, தனது அடிமை முதலிய உண்மை நிலையை உணர்ந்து, உடற்பொறையை நீக்கித் தூய்மையடைந்து வீடுபெறுதலே இன்பமாமென்ற அறிவனூற் கருத்தைத் தெளிந் துணர்ந்தவனுகலின், அறிஞனும்...உடையான் என்றூர். எச்செயலே யும் தொடங்குங்கால் இறைவனைப் பணிந்து தெரிவித்துப் பின்னர் அச்செயலே மேற்கொள்ளுதலே முறையாகலின், நீ விடைதருக என்றுன். உடலே நீப்பதில் உவகையும், அது காரணமாக விரைவும் தோன்ற, கடிதினில் இடுவான் எனப்பட்டது. (37)

## முனிவன், தீப்புகுதற்கு இராமனிடம் விடை கேட்டல்

**2715.** வரிசிலே யுழவனு மறையுழ வனைநீ
புரிதொழி லெனையது புகலுதி யெனலுந்
திருமக டலேவசெய் திருவினே யுறயா
னெரிபுக நினேகுவெ னருள்கென விறைவன்.

வரி சிலே உழவனும் மறை உழவனை ‘நீ
புரி தொழில் எனை ? அது புகலுதி’ எனலும்,
‘திருமகள் தலேவ ! செய் திருவினே உற யான்
எரி புக நினேகுவென் அருள்’கென இறைவன்.

பொ :—கட்டமைந்த விற்றொழில் வல்லவ(னுன இராகவ)னும் மறைவல்லோ(னுன சரபங்க)னே, (நோக்கி) ‘நீ புரியக் கருதும் செயல் யாது ? அதனைக் கூறு’ என்று கேட்டலும், (சரபங்கன்) ‘திருமகள் கேள்வ ! செம்மையான (வீடுபே றென்னும்) செல்வத்தை அடையும் வண்ணம் யான் எரியினிற் புக விரும்புகிறேன்; (நீ அதற்கு விடைதந்து) அருள் புரிக ’ என்று கூற, இராமன்.

கு :—சிலேயுழவன் முதலியன அத்தொழிற் றேர்ச்சியை உணர்த் துவன; வில்லேருழவன் சொல்லேருழவன் என்று வழங்குப வாகலின். இறைவன் என்பது அடுத்த செய்யுளில் உள்ள, எனலும் என்பதொடு இயையும். (38)

## இராமன் வினவும் முனிவன் விடையும் 2716—2718

**2716.** யான்வரு மமைதியி னிதுசெய லெவனே
மான்வரு தனியுரி மார்பினே யெனலு

மீன்வரு கொடியவன் விறலடு மறவோ
னூன்வரு முவகையி னுரைநனி புரிவான்.

'யான் வரும் அமைதியின் இது செயல் எவனோ?
மான் வரு தனி உரி மார்பினே!' எனலும்,
மீன் வரு கொடியவன் விறல் அடு மறவோன்,
ஊன் வரும் உவகையின் உரை நனி புரிவான்.

பொ :—'மானின் வந்த ஒப்பற்ற தோலினை யணிந்த மார்பை யுடையவனே! யான் வந்தபோது (தீயிடை நுழைதலாகிய) இதைச் செய்தல் என்னே?' என்று வினவ', மீன் கொடியுடைய மன்மதனது வெற்றியை அழிக்கும் வன்மையுடைய முனிவன், உடல் பூரித்தற்குக் காரணமான மிக்க மகிழ்ச்சியால் கூறுவான்.

கு :—இராமன் வந்தவுடன் முனிவன் தீப்புக முன்வந்ததால், இராமன் வருகை முனி எரியிடைப் புகுதற்குக் காரணமாயிற்று என யாவரும் கருதுதல் கூடும் ஆகலின், முனிவனிடம் இது செயல் எவனோ? என வினவினன் என்க. மனத் தளர்ச்சியுடையாரையே மன்மதன் வெல்லுதல் கூடும். சரபங்கனென்ற பெயருக்கேற்ப, முனிவன், மன்மதனுடைய திறனை யடக்குமாற்றலுடையான் என்பார், மீன்வரு...மறவோன் என்றார். ஊன் வரும் நனி உவகை யின் என இயைக்க. (39)

2717. ஆயிர முகமுள தவமயர் குவென்யா
னீயிவண் வருதிகொ லெனுநிலை யுடையேன்
போயின விருவினை புகலுறு விதியான்
மேயினை யினியொரு வினையிலை விறலோய்.

ஆயிரம் முகம் உள தவம் அயர்குவென் யான்
நீ இவண் வருதிகொல் எனும் நிலை உடையேன்;
போயின இரு வினை புகலுறு விதியால்
மேயினை; இனி ஒரு வினை இலை விறலோய்!

பொ :—வெற்றியுடையோனே! பலவகையுள்ள தவத்தைப் புரியும் யான், நீ இங்கு வருவாய் என்ற உறுதியுடையேன். (சிறப் பித்துக்) கூறுதற்குரிய அருளால் (நீ இவண்) வந்தனை. (என்) இரண்டு வினைகளும் (யான் உன்னைக் காணப் பெற்றதால்) அழிந்தன. (யான் இவ்வுலகில்) இனிமேல் செய்யவேண்டிய செயலொன்றும் இல்லை.

கு :—எளிமை அருமைகளாலும் புரிபவர் மேற்கோள்ளும் நியம வகைகளாலும் தவம் பலதிறப்படுதலால், ஆயிரம் முகமுள தவம் என்ருர். ஆயிரம் உகம் எனப் பிரித்துப் பல யுகங்கள் முன்பே தொடங்கி இதுகாறும் தவம் புரிகின்றேன் என்று பொருளுரைத்தலும் ஒன்று. முக்கால உணர்வினனுகலின், இராமன் வனம் புகுவது, தன்பால் வந்தெய்துவது முதலியவற்றை நன்கு உணர்ந்தானென்க. திருமகளையும் திருமாலையும் அவதார நிலையில் நேரில் காணுதற்குரிய நல்லருள் வாய்த்ததால் கண்டேன். இக்காட்சியால் மறு பிறவிக்குக் காரணமான இருவினைகளு மொழியப்பெற்றேன் என்றவாறு. விதி – அருள்; 'விதி சூழ்ந்ததால்' (திருவாய்மொழி. 2-7-6.) என்புழி இப்பொருள் வியாக்கியானங்களில் காணத்தகும். விதியால் மேயினே போயின இருவினே என இயையும். இவ்வுலகிற் பிறந்தவன் பெற வேண்டிய பெரும்பயன் வீடேயாகலின், அது கிட்டிய பின் இவ்வுலகிற் செயற்பால தொன்றுமில்லை என்ருன். (40)

**2718.** இந்திர னருளின னிறுதிசெய் பகலா
வந்தனன் மருவுதி மலரய னுலகந்
தந்தன னெனவது சாரலெ னுரவோ
யந்தமி லுயர்பத மடைதலே முயல்வேன்.

இந்திரன் அருளினன் இறுதிசெய் பகலா
வந்தனன், 'மருவுதி மலர் அயன் உலகம்
தந்தனன்' என, 'அது சாரலென்' உரவோய்!
அந்தம் இல் உயர் பதம் அடைதலே முயல்வேன்.

பொ :—இந்திரன் (என் வாழ்நாளின்) முடிவைச் செய்யும் நாள் எய்தியதாக அருளினனுய் (இங்கு) வந்து, '(திருமாலின் உந்தித் தாமரை) மலரில் தோன்றிய நான்முகன் (தனது) உலக (மான சத்தியலோக)த்தை உனக்குக் கொடுத்தனன்; நீ வருக' என்று கூற, (யான்) அதை அடைய (விரும்ப)வில்லை. (ஏனெனின்) வலியோய்! அழிவற்ற சிறந்த இடத்தையடைய முயற்சி மேற்கொண்டுள்ளேன்.

கு :—அருளினன் வந்தனன் - அருளுடையனுய் வந்து. பரமபதத்தை விரும்பியதால் பிரமபதத்தை யடைய உடன்படவில்லை என்க. பரமபதத்திற்கு எக்காலத்தும் அழிவின்மையானும், அதை விடச் சிறந்த மற்ருெரு இடமின்மையானும், அஃது அந்தமில் உயர் பதம் எனப் பேசப்பட்டது. (41)

சரபங்கன் தீயிடைப்புக்கு வீடுபெறுதல் 2719—2720

**2719.** ஆதலி னிதுபெற வருளென வுரையாக்
காதலி யவளொடு கதழெரி முழுகிப்
போதலை மருவின னொருநெறி புகலா
வேதமு மறிவரு மிகுபொரு ளுணர்வோன்.

'ஆதலின் இது பெற அருள்' என உரையாக்
காதலி அவளொடு கதழ் எரி முழுகிப்
போதலை மருவினன்; ஒரு நெறி புகலா
வேதமும் அறிவரு மிகு பொருள் உணர்வோன்.

பொ.—(ஒருவராலும்) இயற்றிக் கூறப்படாத வேதமும் அறிதற்கரிய உயர்ந்த (பரம்) பொருளை உணர்ந்த (சரபங்க முனி)வன், 'ஆகையால் இ(ப் பரமபதத்)தைப் பெறுதற்கு அருளுக' என்று கூறி(த் தன்) மனையாளொடு மிக்க தீயில் மூழ்கி ஒப்பற்ற இடத்தையெய்தினன்.

கு:—முற் செய்யுளில் கூறப்பட்டதும், முனிவன் மனத்துட் கொண்டதுமான பரமபதத்தை இது எனச் சுட்டினன். உடனுறைந்து அறத்துணைவியாயிருந்தமை பற்றி முனிவன் மனைவியும் வீடு பெறுதற்குரியளானாள். எவராலும் இயற்றப்படாது நிலையாயிருத்தலின் புகலா வேதம் என்றார். மிகு பொருள் - பரதத்துவம்; அதைத் தன் தவ வலிமையாலான மெய்யுணர்வினாற் சரபங்கன் உணர்ந்தானென்க. (42)

**2720.** தேவரு முனிவரு முறுவது தெரிவோர்
யாவரு நறுவிரை மலரயன் முதலோ
ரேவரு மறிவினி லிருவினை யொருவிப்
போவது கருதுமவ் வருநெறி புக்கான்.

தேவரும், முனிவரும், உறுவது தெரிவோர்
யாவரும், நறு விரை மலர் அயன் முதலோர்
ஏவரும், அறிவினில் இரு வினை ஒருவிப்
போவது கருதும் அவ் அரு நெறி புக்கான்.

பொ :—தேவர்களும், முனிவர்களும், (பின்னே) நிகழ இருப்பதைத் தெளிந்துணரும் யாவரும், நறுமணமுள்ள மலரில் தோன்றிய பிரமன் முதலிய எல்லோரும் தத்துவ உணர்வால் இருவினைகளையும் போக்கிச் செல்ல விரும்பும் அந்த அரிய இடத்தை (முனிவன்) அடைந்தான்.

கு :—மனை மக்கள் செல்வ முதலியவற்றாலாய இம்மை இன்பமும், சுவர்க்க முதலிய ஏனைய உலகத்துக்கிட்டும் இன்பமும் நிலையற்றன என்றும், உயிர் பெறுதற்குரிய பெரும்பேறு வீட்டின்பமே என்றும் ஆய்ந்த அறிவினாலேயே தெளிதல் கூடும் என்பார், உறுவது தெரிவோர், அறிவினில் கருதும் அவ்அருநெறி எனச் சிறப்பித்தார். மக்கள் முதல் பிரமபரியந்தமான உயிர் வகையாவும், பிறப்பறுத்துப் பேரின்பம் பெறவேண்டிய நிலையில் ஒத்தனவேயாகலின், தேவரும்......ஏவரும் என்றார். அருநெறி - அர்ச்சிராதி மார்க்கம்; அதுகொண்டெய்தும் பரமபதம் உணர்த்தியவாறு. (43)

## சரபங்கனது பேறுபற்றிய கவிக்கூற்று

2721. அண்டமு மகிலமு மறிவரு நெறியா
லுண்டவ னொருபெய ருணர்குந ருறுபே
றெண்டவ நெடிதெனி னிறுதியி லவனைக்
கண்டவ ருறுபொருள் கருதுவ தெளிதோ.

'அண்டமும் அகிலமும் அறிவரும் நெறியால்
உண்டவன் ஒரு பெயர் உணர்குநர் உறு பேறு
எண் தவ நெடிது' எனின், இறுதியில் அவனைக்
கண்டவர் உறு பொருள் கருதுவது எளிதோ ?

பொ :—(எல்லா) அண்டங்களையும் (அவற்றிலுள்ள இயங்கியல் நிலையியல் பொருள்களாகிய) அனைத்தையும் (இஃது இத்தன்மைத்து என்று) அறிய இயலாத வகையில் வயிற்றினுள் அடக்கியவ(னாகிய திருமாலி)னுடைய (பல்லாயிரம் பெயர்களுள் ஏதேனும்) ஒரு திருநாமத்தை (இறுதியில் மனத்து)க் கருதியவர் பெறும் இன்பம், எண்ணுதலைக் கடந்து, மிக்கதாம் என்றால், (உடலை விட்டு உயிர் பிரியும்) இறுதிக் காலத்தில் (அப்பெயர்களுக்கெல்லாம் பொருளான) அப்பரமனை (நேரில்) கண்டவர் எய்தும் பதவி (இத்துணைச் சிறப்புடைத்து என்று) எண்ணித் துணிவது எளிமையாமோ ?

கு :—ஆயுள் முடிவில் இறைவனை மனத்தே வைத்தலை அந்திம ஸ்மிருதி என்பர். மனதால் நினைப்பவரும், எண்ணவியலாத பேற்றினைப் பெறின், வாயாற் கூறுபவரும், கண்ணால் கண்டவரும் பெறும் பேறு எங்ஙனம் கூற இயலும் என்று கைமுதிக நியாயத்தாற் சிறப்பித்துக் கூறினாரென்க. சொல்லளவில் இறைவனைக் குறிக்கும் தன் புதல்வன் பெயரை இறுதிக் காலத்தில் கூறியவனும் மிகக் கொடியோனுமாகிய அசாமிளன் என்பவன் நற்கதி பெற்றான் என்ப. (44)

சரபங்கன் பிறப்பு நீங்கு படலம் முற்றிற்று.

---

# 3. அகத்தியப் படலம்

அமிழ்தினும் இனிய தமிழ்மொழிக்கு இலக்கணம் தந்து புகழ் கொண்ட அகத்திய முனிவன், தன்னையடைந்து வணங்கிய இராம பிரானுக்கு வில் முதலிய படைக்கலங்களை அளித்துச் செவியறி வுறுத்திய செய்தியைக் கூறும் பகுதியாகலின், இஃது 'அகத்தியப் படலம்' எனப் பெயர் பெறுகின்றது. அகம் - மலை; விந்தியமலையை அடக்கினவன் என்ற காரணத்தால் அகத்தியன் எனப் பெயர் பெற்றான் என்பர். 40ஆம் எண் உள்ள சுவடியில் இப்படலத்தின் 26ஆம் செய்யுள் வரையில் தண்டகாரண்யப் படலம் எனவும், 27ஆம் செய்யுள் முதல் அகத்தியப் படலம் எனவும் இரண்டாகக் காணப்படு கின்றது.

## படலப் பொருட் சுருக்கம்

இராமன், சரபங்கன் பிறப்பு நீக்கத்தைக் கண்ட பின்னர், சீதையோடும் இலக்குவனோடும் புறப்பட்டுப் பல மலைகளையும் காடுகளையும் கடந்து சென்று தண்டக வனத்தை அடைய, அவன் வரவை அறிந்த வாலகில்லரும் முண்டரும் மோனரும் முதலிய முனிவர்கள் யாவரும் மகிழ்மீக்கூர்ந்து எழுந்து எதிர்சென்று அவ்விராமனை அன்பால் வரவேற்கின்றனர். இராமன் அம்முனி வர்களின் பெருமையை உணர்ந்து பன்முறை தொழுகின்றான். அவன் தொழுந்தோறும் தொழுந்தோறும் அம்முனிவர் வாழ்த்திப் பின் இனியதொரு பன்ன சாலைக்கு அழைத்துச் சென்று இளைப்பாற விடுக்கின்றனர். பின்னர் முனிவர்கள் தம் துன்பங்களைச் சொல்ல வேண்டி ஒன்றுசேர்ந்து இராமனை அடைந்து, இரக்கமில் நெஞ்சத்து அரக்கர் செய்யும் அல்லல்களை யெல்லாம் கூறுகின்றனர். 'இந்திரனே அரக்கர் ஏவினவற்றைச் சென்னி மேற்கொண்டு செய்பவனாகிவிட்டான்; இனி எங்கள் துன்பம் துடைப்பவர் யாருளர்? யாம் செய்த தவத்தால் நீ இங்கு வந்தாய்; எங்கள் துன்ப இருளை நீக்க வந்த கதிரவன் போன்ற வீர! நின் அடைக் கலம் யாங்கள்' என்கின்றனர்.

முனிவர்களின் துன்ப நிலையைக் கண்ட இராமன் மனமிரங்கி, 'நீங்கள் கூறுகின்ற அரக்கர்கள் என்னை அடைக்கலமாகப் புகுந்தில ராயின், அவர்கள் இவ்வுலகை விட்டு அப்புறத் தண்டத்திற்குச் சென்றாலும் என் அம்பொன்றினால் இறந்து வீழ்வர்; நீங்கள் துன்பம் நீங்குங்கள். உங்களுடைய துயர் துடைக்கும் வாய்ப்பு எனக்குக்

கிடைத்தமையால், என் தந்தையாகிய தயரத மன்னன் இறக்கவும், என் தாய் துயர் எய்தவும், என் தம்பி வருந்தவும், என் நகரத்து மக்கள் அளவிலாத் துயரால் வருந்தவும், யான் காட்டுக்கு வந்தது என் புண்ணியப் பயனால் நிகழ்ந்ததாகவே நினைக்கின்றேன். அறநெறி யொழுகும் அந்தணர் பெருமையை மறந்து கொடுமை செய்யும் புல்லர்களின் வலிமையைத் தொலைக்க இயலவில்லையாயின், அவர்களால் இறந்துபோயினும் நல்லதே; உங்கள்பொருட்டு உயிர் துறக்க நேரினும் அதை என் பிறவியின் பயனாகவே எண்ணுவேன். மும்மூர்த்திகளும் அவ்வரக்கர்க்குத் துணையாக வந்து காப்பினும், அறத்திற்கு மாறுபட்டவர்களை வேரறுப்பேன்; நீங்கள் அஞ்சாதீர்கள்' என்று கூறுகின்றான். அது கேட்டு முனிவர் அளவிலா மகிழ்ச்சிகொண்டு ஆடிப் பாடி வாழ்த்தி, 'நீ வனத்தில் தங்க வேண்டிய ஆண்டுகள் எல்லாம் எங்கள் துன்பத்தைக் காத்து எம்மோடு இங்குத் தங்குவாயாக' என வேண்டிக்கொள்கின்றனர். இராமனும் அவர்கள் வேண்டுகோட்கு இசைந்து பத்து ஆண்டுகள் வரையில் மனைவியோடும் தம்பியோடும் அங்குத் தங்கியிருந்தான். பின்னர் அகத்தியரைக் காணவேண்டும் என்று அம்முனிவர்கள் கூற, அவர்களை வணங்கி விடைபெற்றுச் சீதையோடும் தம்பியோடும் புறப்பட்டுச் சென்று, இடையில் சுதீக்கணன் என்னும் முனிவரைக் கண்டு வணங்க, அம்முனிவன் அவர்களைத் தன் குடிலில் இருக்கச் செய்து வேண்டிய உபசாரங்களைச் செய்து, 'நீ வர யான் செய்த தவம் யாதோ' என்று ஆர்வமொழி புகல, இராமன், 'தவம் செய்வோரில் உயர்ந்த தவத்தைச் செய்துமுடித்த உன்னைக் காட்டிலும் உயர்ந்தோர் யாருளர்? அத்தகைய உன்னருளைப் பெற்ற என்னைக் காட்டிலும் சிறந்த இல்லறத்தோர் யாருளர்?' என்று திறம்படக் கூறக் கேட்ட சுதீக்கணன், 'என்பால் பயனுடைய நல்விருந்தாக வந்தமர்ந்தாய், என் தவமுழுமையும் தக்கணையாகக் கொள்க' என்று அன்பால் மொழிகின்றான். இராமன், 'முனிவ! நின் அருள் நின் தவத்திற்குக் குறைந்ததன்று; நின்னருள் பெற்றதே அமையும்; அகத்தியனைக் காணவேண்டும்; வழி கூறியருள்க' என்று வேண்ட, முனிவன், 'யானும் சொல்ல நினைந்தேன்; அகத்தியனை அடைந்தால் எல்லா நன்மைகளும் உன்னையடையும்; நீ அவனைக் காண்பது நினக்குமட்டுமன்றித் தேவர்க்கும் யாவர்க்கும் நன்மையைத் தரும்; விரைந்து செல்க' என வழியும் கூறி வாழ்த்தி வழி அனுப்புகின்றான். அம்முனிவனை வணங்கி விடைபெற்றுச் சென்ற இராமன் முதலியோர் அகத்தியன் தவஞ் செய்யும் அழகிய சோலையை அடைகின்றனர். அவர்கள் அங்கு அடைந்ததை அறிந்த அகத்தியன், அவர்களைக் காணும் அவாவினால் எதிர்வந்து இராமனைக் கண்டு தழுவிக் கண்கள் நீர்வார, 'நன்று வரவு' என்று வரவேற்று, இராமன் முதலியோரைத் தன் தவக் குடிலுக்குள் அழைத்துச்

சென்று, அவர்க்கு விருந்து அமைத்த பின், நீ வரத் தவஞ் செய்த என் குடிலில் வந்து என் தவத்தை நிறைவேற்றினாய்' என்று ஆர்வ மொழி கூற, அவ்வாறு கூறிய முனிவனைத் தொழுது, 'தேவரும் முனிவரும் பெறவியலாத உன் பேரன்பை யான் பெற்றுவிட்டேன்; ஆதலின், யான் எல்லா உலகங்களையும் வென்றேன் ஆனேன்; இனி, யான் பெறவேண்டியது யாதுளது?' என்று அம் முனிவனைப் பாராட்டுகின்றான். அகத்திய முனிவன், 'இராம! நீ தண்டக வனத்துத் தங்கியுளாய் என்பது அறிந்து, இங்கு வருவாய் எனத் துணிந்து எதிர்பார்த்திருந்தேன். இவ்விடத்தில் தங்கியிருக்கலாம். இன்றியமையாத தவங்களை நீ முடித்தற்கும் முனிவர்க்குப் பகையாக வருகின்ற அரக்கரைப் பொருது அழித்து அம் முனிவரைக் காப் பதற்கும் ஏற்ற இடம் இது. நீ இங்கு இருந்தால் வேதம் முதலியன வாழும்; அரக்கர் தாழ்வர்; அமரர் உயர்வர்; ஏழுலகமும் வாழும்; ஆதலால் இங்குத் தங்குதல் நன்று' என்று கூற, இராமன், 'செருக் கடைந்துள்ள அரக்கர்களை வேரோடு தொலைக்க முடிவு செய்து விட்டேன்; அவர் வரும் வழியில் முந்திச் சென்று தங்குதல் நல்லது என்று எண்ணுகின்றேன்; நின் அருட் குறிப்பு யாதோ?' என்று கேட்கின்றான். அது கேட்ட அகத்திய முனிவன், 'இராம! நீ சிறந்ததையே கூறினாய்; இந்த வில் முழுமுதல்வனாகிய திருமால் என்பால் வைத்தது; மூன்றுலகும் யானும் வழிபட இருப்பது; இவ்வில்லைக் குறையாத அம்புகளையுடைய அம்பறாத்தூணியோடு கொள்க' எனக் கொடுத்து, மேலும், மூன்றுலகத்தினும் தனக்கு இணையிலாத வாட் படையினையும் அரன் மேரு மலையை வில்லாகக் கொண்டு முப்புரமெரித்த அம்பினையும் கொடுத்துத் 'தென் திசையில் பஞ்சவடி என்று ஓரிடம் உள்ளது; அங்கு வேண்டியவெல்லாம் ஈண்டியுள்ளன; அமைதியான இடம்; அங்குத் தங்கித் தவஞ் செய்க' எனக் கூற, இராமன், அம்முனிவனை வணங்கி விடைபெற்றுக் கொண்டு, சீதையும் இலக்குவனும் பின்வர, அகத்தியன் அன்பு மனம் பின்தொடர, விரைந்து சென்றான் என்பது, இப்படலத்தின் பொருட் சுருக்கம்.

## கம்பர், வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில்: சரபங்கன் பிறப்பு நீங்கியபின் இராமன் அச் சரபங்கன் தவக்குடிலில் இருந்த பொழுதே, தண்டகவனத்து முனிவர்கள் வந்து, இரக்கமில் அரக்கர் தமக்குச் செய்யும் அல்லல் களைக் கூறி, அவ்வரக்கரை அழித்துத் தம்மைக் காக்குமாறு வேண்டியதாகவும், இராமன் அவர் நிலைக்கு இரங்கி, அவ்வரக்கரை அழிப்பதாக உறுதி கூறி, அஞ்சல் அளித்ததாகவும், பின் அம்முனி வர்கள் இராமனை அழைத்துக்கொண்டு தமது தண்டகவனத்திற்குப் போனதாகவும் உள்ளது.

கம்பர், தண்டக வனத்திற்கு இராமன் சென்றபொழுதே அங்குள்ள முனிவர்கள் அவனை அணுகித் தம் அல்லலைக் கூறி அரக்கரை அழிக்க வேண்டியதாகவும், இராமன் அவர்க்கு அஞ்சல் அளித்ததாகவும் கூறியுள்ளார். அல்லற்பட்டோர் உள்வழிச் சென்று அவர்க்கு அஞ்சல் கூறி உதவுவதே வள்ளற்றன்மைக்கு ஏற்றது என்ற கருத்தால் கம்பர் இவ்வாறு மாற்றியிருத்தல் வேண்டும்.

2. வான்மீகத்தில் இராமன், சுதீக்கணன் தவக்குடிலில் தங்கியபொழுது அம்முனிவர் இராமனுடைய குண நலங்களைக் கண்டு, 'என் தவத்தால் எனக்குக் கிடைத்ததாக இந்திரன் கூறியுள்ள தேவ இருடிகளின் உலகங்களை உனக்குத் தருகின்றேன்; அங்கு மகிழ்ச்சியாக நீ தங்குக' என்று கூறியதாகவும், இராமன், 'அவ்வுலகங்களை என் முயற்சியால் யானே பெற்றுக்கொள்கின்றேன்; இப்பொழுது இவ்வனத்தில் தங்குமிடம் மட்டும் கொடுத்தால் போதும்' என்று கூறியதாகவும் உள்ளது.

இராமனுடைய சொல்லாற்றலையும் பண்பினையும் கண்ட சுதீக்கணன், 'என் தவமெலாம் கொள்க தக்கணையாக' என்று கூறியதாகவும், இராமன், 'நின் அருள் தவத்தினுக்குக் குறைந்ததன்று; நின்னருளே அமையும்' எனத் தன் வள்ளன்மை தோன்ற நயமுடன் கூறியதாகவும் கம்பர் மாற்றி அமைத்துள்ளார். தாய் தந்தையரின் சொல்வழியே காட்டில் தங்கவேண்டிய இராமனைத் தன் தவத்தால் சித்தித்த தேவ இருடிகளின் உலகங்களில் தங்குக என்று சுதீக்கணன் கூறியதாக அமைப்பதினும், தன் தவமெலாம் கொள்க என்று கூறியதாக அமைப்பது நாகரிகமாக உள்ளது என்று மாற்றியிருத்தல் கூடும்.

3. வான்மீகத்தில் இராமன் தண்டக வனத்திற்குச் செல்லுமுன், சுதீக்கணனைக் கண்டு வணங்கி அம்முனிவன் அன்பைப் பெற்றதாகவும், அம்முனிவன் தண்டகவனம் சென்று அரக்கரை அழிக்க இருக்கின்ற இராமனுக்கும் இலக்குவனுக்கும் வில்லும் அம்பறாத் தூணியும் வாளும் கொடுத்துத் தண்டகவனத்து முனிவர் தவக்குடில்களில் தங்கி, மீண்டு வருகின்றபொழுதும், 'இங்குத் தங்கிச் செல்ல வேண்டும்' என்று கேட்டுக்கொண்டதாகவும், அம்முனிவன் வேண்டுகோளின்படி, தண்டகவனத்தில் இரண்டு வட்டம் எல்லாத் தவக்குடிலிலும் தங்கிப் பத்தாண்டுகளைக் கழித்துத் திரும்புகையில் மீண்டும் சுதீக்கணன் தவக்குடிலில் தங்கியிருந்து பின் அகத்திய முனிவன் தவக்குடிலுக்குச் செல்ல வழி கேட்டதாகவும் உள்ளது.

கம்பர், சுதீக்கணன் தவக்குடிலுக்கு இரண்டு முறை சென்றதாகக் கூறவில்லை. தண்டகவனத்து, ஐந்தும் ஐந்தும்

ஆண்டுகள் தங்கிப் பின்னரே சுதீக்கணனை அடைந்ததாகக் கூறி யுள்ளார். சுதீக்கணன் வில் முதலிய படைக்கலங்களைக் கொடுத்த தாகவும் கூறவில்லை.

4. வான்மீகத்தில் சுதீக்கணனிடம் வில் முதலிய படைக் கலங்களைப் பெற்றுக்கொண்டு, தண்டகவனம் செல்லும்போது இராமனை நோக்கிச் சீதை, 'சான்றோர் மேற்கொள்ளத்தக்க அறங்கள் மூன்று; அவை: பொய்யாமை, பிறர்மனை நயவாமை, உயிர்க்கு உறுகண் செய்யாமை என்பனவாம். அவற்றுள் முன்னைய இரண்டும் நின்பால் இயல்பாகவே அமைந்துள்ளன; இறுதியில் கூறிய ஒன்று மட்டும் அமையவில்லை. நின் தவ வேடத்திற்கு ஏற்ப, அவ்வறத்தையும் மேற்கொள்வதே சிறந்தது. அவ்வறத்தை மேற் கொள்ள இந்தப் படைக்கலங்களைக் கைவிடவேண்டும். அரசர்க்குரிய அறமாயினும், நம்நாட்டிற்குச் சென்று அரசேற்ற பின் அரசர்க்குரிய அவ்வறத்தைக் கடைப்பிடிக்கலாம். காட்டில் தவவேடம் பூண்ட இந்நிலைக்குப் படைக்கலங்கள் வேண்டாம். அவை கொடுமையான எண்ணங்களையே உண்டாக்கும். தண்டகவனத்துள்ள அரக்கர் நமக்குத் துன்பம் செய்யாத வழியும், முனிவர்கட்குத் துன்பம் செய்கின்றனர் என்ற காரணத்தால் அவர்களைக் கொல்லக் கருதுவதை யான் உடன்படமாட்டேன்; ஆகவே இப்படைகளைக் கைவிடுங்கள்' என்று கேட்டுக்கொண்டதாகவும், இராமன் தன் மனைவியின் சொல்லை முன்னர்ப் பாராட்டிவிட்டுத் 'தண்டகவனத்து முனிவர்க்கு யான் கொடுத்த வாக்குறுதியை ஒருகாலும் விடமாட் டேன். உன்னைக் காட்டிலும் என் தம்பியைக் காட்டிலும் வாய் மையையே பெரிதும் விரும்புகின்றேன். நீ கூறியவாறு அரக்கரை அழிக்காமல் தண்டகவனத்து முனிவரை அல்லலுறச் செய்யமாட் டேன்' என்று கூறி மறுத்ததாகவும் உள்ளது.

சீதையின் படைதொடா இயக்கத்தைப் பற்றிக் கம்பர் ஒன்றும் கூறவில்லை. சீதையின் வேண்டுகோள் அவள் அருள் உள்ளத்தை விளக்குவதாக அமைந்துளதே ஆயினும், கற்புடைப் பெண்டுக்குத் தன் சொல்வழியில் கணவனை நிற்கச் செய்வது போன்ற இந்நிகழ்ச்சி பொருந்துவதாக இல்லை என்ற கருத்தால் கம்பர் இவ்வரலாற்றைக் கூறுமல் விடுத்தார் போலும். மேலும் இந்நிகழ்ச்சி காதலர் இருவர்க்கும் கருத்தொற்றுமை யில்லை என் பதைக் காட்டுவதாதலும் காண்க.

5. வான்மீகத்தில் வாதாபி இல்வலர்களை, அகத்தியர் அழித்த ஆற்றலைப் பற்றி இராமன், இலக்குவனுக்குக் கூறி அத்தகைய அகத்திய முனிவரின் தம்பியைக் காணப்போகின்றேம் என்று

விளக்கியதாகவும், அவ்வகத்திய முனிவரின் தம்பி தவக்குடிலில் ஓரிரவு தங்கிச் சென்றதாகவும் உள்ளது.

கம்பர், அகத்திய முனிவன் தம்பியைப் பற்றிக் கூறவே யில்லை. முற்றும் துறந்த முனிவனுகிய அகத்தியனுக்குத் தம்பி இருந்ததாகவும் அத் தம்பியின் தவக்குடில் அகத்திய முனிவனின் தவக்குடிலேச் சார இருந்ததாகவும் கூறுதல், 'துறந்தார்க்கும் பற்றுண்டு, உறவுண்டு என்பதை விளக்குவது போன்றுளது' என்ற கருத்தால் அதை விடுத்தார்போலும்.

6. வான்மீகத்தில் அகத்திய முனிவன், வாதாபி இல்வலரை அழித்த செய்தியையும், சூரியன் செல்லும் வழியைத் தடுக்கும் நோக்கத்துடன் வளர்ந்துகொண்டிருந்த விந்திய மலேயை அடக்கிய செய்தியையும் இராமன் இலக்குவனுக்குக் கூறியதாகவுள்ளது.

கம்பர், அவ்விரண்டு நிகழ்ச்சியுடன், தேவர்கள் வேண்ட அகத்தியமுனிவன் கடல்நீர் அறவுண்ட நிகழ்ச்சியையும், சிவபிரான் கட்டளேயின்படி வடக்கும் தெற்கும் சமமாகுமாறு பொதியமலேயில் ஈசன் நிகராக இருந்த செய்தியையும், சிவபிரான் தனக்குச் செவி யறிவுறுத்திய தமிழ் மொழிக்கு இலக்கணம் செய்து வளப்படுத்திய செய்தியையும், தன் குண்டிகையில் காவிரி கொணர்ந்த செய்தியையும் புதுவதாகச் சேர்த்துக் கூறியுள்ளார். இச் செய்திகள் கம்பர் காலத்தில் வழங்கியதால் சேர்த்துக்கூறினுர்போலும். இராமன் இலக்குவனுக்குக் கூறிய அவ்விரண்டு நிகழ்ச்சிகளேயும், தாம் சேர்த்துக் கூறிய நிகழ்ச்சிகளேயும் இராமன் கூற்ருகக் கூருது கவிக் கூற்ருகவே அமைத்துள்ள நேர்மையை நோக்குதல் வேண்டும். தண்டகவனத்து அகத்தியரும் தமிழ் இலக்கணம் செய்து பொதியமலேயில் இருந்த அகத்தியரும் ஒருவரல்லர் என எண்ணவும் இடமுண்டு. வான்மீகி முனிவரும் கிட்கிந்தா காண்டத்தில், பொதிய மலேயில் இருக்கும் அகத்திய முனிவர் ஒருவரைக் குறிப்பிடுகின்ருர்.

7. வான்மீகத்தில் இராமன், அகத்திய முனிவன் தவக்குடிலே அடைந்து, உள்ளிருக்கும் அத் தவமுனிவனேக் கண்டு வணங்க விரும்புவதைத் தெரிவித்து உடன்பாடு பெற்றுவர இலக்குவனே அனுப்பிவிட்டுக் காத்திருந்ததாகவும், இலக்குவன் அம்முனிவனின் சீடர் மூலம் தம் வரலாற்றைக் கூறி அம்முனிவன் அனுமதி பெற்று வந்த பின், இராமன் சீதையுடன் உள் சென்று சூரியனேப் போன்ற ஒளி மிக்க அகத்திய முனிவனேக் கண்டு வணங்கியதாகவும் உள்ளது.

இராமன் வரவை யுணர்ந்து அகத்திய முனிவரே எதிர் வந்து தன் தவக்குடிலுக்கு முகமனுடன் அழைத்துச் சென்றதாகக்

கம்பர் கூறியுள்ளார். இராமனுக்கு ஏற்றம் தரவேண்டும் என்ற எண்ணத்தால் இவ்வாறு மாற்றிக் கூறினார்போலும்.

## படலப் பொருட் சிறப்பு

கம்பர் தம் கருத்துக்களை உவமை கூறி விளக்குவதில் தனிச் சிறப்புடையவர். அவர், ஒரு கருத்தை விளக்க நான்கு உவமை கூறியுள்ளார் எனின் அந்நான்கிற்கும் வேறுபாடு உண்டு என்பதை உறுதியாகக் கூறலாம். தண்டகவனத்து முனிவர்கள், இராமன் வரவினைக் கண்டு மகிழ்ச்சி கொண்ட நிகழ்ச்சிக்கு அவ்வாறு நான்கு உவமை கூறியுள்ளார். அரக்கர்புரியும் அல்லலால் உடம்பும் உளமும் வாடி வருந்தியுள்ள முனிவர்கள், அவ்வரக்கரை அழித்துத் தம்மைக் காக்கத்தக்க துணையில்லையேயென்று ஏங்கிக்கொண்டிருந்த நிலையில் இராமன் வரக் கண்டவுடன்,

'அனல்வரு கானகத் தமுத ளாவிய
புனல்வர உயிர்வரும் உலவை போல்கின்றார்' (2725)

என அம்முனிவர் மகிழ்ச்சிக்கு முதற்கண் உவமை கூறுகின்றார். பின்னர்,

'தீவரு வனத்திடை யிட்டுத் தீர்ந்ததோர்
தாய்வர நோக்கிய கன்றின் தன்மையார்' (2726)

என்றும்,

'அரக்கரென் கடலிடை யாழ்கின் றாரொரு
மரக்கலம் பெற்றென மறுக்க நீங்கினார்' (2727)

என்றும்,

'விரிஞ்சுறப் பற்றிய பிறவி வெந்துயர்ப்
பெருஞ்சிறை வீடுபெற் றனைய பெற்றியார்' (2728)

என்றும் கூறியுள்ளார்.

அளப்பரும் ஆற்றலும் பண்பும் நிறைந்த இராமனைக் கண்டு முனிவர் கொண்ட மகிழ்ச்சியை விளக்க ஒருவமை மட்டுமே கூறி அமையக் கம்பர் மனம் இடம் தரவில்லை. ஆதலால், இவ்வாறு வேறு வேறு வகையான உவமைகள் பல கூறி அவர் மகிழ்ச்சியைப் புலப்படுத்த எண்ணுகிறார். ஒரு காரணம் பற்றி ஒருவர்க்கு மகிழ்ச்சி தோன்றுங்கால், துடும் எனப் பெருமகிழ்ச்சி தோன்றி விடுவதில்லை; அக்காரணத்தை நினைக்க நினைக்கச் சிறிது சிறிதாக மகிழ்ச்சி வளர்ச்சி பெறுவதுதான் இயல்பு. அம்மகிழ்ச்சியின் வளர்ச்சியை முனிவர்களின் உள்ளத்தில் அமைத்துக் காட்டுகின்றார் கம்பர்.

முனிவர்களின் மகிழ்ச்சிக்கு நான்கு படிகள் அமைக்கின்றார். 1. மகிழ்ச்சிக்குரிய காரணத்தைக் கண்டவுடன் உடம்பில் காணப் படும் மெய்ப்பாடு 2. அதன்பின் மனத்தில் பொது வகையாக முதிர்ச்சிபெறாது தோன்றுகின்ற ஆறுதல் மகிழ்ச்சி. 3. அதன் பின், மனத்தில் உள்ள கலக்கம் நீங்கிய நிலையில் முதிர்ச்சி பெற்ற மகிழ்ச்சி. 4. அதன்பின், எல்லாவற்றிற்கும் மேலான ஒன்றைப் பற்றுவிட்டோம் என்று அறிவில் தோன்றும் தேறுதல் மகிழ்ச்சி. ந் நான்கு நிலையிலும் முனிவர்கள்பால் மகிழ்ச்சி உண்டானதாகக் காட்டி, அவற்றிற்கேற்ற உவமை அமைப்புகளையும் கூட்டிப் படிப்போருள்ளத்தில் புதிய நல்லுணர்ச்சியை யூட்டிச் செல்கின்றார் கம்பர்.

அரக்கரால் அலைப்புண்டு வாடிய முனிவர்கள், இராமனைக் கண்டவுடன் மகிழ்ச்சியால் உடம்பு பூரித்த நிலையை உணர்த்த, உற்றது அறியும் ஓரறிவுயிராகிய மரங்கள், முன் வெயிலின் வெம்மையால் வாடி உலர்ந்திருந்தவை, நீர்ப்பெருக்கு வந்தவுடன் அவ்வாடலும் வறட்சியும் நீங்கிக் குளிர்ச்சி பெற்றுத் தளிர்க்கும் தன்மையை உவமை கூறியுள்ள பொருத்தத்தைக் காண்க. இது, மகிழ்ச்சிக்குரிய காரணம் கண்டவழி உடம்பிடைத் தோன்றும் வேறு பாட்டை யுணர்த்த வந்தது. உற்றதறியும் உடம்பின் மாறுதலுக்கு, உற்றதொன்றையே அறியும் ஓரறிவுயிராகிய மரத்தை உவமை கூறியது சாலப் பொருத்தமுடையதாதல் காணலாம்.

ஐயுணர்வுள்ள விலங்கிற்கு மனவுணர்வு தெளியத் தோன்று வதில்லை; ஆதலின், அதற்கு மனமே இல்லை என்று கூறுவது முண்டு. அந்த விலங்கினும் அதன் கன்றுக்கு மனவுணர்வு மிகக் குறைவு என்பது கூறவேண்டியதில்லை. முனிவரின் பொதுவகை யான ஆறுதலுக்குக் கம்பர் இரண்டாவதாகக் கூறிய உவமை கன்று. தீப்பரவி வருகின்ற காட்டுக்கிடையில் தன்னை விட்டுச் சென்ற தாய்ப் பசு வரக்கண்டு, கன்று ஆறுதல் கொண்டு மகிழ்ந்ததைத் தாயொத்த அன்பினையுடைய இராமன் வரக்கண்டு முனிவர்கள் பொதுவகையாற் கொண்ட மகிழ்ச்சிக்கு உவமை கூறியுள்ளார். முன் கூறிய மரத்தினும் கன்று உயிருணர்ச்சி மிக்கதாதல் அறிந்தது. தாயைக் கண்டவுடன் கன்று முன்னைப் பழக்கத்தால் ஆறுதல் கொண்டதேயன்றி, அத் தாய்ப்பசு, தனக்குச் செய்யும் நன்மை பலவற்றை ஆராய்ந்தறிந்து மகிழ்ச்சி கொண்டதாகக் கூற இயலாது. அதுபோலவே, இராமனைக் கண்டவுடன் முனிவர் கள் தம் மனத்தில் பொதுவகையாகத் தோன்றிய ஆறுதலால் மகிழ்ச்சி கொண்டார்களே அன்றி அவ்விராமனால் விளையும் நன்மை களை எண்ணி மகிழ்ந்தார்கள் எனக் கூற இயலாது என்பது புலனும்.

முனிவர் மகிழ்ச்சியின் முதற்படி, புனல் கண்ட மரத்தின் மகிழ்ச்சி போன்று உடம்பளவில் நின்றது என்பதும், இரண்டாவது படி, அம்மரத்தினும் சிறந்த விலங்குணர்ச்சி போன்று அவர் உள்ளத்தில் பொதுவகையாகத் தோன்றிய ஆறுதல் என்பதும் புலனும்.'

இனி மூன்ருவது படியாகச் சிறப்பு வகையால் அம்முனிவர் உள்ளத்தில் கலக்கமறத் தோன்றிய மகிழ்ச்சிக்கு அவ்விலங்கினும் அறிவாற் சிறந்த மக்களே உவமை கூறியுள்ளார். ஆருமொரு துணையின்றி ஆழ்கடலில் ஆழ்கின்ற மக்கள், மரக்கலம் பெற்றவுடன் முன்னைய கலக்கம் நீங்கி மகிழ்ச்சியுற்றமையே அம்முனிவர் மகிழ்ச்சிக்கு உவமை. விலங்கினும் மக்கள் மனனுணர்வு நன்கு வாய்க்கப் பெற்றவர் என்பதும், அதனுல் அவர்கள் ஆறறிவுடையர் என மதிக்கப்படுகின்றனர் என்பதும் இங்கு உளங்கொளல் வேண்டும். மக்கள் கடலில் மரக்கலத்தைக் கண்டவுடன் இம்மரக்கலம், நம்மை ஆழ் கடலிலிருந்து கரையேற்றும் தகுதியுடையது என்பதைத் தம் ஆருவதாகிய மன அறிவைக்கொண்டு தெளிந்து முன்னைய கலக்கம் நீங்கிச் சிறப்பு வகையான ஆறுதலைப் பெற்று மகிழ்தற்குரியராவர். தீவரு கானகத்தில் கன்று தாயைக் கண்டு ஆறுதல் கொண்டது, அத்தீயினுல் வரும் தீமையைத் தாய்ப் பசு தீர்க்கவல்லது என்ற தெளிவினுல் அன்று என்பதும், கடலிடை ஆழ்வோர் மரக்கலங் கண்டு ஆறுதல் கொண்டு மகிழ்ந்தது, அது கடலைக் கடக்கத் துணை செய்யும் என்ற தெளிவினுல் ஆனது என்பதும் ஊன்றி நோக்கியுணரலாம்.

இனி, நான்காவது படியாக, இராமன் தெய்வத்தன்மையுடையவன் என்பதையும், அவனுற்றலால் அரக்கர் அழிவதும் தாம் வாழ்வு பெறுவதும் திண்ணம் என்பதையும், முனிவர்கள், மனத்திற்கு மேற்பட்ட தம் அறிவு கொண்டு ஆராய்ந்து தெளிந்து மகிழ்கின்ற பெருமகிழ்ச்சியை உணர்த்துகின்ருர். அம்மகிழ்ச்சிக்கு உவமையாகத் தவமுனிவர், தம் தவ முதிர்ச்சியால் பெற்ற ஞானத்தால் பிறவிப் பெருஞ்சிறையில் நின்றும் விடுதலை பெற்று வீடுற்ற நிகழ்ச்சியைக் கூறியுள்ளார். மரக்கலம் பெற்ற மக்கள் மகிழ்ச்சி, மனத்தினுல் ஆராய்ந்து தெளிந்து மகிழ்கின்ற மகிழ்ச்சி; இங்குக் கூறிய மகிழ்ச்சி, தவ முனிவர்கள் தம் மெய்ஞ்ஞானத்தால் ஐயமறத் தெளிந்தமையால் விளைந்த மகிழ்ச்சி. பொது மக்கள் கடலில் மரக்கலம் பெற்ற மகிழ்ச்சியினும், ஞானிகள் பிறவிப் பெருஞ் சிறை நீங்கிப் பேரின்பம் அடைந்த நிகழ்ச்சி, மகிழ்ச்சிக்கு வரம்பாதல் போலவே, முனிவர்கள் இராமபிரானின் உண்மை நிலையைக் கண்டு கொண்ட மகிழ்ச்சி, அவர் முன் கொண்ட மகிழ்ச்சிக்கெல்லாம் மேல் வரம்பாய்ச் சிறத்தல் காணலாம்.

இனி, இப்படலத்தில் சிறப்புறுப்பினனாக விளங்கும் அகத்திய முனிவனைக் கூறும்போது, கம்பர், அம்முனிவனின் சிறப்புகள் அத்தனையும் விளக்கிவிடுகின்றார். அவற்றுள் மிகச் சிறப்பாகப் பாராட்டற்குரியது ஒன்று உண்டு. தமிழ்நாட்டுப் பிறந்த தமிழ்ப் புலவர் தலைமணியாகிய கம்பர்க்கு அகத்திய முனிவனை எண்ணும் போது முன்வந்து நிற்பது தமிழே ஆதல் தெளிவு. அகத்திய முனிவன் முயற்சியால் என்றுமுள தென்தமிழ் என்றுமழியாத பெருஞ்சிறப்புற்றது. அத் தண்டமிழ் மொழியை மூவுலகத்தோரும் ஏற்றுப் போற்றுமாறு செய்தான் அகத்தியன் என்பது கம்பரின் கற்பனை. இக் கற்பனையை எத்துணை அழகாக நமக்குச் சித்திரித்துத் தருகின்றார் கம்பர் !

'நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்'

என்பதுதான் கம்பரின் மிகப் பாராட்டத்தக்க அச் சொற் சித்திரம். தெய்வத் தீந்தமிழைப் பற்றியும் தெய்வ முனிவனாகிய அகத்தியனைப் பற்றியும் இவ்வளவு சிறப்பாக இதுவரையில் எந்தப் புலவனும் கூற வில்லை என்று துணிந்து கூறலாம்.

மூவுலகமும் மாவலிச் சக்கரவர்த்தியின் ஆட்சியிலுள்ளது. மேலும் அவன் பரிமகம் பல செய்து முடித்து நூறுவது பரிமகமும் செய்யத் தொடங்கிவிட்டான். இந்திரன் அவனை வெல்லுநெறி யாதென அல்லலுற்றுத் திருமாலின் அடிகளில் அடைக்கலம் புகுகின்றான். திருமால் இரண்டடி உயரமுள்ள அந்தணனாக மாவலிபால் செல்கின்றான். மூவடி மண்ணைத் தானமாகக் கேட் கின்றான். மாவலி அவ்வாறே கொடுத்துத் தாரையும் வார்த்து விடுகின்றான். நுண்ணிய ஆலம் வித்திலிருந்து, மன்னரும் படை யுடன் தங்க நிழல் செய்யும் பெரிய ஆலமரம் தோன்றுமாறு போலக் குறளனாக இருந்த திருமால் நீண்டு வளர்ந்து மூவுலகையும் மூவடியால் அளந்து கைப்பற்றினான் என்பது பழைய வரலாறு. அகத்திய முனிவன் வடிவால் மிகக் குறியவன். குறுமுனி என்றே பெயர் பெற்றவன். அக் குறுமுனியும் திருமாலைப் போலவே மூவுலகையும் அளந்து தனக்குரியதாகச் செய்துகொண்டானாம். திருமால் போலத் தன்னடியால் இவ்வுலகை அளக்கவும் இல்லை; வடிவத்தால் நீண்டு வளரவுமில்லை. நீண்ட தமிழால் இவ்வுலக மூன்றையும் அளந்தானாம். தான் குறியனாய் இருந்து கொண்டே அகத்தியன் தான் வளர்த்த நீண்ட தமிழால் இவ்வுலகை அளந்தான் என்றது, தன் தமிழ் மொழியை மூவுலகத்தோரும் சிறப்பு மொழியாக ஏற்றுக்கொள்ளுமாறு செய்தான் என்னும் கருத்தினது. திருமால் மூவடியால் மூவுலகையும் அளந்து, தனக்குரியவாக அவ்வுலகங்களைக்

கைக்கொண்டது போல, அகத்தியன், இயல் இசை நாடகம் என்ற முத்தமிழால் மூவுலகையும் அளந்து, அம் மூவுலகத்தோரும் தமிழ் மொழியையே சிறப்பாக ஏற்றுக்கொள்ளுமாறு செய்தான் என்ற கருத்துக் கம்பரின் உயர்ந்த குறிக்கோளை உணர்த்துகின்றது. தமிழ் உலக மொழிகள் அனைத்திலும் தலை சிறந்தது; மூவுலகத்தோரும் ஏற்றுப் போற்றுதற்குரிய இனிமையும் செறிவும் நனிமிகக் கொண்டது என்பது கம்பரின் கருத்து என்பதை இவ்வோரடி நமக்குப் புலப்படுத்துகின்றது. வாழ்க அவர் உள்ளம்.

---

# 3. அகத்தியப் படலம்

## இராமன் முதலியோர் சரபங்கன் தவக்குடிலினின்று போதல் 2722—2723

**2722.** அனையவ னிறுதியி னமைவு நோக்கின
ரினியவ ரின்னலி னிரங்கு நெஞ்சினர்
குனிவரு திண்சிலைக் குமரர் கொம்பொடும்
புனிதன துறையுணின் றரிதிற் போயினர்.

அனையவன் இறுதியின் அமைவு நோக்கினர்,
இனியவர், இன்னலின் இரங்கும் நெஞ்சினர்,
குனிவரு திண்சிலைக் குமரர், கொம்பொடும்
புனிதனது உறையுள் நின்று அரிதில் போயினர்.

பொ :—இனியவர்களும், வளைதல் பொருந்திய திண்ணிய வில்லை யேந்தியவர்களும், இளமைச் செவ்வியுடையவர்களுமான இராம இலக்குவர், அந்தச் சரபங்க முனிவனுடைய முடிவின் தன்மையை நோக்கி, அவன் தீயில் புகுந்தமை கண்ட இன்னலால் வருந்தும் நெஞ்சினையுடையராய்ப் பூங்கொம்பு போன்ற சீதையோடும் அத்தூய முனிவனின் தவக்குடிலிலிருந்து மெல்லச் சென்றனர்.

கு :—குமரர் இரங்கும் நெஞ்சினராய்க் கொம்பொடும் அரிதிற் போயினர் என இயையும். இரங்குதல் – வருந்துதல், இராம இலக்குவர் பகைநாடி நாணேற்றிய வில்லோடு திரிகின்றமை தோன்ற, 'குனிவரு சிலை' எனவும், பெரும்பகை வெல்லும் தகுதி யுடைமை தோன்ற, 'திண்சிலை' எனவும், புறப்பகை வெல்லுதற்குரிய இளமைச் செவ்வி யுடைமை தோன்ற, 'குமரர்' எனவும் கூறினர். பூங்கொம்பு போன்ற சிதையைக் கொம்பு என்றது உவமையாகு பெயர். தவத்தால் தூயவனாகிய சரபங்கனைப் 'புனிதன்' என்றார்; அது சுட்டின் பொருளதாய் நின்றது. கற்பம் பல செல்லக் கடுந் தவம் புரிந்த புனிதனுடைய தவக்குடில் ஆதலின் பிரிய மனமின்றிச் சென்றமை தோன்ற 'அரிதிற் போயினர்' என்றார். அரிதிற் போத லாவது, கால்கள் முன் செல்ல மனம் பின் செல்லப் பையப் போதல்.

(1)

**2723.** மலேகளு மரங்களு மணிக்கற் பாறையு
மலேபுன னதிகளு மருவிச் சாரலு
மிலேசெறி பழுவமு மினிய சூழலு
நிலேமிகு தடங்களு மினிது நீங்கினர்.

மலேகளும், மரங்களும், மணிக் கற் பாறையும்
அலே புனல் நதிகளும், அருவிச் சாரலும்,
இலே செறி பழுவமும், இனிய சூழலும்,
நிலே மிகு தடங்களும், இனிது நீங்கினர்.

பொ :—மலேகளேயும், மரங்களேயும், நீல மணி போன்ற கருங் கற்பாறைகளேயும், அலேகளேயுடைய நீர் பெருகுகின்ற ஆறுகளேயும், அருவி வீழ்கின்ற மலேச்சாரல்களேயும், இலேகள் அடர்ந்த காடு களேயும், பிற இனிய இடங்களேயும், நிலேக்கு மேற்பட்டு ஆழ்ந்த குளங்களேயும் இனிமையாகக் (கண்டு கொண்டே) கடந்து சென்ருர்கள்.

கு :—சரபங்கன் ஆசிரமத்தை அரிதின் நீங்கிய இராம இலக்குவர், மலே முதலியவற்றை இனிது நீங்கினர் என்க. மலே முதலியவற்றின் காண்டற்கினிய காட்சிகள் அவர்கள் உள்ளத்தைக் கவர்தலின் வழிச் செல் வருத்தம் இன்றி மகிழ்ச்சியுடன் கடந்தார்கள் என்பார், 'இனிது நீங்கினர்' என்ருர். மணிக்கல்—நீல மணி போன்ற கல்; கருங்கல் எனலுமாம். பழுவம்—காடு. 'இனிய சூழல்' என்றது, வெயில் நுழைவறியாக் குயில் நுழை பூம்பொழில் முதலியவற்றை. நீந்துதற்குரிய ஆழமான நீர் மிக்க தடம் என்பார், 'நிலேமிகு தடம்' என்ருர். நிலே - நிற்றற்குரிய நீரையுடையது, 'யானேக்கு நீத்து முயற்கு நிலே யென்ப, கானக நாடன் சுனே' என்புழியும் 'நிலே' இப்பொருட்டாதல் காணலாம். நீங்குதல் - கடந்து செல்லுதல். (2)

தண்டக வனத்து முனிவர் இராமனேக் காண்டல்

**2724.** பண்டைய வயன்றரு பால கில்லரு
முண்டரு மோனரு முதலி ஞேர்களத்
தண்டக வனத்துறை தவத்து ளோரெலாங்
கண்டன ரிராமனேக் களிக்குஞ் சிந்தையார்.

பண்டைய அயன் தரு பாலகில்லரும்,
முண்டரும், மோனரும், முதலிஞேர்கள், அத்

தண்டக வனத்து உறை தவத்துளோர் எலாம்
கண்டனர் இராமனைக் களிக்கும் சிந்தையார்.

பொ :—எல்லோர்க்கும் முன்னே தோன்றிய பழமையையுடைய பிரமன் பெற்ற பாலகில்லரும், தலையை மழித்துள்ள முண்டர்களும், பேசாவிரதம் பூண்ட மோனரும் முதலியவர்களாகிய அந்தத் தண்டக வனத்தில் தங்கியுள்ள தவத்தினர் எல்லாம் களிக்கும் சிந்தையராய் இராமனைக் கண்டார்கள்.

கு :—உயிர்களுள் முன் தோன்றியவன் பிரமனே ஆதலின்' 'பண்டைய அயன்' என்றார். பிரமன் உடம்பிலுள்ள உரோமத்தில் தோன்றியவர்கள் ஆதலின் வாலகில்யர் எனப்பட்டார். வாலகில்யர் - உரோமத்தில் தோன்றியவர். இவர்கள் கட்டைவிரல் அளவு வடிவினர், அறுபதினாயிரர், சூரியனோடு திரிகின்றவர் என்று புராணம் கூறும். பாலகில்லர் என்பது வடமொழித் திரிபு. முதலினோர்களாய் உறை தவத்துளோரெலாம் களிக்குஞ் சிந்தையராய்க் கண்டனர் என்று இயையும். தண்டகவனத்துறை தவத்துளோர் இராமனைக் கண்டனர் என்றமையால்,இராமன் முதலியோர் தண்டக வனத்தை அடைந்தார்கள் என்பது பெறப்படும். விளக்கின் வரவும் இருளின் செலவும் ஒருங்கு நிகழ்தல் போல, இராமனைக் காண்டலும் சிந்தை களித்தலும் ஒருங்கு நிகழ்ந்தன. அயன்தரு பண்டைய பாலகில்லர் என்று இயைப்பினும் ஆம். (3)

### தண்டகவனத்து முனிவர்நிலை 2725—2729

2725. கனைவரு கடுஞ்சினத் தரக்கர் காயவோர்
வினைபிறி தின்மையின் வெதும்பு கின்றன
ரனல்வரு கானகத் தமுத ளாவிய
புனல்வர வுயிர்வரு முலவை போல்கின்றார்.

கனை வரு கடுஞ்சினத்து அரக்கர் காய, ஓர்
வினை பிறிது இன்மையின், வெதும்புகின்றனர்;
அனல் வரு கானகத்து, அமுது அளாவிய
புனல் வர, உயிர் வரும் உலவை போல்கின்றார்.

பொ :—மிகுதியாக வருகின்ற கடுமையான கோபத்தையுடைய அரக்கர் வருத்த, அவர்க்கெதிராகச் செய்யும் பிறிதோர் உபாயம் இன்மையால் வெதும்புகின்ற முனிவர்கள், நெருப்புப் பொருந்திய காட்டில் அமுதம் கலந்த வெள்ளம் வருதலால் உயிர் பெற்றுத் தளிர்க்கின்ற மரத்தைப் போல்வாராயினர்.

கு :—காய - வருத்த. காய வெதும்புகின்றனர் என்ற சொல்நயம் காண்க. வினை - உபாயம். பிறிதோர்வினை என இயையும். வெதும்புதல் - வாடுதல். வெதும்புகின்றனர் என்ற வினையாலணையும் பெயர், போல்கின்றார் என்ற வினைகொண்டு முடியும். அரக்கரின் கோபக்கனலால் வாடியுள்ள முனிவர்கட்குக் காட்டுத் தீயால் வாடியுலர்ந்த மரம் உவமை. தண்ணீர்வரத் தளிர்க்கும் உலர்ந்த மரங்களைப் போல அருள் நெஞ்சுடைய இராமன் வரவால் முனிவர்கள் வாட்டம் நீங்கி மகிழ்ந்தார்கள். அமுதம் என்றது அமுதத் தன்மையை. உயிர்வருதலாவது தளிர்த்தல். உலவை - உலர்ந்த மரம். அரக்கரின் சினத்தால் துன்புறும் முனிவர்கள், இராமன் வரவால் இன்புற்றனர் என்பது கருத்து. (4)

**2726.** ஆய்வரும் பெருவலி யரக்கர் நாமமே
வாய் வெரீஇ யலமரு மறுக்க நீங்கினர்
தீவரு வனத்திடை யிட்டுத் தீர்ந்ததோர்
தாய்வர நோக்கிய கன்றின் தன்மையார்.

ஆய் வரும் பெருவலி அரக்கர் நாமமே
வாய் வெரீஇ அலமரும் மறுக்கம் நீங்கினர்;
தீ வரு வனத்திடை இட்டுத் தீர்ந்தது ஓர்
தாய்வர, நோக்கிய கன்றின் தன்மையார்.

பொ :—காட்டுத் தீ பரவி வருகின்ற காட்டுக்கு நடுவில் விட்டு நீங்கிய ஒரு தாய்ப் பசு மீண்டு வருதலைக் கண்ட கன்றினது தன்மை போன்ற மகிழ்ச்சித் தன்மையுடைய முனிவர், மேலும் மேலும் பெருகுகின்ற பெரிய வலிமையையுடைய அரக்கரின் பெயர்களையே (கனவிலும்) பிதற்றி வருந்துகின்ற முன்னைக் கலக்கம் முழுதும் நீங்கினர்கள்.

கு :—ஆய்வரல் - பெருகுதல். வாய் வெருவுதலாவது அஞ்சற்குரியார் பெயரை உறங்கும்போதும் தம் நினைவின்றிப் பிதற்றுதல். கடவுள் நாமமே பிதற்ற வேண்டிய முனிவர்கள், அந்நிலையை விடுத்து, அரக்கர் நாமமே பிதற்ற வேண்டியவர்கள் ஆயினர்கள் என அவர்கள் அச்சத்தின் மிகுதியுணர்த்தியவாறு. அலமரல், செய்வதறியாது மனஞ் சுழலுதல். மறுக்கம் - கலக்கம். தனக்குவமையில்லாதானாகிய இராமனது சார்பு பெற்றுவிட்டமையால் முனிவர்கள் முன்னைய அலக்கணும் கலக்கமும் நீங்கப் பெற்றார்கள் என்க. தீ அரக்கர்க்கும் கன்று முனிவர்க்கும் தாய் இராமனுக்கும் உவமை. காட்டுத் தீ ஓரிடத்தில் பற்றி மற்ற இடங்கட்கும் விரைவில் பரவும்

இயல்பு தோன்ற 'தீவருவனம்' என்றார். தீர்தல் - நீங்குதல். தன் கன்று தீயால் வருந்தாமல் காப்பாற்றும் தாய்ப் பசுப் போல இராமனும் அரக்கரால் முனிவர் வருந்தாமல் காப்பாற்றும் ஆற்றலும் அன்பும் உடையவன் என்பது புலனும். 'தாயொக்கும் அன்பில்' (171) என அரசன் கூறப்படுதல் ஈண்டைக்கு நினைக்க. கன்றின் தன்மை யாவது அச்சம் நீங்கி மகிழ்தல். கன்றின் தன்மையாராகிய முனிவர் மறுக்கம் நீங்கினர் என இயையும். முன்னைப் பாட்டில் 'புனல்வர உயிர் வரும் உலவை போல்கின்றார்' என்ற உவமை, இராமன் வரவால் முனிவர் மகிழ்ந்தமை விளக்கிற்று; இங்குக் கூறிய உவமை, அவர் கலக்கம் நீங்கியதை விளக்கிற்று என வேறுபடுத்திக் காண்க. (5)

**2727.** கரக்கருங் கடுந்தொழி லரக்கர் காய்தலிற்
பொரற்கிட மின்மையிற் புழுங்கிச் சோருந
ரரக்கரென் கடலிடை யாழ்கின் றாரொரு
மரக்கலம் பெற்றென மறுக்க நீங்கினர்.

கரக்க (அ)ருங் கடுந் தொழில் அரக்கர் காய்தலின்
பொரற்கு இடம் இன்மையின் புழுங்கிச் சோருநர்,
அரக்கர் என் கடலிடை ஆழ்கின்றார், ஒரு
மரக்கலம் பெற்றென மறுக்கம் நீங்கினர்.

பொ:—யாரும் தம்மை மறைத்துத் தப்பித்துக் கொள்ள இயலாதவாறு விரைந்து கொடுமை செய்யும் தொழிலையுடைய அரக்கர் கோபித்து வருத்துதலாலும், (தவத்தால் மெலிந்துள்ள தாம் அவ்வரக்கரோடு)போர் செய்து வெல்லுதற்கு இடம் இன்மையாலும், மனம் புழுங்கிப்பின் உடம்பு சோர்கின்றவர்களாய் அவ் அரக்கரின் துன்பம் என்கின்ற கடலிடையில் அகப்பட்டு ஆழ்ந்துகொண்டிருக் கின்ற முனிவர், அக்கடல் கடந்தேறுதற்கு ஒரு தோணியைப் பெற்றாற்போல (இராமனைத் துணையாகப் பெற்று) மனக் கலக்கம் நீங்கினவரானார்கள்.

கு:—கரத்தல் - மறைத்தல். தம்மைத் தாக்கவரும் அரக்கர் காணுவாறு தம்மை மறைத்துக்கொள்ள (ஒளிந்துகொள்ள) ஒருவர் முயன்றாலும் அது முடியாவண்ணம் முற்பட்டு வந்து துன்புறுத்தும் தொழிலையுடையவர்கள் என அரக்கரின் கொடுமை மிகுதி புலப்படுத் தியவாறு. காய்தலிற் புழுங்கிப் பொரற்கு இடம் இன்மையில் சோருநர் என நிரல்நிறையாகப் பொருள் கொள்க. புழுங்குதல் உளத்திற்கும் சோர்தல் உடம்பிற்கும் கொள்க. சோருநராய் ஆழ்

கின்றார் என முற்றெச்சமாக்குக. உடம்பு சோர்ந்தால் கடலிடை ஆழ்தல் இயல்பாதல் அறியலாம். அரக்கரென்கடல் என்றது உருவகம். அரக்கர் என்றது ஆகுபெயராய் அவரால் நிகழும் துன்பத்தையுணர்த்தியது. மரக்கலம் பெற்றென என்ற உவமைக்கு ஏற்ப இராமனைப் பெற்று என்ற உவமேயம் வருவிக்கப்பட்டது. 'அரக்கர் வேலைக்கோர் தோணி பெற்றனம் என' (உயுத்த-முதற்போர் : 102) எனப் பின்கூறுவதும் நோக்குதல் தகும். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்" (குறள்-10) என்ற வள்ளுவர் வாய்மொழியை நினைப்பிக்கின்றது இச்செய்யுள். முனிவரின் துன்பநிலையையும் இராமன் வரவால் அது நீங்கும் நிலையையும் பிறிதுமோர் உவமையால் விளக்கியவாறு. (6)

**2728.** தெரிஞ்சுற நோக்கினர் செய்த செய்தவ
மருஞ்சிறப் புதவநல் லறிவு கைதர
விரிஞ்சுறப் பற்றிய பிறவி வெந்துயர்ப்
பெருஞ்சிறை வீடுபெற் றனைய பெற்றியார்.

தெரிஞ்சு உற நோக்கினர்; செய்த செய்தவம்
அருஞ் சிறப்பு உதவ, நல் அறிவு கைதர,
விரிஞ்சு உறப் பற்றிய பிறவி வெம் துயர்ப்
பெருஞ்சிறை வீடு பெற்றனைய பெற்றியார்.

பொ :—தாம் நெடுங்காலமாக வருந்திச் செய்த தவமானது பெறுதற்கரிய சிறப்பினைத் தருதலாலும் நல்லதாகிய ஞானம் கை கொடுத்து உதவுதலாலும், தம்மை விரிவாகச் சூழ்ந்து பற்றி வந்துள்ள பிறவியால் வரும் கொடுந்துயரமாகிய பெரிய சிறையினின்றும் விடுதலையுற்று முத்திபெற்றாற் போன்ற தன்மையராய் (இராமனுடைய உண்மைத் தன்மையான பரநிலையை) உணர்ந்து நோக்கி இன்புற்றனர்.

கு :—தெரிந்து, விரிந்து என்பன எதுகை நோக்கிப் போலியாயின. செய்தவம் என்பதில் உள்ள 'செய்' என்பது 'பெயர்ச் சொற்கிளவி' என்புழிச் சொல் என்பது போலக் கருத்தின்றி வந்தது; நல்லறிவு-மெய்ஞ்ஞானம். பிறவியால் வருந்துயர் உயிரை நெடுங்காலமாகப்பற்றி வருத்தி வருதலின் 'விரிஞ்சுறப் பற்றிய துயர்' என்றார். பற்றிய துயர், பிறவித்துயர் வெந்துயர் எனத் தனித்தனி இயையும். எளிதில் விடுதலைபெற இயலாத சிறை என்பார், பெருஞ்சிறை எனச் சிறப்பித்தார். பிறவித் துயரினின்று நீங்கி முத்தியுற்றார், பரவாசுதேவனை இமையாமற் கண்டு இன்புறலே

வீட்டின்பமாகும் ஆதலின், இராமனுடைய உண்மை நிலையை ஞானத்தாலறிந்து நோக்கி இன்புற்ற தண்டகவனத்து முனிவர் நிலைக்கு வீடு பெற்ற நிலையை உவமை கூறினர். வீடு பெற்றனைய பெற்றியாராய் நோக்கினர் என்க. வீடு பெற்றனைய என்ற உவமையால் இன்புற்றனர் என்ற சொல் வருவிக்கப்பட்டது. இதனல் முனிவர்கள் இராமனுடைய எழில்மிக்க வடிவத்தை நோக்கி மகிழ்ந்தமை விளக்கப்பட்டது. (7)

2729. வேண்டின வேண்டினர்க் களிக்கு மெய்த்தவம்
பூண்டுள ராயினும் பொறையி னாற்றலான்
மூண்டெழு வெகுளியை முதலி னீக்கின
ராண்டுறை யரக்கரா லலைப்புண் டாரரோ.

வேண்டின வேண்டினர்க்கு அளிக்கும் மெய்த்தவம்
பூண்டுளர் ஆயினும், பொறையின் ஆற்றலால்,
மூண்டு எழு வெகுளியை முதலின் நீக்கினர்;
ஆண்டு உறை அரக்கரால் அலைப்புண்டார் அரோ.

பொ :—முனிவர்கள், விரும்பியவற்றை விரும்பினவர்க்குக் கொடுக்கின்ற உண்மையான தவ ஒழுக்கத்தை மேற்கொண்டுள்ளார் ஆயினும், பொறுமையின் வலிமையால், தம்முள்ளத்தே பெருகி எழுகின்ற கோபத்தை வேரோடு களைந்தவர் ஆதலால், அங்குள்ள அரக்கரால் அலைப்புண்டு வருந்தினர்கள்.

கு :—முனிவர் தவத்தின் ஆற்றலால் அரக்கரைக் கொல்லாது அவரால் அலைப்புண்டு வருந்துவானேன்? என்ற வினவை எழுப்பிக்கொண்டு, பொறுமையின் ஆற்றலால் வெகுளியை முதலின் நீக்கினர் ஆதலின், அவரைக் கொல்லாது அவரால் அலைப்புண்ண நேர்ந்தது என விடை கூறி விளக்கியவாறு. 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ மீண்டு முயலப்படும்' (குறள்-265) என்பதைத் தழுவி முதலடி அமைந்துள்ளது. பொறை-பொறுமை. முதல் - அடி; வேர். தவ ஒழுக்கத்தை மேற்கொண்டவர்கள் வெகுண்டால் வெகுளப்பட்டார் அழிவது திண்ணம் ஆயினும், பல்லாண்டு முயன்று செய்த தவம் கண நேரத்து வெகுளியால் அழிவெய்தும் ஆதலின், ஆன்றமைந்த முனிவர்கள் வாசனை வயத்தால் மூண்டெழும் வெகுளியை வேரோடு களைந்து பொறுமையை மேற்கொண்டனர் என்க. "வேண்டிய வேண்டியாங் கெய்தற் பயத்ததாய தவத்தைப் பிறர்மேற் சாபம் விடுதற்காக இழந்து அத் தவத்துன்பத்தோடு பழைய பிறவித் துன்பமும் ஒருங்

கெய்துதலின், 'தன்னையே கொல்லும்' என்றார்.'' (குறள்-305) எனப் பரிமேலழகர் விளக்கியுள்ளமை காண்க. (8)

### இராமன் தொழ, முனிவர் வாழ்த்தல்

2730. எழுந்தன ரெய்தின
ரிருண்ட மேகத்தின்
கொழுந்தென நின்றவக்
குரிசில் வீரனைப்
பொழிந்தெழு காதலிற்
பொருந்தி னரவன்
றொழுந்தொறுந் தொழுந்தொறு
மாசி சொல்லுவார்.

எழுந்தனர், எய்தினர், இருண்ட மேகத்தின்
கொழுந்தென நின்ற அக் குரிசில் வீரனைப்
பொழிந்து எழு காதலின் பொருந்தினர்; அவன்
தொழுந்தொறும் தொழுந்தொறும், ஆசி சொல்லுவார்.

பொ :—(முனிவர்கள்) எழுந்தார்கள்; எதிர் சென்றார்கள்; இருண்ட மேகத்தின் கொழுந்துபோல் வந்து நின்ற அவ்வாண்மை மிக்க வீரனைப் பொங்கி வழிகின்ற அன்போடு அண்மினார்கள்; அவர்களைக் கண்டு அவ்விராமன் தொழுந்தோறும் தொழுந்தோறும், வாழ்த்துக் கூறுபவராயினர்.

கு :—இராமன் சேய்மையில் வரக்கண்ட தண்டகவனத்து முனிவர்கள் மகிழ்ச்சி கொண்ட நிகழ்ச்சியை ஐந்து செய்யுள்களாற் கூறி, இங்கு அம்முனிவர்கள் அன்போடு இராமன் எதிர் சென்று அணுகினமையும், வணங்கிய இராமனுக்கு வாழ்த்துக் கூறினமையும் விளக்கியவாறு. முனிவர் பலராதலின் அவரைத் தனித்தனியே பன்முறை தொழுதமை தோன்ற, 'தொழுந்தொறும் தொழுந்தொறும்' என்றார். அங்ஙனமன்றி முனிவர் குழாத்துக்குப் பன்முறை வணக்கம் செய்தான் இராமன் என்றலும் ஒன்று. பன்முறை அன்பால் வணங்கினாற்கு ஒரு முறை வாழ்த்துக் கூறினும் அமையும் ஆயினும், ஆர்வ மிகுதியால் தொழுந்தோறும் வாழ்த்துக் கூறிக்கொண்டே இருந்தனர் என்க. இராமன் வணங்குவதில் விருப்பங் கொண்டதைக் காட்டிலும் அவனுக்கு முனிவர் வாழ்த்துக் கூறுவதில் விருப்பம் மிக்கார் ஆயினர். இருண்ட மேகம் இராமனுக்கு நிறத்தாலும் பயனாலும் உவமையாகும். மேகம் மழை பெய்து உயிர்களைக்

காப்பது போல இராமன் அருளால் உயிர்களைக் காப்பாற்றும் இயல்பினன் என்க. (9)

2731. இனியதோர் சாலைகொண் டேகி யிவ்வயி
னனியுறை யென்றவற் கமைய நல்கித்தாந்
தனியிடஞ் சார்ந்தனர் தங்கி மாதவ
ரனைவரு மெய்தின ரல்லல் சொல்லுவான்.

இனியது ஓர் சாலை கொண்டு ஏகி, 'இவ்வயின்
நனி உறை' என்று அவற்கு அமைய நல்கித் தாம்
தனி இடம் சார்ந்தனர் தங்கி, மாதவர்,
அனைவரும் எய்தினர் அல்லல் சொல்லுவான்.

பொ :—(ஆசி சொல்லிய முனிவர்,) அவன் தங்குதற்கினியதாகிய ஒரு பன்ன சாலைக்கு அழைத்துக்கொண்டு சென்று, 'இவ்விடத்தில் நலமாகத் தங்குக' என்று அவ்விராமனுக்குப் பொருத்தமான இடத்தைக் கொடுத்துவிட்டுத் தாம், தம் தம் தனியிடங்களைச் சார்ந்து சில நாள் தங்கி இருந்து, பின் அப்பெரிய தவ முனிவர் அனைவரும் தம் அல்லலைச் சொல்லுதற்காக இராமனை அடைந்தார்கள்.

கு :—சாலை - பன்ன சாலை. அமைய நல்குதல், அவன் தகுதிக்கேற்பக் கொடுத்தல். தங்கி என்றமையால், சிலநாள் என்பது வருவிக்கப்பட்டது. புதிய இடத்திற்கு வந்த இராமனிடம் உடனே தம் அல்லலைச் சொல்லுதல் முறையன்று ஆதலின், முனிவர் சில நாள் தங்கியிருந்து பிறகு வந்து சொல்லுதலே பொருத்தமாதல் காணலாம். அல்லல் - அரக்கரால் படும் துன்பம். சொல்லுவான் எய்தினர் என்க. (10)

## முனிவர் இராமனுக்குத் தம் அல்லலைச் சொல்லுதல் 2732–2737

2732. எய்திய முனிவரை யிறைஞ்சி யேத்துவந்
தையனு மிருந்தன னருளென் னென்றலும்
வையகங் காவலன் மைந்த வந்ததோர்
வெய்யவெங் கொடுந்தொழில் விளைவு கேளெனா.

எய்திய முனிவரை இறைஞ்சி, ஏத்து உவந்து,
ஐயனும் இருந்தனன்; 'அருள் என் ?' என்றலும்,
'வையகம் காவலன் மைந்த! வந்தது ஓர்
வெய்ய வெங் கொடுந்தொழில் விளைவு கேள்' எனா.

பொ :—தன்னை அடைந்த முனிவரை வணங்கி, அவர்கள் வாழ்த்தினை மகிழ்ந்து இராமனும் வீற்றிருந்தனனாய்த் "தங்கள் கட்டளை என்ன?" என்று வினவலும், (முனிவர்கள்) 'உலகக் காவலனாகிய தயரதனுடைய மைந்தனே! எமக்கு நேர்ந்துள்ள ஒரு மிக மிகக் கொடுமையான தொழிலின் விளைவினைக் கேள்' என்று,

கு :—என்றார் (2737) என்ற சொல்லோடு முடியும்; குளகம். ஏத்துதல் - வாழ்த்துதல்; 'இறைஞ்சியேத்தினாள்' (சீவக. 324). இருந்தனன் முற்றெச்சம். 'வையகங்காவலன்' என்றது தயரதனை. 'வையக முழுவதும் வறியனோம்பு மோர், செய்யெனக் காத்தினிது அரசு செய்கின்றான்' (179) என முன்னர்க் கூறியிருத்தலும் நினைக்க. எம்மைக் காக்கும் கடமை முன் தயரதனுக்கு இருந்தது போல அவன் மைந்தனாகிய உனக்கும் உண்டு என்ற கருத்துத் தோன்ற "வையகங் காவலன் மைந்த!" என விளித்தனர். முனிவரைக் காக்கும் பொறுப்புத் தயரதனுக்கு இருந்தது என்பதை, "என்னனைய முனிவரும் இமையவரும் இடையூறொன்றுடையரானால்......அயோத்தி என்னும் பொன்னகருமல்லாது புகலுண்டோ?" (324) எனக் கோசிகன் கூறியவாற்றான் அறியலாம். 'அருள் என்' என்றது உயர்ந்தோர்பால் சொல்லாடு முறையில் கூறியது; 'கட்டளை என்னை?' என்பதே பொருள். கொடுமையின் மிகுதி தோன்ற, 'வெய்ய வெங் கொடுந்தொழில்' என ஈரடை கொடுக்கப்பட்டது. (11)

**2733.** இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சின
ரரக்கரென் றுளர்சில ரறத்தி னீங்கினார்
நெருக்கவும் யாம்படர் நெறிய லாநெறி
துரக்கவு மருந்தவத் துறையு ணீங்கினேம்.

'இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்,
அரக்கர் என்று உளர் சிலர், அறத்தின் நீங்கினார்,
நெருக்கவும், யாம் படர் நெறி அலா நெறி
துரக்கவும், அருந்தவத் துறையுள் நீங்கினேம்.'

பொ :—இரக்கம் என்று சொல்லப்படும் ஒரு குணம் இல்லாத நெஞ்சினை உடையவராய், அரக்கர் என்று சிலர் இருக்கின்றனர்; அவர்கள் அறநெறியில் நீங்கினாராய் எம்மை வருத்துதலாலும், யாம் செல்லுதற்குரிய நெறி அல்லாத தீவழியில் எம்மைச் செலுத்துதலாலும், அருமையான தவத்துறையுள் நின்றும் யாம் நீங்கினோம் ஆனோம்.

கு :— இரக்கம் - மன உருக்கம்; அன்பு. இரக்கம் என்ற குணம், இங்குப் பொருள் எனப்பட்டது; வைசேடிகர் மதம் பற்றி. 'சினத்தைப் பொருள் என்று கொண்டவன்' (குறள்-307) என்புழிப் பரிமேலழகர் கூறியது காண்க. நெருக்குதல் - வருத்துதல். அறத்தினீங்கினாராய் நெருக்கவும் என முற்றெச்சமாக்கி முடிக்க. குற்றம் செய்தாரை நெருக்குதல் அறத்தொடு நெருக்குதலாகும்; குற்றம் சிறிதும் செய்யாதவரை அரக்கர் நெருக்குதலின் 'அறத்தினீங்கினாராய் நெருக்கவும்' என்றார். படர்தல் - செல்லுதல். நெறியலா நெறி - தீய நெறி; துரக்கவும் - செலுத்தவும். தீய நெறியில் செலுத்தலாவது நீராடாமலும் செபதபங்கள் செய்யாமலும் இருக்குமாறு வற்புறுத்துதல் போல்வது. அரக்கர், தாம் அறத்தின் நீங்கினாராய் நெருக்குதலும் முனிவரை அறத்தினீங்குமாறு வற்புறுத்துதலும் ஆகிய இருவகையானும் முனிவர், தம் தவத்துறையுள் நீங்கினார்கள் என்க. (12)

2734. வல்லியம் பலதிரி வனத்து மானென
வெல்லியும் பகலுநொந் திரங்கி யாற்றலெஞ்
சொல்லிய வறநெறித் துறையு நீங்கினெம்
வில்லியன் மொய்ம்பினாய் வீடு காண்குமோ.

"வல்லியம் பல திரி வனத்து மான் என,
எல்லியும் பகலும் நொந்து இரங்கி ஆற்றலெம்;
சொல்லிய அற நெறித் துறையும் நீங்கினெம்;
வில் இயல் மொய்ம்பினாய்! வீடு காண்குமோ?"

பொ :—"புலிகள் பல திரிகின்ற காட்டில் வாழும் மானைப்போல, இரவும் பகலும் வருந்திப் பரிதவித்து (அரக்கர் செய்கின்ற கொடுமைகளைப்) பொறுக்கமாட்டாதவர்களானோம்; (நூல்களில்) சொல்லப்பட்ட அறநெறிகளின் துறைகளையும் நீங்கினோம்; வில் பொருந்திய தோளையுடையவனே! இத்தகைய நாங்கள் இத்துன்பத்தில் நின்றும் விடுதலை பெறுவேமோ?"

கு: —வல்லியம் - புலி. ஒரு புலிக்கே பல மான்கள் அஞ்சும்; பல புலி திரியும் காட்டில் மான் அஞ்சி வருந்தல் சொல்ல வேண்டுமோ என்க. "குயின் மழலையாள், மானிளம்பேடை, அயிலெயிற்றுவெம் புலிக்குழாத் தகப்பட்டதன்னாள்" (சுந்தர-333) என இவ்வுவமையைச் சீதை அரக்க மாதரிடை அகப்பட்டு வருந்தினமைக்கும் பின் கூறுதல் காண்க. எல்லி - இரவு. 'எல்லியும் பகலும் போலத் தழுவினர் எழுவிற்றோளார்' (உயுத்த - வீடணனடைக்-123) என்புழியும் இச்சொல் இப்பொருளில் பயின்றமை காணலாம்

இரங்குதல் - பரிதபித்தல்; அழுதலும் ஆம். ஆற்றலெம் என்பதற்குச் செயப்படுபொருள் வருவித்துரைக்கப்பட்டது. ஆற்ருமையே அன்றி அறநெறித்துறையும் நீங்கினேம் என்று பொருள்படுதலின், உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளது. 'அவ்வரக்கரை வெல்லும் வில்லும் தோள்வலியும் உடையையாதலின் நீயே அவர்களை அழித்து எம்மைக் காத்தல் வேண்டும்' என்ற குறிப்புத் தோன்ற 'வில்லியன் மொய்ம்பினுய்' என்ற விளி அமைந்துள்ளமை காண்க. மொய்ம்பு - தோள். "பூந்தாது மொய்ம்பினவாக" (கலித்-88) என்றதும் காண்க. வீடு, பரமபதமும் ஆம். அறநெறித்துறை நீங்கியவர்க்கு வீடு காண்டல் இயலாமை நினைக்க. காண்கும் என்பதிலுள்ள 'கும்' எதிர்கால முணர்த்திற்று. ஓகாரம் வினவிடைச்சொல். (13)

2735. மாதவத் தொழுகலெ மறைகள் யாவையு
மோதலெ மோதுவார்க் குதவ லாற்றலெ
மூதெரி வளர்க்கிலெ முறையி னீங்கினே
மாதலி னந்தண ரேயு மாகிலேம்.

'மா தவத்து ஒழுகலெம்; மறைகள் யாவையும்
ஓதலெம்; ஓதுவார்க்கு உதவல் ஆற்றலெம்;
மூது எரி வளர்க்கிலெம்; முறையின் நீங்கினேம்;
ஆதலின் அந்தணரேயும் ஆகிலேம்!'

பொ:—பெருமையுடைய தவநெறியில் ஒழுகமாட்டேம்; வேதங்கள் எல்லாவற்றையும் ஓதமாட்டேம்; ஓதுகின்ற தகுதியுள்ளவர்கட்கு அவ்வேதத்தை ஓதுவித்து உதவவும் மாட்டேம்; பழமையான வேள்வித் தீயை (முறைப்படி) வளர்க்கமாட்டேம்; (எமக்குரிய) முறையில் நின்றும் நீங்கினேம்; ஆதலின் யாம் அந்தணரும் ஆகமாட்டேம்.

கு:—ஓதுவார்க்கு உதவலாவது, ஓதுவித்தல். மூதெரி - பழமையான வேள்வித்தீ. பழங்காலம் தொட்டு வளர்க்கப்படுதலின் மூதெரி எனப்பட்டது. முறை என்றது முனிவர்க்கு உரிய முறைகளை. முனிவர்க்குத் தவத்தோர், அறவோர், அந்தணர் என்ற பெயர்களுண்டு. அவற்றுள், 'தவத்துறையுள் நீங்கினேம்' என்றமையால் தவத்தோர் ஆகாமையும், 'அறநெறித்துறையும் நீங்கினெம்' என்றமையால் அறவோர் ஆகாமையும் முன்னிரண்டு செய்யுள்களில் விளக்கினராகலின் இங்கு, 'அந்தணரேயும் ஆகிலேம்' என எச்சஉம்மையொடு கூறினர். இதனல், தவ ஒழுக்கமும் வேதம்

ஓதுதலும் ஓதுவித்தலும் வேள்வி வேட்டலும் மேற்கொண்டோரே அந்தணர் என்று பெயர்பெறுதற்குரியவர் என்பது பெறப்பட்டது. முறையினீங்கினேம் என்பதற்கு வேட்பித்தலாகிய முறையினின்று நீங்கினேம் எனப் பொருள் கொண்டு அறுதொழிலில் நாற்றெழில் கூறினர் என்றலும் ஆம். (14)

41, 45, 52 என்ற குறியீட்டு எண்ணுள்ள அச்சுப் புத்தகங்களில் பின்வருபவை மிகைப் பாடல்களாகக் காட்டப்பட்டுள்ளன.

2735. (a) அருந்திற லுலகொரு மூன்று மாணையிற்
புரந்திடுந் தசமுகத் தொருவன் பொன்றிலாப்
பெருந்தவஞ் செய்தவன் பெற்ற மாட்சியால்
வருந்தினேம் நெடும்பகல் வரத யாமெலாம்.

2735. (b) தேவர்க டமைத்தினந் துரந்து மற்றவர்
தேவியர் தமைச்சிறைப் படுத்தித் திக்கெலாம்
கூவிடத் தடிந்தவர் செல்வங் கொண்டபோர்
மாவலித் தசமுகன் வலத்துக் கியார்வலார்.

2735. (c) அவன்வலி படைத்துமற் றரக்கர் யாவரும்
சிவன்முதன் மூவரைத் தேவர் சித்தரைப்
புவனியின் முனிவரை மற்றும் புங்கவர்
எவரையுந் துறந்தன ரிறைவ வின்னுமே.

2735. (d) ஆயிர கோடியென் றுரைக்கு மண்டமேன்
மேயபோ ரரக்கரே மேவ லல்லதைத்
தூயசீ ரமரரென் றுரைக்குந் தொல்கணத்
தாயவ ரெங்ஙனென் றறிந்தி லோமையா.

2735. (e) வெள்ளியங் கிரியிடை விமலன் மேலைநாட்
கள்ளிய வரக்கரைக் கடிகி லேனெனு
ஒள்ளிய வரமவர்க் குதவி ஞன்கடற்
பள்ளிகொள் பவன்பொரு திளைத்த பான்மையான்.

2735. (f) நான்முக னவர்க்குநன் மொழிகள் பேசியே
தானுறு செய்வினைத் தலையி னிற்கின்ருன்
வானில்வெஞ் சுடர்முதல் வயங்கு கோளெலாம்
மேன்மையி லருஞ்சிறைப் பட்டு மீண்டுளார்.

2736. இந்திர னெனினவ னரக்க ரேயின
சிந்தையிற் சென்னியிற் கொள்ளுஞ் செய்கையா
னெந்தைமற் றியாருள ரிடுக் கணீக்குவார்
வந்தனை யாஞ்செய்த தவத்தின் மாட்சியால்.

'இந்திரன் எனின், அவன் அரக்கர் ஏயின
சிந்தையில், சென்னியில், கொள்ளும் செய்கையான்;
எந்தை! மற்று யார் உளர் இடுக்கண் நீக்குவார்?
வந்தனை, யாம் செய்த தவத்தின் மாட்சியால்'.

பொ:—'இந்திரனோ என்றால், அவன் அரக்கர் ஏவின தொழில்களை மனத்தாலும் தலையாலும் ஏற்றுக்கொள்ளும் செய்கையுடையவனாக இருக்கின்றான்; எம் தந்தை போல்பவனே! எம் துன்பங்களை நீக்கவல்லவர்கள் மற்று யார் இருக்கின்றார்கள்? யாம் செய்த தவத்தின் மாட்சிமையால் (எம் துயர் துடைக்கவல்ல நீ) வந்தாய்'.

கு:—முனிவர்களாகிய தங்களைக் காக்குங் கடப்பாடுடையவன் தேவர் தலைவனான இந்திரனே ஆதலின், அவன் நிலைமையை விவரித்தனர். "என்னனைய முனிவரரும்......இடையூறொன்றுடையரானால்......கற்பக நாட்டணி நகரும்......அல்லாது புகலுண்டோ?" (324) என முன்னர்க் கோசிகன் கூறியவற்றால் முனிவர் இடையூற்றைத் துடைக்கும் இயல்பு இந்திரனுக்கு உண்டு என்பது புலனும். ஏயின - கட்டளையிட்டபணிகள். சிந்தையிற் சென்னியில் கொள்ளுதலாவது மனமுவந்து தலைமேல் ஏற்றுக் கொண்டு செய்தல். மனமின்றி அதிகாரத்திற்கடங்கி ஏற்றுக்கொள்ளவில்லை என்பது தோன்ற அங்ஙனங் கூறினர். இனி நிரல்நிறையாக்கி அரக்கர் ஏயினவற்றைச் சிந்தையில் கொள்ளுந் தன்மையான் சென்னியில் செய்யும் தன்மையான் எனப் பொருள் கூறலுமாம். திருமாலின் அமிசம் என்பதை ஞானத்தால் உணர்ந்தவராதலின் இராமனை 'எந்தை!' என விளித்தார். எம் தந்தை போல்பவனாய் எம்மைக் காத்தற்குரியை என்பது குறிப்பு. யாருளர்? என்ற வினா, யாரும் இன்மையுணர்த்திநின்றது. தவத்தின் மாட்சியால் வந்தனை என்று இயையும். காத்தற்குரிய விண்ணவர் வேந்தன் கைவிட்ட நிலையில் மண்ணுலகவேந்தன் மகனாகிய நீ கைவிடாது காக்கவந்தது யாம் செய்த தவத்தினாலேதான் என்றவாறு. (15)

**2737.** உருளுடை நேமியா லுலகை யோம்பிய
பொருளுடை மன்னவன் புதல்வ போக்கிலா
விருளுடை வைகலே மிரவி தோன்றினா
யருளுடை வீரநின் னபயம் யாமென்றார்.

'உருள் உடை நேமியால் உலகை ஓம்பிய
பொருள் உடை மன்னவன் புதல்வ! போக்கிலா
இருள் உடை வைகலேம்; இரவி தோன்றினாய்!
அருள் உடை வீர! நின் அபயம் யாம்' என்றார்.

பொ :—'உலக முழுதினும் உருண்டு செல்லும் தன்மையை யுடைய ஆணைச் சக்கரத்தால் உலகத்தை இடையூறின்றிக் காப் பாற்றிய எல்லாச் செல்வங்களையும் உடைய தயரத மன்னவனுடைய புதல்வனே! போக்க முடியாத (துன்ப) இருளையுடைய இரவில் இருக்கின்றேம்; (அத்துன்ப இருள் நீங்குமாறு) ஞாயிறு ஆகிய நீ வந்தாய்; அருளையுடைய வீரனே! நின் அடைக்கலம் யாம்' என்று கூறினர்.

கு :—ஆணையைச் சக்கரம் என்பது கவிமரபு. 'அறந்தெரி திகிரி' (பதிற்றுப்-22) எனவும் 'இனிதுருண்ட சுடர்நேமி' (புறநா-17)எனவும் கூறுதல் காண்க. ஆணையை நேமி என்றதற்கேற்ப உருளுதலும் கூறப்பட்டது. ஓம்புதலாவது, இடையூறு வாராமல் காத்தல். 'உலகையோம்பிய மன்னவன் புதல்வ' என்ற விளி, இவ்வுலகில் வாழ்கின்ற எம்மைக் காக்கும் கடப்பாடுடையவன் நீ என்ற குறிப்புத் தோன்ற நின்றது. இருளுடைவைகல் என்றது, இரவினை. போக் கிலா இருள் என்றமையால் போக்க முடியாத துன்பமாகிய இருள் என்பது பெறப்பட்டது. வைகல் - நாள்; என்றது இரவினை. துன்ப மாகிய இருளையுடைய போது, இராமனாகிய இரவி வந்தமையால் புலரும் என்பது கருத்து. இருள், இரவி என்ற மாட்டேறில்லா உருவகங்கள் போக்கிலா என்ற அடையாலும் தோன்றினாய் என்ற வினையாலும் விளக்கம் பெற்றன. இரவிகுலத்திராமனை இரவி என் றல் இயைபுடையதாதல் காணலாம். நல்லாரைக் காக்கும் அருளும், அல்லாரைக் காயும் வீரமும் உடையவன் என்பது தோன்ற 'அரு ளுடைவீர!' என்று விளித்தனர், நின்னபயம் யாம் என்றது, நின் னால் 'பயப்படாதீர்' என்று சொல்லிக் காக்கத்தக்க பொருளாயுள் ளேம் என்னும் கருத்தினது. புறவிருள் போக்கும் ஞாயிறுபோல எம் துன்ப விருளைப் போக்கும் நீ வந்துளாய்; நின்னடைக்கலம் யாங்கள் எல்லாம்; அருளுடைமையால் எங்களைக் காத்து, வீர முடைமையால் அரக்கரை வெல்க என்பது குறிப்பு. (16)

## இராமன் அபயம் அளித்தல் 2738 – 2746

**2738.** புகல்பு குந்திலரேற் புறத்தண் டத்தி
னகல்வ ரேனுமென் னம்பொடு வீழ்வராற்
றகவி றுன்பந் தவிருதிர் நீரெனப்
பகல வன்குல மைந்தன் பணிக்கின்றான்.

'புகல் புகுந்திலரேல், புறத்து அண்டத்தின்
அகல்வரேனும், என் அம்பொடு வீழ்வரால்;

தகவு இல் துன்பம் தவிருதிர் நீர்' எனப்
பகலவன் குல மைந்தன் பணிக்கின்றான்.

பொ :—(அச்சொல் கேட்ட) சூரிய குலத்துத் தோன்றிய இராமன், (முனிவரை நோக்கி அவ்வரக்கர்கள் இனி யாம் தீங்கு செய்யோம் என்று கூறிக் கொண்டு) என்னிடம் அடைக்கலம் புக வில்லையாயின் அவர்கள், (இவ்வண்டத்தை விடுத்து) அப்புறத்த தாகிய அண்டத்திற்குச் சென்றாலும் என் அம்பால் தரையில் இறந்து வீழ்வார்கள்; ஆகவே, நீவிரும் நும் தகுதிக்கு ஏலாத துன்பத்தை நீங்குமின் என்று மேலும் சொல்லுகின்றான்.

கு :—புகல்புகுதல் - (மன்னிப்புக் கேட்டு) அடைக்கலம் புகுதல். அரக்கர்கள் இதுகாறும் நல்லோரை நலிவுபல செய்து துன்புறுத்தி னாராயினும் தன்னை அடைக்கலம் புகுந்தால் அவரைக் கொல்லாத அருட்குணமுடையவன் என்பது புலப்படப் 'புகல் புகுந்திலரேல் வீழ்வர்' என்று கூறினான். "நீ மெய்கண்ட தீமை காணின், ஒப்ப நாடி யத்தக வொறுத்தி, வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற், றண்ட முந் தணிதிநீ பண்டையிற் பெரிதே" (புறநா-10) என்ற ஊன் பொதி பசுங்குடையார் வாக்கும் இங்கு நோக்கல் தகும். அவர்கள் யாண்டொளிப்பினும் உய்தியில்லை யென்பான், 'புறத்தண்டத்தின் அகல்வரேனும்' என்றும், இராமன் அம்பு அரக்கர் புக்குழிப் புக்குழிப் புக்குக் கொன்றன்றி மீளா வலத்தது என்பான், 'அம்பொடு வீழ் வர்' என்றும் கூறினான். தகவு, நடுவுநிலைமை என்று கொண்டு அரக்கர் நடுவுநிலை இன்றிச் செய்யும் துன்பம் என்று பொருள் கூறலுமாம். தவிர்தல் - நீங்குதல். முன்னைச் செய்யுளில், 'இரவி தோன்றினாய்' என்று விளித்ததற்கேற்ப 'இங்குப் பகலவன் குல மைந்தன்' என இராமனைக் குறிப்பிட்டார். வாய்மைக்கு எடுத்துக் காட்டாகின்ற ஞாயிற்றின் வழிவந்தவன் ஆதலின் இராமன், சொல்லும் சொல் பிறழான் என்பதும் இங்குப் பெறப்படும். (17)

**2739.** வேந்தன் வீயவும் யாய்துயர் மேவவு
மேந்த லெம்பி வருந்தவு மென்னகர்
மாந்தர் வன்றுயர் கூரவும் யான்வனம்
போந்த தென்னுடைப் புண்ணியத் தாலென்றான்.

'வேந்தன் வீயவும், யாய் துயர் மேவவும்,
ஏந்தல் எம்பி வருந்தவும், என் நகர்
மாந்தர் வன் துயர் கூரவும், யான் வனம்
போந்தது, என்னுடைப் புண்ணியத்தால்' என்றான்.

பொ :—'(தந்தையாகிய) தயரதமன்னன் இறக்கவும், தாயாகிய கோசலை துன்பம் அடையவும், பெருமை மிக்க என் தம்பி பரதன் வருந்தவும், என் நகரமாகிய அயோத்தியில் உள்ள மக்கள் வலிதாகிய துன்பத்தை மிகுதியாக அடையவும், யான் காட்டிற்கு வந்தது, என் நல்வினையினால் ஆகும்' என்று கூறினான்.

கு :—இராமன் இங்குக் கூறிய நிகழ்ச்சிகள் நான்கில் ஒவ்வொன்றே அவன் வனம் புகாமல் நிற்றற்குப் போதிய காரணமாகவும் அவற்றை யெல்லாம் பொருட்படுத்தாமல் புறப்பட்டது பெரிய காரியமாகத் தோன்றியது அப்பொழுது; முனிவர் துயர் நீக்கும் வாய்ப்புக் கிடைத்ததை நினைக்கும் இப்போது, அவ்வாறு அரிதிற் புறப்பட்டது புண்ணியப் பயனாகத் தோன்றுகின்றது. இராமன் புறப்படுங்கால் தயரதன் இறக்கவில்லையாயினும், தன் பிரிவால் இறந்துபடுவான் என்பதை யுணர்ந்திருந்தான் ஆதலாலும், பின் பரதன் மூலம் தெரிந்தான் ஆதலாலும் 'வேந்தன் வீயவும்' என்று இங்குக் கூறினான். 'சிறந்த தம்பி' (1710) என முன்னர்க் கூறியது போல இங்கும் 'ஏந்தலெம்பி' என்று பரதனைச் சிறப்பித்தான். யாய் துயரினும் தம்பி வருத்தத்தினும் நகர மாந்தர் வருத்தமே இராமன் நெஞ்சை உருக்கியது என்பதை, 'என் நகர் மாந்தர் வன்றுயர் கூரவும்' எனத் துயருக்கு முன்னும் பின்னும் உள்ள சொற்களால் அறியலாம். வனம் போந்தது என்றது போதற்கு அருமை புலப்படுத்தி நின்றது. இதனால் முனிவர் துயர் தீர்ப்பதில் இராமனுக்குள்ள ஆர்வம் புலப்படும். பலர் வருந்தவும் நில்லாது வனம் புக்கமையால் பல முனிவர் துயர் தீர்க்கும் வாய்ப்புக் கிடைத்தது என்பது கருத்து. (18)

2740. அறந்த வாநெறி யந்தணர் தன்மையை
மறந்த புல்லர் வலிதொலை யேனெனி
னிறந்து போகினு நன்றிது வல்லது
பிறந்தி யான்பெறும் பேறென்ப தியாவதோ.

'அறம் தவா நெறி அந்தணர் தன்மையை
மறந்த புல்லர் வலி தொலையேன் எனின்,
இறந்து போகினும் நன்று; இது அல்லது,
பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ?'

பொ :—தருமம் கெடாத நெறியை மேற்கொண்டு ஒழுகும் அந்தணர்களின் பெருந்தன்மையை மறந்து தீங்கிழைக்கும் புன்மை வாய்ந்த அரக்கரின் வலிமையைத் தொலைத்திலேன் என்றால், யான்

அவ்வரக்கரால் இறந்துபோனாலும் நல்லதே; இதனை அல்லது யான் மனிதனாகப் பிறந்து பெறும் பேறு என்பது வேறு யாதுளது? யாதுமில்லை.

கு:—அறந்தவா நெறியாவது, தரும நூலுக்கு மாறுபடாத நல்ல நெறி. அந்தணர் தன்மையை மறத்தலாவது, "ஆவதற்கும் அழிவதற்கும் அவர் ஏவ நிற்கும் விதியும்" (1505) என்பதை மறந்து அவர்க்குத் தீங்கிழைத்தல். மறத்தலாகிய காரணம் தீங்கிழைத்தலாகிய காரியத்தை யுணர்த்தி நின்றது; உபசாரம். மறந்தமையால் தீங்கிழைத்தனர் என்க. பிறவுயிர்க்குத் தீங்கிழைக்காத அந்தணர்க்குத் தீங்கிழைத்தவர் ஆதலின் அரக்கரைப் 'புல்லர்' என்றார். 'இறந்து போகினும் நன்று' என்றது, பிறர்க்குதவச் சென்று இறத்தல், 'தெய்வ மரணம்' எனப் புகழப்படுதலின் என்க. நல்லோர்க்குத் தீங்கிழைக்கும் புல்லரின் வலிதொலைத்தல், அல்லது அவரால் இறத்தலை 'இது' என்று சுட்டினான். புல்லர்வலி தொலைத்தாலும் புல்லரால் வலி தொலைந்து இறந்தாலும் புகழுண்டு ஆகலின், "இது வல்லது பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ?" என இவ்விரண்டையும் பிறவிப் பயனாகக் கூறினான். அரக்கர் வலி தொலைத்தால் நல்லோரைக் காத்த பயன் உண்டு என்பது வெளிப்படை; அவரால் வலிதொலைந்து இறந்து போனாலும் பிறவியின் பேறுதல் "ஆவுக்காயினும் அந்தணர்க்காயினும்......சாவப் பெற்றவரே தகை வானுறை, தேவர்க்குந் தொழுந் தேவர்கள் ஆகுவார்" (2742) எனப் பின்னர் விளக்குவதால் அறியலாம். "நோற்றோர் மன்ற தாமே கூற்றங் கோளுற விளியார் பிறர் கொள விளிந்தோர் எனத் தாள் வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்" (அகநா-61) என்ற மாமூலனார் கூற்றும் இங்கு நினைக்கத்தகும். 1710 ஆம் செய்யுளின் இறுதி அடியும் இச்செய்யுளின் இறுதி அடியும் ஒன்றுபட்டிருத்தல் காணலாம்.

நெல்லுடன் தோன்றி அதற்குத் தீங்கிழைக்கும் புல்லைக் களையும் உழவன் போல, நல்லோரை வருத்தும் புல்லரைக் கொன்று குவித்தல் மன்னனுக்கு அறமே ஆதலின், இராமன் இங்ஙனம் கூறினான். "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட்டதனொடு நேர்" (550) என்ற குறளும் காண்க. 'புல்லர்' என்ற சொல் நெற்பயிர்க்குத் தீங்கிழைக்கும் புல்லைப் போன்றவர் என்ற பொருளையும் விளக்குதல் காணலாம். இராமன் தன் அவதாரப் பயனைக் குறிப்பால் இங்குப் புலப்படுத்தியதாகக் கொள்ளலாம். (19)

2741. நிவந்த வேதியர் நீவிருந் தீயவர்
கவந்த பந்தக் களிநடங் கண்டிட
வமைந்த வில்லு மருங்கணைத் தூணியுஞ்
சுமந்த தோளும் பொறைத் துயர் தீருமால்.

'நிவந்த வேதியர் நீவிரும், தீயவர்
கவந்த பந்தக் களி நடம் கண்டிட,
அமைந்த வில்லும் அருங்கணைத் தூணியும்
சுமந்த தோளும் பொறைத் துயர் தீருமால்.

பொ :—உயர்ந்த பண்புடைய முனிவராகிய நீங்களும், நுமக்குத் தீமை செய்யும் அரக்கர்களின் தலையற்ற குறையுடலங்களின் கூட்டங்கள் ஆடுகின்ற களிப்புமிகும் கூத்தைக் கண்டு துயர்தீரக் கட்டமைந்த வில்லையும், பகைவர் தப்புதற்கரிய அம்புகள் நிறைந்த புட்டிலையும் (இதுகாறும் வீணுகச்) சுமந்திருந்த என் தோள்களும் அவற்றைப் பயனின்றிச் சுமந்ததாலாகிய துன்பத்தை நீங்கும்.

கு :—நிவப்பு - உயர்ச்சி; இங்கு உயர்ந்த பண்பினை உணர்த்தி நின்றது; இலக்கணை. 'வானுயர் தோற்றம்' (குறள்-272) என்புழிப் போல. வேதியர் என்றது முனிவரை. நீவிரும் என்புழி உம்மை எதிரது தழீஇயது. நீவிருங் களிநடங் கண்டிட, என் தோளும் பொறைத்துயர் தீரும் என்று இயையும். களிநடங் காணுதலாய காரணம் பகைத்துயர்தீர்தலாகிய காரியத்தை யுணர்த்தி நின்றது. நுமக்கு நன்மை செய்து நானுமோர் நன்மை அடைவேன் எனத் திறம்படக் கூறியவாறு. நும் பகைவர் மாண்டு அவர் குறையுடலங் கூத்தாடக் காண்டலால் நுமக்குப் பகைத்துயர் தீரும், வில்லையும் கணைப்புட்டிலையும் வீணே சுமந்திருந்த எனக்கும் அவ்வரக்கரைக் கொல்லுதலால் பொறைத்துயர் தீரும் என்றவாறு. கவந்தம்- தலை குறைந்த உடலம். பந்தம் - தொகுதி. களிநடம் - களித்தற்குக் காரணமாகிய கூத்து; களித்துச் செய்யும் கூத்து எனலும் ஆம்.

"ஆனையாயிரந் தேர்பதினாயிர மடர்பரி யொருகோடி
சேனைகாவலர் ஆயிரம் பேர்படிற் கவந்தமொன் றெழுந்தாடும்"
(மூலபலவதைப்-228)

என ஒருகவந்தம் ஆடுதற்கு இத்துணையுயிர் போரில் மாய்தல் வேண்டும் என்னும் கணக்குக் கூறுவதால் கவந்தங்களின் கூட்டம் ஆடுதற்கு எத்துணை உயிர்கள் போரில் மாய்தல் வேண்டும் என்பது உய்த்துணரப்படும். இங்கு இராமன் கூறியவாறே கரன் வதைப் படலத்தில் 'கவந்த பந்தங்கள் களித்தன' (87) என்று

கூறுமாறு செயற்படுத்தியமை காணலாம். பொறைத்துயர் என்றது வில்லையும் கணைத்தூணியையும் பயன்படுத்தப் பகைவர் இல்லாமையால் வீணே சுமக்கவேண்டியுளதே என்ற துன்பம்.

இச்செய்யுளில் இராமன் அரக்கரைக் கொல்வேன் என உறுதி கூறியமை புலப்படுத்தியவாறு. (20)

2742. ஆவுக் காயினு மந்தணர்க் காயினும்
யாவர்க் கானு மெளியவர்க் காயினுஞ்
சாவப் பெற்றவ ரேதகை வானுறை
தேவர்க் குந்தொழுந் தேவர்க ளாகுவார்.

'ஆவுக்கு ஆயினும், அந்தணர்க்கு ஆயினும்,
யாவர்க்கு ஆனும், எளியவர்க்கு ஆயினும்,
சாவப் பெற்றவரே தகை வான் உறை
தேவர்க்கும் தொழும் தேவர்கள் ஆகுவார்'.

பொ :—பசுவைக் காப்பாற்றும்பொருட்டாயினும், அந்தணரைக் காப்பாற்றும்பொருட்டாயினும், மற்றைப் பெரியோரைக்காப்பாற்றும் பொருட்டாயினும் (எத்தகுதியும் அற்ற) எளியவரைக் காப்பாற்றும் பொருட்டாயினும் தம்முயிரை விடுத்தவர்களே தகுதிமிக்க விண்ணுலகத்தில் வாழ்கின்ற தேவராலும் தொழப்படும் தலைமையான தேவர்கள் ஆகத்தக்கவர்கள்.

கு :—உயிர்களில் ஆவையும் அந்தணரையும் பிரித்துக் கூறியது, அவ்வுயிர்களின் சிறப்புப் பற்றி. "ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்" (புறநா-9) என நெட்டிமையார் தீங்கு செய்யத் தகாத உயிர்களைக் கூறுங்கால் முதலில் வைத்து எண்ணினமையும் காண்க. அந்தணரல்லாத மற்றைப் பெரியோரை யாவர்க்கானும் எனவும் எத்தகுதியும் இல்லாத இழிந்தோரை எளியவர்க்காயினும் எனவும் இருபகுப்பாக அடக்கிக் கூறியவாறு. யாவர்க்கு ஆனும் என்றது, பெருந்தகுதியுடைய பெரியோரை உணர்த்தி நின்றது; 'எந்நன்றி' (குறள்-110) என்பதற்குப் 'பெரிய அறங்கள்' எனப் பரிமேலழகர் உரை செய்திருத்தல் ஈண்டு நினைக்கத்தகும். ஆயினும் என்பது ஆனும் என இசை நோக்கி விகாரப்பட்டு வந்தது. தகை வான் என்றது வீட்டுலகத்தை. வானுறை தேவர்கள், தேவர்க்குந் தொழுந் தேவர்கள் என இயையும். வீட்டுலகம் புக்க தேவர் பொன்னுலகத் தேவரால் வணங்கப்படுவர் என்பது மரபு. தேவர்கள் ஆகுவார் என்பதில் ஆக்கம் உவமை யுணர்த்தியதாகக் கொண்டு,

'சாவப் பெற்றவரே தேவரால் தொழப்படும் தேவர்களைப் போன்ற வர்கள்' எனப் பொருள் கூறலும் ஆகும். 'ஆள்வாரிலி மாடா வேனோ' (திருவாசகம்-382) என்புழியும், ''சார்ந்தடியார் தாம் தானாச் செய்து'' (சிவஞான போதம்-10. வெண்பா-64) என்புழியும் ஆக்கம் உவமை குறித்து நிற்றல் காணலாம். தேவர்க்கும் என்புழி நான் கனுருபு மூன்றன் பொருளில் வந்தது; உருபு மயக்கம்.

காப்பாற்றக் கருதிய உயிர்களின் பெருமை சிறுமைகளை நோக்காது, அவ்வுயிரின்பொருட்டுச் சாவப்பெற்றவனுடைய தகுதியே நோக்கி அவனைத் தேவ தேவனாக உலகம் மதிக்கும் என்பது கருத்து. அத்தகைய சாவு பெறற்கரிது என்பதுணர்த்த 'சாவப் பெற்றவரே' என்றார். எளிய உயிர்க்காக உயிர்விட்டவனும் தேவதேவனும் சிறப்புடையன் என்றால், பெருந்தவ முனிவர்களாகிய உங்கள் பொருட்டு உயிர்விடும் பெருமையைக் கூறவேண்டுமோ என்பது எச்சம். (21)

**2743.** சூர றுத்தவ னுஞ்சுடர் நேமியு
மூர றுத்த வொருவனு மோம்பினு
மார றத்தினொ டன்றிநின் றாரவர்
வேர றுப்பென் வெருவன்மி னீரென்றான்.

'சூர் அறுத்தவனும், சுடர் நேமியும்,
ஊர் அறுத்த ஒருவனும், ஓம்பினும்,
ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர்
வேர் அறுப்பென்; வெருவன்மின் நீர்' என்றான்.

பொ :—'சூரபன்மாவைக் கொன்ற முருகனும், (கால நேமியைக் கொன்ற) ஒளிமிக்க சக்கரப்படையையுடைய திருமாலும், திரிபுரம் எரித்த உருத்திரனும் அவ்வரக்கர்க்குத் துணையாய்நின்று பாதுகாத் தாலும், யார் அறநெறியோடு மாறுபட்டவர்களோ அவர்களை அடியோடு அழிப்பேன்; நீங்கள் அஞ்சாதீர்கள்' என்று கூறினான்.

கு :—சூர் - சூரபன்மா. ஊர் என்றது திரிபுரத்தை. சூரறுத்தவன், ஊரறுத்தவன் என்பதற்கேற்பக் காலநேமியையறுத்தல் நேமிக்கு அடையாக வருவிக்கப்பட்டது. அறத்தினொடு அன்றி நின்றாரை மாய்த்து வென்றிகொண்ட இம்மூவரும் அரக்கர்க்குத் துணையாய் நின்று காத்தாலும் அவ்வரக்கரை வேரறுப்பேன் என்றுஉறுதி கூறிய வாறு. ''பெரியோய் பணியிதுவேல் பனிநீர்க் கங்கை, புடையூற்றுஞ் சடையானும் நான்முகனும் புரந்தரனும் புகுந்து செய்யும் இடையூற்

றுக் கிடையூரு யான் காப்பென்'' (329) எனத் தயரதன் கோசிக முனிவனுக்கு முன் உறுதி கூறினமையும் இங்கு நினைக்கத்தகும். பிரமன் படைகொண்டு பகை வெல்லும் தகையன் அல்லன் ஆதலின் மும்மூர்த்திகளில் அவனை நீக்கி, அவனைப் போல் படைப்புத் தொழிலும் செய்து பகை வெல்லும் தகையனாகிய முருகனைக் கூட்டிக் கூறியவாறு. நேமி என்ற படையாகிய உடைமையின் பெயர் உடையானாகிய திருமாலுக் காயிற்று; ஆகு பெயர். சுடர்கின்ற நேமியையுடையான் என வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை எனினும் அமையும். திருமாலுக்கு நேமியாகிய படை கூறவே முருகனுக்கு வேலும் உருத்திரனுக்குச் சூலமும் இனம்பற்றி வருவிக்க. அன்றி நின்றார் - மாறுபட்டு நின்றவர். அறத்திற்கு மாறுபட்டவரே தனக்கு மாறுபட்டவர் என்பது புலப்படுத்தியவாறு. முருகன் முதலிய மூவரும், அறத்திற்குப் பகைவராய் அழிவு செய்தவர்களை அழித்தவரே ஆதலின் அரக்கர்க்குத் துணையாக வந்து காத்தல் செய்யார்; ஒருகால் அம்மூவரும் ஒன்று சேர்ந்து அறத்தில் மாறுபட்ட அரக்கர்க்குத் துணை செய்தாராயின், அம்மூவரும் அறத்திற்கு மாறுபட்டவரே ஆவர் ஆதலின், 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்ற நியதிப்படி அறத்தைப் பாதுகாக்க நினைக்கும் தனக்கே வெற்றியுண்டாகும் எனத் துணிந்து 'ஓம்பினும் வேரறுப்பென்' என்று கூறினான். வேரறுத்தல்-அடியோடு தொலைத்தல். 'வெருவன்மின்நீர்' என்றது, அஞ்சல் என்றருளியது. (22)

**2744.** உரைத்த வாசகங் கேட்டுவந் தோங்கிட
விரைத்த காதல ரேகிய வின்னலர்
திரித்த கோலினர் தேமறை பாடினர்
நிருத்த மாடினர் நின்று விளம்புவார்.

உரைத்த வாசகம் கேட்டு உவந்து ஓங்கிட
இரைத்த காதலர், ஏகிய இன்னலர்,
திரித்த கோலினர், தேம் மறை பாடினர்;
நிருத்தம் ஆடினர்; நின்று விளம்புவார்.

பொ :—இராமன் சொன்ன சொல்லைக் கேட்டு முனிவர், மகிழ்ந்து அன்பு மிகுதியால் விண்ணில் ஓங்கிப் பரவுமாறு பேரொலி செய்தவராய்த் துன்பம் நீங்கப்பெற்றவராய், முக்கோலைச் சுழற்றிக் கொண்டு, இனிய வேதப்பாடல்களைப் பாடிக்கொண்டு நடனம் ஆடிக் கொண்டு (இராமன் முன்பு) நின்று சொல்லுவாராயினர்.

கு:—இராமன் கூறிய உறுதிமொழி செயற்படுதல் திண்ணம் என்ற எண்ணத்தால் முனிவர், உவத்தலும், இரைத்தலும் செய்த தோடு முக்கோலைத் திரித்துக்கொண்டு பாடுதலும் ஆடுதலும் செய் வாராயினர்; 'இரைத்த காதலர்' 'ஏகிய இன்னலர்', 'திரித்தகோலினர்' என்பன, "சென்று சேக்கல்லாப் புள்ள உள்ளி லென்றூழ் வியன் குளம்'' (அகநா-42) என்பது போன்ற நடையில் வந்தவை. ஓங்கிட இரைத்தலாவது, ஆ, ஓ என்றாற் போலப் பொருளின்றிப் பேரொலி செய்தல்; மகிழ்ச்சியிலும் துன்பத்திலும் மக்கள் இவ்வாறு ஒலி செய்தல் இயல்பு. "ஆஅ ஒல்லெனக் கூவுவேன் கொல்'' (குறுந்-28) என்று ஒரு தலைவி துன்பத்தில் கூவுவது பற்றி நினைத்தலை நினைக்க. இங்ஙனமன்றி, 'இராமன் வாழ்க! வெல்க!' என்றாற் போன்று விண் பிளக்க எழுப்பும் வாழ்த்தின் இரைச்சல் ஆகவும் கொள்ள லாம். தங்கள் துயர் துடைக்கும் இராமன்மேல் கொண்ட காதலால் அவ்வாறு இரைத்தலின், 'இரைத்த காதலர்' என்று சேர்த்துக் கூறி னார். கோல் என்றது, முக்கோலை. முத்தேவரையும் ஒருவரென மதிக்கும் தம் கொள்கைக்கு அடையாளமாக முனிவர் அதைக் கையில் எப்போதும் ஏந்தியிருப்பர். 'முக்கோல்கொளந்தணர்' (கலி–126) என்பதும் அதன் உரையும் காண்க. கோலைச் சுழற்றிக் கொண்டு பாடுதலும் ஆடுதலும் பகை வென்றேம் என்ற மகிழ்ச்சி யின் விளைவுகள். பித்துக்கொண்ட வழியும் வேதம் ஓதுதலே அந்தணர் இயல்பாதலின், மகிழ்ச்சியால் மைந்துற்ற வழியும் அவ்வேதமே பாடினர் என்க. தேமறை என்பதற்குத் தெய்வத் தன்மையுள்ள வேதம் எனப் பொருள்கூறலும் ஆம். காதலர், இன்னலர், கோலினர், பாடினர், ஆடினர் என்பன முற்றெச்சங்கள்; நின்று விளம்புவார் என்ற வினைகொண்டு முடிந்தன. (23)

**2745.** தோன்ற னீமுனி யிற்புவ னத்தொகை
மூன்று போல்வன முப்பது கோடிவந்
தேன்ற போது மெதிரல வென்றலிற்
சான்ற ரோவெந் தவப்பெரு ஞானமே.

தோன்றல்! நீ முனியின், புவனத் தொகை
மூன்று போல்வன முப்பது கோடி வந்து
ஏன்ற போதும், எதிர் அல; என்றலின்
சான்று அரோ எம், தவப் பெரு ஞானமே.

பொ:—(அரக்கரை அழிக்கும் பொருட்டே இவ்வுலகில்) அவதரித் தலையுடைய நீ வெகுண்டால் விண், மண், பாதலம் என்ற உலகங் களின் தொகையாகிய மூன்றையும் போல்வனவாய முப்பது கோடி

உலகங்கள் வந்து எதிர்த்தாலும் அவை நின் ஆற்றலுக்கு எதிர் நிற்கும் தகுதியுடைய அல்ல; என்று கூறுதற்கு எம் தவத்தால் பெற்ற பெரிய ஞானமே சான்ருக உள்ளது.

கு :—தோன்றல் - பிறரின் மிக்குத் தோன்றுதலேயுடையவன் என்றும் பொருள் கூறலாம். முக்காலமும் உணர்ந்த முனிவராகலின் இராமன் அல்லோரை அழிக்கும் பொருட்டு இவ்வுலகில் அவதரித்த வனே என்று இறந்த கால நிகழ்ச்சியையும் அவனே வெல்லுதல் யார்க்கும் இயலாது என்று எதிர்கால நிகழ்ச்சியையும் அறிந்து கூறலாயினர். இக்கருத்துடன் நோக்குங்கால் தோன்றல் நீ, என் பதற்குப் 'பரமபதத்திலிருந்து அவதரித்தலேயுடைய நீ என்ற பொருள் பொருத்தமுடையதாதல் காணலாம். புவனம் என்றது ஆகுபெயராய் அங்குள்ளாரை உணர்த்தியது. முப்பது கோடி என்பது மிகப் பல என்றற்கு ஒன்று காட்டியவாறு. உள்ளன வாகிய புவனங்கள் போல முப்பது கோடி புவனங்கள் புதியனவாய்த் தோன்றி வந்தாலும் அவை இராமன் எதிர் நிற்கும் தகுதியுடையன ஆகா என இராமன் ஆற்றலே வியந்து புகழ்ந்தவாறு. ஏன்றபோதும்- எதிர்த்தபோதும். என்றலின் என்புழி ஐந்தனுருபு, என்றற்கு என நான்கன் பொருளதாய் மயங்கியது. எம் தவப்பெரு ஞானமே சான்று என இயையும். அரோ, அசை. இராமன் எத்தகையோ ராலும் வெல்லப்படான் என முனிவர்களின் ஞானம் தெளிவுபடுத்து கின்றமையால் அந்த ஞானமே அவர் கூற்றுக்குச் சிறந்த சான்ருகும் என்றனர். 'அகம் வேத்மி மகாத்மானம் ராமம் சத்ய பராக்ரமம்' என விசுவாமித்திரன் தயரதனுக்குக் கூறியதாக வான்மீகம் கூறு வதும் இங்கு ஒப்புநோக்கத்தகும். இராமனது ஆற்றலே யுணர்த்தச் சான்ருதற்குத் தகுதியுடையது என்பது விளக்கவேண்டி இங்ஙனம் சிறப்பித்தார்கள்; ஆதலின், தற்புகழ்ச்சியன்று. (24)

2746. அன்ன தாகலி னேயின வாண்டெலா
மின்னல் காத்திங் கினிதுறை வாயெனச்
சொன்ன மாதவர் பாதந் தொழுதுயர்
மன்னர் மன்னவன் மைந்தனும் வைகினுன்.

'அன்னது ஆகலின் ஏயின ஆண்டு எலாம,
இன்னல் காத்து இங்கு இனிது உறைவாய்' எனச்
சொன்ன மாதவர் பாதம் தொழுது, உயர்
மன்னர் மன்னவன் மைந்தனும் வைகினுன்.

பொ :—'(நின் பெருமை) அத்தகையது ஆதலால் (நின் சிற்றன்னை) ஏவிய ஆண்டுகள் முழுமையும் (எங்கட்கு வரத்தக்க) துன்பங்கள் வாராமல் காத்து இங்கு இனிமையாகத் தங்குவாயாக' என்று கூறிய பெருந்தவ முனிவர்களின் திருவடிகளைத் தொழுது, அரசர்க்கு அரசனான தயரதனுடைய உயர்ந்த மைந்தனாகிய இராமனும் (அவர் கூறியவாறே) அங்குத் தங்கினான்.

கு :—அன்னது என்றது முன்செய்யுளில் கூறிய இராமன் பெருமையை. அப்பெருமையுடைமையால் அரக்கர் ஓயாமல் துன்பந் தருகின்ற இவ்விடத்தில் தங்குவது பொருத்தம் என்றவாறு. இராமன் காடு புகுந்த காரணம் கேட்டறிந்தவர் ஆதலின் கைகேயி ஏயின ஆண்டு எலாம் என முனிவர் கூறினர். இனி, ஏயின என்பதற்கு ஏற்படுத்திய என்று பொருள் கூறுதலும் உண்டு. ஆண்டெலாம் என்றது பதினான்கு ஆண்டில் எஞ்சிய ஆண்டுகளை. இன்னல் - துன்பம்; அதைக் காத்தலாவது, அது வராமல் காத்தல்; 'குற்றமே காக்க பொருளா' (குறள்-434) என்புழியும் காத்தல் அப்பொருள் படுதல் காணலாம். 'இனிதுறைவாய்' என்றது, நீரும் நிழலும் காயும் கனியும் நிறைந்துள்ளமையால் தங்குதற்கு இனிமையானது என அவ்விடத்தின் சிறப்புணர்த்தியவாறு. 'இங்குத் தங்கி எங்கள் இன்னல் நீக்கும் நீயும் இன்னலின்றி வாழலாம்' என அவனுக்கும் இங்கு ஒரு நன்மையுண்டு என்பதை உணர்த்தியவாறு. மாதவர் பாதம் தொழுதது, அவர் சொன்னவாறே செய்வேன் என்பதைக் குறிப்பிட்டவாறு. மன்னர் மன்னவன் உயர்மைந்தனும் என்று இயையும். தயரதனுக்கு மக்கள் நால்வரேனும் உயர்ந்தவன் இராமன் என்பது புலப்படுத்த 'உயர் மைந்தன்' என்றார். மாதவர் நோன்பு காத்த தயரத மன்னவன் போலவே அவன் மைந்தனாகிய இராமனும் மாதவரைக் காக்கத் தங்கியது இயைபுடையதே என்பது தோன்ற இராமன் என்னாது, 'மன்னர் மன்னவன் மைந்தனும்' என்றார். (25)

45 என்ற குறியீட்டெண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வரும் பாடல் ஒரு சுவடியில் உள்ளதாக வரைந்துளது.

2746. (a) மாத வத்தினர் பன்னியர் மாகுலச்
சீதை யைத்தம தெய்வதம் போலவே
ஆத ரித்தன ராண்டகை யோரவர்
ஏத நீத்தங் கிருந்தனர் பல்பகல்.

## பத்தாண்டுகள் தண்டகவனத்திருந்த இராமன் அகத்தியன் குடிலுக்குப் புறப்படுதல்

2747. ஐந்து மைந்து மமைதியி னுண்டவண்
மைந்தர் தீதிலர் வைகினர் மாதவர்
சிந்தை யெண்ணி யகத்தியற் சேர்கென
விந்து நன்னுத றன்னொடு மேகினர்.

ஐந்தும் ஐந்தும் அமைதியின் ஆண்டு, அவண்,
மைந்தர், தீது இலர் வைகினர்; மாதவர்
சிந்தை எண்ணி, 'அகத்தியற் சேர்க' என,
இந்து நல் நுதல் தன்னொடும் ஏகினர்.

பொ :—வலிமையுடைய இராம இலக்குவர், பத்து ஆண்டுகள் அத்தண்டகவனத்து முனிபுங்கவர்களுடன் அமைதியாகத் தீது ஏதும் இன்றித் தங்கியிருந்தார்கள்; (பின்) அப்பெருந் தவமுனிவர்கள் மனத்தால் ஆராய்ந்து, 'அகத்திய முனிவனை அடைக' என்று கூற, (அவர் கருத்தறிந்து அவ்வாறே) பிறைச்சந்திரன் போன்ற நல்ல நெற்றியையுடைய சீதையோடும் (அகத்திய முனிவன் தவக்குடில் நோக்கிச்) சென்றார்கள்.

கு :—மைந்தர், ஐந்தும் ஐந்தும் ஆண்டு அவண் அமைதியின், தீதிலர் வைகினர்; பின் மாதவர் எண்ணிச் சேர்க என ஏகினர் என்று இயையும். தண்டகவனத்து முனிவர்களின் பத்து ஆசிரமங்களில் முறையாகத் தங்கியிருந்து ஐந்து ஆண்டுகளை இராமன் கழித்தான் என்றும், மீண்டும் இரண்டாவது வட்டமாக அவ்வாசிரமங்களிலேயே தங்கிப் பின்னும் ஐந்தாண்டுகளைக் கழித்தான் என்றும் கூறும் முதல் நூற் கருத்துப் புலப்படவேண்டிப் 'பத்தாண்டு' என்னது, 'ஐந்தும் ஐந்தும் அமைதியின் ஆண்டு' என்று கூறினர். மைந்து - வலிமை; வலிமை மிக்க இராம இலக்குவர் 'மைந்தர்' எனப்பட்டார். அமைதியின் வைகினர்; தீதிலர் வைகினர் என இயையும். முனிவர் சார்புடைமையால் அமைதியும்; தாம் இருப்பதை யறிந்து அரக்கர் வராமையால் தீதின்மையும் இராம இலக்குவர் பெற்றனர். அரக்கர் தீமையினை எதிர்நோக்கி அங்குத் தங்கினர்கள் ஆதலின் அத்தீது யாதும் நிகழாமை கூறவேண்டியதாயிற்று. மாதவர் சிந்தையால் எண்ணியது, அகத்தியன்பால் இராமன் பெறத் தக்கன உண்டு என்பதும் அரக்கரின் வரவு அங்கும் நிகழலாம் என்பதும் ஆம். சேர்கென என்புழி அகரம் தொக்கது. பத்தாண்டு வரையில் தண்டகவனத்திலிருந்தும் பெறவியலாத அரக்கர் பகையை அகத்தியன் ஆசிரமத்திற்கடுத்த பஞ்சவடியில் அழகு மிக்க சீதையால்

விரைவில் பெறப்போகின்ருர்கள் என்ற குறிப்புத் தோன்ற, 'இந்து நன்னுதல் தன்னெடும் ஏகினர்' என்ருர். முனிவர் பன்னியர் பக்கல் சீதையை விட்டுச் சென்றிருந்தால் நன்ருகுமே எனக் கவி கருதி இங்ஙனம் கூறினர் போலும். இந்து - சந்திரன்; இங்குப் பிறைச் சந்திரனை உணர்த்தியது; நுதலுக்கு உவமையாவது அதுவே யாகலின். நெற்றியழகைக் கொண்டு மற்றையுறுப்பழகும் பெறலா மாதலின் அஃதொன்றே கூறிப் பேரழகுடைய சீதையோடும் போனர் என்ற கருத்தைப் பெறவைத்தார். 'கண்டாரே காதலிக்கும் கட்டழகும் விடமன்ரே' (சூர்ப்பணகைப்-131) என்று சூர்ப்பணகை கூறிய குறிப்பு இங்கு நினையத்தகும். "காந்தையருக்கணியனைய சானகியார் பேரழகும்......கடைமுறையே புரந்தரனர் பெருந்தவ மாய்ப் போயிற்றம்மா" (யுத்த காண்டம்-இராவணன் வதை-241) என்று இராவணன் மரணத்திற்குச் சீதையின் பேரழகே காரண மாயிற்று என்பதை மண்டோதரியார் விளக்குதல் காணலாம். (26)

## இடைவழியில் சுதீக்கணன் இராமனை உபசரித்து உரையாடல் 2748—2755

**2748.** விடர கங்களும் வேய்செறி கானமும்
படருஞ் சின்னெறி பைப்பய நீங்கினர்
சுடரு மேனிச் சுதீக்கண னென்னுமவ்
விடரி லானுறை சோலைசென் றெய்தினர்.

விட ரகங்களும், வேய் செறி கானமும்,
படரும் சில் நெறி பைப்பய நீங்கினர்;
சுடரும் மேனிச் சுதீக்கணன் என்னும் அவ்
இடர் இலான் உறை சோலை சென்று எய்தினர்.

பொ :—மலைகளிலும் மூங்கில்கள் நிறைந்த காடுகளிலும் செல்லு கின்ற சிறிய வழியை மெல்ல மெல்ல நடந்து கடந்தவர்களாய், ஒளி வீசும் மேனியையுடைய சுதீக்கணன் என்னும் பெயரையுடைய துன்பமில்லாத அம்முனிவன் தங்கியுள்ள சோலையைச் சென்று அடைந்தார்கள்.

கு :—விடரகம் - மலை; "வேய்நரல் விடரகம் நீயொன்று பாடித்தை" (கலித்-40) என்புழியும் இச்சொல் இப்பொருள்படுதல் காணலாம். வேய் செறிதலை இடைநிலை விளக்காகக் கொண்டு மலைக்கும் அடையாக்கினும் அமையும்; வேய்செறிதல் மலைக்கும் இருத்தலின். படர்தல் - செல்லுதல். 'சின்னெறி' என்பதில்

சின்மை, சிறுமையுணர்த்தி நின்றது. 'குடத்தினும் பிறகலத்தினும் இருந்த நீரைச் சிறிது என்னுது சில' (தொல்-சொல் கிளவியா-17 சேனு-உரை) என்னும் வழக்குப் பற்றிச் சிறு நெறியைச் 'சின்னெறி' என்ருர் போலும். "படுத்து வைத்தன்ன பாறை மருங்கின் எடுத்து நிறுத்தன்ன விட்டருஞ் சிறு நெறி" (மலேபடு-15, 16) என மலேமிசை யுள்ள சிறு நெறி கூறப்பட்டுள்ளமை காணலாம். நெறியின் சிறு மையாலும் கல்லும் முள்ளும் நிறைந்து நடத்தற்கு அருமையுடைமை யானும் மெல்லியல் நல்லாளொடு செல்லுதலாலும் பைப்பய நீங்க வேண்டியதாயிற்று. பையப்பைய என்பது அவ்வாறு மருவியது. பைய - மெல்ல. சுதீக்கணன் என்பது உக்கிரமான தவத்தையுடைய வன் என்ற காரணத்தால் வந்த பெயர். தவத்தின் பெருமையால் அவன் மேனி ஒளி வீசிக்கொண்டிருந்தது. அடுத்த செய்யுளில் 'அருக்கனன்ன முனிவன்' என்ன இவ்வொளி பற்றியே சூரியனே உவமித்திருத்தல் காணலாம். 'மாசற விமைக்கு முருவினர்' (முருகாற்றுப். 128) என்றதும் முனிவர் உருவம் ஒளி விடுதலே விளக்கு வதேயாதல் காணலாம். வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்து தானும் அவ்விரண்டும் அற்றிருந்தமையின் இடரிலான் என அம்முனிவன் கூறப்பெற்றுன். 'இடும்பை யாவது மறியா இயல் பினர்' (முருகாற்றுப். 136) என முனிவர் கூறப்பட்டிருத்தலும் ஈண் டைக்கு நினைக்க. இடரிலான் உறைதலால் சோலேயும் இடர்நீக்கும் நீர்வள முதலியன மல்கியிருந்தது என முதல்நூற்கு ஏற்பக் கூறலும் ஆம். சோலேக்குச் சென்று அம்முனிவனே எய்தினுர் எனப் பிரித்து உரைத்தலும் ஆம். (27)

2749. அருக்க னன்ன முனிவனே யவ்வழிச்
செருக்கில் சிந்தையர் சேவடி தாழ்தலு
மிருக்க வீண்டென் றினியன கூறினுன்
மருக்கொள் சோலேயின் மைந்தரும் வைகினுர்.

அருக்கன் அன்ன முனிவனே அவ்வழிச்
செருக்கு இல் சிந்தையர், சேவடி தாழ்தலும்,
'இருக்க ஈண்டு' என்று, இனியன கூறினுன் ;
மருக் கொள் சோலேயில் மைந்தரும் வைகினுர்.

பொ :—சூரியனேப்போன்ற ஒளிமிக்க உடம்பையுடைய சுதீக்கண முனிவனே அவ்விடத்தே (கண்டு) மயக்கம் இல்லாத மனத்தை யுடைய இராம இலக்குவர், அவன் சிவந்த திருவடிகளில் தாழ்ந்து வணங்குதலும், (அம்முனிவன்) 'இங்கே தங்குக' என்று இனிய

முகமன் மொழிகளைக் கூறினனாக, அவ்விராம இலக்குவரும் மிக்க நறுமணத்தைக் கொண்டுள்ள அச் சோலையில் தங்கினர்.

கு :—முனிவனுக்கு அருக்கன் ஒளியுடைமையால் உவமை. செருக்கு–மயக்கம். 'தீவினை யென்னுஞ் செருக்கு' (குறள்-201) என்பது காண்க. முனிவரைத் தொழற்குக் காரணமாகச் செருக்கில் சிந்தை கூறப்படுகின்றது; மயர்வறு மதிநலமுடைமையால் முனிவரைத் தொழுதனர் என்க. இனித் தருக்கென்று பொருள்கொண்டு அதற்கேற்பக் கூறலும் ஆம். மிகப் பெரிய முனிவராகிய அகத்திய முனிவரை வணங்கச் செல்கின்ற அரச குமாரர்கள், அவருடைய மாணவராகிய சுதீக்கணனையும் வணங்கவேண்டுமோ என்ற கர்வம் இல்லாமல் அடிதாழ்ந்தனர் என்க. சுதீக்கணன் இருந்த சோலையில் மலர்கள் நிறைந்திருந்தமை தோன்ற மருக்கொள் சோலை என்று சிறப்பித்தார். மைந்தரும் என்றது, சுட்டின் பொருளதாய் நின்றது. கூறினன் முற்றெச்சம். (28)

2750. வைகும் வைகலின் மாதவன் மைந்தன்பாற்
செய்கை யாவையுஞ் செய்திவட் செல்வநீ
யெய்த யான் செய்த தெத்தவ மென்றனை
னைய னும்மவற் கன்பினன் கூறுவான்.

வைகும் வைகலின், மாதவன், மைந்தன்பால்
செய்கை யாவையும் செய்து, 'இவண், செல்வ! நீ
எய்த யான் செய்தது எத்தவம்?' என்றனன்;
ஐயனும் அவற்கு அன்பினன் கூறுவான்.

பொ :—(அவ்வாறு) தங்கியிருந்தபொழுது சுதீக்கண முனிவன், இராமனிடத்தில் செய்யவேண்டிய உபசாரங்கள் எல்லாவற்றையும் செய்து முடித்துவிட்டு, அரசச் செல்வமுடைய நீ இங்கு வர, யான் செய்த தவம்தான் எத்தகையதோ? என்று முகமன் மொழிந்தானாக, இராமனும் அம்முனிவனிடத்து அன்புடையனாய்க் கூறுவானானான்.

கு :—வைகல், இங்குப் பொழுதை யுணர்த்தியது. செய்கை என்றது பருக நீரும் உண்ணக் கனி முதலியனவும் கொடுத்து வழி வந்த வருத்தத்தை மாற்றும் உபசாரங்களை. அரியணையிருந்து அரசாளும் செல்வமுடைய இராமன், முனிவர் வாழும் வனம்புக்க அருமை புலப்படுத்த வேண்டி 'நீ யெய்த யான் செய்தது எத்தவம்' என்றான். அவன் கடவுள் என்பதை ஞானத்தால் உணர்ந்து அங்ஙனம் கூறினன் என்றலும் ஒன்று. உயர்ந்த தவம் செய்திருந்தா

லொழிய இராமன் வரவு நிகழாது என்பது கருத்து. இங்ஙனம் கூறுதலை ஆர்வமொழியணி என்பர் அணிநூலோர். அன்பினன், முற்றெச்சம். (29)

2751. சொன்ன நான்முகன் றன்வழித் தோன்றினர்
முன்னை யோரு ளுயர்தவ முற்றினு
ருன்னின் யாருள ருன்னரு ளெய்திய
வென்னின் யாருள ரிற்பிறந் தாரென்றான்.

'சொன்ன நான்முகன் தன் வழித் தோன்றினர்
முன்னை யோருள் உயர் தவம் முற்றினர்
உன்னின் யார் உளர்? உன் அருள் எய்திய
என்னின் யார் உளர் இற் பிறந்தார்?' என்றான்.

பொ:—'ஆன்றோர்கள் சிறப்பித்துச் சொன்ன பிரமன் மரபில் தோன்றினவர்களாகிய அந்தணருள் உயர்ந்த தவத்தை முற்றுப் பெறச் செய்தவர்கள் உன்னைவிடச் சிறந்தோர் யாரும் இல்லை' நற்குடிப் பிறந்தவர்களுள் உனது அருளைப்பெற்ற என்னைவிடச் சிறந்தோர் யாரும் இல்லை என்றான்.

கு:—தோன்றினராகிய முன்னையோர் என்க. முன்னையோர், நால்வருணத்துள் முன் எண்ணப்படும் அந்தணர்; நீத்தார். துறவறத்தாருள் சுதீக்கணன் போன்று உயர் தவம் செய்தவர் இல்லை; இல்லறத்தோருள் அச் சுதீக்கணன் அருளைப் பெற்ற இராமனைப் போன்று உயர்ந்தவர்கள் இல்லை என்பது கருத்து. யாருளர்? என்ற வினா, யாரும் இல்லாமை யுணர்த்தியது. 'உன்னருள் எய்திய என்னின்' என்று மேலும் சுதீக்கணனையே உயர்த்திக் கூறியதால், 'என்னின் யாருளர்' என்றது இராமன் தன்னைப் புகழ்ந்தது அன்று. சுதீக்கணன் அருள் வேறொரு சிற்றுயிர்க்குக் கிடைப்பினும் அவ்வருளால் அது ஒப்பற்று விளங்கலாம் அன்றோ? 'உயர்தவ முற்றினர் உன்னின் யாருளர்?' என்றது, சுதீக்கணன் என்ற பெயர்க் காரணத்தை விளக்குதல் காணலாம். நீ வர யான் செய்த தவம் யாதோ எனக் கூறிய சுதீக்கணனுக்கு மகிழ்ச்சி யுண்டாகுமாறு அவனையே மிக வுயர்த்திக் கூறியவாறு. இற் பிறந்தார் என்றது, நற்குடியிற் பிறந்து அதற்கேற்ப ஒழுகுகின்றவர்களை; இதனால் சுதீக்கணன் துறவற நெறியில் நின்று தவமியற்றினவன் என்பது பெறப்படும். (30)

2752. உவமை நீங்கிய தோன்ற லுரைக்கெதிர்
நவமை நீங்கிய நற்றவன் சொல்லுவா
னவமி லாவிருந் தாகியென் னுலமை
தவமெ லாங்கொள்க தக்கணை யாவென்றான்.

உவமை நீங்கிய தோன்றல் உரைக்கு எதிர்,
நவமை நீங்கிய நற்றவன் சொல்லுவான்;
'அவம் இலா விருந்து ஆகி, என்னால் அமை
தவம் எலாம் கொள்க தக்கணையா' என்றான்.

பொ :—தனக்குவமை யில்லாத இராமன் சொல்லுக்குப் பழைய நல்ல தவத்தையுடைய சுதீக்கணன் எதிர்மொழி சொல்லுவானாய், '(நீ) எனக்கு வீண் தன்மை யில்லாத நல்விருந்தாகி என்னால் இது காறும் செய்யப்பெற்ற தவமுழுமையையும் தக்கணையாகக் கொள்க' என்று கூறினான்.

கு :—உவமை நீங்கிய உரை என இயைப்பினும் ஆம். நவமை-புதுமை; அது நீங்கிய நற்றவம் என்றது, பழைய தவத்தை. சொல்லுவானாய் என்றான் என முற்றெச்சமாக்கி முடிக்க. அவம்-பயனின்மை; வீண். அவமிலா விருந்து என்றது பயனுடைய நல் விருந்து என்றவாறு. இராமன் சொல்லால் அவன் அறிவின் மேன்மையை யறிந்து மகிழ்ந்த சுதீக்கணன் அவனைப் பயனுடைய விருந்தினனாக ஏற்றுக்கொண்டு அந் நல் விருந்தினனுக்குத் தக்கணைப் பொருளாகத் தன் தவ முழுமையும் கொள்க என்று கொடுத்தான் என்பது கருத்து. அமைத்தல் இங்குச் செய்தல் என்னும் பொருளது. தக்கணை வடசொல் திரிபு. பெரியோர்க்கு அன்பால் அளிக்கும் கையுறைப் பொருளை அப்பெயரால் வழங்குவர். (31)

2753. மறைவ லானெதிர் வள்ளலுங் கூறுவா
னிறைவ நின்னரு ளெத்தவத் திற்கெளி
தறைவ தீண்டொன் றகத்தியற் காண்பதோர்
குறைகி டந்த தினியெனக் கூறினான்.

மறைவலான் எதிர், வள்ளலும் கூறுவான்,
'இறைவ! நின் அருள் எத்தவத்திற்கு எளிது?
அறைவது ஈண்டு ஒன்று; அகத்தியற் காண்பது ஓர்
குறை கிடந்தது, இனி' எனக் கூறினான்.

பொ :—வேதத்தில் வல்ல சுதீக்கணன் சொல்லுக்கு விடையாக வள்ளலாகிய இராமனும் கூறுவானுய், 'இறைவனே! நின்னுடைய அருள் எத்தகைய பெரிய தவத்திற்கும் எளிதாகுமோ? (ஆகாது; ஆதலால் நின்னருளே அமையும்) யான் சொல்லத்தக்கது இங்கு ஒன்றுளது; அகத்திய முனிவனைக் காண்பதாகிய ஒரு காரியம் இனி இருக்கின்றது; (யான் போதல் வேண்டும்)' என்று கூறினுன்.

கு :—'கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று' என்ற கருத்தால் நல் விருந்தாகிய இராமனுக்குச் சுதீக்கணன் தன் தவ முழுமையும் கொடுத்தாைக, அவன் எதிர் கொள்ளேன் என்றல் அதனினுமுயர்ந்தன்று என்ற கருத்தால், இராமன் நின்னருள் நின் தவத்தினுக்குக் குறைந்ததன்று; அவ்வருளைப் பெற்றதே அமையும் என்பதைப் புலப்படுத்தினுன் என்க.

ஏற்றற்கு உரிமையுடையவன் என்பது தோன்றச் சுதீக்கணனை, 'மறைவலான்' எனவும், கொடுத்தற்கே உரிமையுடையவன் என்பது தோன்ற இராமனை 'வள்ளல்' எனவும் கூறிச் சுதீக்கணன் கொடுத்த தவத்தை இராமன் ஏற்றுக் கொள்ளாமைக்குக் காரணம் குறிப்பால் பெற வைத்துள்ள நயம் காண்க. முனிவரைக் கடவுள் என்று கூறும் மரபுண்மையால், 'இறைவ!' என இங்குச் சுதீக்கணனை விளித்தவாறு. அவன் அருளின் பெருமை கூறு தற்கும் அவ்விளி ஏற்புடையதாயிற்று. 'அருள் எத்தவத்திற்கு எளிது' என்றதால், எத்தகைய பெருந்தவத்திற்கும் எளிதன்று; என்பதைப் புலப்படுத்தி, நின் அருளே அமையும்; தவம் வேண்டாம் எனத் தன் வள்ளன்மையையும் பெருமையையும் இராமன் உணர்த்தி மறுத்தவாறு. சுதீக்கணன், தன் தவத்தால் பெற்ற உலகங்களைத் தருவதாகக் கூறியதாகவும் இராமன் அதற்கிசையாமல், 'தன் முயற்சியால் அவ்வுலகங்களைப் பெறலாம் என்று கூறித் தாம் தங்கு தற்குரிய இடம் மட்டும் அமைத்துக் கொடுத்தால் போதும் என்று கூறியதாகவும் முதல் நூல் கூறும். குறை-காரியம். 'அகத்தியற் காண்பதோர் குறைகிடந்தது' என்று, சுதீக்கணனிடம் இராமன் கூறியது அம்முனிவன் அகத்தியன் மாணவனுதலின் ஆசான் உள்ள இடத்திற்கு வழிப்படுத்தற்குரியவன் என்னும் கருத்தா லாகும். (32)

**2754.** நல்ல தேநினைந் தாயது நானுமுன்
சொல்லு வான்றுணி கின்றது தோன்றனீ
செல்க வாண்டவற் சேருதி சேர்ந்தபி
னில்லை நின்வயி னெய்தகில் லாதவே.

'நல்லதே நினைந்தாய்; அது, நானும் முன்
சொல்லுவான் துணிகின்றது; தோன்றல்! நீ,
செல்க ஆண்டு; அவற் சேருதி; சேர்ந்த பின்,
இல்லை, நின் வயின் எய்த கில்லாதவே'.

பொ:—(சுதீக்கணன் கூறுகின்றான்): 'தலைவனே! நீ நல்லதே நினைத்தாய்; அது நானும் முன்னமே சொல்லத் துணிந்ததே; அவ்விடத்திற்குச் செல்லுக; அம் முனிவனை அடைவாயாக; அடைந்த பின் நின்னிடத்து அடையாத நன்மைகளே இல்லை'.

கு:—அது என்றது அகத்தியனைக் காணும் காரியத்தை. தோன்றல் என்பதற்கு முன்னுரைத் தாங்கு அவதார புருடன் என உரைத்தலும் ஆம். 'முன் சொல்லுவான் துணிகின்றது' என்பது காலவழுவமைதி. எய்தகில்லாத இல்லை என்றது, எல்லா நலங்களும் எய்தும் என்பதை வற்புறுத்தியவாறு. இல்லாத என்பது, அன்சாரியை இன்றி வந்த வினையாலணையும் பெயர். இராமன் அகத்தியன்பால் வில்லும் அம்பும் வாளும் பெறுதல் பின்னர்க் காணலாம். (33)

2755. அன்றி யுந்நின் வரவினை யாதரித்
தின்று காறுநின் றேமுறு மாலவற்
சென்று சேருதி சேருதல் செவ்வியோய்
நன்று தேவர்க்கும் யாவர்க்கு நன்றென.

'அன்றியும் நின் வரவினை ஆதரித்து,
இன்று காறும் நின்று ஏமுறுமால்; அவற்
சென்று சேருதி; சேருதல், செவ்வியோய்!
நன்று தேவர்க்கும், யாவர்க்கும் நன்று' என.

பொ:—'அதுவன்றியும் நின்னுடைய வரவை விரும்பி இன்று வரையில் எதிர்பார்த்து நின்று மகிழ்ச்சியுறுகின்றான்; (ஆதலால்) சென்று அவனை அடைவாயாக; செம்மை நலமுடையவனே! (நீ அம்முனிவனைச்) சேருதல் தேவர்க்கும் நல்லது; மற்றை யாவர்க்கும் நல்லதே ஆம்' என்று.

கு:—என என்பது வழியுங்கூறி என வருஞ் செய்யுளில் முடியும். ஆதரித்து–விரும்பி. ஏமுறல் - மகிழ்தல். "உண்டுவர வித்திசை யெனப் பெரிதுவந்தேன்" (2772) எனப் பின் அகத்தியனே கூறுதலும் காணலாம். சென்று சேருதலை மீண்டும் கூறியது, தப்பாமல்

செல்லுதல் வேண்டும் என்று வற்புறுத்த வேண்டி. முன்னைச் செய்யுளில் அகத்திய முனிவனை அடைதலால் இராமன் பெறும் பயனைக் கூறினான்; இச்செய்யுளில் அவன் செய்கையால் தேவரும் முனிவர் முதலிய யாவரும் நலம் பெறுவார்கள் என்பதுணர்த்தினான். அஃதி யாங்ஙனமெனின்? அகத்தியன்பால் பெறும் வில்லையும் அம்புகளையும் கொண்டு இராமன், இராவணன் முதலிய அரக்கரைக் கொல்லப் போகின்றானாதலின் அவ்வரக்கராலாய துன்பம் நீங்கித் தேவரும் மற்றை யாவரும் இன்புறுவர் என்க. தேவர்க்கும் யாவர்க்கும் நல முண்டாதற்கு இராமன் அகத்தியனைக் காணுதல் பரம்பரையால் ஏதுவாயிற்று; பஞ்சினாலாய படாம் என்பது போல. 'செவ்வியோய்' என்பதற்கு 'யாரும் தம் குறைகூறுதற்கேற்றவாறு மனமொழி முகங்கள் இனியனாயுள்ளவனே!' என்று பொருள் கூறலுமாம். (34)

### இராம இலக்குவர் விடைபெற்றுச் செல்லல்

**2756.** வழியுங் கூறி வரம்பக லாசிகண்
மொழியு மாதவன் மொய்ம்மலர்த் தாடொழாப்
பிழியுந் தேனிற் பிறங்கரு வித்திரள்
பொழியுஞ் சோலை விரைவினிற் போயினர்.

வழியும் கூறி, வரம்பு அகல் ஆசிகள்
மொழியும் மாதவன் மொய்ம் மலர்த் தாள் தொழாப்
பிழியும் தேனின் பிறங்கு அருவித் திரள்
பொழியும் சோலை விரைவினில் போயினர்.

பொ :—(அகத்தியன் தவக்குடிலுக்குச் செல்லும்) வழியையும் சொல்லி அளவிலாத ஆசி மொழிகளைச் சொல்லுகின்ற அப் பெரிய தவமுனிவனுடைய நெருங்கிய தாமரை மலர்போன்ற திருவடிகளைத் தொழுதுவிட்டு, (இராம இலக்குவர்கள்) தேனடையைப் பிழிந் தெடுத்த தேனைப்போல இனிய சுவையோடு விளங்கும் அருவித் திரள்கள் பொழிகின்ற (அகத்திய முனிவரின்)சோலைக்கு விரைவாகச் சென்றார்கள்.

கு :—மாதவன் என்றது சுதீக்கணனை. தேனடையிலிருந்து பிழிந்து தேனெடுக்கும் இயல்பு தோன்றப் 'பிழியுந்தேனின்' என்றார். மலையைச் சார்ந்துள்ள சோலை ஆதலின் அருவித்திரள் பொழிதற்கு இடனாயிற்று. அருவி நீரின் இன் சுவைக்குப் பிழியும் தேன் உவமை. தெய்வ முனிவன் அகத்தியன் தவக்குடில் உள்ள இடமாதலின் இனிய சுவையுடைய நீரருவிகள் மிக்குப் பொழிந்தன. 'தேனிற் பிறங் கருவித்திரள்' என்பதற்குத் தேனோடு கலந்து விளங்கும் அருவித்திரள் எனப் பொருள் கூறலுமாம். இனித் தேனினது

அருவித்திரள் பொழியும் சோலை என இயைத்துத் தேனையே அருவியாகச் சொரிகின்ற சோலை என்று பொருள் கூறி உயர்வு நவிற்சி ஆக்கலும் ஒன்று. சோலைக்கு என நான்காவது விரிக்க. விரைவினில் போயது அகத்திய முனிவனைக் காணும் ஆர்வத்தால் என்க. (35)

இதற்குப் பின் 25, 26, 44, 45 என்ற குறியீட்டெண்ணுள்ள சுவடிகளில் கீழ்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகின்றது.

2756. (a) கான யாறுங் கனவரைச் சாரலும்
ஏனை வீர ரினிதினி லெய்தினர்
ஆன கத்திய னுய பிறர்தமை
வான வர்க்கிறை வன்வணங் கிச்செலா.

## அகத்தியர் இராமனை எதிர்கொள்ளுதல் 2757—2771

**2757.** ஆண்டகைய ரவ்வயி னடைந்தமை யறிந்தா
★ னீண்டுவகை வேலைதுணை யேழுலகு மெய்த
மாண்டவர தன்சரண் வணங்கவெதிர் வந்தா
னீண்டதமி ழாலுலகை நேமியி னளந்தான்.

ஆண் தகையர் அவ்வயின் அடைந்தமை அறிந்தான்,
ஈண்டு உவகை வேலை துணை ஏழ் உலகும் எய்த,
மாண்ட வரதன் சரண் வணங்க, எதிர் வந்தான்;
நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்.

பொ :—சக்கரப்படையுடைய திருமால் (குறளனாய்ச் சென்று பின் கொண்ட நெடிய வடிவத்தால் இவ்வுலகை யளந்தது) போல, நெடிதாகிய தமிழ் மொழியால் இவ்வுலகத்தை அளந்தவனாகிய அகத்தியன், ஆண் தன்மையிற் சிறந்த இராம இலக்குவர்கள் அங்கு அடைந்தமையை அறிந்தவனாய், நெருங்கிய மகிழ்ச்சிக் கடலில் பதினான்கு உலகங்களும் அழுந்துமாறு, மாட்சிமையுடைய இராமன், தன் திருவடிகளை வணங்க எதிரே வந்தான்.

கு :—அகத்தியன்பால் உள்ள வில் முதலிய போர்க் கருவிகளையேற்று இராவணன் முதலிய அரக்கரைக் கொல்லுதற்குரிய பேராண்மையுடையர் என்ற குறிப்புத் தோன்ற, 'ஆண்டகையர்' என இராம இலக்குவரைக் குறிப்பிட்டார். வயின் - இடம். ஈண்டுதல் - நெருங்குதல். உவகை வேலை - மகிழ்ச்சியாகிய கடல்; உருவகம். துணையேழ் உலகும் - பதினான்கு உலகும். உவகையைக் கடலாக உருவகித்ததற்கு ஏற்ப, 'எய்தல்' என்பதற்கு அழுந்துதல்

எனப் பொருள் கூறலாயிற்று. இனி, உவகையாகிய கடல் பதி னான்கு உலகத்தும் பரவ எனப் பொருள் கூறலுமாம். அகத்தியனை இராமன் வணங்கி வில் முதலியவற்றைப் பெற்று இராவணன் முத லிய அரக்கரைத் தொலைத்து உலகிற்கு இருந்த இடரை நீக்கி இன் பத்தை யுண்டாக்கப் போகின்ருன் ஆதலின், "ஈண்டுவகை வேலை துணை யேழுலகுமெய்த......வணங்க எதிர்வந்தான்" என்ருர். அகத்தியன், இராமன் வணங்க எதிர்வருதல் உலக மகிழ்ச்சிக்கு நேரே ஏதுவன்று, ஆயினும் பரம்பரையால் ஏதுவாதல் காணலாம். வரதன் என்றது இராமனை; வரத்தைக் கொடுப்பவன், என்பது பொருள். 'மேலானவன்' எனலும் ஆம். மாண்ட – மாட்சிமை யுடைய. மாண்ட வரதனும் வணங்கத் தக்கவன் அகத்தியன் என அவன் பெருமை விளக்கியவாறு. இராமன் அகத்தியனுடைய சரண் வணங்கியதை, 'நின்றவனை வந்த நெடியோன் அடி பணிந்தான்' (2768) என்று பின்னர்க் கூறுதலால் உணரலாம். தமிழ்க்கு நெடுமை யாவது அளவிறந்த நூல்களையுடைமை. எதிர்கொள்வோனுகிய அகத்தியனுக்கும் எதிர்கொள்ளப்படுவோனுகிய இராமனுக்கும் ஒத்த தகுதியுண்டு என்பது தோன்ற 'நீண்ட தமிழால் உலகை நேமியி னளந்தான்' என்ருர். நெடியனுய் உலகளந்தவனே இராமனுக வந்துள்ளான் என்பது தோன்றப் பின், 'வந்த நெடியோன் அடி பணிந்தான்' எனக் கூறுதலும் காண்க. 'நேமி' ஆகுபெயராய் அதைக் கருவியாகக் கொண்ட திருமாலையுணர்த்திற்று. திருமால் குறளனுய்ச் சென்று பின் கொண்ட நெடிய வடிவால் உலகை அளந் ததுபோல, அகத்திய முனிவன் குறியனுய் இருந்தே பின்கற்ற நீண்ட தமிழால் உலகையளந்தான் என உவமையை விரித்துக் கொள்க. தமிழால் உலகை அளத்தலாவது, பிறமொழி வழங்கும் நாட்டவர்களும் தம் மொழியாகவே விரும்பி யேற்றுக் கொள்ளுமாறு தமிழ் மொழியை வளப்படுத்துதல். (36)

**2758.** பண்டவுணர் மூழ்கினர்
படார்களென வானே
ரெண்டவ வெமக்கருள்
கெனக்குறை யிரப்பக்
கண்டொருகை வாரினன்
முகந்துகட லெல்லா
முண்டவர்கள் பின்னுமிழ்க
வென்றலு முமிழ்ந்தான்.

பண்டு, 'அவுணர் மூழ்கினர்; படார்கள்' என வானோர்,
'எண் தவ! எமக்கு அருள்க' எனக் குறை இரப்பக்
கண்டு, ஒருகை வாரினன் முகந்து கடல் எல்லாம்
உண்டு, அவர்கள் பின் 'உமிழ்க' என்றலும் உமிழ்ந்தான்.

பொ:—முன் காலத்தில் தேவர்கள், "மதிக்கத்தக்க தவத்தை யுடையவனே! அசுரர்கள் கடலில் மூழ்கி ஒளித்துக் கொண்டனர்;" (அவர்களை அவ்வாறே விட்டேமாயின்) அவர்கள் அழியமாட்டார்கள் எனவும், "எங்கட்கு (இரங்கி இக்கடல் நீரையெல்லாம் உண்டு) அருள் செய்க" எனவும் குறையிரந்து வேண்டக் கண்டு (மனமிரங்கி) கடல் நீர் எல்லாவற்றையும் ஒரு கையில் முகந்து வாரி உண்டு, பின் அத்தேவர்கள் 'உமிழ்க' என்று வேண்டின அளவில் உமிழ்ந்த பெருமையுடையவன்.

கு:—பண்டு, வானோர், 'எண்தவ! அவுணர் மூழ்கினர் படார்கள்' எனவும் 'எமக்கருள்க' எனவும் கூறிக் குறையிரப்பக் கண்டு, கடல் எல்லாம் முகந்து வாரி உண்டு, பின் அவர்கள், 'உமிழ்க' என்றலும் உமிழ்ந்தான் எனக் கொண்டு கூட்டுக. ததீசி முனிவரின் முதுகெலும்பு கொண்டு செய்த வலிய படையை இந்திரன் தாங்கிச் செய்யும் போர்க்கு ஆற்றாத விருத்திராசுரன் முதலிய அசுரர் கடல் நீரில் மூழ்கி ஒளிந்துகொண்டமைகண்டு அவ்விந்திரன் அகத்திய முனிவனை அணுகிக் கடல்நீரையுண்ணுமாறு வேண்ட, உண்டார் என்பதும் அவ்வசுரரை அழித்தபின் மீண்டும் அந்நீரை உமிழ்க என்று வேண்ட உமிழ்ந்தார் என்பதும் புராண வரலாறு. திருவிளையாடல் இந்திரன் பழிதீர்த்த படலம் காண்க. 'சொற்கலை முனிவனுண்ட சுடர்மணிக் கடலும்' (569) எனக் கம்பர் முன்னர் இந்நிகழ்ச்சியைக் குறித்திருத்தலும் காண்க. வாரினன், முற்றெச்சம். கடல் என்றது ஆகுபெயரான் நீரை உணர்த்தியது. கடலை உண்டுமிழ்ந்த பெருமை அகத்தியற்குஉண்டு என்பது இதனால் விளக்கியவாறு. (37)

**2759.** தூயகட னீரடிசி லுண்டது துரந்தா
ணயவத னலமரு மெய்யுடைய வன்னான்
மாயவினை வாளவுணன் வாதவிதன் வன்மைக்
காயமினி துண்டுலகி னாரிடர் களைந்தான்.

தூய கடன் நீர் அடிசில் உண்டு அது துரந்தான்
ஆய அதனால் அமரும் மெய்யுடைய அன்னான்,
மாய வினை வாள் அவுணன் வாதவிதன் வன்மைக்
காயம் இனிது உண்டு உலகின் ஆரிடர் களைந்தான்.

பொ :—தூய்மையான முறைமையில் நீராகிய உணவை மட்டும் உண்டு பழகிப் பின், அந்நீருணவையும் விடுத்துச் செய்த தவத்தின ணுகிய அத்தூய தன்மையால் ஒளிவிளங்கும் மேனியையுடைய அம் முனிவன், வஞ்சக வினைசெய்யும் கொடிய அவுணனுகிய வாதாவி என் பவனுடைய வன்மை வாய்ந்த உடம்பை (வெறுக்காமல்) இனிதாக உண்டு உலகத்தவரின் பெருந் துன்பத்தைப் போக்கின சிறப்பை யுடையவன்.

கு :—கடன்-முறைமை. நீராகிய உணவின் மேன்மை தோன்றத் 'தூய கடன் நீரடிசில்' என்ருர். உணவைப் படிப்படியாக விடுப்ப வர்கள் இறுதியில் உணவாகக் கொள்வது தூய நீரேயாதலின் அந் நீரை மட்டும் உண்டு பழகிப் பின் அதனையும் விடுத்துக் கடுந்தவம் புரிந்து அத்தவத்தால் ஒளிவிளங்கும் உடம்பை உடையவனுகிய அகத்தியன், தன் தவத் தூய்மைக்கு ஏலாத அசுரனுடைய வன்மை வாய்ந்த உடம்பையுண்டது உலகர் இடர் நீக்கவே யாம் என்று அவ னுடைய அருளுடைமை விளக்கியவாறு. தூய மென்மையான நீரை யும் மிகையென எண்ணி விடுத்தவனுக்குத் தூய்மையற்ற வன்மை வாய்ந்த அவுணனின் காயம் பொருந்தாவுணவாதல் காண்க. அமர் தல் - விளங்குதல். இவ்வாறு கொள்ளாது மேலைச் செய்யுளில் கூறிய கடல் நீரையுண்ட நிகழ்ச்சியையே இச்செய்யுளிலும் கூறினர் எனின், கூறியது கூறலாகும் ஆதலாலும் வாதாவியின் காயமுண்ட தைக் கூறவந்தவர், கடல் நீரையுண்டதைக் கூற இயைபு யாதும் இன்மையானும், மேற்கூறிய பொருளே பொருத்தமாதல் காணலாம். இனி அகத்தியர் நாளும் கடல்நீரையுண்டு பழகிப் பின் அதையும் விடுத்தவர் எனலும் ஆம். வாதாவி, வாதவி என நின்றது.

வாதாவிதன் காயமினிதுண்ட வரலாறு:—இல்வலன், வாதாவி என்ற அசுரரிருவர் இருந்தனர். அவர்களுள் மூத்தவனுகிய இல்வலன் நாள்தோறும் அந்தணர் வேடம் தாங்கிச் சிராத்தம் என்ற ஒரு தலைக்கீடு வைத்து அந்தணர்களை வரவழைத்து ஆட்டின் வடிவங் கொண்ட வாதாவியைக் கொன்று அவனுடைய தசையை அந்த ணர்கள் மிசையச் செய்து பின் 'வாதாவி! வெளியே வா' என்று அழைக்க, அவன் இறந்தவர்களை எழுப்பும் மந்திரத்தின் வலிமை யால் அவ்வந்தணர்களின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளி வரச் செய்து பின் வயிறு கிழிந்திறந்த அந்தணரின் தசையை அவ் விருவரும் உண்டு உயிர்வாழும் இயல்பினராக இருந்தனர். இவ் வாறு இவர்கள் செய்வதால் அந்தணர் பலர் அழிந்தனர். இவர் களின் செயலுக்கு முடிவு காண அகத்தியரே ஒருநாள் சென்று வாதாவியின் தசையை மிசைந்தவுடன் இல்வலன் வழக்கம்போல் அழைக்க, அம்முனிவர், 'வாதாவி! சீரணமடைவாயாக' எனச்

சொல்லி வயிற்றைத் தடவ, வாதாவி அழிந்தான். அது கண்டு இல்வலன் சினம் பொங்கிவர, முனிவர் கண்களால் அவனை எரித்தார் என்பது. (38)

**2760.** யோகமுறு பேருயிர்க டாமுலைவு ருமல
லேகுநெறி யாதென மிதித்தடியி னேறி
மேகநெடு மாலைதவழ் விந்தமெனும் விண்டோய்
நாகமது நாகமுற நாகமென நின்ருன்.

'யோகம் உறு பேர் உயிர்கள் தாம், உலைவு உருமல்
ஏகும் நெறி யாது?' என, மிதித்து அடியின் ஏறி,
மேக நெடு மாலை தவழ் விந்தம் எனும் விண் தோய்
நாகமது நாகம் உற, நாகம் என நின்ருன்.

பொ:—(வடக்கணிருந்து தெற்கண் போந்த காலத்தில் இடையே மிக வளர்ந்து குறுக்கிட்ட மலையைக்கண்டு, இம்மலை இவ்வாறிருந்தால்) 'யோக நெறியிற் பழகிய பெரியோர்கள் விண்வழியில் துன்புருமல் செல்லுதற்கு வழி எங்குளது?' என்பதை எண்ணி, வழி உண்டாகத் தன் அடிகளால் மிதித்து ஏறி, மேகங்களின் நீண்ட வரிசை தவழ்கின்ற விந்தம் என்னும் பெயரையுடைய விண்ணளாவிய அம்மலையானது பாதாள உலகத்தை அடையுமாறு யானைபோல் நின்ற பெருமையுடையவன்.

கு:—யோக நெறியில் பயின்ருேர் விண்வழிச் செல்லும் ஆற்றலுடையவர் ஆவர். அவர் அங்ஙனம் செல்லுங்கால் விந்தமலை விண்ணுற உயர்ந்திருத்தலின் உலைவுறுவர் ஆதலின், அவ்யோகியர் வருந்தாவாறு விண்ணளாவிய விந்தமலையைப் பாதாளத்து அழுத்த வேண்டி அடியின் மிதித்தேறி யானைபோல் வீறுகொண்டு நின்ருன் அகத்தியன் என்க. விந்தமலை குறுக்கிட்ட வழியும் அகத்தியன் அதைக் கடந்து செல்ல வல்லனுயினும் பிற முனிவர்கள் நலத்திற்காக விந்தமலையை அழுத்தினுன் என அவன் பெருமையைப் புலப்படுத்தியவாறு. யோகமுறு பேருயிர் என்றது முனிவர்களை; அவர்கள் விண்வழிச் செலல்வல்லர் என்பதை, 'மொய் விசும்பு ஓடமாகத் தேவரின் முனிவர் போனர்' (245) என முன் கூறியுள்ளமையாலும் உணரலாம். உலைவு – வருத்தம். ஏகுநெறியாது? என்றது, ஏகுநெறியின்மையை யுணர்த்தியது. என - எனஎண்ணி. ஏறி நின்ருன் என இயையும். 'மேக நெடுமாலை தவழ்' என்பதும், 'விண்டோய்' என்பதும், விந்திய மலையின் உயர்ச்சியை விளக்க வந்த அடைமொழிகள். நாகம் – மலை, பாம்பு, யானை என்ற பல

பொருள் தந்தது. பாம்பை யுணர்த்தும் நாகம் என்ற சொல் ஆகு பெயராய் நாகர் உலகத்தை யுணர்த்தியது. எண்வகைச் சித்திகளி லும் வல்லூ அகத்தியன் குறுகிய வடிவினனாயினும் மேருமலைபோன்ற கனமுடையனாய் விந்திய மலையை அடக்கிய வீறு தோன்ற, 'நாக மென நின்றான்' என்றார். (39)

**2761.** மூசரவு சூடுமுத லோனுரையின் மூவா
மாசிறவ வேகென வடாதுதிசை மேனா
ணீசமுற வானினெடு மாமலய நேரா
வீசனிக ராயுலகு சீர்பெற விருந்தான்.

மூசு அரவு சூடும் முதலோன், உரையின், 'மூவா
மாசு இல் தவ! ஏகு' என, வடாது திசை மேல் நாள்
நீசம் உற, வானின் நெடு மா மலயம் நேரா,
ஈசன் நிகராய், உலகு சீர் பெற இருந்தான்.

பொ :—பழங்காலத்தில் (தென்திசையுயர்ந்து)வடதிசை தாழ்ந்து போக(க் கண்ட) மொய்க்குமாறு பாம்புகளை அணியாக அணிந்த முதல்வனாகிய சிவபிரான், வானளாவிய நெடிய பெரிய பொதிய மலை யைத் தன் சொல்லால் கொடுத்து, 'மூவாமையுடைய, குற்றமற்ற தவமுனிவ! (அம்மலைக்குச்) செல்' என வேண்ட, (அங்குச் சென்று) உலகம் சமநிலை அடைய அச்சிவபிரானுக்குச் சமமாக அமர்ந்திருந்த பெருமையுடையவன்.

கு :—மேனாள் வடாது திசை நீசமுற, முதலோன், மலயம் நேரா, மாசில் தவ! ஏகு என, உலகு சீர்பெற ஈசன்நிகராய் இருந்தான் என்று இயையும். மூசுதல்-மொய்த்தல். சிவபிரான் அணிந்த பாம்பு களின் மிகுதி தோன்ற, 'மூசரவு' என்றார். சிவன் முதற் கடவுள் என்பது புலப்பட 'முதலோன்' என்றார். 'வடாது திசை நீசமுற' என்றமையால் தென்திசையுயர்ந்தமை பெறப்பட்டது. நீசமுறல் - தாழ்ச்சியுறல். பார்வதிதேவியாரின் திருமணத்திற்கு உலக உயிர்கள் யாவும்இமயமலையில் திரண்டுவிட்டமையால் வடதிசை தாழ்ந்து விட் டது என்பதும் அத்தாழ்வு நீங்கிச் சமநிலையுற அகத்தியனைப் பொதிய மலையில் தங்குமாறு சிவன் கட்டளையிட்டான் என்பதும் புராண வர லாறு. சீர்பெறலாவது வடக்கும் தெற்கும் சமநிலை யெய்தல். நேர் தல் - கொடுத்தல். 'கரவாளை நேர்ந்தான் இடம்போலும்' (தேவா ரம் – 111-8) என்புழியும் இச்சொல் இப்பொருளதாதல் காணலாம். நேரா செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். மலையைக் கையில் கொடுத்தல் இயலாதாகலின் 'உரையின் நேரா' என்றார்.

உலகமுழுதுடையன் சிவபிரான் ஆதலின், தென்கோடியிலுள்ள பொதிய மலையை உரையின் நேர்தல் இயலுவதாயிற்று. அகத்திய முனிவன் தவத்தால் இளமையோடு இருந்தமை புலப்பட, 'மூவா மாசில் தவ!' என்றார். மூவாமை – மூப்படையாமை. சிவபிரானோடு இருந்து மணங்கண்டு இன்புறவேண்டிய அகத்தியன், அப்பிரானைப் பிரிந்து தென்மலையில் இருக்க உடன்பட்டது உலக நன்மைக்காகவே என்பது புலப்படுத்தியவாறு. வடதிசையில் கயிலைமலையில் சிவன் இருப்பது போலத் தென் திசையில் பொதிய மலையில் அகத்திய முனிவன் இருந்தான் என்பார், 'ஈசன் நிகராய் இருந்தான்' என்றார். தவப்பெருமையால் தாழ்சடையோனுக்குச் சமமானவன் என்றலும் ஆம். (40)

**2762.** உழக்குமறை நாலினு முயர்ந்துலக மோதும்
வழக்கினு மதிக்கவியி னும்மரபி னாடி
நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கட்
டழற்புரை சுடர்க்கடவு டந்ததமிழ் தந்தான்.

உழக்கும் மறை நாலினும் உயர்ந்து, உலகம் ஓதும்
வழக்கினும், மதிக் கவியினும், மரபின் நாடி,—
நிழல் பொலி கணிச்சி மணி நெற்றி உமிழ் செங்கண்
தழல் புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ்—தந்தான்.

பொ :—வருந்திப் பயிலுதற்குரிய வேதங்கள் நான்கினும் பயின்ற பயிற்சியால் உயர்ச்சி பெற்றுத் தமிழ் உலகம் பேசுகின்ற வழக்கின் கண்ணும் மதிநுட்பத்தால் செய்யப்பட்ட தமிழ்ப் புலவரின் செய்யுளின் கண்ணும் முறைப்பட ஆராய்ந்து—ஒளி விளங்குகின்ற மழுவாயுதத்தையும், நெற்றியுமிழ்ந்த மணி போன்று (நெற்றியில்) விளங்கும் சிவந்த கண்ணையும் உடைய நெருப்பைப் போன்று ஒளி விளங்கும் செம்மேனியனாகிய சிவபிரான், தனக்குக் கற்பித்த தமிழ் இலக்கணத்தைச் செய்தருளிய பெருமையுடையவன்.

கு :—அகத்தியன் நான்கு வேதங்களையும் கற்று உயர்ந்தவன் என்பார், 'உழக்கு மறை நாலினும் உயர்ந்து' என்றார். மறை பயிலுதற்கு முயற்சி மிகுதி வேண்டும் என்பது தோன்ற, 'உழக்கு மறை' எனச் சிறப்பித்தார். அகத்தியரின் மாணவர்களில் ஒருவராகிய அதங்கோட்டாசானைக் குறிப்பிடும் போது, 'நான்மறை முற்றிய அதங்கோட்டாசாற்கு' எனப் பனம்பாரனார் கூறியுள்ளதும் காண்க. மறைநான்காவன : தைத்திரியம், பௌடிகம், தலவகாரம், சாம வேதம் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. உலகம் என்றது,

வடவேங்கடம் தென்குமரி, ஆயிடைத், தமிழ் கூறும் நல்லுலகத்தை. கூறுதல் - பேசுதல். மதிநுட்பத்தால் செய்யப்படும் செய்யுள் என்பது புலப்பட 'மதிக்கவியினும்' என்றார். என்றது தமிழ்நாட்டுச் செய்யுள் வழக்கினை. "வழக்கும் செய்யுளும் ஆயிருமுதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி" (தொல்-பாயிரம்) என்பது ஈண்டைக்கு நினைக்க. அகத்தியன் இலக்கணம் செய்தபோது, தமிழ் நாட்டுப் பேச்சு வழக்கின்கண்ணும் செய்யுள்வழக்கின்கண்ணும் ஆராய்ந்து செய்தான் என்பது கருத்து. வழக்கின்கண்ணும் கவியின் கண்ணும் நாடித் தமிழ் தந்தான் என்க. வழக்கினையும் கவியினையும் நாடி என இரண்டாவது விரிப்பினும் ஆம். சிவபிரானுடைய நெற்றியில் காணப்படும் நெருப்புக்கண் நெற்றியுமிழ்ந்த மணி போன்று விளங்குகின்றது எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறியது. 'மணி போன்ற செங்கண்' என்க. 'மணி நெற்றி' என்றே கொண்டு அழகிய நெற்றி எனலும் ஆம். 'எரிபோல் மேனிப்பிரான்' (திருநாவுக்கரசு – தேவாரம்) என்றதற்கேற்ப இங்குத் 'தழற்புரை சுடர்க் கடவுள்' என்றார். தழல் - எரி. தமிழ் என்றது தமிழிலக்கணத்தை. அகத்தியர்க்குச் சிவபிரான் தமிழறிவுறுத்தினன் என்பதை, "தென் மொழியை யுலகமெலாந் தொழுதேத்தும் குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்" (காஞ்சிப்-தழுவக்-248) என்றதாலும் அறியலாம். (41)

**2763.** விண்ணினி னிலத்தினில் விகற்ப வுலகிற்பே
ரெண்ணினி லிருக்கினி லிருக்குமென யாரு
முண்ணினை கருத்தினை யுறப்பெறுவெ னுலென்
கண்ணினி லெனக்கொடு களிப்புறு மனத்தான்.

'"விண்ணினில், நிலத்தினில், விகற்ப உலகில், பேர்
எண்ணினில், இருக்கினில், இருக்கும்" என யாரும்
உள் நினை கருத்தினை, உறப்பெறுவெனுல், என்
கண்ணினில்' எனக் கொடு களிப்புறும் மனத்தான்.

பொ :—"விண்ணுலகத்திலும் நிலவுலகத்திலும் இவற்றிற்கு வேருயுள்ள உலகங்களிலும், அவ்வுலகங்களிலுள்ளாரின் பேரறிவிலும், வேதத்திலும் இருக்கும் என எத்தகையோரும் உள்ளத்தால் மட்டும் நினைக்கின்ற கருத்துப் பொருளாயுள்ள இராமனை, இன்று என் கண்ணில் காட்சிப் பொருளாய்க் காணப்பெறுவேன்" என்று எண்ணிக் களிக்கின்ற மனத்தையுடையவன்.

கு :—'விகற்பவுலகில்' எனப் பின் வந்தமையால் முன் வந்த விண், நிலம் என்பன உலகங்களையே குறித்தன என்பது பெறப் படும். விண்ணுலகும் மண்ணுலகும் அல்லாத அதலம் முதலிய உல கங்களை விகற்பவுலகம் என்றார். விகற்பம் – வேறுபட்டது. எண் - அறிவு. 'தொக்கிருந் தெண்ணின னெண்ணப்படும்' (நான் மணிக் – 76) என்புழி எண் அப்பொருளதாதல் காணலாம். பேரெண் என்றது, பேரறிவை. "அறிவினிலருளான்மன்னி" (சிவஞான சித்தி - சுபக் - 1) என இறைவன் அறிவினில் தங்கியிருப்பான் என் பதைக் கூறுதல் காணலாம். "எல்லாவுலகங்களிலும் நிறைந்திருப் பன்; அவ்வுலகங்களிலுள்ள அன்பர்களின் பேரறிவிலும் இருப்பன் ; அவ்வறிவிற்குக் காரணமாயுள்ள ஞானநூலாகிய வேதத்தினும் இருப்பன்' என்று எத்தகைய பெரியோரும், நினைத்தறிவதையன்றிக் கண்டறிந்தாரில்லை ; ஆயின் யான் இன்று என் கண்ணால் காட் சிப்பொருளாய்க் காணப் போகின்றேன்" எனத் தன் பேற்றினை நினைந்து களிக்கின்ற மனத்தன் ஆனான் அகத்தியன் என்க. "பூதங்கள் தோறும் நின்றாயெனினல்லால்......கேட்டறியோம் உனைக்கண்டறிவாரை......எங்கண் முன்வந்து ஏதங்கள் கெடுத் தெமை யாண்டருள்புரியும் எம்பெருமான்" (திருவாசகம் – திருப் பள்ளி - 5) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். கண்ணினிலுறப் பெறுதலாவது, கண்ணால் காண்டல். எங்கும் நிறைந்துள்ள பரம் பொருளே இராமனாக உருவுகொண்டு வந்துளது என்பது விளக்கிய வாறு. கொடு, கொண்டு என்பதன் இடைக்குறை. 'யாரும்' என் பதில் உம்மை உயர்வு சிறப்பு. (42)

**2764.** இரைத்தமறை நான்கினொ டியைந்தபிற யாவு
நிரைத்தநெடு ஞானநிமிர் கல்லினெடு நாளிட்
டரைத்துமய னாருமறி யாதபொரு ணேர்நின்
றுரைத்துதவு மாலெனு முணர்ச்சியி னுவப்பான்.

'இரைத்த மறை நான்கினொடு இயைந்த பிற யாவும்
நிரைத்த நெடு ஞான நிமிர் கல்லில் நெடுநாள் இட்டு
அரைத்தும் அயனாரும் அறியாத பொருள், நேர் நின்று
உரைத்து உதவுமால்'. எனும் உணர்ச்சியின் உவப்பான்.

பொ :—'முறைப்படுத்தி வளர்த்த நெடிய ஞானமாகிய உயர்ந்த அம்மியில், மிக்கொலிக்கின்ற வேதங்கள் நான்கினையும் அவற்றோடு இயைபுடைய பிறநூல்கள் எல்லாவற்றையும் இட்டு நெடுநாள் அரைத்தும் பிரமனும் அறியவியலாத பரம்பொருள், நம் கண்

ணெதிரே நின்று உரையாடி அருளை உதவப் போகின்றது' என்கின்ற வியப்புணர்ச்சியால் மகிழ்கின்றவன்.

கு:—உரத்தகுரலில் ஓதுதற்குரிய வேதம் என்பார், ''இரைத்த மறை'' என்றார். 'மறை நான்கினொடியைந்த பிற யாவும்' என்றது, வேதங்களின் பொருளை அறியக் கருவியாகவுள்ள மீமாம்சை, புராணம், அளவைநூல், அறநூல் முதலியவற்றை. நூற்பயிற்சியால் முறைப்படுத்தி வளர்த்த பேரறிவு என்பார், 'நிரைத்த நெடு ஞானம்' என்றார். 'ஞான(மாகிய) நிமிர்கல்' என்றது உருவகம். நெடு நாள் அரைத்தற்குத் தகுதியுடைமை தோன்ற 'நிமிர்கல்' என்று சிறப்பித்தார். 'நிரைத்த நெடுஞான நிமிர்கல்லில் மறை நான்கினொடியைந்த பிறயாவும் இட்டு நெடுநாள் அரைத்தும் அயனும் அறியாத பொருள்' என்று இயையும். நெடுநாள் அரைத்தும் அறியாத பொருள், அயனும் அறியாத பொருள் எனத் தனித்தனி கூட்டி, உம்மையிரண்டையும் உயர்வு சிறப்பும்மையாக்குக. வேதங்களையும் பிற நூல்களையும் தன் பேரறிவு கொண்டு பிரமன் நெடுநாள் ஆராய்ந்தும் அறியவியலாத பரம்பொருள் என்பார், 'ஞான நிமிர்கல்லின் மறைநான்கினொடியைந்த பிற யாவும் இட்டு அரைத்தும் அயனும் அறியாத பொருள்' என உருவகத்தால் கூறினர்; அகத்தியர் மருந்தரைக்கும் மருத்துவரும் ஆவர் என்ற குறிப்புப் புலப்பட வேண்டிப்போலும். அரைத்தலும் உரைத்தலும் சித்தவைத்தியத்தில் உண்டு. பரம்பொருளே இராமனாக வந்துளான் என்ற கருத்தால், 'நேர்நின்றுரைத்துதவும்' என்றுணர்ந்து மகிழ்ந்தான். நெடு நாள் ஆய்ந்தும் பிரமனாலும் அறியவொண்ணாத பரம்பொருள், நேர் நிற்றல் அருமை; அதனினும் உரையாடுதல் அருமை; அதனினும் அருளையுதவுதல் அருமை என்பது புலப்பட, 'நேர்நின்று உரைத்து உதவுமால்' என்று முறைப்படுத்திக் கூறினன். அரியபொருள் எளிமையாக வருகின்றது என்பது வியப்புணர்ச்சியை உண்டாக்கிற்று. (43)

2765. உய்ந்தன ரிமைப்பில ருயிர்த்தனர் தவத்தோ
ரந்தண ரறத்தினெறி நின்றனர்க ளானார்
வெந்திற லரக்கர்விட வேர்முத லறுப்பான்
வந்தனன் மருத்துவ னெனத்தனி வலிப்பான்.

'உய்ந்தனர் இமைப்பிலர்; உயிர்த்தனர் தவத்தோர்;
அந்தணர் அறத்தின் நெறி நின்றனர்கள் ஆனார்;
வெம் திறல் அரக்கர் விட வேர் முதல் அறுப்பான்,
வந்தனன் மருத்துவன்' எனத் தனி வலிப்பான்.

பொ :—'கொடிய வலிமையுடைய அரக்கர்களாகிய நச்சுவேரை அடியோடு அறுப்பதற்கு இராமனாகிய மருத்துவன் வந்தனன்; (ஆதலால் இனி) இமைத்தல் இல்லாத தேவர்கள் பிழைத்தார்கள்; தவத்தினராகிய முனிவர் உயிர் பெற்றார்கள்; அந்தணர்கள் அற நெறியில் ஒழுகினவர் ஆயினர்' எனத் தனியே தனக்குள் துணிபவனானான்.

கு :—இமைப்பிலர் - தேவர்கள்; இமையாத கண்ணுடைய ராதலின் அவரை அப்பெயரால் கூறினார். தவத்தோர் அரக்கர் களின் கொடுமையால் உயிர் போகும் நிலையில் இருந்தமையால் இனி உயிர்த்தனர் என்றார். உய்ந்தனர், உயிர்த்தனர், நின்றனர்கள் என்பன துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாக வந்தன; கால வழுவமைதி. அந்தணர் என்றது இங்கு இல்லறநெறி மேற்கொண் டொழுகும் பார்ப்பனரை. உய்ந்தனர் ஆனார், உயிர்த்தனர் ஆனார் என ஆனார் என்பதை முன்னும் கூட்டிப் பொருள் கொள்க. அரக்க ராகிய விடவேர் என்ற உருவகத்திற்கு ஏற்ப இராமனாகிய மருத்து வன் என மாட்டேறில்லா உருவகத்தை விரித்துரைக்க. நச்சுவேர் நிலத்தில் தோன்றுமாயின் அவ்வேரால் பலர் அழிவர். அவ்வேரைப் பறிக்கச் செல்வோரும் அழிவர். நல்ல மருத்துவனே அவ்வேரைப் பறித்துத் தனக்கும் உலகர்க்கும் இடரின்றிச் செய்யவல்லான் என்க. வேர் சிறிது இருப்பினும், மேலும் தோன்றி அழிவு செய்யும் ஆதலின் 'வேர் முதல் அறுப்பான்' என்றார். 'ஆரறத்தினோடன்றி நின்றாரவர் வேரறுப்பென்' (2743) என முன்னர் இராமன் கூறியதும் இங்கு நினைக்க. விடவேர் இயல்பாகவே பிறரை அழிக்கும் ஆற்றல் பெற்றிருப்பதுபோல அரக்கரும் இயல்பாகவே கொடுமையுடைய வர்கள் என்பது தோன்ற, அவரை விடவேராக உருவகஞ் செய்தார். அவ்வேரை அடியோடு பறிக்கவல்ல இராமனை 'மருத்துவன்' என மாட்டேறில்லா உருவகத்தால் கூறினார். அகத்தியன் மருத்துவன் ஆதலின் இராமனையும் தன்னைப்போன்று மருத்துவனாக்கிக் கூறினான்; புலவன் இறைவனையும் புலவனாகக் காண்பதுபோல. 'நூலறிபுலவ' (முருகாற்றுப்-261) என நக்கீரர் முருகனைப் புலவனாகக் கண்டமை அறியலாம். மருத்துவன் – வயித்தியன். வலிப்பான் – துணிவானானான். தனக்குள் துணிவுகொண்டான் என்பார், 'தனி வலிப்பான்' என்றார்; பிறரோடு எண்ணித் துணியவில்லை என்ற வாறு. (44)

**2766.** ஏனையுயி ராமுலவை யாவுமிடை வேவித்
தூனுக ரரக்கருரு மைச்சுடு சினத்தின்

கானவன லேக்கடி தவித்துல களிப்பான்
வானமழை வந்ததென மைந்துறு மனத்தான்.

'ஏனை உயிராம் உலவை யாவும் இடை வேவித்து
ஊன் நுகர் அரக்கர் உருமைச் சுடு சினத்தின்
கான அனலேக் கடிது அவித்து உலகு அளிப்பான்
வான மழை வந்தது' என மைந்துறு மனத்தான்.

பொ :—'(தம்மினமல்லாத) பிற உயிர்களாகிய மரங்கள் எல்லா வற்றையும் தன்னிடையே (அகப்படுத்தி) வேவச்செய்து அவற்றின் தசையை மிசைகின்ற அரக்கர்களாகிய, இடியையும் சுடவல்ல சினத்தினையுடைய காட்டுத் தீயை விரைந்து அவித்து உலகத்தைக் காப்பாற்றும் பொருட்டு வானத்திலிருந்து மழை வந்தது' என்று மகிழ்ச்சியால் வலிமை பெறும் மனத்தையுடையவன் ஆனுன்.

கு :—ஏனையுயிர் என்றது அரக்கர் அல்லாத உயிர்களே. ஊனுகர்வார், தீயில் வேவச்செய்து ஊனே உண்ணும் இயல்புணர்த்திய வாறு. உலவை - மரம். காட்டுத்தீ மரங்களேயெல்லாம் தன்னகப் படுத்திச் சுட்டொழிப்பது போல, அரக்கர்கள் தம்மினமல்லாத பிற வுயிர்களேயெல்லாம் பற்றி வருத்தி அவற்றின் ஊனே உண்பார்கள் ஆதலின், ஏனையுயிர்களே மரங்களாகவும், அரக்கர்களேக் காட்டுத் தீயாகவும், அவ்வரக்கரை யழிக்கும் ஆற்றலுடைய இராமனே வான மழையாகவும் உருவகம் செய்தார். அரக்கராகிய கானவனல், உருமைச் சுடுசினத்தின் கானவனல் என்க. பிற எல்லாவற்றையும் எரித்தழிக்கவல்ல இடியையும் சுடும் சினத்தையுடைய கானவனல் என அக்காட்டுத்தீயின் கொடுமை மிகுதி புலப்படுத்தியவாறு. காட்டுத்தீயை அவிக்கத்தக்கது மழைநீரன்றிப் பிறிதின்மையின் அரக்கராகிய கானவனலே அழிக்கவல்ல இராமனே வானமழை என மாட்டேறில்லா உருவகமாகக் கூறினர். கடிது அவித்தல்-விரைந்து அவித்தல். அரக்கராகிய காட்டுத்தீயை அவிப்பதற்குக் காரணம் உலகத்தைக் காப்பாற்றுதலேயன்றித் தன்னலமன்று என்பான், 'உலகளிப்பான்' என்ருன். பரமபதத்திலிருந்துவந்த மழை வண்ணனுகிய இராமபிரானே 'வானமழை வந்தது' என்றது பொருத்தமான உருவகமாதல் காண்க. "வீருக்கிய பொற்கலன் வில்லிட வாரமின்ன, மாருத் தனிச்சொற் றுளிமாரி வழங்கிவந்தான், காருக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும், ஆருக்கன லாற்றுமொர் அஞ்சன மேகமென்ன'' (1816) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். மைந்து-வலிமை. வலியுறுதற்கு மகிழ்ச்சி காரணம் என்பதை, "தாந்தம் மகிழ்ச்சியின் மைந்துறும்போழ்து'' (குறள்-539) என்பதாலறியலாம்.

அளந்தானும், உமிழ்ந்தானும், இடர்களைந்தானும், நின்றானும், உலகு சீர்பெற இருந்தானும், தமிழ் தந்தானும் ஆகிய அகத்தியன், களிப்புறு மனத்தானாய் உணர்ச்சியின் உவப்பானாய் வலிப்பானாய் மைந்துறு மனத்தானாய் எதிர்வந்தான் என மேல் (2757) முடிக்க. அளந்தான் என்பது முதலாகத் தந்தான் என்பது வரையுள்ள வினையாலணையும் பெயர்கள் ஒரு பொருட் பல பெயர்கள்; களிப்புறு மனத்தான் என்பது முதல் மைந்துறு மனத்தான் என்பது வரை யுள்ள வினைமுற்றுக்கள் எச்சப்பொருள்பட்டு அடுக்கி, எதிர்வந்தான் என்ற வினையைக்கொண்டு முடிந்தன. (45)

**2767.** கண்டன னிராமனை
வரக்கருணை கூரப்
புண்டரிக வாணயன
நீர்பொழிய நின்றா
னெண்டிசையு மேழுலகு
மெவ்வுயிரு முய்யக்
குண்டிகையி னிற்பொருவில்
காவிரி கொணர்ந்தான்.

கண்டனன் இராமனை வரக் கருணை கூரப்
புண்டரிக வாள் நயனம் நீர் பொழிய நின்றான்;
எண் திசையும் ஏழ் உலகும் எவ் வுயிரும் உய்யக்
குண்டிகையினில் பொரு இல் காவிரி கொணர்ந்தான்.

பொ :—எட்டுத் திசைகளும் ஏழுலகங்களும் (இவற்றிலுள்ள) எல்லா உயிர்களும் உய்தியடையுமாறு தன் கமண்டலத்தில் ஒப்பற்ற காவிரி ஆற்றைக் கொணர்ந்தவனாகிய அகத்தியன், இராமனை எழுந் தருளக் கண்டனனாய்க் கருணை மிகுதலால் தாமரை மலர் போன்ற ஒளிமிக்க கண்கள் நீரைப்பொழிய நின்றான்.

கு :—தூய காவிரியின் நீரால் அகமும் புறமும் தூய்மையுற்று உய்தி பெறுகின்றனவாதலின் திசையும் உலகும் எவ்வுயிரும் உய்யக் காவிரி கொணர்ந்தான் என்றார். இராமன் வரவைக் கண்ட அகத்தியனுக்கு உள்ளத்தில் அருள்மிக்கது; அதனால் அவன் கண் களும் நீரைச் சொரிந்தன. மன்னர்க்கு மன்னனாவான் தவக்கோலத் துடன் வருவதைக் கண்டமையால் அவை நிகழ்ந்தன எனலும் ஆம். அகத்தியர் கண்ணுக்குத் தாமரை மலர் உவமை. கொணர்ந்தான், வினையாலணையும் பெயர். கொணர்ந்தவனாகிய அகத்தியன் கண்டு

கருணைகூர நீர்பொழிய நின்ருன் என இயையும். கண்டனன் முற்றெச்சம்.

அகத்தியன் தென்திசைக்குப் போகின்றபொழுது கங்கை யாருழைச் சென்று காவிரியாரைக் கமண்டலத்தில் வாங்கிக்கொண்டு வந்ததாக நச்சினர்க்கினியர் கூறுவர். (46)

2768. நின்றவனை வந்தநெடி யோனடி பணிந்தா
னன்றவனு மன்பொடு தழீஇயழுத கண்ணு
னன்றுவர வென்றுபல நல்லுரை பகர்ந்தா
னென்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டான்.

நின்றவனை, வந்த நெடியோன் அடி பணிந்தான்;
அன்று, அவனும் அன்பொடு தழீஇ அழுத கண்ணன்
'நன்று வரவு' என்று, பல நல் உரை பகர்ந்தான்.
என்றும் உள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான்.

பொ :—நின்ற அகத்திய முனிவனை வந்தவனாகிய இராமன் அடி வணங்கினான்; அப்பொழுது, எக்காலத்தும் நிலைபேறுடைய தென் னாட்டு வழங்கும் தமிழ் இலக்கணத்தைச் சொல்லிப் புகழைக் கொண்டவனாகிய அவ்வகத்தியனும் அவ்விராமனை அன்போடு தழுவிக்கொண்டு அழுத கண்ணினனாய், 'நின்வரவு நல்லதாகுக' என்றாற்போன்ற பல நல்ல சொற்களைச் சொன்னான்.

கு :—இசை கொண்டானாகிய அவனும் என இயையும். நெடி யோன் - இராமன்; திருமாலின் அமிசம் என்பது தோன்ற அப் பெயராற் கூறினர். நின்றவனது அடியைப் பணிந்தான் என்க. தழுவுதலும் அழுதலும் அன்பின் விளைவுகள். இராமனுடைய தவக் கோலங்கண்டு பொருது அழுததாகவும் கொள்ளலாம். கண்ணனாய் என எச்சமாக்குக. ஆன் உடனிகழ்ச்சிக்கண் வந்ததாகக் கொண்டு அழுத கண்ணோடு நல்லுரை பகர்ந்தான் எனலும் ஆம். நன்றுவரவு என்பதை முதலிற் கூறிவிட்டுப் பின் பல நல்லுரைகளைக் கூறினன் என்க. பல நல்லுரை பகர்தற்குத் தகுதியுடையன் என்பது புலப் பட வேண்டித் தமிழியம்பினமை கூறிச் சிறப்பித்தார். தமிழ் என்றது இங்குத் தமிழ் இலக்கணத்தை. என்றும் உள தென்தமிழ் ஆதலின் அதனை அகத்தியன் இயம்பவேண்டாமையறிக. தென், இனி மையும் ஆம். அகத்தியன் தமிழ்க்கு இலக்கணம் செய்தது அவன் தனக்கே நன்மை பயந்தது என்பார், 'தமிழ் இயம்பி இசை கொண் டான்' என்ருர். இசை-புகழ். 'தமிழ் இயம்பி இசை கொண்டான்' என்பது, பரிவர்த்தனையணியாம். (47)

2769. வேதியர்கள் வேதமொழி வேறுபல கூறக்
காதன்மிக நின்றெழில்க மண்டலுவி னன்னீர்
மாதவர்கள் வீசிநெடு மாமலர்க டூவப்
போதுமண நாறுகுளிர் சோலைகொடு புக்கான்.

வேதியர்கள் வேத மொழி வேறு பல கூறக்
காதல் மிக நின்று, எழில் கமண்டலுவின் நல் நீர்
மாதவர்கள் வீசி, நெடு மா மலர்கள் தூவப்
போது மணம் நாறு குளிர் சோலை கொடு புக்கான்.

பொ :—வேதம் வல்ல அந்தணர்கள், பல வேறு வேத மந்திர மொழிகளைச் சொல்லாநிற்க, மாதவர்கள் அன்பு மிக நின்று, அழகிய கமண்டத்திலுள்ள நல்லநீரைத் தெளித்து, நீண்ட சிறந்த மலர்களைத் தூவாநிற்க, (இராமன் முதலானோரை அகத்தியன்) மலர்களின் மணம் வீசும் குளிர்ந்த சோலையினுள் அழைத்துக் கொண்டு புகுந்தான்.

கு :—வேதியர் என்பவர் வேதம் வல்லராய் இல்லறம் மேற் கொண்டிருக்கும் அந்தணர்கள். வேதியர்கள் வேத மந்திரங்களைக் கூறாநிற்க, மாதவர்கள் இராமன் முதலானோர்மேல் நீரும் மலரும் தூவி வாழ்த்தச் சோலை கொடுபுக்கான் என்க. பெரியோரை வர வேற்குமுறை இதுவென விளக்கியவாறு. கமண்டலு-கமண்டலம்; நீரேந்தும் கரகம். அகத்தியர் வாழும் சோலையாதலின் அது எப்போதும் மலர் மணம் நாறிக் குளிர்ச்சி மிக்கதாக இருந்தது. வேதியர்கள் கூற, மாதவர்கள் தூவ, (அகத்தியன்) இராமன் முதலி யோரைச் சோலைகொடு புக்கான் என்க. (48)

2770. பொருந்த வமலன்பொழி லகத்தினிது புக்கான்
விருந்தவ ணமைத்தபின் விரும்பிமுனி மேனா
ளிருந்தவ மிழைத்தவென தில்லிடையின் வந்தெ
னருந்தவ முடித்தனை யருட்கரச வென்றான்.

பொருந்த அமலன் பொழில் அகத்து இனிது புக்கான்;
விருந்து அவண் அமைத்தபின் விரும்பி முனி, 'மேனாள்
இருந்தவம் இழைத்த எனது இல்லிடையின் வந்து, என்
அருந்தவம் முடித்தனை; அருட்கு அரச!' என்றான்.

பொ :—குற்றமற்றவனாகிய இராமன், மனம் பொருந்த அந்தப் பொழிலிலுள்ள தவக்குடிலில் இனிதாகப் புகுந்தான்; அகத்திய

முனிவன் அவ்விடத்து விரும்பி விருந்து (அவனுக்கு) அமைத்தபின், "அருளுக்கு அரசனே! மேல்நாள் தொட்டுப் பெரிய தவம் செய்துள்ள என் வீட்டிற்கு வந்து என் அரியதவத்தை முற்றுப்பெறச் செய்தாய்" என்று முகமன்மொழி கூறினுன்.

கு:—அமலன் – குற்றமற்ற இராமன். பொழிலகம் – பொழிலிலுள்ள தவக்குடில். பொருந்தப் புகுதலாவது, பெருந்தவ முனிவன் இல்லில் புகுகின்றேம் என்ற மனநிறைவுடன் புகுதல். 'முனிவிரும்பி விருந்து அமைத்தபின்' என்று இயையும். இராமன் வருதற்குத் தன் இல்லம் பெருந்தவம் செய்துளது என்பான், 'இருந்தவமிழைத்த என தில்லிடையின் வந்து' என்ருன். 'என்ன மாதவம் செய்ததிச் சிறுகுடில்' (வில்லிபாரதம்-கி–தூ-80) என விதுரன் கண்ணனை நோக்கிக் கூறியது இங்கு ஒப்புநோக்கத்தகும். தான் செய்த தவத்திற்குப் பயன் இராமனைக் காணப்பெற்றதே என்பான், 'வந்தென் அருந்தவ முடித்தனை' என்ருன். தவத்திற்குரிய பயன் பெற்றபின் தவமியற்றல் வேண்டாம் என்பது தோன்றத் 'தவ முடித்தனை' என்ருன். மாரியினும் பனியினும், நீர்நிலை நின்றும் வெயிலில் நெருப்பில் நிலைநின்றும் காற்றே உணவாகக்கொண்டு செய்யும் அருமைப்பாடுடைமையின் 'அருந்தவம்' எனச் சிறப்பிக்கப் பட்டது. அருளுடையாருள் தலையாயவன் என்ற கருத்தால் 'அருட்கு அரச' என்று விளித்தான். அகத்தியன் இராமனை நோக்கிக் கூறிய இம்மொழி 'ஆர்வமொழி' என்னும் அணியாகும். (49)

**2771.** என்றமுனி யைத்தொழு திராமனிமை யோரு
நின்றதவ முற்றுநெடி யோரினெடி யோரு
முன்றனருள் பெற்றிலர்க ளுன்னருள்சு மந்தேன்
வென்றனெ னனைத்துலகு மேலினியெ னென்ருன்.

என்ற முனியைத் தொழுது இராமன், 'இமையோரும்,
நின்ற தவம் முற்றும் நெடியோரின் நெடியோரும்,
உன்தன் அருள் பெற்றிலர்கள், உன் அருள் சுமந்தேன்;
வென்றனென் அனைத்துலகும்; மேல் இனி என்?' என்ருன்.

பொ:—என்று கூறிய அகத்திய முனிவனை இராமன் தொழுது, 'தேவர்களும், நிலைபெற்ற தவத்தை முற்றுப்பெறச் செய்த பெரியோர்க்குள் பெரியோர்களும் உன்னருளைப் பெறவில்லை; யானே உன்னருளை மிகுதியாகப் பெற்றேன்; ஆதலால், அனைத்துலகங்

களையும் வென்றேனுனேன்; இனிமேல் யான் பெறத்தக்கது யாதுளது?' என்று கூறினன்.

கு :—அகத்தியன் வடிவால் குறியவனுயினும், தவமுற்றும் நெடியோரின் நெடியோரும் அவனருளைப் பெற விழைந்தும் பெற்றிலர்கள் என்க. நெடியோரின் நெடியோரும் என்றமையால் அகத்தியன் குறியன் என்பதைக் குறிப்பால் பெறவைத்தவாறு. நிலை பெற்ற பயனைத் தருவதாகலின் தவம், நின்றதவம் எனச் சிறப்பிக்கப் பெற்றது. இமையோரும் தவமுனிவர்களும் பெறவியலாத அருளை, யான் மிகுதியாகப் பெற்றேன் என்பான், 'உன்னருள் சுமந்தேன்' என்ருன். சுமத்தற்குரியது பெரும்பாரமான பொருள் ஆதலை இங்கு நினைக்க. சுமத்தற்குரிய பருப்பொருளல்லாத அருளைச் சுமந்தேன் என்றது இலக்கணை வழக்கு. இனி அகத்திய முனிவன்பால் வில் முதலியவற்றைப் பெற்று இராவணன் முதலிய அரக்கரை வெல்ல இருக்கின்ற இராமன், அம்முனிவன் அருளாகிய காரணத்தைப் பெற்று விட்டமையால் அனைத்துலகும் வெல்லுதலாகிய காரியம் நிகழ்வது திண்ணம் என்ற எண்ணத்தால், 'வென்றனென் அனைத்துலகும்' என இறந்த காலத்தால் கூறினன். இது தெளிவு பற்றிய காலவழுவமைதி. பகை வெல்லும் நோக்கமுடைய இராமனுக்கு அனைத்துலகும் வெல்லுதற்குரிய காரணம் கைகூடி விட்டமையால் மேல் அவன் பெறவேண்டிய பேறு வேறு இல்லையாதலின் 'மேலினியென்?' என்று கூறினன். இராமன் தன் இல்லிற்கு வந்ததே தன் தவம் முற்றுவித்ததென அகத்திய முனிவன் கூற, அம்முனிவன் சொல்லையும் வெல்லவல்ல சொல்லை இராமன் இங்குக் கூறியுள்ளமை காணலாம். (50)

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற்காணும் பாடல் உள்ளதாக 45-ல் உள்ளது.

2771. (a) எண்டகு குணத்தமல னிவ்வகை யியம்பத்
தெண்டிரை முகந்துமிழ் செழுந்தவ னுரைப்பான்
கண்டெனது நற்றவ நலச்செயல் கருத்திற்
கொண்டுதவி வந்தனையெ னக்கொர்குறை யுண்டோ.

### அகத்தியன் சொல்லுதல் 2772—2774

**2772.** தண்டகவ னத்துறைதி யென்றுரைத ரக்கொண்
டுண்டுவர வித்திசை யெனப்பெரிது வந்தே
னெண்டகு குணத்தினை யெனக்கொடுயர் சென்னித்
துண்டமதி வைத்தவனை யொத்தமுனி சொல்லும்.

'"தண்டக வனத்து உறைதி" என்று உரை தரக் கொண்டு,
'உண்டு வரவு இத்திசை' எனப் பெரிது உவந்தேன்;
எண் தகு குணத்தினை!' எனக் கொடு உயர் சென்னித்
துண்ட மதி வைத்தவனை ஒத்த முனி சொல்லும்.

பொ.—"யாவரும் மதிக்கத்தக்க குணத்தினையுடையவனே! 'நீ தண்டகவனத்தில் தங்கியிருக்கின்றாய்' என இங்குள்ளோர் சொல்ல அறிந்துகொண்டு, இப்பக்கம் நின் வருகை உண்டாகலாம் எனக் கருதிப் பெரிதும் மகிழ்ந்தேன்" எனத் தொடங்கிக்கொண்டு, உயர்ந்த சென்னியில் பிறைச் சந்திரனை அணிந்துள்ள சிவபிரானை ஒத்த அகத்திய முனிவன் மேலும் சொல்லுவானானான்.

கு:—உரைதரல் - சொல்லுதல். கொண்டு - அறிந்துகொண்டு. இத்திசை என்றது, தண்டகவனத்திற்குத் தென் திசையில் உள்ள தன் தவக் குடிலினைக் கருதிக் கூறியது. இத்திசை வரவு உண்டு என இயையும். எண்ணுதல் - மதித்தல். எண்டகு குணம் - எண் குணம் எனலும் ஆகும். இறைவனை 'எண் குணத்தான்' என வள்ளுவர் கூறியுள்ளதும் காண்க. எனக்கொடு - என்று தொடங்கிக் கொண்டு. துண்டமதி - பிறைச் சந்திரன். அகத்திய முனிவன் சிவபிரானுக்கு நிகரானவன் என்பதை, "ஈசனிகராயுலகு சீர்பெற விருந்தான்" (2761) என முன்னும் கூறியுள்ளமை காண்க. (51)

2773. ஈண்டுறைதி யையவினி யிவ்வயி னிருந்தால்
வேண்டியன மாதவம் விரும்பினை முடிப்பாய்
தூண்டுசின வாணிருதர் தோன்றியுள ரென்றான்
மாண்டுக மலைந்தெமர் மனத்துயர் துடைப்பாய்.

'ஈண்டு உறைதி ஐய! இனி, இவ் வயின் இருந்தால்,
வேண்டியன மா தவம் விரும்பினை முடிப்பாய்;
தூண்டு சின வாள் நிருதர் தோன்றியுளர் என்றால்,
மாண்டு உக மலைந்து, எமர் மனத் துயர் துடைப்பாய்.'

பொ:—ஐய, இனி இங்கே தங்குவாயாக. இவ்விடத்தில் இருந்தால் இன்றியமையாதனவாகிய பெரிய தவங்களை விரும்பிச் செய்து முடிப்பாய்; கோபத்தை வளர்க்கின்ற கொடிய அரக்கர்கள் இங்கு வந்து தோன்றினர்களாயின் அவர்கள் மாண்டு ஒழியுமாறு போர் செய்து எம்மவர்களுடைய மனத்துயரையும் துடைப்பாய்.

கு :—வேண்டியன - இன்றியமையாதன. தன் தவச்சாலையைச் சார்ந்து இருந்தால் எண்ணிய தவங்களை எளிதில் செய்து முடிக்கக் கூடும் என அகத்தியன் கருதி இங்ஙனம் கூறினன். வாள் - கொடுமை. தூண்டுதல் - வளர்த்தல். ஆற்ற வேண்டிய சினத்தைத் தூண்டுகின்றார்கள் அரக்கர் என அவர் கொடுமையை விளக்கிய வாறு. நிருதர் - அரக்கர். தோன்றுதல், வருதல் என்னும் பொருளது. உளர் என்பது துணைவினையாக அமைந்தது. மாண்டுக என்பது மீமிசைச் சொல். மலைந்து - போர் செய்து. எமர் என்றது முனிவர்களை. தவநிலையில் உள்ளவர் என்ற ஒற்றுமை கருதி எமர் என்றார். எம்போன்றவர் எனலும் ஆம். துடைத்தல் – நீக்குதல். தன் தவச்சாலைக் கருகில் இருந்தால் இராமனுக்கும் நன்மையுண்டு; முனிவர்கட்கும் நன்மையுண்டு என்பதை அகத்தியன் விளக்கிய வாறு. (52)

**2774.** வாழுமறை வாழுமனு நீதியறம் வாழுந்
தாழுமிமை யோருயர்வர் தானவர்க டாழ்வா
ராழியுழ வன்புதல்வ வையமிலை மெய்யே
யேழுலகும் வாழுமினி யிங்குறைதி யென்றான்.

‘வாழும் மறை; வாழும் மனுநீதி; அறம் வாழும்;
தாழும் இமையோர் உயர்வர் ; தானவர்கள் தாழ்வார்;
ஆழி உழவன் புதல்வ! ஐயம் இலை; மெய்யே!
ஏழ் உலகும் வாழும்; இனி, இங்கு உறைதி’ என்றான்.

பொ :—“தசரதச் சக்கரவர்த்தியின் புதல்வனே! வேதங்கள் வாழும்; மனுநீதி வாழும்; அறம் வாழும்; தாழ்வடைந்துள்ள தேவர்கள் உயர்வடைவார்கள்; அரக்கர்கள் தாழ்வார்கள்; ஏழுலகங்களும் வாழும்; இதில் ஐயம் ஏதும் இல்லை; மெய்யேயாம்; ஆதலால் இனி இங்குத் தங்குவாயாக,” என்றான்.

கு :—மறை – வேதம். இராமன் அரக்கரை அழித்து வேதியரைக் காப்பாற்றுவதால் வேதம் வாழ்வுபெறும் என்றான். வேதம் ஓதுவோர் இல்லையாயின் அது வாழ்தல் யாங்ஙனம்? நீதி நூல்களுள் மனு நீதி உயர்ந்தமையின் அதையே இங்கு எடுத்துக் கூறினர். மனு நீதிக்கு மாறுபட்டு ஒழுகுகின்ற அரக்கர் அழிதலின் மனு நீதி வாழ்தல் உறுதியாயிற்று. அறமாவது நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் ஆம். அறத்தினோடு மாறுபட்ட அரக்கர் அழியின் அறத்தை மேற்கொண்டோர் வாழ்வர் என்றபடி. அரக்கர் ஆற்றலால் தாழ்ந்துள்ள தேவர்கள், அவ்

வரக்கர் அழியின் உயர்வர் என்றவாறு. "பூட்டுவார் முலைபொருத பொய்யிடை நையப் பூநீர், ஆட்டுவார், அமரர் மாதர்; ஆடுவார் அரக்கர் மாதர்" (சுந்தர–198) என்றமையால் 'தாமுமிமையோர்' என்றதன் பொருளை உணரலாம். தன் ஆணையால் உயிர்ப்பயிரைத் தழையச் செய்பவன் மன்னன் ஆகலின் அவனை 'ஆழி உழவன்' என்றார். ஆழி - ஆணைச் சக்கரம். இராமன் செய்யும் தவத்தாலும் அரக்கரை அழிப்பதாலும் ஏழுலகும் வாழும் என்றவாறு. மேலைச் செய்யுளில் வந்த 'இவ்வயின் இருந்தால்' என்பதையே மறை முதலியனவாழ்தற்கும் காரணமாகக் கொள்க. (53)

இச்செய்யுளின் பின் சில ஏட்டுப் பிரதிகளில் பின்வரும் பாடல்கள் இருப்பதாக 41-இல் உள்ளது.

2774. (a.) என்றுபினு மாதவ னெடுத்தினி துரைப்பான்
அன்றமரர் நாதனை அருஞ்சிறையில் வைத்தே
வென்றிதரு வேற்றச முகப்பதக னாதி
வன்றிற லரக்கர்வலி மைக்குநிக ரியாரே.

(b.) ஆயவர்க டங்கள்குலம் வேரற மலைந்தே
தூயதவ வாணரொடு தொல்லமரர் தம்மை
நீதனி புரந்திடுத னின்கடன தென்றான்
நாயகனு நன்றென வவற்குநவில் கின்றான்.

## இராமன் மறுமொழி

**2775.** செருக்கடை யரக்கர்புரி தீமைசிதை வெய்தத்
தருக்கழி தரக்கடிது கொல்வது சமைந்தேன்
வருக்கமறை யோயவர் வருந்திசையின் முந்துற்
றிருக்கைநல நிற்கருளெ னென்றன னிராமன்.

'செருக்கு அடை அரக்கர் புரி தீமை சிதைவு எய்தத்
தருக்கு அழிதரக் கடிது கொல்வது சமைந்தேன்;
வருக்க மறையோய்! அவர் வரும் திசையில் முந்து உற்று
இருக்கை நலம்; நிற்கு அருள் என்?' என்றனன் இராமன்.

பொ :—இராமன், (அகத்தியனை நோக்கி) 'தொகுதியான வேதங்களில் வல்லோனே! செருக்கு அடைந்துள்ள அரக்கர்கள் செய்யும் தீமைகள் ஒழியவும், அவர்கள் வலிமை அழியவும் விரைவில் அவர்களைக் கொல்ல முடிவு செய்துள்ளேன்; (ஆதலால்,) அவர்கள் வருகின்ற தென்திசையில் முற்பட்டுச் சென்றிருத்தல் நன்றாகும்; நினது அருட்குறிப்பு யாது?' என்றான்.

கு :—செருக்கு - கர்வம். தருக்கு – வலிமை. 'எதிர்செயும் தருக்கிலாமையின்' (381) என முன்னும் வந்துளது காண்க. வருக்கம் - தொகுதி. நான்கு வேதங்களிலும் அவற்றின் சார்பாய நூல்களிலும் வல்லோன் என்பான், 'வருக்கமறையோய்!' என்ருன். இனி வருக்கமறை, வடமொழி மறைக்கு இனமான தமிழ் மறை எனக் கூறலுமாம். அகத்தியன் தமிழ் நூல் வல்லோன் என்பது இதனுல் உணர்த்தியதாகும். தென்னிலங்கை முதலிய இடங்களிலிருந்தே அரக்கர்கள் வருதலால் அவர் வருந்திசை என்றது தென் திசையை. முந்துற்று இருத்தலாவது, அகத்தியர் ஆசிரமத்திற்கும் தென் திசையில் சென்று எதிர்நோக்கி இருத்தல். நினது அருள், நிற்கருள் என உருபு மயக்கமாயிற்று. இருக்கை - இருத்தல்; தொழிற்பெயர். என் கருத்து எதுவாயினும் நின் அருள்வழி நிற்பேன் என்பது தோன்ற, 'நிற்கருளென்' என்ருன். (54)

### அகத்தியன் இராமனுக்குப் படைவழங்கிப் பஞ்சவடிக்கனுப்புதல் 2776—2779

**2776.** விழுமியது சொற்றனையிவ் வில்லிதிவண் மேனுண்
முழுமுதல்வன் வைத்துளது மூவுலகும் யானும்
வழிபட விருப்பதிது தன்னைவடி வாளிக்
குழுவழுவில் புட்டிலொடு கோடியென நல்கி.

'விழுமியது சொற்றனை; இவ் வில் இது இவண், மேல் நாள்
முழுமுதல்வன் வைத்துளது; மூவுலகும், யானும்,
வழிபட இருப்பது; இது தன்னை வடி வாளிக்
குழு, வழு இல் புட்டிலொடு கோடி' என, நல்கி.

பொ :—'சிறந்த கருத்தினைச் சொன்னுய்; இந்த வில், முழுமுதல்வனுகிய திருமால் முற்காலத்து இங்கு வைத்தது; மூன்றுலகத்தாரும் யானும் வழிபாடு செய்ய இருப்பது; இவ்வில்லை, அம்பின் திரள் குறைதல் அறியாத புட்டிலோடு கொள்வாயாக' என்று சொல்லிக் கொடுத்து,

கு :—இச் செய்யுள் முதல் ஐந்து செய்யுள் ஒரு தொடர்; குளகம். முழுமுதல்வன் என்றது திருமாலை. தேவர்க்கும் அவுணர்க்கும் போர் நிகழ்ந்த காலத்தில் திருமால் கருடன்மேலூர்ந்து இவ்வில்லை ஏந்தி அவுணரை வென்ருன் என்பதும், வென்றபின் அகத்தியன்பால் இவ்வில்லை வைத்துச் சென்ருன் என்பதும், அவ்வில்லையே அகத்தியன் இராமனுக்குக் கொடுத்தான் என்பதும், "எறுழ்வலிப்

பொருவிரே ளவுணரோ டமரர்பண் டிகல்செய்காலத், துறுதிறற் கலுழன்மீ தொருவனின் றமர்செய்தா னுடைய வில்லும், தெறுசினத் தவர்கண் முப்புர நெருப்புற வுருத்தெய்த வம்பும், குறுமுனிப் பெயரினன் நிறைதவர்க் கிறைதரக் கொண்டு நின்றான்” (உயுத்த-மந்திரப்-87) என்ற வீடணன் கூற்றால் விளங்கும். வில்லின் பெருமை தோன்ற, ‘மூவுலகும் யானும் வழிபட இருப்பது’ என்றான். வடி - கூர்மை. அம்பறாத்தூணி என்பான், ‘வாளிக்குழுவழுவில் புட்டில்’ என்றான். வழுவுதல், இங்குக் குறைதல் என்னும் பொருள் தந்தது. கோடி - கொள்ளுதி. முழுமுதல்வன் மேனாள் இவண் வைத்துளது என இயையும். (55)

**2777.** இப்புவன முற்றுமொரு தட்டினிடை யிட்டா
லொப்புவர விற்றென வுரைப்பரிய வாளும்
வெப்புருவு பெற்றவரன் மேருவரை வில்லா
முப்புரமெ ரித்ததனி மொய்க்கணையு நல்கா.

இப்புவனம் முற்றும் ஒரு தட்டின் இடை இட்டால
ஒப்பு வரவிற்று என உரைப்பு அரிய வாளும்,
வெப்பு உருவு பெற்ற அரன் மேரு வரை வில்லா
முப்புரம் எரித்த தனி மொய்க்கணையும், நல்கா.

பொ :—இவ்வுலகம் முழுதையும் ஒரு தராசு தட்டில் இட்டால் (மற்றொரு தட்டிலிட்ட இவ்வாளுக்கு) ஒப்பாக வருந்தன்மை யுடையது என்று சொல்லுதற்கு இயலாத வாட்படையையும், வெம்மையுடைய தீப்போன்ற மேனியையுடைய சிவன், மேருமலை யையே வில்லாகக் கொண்டு முப்புரங்களை எரித்த ஒப்பற்ற வலிமை யுடைய அம்பையும் நல்கி,

கு :—வாளினை ஒரு தட்டிலும் இப்புவனமுழுதையும் ஒரு தட்டி லும் இட்டால் வாள் தங்கியுள்ள தட்டே பெருமையால் தாழும் அன்றி உலகமிட்ட தட்டு அதற்கு ஒப்பாக வரத்தக்கதன்று என்ற வாறு. இதனால் வாளின் பெருமை புலப்படுத்தியவாறு. வெப்பு, ஆகுபெயராய் நெருப்பினை உணர்த்தியது. பூமியைத் தேராகவும் பிரமனைத் தேர்ப்பாகனாகவும் மேருமலையை வில்லாகவும் திருமாலையும் நெருப்பையும் காற்றையும் அம்பாகவும் கொண்டு திரிபுரத்தை அழிக்கச் சிவபிரான் சென்றான் என்பது புராண வரலாறு. மொய் - வலிமை. (56)

2778. ஓங்குமர னோங்கிமலை யோங்கிமண லோங்கிப்
பூங்குலை குலாவுகுளிர் சோலைபுடை விம்மித்
தூங்குதிரை யாறுதவழ் சூழலதொர் குன்றின்
பாங்கருள தாலுறையுள் பஞ்சவடி மஞ்ச.

ஓங்கும் மரன் ஓங்கி, மலை ஓங்கி, மணல் ஓங்கிப்
பூங்குலை குலாவு குளிர் சோலை புடை விம்மித்
தூங்கு திரை ஆறு தவழ் சூழலது ஓர் குன்றின்
பாங்கர் உளதால், உறையுள் பஞ்சவடி; மஞ்ச!

பொ:—மைந்தனே! உயர்ந்த மரங்கள் வளரப்பெற்றதாய், மலைகள் உயர்ந்து காணப்பெற்றதாய், மணல் மேடுகள் உயர்ந்து விளங்கப்பெற்றதாய், மலர்களின் குலைகள் விளங்குகின்ற குளிர்ந்த சோலை பக்கத்தில் தழைத்தோங்கப் பெற்றதாய், அசைந்து செல்லும் அலைகளையுடைய ஆறு தவழ்ந்து செல்லுகின்றதாய் உள்ள சுற்றுப்புறத்தையுடையதாகிய ஒரு தங்குதற்குரிய இடம் இக்குன்றின் பக்கத்தில் உள்ளது; அது பஞ்சவடி என்னும் பெயரையுடையது.

கு:—ஓங்கி, விம்மித் தவழ் சூழலது ஓர் உறையுள் குன்றின் பாங்கருளது; அது பஞ்சவடி என்று இயையும். விம்முதல், இங்குத் தழைத்தல் என்னும் பொருளது. குலாவு - விளங்குகின்ற. தூங்குதல் - அசைதல். விரைந்த செலவுள்ள ஆறு அன்று என்பான், 'தூங்குதிரை யாறு' என்றான். நீராடுதற்கு ஏற்றது என்றவாறு. வடம் – ஆலமரம்; வடி ஆலமரத்தையுடைய இடம். ஐந்து ஆலமரங்கள் செறிந்துள்ள இடமாதலின் பஞ்சவடி என்று பெயர் பெற்றது; இக்கருத்துப் புலப்பட முதற்கண் 'ஓங்குமரனோங்கி' என எடுத்தோதினர். இதை நாசிக் என்று இப்பொழுது கூறுவர். மைந்த என்பது, 'மஞ்ச' எனப் போலியாய் வந்தது; வலிமையுடையவனே என்பது பொருள். ஒரு பக்கம் மரங்களின் செறிவும் ஒரு பக்கம் மலையும், ஒரு பக்கம் மணல் மேடுகளும், ஒரு பக்கம் பூங்காக்களும், ஒரு பக்கம் ஆறும் உள்ள அவ் அழகிய இடம் தவம் செய்தற்குத் தக்க அமைதியான இடம் என்று அகத்தியன் பார்த்து வைத்திருந்தான் என்பது இதனால் அறியலாம். 'குன்றின் பாங்கருளது' என்றமையால் அக்குன்றைக் காட்டியே அகத்தியன் கூறினான் என்பது அறிக. (57)

2779. கன்னியிள வாழைகனி யீவகதிர் வாலின்
செந்நெலுள தேனொழுகு போதுமுள தெய்வப்

பொன்னியென லாயபுன லாறுமுள போதா
வன்னமுள பொன்னிவளொ டன்பின்விளை யாட.

கன்னி இள வாழை கனி ஈவ, கதிர் வாலின்
செந் நெல் உள ; தேன் ஒழுகு போதும் உள; தெய்வப்
பொன்னி எனல் ஆய புனல் ஆறும் உள ; போதா
அன்னம் உள பொன் இவளொடு அன்பின் விளையாட.

பொ :—(அங்கு) பழங்களைத் தருகின்ற மிக்க இளமையுடைய வாழைமரங்களும், கூரிய வாலினையுடைய செந்நெல்லும் உள்ளன; தேன் வழிகின்ற மலர்களும் உள்ளன ; தெய்வத்தன்மையுடைய காவிரியே என்று சொல்லத்தக்க நீர்மிக்க ஆறும் உண்டு ; திருமகளாகிய இச் சீதையோடு அன்பினால் விளையாடப் பெருநாரைகளும் அன்னப்பறவைகளும் உள்ளன.

கு :—கன்னி-இளமை. கன்னியிள என்றது, ஒருபொருட் பன்மொழி. வாழைகளும் செந்நெலும் உள என்க. கதிர்வால்-கூரிய வால்; 'கதிர் மூக்காரல்' (புறநா-249) என்புழியும் கதிர் அப்பொருளதாதல் காணலாம். இனிக் கதிர்ச்செந்நெல் வாலின்செந்நெல் என்று இயைத்துக் கூறலுமாம். நெல்லுக்கு வாலுண்டு என்பதை 'நெல்வாலு மருத......வயிரப்படையான்' (2690) என முன் கூறியதாலும் அறியலாம். கம்பர் ஆறுகளுள் சிறப்புடையதாகக் கண்டது காவிரியே ஆதலின், 'பொன்னி எனலாய ஆறு' என்றார். பொன்னி–பொன்னிறமுள்ள நீரையுடைய காவிரி. 'காவிரி நாடன்ன கழனி நாடொரீஇ' (2391) எனக் கங்கை நாட்டைக் கூறும் வழியும் காவிரிநாட்டை உவமை கூறியிருத்தல் காணலாம். உண்ணுதற்கு வாழையும் செந்நெலும், சூடுதற்குப் போதும், நீராடுதற்கு ஆறும், விளையாடுதற்குப் போதாவும் அன்னமும் உள என அவ்விடத்தில் வேண்டிய யாவும் ஈண்டியுள்ளன எனச் சிறப்பித்தவாறு. 'ஆறுமுள' என்புழி உள என்றது உண்டு என்னும் பொருளது; ஒருமைப்பன்மை மயக்கம். போதா அன்னம் என்றது உம்மைத் தொகை. போதா–பெருநாரை. இவ்விரண்டும் நீர்வாழ் பறவைகள்; இவற்றோடு பெண்டிர் விளையாடுவர். தீங்கொன்றும் செய்யாது இனிதாக விளையாடும் இப்பறவைகளின் இயல்பு தோன்ற, 'அன்பின் விளையாட' என்றார். (58)

இதன்பின் 45 என்னும் குறியீடுள்ள பிரதியில், 'ஒரு சுவடியில் அடியிற்காணும் அதிகப் பாடல் உளது' என்ற குறிப்பும் பாடலும் காணப்படுகின்றன.

2779 (a) வானுலகில் வானவர்கள் மங்கையர்கள் விஞ்சைக்
கானவர்கள் கன்னியர்கள் கந்திருவர் நாகர்
ஆனவர்க ளாயவவர் மங்கையர்க ளேயா
ஈனமற வந்துவிளை யாடுமிட மங்கண்.

## இராமன் விடைபெற்றுச் செல்லுதல்

**2780.** ஏகியினி யவ்வயி னிருந்துறைமி னென்றான்
மேகநிற வண்ணனும் வணங்கிவிடை கொண்டான்
பாகனைய சொல்லியொடு தம்பிபரி விற்பின்
போகமுனி சிந்தைதொட ரக்கடிது போனான்.

'ஏகி, இனி அவ் வயின் இருந்து உறைமின்' என்றான்;
மேக நிற வண்ணனும் வணங்கி விடை கொண்டான்;
பாகு அனைய சொல்லியொடு தம்பி பரிவின் பின்
போக, முனி சிந்தை தொடரக் கடிது போனான்.

பொ :—(ஆதலால் நீங்கள்) 'சென்று இனிமேல் அவ்விடத்தில் தங்கியிருங்கள்' என்று (அகத்தியன்) சொன்னான். மேகத்தின் நிறம் போன்ற கரிய வண்ணத்தையுடைய இராமனும் அம்முனிவனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, சர்க்கரைப் பாகுபோன்ற இன் சொல்லையுடைய சீதையோடு இலக்குவனாகிய தம்பி அன்போடு பின்வர, அகத்திய முனிவன் மனம் பின்தொடர, விரைந்து சென்றான்.

கு :—'இருந்துறைமின்' என்றது ஒருபொருட் பன்மொழி. மேக நிற வண்ணன்–இராமன். கொண்டானாய்ப் போகத் தொடரக் கடிது போனான் என்று முற்றெச்சமாக்கி முடிக்க. பரிவு – அன்பு. இராமனைப் பிரிதலாற்றாத அகத்தியன் மனம் அவனைப் பின் தொடர்ந்தது என அவன் அன்பு மிகுதி உணர்த்தியவாறு. இராமனை யடுத்துச் சீதையும் சீதைக்குப்பின் இலக்குவனும் சென்றார்கள். (59)

அகத்தியப் படலம் முற்றிற்று.

---

# 4. சடாயு காண் படலம்

இராமன் முதலியோர் சடாயுவைக் காண்கின்ற நிகழ்ச்சியைக் கூறும் பகுதியாதலின், இது, சடாயு காண்படலம் எனப் பெயர் பெறுகின்றது. சடாயு இராமன் முதலியோரைக் காண்கின்ற படலம் என்றும் பொருள் கொள்ளுமாறு இப்படலப் பெயரும் நிகழ்ச்சியும் அமைந்துள்ளமை காணலாம். இப்படலம், சில ஏடுகளில் சடாயுப் படலம் என்ற பெயரோடும் காணப்படுகின்றது. சடாயு என்பது சம்பாதியின் தம்பியும் அருணன் புதல்வனும் கழுகின் வேந்தனுமாயிருந்த கழுகுக்கு இடுகுறிப்பெயர். இதைக் காரணப்பெயராகக் கொண்டு பல மயிர்கள் செறிந்த சடை போன்ற நெடிய ஆயுளை உடையவன் என்றும், இறகில் உயிரையுடையவன் என்றும், சடையையுடையவன் என்றும் பொருள் விரிப்பது பொருந்துவதாகத் தோன்றவில்லை.

## படலப்பொருட்சுருக்கம்

அகத்திய முனிவனை வணங்கி விடைகொண்டு இராம இலக்குவர் சீதையுடன் பஞ்சவடிக்குப் போகும் வழியில், ஒரு மலையின் உச்சியில், பொன்னிறச் சிறகுடன் மலைபோன்ற தோற்றத்துடன் வீற்றிருந்த சடாயுவாகிய கழுகினைக் காண்கின்றனர். அரக்கனோ என்று ஐயுறுகின்றனர். வெகுண்டு பார்க்கின்றனர். சடாயுவும் இராம இலக்குவரின் எழில் மிக்க உருவங் கண்டு தேவரோ என ஐயுற்று நோக்குகின்றான். "இந்திரன் முதலிய தேவர்களையும் யான் நாள்தோறும் பார்க்கின்றேன்; மும்மூர்த்திகளும் எனக்கு மறைக்காமல் காட்சியளிக்கின்றனர்; காமன் என்பவனையும் யான் கண்ணால் பார்த்திருக்கின்றேன்; அவர்கள் யாரும் இவ்வீரர்களின் அடித்துகளுக்கும் ஒப்பாவார்கள் என்று எனக்குத் தோன்றவில்லை. உலக மூன்றையும் தம் உடைமையாக்குதற்குரிய இலக்கணம் அமைந்த உடம்பையுடையராய்த் திருமகளுக்கும் உவமை சொல்லத்தக்க ஒரு நங்கையோடும் வந்துள்ள இவர்களை இன்னார் என்று தெரிந்து கொள்ள இயலவில்லையே! கரிய மலையினையும் சிவந்த மலையினையும் ஒத்த அழகினையுடைய இவர்கள் என்னுயிர்த்தோழன் தயரத சக்கரவர்த்தியை ஒத்திருக்கின்றார்கள்" என்று இன்ன பல எண்ணி, இறுதியில், 'வில்லேந்திய வீரர்களே! நீங்கள் யார்? எனக்கு விளங்கக் கூறுங்கள்' என்று கேட்கின்றான். தயரதன் மைந்தர் என்பதை அவரும் புலப்படுத்துகின்றனர். அதைக் கேட்டு மகிழ்ச்சி கொண்ட சடாயு, தரையில் இறங்கி வந்து, அவர்களைத் தழுவிக்

கொள்ளும் காதலையுடையவனாய், "தயரத சக்கரவர்த்தியின் தோள்கள் வலியவோ?" என்று வினவுகின்றான். 'அவன், மறக்க வியலாத வாய்மையைக் காத்துத் துறக்கம் அடைந்தான்' என்று இராமன் சொல்லிய அளவில், சடாயு உயர்நிலையிலிருந்து தாழ் வடைந்தவன் போல ஏக்கம் எய்தி, உறக்கமுற்றவனைப்போல உணர்வு நீங்கி விழுந்தான்.

விழுந்த சடாயுவை இராம இலக்குவர்கள் தம் கைகளால் தழுவி யெடுத்துக் கண்ணீரினால் அவன் முகத்தைக் கழுவுவார்போல அழு கின்றனர். அவர்கள் கைகளால் தழுவியெடுத்தமையாலும் கண் ணீரால் முகம் நனைந்தமையாலும் சடாயுவுக்குப் போன உயிர் திரும்புகின்றது. எழுந்த சடாயு தயரதனை நினைந்து அழிவுற்ற நெஞ்சினனாய்ப் புலம்புகின்றான். "உலகை நலிகின்ற சம்பராசுரனைக் கொன்ற நாளில் யான் செய்த உதவியை நினைந்து, 'நீ உயிர் யான் உடல்' என்று கூறி நட்புக் கொண்ட தயரதன் மாயவும், யான் நன்னெறியில் நின்றும் விலங்கினவன் ஆதலின் மாயாமல் விலகி இருக்கின்றேன். 'நண்பனுடைய மரணத்தைக் கேட்டுத் தரியாது சடாயு இறந்தான்' என்ற புகழ் தோன்றி வளர்ச்சிபெறுமாறு எரியும் தீயில் இப்பொழுதே விழுவதை விடுத்துப் பெண்டிர் போலப் புலம்புவதோ" என்று கூறிக்கொண்டு எழுந்து இராம இலக்குவரை நோக்கித் தான் அருணன் புதல்வன் என்பதையும், அவன் செல்லு மிடங்களில் செல்லும் வல்லமை தனக்குண்டு என்பதையும், தயர தனுக்கு உயிர்த்துணைவன் தான் என்பதையும், தேவர்களையும் நான்கு வருண மக்களையும் படைத்த நாளில் தான் தோன்றினமையும், சம்பாதியின் தம்பி, சடாயு என்ற கழுகின்வேந்தன் தான் என் பதையும் கூறுகின்றான். அது கேட்ட இராம இலக்குவர் கை கூப்பி வணங்கி அன்பொடு கலந்த துன்பத்தால் பெருகுகின்ற கண்ணீரை யுடையராய் விண்ணுலகம் புக்க தம் தந்தை மீண்டு வரக் கண்டவர்போல அன்பும் உருக்கமும் உடையவராகின்றனர். பழகு தற்கு இனிய குணத்தையுடைய அவ்விராம இலக்குவரைச் சடாயு, தன் இரு சிறகாலும் இறுகத் தழுவிக்கொண்டு, 'என் மக்களே! எனக் குரிய இறுதிக் கடனையும் நீங்களே செய்யுங்கள்; என் உயிர்த்துணை வனான தயரதன் பிரியவும் பிரியாதிருக்கும் யான், உடம்பு இந்த உடம்புக்கு வரும் துன்பம் பாராது இன்றே எரியில் புகுந்து இறக்கவில்லையானால் இப்பிரிவுத் துயரை மறக்க இயலாது' என்கின்றான்.

இவ்வாறு கூறிய சடாயுவை இராம இலக்குவர், கண்ணீர் பெருகத் தொழுது, "துன்பமுற்றபோது அதை நீக்கி உய்விக்கவல்ல தயரதனும் விண்ணடைந்தான்; இந்த அஞ்சத்தக்க கானகத்தில் எம்மைக் காக்கவல்ல பெரிய தந்தையாகிய நீயும் எங்களை விட்டு

விண்ணுலகம் சென்றால் எமக்குப் பற்றுக் கோடாவார் யாருளர்?" என்று கூறிய இரக்கமொழிகளைக் கேட்ட சடாயு, 'அப்படியாயின் நீங்கள் அயோத்திக்குச் சென்றபின் யான் தயரதனை அடைகின்றேன்; ஆனால், தயரதன் விண்ணுலகம் புக்க பின் நீங்கள் இம் மண்ணுலகை ஆளாது, காடு புகுந்த காரணம் என்னை? விளங்கக் கூறுங்கள்; என்னுள்ளம் பற்றி எரிகின்றது; நீங்கள் அரசாள இயலாமல் இடையூறு செய்தார் உளரெனின் அவர்கள் தேவராயினும் வேறு யாவராயினும் அவர்களை வீவராக்கி அரசை உமக்குத் தருவேன்' என்கின்றான். அது கேட்ட இராமன் இலக்குவனை நோக்க, அக்குறிப்பறிந்த இலக்குவன், சிற்றன்னையால் வந்த விளைவையெல்லாம் கூறுகின்றான்; அது கேட்ட சடாயு, இராமனைப் பாராட்டித் தழுவிக்கொண்டு சீதையைச் சுட்டி, இவள் இன்னாள் என்பதை அறிவிக்க வேண்டும் என்கின்றான். இலக்குவன் விடை கூறக் கேட்டு மகிழ்ந்து, 'அரசு துறந்து காடு புகுந்த நீங்கள், நாட்டில் வாழ்வது போல இக்காட்டில் அச்சமின்றித் தங்குமின்; யான் காக்கின்றேன்' என்கின்றான்.

'அகத்தியன் எங்களுக்கேற்ற இடமாக எண்ணிக் கூறியருளிய பஞ்சவடியில் தங்குகின்றோம்' என்கின்றான் இராமன். சடாயு, 'மிகவும் நன்று; அப்பெரிய துறையில் தங்கி மாதவம் புரியுங்கள்; வாருங்கள் வழிகாட்டுகின்றேன்' என்று கூறித் தன் இரு சிறகையும் விரித்து நிழல் செய்துகொண்டு பறந்து செல்ல, இராமன் முதலியோர் அந்நிழலில் நடந்து சென்று பஞ்சவடியை அடைகின்றனர். அங்குத் தங்கியுள்ள சீதையையும் இராம இலக்குவரையும் சடாயு, கூட்டிலுள்ள குஞ்சுகளைக் காக்கும் தாய்ப்பறவைபோல விழிப்புடன் காத்து வருகின்றான் என்பது இப்படலத்துக் கூறும் வரலாறாகும்.

## கம்பர், வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகம் சடாயுவைப் பற்றி விரிவாகக் கூறவில்லை; ஓர் ஆலமரத்தின் மேல் பருத்த உடலையும் மிக்க வலிமையையுமுடைய ஒரு கழுகு இருப்பதை இராமன் முதலியோர் கண்டார்கள் என்று கூறுகின்றது.

கம்பர், சடாயுவைப் பற்றி விரிவாகக் கூறியுள்ளார். "உதய மலையின் உச்சியில் சேர்ந்துள்ள சூரியனைப்போலக் கருமலை முகட்டில் சடாயு பொன்னிறச் சிறகுகளை விரித்திருந்தான்; பாற்கடல் கடைய அமரர் நாட்டிய மந்தரமலை போன்ற பெருந்தோற்றமுடையவன்; நீல நிறமுள்ள மலையில் பவளக் கொடி நீண்டு தோன்றுவது போன்ற அழகிய கால்களையுடையவன்; ஆராய்ச்சி

மிக்க அமைச்சர் அவையில் உள்ள அறிஞனைப் போலச் சேய்மையில் நோக்கும் சிறு கண்ணையுடையவன்; அவுணர் களை அழித்துக் கூற்றுக்கு விருந்தூட்டி வீழ்ந்த மிச்சிலை உண்டு நாள்தொறும் தீட்டி, இந்திரன் யானையின் அங்குசம் போன்று தேய்ந்து விளங்கும் மூக்கினையுடையவன்; நவகோள்களையும் இயக்கும் துருவச் சக்கரம் போல நவமணிகள் பதித்த மணிமாலையை அணிந்தவன்; மேருமலையின் உச்சியில் விளங்கும் சூரியனைப் போன்று தலைமிசை விளங்கும் மகுடத்தையுடையவன்; சொற்கள் குறையுமாறு நீண்ட புகழினையுடையவன்; சிறிய நாட்களைக் கண்டு கழிப்பது போலக் கற்பங்கள் பலவற்றைக் கண்டு கழித்த முதுமை யுடையவன்; ஓங்கியுயர்ந்த நெடிய மலையும் தன் பாரத்தைத் தாங்க வியலாது தரையில் புகுந்து தாழ்ந்து தோன்றுமாறு பெருத்த வலிமையுடன் தங்கியிருக்கின்றான்" என விரித்துக் கூறியிருத்தல் காணலாம். சிவபிரான் வீற்றிருக்கும் வெள்ளிமலையை அள்ளி யெடுத்த ஆற்றலுடைய இராவணனோடு போர்செய்து அவனை இளைக்குமாறு செய்யும் ஆற்றல் படைத்த சடாயு, ஓர் ஆலமரத்தின் கிளையில் இருந்தான் என்பது பொருத்தமன்றெனக் கருதி மலைமிசை யிருந்ததாகவும், அவன் இருப்பினால் மலை தரையுள் புகுந்து தாழ்ந்த தாகவும் மாற்றி அமைத்துள்ளார். மணி முடியும் நவமணிமாலையும் கூறியது கழுகின் வேந்தன் என்ற சிறப்புப்பற்றியாகும். எண் ணற்ற அவுணரைக் கொன்று தின்ற மூக்குடையனாதலின், அவன் இராவணனை இளைக்கச் செய்தது இயல்பே என்பதும் இங்குப் பெறவைத்தது பொருத்தமேயாகும். முதல் நூலில் கூறியவற்றை விரித்துக் கூறுதலும் மாற்றிக் கூறுதலும் வழி நூல் செய்வோர்க்கு இயல்பே.

2. வான்மீகத்தில்: இராமன், சடாயுவை அரக்கனோ என ஐயுற்று, 'நீர் யார்' என்று கேட்க, சடாயு, 'குழந்தாய்! என்னை உன் தந்தையின் துணைவன் என அறிவாயாக' என்று கூறிய தாகவும், அதை அறிந்த இராமன், மகிழ்ச்சிகொண்டு அக்கழுகின் குலத்தையும் பெயரையும் கேட்டதாகவும், சடாயு, எல்லா உயிர் களின் பிறப்பு வரலாற்றையும் தன் குலத்தையும் பெயரையும் விரித்துக் கூறியதாகவும் உள்ளது.

கம்பர், சடாயுவைக் கண்ட இராமன், அரக்கனோ என ஐயுற்று அல்லனாமெனின் கலுழனோ எனச் செயிர்த்து நோக்கியதாகவும் இராம இலக்குவரைக் கண்ட சடாயு, இவர் யார்? என அயிர்த்து நோக்கியதாகவும் கூறுகின்றார். நிலையாக ஓரிடத்தில் இருப்பவர், புதிதின் அங்கு வந்தடைந்தவர்களைப் பார்த்து, நீர் யார்? என்று கேட்பது உலகியலுக்கு ஒத்ததாமேயன்றி இடையில் வந்தவர்

நிலையாக இருப்பவரைக் கண்டு ‘யார் நீர்’ என்று வினவுவது ஒத்ததாக இல்லை என்ற கருத்தால் கம்பர், சடாயுவை இராமன், நீர் யார்? என்று கேட்டதாகக் கூருமல் விடுத்தார். சடாயுவும் இராம இலக்குவரின் பேரழகையும் அவர்கள் உடம்பிலுள்ள இலக்கணங்களையும் கூர்ந்து நோக்கி, இவர் முனிவர் அல்லர். தேவரோ? எனின், எல்லாத் தேவர்களையும் கண்டுளேன்; எத்தேவரும் இவர்களுக்கு ஒப்பாகார்; எனவே இவர்கள் தேவரில் ஒருவரும் அல்லர்: என்று பலகால் சிந்தித்து முடிவில் என் நண்பனுகிய தயரதனை ஒத்துளார் என்ற முடிவிற்கு வந்தபின் அவர்மேல் சென்ற அன்பினுல், காளை நீர்கள் யார்? என்று வினவியதாகக் கம்பர் அமைத்தது சாலச் சிறப்புடையதாக இருக்கின்றது. முன்பு அறிமுகம் இல்லாத இராம இலக்குவரைச் சடாயு கண்டவுடன் இன்னுர் என அறிந்துகொண்டு, ‘யான் நும் தந்தையின் துணைவன் என்பதை அறிந்து கொள்ளுங்கள்’ என்பதிலும், அவர் தோற்றம் முதலியவற்றைக் கண்டு தயரதன் புதல்வர்களாக இருக்கவேண்டும் என உய்த்துணர்ந்துகொண்டு பின் ‘நீங்கள் யார்?’ என்று வினவியது மிகவும் பொருத்தமுடையதாதல் காணலாம். மேலும், தயரதன் நண்பன் சடாயு என்பதை, அத்தயரதன் மரணத்தைக் கேட்டு அவன் அரற்றுதலின் மூலம் வெளிப்படுத்தியுள்ளது சுவை பயப்பதாகும்.

3. சடாயு தயரதனைப் பற்றி வினவியதாகவோ அல்லது அவன் மரணத்தை அறிந்து பிரிவாற்ருது அரற்றியதாகவோ வான்மீகம் கூறவில்லை.

கம்பர், நண்பன் மக்களைக் கண்டவுடன் அந்நண்பன் நலத்தை வினவுவதே உலகியலுக்கும் நட்புரிமைக்கும் பொருத்தமாம் என்று கருதிச் சடாயு, அங்ஙனம் வினவியதாகவும் அந்நண்பன் மரணமடைந்தான் என்பதறிந்து, அழுதரற்றித் தீயில் வீழ்ந்து இறக்கத் துணிந்ததாகவும் கூறியுள்ளார். சடாயு உலகியலும் மனிதப் பண்பும் அறிந்தவனுகவே கம்பர் நமக்குக் காட்டுகின்ருர். தயரதன் மரணத்தையறிந்து சடாயு அரற்றுகின்ற பகுதி, அவன் நட்புணர்ச்சியையும் தயரதன் பெருந்தன்மையையும் விளக்குவதாகவுள்ளது. சடாயு தன் வரலாறு கூறிய பின் தயரதன் தன்னேடு நட்புப் பூண்டதைத் தெரிவிப்பதாகக் கூறும் வான்மீகத்தினும் நண்பனது பெரும்பிரிவை அறிந்து அரற்றும்போதே தனக்கும் தயரதற்கும் நட்புரிமையுண்டு என்பதைப் புலப்படுத்தியதாக அமைத்த கம்பரின் அறிவுத்திறம் பாராட்டற்குரியதாகும். சீதையைக் காப்பதற்காகத் தன்னுயிரைவிட இருக்கின்ற சடாயு, தயரதன் பிரிவாற்ருது உயிர்விடத் துணிந்ததாகக் கம்பர் அமைத்தது எவ்வளவு பொருத்தமுடையது என்பதைக் கூற வேண்டுவதில்லை.

4. இராமன், சடாயுவை நோக்கி, 'நின்குலமும் பெயரும் என்ன?' என்று கேட்டபோது சடாயு, உலக உயிர்களின் தோற் றத்தையெல்லாம் விரிவாகக் கூறி முடித்துவிட்டு இறுதியில் அருணன் புதல்வன் தான் என்பதையும் சடாயு என்பது தன் பெயர் என்பதையும் கூறியதாக வான்மீகத்தில் உள்ளது.

சடாயுவின் வரலாறு அறிய விரும்புவார்க்கு உலக உயிர்களின் தோற்றத்தைப்பற்றிக் கூறுதல் மற்ருென்று விரித்தலாய் முடி கின்றது. கம்பர் அதையறிந்து, 'அருணன்றன் புதல்வன் யான்' என்று தொடங்கித் தன் குலமும் பெயரும் மட்டும் சடாயு கூறியதாக அமைத்துள்ளமை பொருத்தமாகத் தோன்றுகின்றது.

வான்மீகத்தில் உலக உயிர்களின் தோற்றத்தைப்பற்றிச் சடாயு கூறியதாகவுள்ள பகுதியை அறிந்த ஒருவர், கம்பராமாயணத்திலும் அவ்வரலாறு இருக்கவேண்டும் என்று கருதி ஐந்து பாடல்களில் அஃக்கருத்தமையச் செய்து இடையில் செருகியுள்ளார். பல ஏடுகளில் அவ்வைந்து பாடல்கள் இல்லாததோடு, அவை, கம்பர் வாக்காகவும் காணப்படவில்லை. மேலும், வான்மீகத்தில் உயிர்களின் தோற்றத் தைப் பற்றிக் கூறும் பகுதிக்கும், அது பற்றி அவ்வைந்து பாடல்களும் தெரிவிக்கும் கருத்திற்கும் வேறுபாடும் மாறுபாடும் மிகுதியாகக் காணப்படுகின்றன. மேலும், அவ்வைந்து பாடல்களில் இறுதிப் பாடலில் 'விநதைசுதன் அருணன், மென்ருேள் புதுமதிசேர்நுத லரம்பைதனைப்புணர வுதித்தனம் யாம்' என உளப்பாட்டுத் தன்மை யாகக் கூறியவன், அடுத்த செய்யுளில், 'அருணன்றன் புதல்வன் யான்' என மீண்டும் கூறுவதும் தனித்தன்மையாகக் கூறுவதும் பொருந்தாமை காணலாம். எனவே அவை இடைச் செருகல் என்பது தெளிவு.

## படலப் பொருட் சிறப்பு

தயரதன் விண்ணுலகடைந்தமையால், அவன் கொடையாலும் குடையாலும் பொறையாலும் தோல்வியுற்றிருந்த கற்பகமும் சந்திரனும் பூமியும் வாழ்வு பெற்று மகிழ்வதாகவும் அம்மூன்ருலும் வாழ்வுபெற்றிருந்த இரவலரும் நல்லறமும் சடாயுவும் தாழ்வுற்று வருந்துவதாகவும் கூறும் பாடல், மும்மடி நிரனிறையணியமைந்த தாய்ச் சொல்லழகும் பொருளாழமும் ஓசை யினிமையும் உடையதாய் உருக்கமிக்கதாய் அமைந்து படிப்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. சடாயு அரற்றுகின்ற மற்றைய பாடல்களும் சிறப்பாக அமைந்துள்ளன.

"நிலங்காவல் செய்வதில் கருத்துடைய தயரதன், மண்ணுலகை விடுத்து விண்ணுலகம் நண்ணுன்; இப்பொழுது நண்ணியதற்குக்

காரணம் தன்னெடு நட்புக்கொண்ட சடாயு தன்பால் எவ்வளவு அன்புடையனுக இருக்கின்ருன் என்பதை ஆராய்தற்காகவே போலும்'' என்று சடாயு தற்குறிப்பேற்றமாகக் காரணம் கற்பித்துக் கூறுவது நயமிக்கதாகவுள்ளது. நட்புடையார் நோவின் நோதலும் சாவிற் சாதலும் நண்பர் இயல்பு. 'யான் இறந்தால் நட்புரிமையால் சடாயு இறக்கின்ருனே? என்று பார்க்கவே தயரதன் இறந்தான்; ஆனல் நன்னெறியை விட்டு விலங்கியவன் யானுதலின் அந் நட்டாற்குரிய பண்பிலிருந்து விலகிவிட்டேன்' என்ற பொருளமைந்த, " நண்பினின்றும் விலங்கானேனுதலினல் விலங்கினேன் இன்னுமுயிர் விட்டிலேனல் " என்ற பகுதி, சொல் நயமும் பொருள் நயமும் மிக்கதாக அமைந்துள்ளது. தயரதன், சடாயுவோடு நட்புக் கொண்டபோது, 'நீயுயிர் நான் உடல்' என்று கூறினனும்; அச் சொல்லின்படி சடாயு உயிரும் தயரதன் உடலும் ஆவர். கூற்றுவன் அம்முறையை நோக்காது, உயிராகிய சடாயுவை விடுத்து உடலாகிய தயரதனை விசும்பேற்றிவிட்டான்; உணர்விறந்த கூற்றுவனுகலின் உயிரை விடுத்து உடம்பைக் கொடுபோனுன்: என்ற கருத்துக் கவிப்பண்பெலாம் நிறைந்து படிப்போர்க்கு ஆரா அமுதாய் இனிக்கும் இயல்பினதாக இருக்கின்றது.

பஞ்சவடியில் உள்ள சீதையையும் இராம இலக்குவரையும் சேய்மையிலிருந்தே காவல் செய்துவரும் சடாயுவுக்கு உவமையாகக் கூட்டிலிருக்கும் குஞ்சுகளைப் பார்க்கும் தாய்ப்பறவையைக் கூறியது மிகப் பொருத்தமாக இருக்கின்றது. தன் குஞ்சினைப் பிற உயிர் கவர்ந்து செல்லின் தாய்ப்பறவை விரைந்து சென்று கவர்ந்த உயிரோடு போரிடுதல் போலவே பின் சீதையைக் கவர்ந்து இராவணன் செல்லுங்கால் விரைந்து சென்று அவனைத் தடுத்துப் போராடி இறக்கப் போவதையும் இங்கு நினைத்தால் இவ்வுவமையின் ஏற்றம் பெறப்படும்.

---

# 4. சடாயு காண் படலம்

## இராமன் முதலியோர் சடாயுவைக் கண்டது

2781. நடந்தனர் காவதம் பலவு நன்னதி
கிடந்தன நின்றன கிரிகள் கேண்மையிற்
றொடர்ந்தன துவன்றின சூழல் யாவையுங்
கடந்தனர் கண்டனர் கழுகின் வேந்தையே.

நடந்தனர் காவதம் பலவும்; நல் நதி
கிடந்தன, நின்றன, கிரிகள் கேண்மையின்
தொடர்ந்தன, துவன்றின சூழல் யாவையும்,
கடந்தனர்; கண்டனர் கழுகின் வேந்தையே.

பொ :—(இராமன் முதலியோர்) பல காதத்தொலைவு நடந்து சென்று வழியில் கிடந்தனவாகிய நல்ல ஆறுகளையும், நிமிர்ந்து நின்றனவாகிய மலைகளையும், நட்புடையவைபோல ஒன்றையொன்று தொடர்ந்து நின்ற மலைத்தொடர்ச்சிகளையும், மரங்கொடி செடிகள் நெருங்கியுள்ள காடுகள் முதலிய எல்லாவற்றையும் கடந்து சென்றனராய்ப் பின் கழுகின் வேந்தனாகிய சடாயுவைக் கண்டார்கள்.

கு :—கிடந்தனவாகிய நன்னதி என்க. தரையில் கிடந்தாற் போன்று தோன்றுதலின் இவ்வாறு கூறப்பட்டது. கேண்மையின் தொடர்ந்தன கிரிகள் எனக் கிரிகளைப் பின்னுங் கூட்டுக. தனி மலைகளையும் மலைத்தொடர்ச்சியையும் கூறியவாறு. துவன்றின சூழல் என்றது, மரஞ்செடி கொடிகள் நெருங்கியுள்ள காடுகளை. வழியில் நெருங்கியுள்ள பிற இடங்கள் எனக் கூறலுமாம். நடந்தனராய்க் கடந்தனராய்க் கழுகின் வேந்தைக் கண்டனர் என முற்றெச்சங்களாக்கி மாற்றி முடிக்க. காவதம் - காதம். நீர் இடையறாது செல்லும் நதி என்பார் 'நல்நதி' எனச் சிறப்பித்தார். (1)

## சடாயுவின் இயல்பு 2782—2789

2782. உருக்கிய சுவணமொத் துதயத் துச்சிசே
ரருக்கனிவ் வகலிடத் தலங்கு திக்கெலாந்
தெரிப்புறு செறிசுடர்ச் சிகையி னூற்றிசை
விரித்திருந் தனனென விளங்கு வான்றனை.

உருக்கிய சுவணம் ஒத்து, உதயத்து உச்சி சேர்
அருக்கன் இவ் அகல் இடத்து அலங்கு திக்கு எலாம்
தெரிப்புறு செறி சுடர்ச் சிகையினுல் திசை
விரித்து இருந்தனன் என, விளங்குவான் தனே.

பொ :—உருக்கிய பொன்னேப் போன்று உதயமலேயின் உச்சியை அடைந்த சூரியன், இந்த அகன்ற உலகத்தில் விளங்குகின்ற திசையெல்லாவற்றையும் தெளியச் செய்தற்குரிய நெருங்கிய தன் சுடர்க்கொழுந்தினே நான்குதிசையினும் விரித்துக்கொண்டு இருந்தான் என்று சொல்லுமாறு, மலேயுச்சியில் பொன்னிறச் சிறகுடன் விளங்குகின்ற சடாயுவை.

கு :—சுவணம் - பொன். உருக்கியபொன் உதயசூரியனுக்கு உவமை. இனி 'உருக்கிய சுவணம் ஒத்து விளங்குவான்தனே' என இயைத்து, சடாயுவுக்கு உவமையாக்கலும் ஆம். உதயம் - உதய மலே; ஆகுபெயர். அலங்குதல் - விளங்குதல். சுடர்ச்சிகை - கதிர்களின் கொழுந்து; திக்கெலாம் தெரிப்புறுதல் - திசைமுழுதும் விளங்கச் செய்தல்; சுடர்ச்சிகைக்கு அடை. உதயமலேமேல் இருந்து சுடர்ச்சிகையினே நான்கு திசையினும் விரிக்கத் தொடங்கிய சூரியனேப்போலச் சடாயு மலேயுச்சியில் பொன்னிறச் சிறகுடன் விளங்குகின்ருன் என்றவாறு. உதயமலே, சடாயு அமர்ந்துள்ள மலேக்கும், சூரியன் சடாயுவுக்கும், சூரியன் சுடர்ச்சிகையினே விரித்துக் கொண்டிருத்தல் சடாயு சிறகினேச் சிறிது விரித்திருத்தலுக்கும் உவமைகளாம். சிகையினுல் என்புழி மூன்றனுருபு இரண்டன் பொருளில் வந்தது. (2)

**2783.** முந்தொரு கருமலே முகட்டு முன்றிலிற்
சந்திர ளெளியொடு தழுவச் சார்த்திய
வந்தமில் கனேகட லமரர் நாட்டிய
மந்தர கிரியென வயங்கு வான்றனே.

முந்து ஒரு கருமலே முகட்டு முன்றிலின்
சந்திரன் ஒளியொடு தழுவச் சார்த்திய,
அந்தம் இல் கனே கடல் அமரர் நாட்டிய,
மந்தர கிரி என வயங்குவான் தனே.

பொ :—தமக்கு முன் ஒருகரிய மலே உச்சியின் முன்பக்கத்தில், - தேவர்கள், முடிவில்லாது ஒலிக்கின்ற திருப்பாற் கடலில் நாட்டியதும் சந்திரனுடைய ஒளியோடு தழுவுமாறு சார்த்தியதும் ஆகிய மந்தர மலேபோல விளங்குகின்றவனே.

கு :—முந்து: - முன் ; இடமுன். முந்துநாட்டிய என இயைத் துரைப்பினும் ஆம். மலைமுகட்டு முன்றிலின் மந்தரகிரியென வயங்கு வான்றனை என இயையும். விண்ணில் விளங்கும் தண்மதியை அடைதூணாகக்கொண்டு அதனோடு தழுவுமாறு மந்தரமலையாகிய மத்தினைச் சார்த்தினார்கள் என்பதை : 'மத்து மந்தரம் வாசுகி கடை கயிறு அடைதூண் மெத்து சந்திரன்' (498) என முன்கூறியுள் ளமையானும் அறியலாம். சார்த்திய மந்தரம், நாட்டிய மந்தரம் என்க. சடாயுவின் தோற்றம், மந்தரமலை போலப் பருத்தும் உயர்ந்தும் இருந்தது என்பது கருத்து. (3)

2784. மானிற விசும்பெழின் மறையத் தன்மணிக்
கானிறச் சேயொளி கதுவக் கண்ணக
னீனிற வரையினிற் பவள நீள்கொடி
போனிறம் பொலிந்திடப் பொலிகின் றான்றனை.

மால் நிற விசும்பு எழில் மறையத் தன் மணிக்
கால் நிறச் சேயொளி கதுவக் கண் அகல்
நீல் நிற வரையினில் பவள நீள் கொடி
போல் நிறம் பொலிந்திடப் பொலிகின்றான் தனை.

பொ :—திருமாலின் நிறம்போன்ற நீலவானின் அழகு மறையுமாறு, தனது செம்மணி போன்ற கால்களின் நிறமாகிய செம்மை ஒளி அவ்வானிடத்தைப்பற்றிப் பரவுதலால், இடமகன்றதும் நீலநிறமுடையதுமாகிய மலையில் தோன்றும் நீண்ட பவழக் கொடியின் நிறம்போல அக்கால்கள் பொலிந்திட விளங்குகின்றவனை.

கு :—மாலின்நிறம் நீலமாதலின் நீலவானுக்கு அதனை உவமையாக்கினார். சடாயு கால்களின் செந்நிறம் பற்றிப் பரவுதலால் நீலவானின் எழின் மறைந்தது என்க. மலையில் சடாயுவின் செங் கால்கள் பதிந்திருப்பது மலையில் பவழக்கொடி தோன்றுவதுபோல் உள்ளது என்க. கடலிடைத் தோன்றும் இயல்பினதாகிய பவழக் கொடி மலையில் தோன்றுவதுபோல் பொலிந்திட என்ற உவமை இல்பொருள் உவமை. கதுவுதல் - பற்றுதல், கண்ணகல் - இடமகன்ற. 'நீள் பவளக் கொடி நிறம்போல் பொலிந்திட' என மாற்றி அமைக்க. சடாயுவின் கால்கள் சிவப்பு நிறமிக்கதாகலின் அச்செந்நிற ஒளியால் நீலவானின் அழகு மறைந்துவிட்டது என்றது, செந்நிறத்தின் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. (4)

2785. தூய்மைய னிருங்கலை துணிந்த கேள்வியன்
வாய்மையன் மறுவிலன் மதியின் கூர்மைய
ஞய்மையின் மந்திரத் தறிஞ ஞமெனச்
சேய்மையி னேக்குறு சிறுக ணுன்றனை.

தூய்மையன், இருங்கலை துணிந்த கேள்வியன்,
வாய்மையன், மறு இலன், மதியின் கூர்மையன்,
ஆய்மையின் மந்திரத்து அறிஞன் ஆம் எனச்
சேய்மையின் நோக்குறு சிறு கணன் தனை.

பொ :—தூய்மையுடையவனும், பெரிய கலைகளையெல்லாம் கற்றுத்தெளிந்த கேள்வியறிவுடையவனும், வாய்மையுடையவனும், காமம் முதலிய குற்றங்கள் இல்லாதவனும், அறிவின் கூர்மையுடையவனும் ஆகிய ஆராய்ச்சியுடைய அமைச்சரவையிலுள்ள அறிஞன் போல நெடுந்தொலைவில் பார்க்கின்ற சிறிய கண்களையுடையவனை.

கு :—உடல் தூய்மையும் உளத்தூய்மையும் அடங்கத் தூய்மையன் என்று ஒரு சொல்லாற் கூறினர். துணிதல் - தெளிதல்; கற்றுத்தெளிதலை யுணர்த்திற்று. கற்றல் கேட்டல் உடையான் என்பார், 'இருங்கலை துணிந்த கேள்வியன்' என்ருர். வாய்மையாவது, பிறவுயிர்க்குத் தீங்கு பயவாத வகையில் நிகழ்ந்தது கூறுதலும், பிறவுயிர்க்கு நன்மைபயக்கும் வகையில் நிகழாதது கூறுதலும் ஆம். குற்றங்களாவன :—காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்ற ஆறும் ஆம். மந்திரம் - மந்திரிசபை. "மன்னவன்றனக்கு நாயேன் மந்திரத்துள்ளேன்" (சுந்தர. 520) என்புழியும் இச்சொல் இப்பொருளதாதல் காண்க. 'மந்திரத்து அறிஞன்' எனவே மந்திரிகளுள் சிறந்தோன் என்பது பெறப்படும். தூய்மையன் முதலிய பெயர்கள் அறிஞனையே சிறப்பித்து நின்றன; ஒருபொருட் பல பெயர்கள். அரிய பொருளைச் சிந்திக்குங்கால் பார்வையை வானத்தில் செலுத்துதலும் நெடுந்தொலைவிற் செலுத்துதலும் சிந்தனையாளரின் இயல்பு. ஒரு பொருளைப்பற்றி ஆழ்ந்து ஆராய்கின்ற அமைச்சனைப் போலச் சடாயு தன் பார்வையைச் சேய்மையில் செலுத்தியிருந்தான் என்க. மந்திரத்தறிஞனுக்குக் கூறிய தூய்மையன் முதலிய சிறப்புக்கள் உவமிக்கப்பட்ட சடாயுவுக்கும் பொருந்தும். மந்திரத்தறிஞனுக்கும் சடாயுவுக்கும் பொதுத் தன்மை சேய்மையினேக்குதல்; வினையுவமம். சடாயுவின் உடலமைப்பிற்கேற்றவாறன்றிக் கண் சிறுத்திருத்தலின் 'சிறுகணுன்' என்ருர். கண், அளவில் சிறியதாயினும் சேய்மையில் நோக்கும் திறமுடையதாகவே இருந்தது என்ற சிறப்பும் இங்குப் பெறப்படும். (5)

2786. வீட்டிவா ளவுணரை
விருந்து கூற்றினை
யூட்டிவீழ் மிச்சிரு
னுண்டு நாடொறுந்
தீட்டிமே லிந்திரன்
சிறுகண் யானையின்
ரேட்டிபோற் றேய்ந்தொளிர்
துண்டத் தான்றனை.

வீட்டி வாள் அவுணரை, விருந்து கூற்றினை
ஊட்டி, வீழ் மிச்சில் தான் உண்டு, நாள்தொறும்
தீட்டி, மேல் இந்திரன் சிறு கண் யானையின்
தோட்டிபோல் தேய்ந்து ஒளிர் துண்டத்தான் தனை.

பொ :—நாள்தோறும் வாளேந்திய அசுரரை அழித்து வீழ்த்தி, எமனுக்கு விருந்து ஊட்டிவிட்டு வீழ்கின்ற மிச்சிலாகிய உடம்பை உண்டு பின் மர முதலியவற்றில் தீட்டப்பெற்று மேலுலகத்துள்ள இந்திரனுடைய சிறிய கண்களையுடைய யானையின் அங்குசம் போலத் தேய்ந்து விளங்குகின்ற மூக்கையுடையவனை.

கு :—நாள்தோறும் அவுணரை வீட்டிக் கூற்றினை விருந்து ஊட்டி மிச்சில் தானுண்டு தீட்டித் தேய்ந்தொளிர்துண்டத்தான் என இயையும். இந்திரன் யானையின் அங்குசம் தேய்ந்தொளிர்கின்ற மூக்கிற்குவமை. துண்டம் – பறவை மூக்கு. விருந்தூட்டி மிச்சில் தானுண்டு என்பது, 'விருந்தோம்பி மிச்சில் மிசைவான்' (குறள்-85) என்ற தொடரை நினைவூட்டுவதாகும். அவுணரை நாள்தோறும் கொன்று அவர்கள் உடம்பை உணவாகக்கொள்வது சடாயுவின் இயல்பு என்றவாறு. அவுணரைக் கொல்லுங்கால் அவர்களுயிரைக் கவர்பவன் கூற்றுவனாகலின் அவனுக்கு முன் விருந்தூட்டியதாகக் கூறினார். வீழ் மிச்சில் என்றது கூற்றுவன் கவர்ந்த உயிர்போக எஞ்சிய உடம்புகளை. பறவைகள் மூக்கால் உணவினைக் கொத்தியுண்டபின் மர முதலியவற்றில் அம் மூக்கினைத் தேய்த்தல் இயல்பு; அதனையே தீட்டியதாகக் கூறினார். சடாயுவின் மூக்கின் பெருமை தோன்ற ஐராவதத்தின் அங்குசத்தை உவமை கூறினார். இந்திரன் சிறுகண்யானை என்றது ஐராவதத்தை. யானையின் உருவமைப்பிற்கு ஏற்ப இன்றிக் கண் சிறுத்திருத்தலின் 'சிறுகண்யானை' என்றார். தோட்டி - அங்குசம்; அங்குசத்தின் நுனி வளைந்துள்ளதுபோல் சடாயுவின் மூக்கு நுனியும் வளைந்துள்ளது என்பது கருத்து. 'கற்பங்கள் எனைப்பல கண்டுளான்' எனப்

பின்னர்க் கூறப்படுதலாலும் 'காமன் என்பவனையும் கண்ணில் நோக்கினேன்' என்று சடாயுவே பின்கூறுதலாலும் அவுணர் இருந்த காலத்தும் சடாயு இருந்தான் என்பதும் அவர்களைக் கொன்று தின்றான் என்பதும் பொருந்துவதே ஆம். தேவர்கட்குத் துணையாயிருந்து அவுணரைக் கொன்ற சடாயு, தேவர் பகைவனாகிய சம்பரனைத் தயரதன் கொல்லவும் துணைசெய்தான் என்பது பின் விளங்கும். (6)

**2787.** கோளிரு நான்கினோ டொன்று கூடின
வாளுறு திகிரிபோ லாரத் தான்றனை
நீளுறு மேருவி னெற்றி முற்றிய
வாளிர வியிற்பொலி மௌலி யான்றனை.

கோள் இருநான்கினோடு ஒன்று கூடின
ஆளுறு திகிரிபோல் ஆரத்தான் தனை,
நீளுறு மேருவின் நெற்றி முற்றிய
வாள் இரவியில் பொலி மௌலியான் தனை,

பொ :—நவக்கிரகங்களையும் ஆளுதலையுடைய துருவச்சக்கரம் போன்ற நவரத்தினமாலையையணிந்தவனை, உயர்ந்த மேருமலையின் உச்சியில் பொருந்திய ஒளிவாய்ந்த சூரியனைப்போல விளங்குகின்ற மகுடத்தையணிந்தவனை.

கு :—இருநான்கினோடு ஒன்று கூடின கோள் என்றது, நவக்கிரகங்களை; அவை: சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது என்பன. அவற்றை 'ஆளுறுதிகிரி' என்றது, காற்றின் வடிவமான கயிறுகளினாலே கட்டப்பட்ட ஒன்பது கோள்களையும் சுற்றித்திருப்புகின்ற துருவனுடைய சக்கரம். இது சிம்சுமாரசக்கரம் எனப் பெயர்பெறும். துருவச்சக்கரம் போன்ற ஆரம் எனவே நவமணிமாலை என்பது பெறப்பட்டது. நவமணிகட்கும் உரிய தெய்வங்கள் நவகோள்களாம் என்பது சோதிட நூல் துணிவு. "கோளெலாங்கிடந்த நெடுஞ்சிறையன்ன நிறையாரங் குலவ" (மாரீசன்வதைப்—5) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். நவகோள்களை இயக்கும் துருவச்சக்கரம் போன்ற நவமணிமாலையினையும் மேருமலையின் உச்சியில் பொருந்திய சூரியனைப்போன்ற கிரீடத்தையும் சடாயு அணிந்திருந்தான்; அவன் கழுகின் வேந்தன் ஆதலின், மேருமலை சடாயுவின் தோற்றத்திற்கும், சூரியன் அவன் தலையிலணிந்த மகுடத்திற்கும் உவமை. முன், 'மந்தரகிரியென வயங்குவான்' என்றதும் காண்க.

நெற்றி - உச்சி. வாள் - ஒளி. இரவி - சூரியன். மௌலி - மகுடம். "திருவடி முடியிற் சூட்டிச் செங்கதி ருச்சி சேர்ந்த, வருவரையென்ன நின்ற அரக்கர்தம் மரசை நோக்கி" (யுத்த - விபீடணனடைக் கலப்-148) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (7)

**2788.** சொற்பங்க முறநிமி ரிசையின் சும்மையை
யற்பங்க முறவரு மருணன் செம்மலைச்
சிற்பங்கொள் பகலெனக் கடிது சென்றுதீர்
கற்பங்கள் எனைப்பல கண்டு ளான்றனை.

சொல் பங்கம் உற நிமிர் இசையின் சும்மையை,
அல் பங்கம் உற வரும் அருணன் செம்மலைச்
சிற்பம் கொள் பகல் எனக் கடிது சென்று தீர்
கற்பங்கள் எனைப்பல கண்டுளான் தனை.

பொ :—சொற்கள் (போதாமையால்) குறைவடையுமாறு வளர்கின்ற புகழின் திரட்சியாக இருப்பவனை, இரவு அழிவடைய வருகின்ற அருணனுக்கு மகனை, விரைந்துசென்று கழிகின்ற சிறுமையுடைய நாள்களைக் கண்டு கழிப்பதுபோல எத்தனையோ பல கற்ப காலங்களைக் கண்டு கழித்தவனை,

கு :—புகழ்முழுமையும் வெளிப்படுத்தச் சொற்கள் போதாமையால் 'சொற்பங்கமுற' என்றார். பங்கம் - குறைவு; 'மண்டேய்த்த புகழினன்' (சிலம்பு - மங்கலவாழ்த்து) என்பதும் இங்கு நினைக்க. இசை - புகழ். சும்மை - திரட்சி. அல் - இரவு. அது பங்கமுறுதலாவது சூரியன் தேர்வர ஆற்றல் குறைந்து அழிவது. அருணன், சூரியனுடைய தேர்ப்பாகன். செம்மல் - தலைமையுடையோன்; இங்கு மகன் எனும் பொருளில் வந்தது. சிற்பம் - சிறுமை. கடிது சென்றுதீர் சிற்பங்கொள் பகல் எனக் கற்பங்கள் எனைப்பல கண்டுளான்தனை என இயையும். கற்பம் என்பது, பிரமனுக்கு ஒருநாள். அது நானூற்றுமுப்பத்திரண்டு கோடி வருடங்கொண்டது என்பர். எனைப்பல - மிகப்பல. (8)

**2789.** ஓங்குயர் நெடுவரை யொன்றி னின்றது
தாங்கல திருநிலந் தாழ்ந்து தாழ்வுற
வீங்கிய வலியினி லிருந்த வீரனை
யாங்கவ ரணுகின ரயிர்க்குஞ் சிந்தையார்.

ஓங்கு உயர் நெடுவரை ஒன்றில் நின்று, அது
தாங்கலது இருநிலம் தாழ்ந்து தாழ்வுற,
வீங்கிய வலியினில் இருந்த வீரனை,
ஆங்கு அவர் அணுகினர், அயிர்க்குஞ் சிந்தையார்.

பொ :—ஓங்கி உயர்ந்த பெரிய மலை ஒன்றில் நின்று அம்மலை, தன் பாரத்தைத் தாங்க இயலாது பெரிய நிலத்தில் அழுந்தித் தாழ்வுறுமாறு பெருத்த வலிமையோடு அமர்ந்திருந்த வீரமுடைய சடாயுவை, சேய்மையிலிருந்துகண்ட இராமன் முதலியோர் ஐயுறும் மனத்தினராய் அணுகினர்.

கு :—வரையொன்று என்றது 'பிரஸ்ரவணம்' என்ற பெயருடைய மலையை. முன், நின்று பின்னர் அமர்தல் இயல்பாகலின், 'நின்று.........இருந்த வீரனை' என்றார். இருநிலந்தாழ்தலாவது, அம்மலை சடாயுவின் பாரம் தாங்காமல் நிலத்தில் அழுந்துதல். அவ்வாறு அழுந்தியமையால் முன்னைய உயர்ச்சியினின்றும் சிறிது தாழ்வுற்றது என்பார், 'தாழ்ந்து தாழ்வுற' என்றார். வீங்கிய வலி - பெருத்தவலிமை. ஆங்கவர் என்றது சேய்மையிலிருந்து கண்ட இராமன் முதலியோரை. ஆங்கு, சேய்மையையுணர்த்தும்; அசையெனலுமாம். 'கண்டனர் கழுகின் வேந்தை' என முன்கூறிய இரண்டாம் வேற்றுமை ஏற்ற பெயரோடு, வயங்குவான்றனை, விளங்குவான்றனை.........வீரனை என்று பின் வந்த இரண்டனுரு பேற்ற பெயர்கள் யாவும் ஒருபொருட்பலபெயராய்ப் பிரிவிலவாய் அணுகினர் என்ற வினையோடு முடிந்தன. சிந்தையராய் அணுகினர் என முற்றெச்சமாக்கி மாற்றி முடிக்க. (9)

## இராம இலக்குவர் சடாயுவை ஐயுற்று நோக்குதல்

2790. இறுதியைத் தன்வயி னியற்ற வெய்தின
னறிவிலி யரக்கன மல்ல னுமெனி
னெறுழ்வலிக் கலுழனே யென்ன வுன்னியச்
செறிகழல் வீரருஞ் செயிர்த்து நோக்கினர்.

'இறுதியைத் தன்வயின் இயற்ற எய்தினன்,
அறிவு இலி அரக்கன் ஆம்; அல்லனும் எனின்,
எறுழ் வலிக் கலுழனே' என்ன உன்னி, அச்
செறி கழல் வீரரும் செயிர்த்து நோக்கினர்.

பொ :—(அணுகிய) அவ்விராம இலக்குவர்களாகிய நெருங்கிய வீரக்கழலணிந்த வீரர்களும், அழிவைத் தன்னிடத்து உண்டாக்கிக்

கொள்ள எய்தியவனுகிய இவன், அறிவு இல்லாத அரக்கன் ஆவான்; அல்லனெனின், மிக்கவலிமையுடைய கருடனே ஆவான்: என்று எண்ணிக் கோபித்து நோக்கினுர்கள்.

கு:—தம்மைப் பகைத்து வந்தவர் யாவரே யாயினும் இறப்பது உறுதியாதலின், 'இறுதியைத் தன் வயின் இயற்ற எய்தினுன்' என இராம இலக்குவர் எண்ணலாயினர். தனக்குத்தானே கேடு சூழ்ந்து கொள்ளுதல் பேதைக்கு இயல்பாதலின் அவ்வாறு எய்தியவனே 'அறிவிலி' என்ருர். அரக்கனே பறவை வேடத்தோடு வஞ்சிக்க வந்துள்ளான் என்பது அவர்கள் முதல்நினைவு. இல்லையேல், வடிவும் நிறமும் பெருமையும் காணுங்கால் கலுழனுக இருத்தல் வேண்டும் என்பது அவர்களின் இரண்டாவது நினைவு. மேலைச் செய்யுளில் அயிர்த்ததாகக் கூறியதை இங்கு விளக்கியவாறு. ஒரு பொருளின்கண் இருவகை எண்ணம் ஏற்படுவதே ஐயம் எனப்படும். எறுழ் - வலிமை. எறுழ்வலி, ஒருபொருட் பன்மொழி. செயிர்த்தல் - கோபித்தல். அரக்கனும் என்ற முதற்கண் எழுந்த எண்ணமே மேலோங்கி நிற்றலின் செயிர்த்து நோக்கினுர்கள். கலுழனைச் செயிர்த்து நோக்குதற் கியைபின்மை யறிக. (10)

## சடாயுவின் ஐயம் 2791—2795

**2791.** வனைகழல் வரிசிலை மதுகை மைந்தரை
யனையவன் ருனுங்கண் டயிர்த்து நோக்கினுன்
வினையறு நோன்பின ரல்லர் வில்லினர்
புனைசடை முடியினர் புலவ ரோவெனு.

வனை கழல் வரி சிலை மதுகை மைந்தரை
அனையவன் தானும் கண்டு அயிர்த்து நோக்கினுன்
'வினை அறு நோன்பினர் அல்லர்; வில்லினர்
புனை சடை முடியினர் புலவரோ?' எனு,

பொ:—அந்தச் சடாயுவும், கட்டிய வீரக்கழலினையும் கட்ட மைந்த வில்லையுமுடைய அம்மன்னவன்மைந்தரைக் கண்களால் கண்டு, வில்லையுடையவர்களும் புனைந்த சடைமுடியை யுடையவர் களுமாகிய இவர்கள், இருவினையும் அறுதற்குக் காரணமான தவ ஒழுக்கத்தையுடையவர் அல்லர்; தேவர்களாக இருப்பார்களோ? என்று ஐயமுற்று மனத்தால் நோக்கினுன்.

கு:—மதுகை - வலிமை. மைந்தர் என்ருர், மன்னவன் மைந்தராதலின். தன் நண்பன் மைந்தர் என்பதைச் சடாயு பின் உணர

இருக்கின்றமையால் அக்குறிப்பை முன்னரே யுணர்த்தினர்போலும். அனையவன்தானும் என்புழி உம்மை இராம இலக்குவர் கண்டு ஐயுற்றதை நினைவுறுத்தி இறந்தது தழீஇய எச்சவும்மையாய் நின்றது. கண்டு என்றது கண்ணுற் காண்டலை. நோக்கினன் என்றது மனத்தால் நோக்கியதை; நோக்கல் நோக்கம் என்பர் தொல்காப்பியர். புனைசடையினராதல் நோன்பினர் என்பதைஉணர்த்த, வில்லினராதல் அத்தவத்திற்கு மாறுபட்டு நோன்பினரல்லர் என்பதை உறுதிப்படுத்தலின், 'புலவரோ' என்று அயிர்த்தான். நோன்பு - தவம். புலவர் - தேவர். புலவரோ வென அயிர்த்து நோக்கினன் என இயையும். தேவர்களுக்குரிய மேனிஒளியும் வனப்பும் இராம இலக்குவர்பாலிருத்தலின் தேவரோ என்ற எண்ணம் உண்டாயிற்று. (11)

**2792.** புரந்தரன் முதலிய புலவர் யாரையு
நிரந்தர நோக்குவெ னேமி யானுமவ்
வரந்தரு மிறைவனு மழுவ லாளனுங்
கரந்தில ரென்னையா னென்றுங் காண்பெறல்.

'புரந்தரன் முதலிய புலவர் யாரையும்
நிரந்தரம் நோக்குவென்; நேமியானும், அவ்
வரம் தரும் இறைவனும், மழு வலாளனும்,
கரந்திலர் என்னை; யான் என்றும் காண்பெறல்.

பொ:—இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாரையும் எப்பொழுதும் பார்க்கின்றேன்; சக்கரப்படையுடைய திருமாலும் வரங்களைத் தருகின்ற அந்தப் பிரமனும், மழுப்படைதாங்கிய வலிய உருத்திரனும் எனக்கு ஒளிக்கமாட்டார்கள்; அவர்களை யான் என்றும் காண்பேன்.

கு:—மேலைச் செய்யுளில் 'புலவரோ' என்று கூறியது தேவரையே என்பதைப் 'புரந்தரன் முதலிய புலவர்' என்று இப்பாடலில் புலப்படுத்தியவாறு. நிரந்தரம் - எப்பொழுதும். நேமியான் - திருமால். வரந்தரும் எனற அடையை, மூவர்க்கும் இயைப்பினுமாம். அகரம் நெஞ்சறி சுட்டு. 'கரந்திலர் என்னை' என்றது கரவாது வெளிப்பட்டுக்காட்சியளிப்பார் என்றவாறு. சடாயு மும்மூர்த்திகளையும் வழிபட்டான் என்பதும் அவன் வழிபாட்டிற்கு இரங்கி அம் மும்மூர்த்திகள் வெளிப்படுவர் என்பதும் இதனலறியலாம். ஆயின், சடாயு புள்ளிருக்கு வேளூரில் சிவனை வழிபட்டதாகத் திருஞானசம்பந்தரும், திருப்புட்குழியில் திருமாலை வழிபட்டதாகத்

திருமங்கை ஆழ்வாரும் கூறியுள்ளனர்; ஆதலின் 'இறைவனும் மழுவலாளன்' என்புழி இறைவனும் எனப் பிழைபட எழுதினர் போலும், என எண்ணவேண்டியுளது. நீலவண்ணமும் பொன் வண்ணமுமுடைய இராம இலக்குவரைக்கண்ட சடாயு அவ்விரு வண்ணத்தராய திருமாலையும் சிவனையும் நினைத்தலும் அவரல்லர் எனத் துணிதலும் இயல்பாதல் அறிக. (12)

2793. காமனென் பவனையுங் கண்ணி னோக்கினேன்
றாமரைச் செங்கணித் தடக்கை வீரர்கள்
பூமரு பொலங்கழற் பொடியி னோடுமொப்
பாமென வறிகிலெ னார்கொ லாமிவர்.

'காமன் என்பவனையும், கண்ணின் நோக்கினேன்;
தாமரைச் செங்கண் இத் தடக்கை வீரர்கள்
பூமரு பொலங் கழல் பொடியினோடும் ஒப்பு
ஆம் என அறிகிலென்; ஆர்கொலாம் இவர் ?

பொ :—மன்மதன் என்பவனையும் என் கண்களால் பார்த்துள்ளேன் ; தாமரைமலர் போன்ற சிவந்த கண்களையும் பெரிய கைகளையும் உடைய இவ்வீரர்களின் தாமரை மலர் போன்ற அழகிய பாதங்களில் ஒட்டியுள்ள மண்பொடியோடுதானும் அக்காமன் ஒப்பாவான் என்று யான் நினைக்கவில்லை; அத்தகைய இவர் யாரோ ?

கு :—இராம இலக்குவர் அழகிற்கு மன்மதனும் ஒப்பாகான் என்றவாறு. காமன், சிவபிரான் நெற்றிக்கண்ணால் எரிதற்கு முன்னர்—அவன் வடிவழகைக் கண்டுளேன் என்பான், 'கண்ணில் நோக்கினேன்' என்றான். செங்கணும் தடக்கையும் பூமருபொலங்கழலும் அவர் உயர்ந்தோர் என்பதை அறிவிக்கும் சான்றுகளாக இருக்கின்றன ஆதலின் அவற்றைச் சிறப்பித்தான். கழல் ஆகுபெயராய் அடியை யுணர்த்தியது. அறிதல் இங்கு நினைதலை உணர்த்தியது. தேவரிலும் மூவரிலும் சேர்ந்தவர் அல்லர் இவர் என்பதை மேலைச் செய்யுளில் உணர்த்தி இச்செய்யுளில் மன்மதனைக் காட்டிலும் பேரழகினராகிய இவர் ஆரோ? என ஐயமுற்றதை யுணர்த்தினர். இதனால் புலவரோ என ஐயுற்றவன் தேவரல்லர் எனத் துணிந்தமை பெறப்படும். (13)

2794. உலகொரு மூன்றுந்தம் முடைமை யாக்குறு
மலகறு மிலக்கண மமைந்த மெய்யினர்

மலர்மகட் குவமையா ளோடும் வந்தவிச்
சிலேவலி வீரரைத் தெரிகி லேனெனு.

‘உலகு ஒருமூன்றும் தம் உடைமை ஆக்குறும்
அலகு அறும் இலக்கணம் அமைந்த மெய்யினர்;
மலர்மகட்கு உவமையாளோடும் வந்த இச்
சிலே வலி வீரரைத் தெரிகிலேன்’ எனு,

பொ :—‘விண், மண், பாதலம் ஆகிய உலகங்கள் மூன்றையும் தம் உடைமையாக ஆக்கிக்கொள்ளுதற்குரிய அளவற்ற இலக்கணங்கள் அமைந்த உடம்பினேயுடையவராய்த் திருமகளுக்கு உவமையாகத் தக்க பேரழகுடையவளோடும் வந்த, இந்த வில்வலியிற் சிறந்த வீரரை இன்னுர் என்று தெரிந்திலேன்’ என்று,

கு :—மேல் 16 ஆம் செய்யுளில் ‘மனத்துள் எண்ணுவான்’ என்ற விணேகொண்டு முடியும்; குளகம். ஒரு மூன்று என்புழி, ‘ஒரு’ என்பது பொருளின்றிவந்தது. உலகொரு மூன்றும் தம்முடைமை யாக்குறும் இலக்கணம் என்றது, சக்கரவர்த்தியாதற்குரிய உடம்பு இலக்கணங்களே. மலர்மகள் என்றது, இங்குத் திருமகளே. திருமகளுக்கு உவமை சொல்லத்தக்க பேரழகுடையவள் எனச் சீதையின் எழிலேப் புலப்படுத்தியவாறு. ‘சிலேவலி வீரர்’ என்ருன், அவர் வில்லேயேந்தியிருத்தல் கண்டு. பல கற்பகாலம் வாழ்ந்து பலரையும் கண்டு பழகிய சடாயுவுக்கு, இங்கு வருகின்ற இருவரும் இன்னுர் என அறிய இயலவில்லேயே என்ற ஏக்கம் இருந்தமை இதனுல் புலனுகும். (14)

2795. கருமலே செம்மலே யனேய காட்சியர்
திருமகிழ் மார்பினர் செங்கண் வீரர்தா
மருமைசெய் குணத்தினென் றுணேவ னுழியா
னெருவனே யிருவரு மொத்து ளாரரோ.

‘கருமலே செம்மலே அனேய காட்சியர்;
திரு மகிழ் மார்பினர்; செங்கண் வீரர்தாம்,
அருமை செய் குணத்தின் என் துணேவன் ஆழியான்
ஒருவனே இருவரும் ஒத்துளார் அரோ.’

பொ :—கரிய மலேயினேயும் சிவந்த மலேயினேயும் ஒத்த தோற்றத்தையுடையவர்களும் வெற்றித் திருமகள் மகிழ்ந்து வீற்றிருக்கின்ற மார்பினேயுடையவர்களும் ஆகிய சிவந்த கண்களேயுடைய

இவ்வீரர்கள் இருவரும், பிறரால் செய்தற்கு அருமையானவற்றைச் செய்கின்ற பண்பினையுடைய எனது நண்பனாகிய தயரத சக்கரவர்த்தி ஒருவனை ஒத்து இருக்கின்றார்கள்.

கு :—இராமன் தோற்றம் கருமலையினையும் இலக்குவன் தோற்றம் செம்மலையினையும் ஒத்திருந்தன. மேல், 'அலகறும் இலக் கணம் அமைந்த மெய்யினர்' என்று கூறியவன், இங்கு அவற்றுள் சில கூறுகின்றான் ; மலைபோன்ற பெருந்தன்மையான தோற்றமும், மார்பின் அகலமும், இயல்பாகச் சிவந்த கண்களும் சக்கரவர்த்தியா தற்குரிய சிறந்த இலக்கணங்களாகும். அருமை செய்குணமாவது, பிறரால் மேற்கொள்ளற்கரிய வாய்மை யென்னும் அறத்தை மேற் கொண்டு காத்த பண்பு முதலியன. ஆழியான், ஆணைச்சக்கரத்தை யுடைய சக்கரவர்த்தி. தாம், அரோ, அசைகள். காட்சியரும் மார்பினருமாகிய செங்கண் வீரர் இருவரும் ஆழியான் ஒருவனை ஒத்துளர், என இயையும். மேல், தெரிகிலேன் என்றவன் இங்குத் தயரதன்மக்கள் என உய்த்துணரலானான் என்க. (15)

சடாயுவின் வினா

2796. எனப்பல நினைப்பினன்
மனத்து ளெண்ணுவான்
சினப்படை வீரர்மேற்
செல்லு மன்பினன்
கனப்படை வரிசிலைக்
காளை நீர்கள்யார்
மனப்பட வெனக்குரை
வழங்கு வீரென்றான்.

எனப் பல நினைப்பினன் மனத்துள் எண்ணுவான்,
சினப் படை வீரர்மேல் செல்லும் அன்பினன்,
'கனப் படை வரி சிலைக் காளை நீர்கள் யார்?
மனப்பட எனக்கு உரை வழங்குவீர்' என்றான்.

பொ :—என்று பல நினைவுகளையுடையனாய் மனத்துள் ஆராய் கின்ற சடாயு, சினத்தையுடைய படைகளைத் தாங்கிய இராம இலக் குவர் மேல் செல்லும் அன்பினனாய், 'பெரிய கட்டமைந்த விற்படை தாங்கிய காளைப்பருவமுடைய நீவிர் யார்? என்பதை எனக்கு மனத்தில் படுமாறு சொல்வீர்களாக' என்று கூறினான்.

கு :—நினைப்பினன், அன்பினுன், என்பன முற்றெச்சம். எண்ணுவான் வினையாலணையும் பெயர். எண்ணுகின்ற சடாயு அன்பினனுய் உரை வழங்குவீர் என்ருன் என இயையும். அன் பினுன் என்பதில் ஆன் என்பதை ஏதுப் பொருட்டாக்கி மூன்றனுருபு எனக் கோடலும் ஆம். உடையான் சினத்தை உடைமைமேல் ஏற்றிச் சினப்படை எனப்பட்டது. 'கன வரி சிலைப்படை' என மாறுக. கனம் - பெருமை; பாரமுமாம். காலை என்பது பருவத்தைக் குறித்து நின்றது. நீர்கள் என்றது முன்னிலைப் பன்மைப் பெயர் மேல், கள் விகுதி சேர்ந்து வந்த சொல். விளக்கமாகக் கூறுக என்பான், 'மனப்பட உரை வழங்குவீர்' என்ருன். உரை வழங்குதல், சொல்லுதல். சினப்படை வீரர்மேல் அன்பு சென்றமைக்குக் காரணம் தன் துணைவன் மக்கள் என்ற தொடர்பு. (16)

## இராம இலக்குவர் விடை

**2797.** வினவிய காலையில் மெய்ம்மை யல்லது
புனைமலர்த் தாரவர் புகல்கி லாமையாற்
கனைகட னெடுநிலங் காவ லாழியான்
வனைகழற் றயரதன் மைந்தர் யாமென்ருர்.

வினவிய காலையில், மெய்ம்மை அல்லது
புனை மலர்த் தாரவர் புகல்கிலாமையால்,
'கனை கடல் நெடுநிலம் காவல் ஆழியான்,
வனை கழல் தயரதன் மைந்தர் யாம்' என்ருர்.

பொ :—(சடாயு அவ்வாறு) வினுவியபொழுது, தொடுத்த மலர் மாலையணிந்த இராம இலக்குவர், உண்மையல்லது சொல்லாதவர் ஆதலின், "யாம், ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்ட பெரிய உலகத் தைக் காவல் செய்கின்ற சக்கரவர்த்தியாகிய, கட்டிய வீரக்கழலை யுடைய தயரதனுக்கு மைந்தர்" என்று கூறினர்.

கு :—அரக்கனே என முன் தம்மால் ஐயுறப்பட்டவன் வினுவிற்கு மெய்ம்மை கூறுதல் இயல்பன்று ஆயினும், பொய்ம்மை கூறும் இயல்பு சிறிதும் இல்லாதவர் இராம இலக்குவர் ஆதலின் மெய்ம் மையே கூறினர் என்பதை விளக்கியவாறு. பொய் என்ற சொல்லையும் வாயினல் சொல்லாதவர்கள் என்ற குறிப்புத் தோன்றப் பொய்ம்மை புகல்கிலாமையால் என்னுது மெய்ம்மையல்லது புகல்கிலாமையால் என்ருர். ஆழியானுகிய தயரதன் என்க. சக்கரவர்த்தி என்ற பொருளில் ஆழியான் என்ற சொல் ஆளப்பட்டுளது. தம் நாட்டின்

பரப்பை யுணர்த்த, 'கனைகடல் நெடு நிலம்' எனவும், தம் தந்தை அரசர்க்கரசன் என்பதையுணர்த்த, 'நெடு நிலங் காவலாழியான்' எனவும், பகைவரை வென்றவன் தம் தந்தை எனும் தகைமை தோன்ற, 'வனைகழல் தயரதன்' எனவும் கூறித் தம் தந்தையின் சிறப்பெல்லாம் தமக்கும் உண்மை குறிப்பினுல் தெரிவித்தவாறு.(17)

### சடாயு, தயரதன் நலம் வினுதல்

2798. உரைத்தலும் பொங்கிய வுவகை வேலையன்
றரைத்தலை யிழிந்தவர்த் தழுவுங் காதலன்
விரைத்தடந் தாரினிர் வேந்தர் வேந்தன்றன்
வரைத்தடந் தோளிணை வலியவோ வென்ருன்.

உரைத்தலும், பொங்கிய உவகை வேலையன்,
தரைத்தலை இழிந்து, அவர்த் தழுவும் காதலன்,
'விரைத் தடம் தாரினிர்! வேந்தர் வேந்தன் தன்,
வரைத்தடம் தோள் இணை வலியவோ?' என்ருன்.

பொ :—என்று அவர் சொல்லுதலும் பொங்கிய மகிழ்ச்சிக் கடலை உடையவனுகிய சடாயு, அவர்களைத் தழுவிக்கொள்ளும் பேரன்பினனுய்த் தரையில் இறங்கிவந்து, 'மணமிக்க பெரிய மாலையையுடையீர்! தயரத சக்கரவர்த்தியினுடைய மலைபோன்ற தோள்கள் இரண்டும் வலியனவாக இருக்கின்றனவா?' என்று வினவினுன்.

கு :—கடல் போன்ற மகிழ்ச்சியையுடையவன் என்பார், 'உவகை வேலையன்' என்ருர்; உருவகம். மகிழ்ச்சியாகிய கடல் என்க. பொங்குதல் - மேற்பட்டெழுதல். தரையிடை இறங்கி அவர்களைத் தழுவுவான்போல நெருங்கி வந்து வினவினுன் என்க. வேலையனுகிய சடாயு என வினைப்பெயராக்குக. காதலனுய் இழிந்து என மாற்றி முற்றெச்சமாக்குக. 'தோளிணை வலியவோ' என்றது, தயரதன் நலமோ? என்னும் கருத்தினது. பூமியைத் தோள்களில் அரசன் தாங்குவதாகக் கூறும் மரபு பற்றித் தோள்களையே யெடுத்துக் கூறினுன். தயரதன் முதிர்ந்த வயதினன் ஆகலின் தோள்கள் மெலிந்திருக்கலாமோ என்ற ஐயத்தால் அங்ஙனம் வினவினன் எனலுமாம். தயரதன் தோள்களின் பெருமையும் வலிமையும் தோன்ற, 'வரைத் தடந் தோளிணை' எனச் சிறப்பித்தான். (18)

தயரதன் துறக்கமுற்றது அறிந்து சடாயு வருந்துதல் 2799, 2800

2799. மறக்கமுற் ருததன் வாய்மை காத்தவன்
றுறக்கமுற் ருனென விராமன் சொல்லலு
மிறக்கமுற் ருனென வேக்க மெய்தின
னுறக்கமுற் ருனென வுணர்வு நீங்கினன்.

'மறக்க முற்ருத தன் வாய்மை காத்து, அவன்
துறக்கம் உற்ருன்' என, இராமன் சொல்லலும்,
இறக்கம் உற்ருன் என ஏக்கம் எய்தினன்;
உறக்கம் உற்ருன் என உணர்வு நீங்கினன்.

பொ :—'மறக்க இயலாத தன் வாய்மையைக் காத்து, அவன் துறக்கம் அடைந்தான்' என்று இராமன் சொன்னவுடன், சடாயு நிலைதவறினவன்போல் ஏக்கங்கொண்டான்; பின், உறங்கினவன் போல உணர்வுநீங்கி மூச்சற்று விழுந்தான்.

கு :—வாய்மையின் உயர்வு தோன்ற, 'மறக்கமுற்ருத தன் வாய்மை' என்ருன். முற்ருமை - இயலாமை. 'காத்து உற்ருன்' என்க. தான் மேற்கொண்ட வாய்மையறம் என்பான், 'தன் வாய்மை' என்ருன்; 'நெறி திறம்பாத் தன் மெய்யை நிற்பதாக்கி யிறந்தான்' (2457) என்புழியும் 'தன்மெய்' என்றே கூறியுள்ளமை காணலாம். துறக்கம், புண்ணியம் புரிந்தோர் புகுதற்குரிய மேலுலகம். இறக்கமுறுதல் மேனிலையில் இருந்தோர் அந்நிலை தவறி இழிந்தநிலை எய்துதல். தயரதனுகிய துணைவனைப் பெற்றிருந்தமை உயர்நிலையாதலும், அவனையிழந்தமை இழிநிலை யாதலும் காண்க. ஏக்கம் - மனமுளைதல். நண்பனுடைய மரணத்தைக் கேட்டவுடன் மனம் வருந்துதலும், அவ்வருத்தம் வளர வளர உணர்விழந்து மூச்சறுதலும் இயல்பு நிகழ்ச்சிகளாதல் காணலாம். 'உறக்கமுற்ருன் என உணர்வு நீங்கினன்' என்றமையால் மூச்சற்று விழுந்தமை பெறலாம். இலக்குவன் தயரதன்பால் சினமாருதவன் ஆதலின், இராமனே தயரதன் துறக்கமுற்றதைக் கூறினன். (19)

2800. தழுவின ரெடுத்தனர் தடக்கை யான்முகங்
கழுவின ரிருவருங் கண்ணி னீரினல்
வழுவிய வின்னுயிர் வந்த மன்னனு
மழிவுறு நெஞ்சின னரற்றி னனரோ.

தழுவினர், எடுத்தனர், தடக்கையால்; முகம்
கழுவினர் இருவரும், கண்ணின் நீரினல்;
வழுவிய இன் உயிர் வந்த மன்னனும்,
அழிவுறு நெஞ்சினன், அரற்றினன் அரோ.

பொ:—இராம இலக்குவர் இருவரும், தம் பெரிய கைகளால், (மூச்சற்று விழுந்த சடாயுவைத்) தழுவி எடுத்துத் தம் கண்ணீரால் அவன் முகத்தைக் கழுவினர்கள்; (அம்முகமனல்) நீங்கின தன் இனிய உயிர் வரப்பெற்ற கழுகின் வேந்தனகிய சடாயுவும், அழி கின்ற மனத்தையுடையனய்ப் பல கூறிப் புலம்பலானன்.

கு:—மூச்சற்று விழுந்தவர்க்கு முகத்தில் நீர் தெளித்துக் கழுவி மயக்கம் தெளிவுக்கு முறை இங்குப் புலப்படுத்தியவாறு. விழுந்த சடாயுவைத் தழுவி எடுத்தமையாலும், அவன் நிலைமை கண்டு ஆற்ருது அழுத அவர்கள் கண்ணீர் அச்சடாயுவின் முகத்தில் பட்ட மையாலும் அவன் மயக்கம் தெளிந்து எழுந்தான் என்க. துன் பத்தால் மயங்கி விழுந்த நிலையை நினைந்து 'வழுவிய இன்னுயிர்' என்ருர். வழுவுதல், இங்கு உயிர் உடம்பை விட்டு நீங்கியது போன்று உயிர்ப்படங்கியிருத்தல். கழுகின் வேந்தனகலின் மன்னன் எனப்பட்டான். நெஞ்சழிதல் - மனங்கலங்குதல். அரற்று தலாவது, பல கூறிப் புலம்புதல். தழுவினர், எடுத்தனர், முற்றெச் சங்கள். தழுவி எடுத்துக் கழுவினர் என்று இயையும். சடாயுவின் முகத்தைக் கழுவுமளவு கண்ணீர் அவர்கள் கண்களிலிருந்து வந்தது என இராம இலக்குவரின் அன்பு மிகுதியைப் புலப்படுத்தியவாறு. மேல் சடாயு, இராம இலக்குவர் தன் துணைவன் புதல்வர்கள் என்று அறிந்தவுடன், அவர்களைத் தழுவுகின்ற காதலுடையனனன் ஆதலின், இங்கு இராம இலக்குவர் தாமே சென்று தடக்கைகளால் தழுவும் பேற்றை அவன் பெற்ருன். அரோ, அசை. (20)

## சடாயு அரற்றல் 2801–2804

2801. பரவலருங் கொடைக்குநின்றன் பனிக்குடைக்கும்
☆ பொறைக்குநெடும் பண்புதோற்ற
கரவலருங் கற்பகமு முடுபதியுங்
கடலிடமுங் களித்துவாழப்
புரவலர்தம் புரவலனே பொய்ப்பகையே
மெய்க்கணியே புகழின்வாழ்வே
யிரவலரு நல்லறமும் யானுமினி
யென்படநீத் தேகினயே.

பரவல் அருங் கொடைக்கும் நின்தன் பனிக்குடைக்கும்
பொறைக்கும் நெடும் பண்பு தோற்ற
கரவல் அருங் கற்பகமும், உடுபதியும்,
கடல் இடமும், களித்து வாழப்
புரவலர்தம் புரவலனே ! பொய்ப்பகையே !
மெய்க்கு அணியே ! புகழின் வாழ்வே !
இரவலரும், நல் அறமும், யானும் இனி
என்பட நீத்து ஏகினையே.

பொ :—அரசர்க்கு அரசனே ! பொய்க்குப் பகையானவனே ! மெய்ம்மைக்கு அணியாக விளங்கியவனே ! புகழ்க்கு வாழ்விடமானவனே ! புலவர்களால் புகழ்தற்கரிய நின் வள்ளல் தன்மைக்கும், நின் குளிர்ந்த குடைக்கும், நின் பொறுமைக்கும், சிறந்த தம் பண்புகள் தோல்வியுற்றிருந்த, இரப்போர்க்குக் கரவாது ஈயும் கற்பகத் தருவும், விண்மீன்களுக்குத் தலைவனாகிய சந்திரனும், கடல் சூழ்ந்த பூமியும், களிப்புற்று வாழுமாறும், இரப்போரும், நல்ல அறமும், யானும் இனிப் பெருந்துன்பத்தையடையுமாறும் இவ்வுலகை நீத்துச் சென்றாயோ ?

கு :—தன்பால் வந்து கேட்டோர்க்குக் கேட்டவற்றைக் கொடுக்கும் கற்பகத்தினும், இரவலர் கேளாமுன் கொடுக்கும் தயரதன் கொடை சிறந்ததாயிற்று. தேய்தலும் வளர்தலும் உற்றுக் களங்கமும் பெற்றுப் பகலில் ஒளியற்று இரவில் மட்டும் ஒளிதரும் வெண்மதியினும், தேய்வும் வளர்ச்சியுமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாய்க் களங்கமின்றி இருபோழ்தினும் விளக்கம் பெற்று உயிர்களைக் காக்கின்ற அவன் வெண்கொற்றக் குடை சிறந்ததாயிற்று. அகழ்வாரைத் தாங்கும் நிலத்தினும் தன்னை இகழ்வாரைப் பொறுப்பதோடன்றி அந்நிலத்தையும் தயரதன் தாங்கி அரசு புரிதலால் அவன் பொறுமை சிறந்ததாயிற்று. "தயரதனும் பொறையோடுந் தொடர் மனத்தான்" (744) என முன்னும் அவன் பொறுமை சிறப்பிக்கப் பெற்றிருத்தல் காணலாம். இவ்வாற்றால், கற்பகமும், வெண்டிங்களும், நிலமும், அவன் கொடைக்கும் குடைக்கும் பொறைக்கும் தோல்வியுற்றிருந்ததாகவும், தயரதன் மாண்டபின் அவை களித்து வாழ்வதாகவும் கற்பனை செய்தவாறு; இருமடி நிரனிறைப் பொருள்கோள். அம்மூன்றும் களித்து வாழ்வுபெறும்போது, அவற்றிற்கு மாறாகத் தயரதன் கொடையால் வாழ்ந்த இரவலரும், அவன் குடையால் நல்வாழ்வு பெற்றிருந்த அறமும், அவன் பொறையால் நண்பனாக வாழ்ந்த சடாயுவும் தாழ்வுற்று வருந்த நேர்ந்தது என்பது கருத்து. 'வாழ, என்பட ஏகினையே' என்பது வினைச்செவ்வெண். வாழவும் படவும்

ஏகினுயே என விரித்துரைக்க. என்பட என்றது, பெரிய துன்பத்தை யடைய என்னும் கருத்தினது. 'எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண் டாம்' (குறள்-110) என்புழி, 'எந்நன்றி' என்பதற்குப் பரிமேலழகர், 'பெரிய அறங்கள்' எனப் பொருள் கூறியிருத்தல் ஈண்டு நினைவு கூர்க. 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்பராகலின் தயரதன் பொறையால் சடாயு நண்பு பூண்டதாகக் கூறியது பொருத்தமாதல் காணலாம். அரசர்க்கு அரசனுய் இருந்தும் பொய்க்குப் பகையாய் மெய்ம்மைக்கணியாய் விளங்கியும் ஈட்டிய புகழுடம்பு உளதாகும் சாக்காடு பெற்ருன் தயரதன் என்பான், புரவலர்தம் புரவலனே! பொய்ப்பகையே! மெய்க்கணியே! என்று முன் விளித்து இறுதியில் 'புகழின் வாழ்வே' என்று விளித்தான். "பொய்யாமையன்ன புகழில்லை' (குறள்-296) என்பது ஈண்டைக்கு நினைக்க. (21)

2802. அலங்கார மெனவுலகுக் கமுதளிக்குந்
தனிக்குடையா யாழி சூழ்ந்த
நிலங்காவ லதுகிடக்க நிலையாத
நிலையுடையே னேய நெஞ்சி
னலங்காண நடந்தனையோ நாயகனே
தீவினையே னண்பி னின்றும்
விலங்கானே னுகலினுல் விலங்கினே
னின்னுமுயிர் விட்டி லேனுல்.

அலங்காரம் என உலகுக்கு அமுது அளிக்கும்
தனிக்குடையாய்! ஆழி சூழ்ந்த
நிலம் காவல் அது கிடக்க, நிலையாத
நிலை உடையேன் நேய நெஞ்சின்
நலம் காண நடந்தனையோ? நாயகனே!
தீவினையேன், நண்பின் நின்றும்
விலங்கு ஆனேன் ஆகலினுல், விலங்கினேன்;
இன்னும் உயிர் விட்டிலேனுல்.

பொ :—நாயகனே! அலங்காரப் பொருள் என்னுமாறு தோன்றி உலகத்துயிர்கட்கு அமுதை அளிக்கின்ற ஒப்பற்ற வெண்கொற்றக் குடையையுடையவனே! நிலைபேறில்லாத இயல்புடைய என் அன்பு மனத்தின் நலத்தைக் காணவேண்டும் என்று கருதிக் கடல் சூழ்ந்த நிலத்தைக் காக்கும் தொழிலிருக்கவும் (அதை விடுத்து) சென்ருயோ? தீவினையையுடைய யான், விலங்கு ஆதலால் நட்புத்

தன்மையினின்றும் விலகிவிட்டேன்; (நின் இறப்பையறிந்தும்) இன்னும் உயிர் விட்டிலேன்.

கு :—'அலங்காரம் எனத் தோன்றி' என ஒரு சொல் வருவிக்க. பொதுவகையால் அலங்காரமாகக் காணப்பட்டாலும் வெண்குடை உலகுயிர்கட்கு அமுதளிப்பதுபோல் இன்பம் தந்து காக்கின்றது என்க. "கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை, வெயின் மறைக் கொண்டன்ரே வன்றே, வருந்திய குடிமறைப்பதுவே" (புறநா-35) என்றது காணலாம். பிணி மூப்புக்களால் வருந்திய வருத்தம் தீர்க்கும் அமுதுபோலக் குடையும் வருந்திய குடிகளின் வாட்டம் தவிர்ப்பது ஆதலின், 'அமுதளிக்கும் தனிக்குடை' எனப் பட்டது. நேய நெஞ்சின் நலங்காண, நிலங்காவலது கிடக்க நடந்தனேயோ என மாற்றி இயைக்க. 'உயிரெலாந் தன்னுயி ரொப்ப ஓம்புகின்றவனுதலின் நிலங்காவல் கிடக்க நீ நடவாய்; என் நேய நெஞ்சம் எவ்வளவு உறுதியுடையது என்பதைக் காண வேண்டும் என்ற வேட்கையால் நிலங்காவலது கிடக்க நடந்தாய் போலும்' எனத் தற்குறிப்பேற்றமாகத் தயரதன் பிரிந்தமைக்குக் காரணம் கற்பித்தவாறு. 'அன்புடையார்க்குள்ள ஆறு குணங்களில் 'சாவிற் சாதல்' தலை சிறந்த பண்பாதலின் அப்பண்பு சடாயுவின் பால் உண்டோ என்று காண்பதற்காகவே நீ உடல் நீத்தாய்; ஆயின், யான் விலங்கு ஆதலின் அந்நட்பிற்குரிய குணத்தில் நின்றும் விலகிச் சாவாதிருக்கின்றேன்' என்று சடாயு அரற்றினன். விலங்கு என்பது, 'நன்னெறியை விட்டு விலகியது' என்னும் பொருளுடையது; அது பறவையாகிய சடாயுவுக்கும் ஏற்றலின் 'விலங்கானேன்' என்று அவன் கூறிக்கொண்டது பொருத்தமேயாம்; "நன்று தீதென்றியறெரி நல்லறி, வின்றிவாழ்வதன்ரே விலங்கு" (கிட்கிந்தா–வாலி வதை-111) என்புழி விலங்கு என்பதற்கு இலக் கணம் கூறப்படல் காணலாம். விலங்குதல் - விலகுதல்; விட்டு நீங்குதல். நண்பினின்றும் விலங்கினேன் என்றது, சாவிற் சாத லாகிய நட்புத்தன்மையினின்றும் விலகி உயிரோடிருத்தலை. உடனுயிர் துறக்கவேண்டிய யான், நண்பனிறந்து பல்லாண்டு கழிந்ததை யறிந்தபின்னும் என்பான், 'இன்னும் உயிர் விட்டி லேன்' என்ருன். (22)

2803. தயிருடைக்கு மத்தென்ன வுலகைநலி
சம்பரனைத் தடிந்த வந்நா
ளயிர்கிடக்குங் கடல்வலயத் தவரறிய
நீயுடனு னுவி யென்று

செயிர்கிடத்தல் செய்யாத திருமனத்தாய்
செப்பினுய் திறம்பா நின்சொ
லுயிர்கிடக்க வுடலைவிசும் பேற்றினு
ருணர்விறந்த கூற்றி னுரே.

தயிர் உடைக்கும் மத்து என்ன உலகை நலி
சம்பரனைத் தடிந்த அந்நாள்
அயிர் கிடக்கும் கடல் வலயத்தவர் அறிய,
'நீ உடல் நான் ஆவி'—என்று
செயிர் கிடத்தல் செய்யாத திருமனத்தாய்!
செப்பினுய்; திறம்பா, நின்சொல்;
உயிர் கிடக்க, உடலை விசும்பு ஏற்றினுர்,
உணர்வு இறந்த கூற்றினுரே.

பொ :—குற்றம் தங்காத தூய்மையான சிறந்த மனத்தையுடைய வனே! தயிரை உடைத்துக் கலக்குகின்ற மத்தைப்போல உலகத் தவரைத் தாக்கி வருத்துகின்ற சம்பரனைக் கொன்ற அக்காலத்தில், நுண்மணல் மிக்கிருக்கின்ற கடல் சூழ்ந்த நிலத்திலுள்ளார் எல்லாம் அறியுமாறு நின்னை உடம்பென்றும் என்னை உயிர் என்றும் சொல்லி நட்புப்பூண்டாய்; நின் சொற்கள் மாறுபடுவன அல்ல; உணர்ச்சி யற்ற கூற்றுவனுர் உயிராகிய யான் கிடக்க, உடம்பாகிய நின்னை விண்ணுலகிற்கு ஏற்றிவிட்டார்.

கு :—தயரதன் சம்பரனைக் கொன்ற காலத்தில் சடாயுவும் அப்போரில் உதவி செய்தான் என்பதும் அவ்வுதவி காரணமாகவே தயரதன் சடாயுவை நோக்கி நீ உயிர் யான் உடல் என்று சொல்லி நட்புப் பூண்டான் என்பதும் உய்த்துணரலாம். தயரதன் கூறியதைச் சடாயு தன் கூற்ருக்கிக் கூறுகின்ருனுதலின் 'நீயுடல் நானுவி' என்று மாற்றிக் கூறினுன். உலகத்திற்குத் தயிரும் சம்பரனுக்கு மத்தும் உவமை. மத்தினுல் தயிர் உடைந்து கலங்குவதுபோலச் சம்பரனுல் உலகத்தவர் மனமுடைந்து கலங்கினுர்கள் என்பது கருத்து. "மத்துறு தண்டயிரிற் புலன் தீக்கதுவக் கலங்கி" (திருவாசகம்-நீத்தல் விண்ணப்பம்-30) என்ற மணிவாசகமும் காண்க. உலகம், ஆகுபெயராய் உயிர்களை உணர்த்தியது. கடல் வலயம் என்றது, கடலால் சூழப்பட்ட நிலவட்டத்தை. 'தான் என்னை யாட்கொண்ட தெல்லாருந் தாமறிவார்' (திருவாசகம்-10-13) என்று மணிவாசகர் கூறியது போலத் தயரதன் நட்புப்பூண்டு சொன்ன சொல்லுக்கு உலகமே சான்று என்பான் 'கடல் வலயத்தவர் அறிய' என்ருன். பறவையாகிய தன்னேடு நட்புப் பூண்ட மக்களுள்

உயர்ந்தோனாகிய தயரதன் உள்ளத்தின் பெருமை தோன்ற, 'செயிர் கிடத்தல் செய்யாத திருமனத்தாய்' என்று விளித்தான், 'உடல் கிடக்க உயிரை விசும்பேற்ற வேண்டிய கூற்றுவன், அந் நிலையை மாற்றி உயிராகிய யான் கிடக்க உடலாகிய நின்னை விசும் பேற்றினான் உணர்வு கெட்டவன்' என இழித்துக் கூறியவாறு. கூற்றுவனார் என்றதில் உயர்த்தற்கண் வந்த ஆர் விகுதி இங்கு இழித்தற் குறிப்புணர்த்தியது; தாம் வந்தார் தொண்டனார் என்புழிப்போல. கூற்றுவனை இவ்வாறு இழித்துக் கூறுவதுண்டு. "நனிபேதையே நயனில் கூற்றம் விரகின்மையின் வித்தட் டுண்டனை" (புறநா-227) என ஆடுதுறை மாசாத்தனார் கூறியதும் காண்க. (23)

**2804.** எழுவதோ ரிசைபெருக வப்பொழுதே
யொப்பரிய வெரியுந் தீயின்
விழுவதே நிற்கமட மெல்லியலார்
தம்மைப்போ னிலத்தின் மேல்வீழ்ந்
தழுவதே யானென்னு வறிவுற்று
னெனவெழுந்தாங் கவரை நோக்கி
முழுவதே முலகுடையான் மைந்தன்மீர்
கேண்மினென முறையிற் சொல்வான்.

'எழுவது ஓர் இசை பெருக, இப்பொழுதே,
ஒப்பு அரிய எரியும் தீயின்
விழுவதே நிற்க, மட மெல்லியலார்
தம்மைப்போல் நிலத்தின் மேல் வீழ்ந்து
அழுவதே யான்?' என்னு, அறிவுற்றுன்
என எழுந்து, ஆங்கு அவரை நோக்கி,
'முழுவது ஏழ் உலகு உடையான் மைந்தன்மீர்!
கேண்மின்' என முறையில் சொல்வான்.

பொ :—'உண்டாகும் புகழ் பெருகுமாறு. நண்பனுடைய மரணத்தைக் கேட்ட இப்பொழுதே, ஒப்பற்றதாக எரிகின்ற நெருப்பில் விழுவதை விடுத்துப் பேதைமையுடைய பெண்டிரைப்போலத் தரையின்மேல் வீழ்ந்து யான் அழுவதோ?' என்று கூறிக் கொண்டு, தெளிவு பெற்றுவிட்டான் என்று கருதுமாறு எழுந்து, அங்குள்ள இராம இலக்குவரைப் பார்த்து, 'ஏழுலக முழுமையும் தனக்குரிய பொருளாக உடைய தயரத சக்கரவர்த்தியின் மைந்தர்காள்! கேளுங்கள்' என்று முறையாகச் சொல்லலானுன்.

கு:—நண்பனுடைய இறப்பைக் கேட்டு இறத்தல் புகழுடம்பு உளதாதற்குரிய சாக்காடு ஆதலின் 'எழுவதோர் இசைபெருக...... தீயின் விழுவது' கூறினன். எழுவதோரிசை - உண்டாகும் ஒப்பற்ற புகழ். "நத்தம் போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும் வித்தகர்க் கல்லால் அரிது." (235) என்ற குறளுக்குப் பரிமேலழகர் உரைத்த உரை யீண்டு நோக்குதற்குரியது. அன்புடையார் இறப்பின் மகளிர் தரையில் விழுந்தழுவது இயல்பு. "கையால் நிலந்தடவிக் கண்ணீர் மெழுகுவார்" (1799) என முன் அவர் இயற்கை கூறப்பட்டிருத்தல் காணலாம். 'பசைந்தாரிற் றீர்தலிற் றீப்புகுதல் நன்று' (நான்மணிக்கடிகை ·13) ஆகலின் சடாயு நண்பனைப் பிரிந்து உயிர் வாழ்வதைவிடத் தீயில் விழுவதை நன்றென நினைந்தான். ஏழுலகுடையான் என்றது தயரதனை. "செம்மாண் டனிக்கோ லுலகேழினும் செல்ல நின்றான்" (168) என முன் கூறியதும் காண்க. (24)

## உயிர்களின் தோற்ற வரலாறு 2805–2809

**2805.** தக்கன்மனை வயிற்றுதித்தா ரைம்பதின்மர்
தடங்கொங்கைத் தையலாருட்
டொக்கபதின் மூவரையக் காசிபனும்
புணர்ந்தனனத் தோகை மாருண்
மிக்கவதி திப்பெயராண் முப்பத்து
முக்கோடி விண்ணோ ரீந்தாண்
மைக்கருங்கட் டிதியென்பா ளதினிரட்டி
யசுரர்தமை வயிறு வாய்த்தாள்.

தக்கன் மனை வயிற்று உதித்தார் ஐம்பதின்மர்
தடங் கொங்கைத் தையலாருள்
தொக்க பதின்மூவரை அக் காசிபனும்
புணர்ந்தனன்; அத் தோகைமாருள்
மிக்க அதிதிப் பெயராள், முப்பத்து
முக்கோடி விண்ணோர் ஈந்தாள்;
மைக்கருங்கண் திதி என்பாள், அதின் இரட்டி
அசுரர்தமை வயிறுவாய்த்தாள்.

பொ:—தக்கனுக்கு மனைவியின் வயிற்றில் உதித்தவர்களாகிய ஐம்பதின்மர் என்ற எண்ணிக்கையுடைய பெரிய கொங்கைகளையுடைய பெண்டிருள், ஒற்றுமையாய்க் கூடியிருந்த பதின்மூவரை

அந்தக் காசிபனும் மணந்தனன்; அப்பெண்டிருள் சிறந்தாளாகிய அதிதி என்னும் பெயருடையவள், முப்பத்து மூன்றுகோடி தேவர்களைப் பெற்றாள்; மைதீட்டிய கரிய கண்களையுடைய திதி என்ற பெயருடையவள் அறுபத்தாறு கோடி அசுரரைப் பெற்றாள்.

கு :—அக்காசிபன் என்புழி அகரம் உலகறிசுட்டு. ஓரினமாய் ஒற்றுமையாய்ச் சேர்ந்து பழகிய பதின்மூவர் என்பார், 'தொக்க பதின்மூவர்' என்றார். (25)

இச்செய்யுள் முதல் ஐந்து செய்யுட்கள் இடைச்செருகலே என்று கருத இடமுண்டு; ஆயினும், வான்மீகத்தில் இவ்வரலாறு காணப்படுதலின் இவ்வைந்து செய்யுளையும் சேர்த்து உரை வரையலாயிற்று.

**2806.** தானவரே முதலோரைத் தனுப்பயந்தாண்
மதியென்பாண் மனிதர் தம்மூ
டானவரு ணங்களவ யவத்தடைவே
பயந்தனளால் சுரபி யென்பா
டேனுவுடன் கந்தருவ மற்றுள்ள
பிறபயந்தா டெரிக்குங் காலை
மானமுடைக் குரோதவசை கழுதைமரை
யொட்டைபிற வயிறு வாய்த்தாள்.

தானவரே முதலோரைத் தனுப் பயந்தாள்;
மதி என்பாள், மனிதர்தம் ஊடு
ஆன வருணங்கள் அவயவத்து அடைவே
பயந்தனளால்; சுரபி என்பாள்,
தேனுவுடன் கந்தருவம் மற்றுள்ள
பிற பயந்தாள்; தெரிக்கும் காலை
மானமுடைக் குரோதவசை, கழுதை, மரை,
ஒட்டை பிற வயிறு வாய்த்தாள்.

பொ :—தனு என்பவள், தானவர் முதலியவரைப் பெற்றாள் ; மதி என்பவள், மனிதர் தம்மிடையில் உண்டான நால் வருணங்களின் முறைப்படி, அம்மனிதர்களை முகம், தோள், தொடை,பாதம் என்ற அவயவங்களில் முறையே பெற்றாள் ; சுரபி என்பவள், பசுக்களோடு கந்தருவரையும் மற்றுள்ள இயங்குவ நிற்பவான பிற யாவற்றையும் பெற்றாள் ; தெரியச் சொல்லுமிடத்து மானமுடைய குரோதவசை

என்பவள், கழுதை, மான், ஒட்டைகளையும் பிற விலங்குகளையும் பெற்றாள்.

கு :—வருணங்களாவன : அந்தணர், அரசர், வணிகர், சூத்திரர் என்பன. (26)

2807. மழைபுரையுங் குழல்விநதை வானிடிமி
னருணனுடன் வயிநதேயன்
றழைபுரையுஞ் சிறைக்கூகை பாறுமுதற்
பெரும்பறவை தம்மை யீன்று
ளிழைபுரையுந் தாம்பிரையூர்க் குருவிசிவல்
காடையுடன் பிறவு மீன்றாள்
கழையெனுமக் கொடிபயந்தாள் கொடியுடனே
செடிமுதலாக் கண்ட வெல்லாம்.

மழை புரையும் குழல் விநதை வான், இடி, மின்,
அருணனுடன் வயிநதேயன்,
தழை புரையும் சிறைக் கூகை, பாறு முதல்
பெரும் பறவை தம்மை ஈன்றாள்;
இழை புரையும் தாம்பிரை ஊர்க்குருவி, சிவல்,
காடையுடன் பிறவும் ஈன்றாள்;
கழை எனும் அக் கொடி பயந்தாள் கொடி உடனே
செடி முதலாக் கண்ட எல்லாம்.

பொ :—மேகத்தை ஒத்த கூந்தலையுடைய விநதை என்பவள், மேகம், இடி, மின், அருணன், கருடன், தழையை யொத்த சிறகினை யுடைய கோட்டான், பருந்து முதலிய பெரிய பறவைகளைப் பெற்றாள் ; மகளிர்க்கு அணியனைய தாம்பிரை என்பவள், ஊர்க் குருவி, கௌதாரி, காடை முதலிய சிறிய பறவைகளைப் பெற்றாள். கழை என்ற பெயருடைய அக் கொடி போன்ற நங்கை, கொடி செடி முதலியவாகக் கண்ட தாவரங்களையெல்லாம் பெற்றாள்.

கு :—பெரும்பறவை என மேல் வந்தமையால் சிறு பறவை என்பது வருவிக்கப்பட்டது. (27)

2808. வெருட்டியெழுங் கணபணப்பை வியாளமெலாங்
கத்துருவா மின்னு மீன்ருண்
மருட்டியெழு மொருதலைய புயங்கமெலாஞ்
சுதையென்னு மாது தந்தா
ளருட்டையெனு மவள்பயந்தா ளோந்தியுடும்
பணில்கண்முத லாய வெல்லாந்
தெருட்டிடுமா திளையீந்தாள் செலசரமா
கியபலவுந் தெரிக்குங் காலை.

வெருட்டி எழும் கண பணப்பை வியாளம் எலாம்
கத்துருவாம் மின்னும் ஈன்ருள்;
மருட்டி எழும் ஒரு தலைய புயங்கம் எலாம்
சுதை என்னும் மாது தந்தாள் ;
அருட்டை எனும் அவள் பயந்தாள் ஓந்தி உடும்பு
அணில்கள் முதலாய எல்லாம்;
தெருட்டிடும் மாது இளை ஈந்தாள் செலசரம் ஆகிய
பலவும் தெரிக்கும் காலை.

பொ :—தெரிவிக்குமிடத்து, மக்களை வெருளச்செய்து எழுகின்ற கூட்டமான படப்பையையுடைய பாம்புகளையெல்லாம் கத்துரு என்கின்ற பெண் பெற்ருள்; பிறரை மருளச்செய்துகொண்டு எழுகின்ற ஒருதலைப் பாம்புகளையெல்லாம் சுதை என்கின்ற மாது பெற்ருள்; அருட்டை என்கின்றவள், ஓந்தி உடும்பு அணில்கள் முதலியவற்றைப் பெற்ருள்; எல்லோரையும் தெருளச் செய்யும் தெளிவுடைய இளை என்ற மாது நீர்வாழ்வனவாகிய பல உயிர்களையும் பெற்ருள்.

கு :—பல தலைப்பாம்பு என்பான், கணபணப்பை வியாளமெலாம் என்ருன். கணம் - கூட்டம், பணம் - படம், வியாளம் - பாம்பு. (28)

2809. அதிதிதிதி தனுவருட்டை சுதைகழையே
சுரபியணி விநதை யான்ற
மதியிளைகத் துருவுடனே குரோதவசை
தாம்பிரையா மடந லார்கள்

விதிமுறையே யிவையனைத்தும் பயந்தனர்கள்
விநதைசுத னருணன் மென்றோட்
புதுமதிசேர் நுதலரம்பை தனைப்புணர
வுதித்தனம்யாம் புவனி மீதே.

அதிதி, திதி, தனு, அருட்டை, சுதை, கழையே,
சுரபி, அணி விநதை, ஆன்ற
மதி, இளை, கத்துருவுடனே குரோதவசை,
தாம்பிரை, ஆம் மடநலார்கள்,
விதிமுறையே இவை அனைத்தும் பயந்தனர்கள்;
விநதை சுதன் அருணன் மென் தோள்
புது மதி சேர் நுதல் அரம்பைதனைப் புணர
உதித்தனம் யாம் புவனி மீதே.

பொ:—அதிதி, திதி, தனு, அருட்டை, சுதை, கழை, சுரபி, அழகிய விநதை, அமைதியுடைய மதி, இளை, கத்துரு, குரோத வசை, தாம்பிரை ஆகிய இளைய பெண்டிர்கள், விதிமுறைப்படி இவை எல்லாவற்றையும் பெற்றார்கள்; விநதையின் மகனாகிய அருணன், மெல்லிய தோளையும் பிறைமதி போன்ற நெற்றியையு முடைய அரம்பையைப்புணர யாம் பூமிமீது பிறந்தோம்.

கு:—முன் வகுத்துக் கூறியவற்றை இங்குத் தொகுத்துக் கூறியவாறு. (29)

சடாயு, தன் வரலாறு கூறியது

2810. அருணன்றன் புதல்வனியா னவன்படரு
முலகெல்லாம் படர்வே னாழி
யிருண்மொய்ம்பு கெடத்துரந்த தயரதற்கின்
னுயிர்த்துணைவ னிமையோ ரோடும்
வருணங்கள் வகுத்திட்ட காலத்தே
வந்துதித்தேன் கழுகின் மன்னன்
தருணங்கொள் பேரொளியீர் சம்பாதி
பின்னர்வரு சடாயு வென்றான்.

“அருணன்தன் புதல்வன் யான்; அவன் படரும்
உலகு எல்லாம் படர்வேன்; ஆழி
இருள் மொய்ம்பு கெடத் துரந்த தயரதற்கு இன்
உயிர்த் துணைவன்; இமையோரோடும்

வருணங்கள் வகுத்திட்ட காலத்தே
வந்து உதித்தேன்; கழுகின் மன்னன்;
தருணங்கொள் பேர் ஒளியீர்! சம்பாதி
பின்னர் வரு சடாயு'' என்றான்.

பொ :—'இளமையும் பேரொளியும் உடையீர்! யான் அருண னுடைய மகன்; அவன் செல்கின்ற உலகங்களிலெல்லாம் செல்லும் தன்மையுடையேன்; ஆணைச் சக்கரத்தை இருளின் வலிமை கெடு மாறு செலுத்திய தயரதனுக்கு இனிய உயிர் போன்ற நண்பன்; தேவர்களோடு மற்றை வருணங்களையும் படைத்து வகை செய்த காலத்தில் இவ்வுலகில் வந்து பிறந்தேன்; கழுகுகளுக்கு அரசன்; சம்பாதிக்குப் பின் பிறந்த 'சடாயு' என்னும் பெயருடையேன்' என்று கூறினான்.

கு :—ஆணையை ஆழியாக்கியதற்கேற்ப அதற்கு ஒளியுடைமை யும் ஏற்றி இருளின் வலிமையைக் கெடுத்ததாகவும் கூறப் பெற்றது. வருணங்கள் - சாதிகள். அவை வகுத்த காலத்தே உதித்தேன் என்றமையால் சடாயுவின் முதுமை தெளியலாம். 'கழுகின் மன்னன் சம்பாதி' என்று இயைத்து உரைப்பினும் ஆம். தருணம் - இளமை. பேரொளி யென்றது அவர்களின் மேனி ஒளியை. சடாயு, அருணனின்மகன், சம்பாதியின் தம்பி, தயர தனின் நண்பன், கழுகின் மன்னன்; வருணங்கள் வகுத்த காலத்தில் பிறந்தவன் என அவன் உறவும் நட்பும் பதவியும் முதுமையும் ஆற்றலும் உணர்த்தியவாறு. (30)

### இராம இலக்குவர் மகிழ்ச்சி

2811. ஆண்டவனீ துரைசெய்ய வஞ்சலித்த
மலர்க்கையா ரன்பி னோடு
மூண்டபெருந் துன்பத்தான் முறைமுறையி
னிறைமலர்க்கண் மொய்த்த நீரார்
பூண்டபெரும் புகழ்நிறுவித் தம்பொருட்டான்
மேலுலகம் புக்க தாதை
மீண்டனன்வந் தானவனைக் கண்டனரே
யொத்தனரவ் விலங்கற் றோளார்.

ஆண்டு அவன் ஈது உரை செய்ய, அஞ்சலித்த
மலர்க் கையார், அன்பினேடும்
மூண்ட பெருந் துன்பத்தால் முறைமுறையின்
நிறை மலர்க் கண் மொய்த்த நீரார்,
பூண்ட பெரும் புகழ் நிறுவித் தம்பொருட்டால்
மேல் உலகம் புக்க தாதை
மீண்டனன் வந்தான் அவனைக் கண்டனரே
ஒத்தனர், அவ் விலங்கல் தோளார்.

பொ :—அங்குச் சடாயு இதைச் சொல்ல, அந்த மலைபோன்ற தோள்களையுடைய இராம இலக்குவர்கள், கூப்பிய மலர்போன்ற கையினராய், அன்பினேடு பெருகிய பெருந்துன்பத்தால் முறை முறையே அழகு நிறைந்த மலர்போன்ற கண்களில் மிகுதியாகத் ததும்பிய கண்ணீரையுடையராய், அணியாக மேற்கொண்டிருந்த பெரிய புகழை இவ்வுலகில் நிறுத்திவிட்டுத் தம் பொருட்டாகத் துறக்கவுலகம் புகுந்த தந்தை தயரதன், மீண்டு வந்தாைக, அவனைக் கண்டவர்களைப் போன்றனர்.

கு :—விலங்கல் தோளார் மலர்க்கையராய் மொய்த்த நீரராய்க் கண்டனரே ஒத்தனர் என முற்றெச்சமாக்கி இயைக்க. தந்தையின் நண்பனைக் கண்டமையால் அன்புக் கண்ணீரும், அவன் தம் தந்தையின் பொருட்டுக் கலங்குவதைக் கண்ட அளவில் மூண்ட துன்பத்தால் அழுகைக் கண்ணீரும் இராம இலக்குவர் கண்களில் மாறி மாறிப் பெருகின என்பார், ‘அன்பினேடு மூண்ட பெருந்துன் பத்தால் முறைமுறையின் நிறைமலர்க்கண் மொய்த்த நீரார்’ என்ருர். அழகு நிறைந்த தாமரை மலரை, ‘நிறைமலர்’ என்ருர். மொய்த்தல், மிகுதியாகப் பெருகுதலை யுணர்த்திற்று. புகழை அணி யாகக் கொண்டமை தோன்றப் ‘பூண்ட’ என அதற்கேற்ற வினை கொடுத்தார். இராம இலக்குவர் பிரிவால் தயரதன் இறந்தாைகலின் ‘தம் பொருட்டால் மேலுலகம் புக்கதாதை’ என்ருர். வாய்மை காக்க மன்னுயிர் துறந்தமையால் தயரதன் புகழ் தரணியில் நிலைபெற்றது என்பார், ‘பெரும்புகழ் நிறுவி’ என்ருர். தம் தந்தையின் உயிர்த் துணைவனைக் கண்டது, இராம இலக்குவர்க்குத் தயரதனைக் கண்டாற் போன்று இருந்தது என்பது கருத்து. மீண்டனன் என்பதை மீண்டு எனவும், வந்தான் என்பதை வர எனவும் முற்றெச்சங் களாகத் திரிக்க. (31)

## சடாயு இறக்கத் துணிதல்

2812. மருவினிய குணத்தவரை யிருசிறகா
லுறத்தழுவி மக்கா ணீரே
யுரியகடன் வினையேற்கு முதவுவீ
ருடலிரண்டுக் குயிரொன் ருனன்
பிரியவுந்தான் பிரியாதே யினிதிருக்கு
முடற்பொறையான் பீழை பாரா
தெரியதனி னின்றேபுக் கிறவேனே
லித்துயர மறவே னென்ருன்.

மருவினிய குணத்தவரை இரு சிறகால்
உறத் தழுவி, 'மக்காள்! நீரே
உரிய கடன் வினையேற்கும் உதவுவீர்;
உடல் இரண்டுக்கு உயிர் ஒன்று ஆனன்
பிரியவும் தான் பிரியாதே இனிதிருக்கும்
உடல் பொறை யான், பீழை பாராது,
எரி அதனின் இன்றே புக்கு இறவேனேல்,
இத்துயரம் மறவேன்' என்ருன்.

பொ:—பழகுதற்கு இனிய பண்புடைய இராம இலக்குவரைச் சடாயு, தன் இரண்டு சிறகுகளாலும் பொருந்தத் தழுவிக்கொண்டு, 'என் மக்களே! தீவினையுடைய எனக்கும் இறுதியில் செய்தற்குரிய கடனை நீங்களே செய்யுங்கள்; என்னுடலும் தன்னுடலும் ஆகிய உடல் இரண்டுக்கும் உயிர் ஒன்ருக இருந்த தயரதன் இவ்வுலகை விட்டுப் பிரியவும், பிரியாமல் இனிதே இருக்கும் உடற்பாரமாக இருக்கின்ற யான், துன்பத்தைப் பாராமல் இன்றைக்கே தீயில் புகுந்து இறவாமல் இருந்தால் தயரதனைப் பிரிந்த இத்துயரத்தை மறக்கவியலாது' என்ருன்.

கு:—மருவுதல் - பழகுதல். சிறகுகளே கைகள்போல் பறவைக் குதவுவனவாதலின் அவற்றைத் தழுவுவதற்குக் கருவியாக்கினர். 'வினையேற்கும்' எனச் சடாயு தன்னைக் கூறிக்கொண்டமையால், தயரதன் தீவினையற்றவன் என்பது அவன் கருத்தாயிற்று. தீவினை அற்றவனுக்கு இறுதிக்கடன் செய்த நீரே தீவினையுடைய எனக்கும் உரியகடன் உதவுவீர் என உம்மை இழிவு சிறப்பும் இறந்தது தழீஇய எச்சமுமாய்ப் பொருள் தந்து நின்றது. தயரதன், தன்னுடலுக்கும் என்னுடலுக்கும் உயிரானன் என்று கூறிய சடாயு 'பிரியாதே யினி திருக்கும் உடற்பொறை யான்' எனத் தன்னை உடம்பாகக்

கூறிக்கொண்டான். தயரதன், சடாயுவைச் சிறப்பிக்க வேண்டித் தன்னை உடம்பாகவும் சடாயுவை உயிராகவும் கூறியதுபோலவே, சடாயுவும், தயரதனைச் சிறப்பிக்க வேண்டித் தன்னை உடம்பாகவும் அத்தயரதனை உயிராகவும் கூறினான் என்க. 'ஒருங்கிய இரண்டுடற்குயிரொன்றாயினர்' (601) என்பது இங்கு ஒப்பு நோக்கற் குரியது. பீழை - துன்பம்; எரியில் புகுங்கால் உண்டாகும் துன்பத்தை நினைந்து, 'பீழை பாராது' என்றான். 'பசைந்தாரிற்றீர் தலில் தீப்புகுதல் நன்று' (நான்மணிக்—13) என்பவாகலின் நண்பனைப் பிரியுந்துன்பத்தை மறக்கவேண்டி, எரிபுகுந்து இறக்கச் சடாயு எண்ணினான் என்க. நண்பனுடைய மக்கள் தன்மக்களே என்னும் கருத்தால் மக்காள்! என விளித்துத் தனக்கு இறுதியில் செய்தற்குரிய கடனையும் செய்யுமாறு கூறினான் சடாயு. (32)

## இராம இலக்குவரின் துன்பச் சொல் 2813–2815

**2813.** என்று ரைத்த வெருவை யரசனைத்
☆ துன்று தாரவர் நோக்கித் தொழுதுகண்
ணொன்று முத்த முறைமுறை யாயுக
நின்று மற்றின நீர்மை நிகழ்த்தினர்.

என்று உரைத்த எருவை அரசனைத்
துன்று தாரவர் நோக்கித் தொழுது, கண்
ஒன்றும் முத்தம் முறை முறையாய் உக,
நின்று மற்று இன நீர்மை நிகழ்த்தினர்.

பொ:—என்று சொன்ன கழுகின் மன்னனாகிய சடாயுவை, நெருங்கிய மலர்மாலையணிந்துள்ள இராம இலக்குவர், நோக்கி, வணங்கிக் கண்களில் பொருந்திய முத்துப்போன்ற நீர்த்துளிகள் முறைமுறையே சிந்த நின்று, இத்தன்மையான சொற்களை அன்போடு சொல்லலானார்.

கு:—எருவை - கழுகு. முத்தம் என்றது, ஆகுபெயராய் முத்துப் போன்ற நீர்த்துளிகளையுணர்த்திற்று. முறை முறையாயுகுதலாவது மேலும் மேலும் பெருகுதல். இன்ன என்பது இன எனத்தொகுத்தல் விகாரம் பெற்றது. நீர்மை - அன்பு ; தன்மையெனலுமாம். (33)

**2814.** உய்வி டத்துத வற்குரி யானுந்தன்
மெய்வி டக்கரு தாதுவிண் ணேறினு

னிவ்வி டத்தினி லெம்பெரு மாஅனெமைக்
கைவி டிற்பினே யார்களை கண்ணுளார்.

'உய்விடத்து உதவற்கு உரியானும் தன்
மெய் விடக் கருதாது விண் ஏறினன்;
இவ்விடத்தினில் எம்பெருமாஅன்! எமைக்
கைவிடில் பினே யார் களைகண் உளார்?

பொ:—துன்பத்தினின்றும் உய்ய வேண்டிய இடத்தில் உதவு தற்குரிய எம் தந்தையும் தன் சத்தியத்தை விட மனமின்றி விண்ணுலகடைந்தான்; இக்காட்டில் எம்பெருமானாகிய நீரும் எம்மைக் கைவிட்டுச் சென்றால் பின்னர் எமக்குப் பற்றுக்கோடாக இருப்பவர் வேறு யாருளர்? யாருமில்லை.

கு:—உய்விடம் என்றது, துன்பத்தில் நின்றும் பிழைக்க வேண்டிய இடத்தைக் குறித்தது. உதவற்குரியான் என்றது, தயரதனை; தந்தையாதலின் அவ்வுரிமை அவனுக்கே உண்டு. கைகேயிக்குக் கொடுத்த வாக்குத் தவறாமல் உயிர்விட்டான் என்பார், 'தன் மெய்விடக்கருதாது விண்ணேறினன்' என்றார். எம்பெருமாஅன் என விளியில் அளபெடை வந்தது. காட்டின் அருமை தோன்ற, 'இவ்விடத்தினில்' என்றார். எம் பெரிய தந்தை என்ற கருத்தால் 'எம்பெருமாஅன்' என விளித்ததாகவும் கொள்ளலாம். 'கைவிடில்' என்பது, இங்கு எம்மைக் காவாது விடுத்து இறந்தால் என்னும் பொருளது. களைகண் - பற்றுக்கோடு; துன்பம் களையும் கண்ணோட்டமுடையார் எனலும் ஆம். (34)

2815. தாயி னீங்கருந் தந்தையிற் றண்ணகர்
வாயி னீங்கி வனம்புகுந் தெய்திய
நோயு நீங்கின நுன்னினெ னெங்களை
நீயு நீங்குதி யோநெறி நீங்கலாய்.

'"தாயின், நீங்கரும் தந்தையின், தண் நகர்
வாயில் நீங்கி வனம் புகுந்து எய்திய
நோயும் நீங்கினம் நுன்னின் என்" எங்களை
நீயும் நீங்குதியோ? நெறி நீங்கலாய்!'

பொ:—நல்லநெறியினின்றும் நீங்காதவனே! நீங்குதற்கரிய தாயினிடத்திருந்தும் தந்தையிடத்திருந்தும் குளிர்ச்சிமிக்க அயோத்தி நகரின் வாயிலிடத்திருந்தும் நீங்கிக் கொடிய வனத்தில்

புகுந்து அடைந்த துன்பங்களிலிருந்தும் நின்னால் நீங்கினேம் என்று கருதுகின்ற எங்களை நீயும் நீங்கிச் செல்கின்றாயோ? செல்லுதல் வேண்டாம்.

கு:—தாயையும் தந்தையையும் அயோத்திநகர் வாயிலையும் விட்டுப் பிரியாதவராய நாங்கள் என்ற குறிப்புத் தோன்றத் தாயின் தந்தையின் நகர்வாயினீங்கி என்றார். 'நீங்கரும்' என்பது இடைநிலை விளக்காய் முன்னும் பின்னும் சென்று இயையும். அம் மூவிடமும் நீங்குதற்கரியன என்றமையால், நீங்குதற்குரிய வனம் என அவ்அடையை எதிர்மறுத்துக்கொள்க. நெருங்குதற்கரிய வனம் என்றவாறு. வனம் புகுந்தெய்திய நோயும் நின்னால் நீங்கினேம் என்னும் எங்களை என மாற்றுக. நுன் னின் என்புழி இன் ஏதுப்பொருளது; மற்றைய நீங்கற் பொருளன. நுன் என்பது திசைச்சொல் (கன்னடம்); 'நுன்பழம் பகை' (சீவக 324) என்புழி நச்சினார்க்கினியர் கூறியதும் காண்க. தந்தையின் நண்பனாகிய சடாயுவைக் கண்டதும் தாய், தந்தை யரையும் அயோத்தியையும் பிரிந்ததாலாகிய துன்பமும் கொடிய வனத்தில் புகுந்ததாலாய துன்பமும் நீங்கப் பெற்றனராய் இன்பம் எய்தினர் இராம இலக்குவர் என்பது இதனாலறியலாம். நீயும் என்புழி உம்மை, தயரதன் நீங்கினதன்றி என்ற பொருள் தருதலின் இறந்ததுதழீஇய எச்சப் பொருளது. நீங்குதியோ நீங்கலாய் என்றது முரண்தொடை. (35)

### சடாயு அமைதி கூறி, அவர் வனம்புகுந்தமைக்குக் காரணம் வினவல் 2816–2818

2816. என்ற சொல்ல ரிரந்தழி நெஞ்சினர்
நின்ற வீரரை நோக்கி நினைந்தவ
னன்ற தென்னி னயோத்தியி னையன்மீர்
சென்ற பின்னவற் சேர்குவென் யானென்றான்.

என்ற சொல்லர்; இரந்து அழி நெஞ்சினர்;
நின்ற வீரரை நோக்கி நினைந்து அவன்,
'அன்று அது என்னின், அயோத்தியின், ஐயன்மீர்!
சென்றபின் அவற் சேர்குவென் யான்' என்றான்.

பொ:—என்ற சொல்லினையுடையராய் இரந்து இரந்து உருகு கின்ற நெஞ்சினையுடையராய் நின்ற இராம இலக்குவரை நோக்கி, அவர் நிலைமையினை நினைந்து பார்த்த சடாயு, "ஐயன்மீர்! இப்

பொழுதே யான் இறப்பது உமக்கு உடம்பாடன்று எனின், (நீர்) அயோத்திக்குச் சென்றபின் அத்தயரதனைச் சேர்வேன் யான்'' என்று கூறினான்.

கு :—சொல்லராய், நெஞ்சினராய் நின்றவீரரை என முற்றெச்சமாக்கி முடிக்க. 'இரந்தழி நெஞ்சினர்' என்றது, இறக்கலாகாது என்று சடாயுவை இரந்து வேண்டி உருகுகின்ற நெஞ்சினராயதை யுணர்த்தியவாறு, 'நோக்கி,' என்றது மனத்தால் நோக்கியதை: நோக்கல் நோக்கம் என்பர்; நினைந்து என்றவாறு. அவ்விராம இலக்குவர் கொடுமையான கானகத்தில் யாருமொரு துணையின்றி இருக்கும் நிலையை நினைந்தமையை யுணர்த்திற்று. 'அது' என்றது, அப்பொழுதே தீயில் வீழ்ந்து இறக்க நினைந்ததை. ஐயன்மீர் எனத் தன் மக்கள் முறையினரை அன்பினால் விளித்தவாறு. அயோத்தியின் என்புழி 'இன்' உருபுமயக்கம்; அயோத்திக்கு என்று நான்காவதாக்குக. 'அவற் சேர்குவென்' என்புழி 'அவன்' என்றது, தயரதனை. அவனைச் சேர்தலாவது, இறந்துபோதல்; துறக்கத்திலுள்ளவனைச் சேர்தற்கு அதுவே வழியாகும். (36)

2817. வேந்தன் விண்ணடைந் தானெனின் வீரர்நீ
ரேந்து ஞால மினிதளி யாதிவட்
போந்த தென்னை புகுந்தவென் புந்திபோய்க்
காந்து கின்றது கட்டுரை யீரென்றான்.

"வேந்தன் விண் அடைந்தான் எனின், வீரர் நீர்
ஏந்தும் ஞாலம் இனிது அளியாது, இவண்
போந்தது என்னை ? புகுந்த என் ? புந்தி போய்க்
காந்துகின்றது; கட்டுரையீர்" என்றான்.

பொ :—'தயரத வேந்தன் விண்ணுலகம் அடைந்தான் என்றால், அவன் புதல்வர்களாய நீங்கள் தாங்குதற்குரிய நாட்டை இனிதாக ஆளாமல், இவ்வனத்திற்கு வந்தது ஏன் ? என் உள்ளம் போய் வெதும்புகின்றது; நடந்த நிகழ்ச்சிகள் என்னை ? சொல்லுங்கள்' என்று வினவினான்.

கு :—ஏந்துதல், வேந்தனாயிருந்து தாங்குதல்; ஏந்து ஞாலம் - உயர்ந்த ஞாலம் எனினும் அமையும். ஞாலம் என்றது, ஈண்டுக் கோசல நாட்டை. அளித்தல்—ஆட்சியால் காத்தல். நாடாளவேண்டியவர்கள் காடாள வந்தமைக்குக் காரணங்கள் பல இருத்தல் வேண்டும் என்ற கருத்தால் 'புகுந்த என் ?' எனப் பன்மையால் வினவி

னுன். புந்தி - உள்ளம். அதுபோய்க் காந்துகின்றது என்றது, உள்ளத்தின் இயல்பு கெட்டு உருகி வெதும்பி அழிகின்ற நிலையை யுணர்த்தியவாறு. "இரவுள்ள வுள்ள முருகும் கரவுள்ள வுள்ள தூஉமின்றிக் கெடும்" (குறள் -1069) என்புழித் துன்பத்தால் உள்ளம் உருகிக் கெடும் இயல்பு உணர்த்தியிருத்தல் காணலாம் (37)

**2818.** தேவர் தானவர் திண்டிற ஞகர்வே
றேவ ராக விடரிழைத் தாரெனிற்
பூவ ராவு பொலங்கதிர் வேலினீர்
சாவ ராக்கித் தருவெ னரசென்ருன்.

'தேவர் தானவர், திண் திறல் நாகர், வேறு
ஏவர் ஆக இடர் இழைத்தார் எனின்,
பூ அராவு பொலம் கதிர் வேலினீர்!
சாவர் ஆக்கித் தருவென் அரசு' என்ருன்.

பொ:—'கூர்மையாகத் தீட்டப்பெற்ற அழகிய ஒளி பொருந்திய வேலை யுடையவர்களே! தேவராகட்டும், அல்லது அசுரர் ஆகட்டும், அல்லது மிக்க வலிமையுடைய நாகர்களாகட்டும், வேறு எவராகட்டும் உங்கட்கு இடையூறு செய்திருந்தாராயின் அவர்களைச் செத்தவர்களாகச் செய்து நுமக்கு அரசு தருவேன்' என்ருன்.

கு:—நாகர், நாகலோகத்தில் உள்ளவர்கள். வேறு ஏவராக என்றது, மனிதர் அரக்கர் முதலியோரை. பூ - கூர்மை. அராவுதல்-தீட்டுதல். பொலம் - அழகு; வேலுக்கு அடை, சாவராக்குதல், கொல்லுதல். இராமன் அரசு எய்துதற்கு இடையூறு செய்திருந்தால், யாவரே ஆயினும் அவர்களைக் கொன்று அரசு தருதல் எளிது என்றவாறு. பிறப்பாலும் பிற சிறப்பாலும் உயர்ந்தோர் ஆயினும் என்னுல் சாவாதிரார் என்றவாறு. (38)

### இலக்குவன், வனம்போந்த வரலாறு கூறல்

**2819.** தாதை கூறலுந் தம்பியை நோக்கினுன்
சீதை கேள்வ னவனுந்தன் சிற்றவை
மாத ரால்வந்த செய்கை வரம்பிலா
வோத வேலை யொழிவின் றுணர்த்தினுன்.

தாதை கூறலும் தம்பியை நோக்கினன்
சீதை கேள்வன்; அவனும் தன் சிற்றவை
மாதரால் வந்த செய்கை வரம்பு இலா
ஓத வேலை ஒழிவு இன்று உணர்த்தினன்.

பொ :—தந்தை முறையினனாகிய சடாயு அவ்வாறு சொல்லுதலும், சீதையின் கொழுநனாகிய இராமன், தம்பி இலக்குவனைப் பார்த்தான்; அவ்விலக்குவனும் (அப்பார்வையின் கருத்தை யுணர்ந்து) தன் சிற்றன்னையாகிய கைகேயியால் வந்த வினையாகிய அளவிலாத அலைகடலைச் சிறிதும் ஒழியாமல் முழுதும் உணர்த்தினன்.

கு :—தந்தைக்கு நண்பன் சடாயு ஆதலின், அவனைத் தாதை என்று குறிப்பிட்டார்; அதுவே முறையாகலின். சீதையின் கேள்வனாகலின் சிற்றன்னையாகிய பெண்டின் குறையைத் தன்வாயால் கூறக் கூசித் தம்பியைக் கூறுமாறு குறிப்பால் நோக்கினன். நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் கண்ணே ஆதலின், அக்கண்ணின் குறிப்பை இலக்குவன் நோக்கி அறிந்து கைகேயியால் வந்த வினையை உணர்த்தினன்; அவன் கூருமை நோக்கிக் குறிப்பறிவானாகலின் (குறள்-701). மாதர் என்றது ஒருமை யுணர்த்தியது. சிற்றவையாகிய மாதர் என இருபெயரொட்டாக்குக. கைகேயியால் வந்த வினையின் விரிவை யுணர்த்த, 'செய்கை வரம்பிலா ஓதவேலை' என்றார். செய்கையாகிய வேலை என்க. ஓதம் - அலை. 'ஓதநீர் வேலி' (புற-வெ. வஞ்சிப்-3) என்றதன் உரையை நோக்குக. வரம்பிலா வேலை, ஓதவேலை என்றியையும். கைகேயியால் வந்த வினை கடல்போன்றதே ஆயினும் இலக்குவன் அதனையும் ஒழியாமல் உணர்த்தினன் என்க. (39)

## சடாயு இராமனைப் புகழ்தல் 2820–2821

**2820.** உந்தை யுண்மைய னாக்கியுன் சிற்றவை
தந்த சொல்லைத் தலைக்கொண்டு தாரணி
வந்த தம்பிக் குதவிய வள்ளலே
யெந்தை வல்லதி யாவர்வல் லாரெனா.

'உந்தை உண்மையன் ஆக்கி, உன் சிற்றவை
தந்த சொல்லைத் தலைக் கொண்டு, தாரணி
வந்த தம்பிக்கு உதவிய வள்ளலே!
எந்தை வல்லது யாவர் வல்லார்?' எனா.

பொ :—'உன் தந்தையை உண்மையுடையவனாக்கி, உன் சிற்றன்னை கூறிய சொல்லைத் தலைமேற்கொண்டு, நின் பின் வந்த தம்பிக்குத் தாரணியைக் கொடுத்துதவிய வள்ளலே ! எந்தையாகிய நீ செய்த அரிய செயலை யார் செயவல்லார் ?' என்று பாராட்டி

கு :—குளகம் ; அடுத்த செய்யுளில் முடியும். முன், தந்தை தனக்களித்த தாரணியைத் தான் அரசாண்டிருப்பின் இராமனைத் தடுக்க வல்லார் யாருமிலர் ; அங்ஙனமாகவும், தந்தையை வாய்மையுடையனாக்க வேண்டிக் கைகேயியின் சொல்லைத் தலைமேற்கொண்டு, தனக்குரிய தரணியைத் தம்பிக்கு அளித்தது பெருங்கொடையாகும் என்பான், தாரணி தம்பிக்கு உதவிய வள்ளலே ! என விளித்தான். தமக்கென்று ஒன்றை வரைந்துகொள்ளாது தம்பாலுள்ளவெல்லாம் கொடுப்பவரே வள்ளல் எனப்படுவார் ; 'உள்ளவெல்லா முவந்தீயுமவ், வள்ளியோரின் வழங்கின மேகமே' (15) என முன்னர்க் கூறியுள்ளதும் காண்க. தான்பெற்ற செல்வம் முழுமையும் தம்பிக்குக் கொடுத்தோர் பிறர் யாரும் இன்மையின் 'எந்தை வல்லது யாவர் வல்லார் ?' என்று கூறினான். அன்பு மிகுதியால் சடாயு, தன் மகனாகிய இராமனை எந்தை என்றான். எந்தை - என் தந்தை. எந்தை செய்யவல்லது யார் செயவல்லார் என இரண்டிடத்தும் ஒரு சொல் வருவிக்க. இது சொல்லெச்சம்.

இராமன் நோக்கம், தந்தையைப் பொய்யிலனாக்க வேண்டும் என்பதே என்பதை, 'எந்தையை மறந்தும் பொய்யிலனாக்கி' (1710) என்றதாலும், 'பொய்த்திறத்தின னாக்குதியோ புகல், மெய்த்திறத்துநம் வேந்தனை' (1708) என்றதாலும் அறியலாம். சிற்றவை தந்த சொல்லைத் தலைக்கொள்ளுதலும் தாரணி தம்பிக்கு உதவலும், தந்தையை உண்மையனாக்குதற்காகவே நிகழ்ந்தன ஆகலின் அச்சிறப்பு நோக்கி, 'உந்தையுண்மையனாக்கி' என்பதை முன் எடுத்துக்கூறினான். 'சிற்றவைதந்த சொல்' எனவே தந்தை கூறவில்லை என்ற குறிப்பும் சடாயு கூற்றில் உள்ளமை காணலாம். கைகேயி கொண்ட வரத்தின்படி பரதனுக்குத் தரணியைக் கொடுத்தவன் தயரதனேயாயினும், இராமனுக்கு முடிசூட்டுவதாக முன்னரே முடிவுசெய்திருந்தமையின் இராமனுக்கு அரசு உரித்தாயது என்ற கருத்தால், 'தாரணி வந்த தம்பிக்கு உதவிய வள்ளலே' என உபசாரமாகக் கூறினான் சடாயு என்க. (40)

**2821.** அல்லித் தாமரைக் கண்ணனை யன்புறப்
புல்லி மோந்து பொழிந்தகண் ணீரினன்
வல்லை மைந்தவம் மன்னையு மென்னையு
மெல்லை யில்புக ழெய்துவித் தாயென்றான்.

அல்லித் தாமரைக் கண்ணனை அன்பு உறப்
புல்லி, மோந்து, பொழிந்த கண் நீரினன்,
வல்லை; மைந்த! 'அம் மன்னையும், என்னையும்,
எல்லை இல் புகழ் எய்துவித்தாய்' என்றான்.

பொ :—அகவிதழ்களையுடைய தாமரை மலர்போன்ற கண்களை யுடைய இராமனை அன்புமிகத் தழுவி, உச்சிமோந்து, சொரிந்த ஆனந்தக் கண்ணீரையுடையவனாகிய சடாயு, 'மைந்தனே! அத் தயரத மன்னனையும் என்னையும் எல்லை இல்லாத புகழ் அடையுமாறு செய்தாய் ஆதலின், நீ மிகவும் வல்லவன்' என்று பாராட்டினான்.

கு :—அல்லி - அகவிதழ்; தாமரைக்கு இனமில் அடை; வெண் டிங்கள் என்பதுபோல. இராமன் கண்ணுக்குத் தாமரை மலர் உவமை கூறப்படுதலைப் பலவிடத்துங் காணலாம். சடாயு தழுவு தற்குத் தாமரைக் கண்களும் காரணம் என்ற குறிப்பும் உண்டு. உற - மிகுதியாக; 'பொருந்த' எனலும் ஆம். மக்கள் மெய் தீண்டல் உடற்கு இன்பமாகலின் அவர்களை அன்பால் தழுவுதலும் உச்சிமோத்தலும் பெற்றோர் இயல்பு. கண்ணீரினன் என்றது, குறிப்பு வினையாலணையும் பெயர். 'கண்ணீரினனாகிய சடாயு' என்க. 'பொழிந்த கண்ணீரினன்' என்றது 'அருங்கேடன்' (குறள்-210) என்றாற்போல வந்தது. கண்ணீர் பொழிந்தவனாகிய சடாயு என மாற்றிக்கொள்ளலும் ஆம். 'பொய்யாமை யன்ன புகழில்லை" (குறள்-296) ஆதலின், தயரதனை மறந்தும் பொய்யிலனாக்கிய இராமன், அத்தயரதனுக்கு எல்லையில் புகழ் எய்துவித்ததாகக் கூறியது பொருத்தமாதல் காணலாம். தயரதன் எய்திய புகழ் அவன் நண்பனாகிய சடாயுவும் எய்தியதேயாகலின், 'அம்மன்னையும் என்னையும் எல்லையில் புகழ் எய்துவித்தாய்' என்றான். இவ்வாறு தந்தையர் இருவர்க்கும் எல்லையில் புகழ் எய்துவித்த நிலையை நினைந்து 'வல்லை' எனப் பாராட்டினான். வல்லை - திறமையுடையை; முன்னிலைக் குறிப்பு வினைமுற்று. 'எய்துவித்தாய் ஆதலின், வல்லை என்றான்' என வருவித்து முடிக்க. (41)

### சடாயு சீதையைப் பற்றி வினவுதல்

2822. பின்ன ரும்மப் பெரியவன் பெய்வளை
யன்ன மன்ன வணங்கினை நோக்கினான்
மன்னர் மன்னவன் மைந்தவிவ் வானுத
லின்ன ளென்ன வியம்புதி யாலென்றான்.

பின்னரும் அப் பெரியவன் பெய் வளை
அன்னம் அன்ன அணங்கினை நோக்கினான்;
மன்னர் மன்னவன் மைந்த! 'இவ் வாள் நுதல்
இன்னள் என்ன இயம்புதியால்' என்றான்.

பொ :—அப்பெரியவனாகிய சடாயு, பின்னும், பெய்த வளையல் களையுடைய அன்னப்பேடு போன்ற சீதையைப் பார்த்தவனாய், அரசர்க்கு அரசனாகிய தயரதன் புதல்வனே! 'இந்த ஒளிவாய்ந்த நெற்றியையுடைய நங்கை இன்னாள் என்று எனக்குச் சொல்லுக' என்றான்.

கு :—காலத்தாலும் சீலத்தாலும் சடாயு மூத்தவன் ஆதலின் 'பெரியவன்' எனப் பெற்றான். பெய்வளை அணங்கு, அன்னம் அன்ன அணங்கு என்க. பெய்தல், கையில் செறித்தல். நோக்கினான் முற்றெச்சம். வாணுதல், அன்மொழித்தொகை. 'இன்னள் என்ன - நினக்கு இன்ன உறவுடையவள் என்று. சீதையின் பெயரறியாதாகலின் இவ்வாணுதல் என உறுப்பால் பெயர் கூறினான். (42)

## இலக்குவன் விடை

2823. அல்லி றுத்தன தாடகை யாதியா
வில்லி றுத்த திடையென மேலைநாட்
புல்லி றுத்த தியாவும் புகன்றுதன்
சொல்லி றுத்தனன் றோன்றல்பின் றோன்றினான்.

அல் இறுத்து அன தாடகை ஆதியா
வில் இறுத்தது இடை என மேலை நாள்
புல் இறுத்தது யாவும் புகன்று, தன்
சொல் இறுத்தனன்; தோன்றல் பின் தோன்றினான்.

பொ :—இராமனுக்குப் பின் தோன்றிய இலக்குவன், முன்னாளில் நிகழ்ந்த, இருள்வந்து தங்கினாற்போன்ற கரிய நிறத்தினையுடைய தாடகைவதை முதலாக, (சனகன் வைத்திருந்த சிவன்) வில்லை ஒடித்தது இடையாக, வனத்திற்குப் புறப்பட்டுப் புல்லில் படுத்த செய்தி ஈறாக எல்லாவற்றையும் சொல்லித் தன் சொல்லை முடித்துக் கொண்டான்.

கு :—அல் - இருள்; தாடகையின் கருநிறத்திற்கு உவமை. 'அல்லொக்கு நிறத்தினாள்' (413) என முன்னர்க் கூறியுள்ளதும் காண்க. தாடகை என்றது, தாடகை வதையையும், வில் இறுத்தது

என்றது சீதையின் திருமணத்தையும், புல்லிறுத்தது என்றது கங்கைக்கரையில் புல்லிடைப்படுத்த செயல் முதலாகக் காட்டில் வதிந்ததையும் குறிப்பால் தெரிவித்தன ஆதலின், 'இவ்வாணுதல் இன்ன ளென்ன இயம்புதி' என்ற சடாயுவின் கேள்விக்கு விடை கூறியதாயிற்று. இதனால் வில்லை ஒடித்து இராமனால் மணக்கப் பெற்ற சீதையே இவள் என்பதைச் சடாயு உணரச் செய்தான் இலக்குவன். ஐந்து மூன்றடுக்கிய அமளிமிசை தங்கவேண்டிய இராமன், வனத்திற்குப் புறப்பட்ட பின் கங்கைக் கரையில் கல்லிடைப்படுத்த புல்லில் பள்ளிகொண்ட செய்தி குகனால் காட்டப்பட்டுப் பரதனால் காணப்பெற்ற பெரிய துன்பநிகழ்ச்சியாகக் கூறப்பட்டதாகலின் வனவாசத்தை அச்செய்லால் உணர்த்தினான் என்க. 'கல்லிடைப் படுத்த புல்லின் வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்' (2429) என்று முன் கூறியுள்ளது காண்க. இறுத்தனன் - முடித்தனன்; தன் சொல்லால் விடையிறுத்தனன் எனப் பொருள் கூறலும் ஆம். (43)

### இக்காட்டில் தங்குக என்றல்

2824. கேட்டு வந்தனன் கேழ்கிளர் மௌலியான்
றோட்ட லங்கலி னீர்துறந் தீர்வள
நாட்டி னீவிரு நன்னுத லானுமிக்
காட்டில் வைகுதிர் காக்குவென் யானென்றான்.

கேட்டு உவந்தனன் கேழ்கிளர் மௌலியான்;
"தோட்டு அலங்கலினீர்! துறந்தீர் வளம்;
நாட்டின் நீவிரும் நல் நுதல் தானும் இக்
காட்டில் வைகுதிர்; காக்குவென் யான்" என்றான்.

பொ :—ஒளி விளங்குகின்ற மகுடத்தையுடைய சடாயு, இலக்குவன் கூறியதைக் கேட்டு மகிழ்ந்தானாய், 'இதழ் நிறைந்த மலர் மாலையை யுடையீர்! அரசச் செல்வத்தைத் துறந்தீர்; ஆயினும் நாட்டில் தங்கியிருந்தது போலவே நீங்களும் நல்ல நெற்றியை யுடைய சீதையும் இக்காட்டில் அச்சமின்றித் தங்குவீர்களாக; யான் (நுமக்கு இடையூறு வாராமல்) காப்பேன்' என்றான்.

கு :—சடாயு மகுடம் அணிந்திருந்தான் என்பதை: 'வாளிரவி யிற்பொலி மௌலி யான்றனை' (2787) என்று முன்னர்க் கூறியுள்ளமையானும் அறியலாம். உவப்பினால் முடியசைத்த குறிப்பை யுணர்த்தவேண்டி ஈண்டும், 'கேழ்கிளர் மௌலியான்' என்று

சிறப்பித்தவாறு. அலங்கல் - மாலே. தோடு - இதழ். வளம் என்றது அரசச் செல்வத்தை. நாட்டின் என்புழி இன் ஒப்புப் பொருளது. நாட்டில் அச்சமின்றி வாழ்வதுபோலவே அரக்கர் களும் விலங்குகளும் தங்கும் காட்டிலும் அச்சமின்றித் தங்குமின்! யான் காப்பேன்: என்று சடாயு உறுதி கூறினன். (44)

## இராமன் விடை

**2825.** இறைவ வெண்ணி யகத்திய னீந்துள
தறையு நன்மணி யாற்றி னகன்கரைத்
துறையு ளுண்டொரு சூழலச் சூழல்புக்
குறைது மென்றன னுள்ளத் துறைகுவான்.

'இறைவ! எண்ணி அகத்தியன் ஈந்துளது,
அறையும் நல் மணி ஆற்றின் அகன் கரைத்
துறையுள் உண்டு ஒரு சூழல்; அச்சூழல் புக்கு
உறைதும்;' என்றனன் உள்ளத்து உறைகுவான்.

பொ:—யாவர் உள்ளத்தும் தங்குகின்ற பரம்பொருளாகிய இராமன், (சடாயுவை நோக்கி) 'தலைவனே! அகத்திய முனிவன், (நாங்கள் தங்குதற்குரிய பொருத்தமுடையது என்று) எண்ணி எங்கட்கு அருளியதாகிய, ஒலிக்கின்றதும், நல்ல மணிகளையுடையதும் ஆகிய (கோதாவரி) ஆற்றின் அகலமான கரையையுடைய துறையில் ஓர் இடமுண்டு; அவ்விடத்தில் குடிபுகுந்து தங்குகின்றோம்' என்று கூறினன்.

கு:—அந்தரியாமியாக உள்ள பரம்பொருளே இராமன் என்ற கருத்தால், 'உள்ளத்துறைகுவான்' என அவனைக் குறித்தார். சடாயு கழுகின்வேந்தனுகலாலும் தங்கட்குத் தந்தை முறையினன் ஆகலாலும் அவனை, 'இறைவ' என்று விளித்தான். அகத்தியன் ஈந்துளதாகிய சூழல் என்க. அறையுமாறு, நல்மணியாறு என்றியைக்க. சூழல் - இடம். அகத்தியன் ஈந்துளது என்றது, அகத்தியன் இராமன் சீதையுடன் தங்குதற்குரியது எனக் குறிப்பிட்டதனையே. பெரியவர்கள் குறிப்பிட்டதையே, கொடுக்கப்பட்டதாகக் கருதினன் இராமன் என்பது இதனுலறியலாம். நல்ல மரஞ்செடி கொடிகளும் நீர்நிலைகளும் சூழ்ந்துள்ள இடம், சூழல் எனப்பட்டது எனலுமாம். உறைதும், உளப்பாட்டுத் தன்மைப்பன்மை எதிர் கால வினைமுற்று. உறைகுவான், உறைதும் என்றனன் என்ற சொல்நயம் காண்க. (45)

### சடாயு சிறை நிழலில் இராமன் முதலியோர் செல்லுதல்

**2826.** பெரிது நன்றப் பெருந்துறை வைகிநீர்
புரிதிர் மாதவம் போதுமின் யானது
தெரிவு றுத்துவெ னென்றவர் திண்சிறை
விரியு நீழலிற் செல்லவிண் சென்றனன்.

"பெரிதும் நன்று; அப் பெருந்துறை வைகி, நீர்
புரிதிர் மாதவம்; போதுமின்! யான் அது
தெரிவுறுத்துவென்" என்று அவர் திண் சிறை
விரியும் நீழலில் செல்ல, விண் சென்றனன்.

பொ :—'மிகவும் நல்லது; அப்பெரிய துறையில் நீங்கள் தங்கி மாதவம் செய்வீர்களாக; வாருங்கள்; யான் அவ்விடத்தை உங்கட்குக் காட்டுகின்றேன்' என்றுகூறி, அவர்கள், தன் திண்ணிய சிறை விரித்த நிழலில் நடந்து வரச் சடாயு, விண்வழியே பறந்து சென்றனன்.

கு :—அகத்தியன் குறிப்பிட்ட இடத்தின் அருமையுணர்ந்து சடாயு, 'பெரிதும் நன்று' என்று பாராட்டினுன்; அதை அவனும் நன்கறிந்திருத்தலின். புரிதிர் மாதவம் என்பது பெரிய தவத்தைச் செய்யுங்கள் என்று பொருள் தந்ததோடு, எதிர்கால நிகழ்ச்சியைக் குறிப்பால் தெரிவிப்பதாய், 'புரிதிர் மாது அவம்' எனப் பிரிக்கவும்பட்டுச் சீதையாகிய மாதை அவம் செய்யுங்கள் என்ற பொருளும் தருதல் காணலாம். அப்பஞ்சவடியில் இருக்கும்பொழுதுதான் இராவணன் சீதையைக் கவர்ந்து செல்கின்ருன் என்பதை இங்கு நினைக்க. போதுமின் - வம்மின். தெரிவுறுத்தல் - காட்டுதல். சிறை விரித்தலால் உளதாகும் நீழலைச் சிறை விரியும் நீழல் என்ருர். விரியும் நீழல், காரணத்தின் கண் வந்த பெயரெச்சம்; ஈத்துவக்கு மின்பம் என்புழிப்போல. (46)

### இராமன் முதலியோர் சோலையில் தங்குதல்

**2827.** ஆய சூழ லறிய வுணர்த்தியத்
தூய சிந்தைய தோமில் குணத்தினுன்
போய பின்னைப் பொருசிலை வீரரு
மேய சோலை யினிதுசென் றெய்தினர்.

ஆய சூழல் அறிய உணர்த்தி, அத்
தூய சிந்தைய தோம் இல் குணத்தினன்
போய பின்னைப் பொரு சிலை வீரரும்
ஏய சோலை இனிது சென்று எய்தினர்.

பொ :—அப்பஞ்சவடியை அறியும்படி உணர்த்திவிட்டு, அந்தத் தூய்மையான சிந்தையையுடைய, குற்றம் அற்ற குணத்தினனாகிய சடாயு சென்ற பின்பு, போர்செய்தற்குரிய வில்லை ஏந்திய வீரர்களாகிய இராம இலக்குவரும் (அகத்தியன்) ஏவிய சோலையை இனிதாகச் சென்று அடைந்தார்கள்.

கு :—சிந்தைய - சிந்தையையுடைய; அகரம் குறிப்புப் பெயரெச்சவிகுதி; 'கால குருகு' என்புழிப்போல. தோம் - குற்றம். குற்றமில்லாத குணத்தினனதற்கு அவன் தூய சிந்தையே காரணம் என்பது புலப்படுத்தியவாறு. பஞ்சவடியில் தங்கினமைக்குக் காரணம், அங்கு அரக்கர் வருகை மிகவுண்டு, அவரொடு போர் செய்தல் வேண்டும் என்பதே ஆதலின் அதற்கேற்பப் 'பொரு சிலை வீரர்' என அவ்விராம இலக்குவரைக் குறிப்பிட்டவாறு. ஏய சோலை என்பதற்குத் தமக்குப் பொருத்தமான சோலை எனலுமாம். இனிது சென்று எய்துதலாவது இடையூறு இன்றி அடைதல். (47)

### சடாயு அவர்களைக் குறிக்கொண்டு காத்தல்

2828. வார்ப்பொற் கொங்கை மருகியை மக்களை
யேர்ப்பச் சிந்தனை யிட்டவ் வரக்கர்தஞ்
சீர்ப்பைச் சிக்கறத் தேறினன் சேக்கையிற்
பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்.

வார்ப் பொன் கொங்கை மருகியை, மக்களை
ஏர்ப்பச் சிந்தனை இட்டு அவ்வரக்கர்தம்
சீர்ப்பைச் சிக்கு அறத் தேறினன், சேக்கையில்
பார்ப்பைப் பார்க்கும் பறவையில் பார்க்கின்றான்.

பொ :—அந்த அரக்கர்களுடைய வலிமைச் சிறப்பை ஐயமின்றித் தெளிந்தவனாகிய சடாயு, கூட்டிலுள்ள குஞ்சுகளைப் பார்க்கும் தாய்ப் பறவைபோலக் கச்சணிந்த பொன்னிறமான நகில்களையுடைய சீதையாகிய மருகியையும், இராம இலக்குவர்களாகிய மக்களையும், சிந்தனை எழுச்சிகொள்ளுமாறு (விழிப்புடன்) செலுத்திப் பார்த்துக் கொண்டுள்ளான்.

கு:—தேறினன், வினையாலணையும் பெயர். தேறினனாகிய சடாயு மருகியை மக்களைச் சிந்தனை ஏர்ப்ப இட்டுப் பார்க்கின்றான் என இயையும். ஏர் - எழுச்சி. சிந்தனை ஏர்ப்ப இட்டுப் பார்த்தலாவது, கருத்தின்றிக் கண்ணால் மட்டும் நோக்காது, சிந்தனையை எழுச்சியுடன் செலுத்திக் கண்ணும் கருத்தும் ஒன்றப் பார்த்தல். சேக்கை - பறவைக் கூடு. சேக்கையில் பார்ப்பைப் பார்க்கும் பறவையில் என்றமையால் சீதை முதலியோரைக் காப்பதில் சடாயு கொண்டுள்ள கருத்தும், தலை அன்பும் தெளிவாகும். காக்கப்பட வேண்டிய இன்றியமையாமையுடையவள் சீதையே யாதலின் 'மருகியை' முன் எடுத்துரைத்தார். அரக்கர் கவர்தற்குரிய அழகுடையவள் என்பது தோன்ற 'வார்ப் பொற் கொங்கை மருகியை' என்றார். சீதை அரக்கரால் கவரப்படலாம் என்ற ஐயம் சடாயுவுக்கு உண்டு என்பது இதனால் அறியலாம். (48)

சடாயு காண் படலம் முற்றிற்று.

---

# 5. சூர்ப்பணகைப் படலம்

சூர்ப்பணகையைப் பற்றிய செய்தியை அறிவிக்கும் பகுதியாகலின் இப்பகுதி சூர்ப்பணகைப் படலம் எனப் பெயர் பெறுகின்றது. சூர்ப்பணகை என்பது, முறம் போன்ற நகங்களையுடையவள் என்ற காரணம் பற்றிய பெயராகும். சூர்ப்பம்-முறம். இனி, சூர்ப்பம் என்ற சொல், குருதி நிறைந்த பாண்டம் என்னும் பொருளையும் தருதலுண்டு. குருதி நிறைந்த பாண்டத்தையேந்தி வந்து முனிவர் செய்யும் வேள்விகளில் சொரிந்து அழிவு செய்கின்றவள் என்ற காரணமும் அப்பெயரில் புலப்படுதல் காணலாம்.

இப்படலம், சில ஏடுகளில் முதல் ஒன்பது செய்யுளும் தனியே பிரிக்கப் பெற்றுப் 'பஞ்சவடிப் படலம்' என்ற பெயரோடு காணப்படுகின்றது; சில ஏடுகளில் கோதாவரிப் படலம் என்றும் காணப்படுகின்றது. மேல் உள்ள பகுதிக்கு சூர்ப்பநகி மூக்கரி படலம் எனச் சில ஏடுகளிலும், சூர்ப்பணகைப் படலம் எனச் சில ஏடுகளிலும் பெயர் காணப்படுகின்றது.

சூர்ப்பணகை இராவணன் முதலிய மூவர்க்கும் தங்கை. பிரமன் மகனாகிய புலத்தியன் மகன் விச்சிரவசுவின் இரண்டாவது மனைவி கேகசியின் மகள். காலகேயருள் ஒருவனான வித்யுச்சிகுவன் என்பானுக்கு மனைவி. இராவணன் காலகேயரை அழிக்கும்போது தன் தங்கை கணவன் என்பதை மறந்து இந்த வித்யுச்சிகுவனையும் அழித்துவிட்டான். கணவனையிழந்த சூர்ப்பணகை, இராவணன் கால்களில் விழுந்து தன் துன்ப மிகுதியைக் கூறிப் புலம்பி முறையிட்டாள். இராவணன் அவளுக்கு அமைதி மொழிகள் பல சொல்லித் தண்டக வனத்தில் விரும்பியவாறு தங்கியிருக்கலாம் என ஆணை தந்து அவளுக்குப் பாதுகாவலாகப் பெரும்படையுடன் கர தூடணர்களை இருக்கச் செய்தான். அவ்வாறே அங்குக் குடியேறி அங்குள்ள முனிவர்களைத் துன்புறுத்திக் கொண்டு சூர்ப்பணகை மகிழ்ச்சியோடு திரிந்து கொண்டிருக்கின்றாள்.

கோதாவரி ஆற்றங்கரையில் பஞ்சவடியில் இராம இலக்குவர் சீதையுடன் தங்கியிருந்த நாட்களில் ஒருநாள் இச்சூர்ப்பணகை, இராமனுடைய திருமேனியின் அழகைக் கண்டு ஆராத காதல் கொண்டு திருமகளின் தியானத்தால் எழில்மிகு வடிவம் பெற்று அவ்விராமன் எதிரில் மெல்லென ஒதுங்கிச் சென்று தன்னை மணந்துகொள்ளுமாறு வேண்டுகின்றாள். இராமன் விளையாட்டாக வேறு காரணம் கூறி மறுக்கின்றான். அவள் தன்னை மணந்து

கொள்ளுதல் தக்கது என்பதைப் பல காரணத்தால் நிறுவி வற்புறுத்துகின்ருள். இராமன் சிரித்துக்கொண்டு அவளைக் குறிப்பால் இகழ்ந்து கொண்டிருக்கும்போது கற்பின் வடிவாகிய சீதை, பன்னசாலையினின்றும் அங்கு வருகின்ருள். அவளழகைக் கண்டு சூர்ப்பணகை வியந்தாளாயினும், தன் காதலுக்கு இவள் இடையூருவள் என்று கருத்துட்கொண்டு, 'வருகின்றவள் அரக்கி; இவ்வுருவம் உண்மையானதன்று' என்று கூறிக் கொண்டு, சீதையைத் தாக்கச் செல்லும்போது, இராமன் அவளை வெகுண்டு கூறிவிட்டு, அஞ்சித் தன்னையடைந்த சீதையுடன் பன்னசாலைக்குள் போய்விடுகின்ருன். அவன் அழகு வலையில் அகப்பட்டுக் கொண்ட சூர்ப்பணகை, செய்வதறியாது திகைக்கின்ருள்; இராமனையணையும்வழி யாதெனச் சிந்திக்கின்ருள். பொழுதும் மறைகின்றது; இருள் விரிகின்றது. சூர்ப்பணகையின் காம நோய் மிகுகின்றது. திங்களையும் தென்றலையும் நோக்கிப் புலம்புகின்ருள். பறவைகளையும் விலங்குகளையும் பார்த்துப் பரிந்த மொழி பல பகர்கின்ருள். மேகத்தை இராமன் என மயங்கித் தழுவுகின்ருள். மன்மதன் வேதனையும் நிலவின் வெம்மையும் தென்றலின் தீங்கும் தீரும் வண்ணம் ஒரு மலைக்குகையில் நுழைகின்ருள். அங்கும் அவள் காமத்தீ தணியாது வருந்துகின்ருள். இரவெல்லாம் இவ்வாறு வருந்தின சூர்ப்பணகையின் வருத்தம் தணியப் பொழுது புலர்கின்றது; இராமனை அடைதற்கு ஒரு சூழ்ச்சியும் தோன்றுகின்றது. மிகப் பேரழகியொருத்தி தன்னருகில் உள்ள வரையில் தன்னை இராமன் கண்ணெடுத்தும் பாரான்; ஆதலின் விரைந்து ஓடிச் சென்று அவ்வழகியை யெடுத்து வந்து குகையில் மறைத்து வைத்துவிட்டு, அவள் வடிவத்தைத் தான் பூண்டு தன் வடிவைப் புலப்படுத்தாது அவன் மனைவியாக வாழ்வதே நல்லறிவு என்று எண்ணித் துணிகின்ருள். பன்னசாலைக்கு விரைகின்ருள். இராமன் பன்னசாலையில் இல்லாமல் ஆற்றங்கரையில் காலை வழிபாடு செய்து கொண்டிருப்பதைக் கண்டு தன் கருத்து நிறைவேறிற்று என மகிழ்ந்து உள் நுழைந்து சீதையைப் பற்றுகின்ருள். அருகிலுள்ள சோலையிலிருந்து சீதையைக் காவல் புரிந்து நின்ற இலக்குவன் கண்டு விரைந்து வந்து சூர்ப்பணகையின் கூந்தலைப் பற்றிக் கொண்டு உடைவாளை வாங்கி அவள் மூக்கையும் காதையும் முலைக் கண்களையும் அறுத்துவிட்டுச் சினம் தணிந்து நின்ருன். உறுப் பறுப்புண்ட சூர்ப்பணகை இராவணன் முதலிய உறவினர்களின் பெயரையெல்லாங் கூறி அவர் ஆற்றல் புலப்படத் தன்னை வந்து காக்குமாறு முறையிட்டுப் புலம்புகின்ருள். காலை வழிபாடு செய்து கொண்டிருந்த இராமனும் அதை முடித்துக்கொண்டு அங்கு வருகின்ருன். அவனைக் கண்டதும், உன் திருமேனிக்கு அன்பு இழைத்த வன்பிழையால் யான் பட்ட படி இது காண் என்று எதிர்

விழுந்து அழுகின்ருள். நிகழ்ந்ததை அநுமானத்தால் உய்த்துணர்ந்த இராமன், 'அம்மனே, நீ யார்?' என்று வினவுகின்ருன். இன்னுள் என்பதை அவளும் விவரிக்கின்ருள். 'தவம் செய்யும் எம்மிடத்தில் அரக்கியாகிய நீ என்செய வந்தாய்?' என்கின்ருன் இராமன். அவள், வெங்காம வெம்பிணிக்கு மாமருந்தே! நேற்றும் வந்திலனே? என்று பழமை பாராட்டுகின்ருள். 'திருமகளே எனக் கண்டார் கருதுமாறு நேற்று வந்தவர்தாமோ நீர்?' என்று எள்ளுதற் குறிப்பால் இராமன் வினவ, அவள், மூக்கு முதலியன அறுப்புண்டால் அழகு அழியாதோ? என்கின்ருள்.

பின் இராமன் இலக்குவனை நோக்கி, 'இவள் செய்த பிழை யாது?' என்று வினவுகின்ருன். இவள் சீதையைத் தின்பதற்கோ, அல்லது தூக்கிச் செல்லுதற்கோ, விரைந்தோடிப் பற்றினுள் என்கின்ருன் இலக்குவன். அரக்கி உடனே, 'மாற்றவளைக் கண்டக்கால் அழலாதோ மனம்?' என்று அமைதி கூறுகின்ருள். இராமன் வெகுண்டு, 'பேடிப் போரில் வல்ல அரக்கர்குலத்தை வேரோடு அழிப்பதற்குத் தேடி வந்துள்ளோம். அழிவைத் தேடிக் கொள்ளாது ஓடிப் போ' என்று கூறுகின்ருன்.

சூர்ப்பணகை, 'பிரமன் முதலிய தேவர்களே இராவணனுக்குக் கப்பம் கட்டும் குடிமக்கள் என்ருல், அவன் ஆற்றலை மதியாது, விரைவது நுமக்கு நல்லதன்று; அவனுக்கு மாருய் நின்று இம்மூவுலகத்துள்ளோரில் யாரும், தங்கள் தலைகளைக் காத்துக்கொண்டு நுமக்குத் துணையாய் வந்து நும்மைக் காப்போர் இலர். பெரிய போரில் உங்களைப் புறங்காப்பேன்; விண்ணில் சுமந்து திரிவேன்; நீங்கள் விரும்பியதைக் கொணர்ந்து தருவேன். குலத்தாலும் நலத்தாலும் நினைந்ததைத் தரும் வலத்தாலும் என்னைப் போன்ருர் யாரேனும் இருந்தால் சொல்லுங்கள். மூக்கை அறுத்ததும் என் மேல் வைத்த பற்றினுல்தான் என்பதை உணர்ந்தே முன்னையினும் இரட்டிப்பாக நும்பால் ஆசை வைத்துள்ளேன். என்னை இவ்வாறு அங்கபங்கப்படுத்தியதை அரக்கர் அறியின் அந்தப்பழியால் உலகமே அழியும்; இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்து இப்பழியைத் துடைத்து உலகுக்கு உதவி செய்து என்னேடு இனிதாக வாழ்வீர்களாக' என்று கூறுகின்ருள்.

இராமன் வெகுண்டு, 'வல்லரக்கி! நின் பாட்டியாகிய தாடகையின் உயிர் கவர்ந்த அம்பு இருக்கின்றது; மேலும் அரக்கர் குலம் தொலைப்பதற்கே இங்குத் தோன்றி நின்றேன்; உன்னுடை அற்ப ஒழுக்கத்தை விடுத்துச் செல்! தயரதன் மக்களாகிய நாங்கள், தாய் சொல்லைத் தலைமேற்கொண்டு காட்டுக்கு வந்தோம்; முனிவர் வேண்டியவாறே அரக்கர்குலம் தொலைத்த பின்னரே எம் அயோத்தி

நகர்க்குச் செல்வோம். நீ வலியவர் என்று கூறிய எல்லோரையும் கொண்டு வருக; நின் கண்ணெதிரே அவர்கள் அனைவரையும் கொல்லுகின்றோம்' என்கின்றான்.

அவ்வாறு வெகுண்டு கூறியபோதும் சூர்ப்பணகை அகலாதவளாய், 'நீங்கள் நினைத்தவாறு செய்யலாம்; அரக்கரை வெல்லலாம்; என்னைக் கண்ணெடுத்துப் பார்ப்பீராயின் நுமக்குத் துணையாவேன்; அவளைக் கைவிட இயலாது என்றாலும் யான் இரண்டாவது மனைவியாக இருந்தால் மிகையன்று. அரக்கர் மாயங்களையெல்லாம் முன்னமேயறிந்து தடுப்பேன். ஒருகால் நின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவள் ஒருத்தியே போதும் என்பாயாயின், நின் இளையானோடு என்னை இருக்கச் செய்வாயாக. அவ்வாறு செய்தால் சூரியனையும் சந்திரனையுங் கூடச் சிறைவைத்த இராவணனுக்கு இளைக்கமாட்டேன்' என்கின்றாள். இவ்வாறு வற்புறுத்திய சூர்ப்பணகைமேல் ஏவுங் குறிப்பால் வேலைக் கடைக்கணித்து இலக்குவன், 'இவளைக் கொல்லவில்லையாயின் இவ்வாறே நெடிது நேரம் நம்மை விடாது துன்புறுத்திக்கொண்டே இருப்பாள்; தங்கள் திருவுள்ளம் யாது?' என இராமனை வேண்ட, அவனும், 'போகாளேல் ஆக' என்கின்றான். அவன் குறிப்பறிந்த சூர்ப்பணகை, 'இங்கிருந்தால் இனி என்னுயிரை இழப்பேன்' என்று எண்ணி, 'மூக்கிழந்த பின்னும் உயிர் வாழ்தல் ஆற்றுவனோ? வஞ்சனையாக நுங்கள் நிலைமையை அறிந்து கொள்ளவே இவ்வாறு கூறினேன்; உங்களுக்கு எமனாகக் கரனைக் கொணர்கின்றேன் இப்பொழுதே' என்று கூறி வயிரங்கொண்டு விரைந்து கரன்பாற் சென்றாள் என்பது இப்படலத்தில் கூறப்படும் கதைப்பகுதியாகும்.

## கம்பர், வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. சூர்ப்பணகைப் படலத்தில் கம்பர் வான்மீகத்தோடு பெரிதும் வேறுபடுகிறார். சூர்ப்பணகை இராமனைச் சந்திக்கும்போது, பெருவயிறும் வளையெயிறும் உடைய அரக்கியாகவே இருந்தாள் என வான்மீகம் கூறுகின்றது. ஆயின் இராமனிடம் உரையாடும்போது வேண்டும் உருவம் எடுக்க வல்லவள் என்பதைத் தெரிவித்ததாகக் கூறுகின்றது.

திருமகள் போன்ற எழிலுருவம் தாங்கிச் சூர்ப்பணகை மெல்லென ஒதுங்கி வந்து இராமனைக் கண்டதாகக் கூறியுள்ளார் கம்பர். வேண்டு முருக்கொள்ளவல்ல ஒருத்தி எழில் மிக்க இராமன் தன்னை விரும்பவேண்டும் என்று எண்ணுகின்ற இவ்வமையத்தில் அவ்வாற்றலைப் புலப்படுத்தாது இருப்பளோ? என்ற எண்ணத்தால் வல்லுருவம் நீங்கி மெல்லுருவம் தாங்கி இராமனெதிர் சூர்ப்பணகை

வந்ததாகக் கம்பர் கூறியிருத்தல் வேண்டும். மிக்க அழகுடைய ளாகத் தன்னைக் காட்டவேண்டிய காதற் காலத்தில் வேண்டுருவம் எடுக்கவல்ல தன்னுற்றலைப் புலப்படுத்தியதாகக் கூறியதே பொருத்தமாகத் தோன்றுகின்றது. கதைப்போக்கும் சுவை நலம் மிக்கதாக அமைகின்றது. "கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கி" (பெருமாள் திருமொழி-10-5) எனக் குலசேகராழ்வார், அவள் கண்ணழகைச் சிறப்பித்த குறிப்பை மனத்திற்கொண்டு கம்பர் இவ்வாறு கூறினர் போலும்.

2. பன்னசாலையில் சீதை உடன் இருக்க, இராமன் இலக்கு வனுக்குக் கதை சொல்லிக்கொண்டிருந்ததாகவும், அவ்வமையத்தில் சூர்ப்பணகை அங்கு வந்ததாகவும் வான்மீகம் கூறுகின்றது.

தன் இளவல் முன்னிலையிலும் தன் மனைவி முன்னிலையிலும் இராமன் சூர்ப்பணகையோடு விளையாட்டாகக் காதற்குறிப்புள்ளவன் போல் பேசினன் என்று கூறுவதைக் காட்டிலும், தனித்திருந்த போது அவ்வாறு பேசினன் என்று கூறுவதே பொருத்தமாகும் என்ற கருத்தால் பன்னசாலைக்கு அருகில் உள்ள தனியிடம் அடைந்து இராமன் இருந்தபோது சூர்ப்பணகை கண்டு பேசியதாக அமைத்துள்ளார் கம்பர். சூர்ப்பணகையோடு இராமன் உரையாடிக் கொண்டிருக்கையில் அவள் ஆசையையும், அறியாமையையும் கண்டு பெருகச் சிரித்தானாக, அதைக் கேட்டுச் சீதை கடிகமழ் சாலை நின்றும் வந்ததாக அமைத்திருத்தல், மிகப் பொருத்த முடையதாகக் கதை நிகழ்ச்சியின் சுவையை மிகுதிப்படுத்துவதாக விளங்கல் காணலாம். அங்கு வந்த சீதையைத் துடுமெனக் கண்டு அவளழகின் மிகுதியைத் தனக்குள் வியந்ததாகவும் பின் தன் காதலுக்குத் தடையாகத் தன்னைப்போல் நடுவில் வந்ததாக அவளை எண்ணித் தன் தன்மையெல்லாம் அவளுக்கேற்றி, 'வருமிவள் மாயம் வல்லள், வஞ்சனை அரக்கி' எனவும், 'உரு இது மெய்யதன்று, ஊனுகர் வாழ்க்கையாளைக் காண அஞ்சுகின்றேன்' எனவும் சூர்ப்ப ணகை கூறியதாக அமைத்தது, கேட்போர்க்கு நகைச்சுவை யளிப்பதாய் மாறுபடுபுகழ்நிலையாய் அவள் இயல்பை உள்ளவாறு உணர்த்துவதாய்ச் சிறப்பாக விளங்குதல் காணலாம்.

3. சூர்ப்பணகை, இராமனைச் சந்தித்ததும், சூர்ப்பணகையின் உறுப்பறுப்பும் ஒரே நாளில் நிகழ்ந்ததாக வான்மீகம் கூறும்.

கம்பர், சூர்ப்பணகை இரண்டாம் நாள் வந்தபோதே உறுப்பு அறுப்புண்டதாகக் கூறியுள்ளார். இராமனைத் தனியாகக் கண்டு காதலித்த சூர்ப்பணகை, பின் சீதை ஒருத்தி இருப்பதைக் கண்டு பொருமை கொண்டு சில பேசியதும், இராமன் சீதையை யழைத்துக்

கொண்டு பன்னசாலையுள் புக்கானுக, அவ்வரக்கி, காமமெனும கடு நெருப்பால் வெந்து இரவெல்லாம் காட்டில் அல்லற்பட்டுக் காம மிக்க கழிபடர் கிளவிகளைச் சொல்லிக்கொண்டு இரவினை அரிதிற் கழித்து, இராமனைக் கூடும் நெறி யாதென ஆராய்ந்து தெளிந்து சூரியன் உதித்ததும் மீண்டும் பன்னசாலைக்கு வந்தவள், சீதை தனித்திருந்தது கண்டு விரைந்து எடுக்கச் சென்றதாகவும் அருகிலுள்ள சோலையில் காவல் செய்துகொண்டிருந்த இலக்குவன் கண்டு விரைந்து வந்து அச்சூர்ப்பணகையின் மூக்கு முதலிய உறுப்புக்களை அறுத்ததாகவும் கூறியது, கதையைச் சுவைமிக்கதாக்கியுள்ளது. சூர்ப்பணகை இராமனைக் கண்ட பின் ஓரிரவைக் காமநோயோடு கழித்ததாகவும் அவ்விரவெல்லாம் இராமனைக் கூடும் நெறியை ஆராய்ந்து தெளிந்து சீதையை மறைத்துவிட்டு அச்சீதையின் உருவம் தாங்கி இராமனேடு வாழ்தல் வேண்டும் என்ற முடிவுக்கு வந்ததாகவும் கூறி, அவள் காம மிகுதியைப் புலப்படுத்தியுள்ளார். வான்மீகத்தில் கூறப்படாததாயினும் பாகவதத்தில் கூறப்படுவதால், சூர்ப்பணகையின் நகிலையும் அறுத்த செய்தியைக் கம்பர் சேர்த்துக் கூறியுள்ளார். காமத்தால் வலிய வந்து வற்புறுத்துப வட்கு ஏற்ற தண்டனையாக எண்ணி இதைச் சேர்த்தார் போலும்.

4. இராம இலக்குவர் எதிரில் உள்ளபோதே சூர்ப்பணகை, சீதையைத் தூக்க முயன்றதாகவும், இராமன் கட்டளையின்படி இலக்குவன் அவளுறுப்புக்களை அறுத்ததாகவும் வான்மீகம் கூறும். வீரர் இருவர் முன்னிலையில் சீதையைச் சூர்ப்பணகை எடுக்கமுயன்றதாகக் கூறுவது உலகியலுக்குப் பொருத்தமாகக் காணப்படாமையின், இராமனும் இலக்குவனும் அண்மையில் இல்லாத அமையத்தில் அங்ஙனம் செய்ய முயன்றதாகக் கம்பர் மாற்றியமைத்துள்ளார். மேலும் அருளாளனுகிய இராமன் ஆணையின்படி இலக்குவன் சூர்ப்பணகையின் உறுப்பறுத்த செயல் நிகழ்ந்ததாகக் கூறுவதினும், அவன் இல்லாத நிலையில் இலக்குவனே அது செய்ததாகக் கூறியது நாகரிகமாகவும் இராமன் பெருமையைப் புலப்படுத்துவதாகவும் உள்ளது.

5. கோதாவரிக்கரையில் காலை வழிபாடு செய்துகொண்டிருந்த இராமன் அதை முடித்தபின் சூர்ப்பணகையின் விளிகுரல் கேட்டு வந்ததாகக் கூறியதும், வந்த இராமனைக் கண்டதும் அவள் 'நின் திருமேனிக்கு அன்பிழைத்த வன்பிழையால் யான் பட்டபடி இது காண்' என எதிரில் வீழ்ந்ததாகக் கூறியதும், மீட்டும் பழைய காதலையே நினைந்து தான்பட்ட துன்பத்தையும் மறந்து, உறுப்பறுத்த செயலும் நன்மைக்கே என்று கூறித் தன்னை யேற்றுக் கொள்ளுமாறு வேண்டியதாகக் கூறியதும் கம்பரின் கற்பனையே யாயினும் இவையாவும் காப்பியத்தில் நகைச்சுவையை யுண்டாக்

கும் நல்லுறுப்பாய் அமைந்து படிப்போர்க்கு மகிழ்ச்சியை யூட்ட வல்லதாதல் காண்க.

6. சூர்ப்பணகை, இராம இலக்குவரைக் கண்டவுடன் நீர்யார்? அரக்கர்க்கே யுரிய இவ்வனத்திற்கு வந்த காரணம் என்ன? என்று கேட்க, அவட்கு இராமன் தன் வரலாற்றை அமைதி நிலையில் கூறிய தாக வான்மீகம் கூறுகின்றது. ஆனல், உறுப்பு அறுப்புண்ட நிலையிலும் விடாது தம்மை வற்புறுத்தும் அவள் கழிபெருங் காமத்தைக் கண்டு வெகுண்டு இராமன் தன் வரலாற்றைக் கூறிப் பின் அரக்கரை அழிக்கவே வனத்திற்கு வந்ததாகவுங் கூறி அவளை அச்சுறுத்தியதாகக் கம்பர் கூறியுள்ளார்.

7. தன்னை மணந்துகொள்ளுமாறு வற்புறுத்திய சூர்ப்பணகைக்கு இராமன், 'நான் மனைவியுடன் இருப்பதால் நீ சக்களத்தியுடன் வாழவேண்டிய சங்கடத்தை யேற்கவேண்டி வரும்; என் தம்பி மனைவியுடன் இல்லாதிருத்தலின் அவனை மணந்துகொள்வது பொருந்தும். அவன் உனக்கேற்ற கணவனுவான்' என்று கூறின தாகவும், அவ்வாறே சூர்ப்பணகை இலக்குவனை நெருங்கிக் கேட்க, இலக்குவன், 'யான் என் அண்ணனுக்கு அடிமை! அடிமையை மணந்து அடிமையாகவா விரும்புகிருய்? என் அண்ணுதான் சுதந்தர முடையவர். அவர்க்கு இளைய மனைவியாகி மகிழ்ச்சியுடன் வாழ்க; பின் கிழவியாக உள்ள சீதையை விடுத்து, உன்னையே விரும்புவார்' என்று கூற, மீண்டும் இராமனை அணுகி, 'இவளை விரும்பி என்னை அவமதிக்கின்ருய்' என்று கூறிக்கொண்டு சீதையைத் தின்றுவிடுவ தாக அவள்மேல் பாய்ந்தாள் என்றும், இலக்குவனை விளித்து இராமன் 'இனி விளையாட்டை விடுத்துச் சீதையைக் காப்பாற்று; இவ்வரக்கியை உருக்குலைத்து விடு' என்று கட்டளையிட இலக்குவன் வாளால் அவள் மூக்கையும் காதையும் அறுத்தான் என்றும், அறுபட்ட சூர்ப்பணகை வந்த வழியே ஓடிக் கரனை அடைந்து தன் துயரைக் கூறினுள் என்றும் வான்மீகம் கூறுகின்றது.

குணக்கடலாகவுள்ள இராமன், சூர்ப்பணகைக்கு 'என் தம்பியை மணந்துகொள்; அவனே உனக்கேற்றவன்' என்று கூறியதும், அதற்குமேல் இலக்குவனும் அவ்வாறே விளையாட்டாக 'என் அண்ணனே தக்கவன் உனக்கு' என்று கூறியதும் இராமன் பெருநிலைக்கும் இலக்குவன் அடிமைநிலைக்கும் ஏற்ற சொற்களாக இல்லை ஆதலின், கம்பர், அதனை மாற்றிச் சூர்ப்பணகையே இராமனைப் பார்த்து 'உனக்கு மனைவி யிருப்பதால் என்னை மணந்து கொள்ள மறுத்தியாயின் உன் தம்பியை யேனும் மணந்துகொள்ளுமாறு செய்க' என்று வேண்டிக் கொண்டதாக அமைத்துள்ளார். இவ்வமைப்புமிகப் பொருத்தமாய்ச் சூர்ப்பணகையின் காதல்நிலையின்மை

யைக் காட்டுவதோடு, இராமன் பெருந்தன்மைக்கும் இலக்குவன் பத்திநிலைக்கும் இழுக்கில்லாமல் இருப்பதும் காணலாம்.

சூர்ப்பணகை, தன்னை இராமன் மணந்துகொண்டால் இராவணனுக்கிளைக்காமல் போர் செய்யவும், அரக்கர் மாயங்களை அறிந்து தடுக்கவும் தன்னால் இயலும் என்று கூறியதாக வான்மீகத்தில் இல்லை. இதனால், சூர்ப்பணகை தன் காதற்பசியைப் போக்கத் தன் உடன்பிறந்தாரையும் பலியிடத் தயங்காதவளாக இருந்தாள் என அவள் காமமிகுதியைப் புலப்படுத்தினார் கம்பர் என்க.

## படலப் பொருட் சிறப்பு

கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் இச்சூர்ப்பணகைப்படலத்தில் தன் புலமைத் திறத்தை நன்கு புலப்படுத்தியுள்ளார். இயற்கையெழில் நலங்களைக் கண்டு அநுபவிப்பதிலும், பிறரும் அநுபவிக்குமாறு அழகுற எடுத்துரைப்பதிலும் கவிஞர்கள் எவருமே ஆராத காதலுடையவர்கள். தாம் புனையுங் காவியத்தில் மலையும் கடலும் ஆறும் போன்ற எழில்மிகு பொருள்களைப் பற்றிப் பேச நேர்ந்துவிட்டால் எளிதின் விடுவரோ? அவர்தம் புலமையுள்ளந்தான் விடுமோ? இப்படலத்தில் கோதாவரியாறு கம்பரால் பாராட்டப் பெறும் பாக்கியம் பெறுகின்றது.

"உலகுபுரந் தூட்டு முயர்பே ரொழுக்கத்துப்
புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை யென்னும் பொய்யாக் குலக்கொடி"
(சிலப்.-13 : 168-170)

என இளங்கோவடிகள் கூறியுள்ளதை நோக்கின் புலவர்க்கும் ஆற்றுக்கும் உள்ள தொடர்பு நன்கு புலனும். ஆற்றின் பெருக்கைப் பற்றி—அதன் தெளிவையும் அழகையும் பற்றி—அது பயன்படும் சிறப்பைப் பற்றியெல்லாம் புலவர் பலரும் பலதிறமாகப் புனைந்துரைத்துள்ளார்கள். ஆயின் கம்பரைப்போல், "சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி" என ஆற்றுக்கு அருங்கவியை உவமை கூறிப் பொருத்தம் காட்டி விளக்கினோர் அரியர். அணியுடைமையும், பொருள்தருதலும், புலத்தது ஆதலும், அகத்துறைகள் தாங்குதலும், ஐந்திணை நெறியளாவுதலும், தெளிவுடைமையும், குளிர்ச்சியுடையதாய் ஒழுக்கம் தழுவுதலும் ஆகிய எழுவகையானும் ஆற்றுக்கும் கவிக்கும் ஒப்புமை யுண்டு என இரட்டுற மொழிதலால் நிறுவிக் காட்டிய கம்பரின் புலமைத்திறன் நினைதொறும் மகிழ்விக்கும் மாண்புடையதாகும். பம்பைப் பொய்கையைப் பற்றிக்கூறும்பொழுது "கீழுறக், கற்பகமனையவக் கவிஞர் நாட்டிய சொற்பொரு

ளாமெனத் தோன்றல் சான்றது'' (கிட்கிந்தா-பம்பை. 5) என்று கூறியுள்ளதும் இங்கு நினைத்தல் தகும்.

இவ்வாறு சிறப்பிக்கப் பெற்ற கோதாவரியாற்றைக் கதையோடு தொடர்புபடுத்திக் கூறியிருக்கும் அழகு, படிப்பவருள்ளத்தைக் கொள்ளை கொள்ளாமல் இராது. 'கோதாவரியாருகிய பெண், தாமரை மலராகிய முகம் பொலியப் பெற்றுக் குவளை மலராகிய கண்களால் இராமன் முதலியோரை ஒருங்கே நோக்கித் தன் அலைகளாகிய கைகளால் மலர்களை வாரித் தன்னருகில் உலவுகின்ற அவர்கள் திருவடிகளில் தூவிப் பணிவதுபோலத் தோன்றுகிறது' என்பது கம்பரின் கற்பனை. உடனே அக்காட்சி மாறுகின்றது; வேறொருகாட்சி தோன்றுகின்றது. அந்த ஆறு என்னும் பெண், தசரதன் மைந்தர்கள் வனத்தில் வதிந்து வருந்தும்-வருந்தப்போகும் - வருத்தத்தைப் பார்த்து தன் குவளை மலராகிய கண்களில் பனிநீராகிய கண்ணீர் பெருக அழுவதுபோலவும் தோன்றுகின்றதாம். அக்காட்டில் அவர் இனிமேல் உறப்போகின்ற வருத்தத்தை முன்னமே உணர்ந்து அந்த ஆறு அழுவதாகக் கூறியது, இனிவருங் கதைத் தொடர்பை நோக்கும்போது எவ்வளவு பொருத்தமுடையது என்பது புலனுகும். இவ்வாறே இளங்கோ வடிகளும், கண்ணகிக்கு மேலுண்டாகும் துன்பத்தை வையை யாறு முன்னமே உணர்ந்து வருந்தியதாக,

"வையை யென்னும் பொய்யாக் குலக்கொடி
தையற் குறுவது தானறிந் தனள்போல்
புண்ணிய நறுமல ராடை போர்த்துக்
கண்ணிறை நெடுநீர் கரந்தன ளடக்கி"

(சிலப்-13 : 170-173)

என்ற அடிகளில் புலப்படுத்தியுள்ளமை காணலாம்.

கோதாவரியாறு இராமன் முதலியோரைக் கண்டு மலர்தூவி வழிபட்டதாகவும், அவர்கள் வனத்தில் அடையும் வருத்தத்தை நோக்கி அழுவதாகவும் தற்குறிப்பேற்றமாகக் கூறிய கம்பர், அவ்வாற்றின் அழகில் ஈடுபட்டு மாலை நேரத்தில் இராமனும் சீதையும் கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியை மூன்று பாடல்களில் மிக அழகாகப் புலப்படுத்தியுள்ளார். கோதாவரியின் கரை மருங்கில் செந்தாமரை மலர்கள் சிறப்புற மலர்ந்திருக்கின்றன; அம்மலரையே பள்ளியாகக் கொண்டு சக்கரவாகப் பறவைகள் ஆணும் பெண்ணுமாய் அமர்ந் திருக்கின்றன. அப்பறவைகளின் வடிவமைப்பைக் கண்ட இராம னுக்கு, அருகில் உள்ள சீதையின் நகில்கள் நினைவுக்கு வருகின்றது; மகிழ்ச்சியோடு பார்க்கின்ருன். சீதையும் இராமன் தோள்களில் மனம்வைத்தவளாய் அங்குக் குவிந்துகிடக்கும் மணற்குன்றுகளைக்

கண்டு மகிழ்கின்ருள். அங்கு அன்னங்கள் மெல்லென ஒதுங்கு வதைக் கண்ட இராமன், தன்னருகில் நடந்து வரும் சீதை நடையின் ஏற்றத்தை நோக்கி மகிழ்ந்து சிறிய முறுவல் செய்கின்ருன். சீதையும் அங்கு வந்து நீருண்டு செல்கின்ற களிற்றியானை நடப்பதைக் கண்டு அந்நடையினும் இராமன் பீடு நடை சிறந்திருத்தலை நினைந்து புதியதோர் முறுவல் பூக்கின்ருள். நீர் வேட்கையால் தளர் நடையுடன் வந்த யானை, அந்நீர் வேட்கை தீர்ந்து மகிழ்ச்சியுடன் நடக்கும் நடைதானும் இராமன் பீடு நடைக்கு ஈடாகவில்லையே யென்று, யானை நடையை எள்ளுங் குறிப்பால் சீதை சிரிக்கின்ருள். புகழ் புரிந்த இல்லாளைப் பெற்றிருக்கின்றேம் என்ற பெருமித உள்ளத்தோடு நடக்கும் இராமன் பீடு நடைக்கு மத்தயானையின் நடையீடாகாதது இயல்பு தானே! காட்டு யானை நீர் வேட்கை தீர்ந்த மகிழ்ச்சியோடு நடக்கும் நடையைச் சீதை இப்பொழுதான் புதுவதாகக் காண்கின்ருளாகலின் அக்காட்சியில் வந்த முறுவலும் புதியதோர் முறுவலாயிற்று.

ஆற்றின் பக்கத்தில் மலர்க்கொடிகள் துவண்டு அசையும் அழகைக் காண்கின்ற இராமன், அக்கொடிக்கு உவமேயமாகச் சொல்லப்படும் சீதையின் இடையழகைப் பார்த்து மகிழ்கின்ருன். கருங்குவளை மலர்கள் மிகுதியாகப் பூத்துள்ள இடத்தில் இடையிடையே செந்தாமரை மலர்கள் சில மலர்ந்திருக்கும் அழகிய காட்சியைக் கண்ட சீதை, கரிய மேனியையும் சிவந்த கண் முதலிய உறுப்புக்களையுமுடைய இராமன் வடிவழகின் மேன்மையைக் கண்டு மகிழ்கின்ருள். இவ்வாறு பனிக்காலத்தில் மாலை வெயிலின் இன்பத்தையும், கோதாவரியின் இயற்கையெழிலையும் ஒருங்கே துய்க்க இராமனும் சீதையும் அவ்வாற்றங்கரையில் உலாவுகின்ற இன்பக் காட்சியையும், அக்காதலர் தமக்குள் ஒருவரை ஒருவர் உவமைப் பொருள்களோடு சேர்த்துக் கண்டு மகிழ்கின்ற மாண்பு மிக்க காதற் காட்சியையும் கம்பர் இங்குச் சிறப்பித்துக் கூறியுள்ளார். இவர்களின் காதற் காட்சியை இங்குச்சிறப்பிக்கக் காரணமென்னை? என நோக்குவோமாயின் ஒருண்மை புலப்படும்.

அவிகின்ற விளக்குச் சுடர்விட்டு எரிவது போலச் சில நாட்களுக்குள் பிரிந்து வருந்த இருக்கின்ற இராமனும் சீதையும் கோதாவரிக் கரையில் மகிழ்ச்சியின் உச்சநிலையில் உள்ளார்கள்: என்று உய்த்துணரும்வண்ணம் கம்பர் இவ்வின்ப நிகழ்ச்சியை இங்குக் கூறியுள்ளார். சிறிது நேரத்தில் சூர்ப்பணகை வரப்போகின்ருள்; அவள் காரணமாகக் கரதூடணர் வதை நடக்கப்போகின்றது; அவள் சொல் கேட்டு இராவணன் மறைந்த வேடத்தோடு வந்து

சீதையைக் கவர்ந்து செல்லப்போகின்றான். எனவே இன்று சீதையும் இராமனும் என்றும் காணாத இன்ப வாழ்வின் உச்சியில் இருப்பதாகக் கம்பர் காட்டியது பொருத்தந்தானே! இன்பத்தின் முடிவு துன்பந்தானே! சீதையின் உறுப்புக்களையும் அவற்றிற்குரிய உவமைப் பொருள்களையும் இராமன் மாறி மாறிக் கண்டு மகிழ்ந்த நிலையும், அவ்வாறே சீதை, இராமன் உறுப்புக்களையும் உவமானப் பொருள்களையும் கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியும் மறையப்போகின்றது. இருவரும் பிரிந்த பின் உவமானப் பொருள்களை மட்டும் கண்டு, அது கொண்டு உவமேயப் பொருள்களை நினைந்து வருந்த இருக்கின்றார்கள்! என்பனவெல்லாம் இந்நிகழ்ச்சி கொண்டு உய்த்துணர வைத்துள்ள அருமை பெருமையுடையதாகும்.

சீதை பிரிந்தபின் இராமன், பம்பைப் பொய்கையின் இயற்கை யெழிலைத் தனித்துக் கண்டபோது,

“கவள யானை யனாற்கு அந்தக் கடிநறுங் கமலத்து
அவளை ஈகலம்; ஆவது செய்தும்” என்று அருளித்
திவள அன்னங்கள் திருநடை காட்டுவ; தேனார்
குவளை காட்டுவ விழி; இதழ்காட்டுவ குமுதம்.”

(கிட்கிந்தா. பம்பை. 18)

எனப் பம்பைப் பொய்கையில் உள்ள அன்னங்கள், சீதையின் நடையையும், குவளைமலர்கள் அவள் விழியையும், குமுதமலர்கள் அவள் வாயிதழையும் இராமனுக்குக்காட்டியதாகக் கூறியிருத்தலும், இராமனும் அப்பொய்கையைப் பார்த்து, “பொய்காய், கண்ணு முகமுங் காட்டுவாய் வடிவு மொருகாற் காட்டாயோ?” (25) எனவும்.

“விரிந்த குவளை சேதாம்பல் விரைமென் கமலங் கொடி வள்ளை
தரங்கங் கெண்டை வராலாமை யென்றித் தகைய தமைநோக்கி,
மருந்தி னனையாள் அவயவங்கள் அவைநிற் கண்டேன் வல்லரக்கன்,
அருந்தி அகல்வான் சிந்தினவோ வாவி யுரைத்தி யாமன்றே”

எனவும், உவமானப்பொருள்களைக் கண்டு சீதையின் உறுப்புக்களை நினைவு கூர்ந்தமை பின்னர்க் காணலாம். கடற்கரையை யடைந்த இராமன், சீதையின் உறுப்புக்களை மனத்துட்கொண்டு,

“தரளமும் பவளமும் தரங்க மீட்டிய,
திரண்மணிக் குப்பையும் கனக தீரமும்
மருளுமென் பொதும்பரும் மணலின் குன்றமும்
புரள்நெடுந் திரைகளும் புரிந்து நோக்கினன்”

(யுத்த. விபீடணனடைக்கலப். 27) என உவமானப் பொருள்களை விரும்பி நோக்கினமையும் இங்கு நினைதல் தகும்.

சீதையும், இராமனைப் பிரிந்தபின் அவன் மேனிக்கு உவமையாகத்தக்க கருமுகிலும் அஞ்சனமும் போன்ற கரிய பொருள்களைக் கண்டு இராமன் மேனியை நினைந்து, காணாது வருந்திய நிகழ்ச்சியை,

" அரிய மஞ்சினோ டஞ்சன முதலிய யதிகம்
கரிய காண்டலுங் கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள "
(சுந்தர. 336)

என்பதால் அறிவித்தலைப் பின்னர்க் காணலாம். இவ்வாறாகப் பிரிந்த நிலையில் ஒருவர் ஒருவரைக் காணாது உவமானப் பொருள்களையே கண்டு கலங்க இருக்கின்ற இராமனையும் சீதையையும், கோதாவரிக்கரையில் உடனுறையும் மகிழ்ச்சியோடு உலாவச் செய்து, உவமானப் பொருள்களையும் உவமேயமாகிய உறுப்புகளையும் ஒருங்கே நோக்கி இன்புற்று மகிழச் செய்த கம்பரின் புலமை மாண்பு ஆழ்ந்து சிந்தித்து மகிழ்தற்குரியதாகும்.

சூர்ப்பணகை, இராமனைக் கண்டு அவன் பேரழகில் ஈடுபட்ட இயல்பைக் கம்பர் மிகமிக அழகாக விவரித்துள்ளார். அது, அநுமன் உருக்காட்டு படலத்தில் இராமனழகைச் சீதைக்குக் கூறும் பகுதியோடு பெரும்பாலும் ஒத்து விளங்குகின்றது. இராமன் அழகு பத்தர்களையும் பகைவர்களையும் வேறுபாடின்றி ஒரே தன்மையில் ஈடுபடச் செய்யும் இயல்பினது என்ற உண்மையை இதனால் உணரலாம். இராமனுடைய அழகு வெள்ளத்தில் ஆழ்ந்த சூர்ப்பணகை,

" எவன்செய இனியஇவ் வழகை எய்தினேன்
அவஞ்செயத் திருவுடம்பு அலச நோற்கின்றான்." (2846)

என வியந்தும் நயந்தும் கூறுகின்ற சொற்கள், அவள் உணர்ச்சியின் பெருக்கை எவ்வளவு அழகாக நமக்கு உணர்த்தி நிற்கின்றன காண்மின் !

சூர்ப்பணகை, வளையெயிறும் பெருவயிறுமுடைய தன் இயல்பான வடிவத்தோடு சென்றால் இராமன் விரும்பமாட்டான் என்று அவன் விரும்புதற்கேற்ற அழகிய வடிவைத் திருமகளின் அருளால் பெற்றுக்கொண்டு, தன் மென்மையும் எழிலும் தோன்ற வருதலைத் தெரிவிக்கும், 'பஞ்சியொளிர் விஞ்சுகுளிர்' (2859) என்று தொடங்கும் பாடலைப் படிக்குங்கால் அவ்வழகிய வடிவம் நம் கண்முன் நடந்து வருவதுபோன்ற உணர்ச்சி உண்டாதல் காணலாம். அவள் மாய வடிவத்தைக் கண்டு, மெய்ஞ்ஞானக் கண்ணருள்செய்கின்ற கண்ணனாகிய இராமனே, " ஆருழை அடங்கும்; அழகிற்கு அவதியுண்டோ?

நேரிழையர் யாவர் இவர் நேர் ?'' (2864) என வியந்து கூறச் செய்து அவள் வடிவழகைப் புலப்படுத்தியுள்ள மாண்பு போற்று தற்குரியதாகும்.

> '' ஏதுபதி? ஏதுபெயர்? யாவர் உறவு? என்றுன்
> வேதமுதல்; பேதை அவள் தன்னிலை விரிப்பாள்.'' (2866)

என்ற அடிகள் எவ்வளவு உயர்ந்த கருத்துக்களைத் தம்முள் அடக்கி வைத்திருக்கின்றன! அறிவின் நுட்பத்திற்குத் தக ஆழ்ந்து காணு தற்கேற்ற ஆழமும் தெளிவும் அமைந்து, சொல்லழகோடு ஓசை யினிமையும் நடையின் வீறும் கொண்டு இவ்வடிகள் மிளிர்தல் காண லாம். இராமனும் சூர்ப்பணகையும் உரையாடுகின்ற முறையே தனிச்சிறப்புடையதாய், இராமன் பெருந்தன்மையையும் சூர்ப்ப ணகையின் பேதைமையையும் விளக்குவதாகவே அமைந்திருத்தல் காணலாம்.

இராமன் பேரழகைக் கண்டு காதல்கொண்ட சூர்ப்பணகை, தன் காதலுக்குத் தடையாக வந்த சீதையின் அழகையும் கண்டு திகைத்து, வியந்து, "கண்பிற பொருளிற் செல்லா கருத் தெனினஃதே கண்ட, பெண் பிறந்தேனுக் கென்றால் என்படும் பிற ருக்கு '' (2888) என்று ஈடுபாட்டுடன் கூறியது சீதையின் பேரழகை உள்ளவாறு உணர்த்துவதாக உள்ளது. சீதையின் பேரழகைக் கேள்விப்பட்டுக் காதல்கொண்டு கவர்ந்துசென்ற இராவணன் தனக்குப் பகையாக வந்து போர்தொடுத்த இராமனைப் போர்க் களத்தில் கண்டு அவன் வீரச் செயலுக்குத் தோற்றும், அவன் பேர ழகில் ஈடுபட்டு,

> "வேயெனத் தகைய தோளி யிராகவன் மேனி நோக்கித்
> தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால்
> நாயெனத் தகுது மன்றே காமனு நாமுமெல்லாம்!"
> (யுத்த. கும்பகருணன்வதை. 30)

என மாலியவானிடத்தில் புகழ்ந்து கூறுதல் இங்கு ஒப்பு நோக்கு தற்கு உரியது. அழகிற்குச் சிறந்தவனென்று புகழ்பெற்ற காமனையும் தன்னோடு சேர்த்துக்கொண்டு, இராமனழகையும் வீரச் செயலையும் நோக்கின சீதையின் கண்களுக்குக் 'காமனும் நாமும் நாயெனத் தகுதும்' என்று கூறியதால் இராமன் அழகை எவ்வளவு சிறப்பாகப் புலப்படுத்தியுள்ளான் இராவணன் என்பது புலனாகும். இதனால் இராமனும் சீதையும் பகைவரும் பாராட்டும் பேரழகுடையவர்கள் என்பது பெறப்படும். இவற்றையெல்லாம் உளங்கொண்டு நோக்கின்,

"உருவினுக் குலக மூன்றின்
இருதிறத் தார்க்குஞ் செய்த வரம்பிவர் இருவர்" (2889)

என்ற சூர்ப்பணகையின் சொல், எவ்வளவு சிறந்த முடிபு என்பது புலனாகும்.

இராமன் பேரழகைக் கண்டு காதல்கொண்டவர் இருவர்; அவருள் சீதை நேர்மையான உண்மைக் காதலால் இராமன் அழகில் ஈடுபட்டு அவனைக் காணப்பெறாது வருந்தும் பகுதி பால காண்டத்தில் கூறப்பட்டது. மற்றொருத்தி சூர்ப்பணகை; இவள் இராமனழகில் ஈடுபட்டுக் காதல்கொண்டு, தகாத முறையில் தன் காதலைத் தானே தெரிவித்தும் அவன் அன்பைப்பெறாது வருந்தும் கைக்கிளைப் பகுதி இப்படலத்தில் கூறப்படுகின்றது. சீதையும் இராமனைக் கண்டபோது மன்மதனோ என்று ஐயுற்று,

"நெருக்கியுள் புகுந்தரு நிறையும் பெண்மையும்
உருக்கியென் னுயிரொடு முண்டு போனவன்,
பொருப்புறழ் தோள்புணர் புண்ணி யத்தது
கருப்புவில் அன்று; அவன் காமன் அல்லனே." (617)

என்கின்றாள். அவன் தோளில் இருப்பது கரும்புவில் அன்று; ஆதலின், அவன் மன்மதன் அல்லன்; என்று துணிகின்றமை காண்கின்றோம். சூர்ப்பணகையும், இராமன் பேரழகைக் கண்டு மன்மதனோ? என்று முன் ஐயுற்றுப் பின்,

'சிந்தையின் உறைபவற் குருவந் தீர்ந்ததால்' (2840)

என்று காரணங்காட்டி அவன்அல்லன் என்று துணிகின்றாள். மன் மதனுக்குரிய உருவம் சிவனுடைய நெற்றிக்கண்ணால் தீந்து தீர்ந்து போய்விட்டது; ஆதலின், உருவமுடைய இவன் மன்மதன் அல்லன் என்பது இவள் முடிபு. இருவரும் இராமனைக் கண்ட காட்சியும், அவன் அழகுபற்றிக் கொண்ட ஐயமும், காரணங்காட்டிப் பெற்ற துணிபும், அவன் முகமுதலியவற்றைப்பற்றிக் கூறுவனவும் ஒத்த இயல்பினவாகவே யுள்ளன. ஆனால், சீதை இராமனைக் கண்ட போது இராமனும் சீதையைக் காண்கின்றான். இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்துகின்றனர். ஒருங்கிய இரண்டுடற் குயிரொன்றாகின்றனர். இவர்கள் காமம் அன்பின் ஐந்திணையாகும்.

சூர்ப்பணகை இராமனை விண்ணிலிருந்து காண்கின்றாள்; காதல்கொள்கின்றாள். இராமன் அவளைக் கண்டிலன்; சூர்ப்ப ணகையின்மேல் காதலுங் கொண்டிலன். அவள்தானே வலியவந்து எழில்மிகு வடிவு காட்டித் தன் காமத்தை யுணர்த்திய பின்னும்

சிறிதும் விரும்பவில்லை. எனவே இவள் காமம், கைக்கிளையாகிய ஒருதலைக் காமத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றது.

இராமனைக் கண்ட சீதை இரவில் இராமன் நினைவால் வருந்துவதையும் கம்பர் கூறியுள்ளார்; சூர்ப்பணகை இராமனையெய்தப்பெருது இரவில் அவன் நினைவால் வருந்துவதையும் அவரே கூறுகின்ருர். சீதையின் விரகதாபச் சொற்களுக்கும், சூர்ப்பணகையின் விரகதாபச் சொற்களுக்கும் உள்ள வேறுபாடு பெரிதாகும் என்பதை அவ்விரண்டு பகுதியையும் ஒப்பிட்டு நோக்கின் அறியலாம். இராமனைக் காணமுடியாத நிலையில் சீதை, "என் கன்னிமாமதில், எறிந்த அக்குமரனை இன்னும் கண்ணிற்கண்டு, அறிந்துயி ரிழக்கவும் ஆகுமேகொலாம்" (622) என்று கலங்குகின்ருள். அந்தநிலையில் சூர்ப்பணகை என்ன சொல்லுகின்ருள் பாருங்கள்; 'இன்றிவ னாகம்புல்லே னெனினுயிர் இழப்பென்' என்பது இவள் எண்ணம். பிரிவாற்ருமையால் இறப்பது உறுதி; ஆனல் இறப்பதற்குள் அக்குமரனை ஒருமுறையேனும் காணும் வாய்ப்புக் கிடைக்குமோ? என்று ஏங்கும் சீதையின் உண்மைக் காதலுக்கும், இன்றைக்கு இவன் மார்பகத்தைத் தழுவேனுயின் உயிர் இழப்பேன் என்று உடற்புணர்ச்சியையே விரும்பும் சூர்ப்பணகையின் விலங்குணர்ச்சிக்கும் எத்துணை வேறுபாடு! முன்னையது மலரினும் மெல்லிய காதலாதலும், பின்னையது கல்லினும் வலிய காமவுணர்ச்சியாதலும் தெளிவாதல் காணலாம்.

சந்திரனைக் கண்டு சீதை பேசுகின்ருள்:

"கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
மடுவி லின்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடென் ருலெனைச்
சுடுதி யோகடற் ருேன்றிய திங்களே" (640)

என்பது அவள் துன்பக்குரல். தன்னைச் சுடுகின்ற சந்திரனைப் பார்த்துக் கூறுகின்ற இச்சொற்களில் கடுமையைக் காணேம்; இனிமையைக் காண்கின்ருேம். சந்திரனை ஏசுந்தன்மையைக் கண்டிலம்; அவனைப் புகழ்ந்துகூறும் தன்மையையே காண்கின்ருேம். இன்னு செய்யும் திங்களுக்கும் இனியவே கூறும் சால்புடைமையைச் சீதையால் காண்கின்ருேம். 'இனிய நல்லமிழ்தத்தோடும் மெல்லியலாகிய திருமகளோடும் பிறந்த நீ பெண்ணுகிய என்னைச் சுடுதல் பொருத்தமாக இல்லையே' என்று எவ்வளவு நயமாக இனிதாகத் தன்கருத்தைப் புலப்படுத்துகின்ருள்! சாக்காட்டை நீக்கும் அமிழ்தத்தோடு பிறந்தவன், சாக்காடு உண்டாக்குதல் பொருந்தாது; பெண்ணேடு பிறந்தவன் பெண்துயர் காணது வருத்துதல் பொருத்தமின்று,

தண்ணிதாகிய கடலில் தோன்றியவனுக்குச் சுடுந்தன்மை எப்படி வந்தது? என்பனபோன்ற நுண்ணிய கருத்துக்களை எண்ணித் திங்களும் இரக்கங்கொள்ளுமாறு அவள் சொற்கள் அமைந்துள் ளமை காண்க. இச்சொற்களால் சீதையின் மென்மைத்தன்மையும் பெருந்தன்மையும் நன்கு புலப்படுதல் காணலாம்.

சூர்ப்பணகை, சந்திரனுடைய நிலவொளியால் வருந்திய நிலையில் என்ன நினைக்கின்றாள்? காண்மின்!

"கலையு வாமதி யேகறி யாகவன்
சிலையின்மாரனைத் தின்னும் நினைப்பினாள்" (2902)

"அணவில் திங்களை நுங்க அராவினைக்
கொணர்வெ னேடி யெனக்கொதித் துன்னுவாள்." (2905)

என்பன காண்க. தன் கைக்கு எட்டாத சந்திரனைக் கறியாகத் தின்னுதற்குக் கருதியும், இயலாதநிலையில், 'அவனை விழுங்குதற்கு இராகு என்னும் பாம்பினை விரைந்து சென்று கொணர்வேன்' என்று அச்சந்திரன்மேல் கோபங்கொண்டு நினைப்பாள் என்பது கருத்து. இதனால், சூர்ப்பணகையின் அரக்கத்தன்மையை எவ்வளவு நன்றாகப் புலப்படுத்தியுள்ளார் கம்பர்; காண்மின்! தனக்குத் தீங்கு செய்வதாகக் கருதப்பட்ட சந்திரனைத் தானே பிடித்துத் தின்ன வேண்டும், என்ற கருத்தினளாய்க் கைக்கு எட்டாமல் விண்வழிச் செல்லுதலின் அச்சந்திரனை இராகு என்னும் பாம்பைக் கொண்டே னும் விழுங்கச் செய்யவேண்டும்: என்று கொலையையே விரும்பு கின்ற சூர்ப்பணகையின் வன்னெஞ்சிற்கும் சீதையின் மென் னெஞ்சிற்கும் எவ்வளவு வேறுபாடு! இவ்விருவர் நிலையினையும் மேலும் ஆய்ந்துகாணின் பல வேறுபாடுகள் தோன்றும். உயர்ந்த காதற்குச் சீதை வரம்பு என்றும், இழிந்த காமத்திற்குச் சூர்ப்ப ணகை வரம்பு என்றும் சுருங்கக் கூறலாம்.

கவி, தான் எடுத்துக் கொண்ட காப்பியக் கதையைக் கூறிச் செல்லும்போது, அக்கதைத் தொடர்புடைய நிகழ்ச்சிகளையே உவமையாக்கியும் தற்குறிப்பேற்றமாக்கியும் இயைபுபடக் கூறும் திறம் இப்படலத்துள் பல இடங்களில் காணலாம். சூர்ப்பணகை, சீதையைத்தூக்க விரைகின்றது கண்ட இலக்குவன், அவள் மூக்கு முதலிய உறுப்புக்களை அறுக்கின்றான்; அறுக்கும்போது இது இரா வணனோடு விளையும் போர்க்குக் காரணமாகும் என்ற கருத்தோ, இராவணனைக் கொல்லப்போகின்றோம் என்ற கருத்தோ இலக்குவ னுக்கு இல்லை என்பது வெளிப்படை. ஆனால், சூர்ப்பணகையின் மூக்கறுத்த செயலே பரம்பரையாக இராவணனைக்கொல்லுதற்கும் காரணமாகின்றது என்பதை உணர்ந்த கம்பர், "வாளின் அக்

கொடியாள், முலேதுமித்துயர் மூக்கினே நீக்கிய முறைமை, மலேதுமித் தென இராவணன் மணியுடை மகுடத், தலேதுமித்தற்கு நாட் கொண்ட தொத்ததோர் தன்மை'' எனத் தற்குறிப்பேற்ற உவமையாகக் கூறிப் பின் விளேவை முன்னரே விளக்கியுள்ளமை கதைப்போக்கிற்குப் பெருஞ்சுவையூட்டி யிருத்தல் காணலாம்.

தலேவராக உள்ளவர்களுக்குத் தீங்கு விளேயப் போவதை இயற்கை முன்னரே உலகிற்கு உணர்த்தும் இயல்பு என்றும் உண்டு; இதனே உற்பாதம் என்பர். தாடகை இராமன் கணேயால் இறந்து வீழ்ந்ததை உணர்த்தவந்த கம்பர்,

'' பொடியுடைக் கான மெங்குங் குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை யெயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலேக டோறும்
முடியுடை யரக்கற் கந்நாள் முந்தியுற் பாத மாகப்
படியிடை யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்'' (415)

என்று கூறியுள்ளது காணத்தக்கது. மேகம் குருதிமழை பெய்தலும் அத்தகைய உற்பாதமேயாகும். கரிய பெரிய உடம்பினளாகிய சூர்ப்பணகை, உறுப்பறுப்புண்டு குருதி சோர எழுந்து நிற்கின்ருள் ; அவள் உடம்பு கருமுகிலேப் போன்றும், அவள் உடம்பில் பெருகும் குருதி, உதிரமாரி போன்றும் காணப்படுகின்றன. இவ்வுவமை யைக் கதையோடு தொடர்புபடுத்திக் கூறும்போது, சுவை விஞ்சு கின்றது. 'கரன் முதலாகிய அரக்கர்களின் இறுதியை உணர்த்தும் தீநிமித்தமாக அங்கு வந்து உதிரமாரி பெய்யும் கரியமேகத்தைப் போலச் சூர்ப்பணகை எழுந்து நின்ருள்' எனக் கம்பர் தற்குறிப் பேற்ற உவமையாக்கி, நினேதொறும் இனிக்குமாறு அழகுபடக் கூறி யிருத்தல் காணலாம்.

சூர்ப்பணகை தன் உறவினர்களேயெல்லாம் விளித்துத் தான் பட்டதை அறிவிக்கும் பகுதி, இராவணனுடைய பெருஞ்சிறப்புக்களே யெல்லாம் நன்கு புலப்படுத்துவதாய், இராம இலக்குவர் அஞ்சித் தன் கருத்திற்கு உடன்படுவர் என்ற எண்ணத்தால் கூறப்பட்ட தாகும். அந்நோக்கத்தால் கூறும் அவள் வாக்கினல், இனி நிகழ இருக்கும் உண்மை நிகழ்ச்சியையும் கூறச் செய்துள்ள கம்பர் திறம் பாராட்டுதற்குரியதாகும்.

"தேவரையுந் தெறுமாற்றல், தானுடைய இராவணற்குந் தம்பி யர்க்கும் தவிர்ந்ததோ ? ஊனுடைய உடம்பினராய் எங்குலத் தோர்க்குணவாய, மானுடவர் மருங்கேபுக் கொடுங்கினதோ வலி யம்மா ?" .(2934) என்று துன்புற்ற சூர்ப்பணகை வெறுப்புடன் கூறிய இச்சொற்கள் பிற்காலத்து உண்மை நிகழ்ச்சியாய் விளேந் தமை காணலாம்.

கம்பர், சூர்ப்பணகையைச் சொலல் வல்லவளாகவும் நமக்குக் காட்டியுள்ளார். இராமனோடு அவள் உரையாடும் பகுதியைப் பார்க்கின் அது நன்கு புலனும். தன்னோடு உரையாடுவோர் குறிப்பறிந்து அவள் விரைந்து விடை பகரும் தன்மை நமக்கு வியப்பை யுண்டாக்கும். 'வீர, இவள் மூக்கும் காதும் விரைந்து அறுக்க இவள் செய்த பிழை என்னை ?' என்று இராமன், இலக்கு வனைக் கேட்டபோது, இலக்குவன், நல்லாள்மேல் அப்பொல்லா தாள் ஓடிய நிகழ்ச்சியைக் கூறினுனக, அவன் கூறி முடித்தற்கு முன்னமே சூர்ப்பணகை, "மாற்றவளைக் கண்டக்கால் அழலாதோ மனம்" என்று தான் சீதையை நெருங்கியதற்குக் காரணம் கூறு கின்றவள், இராமனை,

"சேற்றவளை தன்கணவ னருகிருப்பச் சினந்திருகிச்
சூற்றவளை நீருழக்குந் துறைகெழுநீர் வளநாடா" (2950)

என்று விளிக்கின்ருள். இங்கு இராமனது நாட்டிற்குக் கொடுத் துள்ள அடை ஆழ்ந்து சிந்தித்தற்குரியது. 'அறிவிற்குறைந்த அஃறிணையுயிராகிய தவளைதானும் கலவிக்குத் தகுதியின்றிக் கருவுற் றிருக்கும் நிலையிலும் தன் கணவன் அருகில் வேற்றுச் சாதிப் பெண்பால் இருத்தலைக் கண்டு பிணங்கும் நாட்டினையுடையநீ, என் போன்ற அறிவுடையோர் கலவிக்குரிய பருவத்தில், கணவன் பக்கத்தில் மாற்ருள் இருத்தலை நோக்கி, மனம்பொருது அவளுக்குக் கேடுசூழக் கருதுதல் இயல்பே என்பதை அறிதற்குரியனுவாய்; ஆதலால் என் செயலுக்காகக் கோபங்கொள்ளலாகாது' என்ற குறிப்பு அவ்விளியால் பெறப்படுதல் காணலாம். இவ்வாறு வருதலைக் கருத்துடை யடைகொளியணி என்பர். அகப் பொருட் டுறையில் இதனை இறைச்சி என்னும் உள்ளுறையாகக் கொள்வர். இதனுல் பொருள் பொதிந்த அவள் சொல்வன்மை தெரியலாம்.

இனி, தன்னை மூக்கறுத்த செயல் தவறு என்பதுபடக்கூறி அழுது புலம்பியவள், இராமனைக் கண்டவுடன் அவனை மணந்து கொள்ளவேண்டும் என்னும் பெருங்காமத்தால், மூக்கறுத்த அச் செயலையே தன் நன்மைக்காகச் செய்தது எனவும், தன்மேல் வைத்த பேரன்பால் செய்ததெனவும், 'அப்பால் செல்லாமல் நம் மருங்கே இருந்துவிடுவாள்' என்ற எண்ணத்தாலும், அயலார் எவரும் பார்க்கமாட்டார்கள் என்ற கருத்தாலும் செய்தது எனவும் மாற்றிக் கூறி நிறுவும் அவள் சொற்றிறன் வியந்து பாராட்டற் குரியதாகும் (2961). அவள் சாம பேத தான தண்டம் என்ற நால் வகை யுபாயத்தானும் இராமனை வயப்படுத்த உரைக்கும் சொற் றிறனை ஊன்றி நோக்கியுணரலாம்.

சூர்ப்பணகையை ஒருதலைக் காமத்திற்கு மேல்வரம்பாகத் திகழு மாறு கம்பர் அமைத்துக் காட்டியுள்ளார் என்பதை உளங்கொண்டு நோக்கின், இராமனுக்கு மனைவி ஒருத்தி உளள் என்பதை உணர்ந்த பின்னும், அவன்மேல் காதல்கொண்டு அவள் கருத்தழிதலும், சீதையை மறைத்துவைத்தேனும் தன்னாசையை நிறைவேற்றிக் கொள்ள எண்ணுதலும், உறுப்பு அறுப்புண்ட பின்னரும், இராம னோடு இரண்டாவது மனைவியாகவேனும் வாழ ஆசைப்படுதலும், இராமன், 'அரக்கரை அழிக்கவே வந்திருக்கின்றோம்' என்று வெகுண்டு கூறிய பின்னும், 'இராவணனைக் கொல்லுதற்கும் துணை செய்வேன், அவனுக்கு இளையேன்' என்று அண்ணனைக் கொல் லவும் துணிந்து கூறுதலும், மனைவி இருப்பதால் இராமன் உடன் படாவிடினும் இளையவனோடேனும் தன்னைச் சேர்க்குமாறு கூறு தலும் அவள் நிலைக்குப் பொருத்தமிக்கனவேயாம் என்பது புலனும்.

---

# 5. சூர்ப்பணகைப் படலம்

## கோதாவரியின் தோற்றம் 2829–2831

**2829.** புவியினுக் கணியா யான்ற
பொருடந்து புலத்திற் ருகி
யவியகத் துறைக டாங்கி
யைந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென்
ருெழுக்கமுந் தழுவிச் சான்ருேர்
கவியெனக் கிடந்த கோதா
வரியினை வீரர் கண்டார்.

புவியினுக்கு அணியாய், ஆன்ற
பொருள் தந்து, புலத்திற்று ஆகி,
அவி அகத் துறைகள் தாங்கி,
ஐந்திணை நெறி அளாவிச்
சவி உறத் தெளிந்து, தண் என்று
ஒழுக்கமும் தழுவிச் சான்ருேர்
கவி எனக் கிடந்த கோதா
வரியினை வீரர் கண்டார்.

பொ :—நிலமகளுக்கு ஓர் அணிகலனுய் (அணியிலக்கணம் பொருந்தியதாய்), சிறந்த பொருள்கள் பலவும் கொடுத்து (சிறந்த பொருட்சுவையளித்து), விளை நிலங்களை (ப்பக்கத்தே) யுடையதாய் (அறிவினிடத்ததாகி), அவியுணவு கொடுக்கும் வேள்வித்துறைகளை யுடையதாய் (அமைந்த அகப்பொருளிலக்கணத்துறை வகைகளை யுடையதாய்), ஐவகை நிலங்களின் வழியைச் சேர்ந்து (ஐந்து திணைகளின் இலக்கணத்தைத் தழுவி,) ஒளி விளங்கும் தெளிவினை யுடையதாகி (அழகு மிகும்படி தெளிவினைக் கொண்டதாகி), குளிர்ந்த நீரோட்டத்தையுடையதாய் (குளிர்ந்த இனிதாகிய நடையையும் கொண்டு), உயர்ந்த புலவர்களால் இயற்றிய கவி போல விளங்கிக்கொண்டிருந்த கோதாவரியாற்றினை வீரர்களான இராம இலக்குவர் கண்டார்கள்.

கு :—இங்குக் கோதாவரியாற்றிற்குச் சான்ருேர் கவியைச் சிலேடை நயம் தோன்ற உவமை கூறியுள்ளார் புலவர். முதலில் 'ஆறில்லா ஊருக்கழகு பாழ்' என்றபடி, ஓடிக் கிடக்கும் ஆறு

பூமிக்கு அணியாய் இருக்கிறது. அணிபெறச் செய்யுள் யாத்தலால், கவியும் மாந்தருக்கு அலங்காரமுடையதாய் விளங்குகிறது. இரண்டாவது, மணியும் பொன்னும் ஆரமும் அகிலும் போன்ற சிறந்த பொருள்களையும் மற்றும் மலை வளங்களையும் ஆற்றுப்பெருக்கானது அடித்துக்கொண்டு வருவதால், 'ஆன்ற பொருள் தந்து' என்றார். சிறந்த பொருட் செறிவும் பொருட் சுவையும் கவியினிடத்திலும் உள்ளன. மூன்றாவது, ஆற்றின் பக்கங்களிலெல்லாம் வயல்களைக் காணலாம்; விளைச்சல் நிலங்கள் மல்கியிருக்கும். புலம் என்றால் நிலம். அறிவு என்றும் பொருள்படும். கவியானது அறிவால் நுகர்ந்து இன்பம் துய்த்தற்குரியது. எனவே 'புலத்திற்றாகி' என்றார். நான்காவதாக, ஆற்றங்கரையோரங்களில் நெய் பெய்து ஓமத்தீயை வளர்க்கும் ஓம குண்டங்களை நெடுகிலும் காணலாம். அதுவன்றி, வெப்பத்தைத் தணியவைக்கும் மரச்செறிவினையுடைய நீர்த் துறைகள் பலவற்றையும் மருங்கிலே கொண்டயாறு என்றும் பொருள் கூறலாம். கவியும் அகப்பொருளிலக்கணத்திலுள்ள துறைகளைத்தாங்கி நிற்கும். ஐந்தாவதாக, முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை என்னும் ஐந்துவகை நிலங்கள் வழியாகவும் ஆறு ஓடிவரும். ஐந்திணை இலக்கண நெறியிலே கவியும் அமைந்து விளங்கும். ஆறாவது, ஆற்றுப் புனலானது ஒளி பொருந்திய தெளிவினையுடையதாயிருக்கும். கவியும் சொற்றெளிவு பொருட்டெளிவு உடையதாயிருக்கும். தெளிவில்லாக் கவிக்கு அழகில்லையாதலால் 'சவியுறத் தெளிந்து' என்றார். ஏழாவது, இடையறாது குளிர்ந்த நீரொழுக்கு ஆற்றில் உண்டு. கவிக்கும் குளிர்ந்த நடை உண்டு. சான்றோர் கவி மேலான உறுதி பயக்கும் ஒழுக்க நடையைக் கற்பிப்பதாகவும் இருக்கும். இவ்வேழு காரணங்களாலும் கோதாவரியாறு சான்றோர் கவியை ஒத்து விளங்கியது என்றார். (1)

**2830.** வண்டுறை கமலச் செவ்வி
வாண்முகம் பொலிய வாச
முண்டுறை குவளை யொண்க
ணொருங்குற நோக்கி யூழிற்
றெண்டிரைக் கரத்தின் வாரித்
திருமலர் தூவிச் செல்வர்க்
கண்டடி பணிவ தென்னப்
பொலிந்தது கடவுள் யாறு.

வண்டு உறை கமலச் செவ்வி வாள் முகம் பொலிய வாசம் உண்டு உறை குவளை ஒண் கண் ஒருங்கு உற நோக்கி ஊழின்

தெண் திரைக் கரத்தின் வாரித் திரு மலர் தூவிச் செல்வர்க்
கண்டு அடி பணிவது என்னப் பொலிந்தது கடவுள் யாறு.

பொ :—தெய்வத்தன்மை பொருந்திய அக்கோதாவரி ஆறு, வண்டுகள் தங்குகின்ற தாமரை மலராகிய அழகிய ஒளி பொருந்திய முகம் மலர்ந்து விளங்க, மணம் உட்கொண்டு தங்கப்பெற்ற கருநீல மலர்களாகிய ஒளியுள்ள கண்களால் ஒருசேரப் பார்த்து, முறையே தெளிவான அலைகளாகிய கைகளால் அழகிய மலர்களை எடுத்து அருச்சித்து, இராமன் முதலிய மூவரையும் நோக்கித் திருவடிகளை வணங்குவது போல விளங்கியது.

கு :—பொதுவாக நீரிலே வளரும் தாமரை ஆற்றின் முகமாகவும் குவளை மலர்கள் கண்களாகவும் கரையில் வந்து வீசும் அலைகள் கைகளாகவும் உருவகம் செய்யப்பட்டன. அலைகளாற் பலவகைப் பூக்களைச் சிதறிக்கொண்டு கரையிலே விரைந்து வந்து மோதுகின்ற கோதாவரியாற்றின் காட்சி, ஒரு பெண் செல்வர்களைக் கண்டு முகமலரக் கண்களால் பார்த்துக் கைகளால் மலர்களை எடுத்து அருச்சித்து அடிபணிவது போன்றிருந்தது என்றவாறும். கங்கையையும் இவ்வாறே

"சாந்தணி புளினத்தின் றடமுலை யுயர் கங்கை
காந்தின மணிமின்னக் கடிகமழ் கமலத்திற்
சேந்தொளி விரியுந்தெண் டிரையெனு நிமிர்கையால்
ஏந்தின ளொருதானே யேற்றின ளினிதப்பால்" (2077)

எனப் பெண்ணாக உருவகஞ் செய்து கூறியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தகும். (2)

2831. எழுவுறு காத லாலிங்
கிரைத்திரைத் தேங்கி யேங்கிப்
பழுவநாட் குவளைச் செவ்விக்
கண்பனி பரந்து சோர
வழுவிலா வாய்மை மைந்தர்
வனத்துறை வருத்த நோக்கி
யழுவது மொத்த தாலவ்
வலங்குநீ ராறு மன்னோ

எழுவுறு காதலால் இங்கு
இரைத்து இரைத்து ஏங்கி ஏங்கிப்
பழுவ நாள் குவளைச் செவ்விக்
கண் பனி பரந்து சோர,
வழு இலா வாய்மை மைந்தர்
வனத்து உறை வருத்தம் நோக்கி,
அழுவதும் ஒத்ததால், அவ்
அலங்கு நீர் ஆறு மன் ஓ.

பொ :—அசைகின்ற நீரினையுடைய அக்கோதாவரி ஆறு, தவறுதல் இல்லாத உண்மை மொழியையுடைய அக்குமரர்கள் காட்டிலே வந்து தங்குகிற வருத்தம் தரும் நிலைமையைப் பார்த்து, மேல் எழுகின்ற மிக்க அன்பினால் மிக ஓலமிட்டு மிக இரங்கித் தொகுதியாகவுள்ள அன்று மலர்ந்த நீல மலர்களாகிய அழகிய கண்களினின்று நீர்த்துளிகள் நிறைந்து சிந்தும்படி அழுவதையும் ஒத்திருந்தது.

கு :—இங்கு, மன், ஓ - அசைகள். பனி என்பது இங்கே பனி நீர்த்துளிகள். பழுவம் - காடு : இங்கே தொகுதியென்னும் பொருளில் வந்தது. மைந்தர் என்று கூறினாரேனும் மாதினையும் ஈண்டு இனம்பற்றிக் கொள்ளப்படும். வாய்மை காக்க மன்னுயிர் துறந்த தயரதனையே சிறப்புப்பற்றி 'வாய்மை' எனக் குறித்ததாகக் கொண்டு 'வாய்மை மைந்தர்' என்பதற்குத் தயரதன் மைந்தர் எனப் பொருள்கூறலும் ஆம்.

"வையை யென்ற பொய்யாக் குலக்கொடி
தையற் குறுவது தானறிந் தனள்போல்
புண்ணிய நறுமல ராடை போர்த்துக்
கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி"
(சிலப்-13. 170-173)

என்பதும்,

"கருநெடுங் குவளையு மாம்பலும் கமலமும்
தையலுங் கணவனுந் தனித்துறு துயரம்
ஐய மின்றி யறிந்தன போலப்
பண்ணீர் வண்டு பரிந்தினைந் தேங்கிக்
கண்ணீர் கொண்டு காலுற நடுங்க" (சிலப்–13. 184-188)

என்பதும் இங்கு ஒப்பு நோக்கத் தகுவன. (3)

## இராமனும் சீதையும் இயற்கை யெழிலைக் கண்டு மகிழ்தல் 2832-2834

**2832.** நாளங்கொ ணளினப் பள்ளி
நயனங்க ளமைய நேமி
வாளங்க ளுறைவ கண்டு
மங்கைதன் கொங்கை நோக்கு
நீளங்கொள் சிலையோன் மற்றை
நேரிழை நெடிய நம்பி
தோளின்கண் மனம்வைத் தன்ன
சுடர்மணித் தடங்கள் கண்டாள்.

நாளம் கொள் நளினப் பள்ளி,
நயனங்கள் அமைய, நேமி
வாளங்கள் உறைவ கண்டு
மங்கைதன் கொங்கை நோக்கும்
நீளம் கொள் சிலையோன்; மற்றை
நேரிழை, நெடிய நம்பி
தோளின்கண் மனம் வைத்து அன்ன
சுடர் மணித் தடங்கள் கண்டாள்.

பொ :—நீண்ட வில்லைக்கொண்ட இராமன், சக்கரவாகப்புடகள், தண்டினைக் கொண்டிருக்கின்ற தாமரை மலர்களாகிய படுக்கையில் கண்கள் அமைதி நிலையில் மூடியபடியே தங்கியிருப்பதைக் கண்டு சீதையின் கொங்கைகளைப் பார்த்தான்; திருத்தமான அணிகலன் களையுடையவளாகிய சீதையும், பெருமையிற் சிறந்தவனான இராம னுடைய தோள்களினிடத்தே மனதைச் செலுத்தி அவற்றை ஒத்தனவாய் விளங்கிய மணிகள் நிறைந்த மணற் குன்றங்களைப் பார்த்தாள்.

கு :—இராமன் சீதையின் மார்பை நோக்கினனாக, அது கண்டு பெருநாணினளான சீதை தன் பார்வையை இரத்தினக் குன்றங் களிடையே செலுத்தினளாக, அவை இராமன் திருத்தோள்களை நினைப்பூட்டவும் கண்ணால் காண நாணி, மனதால் நினைந்து மகிழுற்றாள் என்க. இராமன் உவமைப் பொருளை நோக்கிப் பின் அதன் உவமேயப் பொருளை நோக்கினனாகச் சீதை, நம்பியின் தோள்களை மனத்தால் நோக்கி அவற்றிற்குவமையாகும் மணிகளை யுடைய மணற்குன்றங்களைக் கண்டாள் என்க. “நோக்கிய நோக் கெனும் நுதி கொள் வேல் இணை, ஆக்கிய மதுகையான் றோளின்

ஆழ்ந்தன; வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும், தாக்கணங்கனை யவடனத்திற் றைத்தவே" (599) என்பது இங்கு நினைத்தற் குரியது. (4)

2833. ஓதிம மொதுங்கக் கண்ட
வுத்தம னுழைய ளாகுஞ்
சீதைதன் னடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் செய்தான்
மாதவ டானு மாண்டு
வந்துநீ ருண்டு மீளும்
போதக நடப்ப நோக்கிப்
புதியதோர் முறுவல் பூத்தாள்.

ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழையள் ஆகும்
சீதைதன் நடையை நோக்கிச் சிறியது ஓர் முறுவல் செய்தான்;
மாது அவள்தானும், ஆண்டு வந்து நீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப் புதியது ஓர் முறுவல் பூத்தாள்.

பொ :—(கோதாவரிக் கரையிலே) அன்னப் பறவை ஒதுங்கி நடந்து செல்வதைப் பார்த்த உத்தமனான இராமன், பக்கத்திலுள்ளவளான சீதையின் (வெல்லும்) நடையழகை(த் திரும்பி)க் கண்டு ஒரு புன்சிரிப்புக் கொண்டவனானான்; சீதையும், அங்கு வந்து நீரைப் பருகிவிட்டுத் திரும்பிக்கொண்டிருந்த ஆண் யானை விலகி நடப்பதைக் கண்டு, (இராமன் நடை அதனினும் சிறந்து விளங்க நோக்கி) அதுகாறும் இல்லாத ஒரு புதிய முறுவல் கொண்டாள்.

கு :—அன்னம் சீதையின் நடைக்குத் தோற்றதனால் ஒதுங்கியது என்க. மீளும் போதகம் இராமன் நடைக்கு இடைந்ததாகக் கொண்டு சீதை ஒரு புதிய முறுவல் பூத்தாள் என்றவாறு. பெண்ணின் நடைக்கு அன்னமும் ஆணின் நடைக்கு யானையும் உவமிக்கப்படும் பொருள்கள். அன்னம் தோற்றதற்கு இரங்கி இராமன் சிறியதோர் முறுவல் செய்தான். தன் கணவனின் நடை ஆண் யானையின் நடையை வென்றமை நோக்கிச் சீதை புதியதோர் முறுவல் பூத்தாள். திடீரென்று அவள் முறுவல் கொண்டது தோன்றப் 'புதியதோர் முறுவல்' என்றார். வேற்று மனிதர் வரவு நோக்கி இயல்பாகவே ஒதுங்கிய அன்னத்தைச் சீதையின் நடைக்குத் தோற்று ஒதுங்கியதாக ஒரு நயம் தோன்றக் கூறப்பட்டது. அதுபோலவே யானைக்கும் கொள்க. (5)

2834. வில்லிய றடக்கை வீரன்
வீங்குநீ ராற்றின் பாங்கர்
வல்லிக ணுடங்கக் கண்டான்
மங்கைதன் மருங்கு னேக்க
வெல்லியங் குவளைக் கானத்
திடையிடை மலர்ந்து நின்ற
வல்லியங் கமலங் கண்டா
ளண்ணறன் வடிவு கண்டாள்.

வில் இயல் தடக்கை வீரன் வீங்கு நீர் ஆற்றின் பாங்கர் வல்லிகள் நுடங்கக் கண்டான் மங்கைதன் மருங்குல் நோகக, எல்லி அம் குவளைக் கானத்து இடை இடை மலர்ந்து நின்ற அல்லி அம் கமலம் கண்டாள், அண்ணல்தன் வடிவு கண்டாள்.

பொ:—விற்பொருந்திய பெரிய கையினையுடைய வீரனாகிய இராமன், மிகுந்த நீரினையுடைய கோதாவரியாற்றின் பக்கத்தில் நீர்க்கொடிகள் அசைவதைப் பார்த்து (உடனே) சீதையின் இடையை நோக்க, இருள்போலக்கறுத்த அழகிய குவளை மலர்த் தொகுதியினிடையிடையே பூத்து விளங்கிய அகழ்விதழ்களையுடைய அழகிய செந்தாமரை மலர்களைக் கண்டவளான சீதை, இராமனது (கரிய) உருவம் (நினைவிற்கு வர) அதனைப் பார்த்தாள்.

கு:—வல்லிகள் சீதையின் மருங்குலுக்கும், குவளைக்கானம் இராமனின் நிறத்துக்கும், கமலம் இராமனுடைய கண், கை, கால் முதலிய உறுப்புக்களுக்கும் உவமை. (6)

பன்னசாலையில் தங்குதல்

2835. அனையதோர் தன்மை யாலவ்
வருவிநீ ராற்றின் பாங்கர்ப்
பனிதரு படிவப் பஞ்ச
வடியெனும் பருவச் சோலைத்
தனியிட மதனை நண்ணித்
தம்பியாற் சமைக்கப் பட்ட
வினியபூஞ் சாலை யெய்தி
யிருந்தன னிராம னிப்பால்.

அனையது ஓர் தன்மையால் அவ் அருவி நீர் ஆற்றின் பாங்கர்ப்
பனி தரு படிவப் பஞ்சவடி எனும் பருவச் சோலைத்
தனி இடம் அதனை நண்ணித் தம்பியால் சமைக்கப்பட்ட
இனிய பூஞ்சாலை எய்தி இருந்தனன் இராமன்; இப்பால்.

பொ :—அப்படிப்பட்டதொரு தன்மையினுல் (அவ்வாறு அந்த ஆற்றின் வளங்களை யெய்லாம் கண்டு மகிழ்ந்துகொண்டே) அருவி நீராற் பெருகிய அக்கோதாவரியாற்றின் பக்கத்திலிருக்கிற குளிர்ச்சியைத் தருகின்ற அழகான பஞ்சவடியென்று சொல்லப்பட்ட இளஞ் சோலையில் ஓர் தனி இடத்தைச் சேர்ந்து (அங்கே) இளையவனுன இலக்குவனுல் செய்து முடிக்கப்பட்ட இனிமையான அழகிய பன்ன சாலையை யடைந்து இராமன் இருந்தான்; இதன் பின்னர்.

கு :—இதன்பின்னர் நிகழ்ந்தவை பின்வரும் கவிகளிற் கூறப்படும். (7)

இச்செய்யுளின் பின் 12 என்னும் குறியீடுள்ள சுவடியில்,

2835 (a) அரியணை துறந்து பன்ன
சாலையி லமர்ந்த வையன்
வரிவிழிச் சனகி பாதம்
வருடமெய்ஞ் ஞான யோகத்
தெரிதுயி லுணரும் போதிற்
றேவர்கோன் சிறுவன் சிந்தைப்
பரிவினுற் காக்கை ரூபங்
கொண்டனன் பறந்து வந்தான்.

2835 (b) வந்தவன் சனகி மார்பிற்
கொத்தலுங் குருதி மாரி
சிந்திட வதனை யையன்
விழித்தனன் தெரிந்து சீறிப்
பைந்தளிர்த் தருப்பை யொன்றைப்
பிரமமந் திரத்தைப் பாவித்
திந்திரன் மகன்மே லேவ
வதுகனன் றெழுந்து சீறி.

2835 (c) பின்தொடர் தலுங்கண் டஞ்சிப்
பெயர்ந்தனன் பிரமன் றன்பால்
சென்றன னபய மென்முன்
அவனிது தீர்ப்பார் யாரே

யென்றன னகற்றப் பின்னு
மீரெழு லோகத் தும்போய்த்
தன்றிற லொழிந்து மீண்டு
வந்திரு சரணந் தாழ்ந்தான்.

2835 (d) ஐயகோ சிறிய நாயே
னறிவிலா மையினு லிங்ஙன்
செய்பிழை பொறுத்தி யென்று
செப்பினன் செப்ப லோடும்
எய்கணைக் கிலக்கா யுன்கண்
ணிரண்டிலொன் றீவா யென்ன
நைவுறு மனத்தா னேரப்
பறித்தம்பு ஞாலத் திட்ட

2835 (e) அங்கவன் காக்கை ரூப
மமைந்தொர்கண் ணிழத்த லாலே
யெங்கணு மிருக்கும் காக்கை
யினங்களுக் கிருக ணுக்கும்
தங்கிய மணியொன் ருகி
யொருகண் டோன்றிடுஞ்ச யந்தன்
செங்கணான் பாதம் போற்றிச்
செம்பொனு டடைந்தா னிப்பால்.

என்ற ஐந்து மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

## சூர்ப்பணகை வருகை 2836—2839

2836. நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
★ மூலநா சம்பெற முடிக்கு மொய்ம்பினள்
மேலைநா ளுயிரொடும் பிறந்து தான்விளை
காலமோர்ந் துடனுறை கடிய நோயனள்.

நீல மா மணி நிற நிருதர் வேந்தனை
மூல நாசம் பெற முடிக்கும் மொய்ம்பினள்,
மேலை நாள் உயிரொடும் பிறந்து, தான் விளை
காலம் ஓர்ந்து, உடன் உறை கடிய நோய் அனள்.

பொ :—ஆதியில் (உடலில்) உயிர் தோன்றிய காலத்துத் தானும் தோன்றித் தான் கெடுதி செய்வதற்குரிய முதிர்ந்த காலம் எப்பொழுது வரும் என்று காத்திருந்து அறிந்து, அவ்வுயிருடனே

(உடலில்) வாழ்ந்து வருகின்ற கொடிய பிணியை ஒத்தவளாகி, சிறந்த நீலரத்தினம் போன்ற கரு நிறத்தையுடைய இராக்கதர்க்கு அரசனான இராவணனை வேரொடு கெடும்படி அழிக்கும் வல்லமையை யுடையவளும். (ஆகிய சூர்ப்பணகை என்க.)

கு :—" நீலமாமணி நிறத் தரக்கனை " எனச் சம்பந்தர் தேவாரத்தினும் (3-91-8) வந்துள்ளது. " உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா, உடன் பிறந்தே கொல்லும் வியாதி " என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். பின் இவரே, " உந்தரு நிலையதாகி யுடனுறையுயிர்கள் தம்மை யந்தகற்களிக்கும் நோய்போல் அரக்கி " (கரன்வதை : 56) எனக் கூறுதலும் காண்க. (8)

2837. செம்பரா கம்படச் செறிந்த கூந்தலாள்
வெம்பரா கந்தனி விளைந்த மெய்யினு
ளும்பரா னவர்க்குமொண் டவர்க்கு மோதநீ
ரிம்பரா னவர்க்குமோ ரிறுதி யீட்டுவாள்.

செம்பு அராகம் படச் செறிந்த கூந்தலாள்,
வெம்பு அராகம் தனி விளைந்த மெய்யினுள்,
உம்பர் ஆனவர்க்கும் ஒண் தவர்க்கும் ஓத நீர்
இம்பர் ஆனவர்க்கும் ஓர் இறுதி ஈட்டுவாள்.

பொ :—செம்பினது செந்நிறம் பொருந்திய நெருங்கிய கூந்தலை யுடையாளும், கொதிக்கின்ற காமவிச்சை ஒப்பில்லாமல் வளர்ந்த உடலினையுடையாளும் மேலுலகத்திலுள்ளவர்களுக்கும், ஒள்ளிய தவத்தினையுடைய முனிவர்கட்கும், கடல்சூழ்ந்த இவ்வுலகத்திலுள்ளவர்களுக்கும் ஒரு முடிவைத் தேடுவாளும் (ஆகிய சூர்ப்பணகை என்க.)

கு:—செம் பராகம் எனப் பிரித்து, சிவந்த புழுதி என்றும் பொருள் கூறலாம். பராகம் என்பதற்கு மகரந்தம் என்றும் பொருள் கூறலாம். அராகம் - ஆசை. தேவர்க்கும் முனிவர்க்கும் இவ்வுலகோர்க்கும் ஓர் இறுதி ஈட்டுவாள் என்றது, ஓர் அழிவைச் செய்வாள் என்றும், அவர்கள் துன்பத்துக்கு ஒரு முடிவு கட்டுவாள் என்றும் இருபொருளும்பட நின்றமையறியலாம். (9)

2838. வெய்யதோர் காரண முண்மை மேயினள்
வைகலுந் தமியளவ் வனத்து வைகுவா

ஞெய்தினிவ் வுலகெலா நுழையு நோன்மையா
ளெய்தின ளிராகவ னிருந்த சூழல்வாய்.

வெய்யதோர் காரணம் உண்மை மேயினுள்,
வைகலும் தமியள் அவ் வனத்து வைகுவாள்,
நொய்தின் இவ் உலகு எலாம் நுழையும் நோன்மையாள்,
எய்தினள், இராகவன் இருந்த சூழல்வாய்.

பொ :—விரைவில் இவ்வுலக முழுவதும் புகுந்து செல்லவல்ல ஆற்றலையுடையவளும், விரும்பினவளாய் நாள்தோறும் தனியாக அத்தண்டகவனத்துத் தங்குபவளுமான சூர்ப்பணகை, கொடியதொரு காரணம் உள்ளதால் இராமன் இருந்த சோலையினிடத்து வந்து சேர்ந்தாள்.

கு:—மேயினுள்-விரும்பினவளாய். நொய்தின்-விரைவில்;எளிதில் என்றும் கொள்ளலாம். வெய்யதோர் காரணமாவது இராவணுதியர் குலத்தோடு தொலையும்படியான கொடியதோர் ஊழ்வினை. அல்லது இராமன் சீதையைப் பிரியும்படியானதொரு காரணம் என்றும் கொள்ளலாம். மற்றும் முதலடிக்கு, பின்னிகழும் தீய காரியத்திற்கெல்லாம் ஒரு காரணமாயிருத்தலைப் பொருந்தினவள் அல்லது, தீங்கு தேடுங் காரணமாக முன்னை யூழையடைந்துள்ளாள் என்றும் பொருள்கொள்ளலாம். இவள் ஊழானே பிறர்க்கும் தனக்கும் தீங்கு தேடுதற்கமைந்தாள் என்பது கருத்து. இனி, சூர்ப்பணகை தன் மகன் இறந்த கொடிய காரணத்தின் உண்மையை அறிய விரும்பினவளாய் அவ்வனத்தில் வசிக்கின்ருள் என்று பொருள் கூறலுமொன்று. மற்றும் தனது கணவனுன வித்யுச்சிகுவன் என்னும் அசுரனைத் தனது தமையனுன இராவணன் காலகேயரை வெல்லுகையிற் கொல்ல, அதனுல் தான் கைம்மையை அடைந்து இராவணனை நிந்தித்து, அவன் வேண்டுகோளினுல் கரன் முதலோர் துணையோடு அவ்வனத்து வாழ்ந்து வந்தாள் என்றும் பொருள் கூறுவர். இன்னும் வெய்யதோர் காரணம் என்பது அவள்கொண்ட கொடிய காம இச்சையைக் குறிப்பதாகக் கூறுவாரும் உளர். (10)

2839. எண்டகு மிமையவ ரரக்க ரெங்கண்மேல்
விண்டனர் விலக்குதி யென்ன மேலைநா
ளண்டசத் தருந்துயி றுறந்த வையனைக்
கண்டன டன்கிளைக் கிறுதி காட்டுவாள்.

எண் தகும் இமையவர், 'அரக்கர் எங்கள்மேல்
விண்டனர், விலக்குதி' என்ன, மேலை நாள்
அண்டசத்து அருந்துயில் துறந்த ஐயனைக்
கண்டனள், தன் கிளைக்கு இறுதி காட்டுவாள்.

பொ :—தன் சுற்றத்தார்களுக்கு முடிவைக் காட்டுகின்ற சூர்ப்பணகை, ஆதிகாலத்தில் மதிக்கத் தகுந்த தேவர்கள், "இராக்கதர்கள் எங்கள்மீது பகைகொண்டார்கள்; (அவர்களால் எங்களுக்கு நேரிடுந்துன்பத்தை) விலக்கியருள்வாய்" என்று வேண்டப் பாம்பணையினின்றும் அரிய உறக்கத்தையொழித்து இராமனாக அவதரித்தருளிய தலைவனைப் பார்த்தாள்.

கு :—எண்தகும் இமையவர் என்றது நான்முகன், இந்திரன் முதலியோரை. விண்டனர்: விள் பகுதி; விள்ளல் - வேறுபடுதல். அண்டசம் - முட்டையிற் பிறப்பது : இங்குச் சிறப்புவகையால் ஆதிசேடன் என்னும் பாம்பை உணர்த்திற்று. இராமன் அவதரித்த நோக்கம் எளிதில் முடியத் துணை செய்பவளாய்க் கண்டனள் என்றவாறு. இவள் இராமனைக் கண்டு காதல்கொண்டு அதற்குத் தடையான சீதையை எடுக்க முயன்று மூக்கரியுண்டமையே, இராவணன் இறுதிக்குக் காரணமாதல் தோன்ற, "கண்டனள் தன்கிளைக் கிறுதி காட்டுவாள்" என்றார். (11)

45, 52 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகங்களில் கீழ்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது.

2839 (a) கண்டுதன் னிருவிழி களிப்ப கா......கத்து
எண்டரு புளகித மெழுப்ப ஏதிலாள்
கொண்டதீ வினைத்திறக் குறிப்பை யோர்கிலாள்
அண்டர் நாதனையிவ னாரென் றுன்னுவாள்.

## இராமனழகை வியத்தல் 2840—2855

**2840.** சிந்தையி னுறைபவற் குருவந் தீர்ந்ததா
லிந்திரற் காயிர நயன மீசற்கு
முந்திய மலர்க்கணோர் மூன்று நான்குதோ
ளுந்தியி னுலகளித் தாற்கென் றுன்னுவாள்.

'சிந்தையின் உறைபவற்கு உருவம் தீர்ந்ததால்;
இந்திரற்கு ஆயிரம் நயனம்; ஈசற்கு
முந்திய மலர்க்கண் ஓர் மூன்று; நான்கு தோள்
உந்தியின் உலகு அளித்தாற்கு' என்று உன்னுவாள்.

பொ :—(அச்சூர்ப்பணகை) "யாவரது மனத்திலுந் தங்குபவனாகிய மன்மதனுக்கு வடிவம் ஒழிந்தது; தேவேந்திரனுக்கு ஆயிரம் கண்கள் (உண்டு); சிவபிரானுக்கு முற்பட்ட மலர்போலுங் கண்கள் மூன்று (உண்டு); (தனது) திருவுந்தியினின்று உலகங்களையுண்டாக்கி யருளின திருமாலுக்கு நான்கு தோள்கள் (உண்டு)" என்று நினைப்பாள்.

கு :—இராமனைக் கண்ட சூர்ப்பணகைக்கு முதலில் மன்மதன் நினைப்பு வந்தது, அவனைக் கண்டதும் காமம் கொண்டமையால். "மன்மதனுக்கு உருவம் கிடையாதே! ஒருவேளை இந்திரனோவெனில் ஆயிரம் கண்களைக் காணோமே! நிரம்பவழகியனான சிவனாய் இருக்குமோவெனில் மூன்றுகண் வேண்டுமே! திருமாலேதான் எனில் நான்கு தோள்கள் இல்லையே!" என்று இவ்வாறு சிந்தித்தாள் என்க. இராமன் வடிவழகு, மன்மதனோ? இந்திரனோ? ஈசனோ? திருமாலோ? என்று ஐயுறுமாறு இருந்தது என்பதும், அந்நால்வருமல்லர் என்பதைக் காரணங்காட்டித் துணிந்தாள் என்பதும் அறியலாம். (12)

2841. கற்றையஞ் சடையவன் கண்ணிற் காய்தலா
லிற்றவ னன்றுதொட் டின்று காறுந்தா
னற்றவ மியற்றியவ் வநங்க னல்லுருப்
பெற்றன னுமெனப் பெயர்த்து மெண்ணுவாள்.

'கற்றை அம் சடையவன் கண்ணில் காய்தலால்
இற்றவன், அன்றுதொட்டு இன்றுகாறும் தான்
நல் தவம் இயற்றி, அவ் அநங்கன், நல் உருப்
பெற்றனனும்' எனப் பெயர்த்தும் எண்ணுவாள்.

பொ:—"திரளான அழகிய சடையையுடைய சிவபெருமான் (தன்) நெற்றிக் கண்ணினால் எரித்ததால் (உடல்) இழந்தவனாகிய அந்த மன்மதன் (உடலிழந்த) அந்நாள் முதல் இந்நாள் வரையிலும் நல்ல தவத்தைச் செய்து இந்த நல்லுருவத்தையடைந்தான் போலும்" என்று மீண்டும் நினைப்பாள்.

கு :—யோகத்தமர்ந்த சிவபெருமான் என்பாள் 'கற்றையஞ் சடையவன்' என்றாள். முதலில் மன்மதனோ என ஐயப்பட்டுப் பின் இல்லையெனத் தெளிந்த சூர்ப்பணகை, அவ்வநங்கனினும் அழகு விஞ்சியவனாகத் தவவேடத்திலிருந்த இராமன் தோன்றவும், அதே மன்மதனே பின்னர்த் தவம் செய்து இந்நல்லுருப் பெற்றனன் போலும் என்று மீண்டும் ஐயுறுகின்றாள். (13)

2842. தரங்களி னமைந்துதாழ்ந் தழகின் சார்பின
மரங்களு நிகர்க்கல மலேயும் புல்லிய
வுரங்களி னுயர்திசை யோம்பு மானையின்
கரங்களே யிவன்மணிக் கரமென் றுன்னுவாள்.

'தரங்களின் அமைந்து தாழ்ந்து அழகின் சார்பின;
மரங்களும் நிகர்க்கல; மலேயும் புல்லிய;
உரங்களின் உயர் திசை ஓம்பும் ஆனையின்
கரங்களே இவன் மணிக் கரம்'என்று உன்னுவாள்.

பொ:—"சிறப்பில் ஒத்து அமைந்து (முழந்தாளளவும்) தாழ்த லடைந்து அழகுக்கு இருப்பிடமாயுள்ளன (இவன் கைகள்; ஆதலால் இவற்றை) மரங்களும் ஒப்பனவல்ல; (இவற்றுக்கு உவமையாவதற்கு) மலேகளும் எளியனவாம்; இவனுடைய அழகிய கைகள் வலிமையால் உயர்ந்த திக்கைத் தாங்கும் யானைகளின் துதிக்கைகளேயாம்." என்று நினைப்பாள்.

கு:—மரங்கள் என்றது பனைமரத்தை என்றும் கூறுப. மலேயும் புல்லிய என்றது, புற்களையுடைமையால் என்றும் கூறுப. முதலடி யின் பொருளை மரங்களுக்கு அடையாக்கி, இவைபோல் இரண்டாக உவமையிற் பொருந்தி, தாழ்ந்து, அழகினையுடையனவாய் மரங்கள் இல்லை; அப்படி உளவெனினும் அவை இவன் கைகளுக்கு ஒப்பாகா என்றும் பொருள் கூறலாம். (14)

2843. வின்மலே வல்லவன் வீரத் தோளொடுங்
கன்மலே நிகர்க்கல கனிந்த நீலத்தி
னன்மலே யல்லது நாம மேருவும்
பொன்மலே யாதலாற் பொருவ லாதென்பாள்.

'வில் மலே வல்லவன் வீரத் தோளொடும்
கல் மலே நிகர்க்கல; கனிந்த நீலத்தின்
நல் மலே அல்லது, நாம மேருவும்
பொன் மலே ஆதலால், பொருவலாது' என்பாள்.

பொ:—"வில்லினாற் பொரவல்லவனாகிய இவனது வலி பொருந் திய தோள்களுக்கு முதிர்ந்த நீல நிறத்தினையுடைய நல்ல மலேயே யல்லாமல் கல்லாலாகிய மலேகள் இணையாகமாட்டா; பெருமை பொருந்திய மேருமலேயும் பொன்னினாலாய மலேயாயிருக்கின்ற தாகையால் ஒப்பாகாது" என்று நினைப்பாள்.

கு :—இராமன் தோளுக்கு இந்திர நீலமலை உவமை என்றாள் என்க. (15)

2844. தாளுயர் தாமரைத்
தளங்க டம்மொடுங்
கேளுயர் நாட்டத்துக்
கிரியின் றோற்றத்தான்
றோளொடு தோள்செலத்
தொடர்ந்து நோக்குறி
னீளிய வல்லக
ணெடிய மார்பென்பாள்.

'தாள் உயர் தாமரைத் தளங்கள் தம்மொடும்
கேள் உயர் நாட்டத்துக் கிரியின் தோற்றத்தான்
தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின்
நீளிய அல்ல கண்; நெடிய மார்பு' என்பாள்.

பொ :—"நாளத்தினையுடைய உயர்ந்த தாமரைமலரினது இதழ்களுடனே உறவினைக் கொண்ட உயர்ந்த கண்களையுடைய மலைபோலுந் தோற்றத்தினையுடைய இவனது ஒரு தோளிலிருந்து மற்றொரு தோள் முடிய இடைவிடாமற் பார்ப்பதாயின் (என்) கண்கள் நீட்சியுள்ளனவல்ல; மார்பு அவ்வளவு அகன்று நீளமாயுள்ளது" என்று நினைப்பாள்.

கு :—நீண்ட தோள்கள் இரண்டையும் ஒரு சேரக் காண்பதற்குப் போதுமானபடி தன் கண்கள் நீளமுடையவல்ல என்று வருந்தினாள் என்க. தோள்களைக் கூறியவள் மார்பையும் சேர்த்துக் கூறினாள், அவை இரண்டினிடத்தும் அவள் மனம் ஈடுபட்ட நிலையில்; தோள்களின் நீட்சியையும் மார்பின் பரப்பையும் ஒருங்கே காணவிழைந்து முற்றுப் பெறாமல் தன் கண்களின் சிறுமையை நினைந்து வருந்தினாள் என்பது கருத்து. (16)

2845. அதிகநின் றொளிருமிவ் வழகன் வாண்முகம்
பொதியவிழ் தாமரைப் பூவை யொப்பதோ
கதிர்மதி யாமெனிற் கலைக டேயுமம்
மதியெனின் மதிக்குமோர் மறுவுண் டென்னுமால்.

'அதிகம் நின்று ஒளிரும் இவ் அழகன் வாள் முகம்
பொதி அவிழ் தாமரைப் பூவை ஒப்பதோ?
கதிர் மதி ஆம் எனில் கலைகள் தேயும்; அம்
மதியெனின், மதிக்கும் ஓர் மறு உண்டு' என்னும் ஆல்.

பொ :—"மிகுதியாகி நிலைபெற்று விளங்குகிற இந்த அழகினை யுடையவனது ஒளி முகம் கட்டவிழ்ந்த தாமரை மலரை ஒப்ப தாகுமோ? (ஆகாது). கிரணங்களோடு கூடிய சந்திரன் தக்க உவமையாமெனின், (அது) கலை குறைந்து தேய்தலையடையும்; (அங்ஙனம் கலைகள் தேய்வடையாத) அழகிய உவாமதியோவெனில், அந்த நிறைந்த திங்களுக்கும் ஒரு களங்கம் உண்டு" என்று நினைப்பாள்.

கு :—செந்தாமரை, மாலையில் குவிதலையுடையது ஆதலால், ஒப்பாகாது என்றாள். இராமன் முகம் களங்கமில்லாத நிறைமதி போன்று விளங்கியதாக அவள் எண்ணினாள் என்பது கருத்து. (17)

**2846.** எவன்செய வினியவிவ்
வழகை யெய்தினே
னவஞ்செயத் திருவுடம்
பலச நோற்கின்றா
னவஞ்செயத் தகையவிந்
நளின நாட்டத்தான்
றவஞ்செயத் தவன்செய்த
தவனெ னென்கின்றாள்.

'எவன் செய, இனிய இவ் அழகை எய்தினேன்,
அவம் செயத் திரு உடம்பு அலச நோற்கின்றான்?
நவம் செயத் தகைய இந் நளின நாட்டத்தான்
தவம் செயத் தவன் செய்த தவன் என்?' என்கின்றாள்.

பொ :—"இப்படிப்பட்ட இனிமையான அழகை எய்திய இவன் (வேறு) எதனைப் பெறுவதற்காக (இவ்வழகு) வீணாகும்படி தன்னுடைய அழகிய உடல் வருந்தத் தவம் செய்கின்றான்? புதுமையை விளைக்கத்தக்க தாமரைமலர் போலுங் கண்களையுடைய இவன் (இவ்வாறு) தவம் செய்வதற்கு அத்தவந்தான் என்ன தவத்தைச் செய்ததோ?" என்று நினைத்தாள்.

கு :—அவம் - வீண். நவம் - புதுமை. (18)

2847. உடுத்தநீ ராடைய ளுருவச் செவ்வியள்
பிடித்தரு நடையினள் பெண்மை நன்றிவ
னடித்தலந் தீண்டலி னவனிக் கம்மயிர்
பொடித்தன போலுமிப் புல்லென் றுன்னுவாள்.

'உடுத்த நீர் ஆடையள், உருவச் செவ்வியள்,
பிடித்தரு நடையினள் பெண்மை நன்று! இவன்
அடித்தலம் தீண்டலின் அவனிக்கு அம் மயிர்
பொடித்தன போலும் இப் புல்' என்று உன்னுவாள்.

பொ:—"கடலை ஆடையாக அணிந்தவளும் அழகிய வடிவத்தை யுடையவளும் பெண் யானை போன்ற நடையினையுடையவளுமான நிலமாதினது பெண் பிறவி நன்மையையுடையது! (நிலத்தில் முளைத்துக் காணப்படுகின்ற) இந்தப் புற்கள் இவனுடைய திருவடிகள் தீண்டப்படுதலால் நிலமகளுக்கு அழகிய மயிர்கள் சிலிர்த்தன போன்றன!" என்று நினைத்தாள்.

கு:—கடல் நிலத்தைச் சூழ்ந்திருத்தலால் அதனை ஆடையாகக் கூறுதல் கவி மரபு. 'பிடித்தரு' என்பதில் எதுகை நோக்கி ஒற்று மிகுந்தது. நிலமகள் பெண்ணாய்ப் பிறந்ததன் பயனாக நற்பேறு பெற்றாள் என்பாள் 'பெண்மை நன்று' என்றாள். இராமன் திருவடி தீண்டப்பெற்ற மகிழ்ச்சியின் காரணமாக நிலமகளுக்கு மேனி சிலிர்த்தது என்றாள். நிலத்தின்மீது வளர்ந்துள்ள புல்லை நில மாதின் மயிராகக் கூறினாள். தனக்கு அப்பேறு கிடைக்கவில்லையே என்று பொறாமையால் இங்ஙனம் கூறினாள். (19)

2848. வாணிலா முறுவலான் வயங்கு சோதியைக்
காணல னேகொலோ கதிரி னாயகன்
சேணெலாம் புல்லொளி செலுத்திச் சிந்தையி
னாணலன் மீமிசை நடக்கின் றானென்றாள்.

'வாள் நிலா முறுவலான் வயங்கு சோதியைக்
காணலனே கொலோ கதிரின் நாயகன்
சேண் எலாம் புல் ஒளி செலுத்திச் சிந்தையின்
நாணலன் மீமிசை நடக்கின்றான்' என்றாள்.

பொ:—"ஒளி பொருந்திய நிலவு போன்ற பற்களையுடைய இவனது (திருமேனியில்) விளங்கும் பேரொளியை நெடுந்தூர மட்டும் அற்பமான தனது வெளிச்சத்தைப் பரப்பிக்கொண்டு

மனதிலே வெட்கமில்லாதவனாய் உயரத்தில் செல்லுகின்ற ஒளிகளுக்குத் தலைவனான சூரியன், ஒளி பொருந்திய நிலவு போன்ற பற்களையுடைய இவனது (திருமேனியில்) விளங்கும் பேரொளியைப் பார்த்தானில்லை போலும்!" என்று நினைத்தாள்.

கு :—இராமன் மேனியிலுள்ள ஒளி பேரொளியாதலின் சூரிய வொளியைப் 'புல்லொளி' என்றாள்; ''வெய்யோனொளி தன் மேனியின் விரிசோதியின் மறைய'' (2016) என்று முன்னும் கூறப்பட்டது. 'காணலனே கொலோ' என்றது, கண்டால் நாணி மீமிசை நடவான் என்னும் குறிப்பினது. (20)

**2849.** குப்புறற் கரியமாக் குன்றை வென்றுய
ரிப்பெருந் தோளவ னிதழுக் கேற்பதோ
ரொப்பென வுலகமே லுரைக்க வொண்ணுமோ
துப்பினிற் றுப்புடை யாதைச் சொல்லுகேன்.

'குப்புறற்கு அரிய மாக் குன்றை வென்று உயர்
இப் பெருந் தோளவன் இதழுக்கு ஏற்பது ஓர்
ஒப்பு என உலகமேல் உரைக்க ஒண்ணுமோ?
துப்பினில் துப்புடை யாதைச் சொல்லுகேன்?'

பொ :—"கடத்தற்கு அருமையான பெரிய மலையை(த் தமக்கு ஒப்பாகாதபடி) வென்று உயர்ந்துள்ள பெரிய தோள்களையுடைய இவனது வாயுதடுகளுக்குப் பொருத்தமானதாக இந்த உலகத்தின் மீதுள்ள ஒன்றை உவமையாகச் சொல்ல முடியுமோ? பவழத்தை விடவும் சிவப்பாக வேறு எதனை (நான்) சொல்லவல்லேன்?"

கு :—துப்பு - பவழம், செந்நிறம். இதனால் இராமன் வாயிதழ்க்குப் பவழமும் உவமையாகாது என்பது விளக்கியவாறு. (21)

**2850.** நற்கலை மதியுற வயங்கு நம்பித
னெற்கலை திருவரை யெய்தி யேமுற
வற்கலை நோற்றன மாசி லாமணிப்
பொற்கலை நோற்றில போலு மாலென்பாள்.

'நல் கலை மதி உற வயங்கு நம்பிதன்
எல் கலை திரு அரை எய்தி ஏமுற
வற்கலை நோற்றன மாசு இலா மணிப்
பொன் கலை நோற்றில போலும், ஆல்' என்பாள்.

பொ :—"நல்ல கலைகளோடு கூடிய சந்திரனை ஒப்பாக விளங்குகின்ற இச் சிறந்த ஆண்மகனது இருளை விலக்குகின்ற அழகிய இடையின்கண்ணே அடைந்து இன்பம் அடையும்படி மரவுரி செய்த தவங்களைக் குற்றமில்லாத அழகிய பொன்னுலாகிய ஆடைகள் (பீதாம்பரம்) செய்யவில்லை போலும்!'' என்று நினைப்பாள்.

கு :—எல் - இரவு, இருள். ஏமுற - இன்பமடைய. ஆல்: அசை. 'எல்கலை' என்பதற்குச் சூரியனும் நிலைகுலையும்படியான என்று பொருள் கூறலுமாம். 'மாசிலாமணிப் பொற்கலை நோற்றில போலும்' என்றது, பொற்கலை யுடுத்திருந்தால் இந்நீலமேனியின் அழகு இன்னும் சிறப்புற்று விளங்குமே என்னுங் குறிப்பினது. 'திருவரை யெய்தி யேமுற வற்கலை நோற்றன' என்றமையால், இராமனையடைந்து ஏமுற வேண்டுமாயின் தவம் செய்திருத்தல் வேண்டும் என்ற தெளிவு, சூர்ப்பணகைக்கும் உண்டு என்பது புலனாகும். (22)

2851. தொடையமை நெடுமழைத் தொங்க லாமெனக்
கடைகுழன் றிடைநெறி கரிய குஞ்சியைச்
சடையெனப் புனைந்தில னென்னிற் றையலா
ருடையுயிர் யாவையு முடையுமா லென்றாள்.

'தொடை அமை நெடு மழைத் தொங்கல் ஆம் எனக்
கடை குழன்று இடை நெறி கரிய குஞ்சியைச்
சடை எனப் புனைந்திலன் என்னில், தையலார்
உடை உயிர் யாவையும் உடையும், ஆல்' என்றாள்.

பொ :—"தொடர்ச்சி பொருந்திய நீண்ட மேகங்கள் மழைக்கால் வீழ்த்தன போன்று நுனி சுருண்டு நடுவே அடர்த்தியுற்ற கருநிறம் பொருந்திய தலைமயிர் முடியை (இவன்) சடையாகத் தரித்திரானாயின் பெண்பாலருடைய உயிர்களெல்லாம் அழிந்திடும்'' என்று நினைத்தாள்.

கு:—மழைத்தொங்கல் - மேகம் வீழ்த்த மழைக்கால். 'தையலார் உடை உயிர் யாவையும் உடையும்' என்பதற்குப் பெண்களுடைய உடைகள், உயிர்கள் எல்லாம் நிலைகுலையும் என்றும் பொருள் கூறலாம். தாழிருஞ் சடைகள் தாங்கி நின்ற தவக்கோலம், தாங்கினோர்க்கு மட்டுமன்றிக் கண்டோர்க்கும் தூய எண்ணத்தையே எழுப்பவல்லது என்பது இதனால் புலப்படுத்தியவாறு. (23)

2852. நாறிய நகையணி நல்ல புல்லினு
லேறிய செவ்வியி னியற்று மோவெனு
மாறகன் முழுமணிக் கரசின் மாட்சிதான்
வேறொரு மணியினுல் விளங்கு மோவென்பாள்.

'நாறிய நகை அணி நல்ல புல்லினுல்
ஏறிய செவ்வியின் இயற்றுமோ ?' எனு,
'மாறு அகல் முழு மணிக்கு அரசின் மாட்சிதான்
வேறு ஒரு மணியினுல் விளங்குமோ ?' என்பாள்.

பொ :—"விளங்குகின்ற அழகிய ஆபரணங்களிற் சிறந்தவை (இவனது திருமேனியைத்) தழுவினுல், மிகுந்த இவ்வழகைக் காட்டினும் (அழகைச்) செய்யுமோ ?" என்று சொல்லி, "ஒப்பில் லாத சிறந்த இரத்தினங்களுக்கெல்லாம் அரசான கௌத்துவ மணியின் அழகு வேருேர் இரத்தினத்தைத் தன்மீது அணிவதனுல் (முன்னிலும் மேலாக) ஒளிவிடுமோ ?" என்று நினைத்தாள்.

கு :—நாறிய - விளங்கிய. ஏறிய - மிக்க. முழுமணிக் காசு - கௌத்துவ மணி. வேறொரு மணியினுல் முழுமணிக் கரசின் மாட்சி விளங்காததுபோல, நல்ல அணிகலன்களால் இராமன் எழில் நலம் ஏற்றம் பெருது என்றது எடுத்துக்காட்டுவமை. (24)

2853. கரந்தில னிலக்கண மெடுத்துக் காட்டிய
பரந்தரு நான்முகன் பழிப்புற் ருனரோ
விரந்திவ னிணையடிப் பொடியு மேற்கலாப்
புரந்தர னுலகெலாம் புரக்கின் ருனென்பாள்.

'கரந்திலன் இலக்கணம் எடுத்துக் காட்டிய
பரம்தரு நான் முகன் பழிப்பு உற்ருன் அரோ !
இரந்து இவன் இணை அடிப் பொடியும் ஏற்கலாப்
புரந்தரன் உலகு எலாம் புரக்கின்ருன்' என்பாள்.

பொ :—"(உடலின் உத்தம) இலக்கணங்களையெல்லாம் ஒளித்திடாமல் (எஞ்சாவண்ணம்) எடுத்துக்காட்டும்பொருட்டாக (இவனுக்கு இவ்வழகிய) உடலைத் தந்த நான்கு முகங்களையுடைய பிரமன் குற்றமுடையவனுனன்; (ஏனெனில்) இவனுடைய இரண்டு திருவடிகளின் துகளுக்கும் (தான் ஈடாக) வேண்டினுலும் (அங்ஙனம்) ஈடாகப் பெருத இந்திரன் எல்லா உலகங்களையும் ஆளுகின்ருன்" என்று கூறுவாள்.

கு:—பரம் - உடல்; மேன்மை என்றும் திருமால் என்றும் வேறும்பொருள் கொள்ளலாம். இந்திரன் இராமன் கால்தூசிக்கும் ஈடாகமாட்டான் என்றவாறு. இராமன் திருவடிகளின் துகளுக்கும் ஈடாகாத இந்திரனை உலகெலாம் புரக்கச்செய்து இவ்வுத்தம இலக்கணமுடைய இராமனைக் காட்டில் அலைந்து திரியப் படைத்தமையால் நான்முகன் பழிப்புற்ருன் என்றவாறு. அழகைப் படைத்தவன் அதற்கேற்ற அதிகாரத்தைக் கொடுக்கவில்லையே என இரங்கிக் கூறியவாறு. படைத்தவனைப் பழிக்கும் மரபு உண்டு என்பதை, "கொன்றயம் பசுங்காய் பெருக்கியும் பயற்றின், நன்றுவினை நெற்றினைச் சிறுக்கியுங் குன்ரு, வின்றீங்கரும்பினைச் சுருக்கியும் விண்டலைத், துன்னரும் விசும்புற நீட்டிய நெறியும், இன்னவை பிறவு மிசைவில வெல்லாம், படைத்தோன் படைத்த குற்றம் இவை'' (பெருங்கதை-3-15. 5-10) என்பதால் அறியலாம். (25)

2854. நீத்தமும் பரவையுங் குறுக நெஞ்சிடைக்
கோத்தவன் புணர்விடைக் குளிப்ப மீக்கொள
வேத்தவும் பரிவினென் றீகலான் பொருள்
காத்தவன் புகழெனத் தேயுங் கற்பினள்.

நீத்தமும் பரவையும் குறுக நெஞ்சிடைக்
கோத்த அன்பு உணர்விடைக் குளிப்ப மீக்கொள,
ஏத்தவும் பரிவின் ஒன்று ஈகலான் பொருள்
காத்தவன் புகழ் எனத் தேயும் கற்பினள்.

பொ:—ஆற்றுவெள்ளமும் கடல்நீரும் சிறியதென்னும்படி (இங்ஙனம் பலவாறு சிந்தித்துத் தன்) மனத்திலே எழுப்பிய அன்பின்பெருக்கு, அறிவு தன்னுள்ளே மூழ்கும்படி மேற்கொள்ளவும், (தன்னைத்) துதிக்கவும் அன்புடன் ஒரு சிறிது பொருளையும் கொடுத்திடாதவனாய் அப்பொருளைப் பாதுகாத்துவரும் உலோபியினது புகழ் (வரவரக் குறைதல்)போல வரவரக் குறைகிற கற்புநிலைமையையுடையவளாயினள்.

கு:—மேற்கூறியவாறு சூர்ப்பணகை இராமனது பேரழகைப் பற்றிப் பலபடியாக நினைந்து நினைந்து ஆற்றுப்பெருக்கினளவினும் கடலினளவினும் மிகுதியாகக் காமவெள்ளத்தைக் கொண்டதனால் அறிவழிந்து கற்பொழிந்தனள் என்றவாறு. (26)

2855. வான்றனில் வரைந்ததோர் மாத ரோவியம்
போன்றன ணின்றனள் புழுங்கு நெஞ்சின
டோன்றறன் சுடர்மணித் தோளி ணுட்டங்க
ளூன்றினள் பறிக்கவோ ரூற்றம் பெற்றிலள்.

வான் தனில் வரைந்தது ஓர் மாதர் ஓவியம்
போன்றனள், நின்றனள், புழுங்கும் நெஞ்சினள்,
தோன்றல்தன் சுடர் மணித் தோளில் நாட்டங்கள்
ஊன்றினள், பறிக்க ஓர் ஊற்றம் பெற்றிலள்.

பொ :—(காமவெறியால்) கொதிக்கின்ற மனமுடையவளான அச்சூர்ப்பணகை இராமனுடைய ஒளிவீசுகிற அழகிய தோள்களில் தன் கண்களைப் பதியவைத்து (அவற்றை) மீட்டு வாங்குவதற்கு ஏற்றதொரு வலிமையில்லாதவளாய் வானிடத்தே தீட்டப்பட்ட ஒரு பெண்ணின் சித்திரம் போன்று (அசைவற்று) நின்ருள்.

கு :—இராமனுடைய தோள்களில் வைத்தகண்களை வாங்க மாட்டாது அவற்றில் ஈடுபடலானுள் என்றவாறு. கண்ணிமையாது தோள்களைப் பார்த்து நின்றமையால் சித்திரப்பாவை போன்றனள். வானிலிருந்தவாறே பார்த்து நின்றமையால், வானில் வரைந்த மாத ரோவியம் போன்றனள் என்ருர். "தோள் கண்டார் தோளே கண்டார்" என்று பாலகாண்டம், உலாவியற்படலத்து (19)வந்துள்ளதும் நோக்குக. (27)

## இராமன்மேல் காதல் கொள்ளல்

2856. நின்றன ளிருந்தவ னெடிய மார்பக
மொன்றுவெ னன்றெனி னமுத முண்கினும்
பொன்றுவென் போக்கினி யரிது போன்மெனுச்
சென்றெதிர் நிற்பதோர் செய்கை தேடுவாள்.

நின்றனள், "இருந்தவன் நெடிய மார்பகம்
ஒன்றுவென்; அன்று எனின், அமுதம் உண்கினும்
பொன்றுவென்; போக்கு இனி அரிது போன்ம்" எனுச்
சென்று, எதிர் நிற்பது ஓர் செய்கை தேடுவாள்.

பொ :—(அவ்வாறு) நின்றவளான சூர்ப்பணகை "இங்கிருந்த வனுகிய இவனது பரந்த மார்பினிடத்தைச் சேர்ந்து தழுவுவேன்; அப்படியல்லாவிடில் சாவாமருந்தாகிய அமுதத்தையே உண்டாலும்

(நான் பிழைக்கமாட்டாது) இறப்பேன்; வேறு வழியே யில்லை'' என்று எண்ணி, அவன் எதிரிற்போய்த் தான் நிற்கக்கூடிய ஒரு முறையை ஆராய்பவளானுள்.

கு :—இருந்தவன் என்பதற்குப் பெரிய தவத்தைச் செய்பவனை இவன் என்றும் பொருள் கூறலாம். இராமனை அணையாவிடில் தான் காமநோயால் கட்டாயம் இறக்க நேரிடும் என்ருள் என்பதாம். (28)

### உருமாறிச் செல்ல எண்ணுதல்

2857. எயிறுடை யரக்கியெவ் வுயிரு மிட்டதோர்
வயிறுடை யாளென மறுக்கு மாதலாற்
குயிறொடர் குதலையோர் கொவ்வைச் செவ்விவாய்
மயிறொட ரியலியாய் மருவ னன்றெனு.

"'எயிறு உடை அரக்கி, எவ் உயிரும் இட்டது ஓர்
வயிறு உடையாள்' என மறுக்கும், ஆதலால்
குயில் தொடர் குதலை ஓர் கொவ்வைச் செவ்வி வாய்
மயில் தொடர் இயலி ஆய் மருவல் நன்று'' எனு.

பொ :—"கோரப்பற்களையுடைய இந்த அரக்கி எல்லாப் பிராணிகளையும் உணவாக நிரப்பும் பெரிய வயிற்றை யுடையவள், என்று (வெறுத்து என்னை விரும்பாது) மறுக்கக்கூடும்; ஆதலால், குயில் கூவுதலையொத்த மழலைச்சொற்களையும் கொவ்வைப் பழம்போலச் சிவந்த அழகிய வாயையுமுடைய மயிலின் சாயலையுடைய ஒரு மெல்லியல் வடிவம் கொண்டு (இவன் அருகிற்) செல்லுதல் நல்லது'' என்று எண்ணி.

கு :—பாவியா, ஆய்ந்தனள், தோன்றினுள் என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும். குதலை–மழலைச்சொல். மொழியினிமைக்குக் குயிலும், வாயிதழ்ச் செம்மைக்குக் கொவ்வையும், மென்மையாகிய சாயலுக்கு மயிலும் உவமை கூறப்பட்டன. இயல் - மென்மை. இயலி - மெல்லியல். இதனுல் சூர்ப்பணகை, கோரப்பற்களையும் பெருவயிற்றையும் உடையளாயிருந்தாள் என்பது உணரலாம். (29)

## திருமகள் அருளால் உருமாறி வருதல் 2858–2861

2858. பங்கயச் செல்வியை
மனத்துப் பாவியா
வங்கையி னுயமந்
திரத்தை யாய்ந்தன
டிங்களிற் சிறந்தொளிர்
முகத்தள் செவ்வியள்
பொங்கொளி விசும்பினிற்
பொலியத் தோன்றினுள்.

பங்கயச் செல்வியை மனத்துப் பாவியா
அங்கையின் ஆய மந்திரத்தை ஆய்ந்தனள்,
திங்களின் சிறந்து ஒளிர் முகத்தள் செவ்வியள்
பொங்கு ஒளி விசும்பினில் பொலியத் தோன்றினுள்.

பொ :—செந்தாமரை மலரில் வீற்றிருக்கிற திருமகளைத் தன் மனத்திலே தியானித்துத் தனக்குக் கைவந்த (ஒரு) மந்திரத்தை உச்சரித்தாள் ; (அவ்வாறு உச்சரித்தவுடன்) சந்திரனைக் காட்டிலும் மேலாகச் சிறந்து விளங்குகிற முகத்தையுடையவளாயும் அழகையுடையவளாயும் மிக்க தன் (உடம்பின்) ஒளி வானத்தில் விளங்க அங்குக் காணப்பட்டாள்.

கு :—அங்கையினுயமந்திரம் - முன்னமே தான் பழகிக் கைவரப் பெற்ற மந்திரம் ; அதாவது அவளுக்குத் தெரிந்ததொரு மந்திரம். அதற்கு அதிதேவதை இலக்குமி என்றவாறு. சூர்ப்பணகை இவ்வாறு உருமாறிவந்ததாக வான்மீகத்தில் வெளிப்படையாய்ச் சொல்லப்படவில்லை. ஆனுல் அத்யாத்ம ராமாயணத்தில் கூறப்படுகிறது. (30)

2859. பஞ்சியொளிர் விஞ்சுகுளிர்
★ பல்லவ மனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிமிர்
சீறடிய ளாகி
யஞ்சொலிள மஞ்ஞையென
வன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென
வஞ்சமகள் வந்தாள்.

பஞ்சி ஒளிர் விஞ்சு குளிர் பல்லவம் அனுங்கச்
செஞ்செவிய கஞ்சம் நிமிர் சீறடியள் ஆகி,
அம் சொல் இள மஞ்ஞை என, அன்னம் என, மின்னும்
வஞ்சி என, நஞ்சம் என வஞ்ச மகள் வந்தாள்.

பொ :—விளக்கம் மிக்க செம்பஞ்சும் குளிர்ச்சி மிகுந்த தளிர்களும் (ஒப்பாகமாட்டாமையால்) வருந்தச் சிவந்த அழகுள்ள தாமரையைப்போலும் உயர்ந்த சிறிய அடிகளையுடையவளாகி, அழகிய சொற்களைப் பேசும் இளமை பொருந்திய மயிலைப்போலவும் அன்னப் பேடு போலவும், விளங்குகின்ற கொடியைப் போலவும், விடத்தைப் போலவும் வஞ்சனையையுடைய சூர்ப்பணகை வந்தாள்.

கு :—அஞ்சொலிள மஞ்ஞை இல்பொருளுவமை. நஞ்சம் கொடுமையைக் குறித்து வந்தது. மெல்லெழுத்து மிகுந்துள்ளமையால் இச்செய்யுள் மெல்லிசை வண்ணமாகும். (31)

**2860.** பொன்னொழுகு பூவிலுறை
பூவையெழில் பூவை
பின்னெழில்கொள் வாளிணை
பிறழ்ந்தொளிர் முகத்தோர்
கன்னியெழில் கொண்டது
கலைத்தட மணித்தேர்
மின்னழிவி றன்மையது
விண்ணிழிவ தென்ன.

பொன் ஒழுகு பூவில் உறை பூவை எழில் பூவை
பின்னு எழில் கொள் வாள் இணை பிறழ்ந்து ஒளிர் முகத்து ஓர்
கன்னி எழில் கொண்டது கலைத் தட மணித் தேர்
மின் அழிவு இல் தன்மையது விண் இழிவது என்ன.

பொ :—பொன்னிறமான மகரந்தப்பொடி சிந்தப் பெற்ற தாமரை மலரில் வாழ்கின்ற பெண்ணாகிய திருமகளின் அழகினையும் நாகணவாய்ப்புள்ளினிடம் பொருந்திய அழகையும் கொண்ட, இரண்டு வாள்போன்ற கண்கள் பிறழ்ந்து ஒளிவீசுகின்ற முகத்தை யுடைய ஓர் இளம்பெண்ணின் வடிவைக் கொண்டதும், மெல்லாடையுடைய பெரிய மணியணிந்த தேரினையுடையதும், ஆகிய அழிவில்லாத தன்மையையுடைய மின்னற்கொடியானது விண்ணினின்று இறங்குவதுபோல.

கு :—அழிவில் தன்மையது (ஆகிய) மின், விண் இழிவ தென்ன வந்தாள் என வருங்கவியொடு தொடர்ந்து முடியும். (32)

2861. கானினுயர் கற்பக முயிர்த்த கதிர்வல்லி
மேனிநனி பெற்றுவிளை காமநிறை வாசத்
தேனின்மொழி யுற்றினிய செவ்விநனி பெற்றோர்
மானின்விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள்.

கானின் உயர் கற்பகம் உயிர்த்த கதிர் வல்லி
மேனி நனி பெற்று விளை காமம் நிறை வாசத்
தேனின் மொழி உற்று, இனிய செவ்வி நனி பெற்று, ஓர்
மானின் விழி பெற்று, மயில் வந்தது என வந்தாள்.

பொ :—நறுமணத்தில் சிறந்த கற்பகதரு ஈன்ற ஒளிவாய்ந்த காமவல்லியின் மேனியை நன்றாக அமையப்பெற்று, மேலும் மேலும் விளைகின்ற காமம் நிறைதற்குக் காரணமான, மணமிக்க தேன்போன்ற இனிய சொற்களைப் பொருந்தி, இனிமையான அழகை மிகுதியாகப் பெற்று, ஒப்பற்ற மான்விழிபோன்ற விழியைப் பெற்று, மயில் வந்தது போல வந்தாள்.

கு :—கான் - நறுமணம்; வல்லிக்கு அடை. கற்பக தருவைச் சார்ந்து படர்கின்ற கொடிக்குக் காமவல்லி என்பது பெயர். அது ஒளியுடைய கொடியாதலின் கதிர்வல்லி எனப்பட்டது. மயில், காமவல்லியின் உருவைப் பெற்றுக் கேட்டோர் மனத்துக் காமம் நிறைதற்குக் காரணமான இனிய சொல்லையும் இனிய அழகையும் மான்போன்ற கண்களையும் பெற்று வந்தது என்னுமாறு வந்தாள் சூர்ப்பணகை என்க. காமம் நிறைதற்குக் காரணமான மொழி என வினைத்தொகையைக் காரணப் பொருளதாக விரிக்க. வாசம், தேனுக்கு அடை. தேன் இன் மொழி-தேன்போன்ற இனியசொல். மானின் விழிபோன்ற விழியைப் பெற்று என்க. மயிலின் சாயல் புலப்பட வந்தாள் என்பார், ‘மயில் வந்ததென வந்தாள்’ என்றார். சாயலால் மயில் பெண்டிர்க்கு உவமையாகும். மயிலின் சாயல் புலப்படத் தோன்றுவது அது திரியுங்காலத்தேயாதலின் ‘மயில் வந்ததென’ என அதன் இயக்கத்தைக் கூறினர். ‘மயிலினந் திரிவ போன்றும்......மாதர் பொம்மெனப் புகுந்துமொய்த்தார்’ (1148) என முன்கூறியுள்ளதும் காண்க. (33)

45, 52 என்ற எண்ணுள்ள சுவடிகளில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகிறது.

2861 (a) பொன்னெடு மணிக்கலை சிலம்பொடு புலம்ப
மின்னெடு மணிக்கலைகள் விம்மியிடை நோவ
துன்னுகுழல் வண்கவரி தோகைபணி மாற
அன்னமென வல்லவென வாமென நடந்தாள்.

அவள் வரும் வழியை இராமன் நோக்குதல்

2862. நூபுரமு மேகலையு
நூலுமற லோதிப்
பூமுரலும் வண்டுமிவை
பூசலிடு மோசை
தாமுரைசெய் கின்றதொரு
தையல்வரு மென்னக்
கோமகனு மத்திசை
குறித்தெதிர் விழித்தான்.

" நூபுரமும், மேகலையும், நூலும் அறல் ஓதிப்
பூ முரலும் வண்டும் இவை, பூசலிடும் ஓசை
தாம், உரை செய்கின்றது: 'ஒரு தையல் வரும்' " என்னக்
கோமகனும், அத்திசை குறித்து எதிர் விழித்தான்.

பொ :—சிலம்பும் மணிமேகலையும் நூலிற்கோத்த மணிமாலைகளும், கருமணல்போன்ற கூந்தலில் அணிந்த பூவில் முரலுகின்ற வண்டும் ஆகிய இவைகள் ஆரவாரிக்கின்ற ஓசைதாம், 'ஒருபெண்டு வருகின்றாள்' என்பதைத் தெரிவிக்கின்றது என்று இராமனும் அவ்வொலி வருந்திசை நோக்கி எதிரே கண்களைத் திறந்து உற்று நோக்கினன்.

கு :—சூர்ப்பணகை வருகின்றபோது அவள் காலிலணிந்த சிலம்பும் இடையிலணிந்த மணிமேகலையும் மார்பிலணிந்த மணிவடமும் கூந்தலிலணிந்த மலரில் மொய்த்த வண்டும் ஆரவாரித்தன ஆதலின் அவ்வோசையை அவளுக்குமுன் அவள் வரவை யுணர்த்திற்று என்பது கருத்து. பூசல் - ஆரவாரம். ஓசைதாம் ஒருதையல் வரும் என்ன உரைசெய்கின்றது என்று இயைக்க. உரைசெய்கின்றது என்பது கிளவாதவற்றைக் கிளப்பனபோலக்கூறிய இலக்கணை வழக்கு ; 'பகையு முவகையுங் கண்ணுரைக்கும்' (குறள்-709) என்புழிப்போல. உரைசெய்கின்றது என்று கோமகனும் விழித்தான் என ஒருசொல் வருவித்து முடிக்க. கோமகன் என்றது இராமனை. பஞ்சவடியில் தம்பியால் சமைக்கப்பட்ட இனிய பூஞ்சாலையில் தனியேயிருந்த இராமன், சிலம்பொலி முதலிய ஒலிகளால்

யாரோ ஒரு பெண் வருகின்ருள் என்று அவ்வொலி வருந்திசை யைப் பார்த்தான் என்க. சிலம்பும் மணிமேகலையும் மகளிர்க்கே யுரிய அணிகலனுகலின் அவற்றின் ஒலியால் ஒரு தையல் வரு கின்ருள் என்பதை உய்த்துணர்ந்தான். ஒலி வருந்திசையை உற்று நோக்க வேண்டிக் கண்களை அகல விழித்துப்பார்த்தான் என்பார், 'எதிர்விழித்தான்' என்ருர். விலங்குகள் திரியும் காட்டில் பெண் ஒருத்தி வருவது புதுமையாகத் தோன்றினமையாலும் விண்வழி வருகின்றமையாலும் அவ்வாறு இராமன் பார்க்க நேர்ந்தது. (34)

### சூர்ப்பணகையின் அழகை இராமன் வியந்து காண்டல் 2863—2864

**2863.** விண்ணருள வந்ததொரு
மெல்லமுத மென்ன
வண்ணமுலே கொண்டிடை
வணங்கவரு போழ்தத்
தெண்ணருளி யேழைமை
துடைத்தெழு மெய்ஞ்ஞானக்
கண்ணருள்செய் கண்ணனிரு
கண்ணினெதிர் கண்டான்.

விண் அருள வந்தது ஒரு மெல் அமுதம் என்ன
வண்ண முலே கொண்டு, இடை வணங்க வரு போழ்தத்து,
எண் அருளி, ஏழைமை துடைத்து, எழும் மெய்ஞ்ஞானக்
கண் அருள்செய் கண்ணன் இரு கண்ணின் எதிர் கண்டான்.

பொ:—ஆகாயம் ஈன்றருள வந்ததாகிய ஒப்பற்ற மெல்லிய அமுதமே என்று சொல்லுமாறு அழகிய கொங்கைகளைத் தாங்கிக் கொண்டுள்ளமையால் (அவற்றின் பாரம் தாங்காமல்) இடை தளர்ந்து வளைய, சூர்ப்பணகை விண் வழியாக வரும்போது, உயிர் களுக்குத் தன்னை நினைக்கும் நினைவைக் கொடுத்து அந்நினைவால் அவற்றின் விளக்கத்தை மறைத்திருந்த அஞ்ஞானத்தைத் துடைத்துவிட்டு எழுகின்ற மெய்ஞ்ஞானமாகிய கண்ணைக் கொடுக் கின்ற கண்ணேட்டமுடைய இராமன் தன் இரு கண்களின் எதிரே அவளைக் கண்டான்.

கு:—அவள், பாற்கடல் அருள வந்த அமுதத்தின் தன்மை பெற்றிருந்தும் பாற்கடலில் தோன்ருது விண்ணிடைத் தோன்றி

வருதலின் "விண்ணருள வந்ததொரு மெல்லமுதம் என்ன" என்றார். "வான்தனில் வரைந்ததோர் மாதரோவியம் போன்றனள்" (2855) என்றும், "பொங்கொளி விசும்பினில் பொலியத் தோன்றினாள்" (2858) என்றும் அவள் விண்வழி வந்ததை முன்னர்க் கூறியதற்கேற்ப, இங்கும் விண்ணருள வந்ததொரு மெல்லமுதமென்ன என இல்பொருளுவமைகூறி விளக்கியவாறு. அலையிடைப்பிறவா அமுதம் என்றவாறு. 'கடலன்றி அன்றம் மாடத் தும்பரளிக்கும் அமுதனாள்' (589) எனச் சீதையைப் பற்றிக் கூறியுள்ளது இங்கு நினைத்தல் தகும். அமுதமென்ன வருபோழ்தத்துக் கண்ணன் கண்டான் என இயையும். காலம் இடமாயிற்று. இராமனை மயக்க வருகின்றவள் ஆதலின், அக்கருத்திற்கேற்பப் பெரிய அழகிய நகில்கள் தோன்றுமாறு வந்தாள் என்பார், வண்ணமுலை கொண்டு இடை வணங்க வருதல் கூறினர். கொண்டு என்ற வினையெச்சம் கொண்டுள்ளமையால் எனக் காரணப்பொருள் தந்து நின்றது. 'மழை பெய்து நெல் விளைந்தது' என்புழிப்போல. எண் - எண்ணம்; நினைவு. "நின்னபாத பங்கயம் நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே" (திவ் - திருச்சந்த 101), "நெஞ்சில் நின்று நினைப்பிக்கும் நீதியை" (அப்பர் தே-5-94-8) 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' (திருவாசகம்-சிவபுராணம்) என இறைவன், உயிர்கள் தன்னை நினைக்குமாறும் வணங்குமாறும் அருள் செய்கின்ற நிலையைத் திருமழிசையாழ்வாரும், அப்பரும், மணிவாசகரும் விளக்கியிருத்தல் காணலாம். எண்ணருளுதலாவது இறைவன், தன்னை உயிர்கள் நினைக்குமாறு தூண்டியருளுதல். ஏழைமை - அறியாமை; அஞ்ஞானம். ஏழைமை துடைத்தெழுகின்ற மெய்ஞ்ஞானம் என ஏழைமை துடைத்தலை மெய்ஞ்ஞானத்திற்கு அடையாக்குக. முன்னே தன்னை நினைக்கும் எண்ணருளி அதன்பின் மெய்ஞ்ஞானக் கண்ணருள்கின்ற கண்ணன் என்க. கண்ணன் - கண்ணோட்டமுடையவன்; அறியாமையில் கிடந்துழலுகின்ற உயிர்கட்கு எண்ணும் மெய்ஞ்ஞானக் கண்ணும் அருள் செய்கின்றமை இறைவன் கண்ணோட்டத்தால் ஆகும் என்பார், அவனைக் கண்ணன் என்ற பெயரால் கூறினர். "கண்ணென்னுங் கண்ணோட்டமில்லாத கண்" (குறள்-573) என்பது இங்கு நினைக்கத்தகும். இறைவனே இராமனாக வந்தான் என்பதை நினைந்து ஞானக் கண்ணருள் செய் கண்ணன் என அவனைக் கூறினர். பிறவுயிர்க்கும் ஞானக் கண் அருளுகின்ற இராமன், மாறுவேடம் பூண்ட சூர்ப்பணகையின் மையலிலே மயங்குதற்குரியனல்லன் என்பதைப் புலப்படுத்தியவாறு. சூர்ப்பணகைக்கும் ஞானக்கண் அருளலாகாதோ எனின்? அவள் காமம் தலைக்கேறிய நிலையிலிருத்தலின் ஞானக்கண்ணையேற்றுக் கொள்ளும் தகுதி இலள் என அது செய்திலன் என்க. (35)

**2864.** பேருழைய நாகருல கிற்பிறிது வானிற்
பாருழையி னில்லதொரு மெல்லுருவு பாரா
வாருழைய டங்குமழ கிற்கவதி யுண்டோ
நேரிழையர் யாவரிவர் நேரென நினைந்தான்.

பேர் உழைய நாகர் உலகின், பிறிது வானின்
பார் உழையின் இல்லது ஒரு மெல் உருவு பாரா,
ஆர் உழை அடங்கும்? அழகிற்கு அவதி உண்டோ?
நேர் இழையர் யாவர் இவர் நேர்? என நினைந்தான்.

பொ :—பெரிய இடத்தையுடைய நாகர் உலகத்தினும், அதனிற் பிறிதாகிய வானுலகத்திலும், பூவுலகத்திலும், இல்லாததாகிய ஒரு மெல்லிய பெண்ணுருவத்தைப் பார்த்து, யாரிடத்தில் அழகு முழுத் தன்மையைப் பெறும்? அழகிற்கு எல்லையும் உண்டோ? பொருத்த மான அணி அணிந்த பெண்டிருள் இவருக்கு ஒப்பானவர் யாருளர்? என இராமன் நினைத்தான்.

கு :—உழை - இடம். உழைய குறிப்புப் பெயரெச்சம். நாக ருலகம் என்றது பாதலத்தை. பூமிக்குக் கீழுள்ள பாதலத்தைக் கூறி அதனின் வேருய் மேலுள்ள விண்ணுலகத்தைக் கூறவேண்டி யிருந்தமையால், பிறிதுவானின் என்ருர். பார் - பூலோகம். மூவுலகிலும் இல்லாத பெண்ணுருவம் என்றவாறு. மென்மை இங்குப் பெண்மையை யுணர்த்திற்று. பாரா செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; பார்த்து என்பது பொருள். அழகு முழுத்தன்மையுடன் விளங்குவது சீதையிடத்திலேதான் என்று எண்ணியிருந்த இராமன், கண்முன் வேறுமொரு எழிலுருவம் காணப்பட்டமையின் அவ்வெண்ணத்தை மாற்றிக் கொள்வானய் ஆருழை யடங்கும் அழகிற்கவதி யுண்டோ?" என்று கூறினன். இராமன் சீதையைக் கண்டு காதல் நோயால் வருந்தும்போது யாரினும் வலியன்தான் என்ற எண்ணத்தை மாற்றிக்கொள்வான் போல், "கருப்புச்சிலையான்......என்னையெய்து தொலைக்கும் என்ரு லினி வன்மை என்னுமி தாரிடை வைகுமே" என இவ்வாறு வியந்து கூறியிருத்தல் காணலாம். அடங்கும் - முழுமை பெறும். 'வயலடங்கக் கரும்பு' (8, 9, 4 ஈடு) என்புழியும் அடங்க என்பது முழுவதும் என்ற பொருளில் வந்துள்ளமை காணலாம். அழகு, இடைநிலை விளக்காய் முன்னும் இயையும். அவதி - எல்லை. அழகு எல்லையில்லாததாய் இருத்தலின் யாரிடத்தும் முழுமைபெறும் இயல்பினதன்று என்று தான் கண்ட முடிபை விளக்கியவாறு; என்னை? சீதையிடத்து மட்டுமன்றி அழகு வேருெரு பெண்ணி னிடத்தும் நிரம்பியிருக்கக் கண்டானுதலின். சீதையின் பேரெழிலைக்

கண்ட சூர்ப்பணகையும், "படைக்குநர் சிறுமையல்லால் எண் பிறங் கழகுக் கெல்லையில்லையாம்'' (2888) என்று கூறி நின்றமை பின்னர்க் காணலாம். நாகருலகின் வானின் பாருழையின் இல்லதொரு மெல்லுருவு என்றதும், 'நேரிழையர் யாவரிவர் நேர்' என்றதும் ஒரு கருத்தையே விளக்கினும் முன்னது கவியின் கருத்தும் பின்னது இராமன் கருத்தும் ஆகலின் அமையும் என்க. யாவரிவர் நேர்? என்றது, யாரும் இன்மை யுணர்த்திற்று. (36)

சூர்ப்பணகை இராமனை வணங்கி நிற்றல்

2865. அவ்வயினவ் வாசைத னகத்துடைய வன்னாள்
செவ்விமுக முன்னியடி செங்கையி னிறைஞ்சா
வெவ்விய நெடுங்கணயில் வீசியயல் பாரா
நவ்வியி னொதுங்கியிறை நாணியய னின்றாள்

அவ்வயின் அவ் ஆசை தன் அகத்து உடைய அன்னாள்,
செவ்வி முகம் முன்னி, அடி செங்கையின் இறைஞ்சா,
வெவ்விய நெடுங்கண் அயில் வீசி, அயல் பாரா,
நவ்வியின் ஒதுங்கி, இறை நாணி, அயல் நின்றாள்.

பொ :—அப்பொழுது, (இராமன் தன்னைப் பாராட்டவேண்டும் என்கின்ற) அவ்வாசையைத் தன் மனத்துக் கொண்ட அச் சூர்ப்பணகை, தான் காணுதற்கேற்றவாறு இராமன் இனிய முகத்தனாக இருத்தலைக் கருத்துட்கொண்டு அவனடிகளைத் தன் சிவந்த கைகளால் வணங்கி, கொடிய நீண்ட கண்ணாகிய வேலை அவன்மேல் வீசிவிட்டுப் பின் அயலிடத்தைப் பார்த்துக்கொண்டு மானைப்போல விலகிச் சிறிது நாணி அவன் பக்கத்தில் நின்றாள்.

கு :—வயின் இங்குக் காலமுணர்த்தியது. அவ்வாசை என்றது இராமன் தன்னை வியந்து பாராட்டவேண்டும் என்ற ஆசையை. இராமன் அவ்வாறு பார்த்து வியந்தமை மேலே கூறப்பட்டதாகலின் அவ்வாசை எனச் சுட்டினார். செவ்விமுகம் என்றது தன் குறை கூறுதற்கேற்ற இன்முகம்; இனம்பற்றி மனமும் மொழியும் இனிய ணாதலும் கொள்ளப்படும். முன்னி - கருதி; உன்னி எனப் பிரித் தலுமாம். இனி, செவ்விமுக முன்னி, என்பதற்குச் சூர்ப்பணகை செவ்வியுடைய முகத்தோடு முற்பட்டு எனப் பொருள்கூறலுமாம். இதைப் புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடாகக் கொள்ளலாம். இராமன் தன்னழகை நோக்குமாறு அவன் கண்முன் படுதல் அவன் கருத்தைக் கவரும் நிகழ்ச்சியாதல் காணலாம். நெடுங்கண் அயில்

என்றது உருவகம். நவ்வி - மான். மான் அச்சத்தால் விலகுதல் போல் சூர்ப்பணகையும் ஒதுங்கினுள். இறை - சிறிது. நாண முள்ளவள்போல் நடித்ததையே இறை நாணி என்ருர். நெடுங் கணயிலே வீசினவள் பின் அவனைப் பாராமல் அயலிடத்தைப் பார்ப் பவள்போல் பார்வையைத் திருப்பினுள் என்க. (37)

## இராமன் சூர்ப்பணகை உரையாடல் 2866–2884

2866. தீதில்வர வாகதிரு நின்வரவு சேயோய்
போதவுள தெம்முழையொர் புண்ணியம தன்ரே
வேதுபதி யேதுபெயர் யாவருற வென்ருன்
வேதமுதல் பேதையவ டன்னிலை விரிப்பாள்.

தீது இல் வரவு ஆக திரு ! நின் வரவு சேயோய் !
போத உளது எம் உழை ஓர் புண்ணியமது அன்ரே
ஏது பதி ? ஏது பெயர் ? யாவர் உறவு என்ருன்
வேதமுதல்; பேதை அவள் தன் நிலை விரிப்பாள்.

பொ :—திருவே ! நின் வரவு தீது இல்லாத நல்வரவு ஆகுக; செம்மைக் குணமுடையாய் ! நீ இங்கு வருதற்கு யாம் முன் செய்த ஒரு புண்ணியம் எம்மிடத்தில் உளது; நின் ஊர் யாது ? நின் பேர் யாது ? நின் உறவினர் யாவர் ? என்று சுருங்க வினவினுன் வேதங் கட்கு முதல்வனுய இராமன்; அறியாமையுடைய சூர்ப்பணகை (அவ்வாறு சுருங்கச் சொல்லாது) தன்னிலைமையை விரித்துக் கூறத் தொடங்கினுள்.

கு :—வந்த விருந்தினரை வரவேற்குமுறை முன்னிரண்டடி களில் விளக்கப்பட்டது. திருமகள் போன்ற எழிலுடைமை நோக்கி அவளைத் திரு என விளித்தான். நல்வரவு ஆகுக என்பான் எதிர்மறை முகத்தான், 'தீதில் வரவாக' என்ருன். அவள் வரவால் தீங்கு நிகழ இருக்கின்றது என்ற குறிப்பும் அமைந்திருத்தல் காணலாம். போத - வர. ஓர் புண்ணியமது எம்முழை உளது என மாற்றுக. அன்று, ஓ அசைகள். புண்ணியமது என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. செம்மைக் குணமுடையார் வரப்பெறுதல் ஒருவர் செய்த புண்ணியத்தாலன்றி நிகழாது என்பதை விளக்கிய வாறு. சேய்மையிலுள்ளோர் வருதற்குப் புண்ணியம் காரணமாதல் வேண்டாமையின் சேயோய் என்பதற்குச் செம்மைக் குண முடையோய் என்பதே பொருந்திய பொருள் என்க; என்னை ? செம்மைக் குணமுடைய நல்லாரைக் காண்பதுவும் நன்றே ஆதலின். இவ்வாறு கூறி வரவேற்றலை ஆர்வமொழியணி

என்பர். இனி, திரு சேயோய்! என்ற விளிகளைக் குறிப்புச் சொல்லாக்கித் திருவிலி! செம்மையிலி! என்று விளித்ததாகக் கொண்டு, நீபோத எம்முழை உளது ஓர் புண்ணியமது அன்று என்று இயைத்து 'நீ வருதற்குக் காரணமாக எம்மிடத்தில் இருப்பது ஓர் புண்ணியமன்று பாவமே ஆம்' என்றும் பின்வரும் வரலாறு நோக்கிப் பொருள் கொள்ளக் கிடக்கின்றமை காணலாம். யாம் செய்த பாவத்தால் தான் நீ வந்தாய் என்பது கருத்து. செம்மைக் குணமில்லாளாயினும் திருந்துவள் என்ற கருத்தால் புதிதின் வந்தடைந்த அவளைச் சேயோய் என விளித்தான். '' நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்காற் கண்ணல்ல தில்லை பிற '' (குறள்-710) ஆதலின் அவள் கண்களைக் கொண்டு அவள் நல்லளல்லள் என்பதை உய்த்துணர்ந்த இராமன், அவள் ஊர் முதலியன வினவி அறிந்து துணிய எண்ணி முதற்கண், ஏதுபதி? என்ருன்; ஊரின் இயல்பால் அவ்வூரவர் தன்மையையறிதலும் உண்டு ஆகலான். ''தாய்சாஅப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு பிள்ளை தின்னு முதலைத் தவனூர்'' (ஐங்குறு-24) என்புழி ஊரின் இயல்பு கூறித் தலைவன் கொடியவன் என்பதை விளக்கியிருத்தல் காணலாம். இராமன் வேதவித்தாகலின் அவள் நிலையறியச் சுருங்கிய சொல்லால் வினவினுன் என்றும், சூர்ப்பணகை பேதை ஆதலின், அவன் குறிப்பறியாது தன்னிலை விரிப்பாளாயினுள் என்றும் கொள்க. தன்னிலை என்பதற்குத் தன் வரலாறு என்றும் தன் பேதைநிலைமை என்றும் பொருள்கொள்ளுமாறு அமைந்துள்ளமை காணலாம். பயனில் சொல் பாராட்டலே - மக்கட்பதடி - பேதை என்பதை உணர்த்தும் என்பது கருத்து. இராமன் வினுக்களுக்குச் சுருங்கிய விடையாகப் பதி இலங்கை, பேர் சூர்ப்பணகை, உறவு இராவணன் என்று கூறியிருப்பின், அவள் அரக்கி என்ற உண்மை உடனே புலப்பட்டிருக்கும். அதை மறைக்கவே அவள் தன் விடையை விரித்துக் கூறினுள். ஆயினும் உண்மை முடிவில் புலப்படாமலில்லை. (38)

**2867.** பூவிலோன் புதல்வன் மைந்தன்
★ புதல்விமுப் புரங்கள் செற்ற
சேவலோன் துணைவ னுன
செங்கையோன் றங்கை திக்கின்
மாவெலாந் தொலைத்து வெள்ளி
மலையெடுத் துலக மூன்றுங்
காவலோன் பின்னை காம
வல்லியாங் கன்னி யென்றுள்.

'பூவிலோன் புதல்வன் மைந்தன்
புதல்வி ; முப் புரங்கள் செற்ற
சே வலோன் துணைவன் ஆன
செங்கையோன் தங்கை ; திக்கின்
மா எலாம் தொலைத்து, வெள்ளி
மலை எடுத்து, உலகம் மூன்றும்
காவலோன் பின்னை ; காம
வல்லியாம் கன்னி' என்றாள்.

பொ :—தாமரைப் பூவைத் தங்குமிடமாகக் கொண்ட பிரமன் மகன புலத்தியனுக்கு மகனாகிய விச்சிரவசுவின் மகள்; முப்புரங்களை எரித்த விடையேறும் சிவனுக்குத் தோழனான சிவந்தகையையுடைய குபேரனுக்குத் தங்கை; திசைக்களிறுகளையெல்லாம் வலிதொலைத்து, வெள்ளிமலையை எடுத்து, உலகம் மூன்றுக்கும் அரசனாகிய இராவணனுக்குப் பின் பிறந்தவள் ; காமவல்லி என்ற பெயருடைய கன்னி, யான் என்றாள்.

கு :—பூவை இல்லாகக் கொண்டவன் பிரமன். சூர்ப்பணகை, தன்னை இராமன் மணக்கவேண்டும் என்ற பேரவாவுடையாள் ஆதலின், அவன் விரும்பத்தக்க குலப்பெருமை தனக்குண்டு என்பதைப் புலப்படுத்தவேண்டிப் பிரமன் பெயரனாகிய விச்சிரவசுவின் மகள் என்றாள். பிரமன் தனக்குப் படைப்புத் தொழிலில் துணைசெய்ய வேண்டிப் படைத்த துணைப்பிரமர்கள் ஒன்பதின்மரில் ஒருவனாகிய புலத்தியமுனிவன், திருணபிந்து என்னும் முனிவன் மகளை மணந்து கொண்டு விச்சிரவசுவைப்பெற்றான். வச்சிரவசு பரத்துவாசன் மகளை மணந்து குபேரனைப் பெற்றான். சுமாலி என்னும் இராக்கதன், தன்மகள் கேகசிக்குக் குபேரனைக் காட்டி, விச்சிரவசுவை மணந்தால் இத்தகைய புதல்வனைப் பெறலாம் என்றானாக, அக்கேகசியும், அவன் கருத்தின்படி மாலையில் விச்சிரவசுவைக்கண்டு தன் கருத்தைத் தெரிவிக்க, அம்முனிவன் 'நீ அசுரர்க்குரிய காலத்தில் வந்தமையால் கொடிய பிள்ளைகள் பிறக்கும்' என்றான் ; பின் அவள் வேண்டுகோளுக் கிரங்கி நல்லபிள்ளைகளாவார்கள் என்று அருள்செய்ய, அக்கேகசியிடம் இராவணன், கும்பகர்ணன், சூர்ப்பணகை, விபீடணன் என்பார் முறையே தோன்றினர் என்பர். சே - விடை. சேவலோன் விடையேறவல்ல சிவன். குபேரன் சிவபிரானுக்குத் தோழன் என்பதை "அறிந்து செல்வமுடையானும் அளகைப் பதியைத் தோழமை கொண்டு" (நால்வர் நான்மணி மாலை) என்றதாலும் அறியலாம். செங்கையோன் என்றது செல்வமுடைய கை என்பதைப் புலப்படுத்தியவாறு. இராவணன் ஆற்றலால் நிகழ்ந்த செயலைமட்டும் கூறிப் பெயர்கூறு தொழிந்தாள், அச்செயலால்

அது உய்த்துணரப்படுமாதலானும், அரக்கியென்ற உண்மை புலப் படாதிருத்தற்கும். இராவணன் என்பதற்கு அழச்செய்பவன், அழுபவன் என்ற இருபொருளுமுண்டு. மாவெலாந்தொலைத்து என் றமையால் முன்னைப் பொருளும், வெள்ளிமலையெடுத்து என்றமை யால் பின்னைப்பொருளும் விளங்கக் காணலாம். இராமன் வினு மூன்றில் இறுதிவினுவாகிய யாவருறவு என்பதற்கு முதற்கண் விடை கூறுவாளாய் மூன்று தலைமுறையும் புலப்படப் பிரமனின் பேர னுக்கு மகள் என்ருள்; சிவபிரானுக்குத் தோழனின் தங்கை என்றது செல்வப்பெருமையும் தெய்வ நட்பும் தன் தமையனுக்கு உண்டு என் பதைப் புலப்படுத்தவேண்டி. பேராற்றலும் பெருந்தலைமையுமுடை யவன் தங்கையாகலின் தன்னை மணப்பதால் பெறும்பேறு பெரிது என்பதைப் பின் புலப்படுத்தினுள். சூர்ப்பணகை யென்ற விகார மான பெயரை மறைத்துக் 'காமவல்லி' என்றும், விதவை என் பதை மறைத்துக் கன்னி என்றும் கூறியது மணத்திற்கேற்றவள் என்பதைத் தெரிவிக்க வேண்டியேயாம். ஊர் கூருதொழிந்தாள் அது உறவுகூறவே பெறப்படுதலின். (39)

2868. அவ்வுரை கேட்ட வீர
னையுறு மனத்தான் செய்கை
செவ்விதன் றறித லாகுஞ்
சிறிதினென் றுணரச் செங்கண்
வெவ்வுரு வமைந்தோன் றங்கை
யென்றது மெய்ம்மை யாயி
னிவ்வுரு வியைந்த தன்மை
யியம்புதி யியல்பி னென்ருன்.

அவ்வுரை கேட்ட வீரன்.
ஐயுறு மனத்தான், 'செய்கை
செவ்விது அன்று; அறிதல் ஆகும்
சிறிதின்' என்று உணரச் "செங்கண்
வெவ்வுரு அமைந்தோன் தங்கை"
என்றது மெய்ம்மை ஆயின்,
இவ்வுரு இயைந்த தன்மை
இயம்புதி இயல்பின் என்ருன்.

பொ:—அச்சொல்லைக்கேட்ட இராமன், ஐயங்கொண்ட உள்ளத் தனாய், 'இவள் செய்கை நல்லதாக இல்லை; இன்னும் சிறிது

நேரத்தில் உண்மை அறியலாம்' என்று கருதி, அவள்நிலை உணர வேண்டி, (அவளைப்பார்த்து), 'சினத்தால் சிவந்த கண்களையும் கொடிய வடிவத்தையும் உடைய இராவணனுக்குத் தங்கை நீ என்றது உண்மையானால் இந்த அழகிய வடிவம் நினக்குப் பொருந்தியது எப்படி என்பதை உள்ளவாறு சொல்லுக' என்றான்.

கு:—சூர்ப்பணகை கூறிய இராவணன் ஆற்றலைக் கேட்டு அஞ்சாதவன் இராமன் என்பது புலப்பட 'வீரன்' என அவனைக் குறித்தார். அவள் கூறும் குலத்திற்கும் அவள் வடிவின் நலத்திற்கும் இயைபின்மையால் ஐயுற்றான் என்க. செய்கை - என்றது அவள் கண்ணாலும் முகத்தாலும் உணர்த்திய காமக்குறிப்புகளை. இக் குறிப்புகளைச் செய்பவள் வாக்காலும் தன்கருத்தைப் புலப்படுத்தத் தவறமாட்டாள் என்ற உறுதியால், 'அறிதலாகும் சிறிதின்' என்று கருதினான். உணர - அவள் உண்மைநிலை உணரவேண்டி; தண்டகவனத்து முனிவர்களால் இராவணன் கொடுஞ்செயல்களையும் அவன் வெருவருதோற்றத்தையும் பற்றி முன்னரே இராமன் கேள்விப்பட்டிருத்தலின், 'செங்கண் வெவ்வுருவமைந்தோன்' என அவன் வடிவ இயல்பைக் கூறினான். ஒருவயிற்றுப் பிறந்தோர் ஒத்த வடிவமைப்புடையராதலே இயல்பாகலின், வெருவருதோற்றமுடைய இராவணனுக்குத் தங்கை எழில் மிக்க உருவினையுடையளாதல் பொருந்தாது என்பான், 'வெவ்வுருவமைந்தோன் தங்கை என்பது மெய்ம்மையாயின்' என்றான். தங்கை என்றது மெய்யாயின் இவ்வுருவம் பொய்யாதல்வேண்டும்; இவ்வுருவம் மெய்யாயின் இராவணன் தங்கை என்பது பொய்யாதல்வேண்டும் என்றவாறு; என்னை? அவ்விரண்டும் பகலும் இரவும்போல் ஒன்று நின்றுழி ஒன்றுநில்லாவாகலின். இராவணன் தங்கை, இராவணன்போல் வெவ்வுருவுடைமையே இயல்பு என்பது கருத்து. இயல்பின் - உண்மையாக. (40)

**2869.** தூயவன் பணியா முன்னஞ்
சொல்லுவாள் சோர்வி லாளம்
மாயவல் லரக்க ரோடு
வாழ்வினை மதிக்க லாதே
ஞய்வுறு மனத்தே னாகி
யறந்தலை நிற்ப தானேன்
றீவினை தீய நோற்றுத்
தேவரிற் பெற்ற தென்றாள்.

தூயவன் பணியாமுன்னம்
சொல்லுவாள், சோர்வு இலாள்: 'அம்
மாய வல் அரக்கரோடு
வாழ்வினை மதிக்கலாதேன்
ஆய்வுறு மனத்தேன் ஆகி,
அறம் தலைநிற்பது ஆனேன்.
தீவினை தீய நோற்றுத்
தேவரில் பெற்றது' என்றாள்.

பொ :—தூய்மையுடைய இராமன் இவ்வாறு சொல்லுதற்கு முன்னமே சூர்ப்பணகை விடைசொல்லுதற்குச் சோர்வு இல்லாதவளாய்ச் சொல்லுகின்றாள். "அந்த மாயச் செயல்களில்வல்ல அரக்கர்களோடு சேர்ந்து வாழும் வாழ்வினை மதிக்காது, நல்லது இது; தீயது இது; என ஆராயும் மனத்தையுடையேனாய் அறநெறியில் நின்றொழுகுகின்ற யான், தீவினைகள் தவக்கனலால் தீய்ந்து போமாறு பெருந்தவம் செய்து இவ்வுருவம் தேவர்பால் பெற்றது" என்றாள்.

கு :—உருவினால் வேறுபடுதற்கு முன்னரே உள்ளத்தால் வேறுபட்டு விட்டேன் என்பாள், 'அறந்தலை நிற்பதானேன்' என்றாள். இவ்வுரு தேவரில் பெற்றது என ஒரு சொல் வருவிக்க. பொய்ம்மையை விரும்பாதவன் இராமன் என்பது தோன்ற அவனைத் 'தூயவன்' என்றார். "தூஉய்மையென்ப தவாவின்மை மற்றது வாஅய்மை வேண்ட வரும்'' (குறள்-364) என அவாவின்மையையே தூய்மையாகக் கூறியிருத்தல் காணலாம். இராவணன் என்று பெயர் கூறாது மறைத்துக் கூறியவழியும் உய்த்துணர்தல் கூடும் என்பதை முன்னரே அறிந்தவள் ஆதலின், அவன் வினா முடிதற்கு முன்னரே, தான் கற்பனை செய்துவைத்திருந்த விடையைக் கூறத் தொடங்கிவிட்டாள் என்பது புலப்படப் 'பணியாமுன்னம்' எனவும், பொய் சொல்லுகின்றாள் என்பது புலனாகாவாறு விரைந்து சொல்லலானாள் என்பார், 'சோர்விலள் சொல்லுவாள்' எனவும் கூறினார். மாயவல்லரக்கர் எனத் தன் இனத்தை இழித்துக்கூறியது, தன் சொல்லை மெய்ம்மையென நம்புதல்வேண்டி. அறம் பாவங்களுள் தள்ளத்தக்கது பாவம் என்பதையும் கொள்ளத்தக்கது அறம் என்பதையும் தெளிய ஆராய்ச்சி பெரிதும் வேண்டப்படுதலின், 'ஆய்வுறு மனத்தேனாகி' என்றாள். ஆய்ந்து மேற்கொண்ட அறமாதலின் இனி எக்காலத்தும் அது விடற்பாலது ஆகாது என்ற கருத்தையும் இங்குப் புலப்படுத்தியவாறு. தீய என்ற வினைக்கேற்ற தவக்கனல் ஆகிய ஏது வருவிக்கப்பட்டது. (41)

2870. இமையவர் தலைவ னேயு
மெளிமையி னேவல் செய்யு
மமைதியி னுலக மூன்று
மாள்பவன் றங்கை யாயின்
சுமையுறு செல்வத் தோடுந்
தோன்றலை துணையு மின்றித்
தமியைநீ வருதற் கொத்த
தன்மையென் றைய லென்முன்.

'இமையவர் தலைவனேயும் எளிமையின் ஏவல் செய்யும்
அமைதியின், உலகம் மூன்றும் ஆள்பவன் தங்கை ஆயின்,
சுமை உறு செல்வத்தோடும் தோன்றலை; துணையும் இன்றித்
தமியை நீ வருதற்கு ஒத்த தன்மை என்? தையல்!' என்முன்.

பொ:—'தையலே! தேவர்கட்குத் தலைவனாகிய இந்திரன் தானும் எளிமையில் வந்து ஏவிய பணி செய்யத்தக்க தன்மையோடு உலகம் மூன்றையும் ஆளுகின்ற இராவணன் தங்கையானால் மிகுதியாகப் பொருந்திய செல்வச் சிறப்போடும் வாராமல் ஒரு துணை தானுமின்றித் தனியையாக நீ வருதற்குரிய காரணம் என்னை?' என்று வினவினான்.

கு:—தையல் – அழகுடையவள்; அண்மைவிளி. தலைவனேயும் என்புழி உம்மை உயர்வுசிறப்பு. விண்ணுலகத் தலைவனும் எளிமையின் ஏவல் செய்யத்தக்க பெருமை இராவணனுக்கு இருத்தலான் அவன் தங்கை, அப்பெருமைக்கேற்ற செல்வச் சிறப்போடும் பணிப்பெண்களோடுமன்றே வருதல்வேண்டும்? என்பது கருத்து. சுமையுறு செல்வம் என்றது மிக்க செல்வத்தை. செல்வத்தோடு தோன்றுமைக்குமேலும் துணையுமின்றி என இழிவு சிறப்பும்மை ஆக்குக. தோன்றலை, முற்றெச்சம்; தோன்றலையாய் என்க. (42)

2871. வீரனஃ துரைத்த லோடு
மெய்யிலாள் விமல யானச்
சீரிய ரல்லார் மாட்டுச்
சேர்கிலென் றேவர் பாலு

மாரிய முனிவர் பாலு
மடைந்தனெ னிறைவ வீண்டோர்
காரிய முண்மை நின்னைக்
காணிய வந்தே னென்றாள்.

வீரன் அஃது உரைத்தலோடும்
மெய் இலாள், 'விமல! யான் அச்
சீரியர் அல்லார் மாட்டுச்
சேர்கிலென்; தேவர்பாலும்
ஆரிய முனிவர்பாலும்
அடைந்தனென்; இறைவ! ஈண்டு ஓர்
காரியம் உண்மை நின்னைக்
காணிய வந்தேன்' என்றாள்.

பொ:—வீரனாகிய இராமன் அதைச் சொன்னவுடன், உண்மையில்லாதவளாகிய சூர்ப்பணகை, 'குற்றம் அற்றவனே! யான் அந்தச் சிறப்பில்லாராகிய அரக்கரிடத்தில் சேர்ந்திருக்கமாட்டேனாய்த் தேவரிடத்திலும் சிறந்த முனிவரிடத்திலும் சேர்ந்துள்ளேன்; தலைவனே! இங்கு எனக் காகவேண்டிய ஓர் காரியம் இருத்தலால் உன்னைக் காண வந்தேன்' என்றாள்.

கு:—இராவணன் ஆற்றலையும் பெருமையையும் கேட்டுச் சிறிதும் அஞ்சுதற்குரியனல்லன் என்பது தோன்ற இராமனை 'வீரன்' என்றார். படைத்துக்கொண்டு கூறும் திறமுடையள் என்பது தோன்ற 'மெய்யிலாள்' என்றார். அரக்கர் என்ற பெயரையும் அவர் தீயொழுக்கமுடையவர் என்பதையும் வாயினால் கூறுவதற்கும் கூசுகின்றவள் என்பது புலப்பட அச்சொற்களைச் சொல்லாமல், 'சீரியர் அல்லார்' என்று அவரைக் குறிப்பிட்டாள். தான் குற்றமற்றவள் என்பதை விளக்கத்தொடங்குகின்றவளாதலின் இராமனையும் 'விமல' என அத்தன்மையுடையான் என்பதுபட விளித்தாள். இறைவ! எனத் தான் நினைத்த காரியத்திற்கு ஏற்ற பெயரால் மீண்டும் விளித்தவாறு. இறைவன் - தலைவன்; கணவன். ஆரிய முனிவர் - சிறப்புடைய முனிவர். அரக்கர் சார்பை வெறுத்துத் தேவர் சார்பையும் முனிவர் சார்பையும் பெற்றுவிட்டமையால் அவ்வரக்கர்தம் செல்வச் சிறப்புடன் வரவில்லை எனக் காரணம் புலப்படுத்தியவாறு. காரியம் என்றது இராமனைக் கணவனாகப் பெறல்வேண்டும் என்பதாகும்; இதனைப் பின் அவள்கூற்றானே அறியலாம். (43)

2872. அன்னவ ளுரைத்த லோடு
மையனு மறிதற் கொவ்வா
நன்னுதன் மகளிர் சிந்தை
நன்னெறிப் பால வல்ல
பின்னிது தெரியு மென்னுப்
பெய்வளைத் தோளி யென்பா
லென்னகா ரியத்தை சொல்லஃ
தியையுமே லிழைப்ப லென்ருன்.

அன்னவள் உரைத்தலோடும்,
ஐயனும், 'அறிதற்கு ஒவ்வா
நல் நுதல் மகளிர் சிந்தை
நல் நெறிப் பால அல்ல;
பின் இது தெரியும்' என்னுப்,
'பெய் வளைத் தோளி! என்பால்
என்ன காரியத்தை? சொல்; அஃது
இயையுமேல் இழைப்பல்' என்ருன்.

பொ :—அந்தச் சூர்ப்பணகை அவ்வாறு சொன்னவுடன் இராமனும், 'நல்ல நெற்றியையுடைய பெண்டிரின் சிந்தை அறியவியலாதவை; அதுவேயுமன்றி, நன்னெறிக்கண் செல்வனவுமல்ல; இவ்வுண்மை பின்னர்த் தெரியும்' என்று கருத்துட்கொண்டு, (அவளை நோக்கி) 'வளையல் அணிந்த தோள்களையுடையவளே! என்னிடத்தில் என்ன காரியமுடையாய்? சொல்லுக; அக்காரியம் யான் செய்தல் கூடுமாயின் செய்கின்றேன்' என்ருன்.

கு :—மகளிர் சிந்தை நன்னெறிப் பால வல்ல, அறிதற் கொவ்வா என்பன மகளிரின் பொதுவகையான இயல்பு கூறுவது போலக் காணப்படினும் சூர்ப்பணகையை நினைந்து கூறியதேயாம். 'அத்திமலரும் அருங்காக்கை வெண்ணிறமுங் - கத்துபுனல் மீன் பதமுங் கண்டாலும்-பித்தரே! கானுர் தெரியல் கடவுளருங் காண்பரோ, மானுர் விழியார் மனம்' (நீதிவெண்பா) என்பதாலும் மகளிர் சிந்தை அறிதற் கொவ்வா என்பது பெறப்படும். 'பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா, உண்ணிறை யுடைய வல்ல ஓராயிர மனத்த வாகும்' (சீவக-1977) என்பதால் அது நன்னெறிப் பாலவல்ல என்பதை உணரலாகும். 'செய்கை செவ்விதன்றறியலாகும் சிறிதின்' (2868) என முன்கூறியதுபோலவே இங்கும், 'பின்னிது தெரியும்' என்ருன். என்ன காரியத்தை - என்ன காரியத்தையுடையாய்; முன்னிலைக் குறிப்பு முற்று. 'இயையுமேல்

இமைப்பல்' என்றது, இமையாதவழி இமையேன் என்றதை உணர்த்தியது. தயரதன் பின்னேக்காது வாக்களித்து வருந்தியதை உணர்ந்தவனுதலின் இராமன் இவ்வாறு திறமையாகக் கூறினுன். 'மகளிர்சிந்தை' என்பது முன்னும் பின்னும் இயைந்து இடைநிலே விளக்காய்நின்றது. (44)

2873. தாமுறு காமத் தன்மை
தாங்களே யுரைப்ப தென்ப
தாமென லாவ தன்ரு
லருங்குல மகளிர்க் கம்மா
வேமுறு முயிர்க்கு நோவே
னென்செய்கேன் யாரு மில்லேன்
காமனென் ருெருவன் செய்யும்
வன்மையைக் காத்தி யென்ருள்.

'தாம் உறு காமத் தன்மை
தாங்களே உரைப்பது என்பது
ஆம் எனல் ஆவது அன்ருல்,
அருங்குல மகளிர்க்கு அம்மா!
ஏம் உறும் உயிர்க்கு நோவேன்;
என் செய்கேன்? யாரும் இல்லேன்;
காமன் என்று ஒருவன் செய்யும்
வன்மையைக் காத்தி' என்ருள்.

பொ:—'தாம் அடைந்துள்ள காமத்தின் தன்மையைத் தாங்களே சொல்லுவது என்பது அரிய உயர்குலத்துப் பிறந்த பெண்டிர்க்குப் பொருந்தும் என்று சொல்லுதல் தக்கதன்று; ஆயினும், காமத்தால் கலங்குகின்ற உயிரின்பொருட்டு வருந்துகின்ற யான், (தூதாக உரைப்பதற்கு வேறு) யாரையும் இல்லாதவளாக இருக்கின்றேன்; என் செய்வேன்? (வேறு வழியில்லாமையால் யானே சொல்ல வேண்டியவளானேன்) காமன் என்று சொல்லப்படுகின்ற ஒருவன் செய்கின்ற கொடுமையைத் தடுத்தல்வேண்டும்' என்ருள்.

கு:—குலமகளிர், தம் காமத்தன்மையைத் தாங்களே சொல்ல மாட்டார் என்றமையால் பிறர் சொல்லுவர் என்பது பெறப்படும்; அவ்வாறு சொல்லத்தக்க தோழியர் முதலோர் யாரும் இல்லாமையால் யானே சொல்லவேண்டி நேர்ந்தது, என்பது கருத்து.

'தாங்களே உரையார்' என்று சுருங்கச் சொல்லவேண்டியதை, தாங்களே யுரைப்ப தென்பது ஆமெனலாவதன்றால் அருங்குல மகளிர்க்கம்மா' என நீட்டிக் கூறினாள் தன் மனத்தடுமாற்றத்தைப் புலப்படுத்த வேண்டி. அம்மா, வியப்பிடைச் சொல். ஏமுறல் - கலங்குதல். காமத்தால் கலங்கும் உயிர் நீங்கிவிடுமோ என்று வருந்துகின்றமையால், 'உயிர்கெட வருவழி ஒழுக்கங் கொள்ளார்' (பெருங்கதை - 1—34—88) என்ற முறைப்படி யான் கூறுதலும் தவறன்று என்ற கருத்தால் இறுதியடியால் தன் காமத்தைத் தானே கூறினாள் என்க. இதனால் சூர்ப்பணகை, தான் அருங்குலமகள் என்பதையும் நாணம் தடுக்கவும் உயிர் நீங்கிவிடுமோ என்ற அச்சத்தால் மட்டுமே கூற நேர்ந்தது என்பதையும் புலப்படுத்தியவாறு. அவ்வாறு புலப்படுத்துங்காலும், 'என்னை மணந்து கொள்க' என்று கூறாது மறைத்துக் கூறிய திறம் காண்க. 'உருவிலான் ஒருவன் செய்யும் உறுபகை காத்தல் வேண்டும்' (நைடதம்-நளன் தூது. 77.) என்பதும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். காத்தல் - தடுத்தல்; வன்மை என்பால் வந்து வருத்தாமல் காக்க எனலுமாம். காத்தலாவது, மணத்தல். (45)

2874. சேணுற நீண்டு மீண்டு
செவ்வரி சிதறி வெவ்வே
றேணுற மிளிர்ந்து நாணு
விதம்புரண் டிருண்ட வாட்கட்
பூணியல் கொங்கை யன்ன
ளம்மொழி புகற லோடு
நாணில ளைய னெய்ய
ணல்லளு மல்ல ளென்றான்.

சேண் உற நீண்டு, மீண்டு,
செவ்வரி சிதறி, வெவ்வேறு
ஏண் உற மிளிர்ந்து, நாணு
விதம் புரண்டு, இருண்ட வாள் கண்
பூண் இயல் கொங்கை அன்னாள்
அம்மொழி புகறலோடும்,
'நாண் இலள்; ஐயன், நொய்யள்;
நல்லளும் அல்லள்' என்றான்.

பொ :—நெடுந்தொலைவிலே பொருந்துமாறு நீண்டு சென்றும், உடனே மீண்டு வந்தும், சிவந்த வரிகள் சிதறப்பெற்றும், வெவ்வேறு வகையான வலிமைகள் தோன்ற விளங்கியும் பலவிதமாகப் புரண்டும் இருண்டு காணப்படுகின்ற வாள்போன்ற கண்களையும், அணிகள் பொருந்தின கொங்கைகளையும் உடைய அவள், அந்தச் சொல்லைச் சொன்னவுடனே ஐயனாகிய இராமன், 'இவள் நாணமில்லாதவள்; இழிகுணமுடையவள்; சிறிதும் நற்குணமுடையவளும் அல்லள்' என்று கருதினான்.

கு :—சூர்ப்பணகை, இராமனோடு உரையாடுங்கால் அவள் கண்கள் பட்டபாட்டையும் நகில்கள் நன்கு தோன்ற நின்ற நிலையினையும் விளக்க "இருண்ட வாட்கட் பூணியல் கொங்கையன்னாள்" என்றார். கண்களாலும் நகில்களாலும் குறிப்பால் காட்டிய காம மிகுதியைச் சொல்லாலும் வெளிப்படுத்தினாளே என்பார், 'அம்மொழி புகறலோடும்' என்றார். யாரும் புகலாத மொழி என்பது கருத்து. புகறலோடும் ஐயன் என மாறிக்கூட்டுக. நொய்யள் – இழிகுணமுடையவள்; அற்பத்தன்மையுடையவள். பின்னிது தெரியும் என்றவன், இப்பொழுது அவள் சொல்லால் அவள் நிலைமையை நன்குணர்ந்து கொண்டான் என்க. ஆடவர்முன் நிற்கவும் நாணவேண்டிய பெண், நின்றதோடன்றி உறுப்புக்களால் காமக் குறிப்பையும் காட்டிச் சொல்லாலும் வெளிப்படையாகக் கூறிய நிலையை நினைந்து 'நாணிலள்' என்றும், தான் விரும்பாதிருக்கவும் வலிதின் முற்பட்டுவந்து தன் விருப்பத்தைத் தெரிவித்த அவள் அற்பத்தன்மையை நினைந்து 'நொய்யள்' என்றும், உரையாடத் தொடங்கியது முதல் இதுகாறும் அவள் காமம் புலப்பட்டதன்றிப் பிறிதொரு நற்குணமும் புலப்படாமையின் 'நல்லளுமல்லள்' என்றும் கருதினான். இருபாலாரும் விரும்பாது ஒருபாலார் விரும்புவதை அற்ப உறவு என்ற பொருளில் 'கைக்கிளை' என்று கூறுதல் காண்க. (46)

2875. பேசல னிருந்த வள்ள
லுள்ளத்தின் பெற்றி யோராள்
பூசல்வண் டரற்றுங் கூந்தற்
பொய்ம்மகள் புகன்ற வென்க
ணாசைகண் டருளிற் றுண்டோ
வன்றென லுண்டோ வென்னு
மூசலி னுலாவு கின்றாண்
மீட்டுமோ ருரையைச் சொல்வாள்.

பேசலன் இருந்த வள்ளல்
    உள்ளத்தின் பெற்றி ஓராள்,
பூசல் வண்டு அரற்றும் கூந்தல்
    பொய்ம் மகள், ''புகன்ற என்கண்
ஆசை கண்டு அருளிற்று உண்டோ?
    அன்று எனல் உண்டோ?'' என்னும்
ஊசலின் உலாவுகின்ருள்,
    மீட்டும் ஓர் உரையைச் சொல்வாள்.

பொ :—(இவ்வாறு எண்ணி) ஒன்றும் பேசாமல் இருந்த இராமனது மனநிலையை அறியாதவளாய், போர்செய்தலையுடைய வண்டுகள் ஆரவாரிக்கும் கூந்தலையுடைய பொய்ம்மகளாகிய சூர்ப்பணகை, (குலமகளிர் புகலக் கூடாததைக்) கூறிய என்னிடத்துள்ள ஆசை மிகுதியைக் கண்டு (என் கருத்திற்கு) இசைந்தருளியதுண்டோ? அல்லது, (தக்கது) அன்று என்று மறுத்தல்தான் உண்டோ? என்று ஐயுறுதலாகிய ஊசலின்கண் உலாவுகின்றவளாய் மீண்டும் ஒரு சொல்லைச் சொன்னுள்.

கு :—ஓராளாய் என முற்றெச்சமாக்குக. 'பூசல்வண்டரற்றுங் கூந்தல்' என்பது இடையே பொய்ம்மகளுக்கு அடையாய் வந்தது. பொய்ம்மகள், உலாவுகின்ருளாய்ச் சொல்வாள் என இயையும். சூர்ப்பணகையின் இழிதகவை உணர்ந்தவுடன் அகலப்போ என்று கடிந்துகூருது மோனமாக இருந்த அருள் உள்ளத்தைப் புலப்படுத்த இராமனை 'வள்ளல்' என்ருர். ஐயத்தால் அவள் உள்ளத்தில் போராட்டம் நிகழ்வதைக் கூறுகின்றவர், 'பூசல்வண்டரற்றுங்கூந்தற் பொய்ம்மகள்' என அவள் கூந்தலிலும் வண்டின் போராட்டம் உண்டு என்பதை முன் உணர்த்தினர். ஒரு வண்டு அருந்துதற்குரிய தேனில் பிறிதொரு வண்டும் ஆசைகொண்டு போர் செய்ய ஆரவாரிக்கும் கூந்தலையுடையாள் ஆதலின் இவளும் சீதைக்குரிய தேன் போன்ற இராமனை விரும்பி வந்து சீதையோடு போராரவாரம் செய்தற்குரியள் என்ற கருத்தும் அதில் அமைந்துள்ளமை காணலாம். தன் கருத்து இன்னது எனச் சொல்லால் இராமன் புலப்படுத்தாமையின் சூர்ப்பணகை, தன் கருத்திற்கு இசைவானே இசையானே என்ற ஐயத்தால் தடுமாறினுள் என்பார், 'ஆசைகண்டு அருளிற்றுண்டோ அன்றெனலுண்டோ என்னும் ஊசலின் உலாவுகின்ருள்' என்ருர். ஐயம் என்பது இருபாற்பட்ட எண்ணமே ஆதலின் அதனை இருபுறமும் செல்லும் ஊசலாக உருவகஞ் செய்தார்; இதனை மாட்டேறில்லா உருவகம் என்பர்; உவமையாகுபெயர் என்றலும் ஒன்று; என்னை? ஊசல்போல் இருபாற்செல்லும் எண்ணத்தை ஊசல் என்றமையான்

என்க. "யாதென்று, இருபாற் கவருற்று இடையூச லாடி, ஒருபாற் படாதென் னுளம்" (தண்டி. ஐயவுவமை மேற்கோள்.) என்புழியும் ஐயமுறுதலை ஊசலாடுவதாகக் கூறியிருத்தல் காண லாம். இருபாற்பட்ட எண்ணத்தால் தடுமாறுங்காலும் தனக்கினி தான கருத்தாகிய 'அருளிற்றுண்டோ' என்பதை முன்னும் தனக்கின்னாததான, 'அன்றெனலுண்டோ' என்பதைப் பின்னும் நினைத்த நயம் காண்க. ஆயினும் பிற்கூறியதே உறுதியாயிற்று. இராமன் இயல்பாக ஆசை இலனாயினும், குலமகளிர் கூறக்கூடாத தன் காமத்தன்மையைத் தானே புகன்ற காரணத்தால் தன் ஆசை மிகுதியைக் கண்டேனும் இசைந்தருளலாம் என்பது சூர்ப்பணகை யின் கருத்து. ஊசலினுலாவுதல் - ஐயத்தால் தடுமாறுதல். (47)

2876. எழுதரு மேனி யாயீண்
டெய்திய தறிந்தி லாதேன்
முழுதுணர் முனிவ ரேவல்
செய்தொழின் முறையின் முற்றிப்
பழுதறு பெண்மை யோடு
மிளமையும் பயனின் றேகப்
பொழுதொடு நாளும் வாளா
கழிந்தன போலு மென்றாள்.

'எழுதரு மேனியாய்! ஈண்டு எய்தியது அறிந்திலாதேன்,
முழுது உணர் முனிவர் ஏவல் செய் தொழில் முறையின் முற்றிப்
பழுது அறு பெண்மையோடும் இளமையும் பயனின்று ஏகப்
பொழுதொடு நாளும் வாளா கழிந்தன போலும்' என்றாள்.

பொ :—"ஓவியம் வல்லவராலும் எழுதுதற்கு அரிய மேனி யழகை யுடையவனே! நீ இங்கு வந்திருப்பதை அறியாதேனாய், முற்றுமுணர்ந்த முனிவர்க்கு ஏவல்செய்கின்ற என் தொழிலை முறையாக முற்றுப்பெறச் செய்துகொண்டிருந்தமையால், என் னுடைய பழுதடையாத பெண்மையும் இளமையும் பயனின்றிக் கழியப் பொழுதும் நாளும் வீணாகக் கழிந்தன" என்று கூறினாள்.

கு :—இராமன் பேரழகில் ஈடுபட்டு அதன் உயர்வை யுணர்த்த 'எழுதருமேனியாய்' என விளித்தாள். இராமன் அம்பால் மரண வேதனையிலிருந்த வாலியும் 'ஓவியத் தெழுதவொண்ணா வுருவத் தாய்' (கிட்கிந்தா - வாலிவதை-78) என அவன் வடிவழகில் ஈடு பாடுகொண்டு கூறுகின்றமை காண்க. அறிந்திலாதேனாய் முற்று

தலால் பெண்மையோடு இளமையும் பயனின்றேக, நாளும் வாளா கழிந்தன என்று இயையும். முனிவர்க்கு ஏவல் செய்யும் தொழில் என நான்காவது விரிக்க. முற்றி என்னும் செய்து என் வாய் பாட்டு வினையெச்சம் காரணப்பொருளில் வந்தது ; மழைபெய்து நெல் விளைந்தது என்புழிப்போல. முற்றுப்பெறச்செய்து கொண்டிருந்தமையால் என்க. நீ இங்கு எய்தியது அறிந்திருப்பின் முனிவர் ஏவலை முற்றுப்பெறச் செய்யாமலும் முன்னரே வந்து என் பெண்மையும் இளமையும் பயன்பட உன்னைக் கூடிப் பொழுதையும் நாளையும் இன்பமாகக் கழித்திருப்பேன் என்பது கருத்து. தான் ஏவல் செய்தற் கேற்ற தகுதியுடையர் என்பது தோன்ற 'முழுதுணர் முனிவர்' என்ருள். முழுதுணர் முனிவர் ஏவலினும் நின்னேடு உறைதலைச் சிறப்பாக மதிக்கின்றேன் என்ற கருத்தும் இங்குப் புலப்படுத்தியவாறு. பழுதறு பெண்மை என்ருள், ஆடவர் எவராலும் தொடப்படாதவள் என்பதைப் புலப்படுத்தவேண்டி. அயோமுகியும், 'முன்ன மொருத்தர் தொடாமுலையோடும், பொன்னின் மணித்தட மார்பு புணர்ந்தென் இன்னுயிரைக் கடிதீகுதி' (அயோமுகி. 53) என இலக்குவனிடம் தன் பெண்மையின் பழுதின்மையை விளக்குதல் காணலாம். பெண் தன்மைக்குப் பயன், தக்க கணவனேடு வாழ் தலே ஆதலின், 'பெண்மையோடு மிளமையும் பயனின்றேக' என்ருள். அற்ருர்க்கு ஒன்ருற்ருதான் செல்வம் பயனற்றது ;என் பதை விளக்கவந்த வள்ளுவர், மிக நலம் பெற்ருள் ஒருத்தி கொழு நனை மணந்து வாழாமல் தமியளாய் வாழ்தலையே உவமை கூறி யிருத்தல் காணலாம் (1007). இன்பநுகர்ச்சிக்குரிய பருவம் அதுவே யாதலின் இளமையும் சேர்த்துக் கூறினர். பொழுது என்றது நாளின் ஆறில் ஒரு கூருகிய சிறுபொழுதினை. அது காலை முதல் வைகறை யீருக அறுவகைப்படும். பயனற்றுப்போன காலத்தி னருமை தோன்றப் பொழுதையும் சேர்த்துக் கூறினள். இராமனை அடையாது கழிந்த நாட்கள் வீணுயினவே எனக் கழிவிரக்கம் காட்டுகின்ருள்; இறைநிலையில் அவனை அடைந்து உய்திபெருத நாட்களைப் பற்றி நினைத்து, அடியார்களும் "புள்ளிருக்கு வேளூரா னைப் போற்ருதே ஆற்றநாள் போக்கினேனே" (அப்பர்-6-54-1) எனவும், 'கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தவாறே' (அப்பர் 4-5-10) எனவும் கழிவிரக்கம்கொள்ளுதல் காணலாம். (48)

**2877.** நிந்தனை யரக்கி நீதி
நிலையிலாள் வினைமற் றெண்ணி
வந்தன ளாகு மென்றே
வள்ளலு மனத்துட் கொண்டான்

சுந்தரி மரபிற் கொத்த
தொன்மையின் றுணிவிற் றன்று
லந்தணர் பாவை நீயா
னரசரில் வந்தே னென்றான்.

'நிந்தனை அரக்கி நீதி நிலை இலாள்: வினை மற்று எண்ணி
வந்தனள் ஆகும்' என்றே வள்ளலும் மனத்துள் கொண்டான்;
'சுந்தரி! மரபிற்கு ஒத்த தொன்மையின் துணிவிற்று அன்றால்;
அந்தணர் பாவை நீ; யான் அரசரில் வந்தேன்' என்றான்.

பொ:—(அவள் கூறியதைக் கேட்ட) வள்ளலாகிய இராமனும், 'பழிக்கத்தக்க அரக்கியாகிய இவள், நீதியும் நிலையான கருத்தும் இல்லாதவளாவள்; வேறு வஞ்சகச் செயல் செய்ய எண்ணி இங்கு வந்தாளாவள்' என்று மனத்துள் எண்ணியவனாய், (விளையாட்டாக) 'அழகுடையவளே! குலமுறைக்கேற்ற பழமையான ஒழுக்கத்துட்பட்டதன்று (நின்கருத்து); நீ அந்தணர்குலத்துப் பெண், யானோ அரசர் குடியில் பிறந்தவன்' என்று கூறினான்.

கு:—நிந்தனை - பழி. 'அறந்தலை நிற்பதானேன்' என முன்னர்க் கூறியவள், இப்பொழுது முனிவர் ஏவலினும் இன்பம் நுகர்தலைப் பெரிதாகக் கூறுகின்றாள் ஆதலால், நீதி மேற்கொண்டவளும் அல்லள்; நிலையான கொள்கையுடையவளும் அல்லள் என்பான், 'நீதி நிலையிலள்' என்றான்; உம்மைத்தொகை. மணந்து இன்புற விரும்புவாள்போலக் காட்டி அரக்கர்க்குப் பகையாக வந்துள்ள நம்மை வஞ்சித்து அழிக்க எண்ணி வந்தவளே என்பான், வினைமற்றெண்ணி வந்தனளாகும் என்று கருதினான். கொண்டான், முற்றெச்சம். அரக்கி என்பதையும் அவள் வஞ்சிப்பவள் என்பதையும் துணிந்த இராமன், அவளை வருண வேறுபாடு காட்டி இனிதாகப் பேசி அனுப்ப எண்ணிய அருள் உள்ளம் புலப்பட இராமனை 'வள்ளல்' என்றார். மரபு என்றது இங்குச் சாதியை. அரக்கி என்பதை மறைத்து அவள் கூறிய குல முறையே பற்றிப் 'பிரமனுக்குப் பேரன் மகளாகிய நீ அந்தணர் பாவை; யானோ அரசர் குடியிற் பிறந்தவன்; ஆதலின் அரசர், அந்தணர் பெண்ணை மணத்தல் பழமையான ஒழுக்கத்திற்கு மாறுபட்டது' என்று கூறினான். 'தொன்மையின் துணிவு' என்றது பழைய ஒழுக்கத்தை. துணிவிற்றன்று என்ற பயனிலைக்கு ஏற்ப, 'நின்கருத்து' என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. மணந்துகொள்ளத்தக்க அழகுடையவள் என்பது புலப்படச் 'சுந்தரி' என விளித்தான். ஒருவன் தன் குலத்துப் பெண்ணையே மணத்தல் சிறந்தது என்பதும், தவறினால் தன் குலத்திற்குக் கீழ்ப்பட்ட குலத்துப் பெண்ணை மணக்க

லாம் என்பதும், மேற்குலப் பெண்ணை மணத்தல் கூடாது என்பதும் பழைய ஒழுக்க நெறியாகும். அரசர்குலத்தில் பிறந்த இராமன், தனக்கு மேற்குலமாகிய அந்தணர் குலத்துப் பெண்ணை மணத்தல் பழைய ஒழுக்கநெறிக்கு மாறுபட்டது என்பது கருத்து. இதைக் கூறி அவளை அனுப்ப எண்ணினன் இராமன். ஆனல் அவள் மேலும் தொடர்கின்ருள். (49)

2878. ஆரண மறையயோ னெந்தை
யருந்ததிக் கற்பி னெம்மோய்
தாரணி புரந்த சால
கடங்கடர் மரபின் றையல்
போரணி பொலங்கொள் வேலாய்
பொருந்தலை யிகழ்தற் கொத்த
காரண மிதுவே யாயி
னென்னுயிர் காண்பெ னென்ருள்.

'ஆரண மறையோன் எந்தை;
அருந்ததிக் கற்பின் எம்மோய்,
தாரணி புரந்த சால
கடங்கடர் மரபின் தையல்;
போர் அணி பொலம் கொள் வேலாய்!
பொருந்தலை இகழ்தற்கு ஒத்த
காரணம் இதுவே ஆயின்,
என் உயிர் காண்பென்' என்ருள்.

பொ:—'எம் தந்தை விச்சிரவசு, வேதம் பயின்ற அந்தணனுவன், அருந்ததிபோன்ற கற்பினையுடைய எம் தாயோ, உலகைக் காத்து அரசுபுரிந்த சாலகடங்கடர் மரபில் பிறந்த பெண் ஆவள்; போர் செய்தலையே அணியாகக் கொண்டுள்ள அழகுபொருந்திய வேலை யுடையவனே! நீ என் கருத்திற்கிசையாமல் இகழ்தற்கேற்ற காரணம் இதுவே ஆனல் யான் உய்ந்தேன்' என்ருள்.

கு:—ஆரணம் என முன் வந்தமையால் மறையோன் என்றது சாதிப்பெயராய் நின்றது. அந்தண வருணத்துப் பெண் என்ற காரணமே நம் மணத்திற்குத் தடையாயிருப்பின் தாய் அரச மரபினள் என்பதால் அக்காரணம் பொய்யாயிற்று; ஆகவே நீ மணந்துகொள்வாய் என்பது உறுதியாதலின் இனிப் பிழைத்தேன் என்ருள். 'என்னுயிர்காண்பென்' என்றது உய்ந்தேன் என்னும்

பொருளது. இதனால் இராமனை மணக்க இயலாதுபோயின் இறந்து படுவேன் என்ற கருத்தையும் புலப்படுத்தியவாறு. தான் கற்புடையவள் என்பதை நிறுவவேண்டித் தன்தாயை 'அருந்ததிக் கற்பின் எம்மோய்' என்றாள்; என்னை? 'தாயைப்போலப் பிள்ளை நூலைப் போலக் கயிறு' என்பாராதலின். கற்புடையாளுக்குப் பிறந்த பெண்ணும் கற்புடையவளே என்பது கருத்து. சாலகடங்கடர் என்பவர் அரசுமேற்கொண்டு வாழ்ந்த அரக்கர் மரபினர். அம்மரபுப் பெயரினும் அவர் அரசு புரிந்தவர்கள் என்பதே இங்குக் காட்டவேண்டிய சிறப்பினது ஆதலின் 'தாரணிபுரந்த' என்பதை முதற்கண் கூறினாள். சாலகடங்கடர் மரபினள் என்பதால் கோர உருவின் அரக்கியோ என்று எண்ண நேருமாதலின் அதை விலக்க, 'தையல்' என்றாள். தையல் - அழகுடையவள். பொருந்தலை, முற்றெச்சம்; பொருந்தலையாய் - பொருந்தாமல் என்று பொருள்படும். இனி, பொருந்தல் என்ற தொழிற்பெயர் ஐ உருபேற்றதாகக் கொண்டு, பொருள் கூறலுமாம்.

அரக்கர் குலத்துப் பிறந்த ஏதி என்பவன் மகனாகிய வித்தியுத் கேசன், சந்தியையின் மகளான சாலகடங்கடை என்பவளை மணந்து சுகேசனைப் பெற்றான். அச் சுகேசன் மக்கள் மாலியவான், சுமாலி, மாலி என்பவர்கள்; அவருள், சுமாலியின் மகள் கேகசி, விச்சிரவசு என்னும் அந்தணனை மணந்து இராவணன் முதலியோரை ஈன்றாள் என்பது வரலாறு. (50)

**2879.** அருத்திய ளனைய கூற
வகத்துறு நகையின் வெள்ளைக்
குருத்தெழு கின்ற நீலக்
கொண்டலுண் டாட்டங் கொண்டான்
வருந்தநீங் கரக்கர் தம்மின்
மானுடர் மணத்த னங்கை
பொருத்தமன் றென்று சாலப்
புலமையோர் புகல்வ ரென்றான்.

அருத்தியள் அனைய கூற,
அகத்து உறு நகையின் வெள்ளைக்
குருத்து எழுகின்ற நீலக்
கொண்டல் உண்டாட்டம் கொண்டான்,

' ''வருத்தம் நீங்கு அரக்கர் தம்மில்
மானுடர் மணத்தல், நங்கை!
பொருத்தம் அன்று'' என்று சாலப்
புலமையோர் புகல்வர்' என்றான்.

பொ :—சூர்ப்பணகை ஆசைமிக்கவளாய் அச்சொற்களைச் சொல்ல, வாயினுள் பொருந்திய சிரிப்பின் வெண்மையான இள வொளி வெளித்தோன்றுகின்ற நீலமேகம் போன்றவனான இராமன், ஒருவிளையாட்டை மேற்கொண்டவனாய், 'நங்காய்! துன்பம் அறியாத அரக்கரோடு மனிதர் மணம் செய்துகொள்ளுதல் பொருத்தம் அன்று என்று சிறந்த புலமையுள்ள சான்றோர் சொல்வார்கள்' என்றான்.

கு :—அருத்தி - ஆசை. இராமன், சூர்ப்பணகையை எப்படியேனும் அகற்றவேண்டும் என்ற எண்ணத்தால் கூறிய சொல்லையே தன் கருத்தை நிறைவேற்றிக்கொள்ளற் கேற்றதாக நினைத்த அவள் ஆசையைக் கண்டு சிரிக்கலானான். இவ்வாறே இராமன், அருத்தி வேதியர்க் கான்குல மீந்தவர், கருத்தி னாசை கரையின்மை கண்டிறை, சிரித்த செய்கை (சுந்தர-355) பின் கூறப்படுதல் காணலாம். குறுநகை கொண்டமை புலப்பட 'அகத்துறு நகை' என்றார். வாய்க்குள் சிரித்துக்கொண்டான் என்பது கருத்து. சிறிது வாய்திறந்த அளவில் பல்லொளி மெல்லிதாக வெளிப்பட்டமை தோன்ற, 'வெள்ளைக் குருத்து எழுகின்ற' என்றார். நீலக் கொண்டல் என்றது உவமை ஆகுபெயராய் இராமனை யுணர்த்தியது. உண்டாட்டம் - சிறுவிளையாட்டு; மனம் பற்றாது வாயால் உரையாடி மகிழ்தல். இவ்விளையாட்டே இராமனுக்குச் சீதையைப் பிரிந்து வருந்தும் வினையாக முடிகின்றது. பிறர்வருத்தங்கண்டு வருந்தாது மேலும் வருத்துபவர் அரக்கராதலின் அவரை வருத்த நீங்கரக்கர்' என்றான். 'நெஞ்சத்தவலமிலர்' (குறள்-1072) என்று கயமைத்தன்மையை விளக்கியவாறாகவும் கொள்ளலாம். வருத்தம் நீங்கு என்பதை ஏவலாகக்கொண்டு, 'என்மேல் வருத்தம்கொள்ளாதே; புலமையோர் புகல்வர்' என்று கூறியதாகவும் கொள்ள இடமுண்டு. தம்மின், தம்மொடு என வேற்றுமை மயக்கம் ஆக்குக. தம்மில் எனப் பிரித்து அரக்கர்வீட்டில் மானுடர் மணத்தல் என்றும் பொருள் கொள்ளலாம். மணத்தல் - கலத்தல். அரக்கர்தம் மின் எனப் பிரித்து அரக்கர்தம் பெண் எனப் பொருள் கூறலுமாம். மின் உவமை ஆகுபெயராய்ப் பெண்ணையுணர்த்தும். நங்கை - பெண்டிரில் சிறந்தோள்; இவ்வாறு விளித்தது இகழ்ச்சிக்குறிப்புத்தோன்ற. அந்தணர்பாவை அல்லேன் என்பதை நிறுவக் காட்டிய காரணமே அவள் அரக்கர் பாவை என்பதை நிறுவிற்று ஆதலின். தேளுக்குப் பயந்து பாந்தள்வாயில் வீழ்ந்தவள்போல் ஆயினள் என்க.

என்னை ? சாலகடங்கடர் மரபு அரக்கர் மரபே ஆதலின். அரக்கர் கணமும் மனித கணமும் மணத்தல் கூடாது என்பது சோதிடநூல் கொள்கையுமாகும். சாலப்புலமையோர் புகல்வர் என்றது அவர் சொல் ஏற்றுக்கொள்ளத்தக்கது என்பதை வற்புறுத்தி நின்றது. (51)

2830. பராவருஞ் சிரத்தை யாரும்
பத்தியின் பயத்தை யோரா
திராவணன் றங்கை யென்ற
தேழைமைப் பால தென்னு
வராவணை யமல னன்னு
யறிவித்தேன் முன்னந் தேவர்ப்
பராவினி னீங்கி னேனப்
பழிபடு பிறவி யென்றுள்.

'பராவருஞ் சிரத்தை ஆரும்
பத்தியின் பயத்தை ஓராது
''இராவணன் தங்கை'' என்றது
ஏழைமைப்பாலது' என்னு,
'அராவணை அமலன் அன்னுய்!
அறிவித்தேன் முன்னம்; தேவர்ப்
பராவினில் நீங்கினேன் அப்
பழிபடு பிறவி' என்றுள்.

பொ:—(அதுகேட்ட சூர்ப்பணகை) புகழ்தற்கரிய ஊக்கம் நிறைந்த பத்தியின் பயனே இப்பிறவி என்று மட்டும் கூற அறியாமல், 'இராவணனுக்குத் தங்கை'யென்றுகூறியது, அறியாமையின் பாலதாகும் என்று கருத்துட்கொண்டு, (இராமனை நோக்கி) பாம் பணையில் பள்ளிகொள்ளும் நாராயணனை ஒத்தவனே! இது பற்றி முன்னும் அறிவித்தேன்; அந்தப் பழிக்கத் தக்க அரக்கப் பிறவியைத் தேவரைத் துதித்தமையால் நீக்கிவிட்டேன் என்று கூறினுள்.

கு:—பராவ அரும் - புகழ்தற்கரிய; அகரம் தொகுத்தல். ஆரும் - நிறையும். இவை பத்திக்கு அடையாய் வந்தன. பத்தியின் பயத்தை ஓராது - இப்பிறவி பத்தியின் பயனுகும் என்பதை மட்டும் கூற அறியாமல் என வேண்டும் சொல் இசையெச்சமாக வருவித்து முடிக்க. பத்தியின் பயனுகவந்த பிறவியைப் பத்தியின் பயன் என்றுள். அத்துச் சாரியை. பத்தியின் பயனுகப் பிறவி மாறினேன்

என்றுமட்டும் கூறியிருந்தால், அந்தணர் பாவையை அரசர் மணத்தல் அறமன்று என்றோ, அரக்கர் பாவையை மானுடர் மணத்தல் பொருத்தமன்று என்றோ இராமன் கூறும் தடைகள் நிகழாவே என்பது அவள் கருத்து. எனவே அதனையே வற்புறுத்துவாளாய்த் 'தேவர்ப் பராவினில் நீங்கினேன் அப்பழிபடு பிறவி' என்று முடிவாகக் கூறினாள். அறிவித்தேன் முன்னும் என்றது, "மாயவல் லரக்கரோடு வாழ்வினை மதிக்கலாதேன்.........தீவினை தீயநோற்றுத் தேவரிற் பெற்றது" (2869) என்றதை. முன்கூறியதை உறக்கத்தால் மறந்தீர்போலும் என அசதியாடிக் கூறுவாளாய், 'அராவணை யமலனன்னாய்! அறிவித்தேன் முன்னம்' என விளித்துக்கூறினாள். வடிவால் மட்டுமின்றி உறக்கத்தாலும் நாராயணனை ஒத்தாய் போலும் என்பது கருத்து. தந்தை மரபினை நோக்கி, அந்தணர் பாவைநீ ஆதலின் அரசமரபினனாகிய யான் மணத்தல் முறையன்று என்று இராமன் மறுத்ததை விலக்கவேண்டித் தாய்மரபு கூறித் தான் அரசமரபினளே ஆதலின் தன்னை மணத்தல் அறமாகும் எனச் சூர்ப்பணகை நிறுவ, அதுகேட்ட இராமன், அப்படியாயின் அரக்கப் பெண்ணாகிய உன்னை மானிடர் மணத்தல் பொருத்தமன்று என்று மீண்டும் தடை கூறினான். அரக்கி என்பதை மறைக்கத் தந்தைமரபு கூறி அந்தணர் மரபினளாகக்காட்டிய அவளே, தாய் மரபு கூறி அரக்கியென்பதை யுணர்த்துமாறு செய்த கவி நுட்பம் காண்க. தாய் மரபு கூறியதால் அரக்கியாகும் என்பதை உணர்ந்த இராமன் தடை கூறவும் அதனை உணராத சூர்ப்பணகை, முன்னர் 'உலக மூன்றுங் காவலான் தங்கை' என்று கூறியதேபற்றி அரக்கி என்கின்றதாகக் கருதி, 'இராவணன்தங்கை யென்ற தேழமைப் பாலது' என்று கருதினாள். (52)

**2881.** ஒருவனே வுலக மூன்றிற்
    கோங்கொரு தலைவ னாங்கி
ஞெருவனே குபேர னின்னோ
    டுடன்பிறந் தவர்க ளன்னார்
தருவரேற் கொள்வெ னன்றேற்
    றமியைவே றிடத்துச் சார்தி
வெருவுவ னங்கை யென்றான்
    வேதத்தி னறிவை வென்றான்.

'ஒருவனே உலகம் மூன்றிற்கு
ஓங்கு ஒரு தலைவன்; ஊங்கின்
ஒருவனோ குபேரன்; நின்னோடு
உடன் பிறந்தவர்கள்; அன்னார்
தருவரேல், கொள்வென்; அன்றேல்,
தமியை வேறு இடத்துச் சார்தி;
வெருவுவன்; நங்கை!' என்றான்,
வேதத்தின் அறிவை வென்றான்.

பொ:—'நின்னொடு உடன்பிறந்தவர்களில் ஒருவனே உலகம் மூன்றுக்கும் சிறந்த தலைவனான இராவணன், அவனுக்கு முன்னோனான ஒருவனே செல்வத்திற்குத் தலைவனான குபேரன்; அன்னார் இருவரும் நின்னை எனக்குத் தருவார்களாயின் ஏற்றுக்கொள்வேன்; இல்லையானால் தனியாக இருக்கின்றநீ வேறிடத்திற்குச் செல்க; (நின்னோடு தனித்து உரையாடவும்) அஞ்சுகின்றேன்' என்றான். யாரெனின்? வேதத்தின் அறிவையும் வென்று மேம்பட்டவனாகிய இராமன்.

கு:—ஓங்கொருதலைவன் என்றது இராவணனை. ஊங்கினொருவன் என்றது அவனுக்கு முன்னோனாகிய ஒருவன் என்னும் பொருளது; ''தூங்கெயிலெறிந்த நின்னூங்கணோர்'' (புறநா-39-6) என்புழி ஊங்கணோர் என்பது முன்னோரைக் குறித்தல் காணலாம். 'என்னையைக் காணா வூங்கே' (புறநா-88-6) என்புழியும் ஊங்கு 'முன்' என்ற பொருளில் வந்தமை காணலாம். தலைமையில் சிறந்தோனாகிய இராவணனும் செல்வத்தில் சிறந்தோனாகிய குபேரனும் இங்கு நேரில் வந்து, அவளை மணஞ்செய்துகொடார் என்ற துணிவினால் 'தருவரேல் கொள்வென்' என்று இராமன் கூறினான். தனித்து நின்னோடு உரையாடுவதைக் காண்பாராயினும், நின் தமையன்மார்கள் வெகுள்வர் என்பான், 'வெருவுவன் நங்கை' என்றான். இங்கு நில்லாமல் செல்க என்பான், 'வேறிடத்துச்சார்தி' என்றான். வேதங்களாலும் அளவிடப்படாத அறிவினனாகிய இராமன், காதல் மிக்கவன்போல 'அன்னார் தருவரேற் கொள்வென்' என்றும், அச்சமிக்கவன்போல 'வெருவுவன்' என்றும் கூறியது விளையாட்டே என்பதுணர்த்த 'வேதத்தினறிவை வென்றான்' என்றார். (53)

2882. காந்தர்ப்ப மென்ப துண்டாற்
காதலிற் கலந்த சிந்தை
மாந்தர்க்கு மடந்தை மார்க்கு
மறைகளே வகுத்த கூட்ட
மேந்தற்பொற் ரேளி ளுயிஃ
தியைந்தபின் னெனக்கு மூத்த
வேந்தர்க்கும் விருப்பிற் ருகும்
வேறுமோ ருரையுண் டென்ருள்.

'காந்தர்ப்பம் என்பது உண்டால்:
காதலின் கலந்த சிந்தை
மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும்
மறைகளே வகுத்த கூட்டம்,
ஏந்தல் பொன் தோளிளுய்! இஃது
இயைந்தபின், எனக்கு மூத்த
வேந்தர்க்கும் விருப்பிற்ருகும்;
வேறும் ஓர் உரை உண்டு' என்ருள்.

பொ :—'உயர்ந்த அழகிய தோள்களையுடையோய்! காதலால் கலந்த மனத்தவராகிய மைந்தர்க்கும் மடந்தைமார்க்கும் உரியதாக வேதங்களே வகுத்து வைத்துள்ள மணம், கந்தருவம் என்பது ஒன்று உளது; இந்தக் கந்தருவ மணம் நமக்குள் நிகழ்ந்த பின்னர், எனக்கு மூத்தவராகிய அவ்விருவேந்தர்கட்கும் அது விருப்பமுள்ள தாகும்; இஃதன்றி வேறு ஒரு சொல்லும் உனக்குச் சொல்ல வேண்டியுளது' என்ருள்.

கு :—ஏந்தல் - உயர்ச்சி. பொன் - அழகு. பெண்டிருள்ளம் ஆடவர் தோளில் ஈடுபாடு உடையதாகலின் அத்தோளையே சிறப் பித்து விளித்தாள். "நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலிணை, ஆக்கிய மதுகையான் தோளிளுழ்ந்தன" (599) எனச் சீதையின் கண்கள் இராமன் தோளில் ஆழ்ந்தமை கூறியுள்ளதும் காணலாம். "காந்தர்ப்பம் - கந்தருவமணம். அது கந்தருவ குமா ரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்ததுபோலத் தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது.

"அதிர்ப்பில்பைம் பூணுரு மாடவருந் தம்மு
ளெதிர்ப்பட்டுக் கண்டியைத லென்ப—கதிர்ப்பொன்யாழ்
முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக்
கந்திருவர் கண்ட கலப்பு" என இவற்ருனுணர்க"

என்ற நச்சினார்க்கினியர் (தொல் - களவியல் - சூ-1) விளக்கமும், "காமக்கூட்டங் காணுங்காலை, மறையோர்தேஎத்து மன்றலெட்டி னுள், துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே" (களவியல்-1) என்ற தொல்காப்பிய நூற்பாவும் இங்கு நினைத்தற் குரியன. 'மாந்தர்' என்றது ஆடவர் பன்மைமட்டும் உணர்த்தும் சொல். மருது ஏற்றுக்கோடற்குரியது என்பாள், 'மறைகளே வகுத்த கூட்டம்' என்றாள். 'மறையோர்தேஎத்து மன்றல்' என்ற தும் காண்க. கூட்டம் - புணர்ச்சி; மணம். இஃது, என்றது கந்தருவ மணத்தை. கந்தருவமணம் நிகழ்ந்தபின் அண்ணன்மாரும் உடன் படாதிருக்க இயலாது என்ற கருத்தால், 'எனக்கு மூத்த வேந் தர்க்கும் விருப்பிற்றாகும்' என்றாள். அரக்கர்குலப் பெண்ணை மானுடர் மணத்தல் பொருத்தமன்று என்று இராமன் மறுத்த போது, 'அப்பழிபடு பிறவியைத் தேவர்ப்பராவினி னீங்கினேன்" என்றும், அதற்குமுன் 'மாயவல்லரக்கரோடு வாழ்வினை மதிக்க லாதேன்' என்றும் கூறியவள், 'அன்னார் தருவரேற் கொள்வென்' என இராமன் கூறிய அளவில், முன்கூறியதையெல்லாம் மறந்து 'எனக்கு மூத்த வேந்தர்க்கும் விருப்பிற்றாகும்' எனத் தனக்கு அவ் வரக்கர் தொடர்புண்டு என்பதை ஒத்துக்கொண்டதன்மை இங்கு நோக்குக. திறமையான கற்பனையால் மெய்யை மறைக்க முயல் கின்ற சூர்ப்பணகையை இவ்வுரையாடல் மூலம் மெய்ம்மை கூறச் செய்துவிட்டான் இராமன் என்பது உளங்கொளத்தகும். (54)

**2883.** முனிவரோ டுடையர் முன்னே
முதிர்பகை முறைமை நோக்கார்
தனியைநீ யாத லான்மற்
றவரொடுந் தழுவற் கொத்த
வினையமீ தல்ல தில்லை
விண்ணு நின் னாட்சி யாக்கி
யினியரா யன்னர் வந்துன்
னேவலி னிற்ப ரென்றாள்.

'முனிவரோடு உடையர் முன்னே
முதிர்பகை, முறைமை நோக்கார்,
தனியை நீ; ஆதலால், மற்று
அவரொடும் தழுவற்கு ஒத்த

வினையம் ஈது அல்லது இல்லை;
விண்ணும் நின் ஆட்சி ஆக்கி,
இனியராய் அன்னர் வந்து உன்
ஏவலின் நிற்பர்' என்றாள்.

பொ:—'(இராவணன் முதலோர்) முன்னமே முனிவர்களோடு முதிர்ந்த பகைமையுடையவர்கள்; (முனிவர்களைக் கொல்லலாகாது என்ற) முறைமையை நோக்கமாட்டார்கள்; முனிவர் வேடம் பூண்டுள்ள நீயோ தனியாக இருக்கின்றாய்; ஆதலால் அவ்விராவணன் முதலியவரோடு நட்புக்கொள்ளுதற்கேற்ற உபாயம் இக் கந்தருவமணம் அல்லது வேறு இல்லை; (நம் கந்தருவமணம் நிகழ்ந்துவிடுமாயின்) விண்ணுலகையும் நின்னுட்சிக்குரியதாக்கி விட்டு உனக்கு இனிய நண்பர்களாய் அவர்கள் வந்து நின் ஏவலை எதிர்நோக்கி நிற்பார்கள்' என்றாள்.

கு:—முன் இராமன் 'வெருவுவென் நங்கை' என்றதையே பொருளாகக்கொண்டு, தன்னை மணவாவழிப்படும் தீமையும் மணந்தவழிப்படும் நன்மையும் சூர்ப்பணகை விளக்கியவாறு. இராமன் முனிவர்வேடம் பூண்டிருத்தலின் 'முனிவரோடுடையர் முன்னே முதிர்பகை' என்று முனிவர்பகையை எடுத்துக் கூறினாள். இதனால் முனிவர் வேடம் பூண்ட நின்னையும் கொல்லாது விடார் என அச்சுறுத்தியவாறு. முனிவரைக் கொலை செய்யலாகாது என்ற முறைமையை அவர்கள் நோக்கமாட்டார்கள் என அவர் கொடுமைமிகுதிகூறிக் கொல்லுவர் என்பதை வலியுறுத்தியவாறு. முதிர்ந்த பகைமையை முன்னமே கொண்டுள்ள அவர்களை நண்பராக்கிக் கொண்டாலன்றி இங்கு வாழ்தல் இயலாது; அவரை நண்பராக்கிக்கொள்ள நம் கந்தருவமணமே தக்க உபாயம்; இதுவன்றி வேறு சிறந்த உபாயமே யில்லை. மேலும் என்னை மணந்து கொள்வதால் இராவணன் முதலியோர்க்கு மைத்துனக் கேண்மையனாகின்றாய்; மைத்துனர்க்கு விஞ்சிய உறவில்லையாதலின் அவர்களாட்சியிலுள்ள சிறந்த விண்ணுலகையும் நின்னுட்சிக்குரியதாக்கி விட்டு நின் ஏவலராய்ப் பணி செய்வார்கள்: எனத் தன்னை மணத்தலால் இராமன் உயிரிழவாமைமட்டுமேயன்றி மூவுலகாட்சியும் பெறலாம் என்பதை விளக்கியவாறு. மூவுலகில் சிறப்புடையது விண்ணுலகே ஆதலின் விண்ணும் எனச் சிறப்பும்மை கொடுத்தார். அவ்வும்மையை எதிரது தழுவிய எச்சவும்மையாக்கி, மண்ணுலகும் பாதாள உலகமும் நின்னுட்சியாக்குவர் என்றதாகவும் கொள்க. இராவணனை 'உலகமூன்றும் காவலோன்' என முன்னம் குறிப்பிட்டாளாதலின், அம்மூன்றுலக ஆட்சியும் இராமனுக்கு கொடுத்து விட்டு அவ்விராவணன் ஏவல் செய்வான் என்பதே அவள் கருத்து.

'இனியராய் அன்னர் வந்து' என்றதால், இக் கந்தருவமணம் முடிந்தவுடன் அவர்கள் தாமே வருவார்கள்; அவர்களைத் தேடி நாம் போகவேண்டியதில்லை என அவர்களின் உறவு எளிதில் கிட்டும் என்பதை யுணர்த்தியவாறு. ஒருவர்க்கு உயிரினும் சிறந்த பொருள் இல்லை ஆதலின், தன்னை மணவாவழி அவ்வுயிரையே இழக்கநேரும் என இழப்பின் மிகுதியையும், ஒருவர்க்கு மூவுலகாட்சியினும் சிறந்த பேறில்லையாதலின், தன்னை மணந்தால் அவ்வாட்சியையும் பெற லாம் எனப் பேற்றின் பெருமையையும் சூர்ப்பணகை விளக்கித் தன்னை மணந்துகொள்ள வற்புறுத்தியவாறு. (55)

### இராமன் இகழ்ச்சிக் குறிப்பால் சிரித்தல்

2884. நிருதர்த மருளும் பெற்றே
னின்னலம் பெற்றே னின்னோ
டொருவருஞ் செல்வத் தியாண்டு
முறையவும் பெற்றே னொன்றோ
திருநகர் தீர்ந்த பின்னர்ச்
செய்தவம் பயந்த தென்னா
வரிசிலை வடித்த தோளான்
வாளெயி றிலங்க நக்கான்.

'நிருதர்தம் அருளும் பெற்றேன்;
நின் நலம் பெற்றேன்; நின்னோடு
ஒருவருஞ் செல்வத்து யாண்டும்
உறையவும் பெற்றேன்; ஒன்றோ?
திருநகர் தீர்ந்த பின்னர்ச்
செய் தவம் பயந்தது' என்னா,
வரி சிலை வடித்த தோளான்
வாள் எயிறு இலங்க நக்கான்.

பொ:—'நின் நலத்தைப்பெற்றேன்; அது காரணமாக அரக்கர்களுடைய அருளையும் பெற்றேன்; நீங்காத செல்வத்தையுடைய விண்ணுலகம் முதலிய உலகங்களில் எவ்விடத்தும் நின்னோடு தங்கவும் பெற்றேன், அதுமட்டுமோ? அழகிய எம் நகரத்தைவிட்டு நீங்கிய பின் யான் பத்தாண்டுகளுக்கு மேலாகச் செய்த தவமும் பயன் தந்துவிட்டது' என்று கூறிக் கட்டமைந்த வில்லையேந்திய அழகிய தோள்களையுடைய இராமன் ஒளிவாய்ந்த பற்கள் தோன்றுமாறு சிரித்தான்.

கு :—நின்னலம் பெற்றேன்; நிருதர்தம் அருளும் பெற்றேன்; யாண்டும் நின்னேடு உறையவும் பெற்றேன்; ஒன்ரே? செய் தவமும் பயந்தது; என உம்மை விரித்து முடிக்க. சூர்ப்பணகை கூறிய மூன்றையும் கூறிமுடித்துத் தன் கருத்தொன்றையும் பின் கூறப் போகின்ருஞதலின் 'ஒன்ரே' என்ற இடைச்சொல்லை இடையிற் பெய்தான். "பிறன் மனை நோக்காத பேராண்மை சான்ரேர்க்கு அறனென்ரே ஆன்ற ஒழுக்கு" (குறள்-148) என் புழியும் அச்சொல் அவ்வாறு ஆளப்பட்டுள்ளமை காணலாம். நலம் - இன்பம். நிருதர்தம் அருள் பெறுதற்கு மூலம், சூர்ப்பண கையின் நலம் பெறுதலே ஆதலின், அது முன் கூட்டப்பட்டது. யாண்டும் - எவ்விடத்தும்; விண்ணுலக முதலிய உலகங்களைக் குறிக்க 'யாண்டும்' என்ருன். மேல், 'விண்ணு நின்னுட்சியாக்கி இனியராய் அன்னர் வந்துன் னேவலின் நிற்பர்' என்று அவள் கூறியவற்றையே இராமன் கூறுகின்ருஞகலின் யாண்டும் என்பதற்கும் எக்காலத்தும் என்று பொருள் கூறுதல் பொருந்தாமை யறிக. ஒருவு அருஞ்செல்வத்து யாண்டும் - நீங்காத செல்வத்தை யுடைய விண்ணுலக முதலிய உலகங்களின் எவ்விடத்தும். உறைதல்-தங்குதல். அயோத்தியின் அழகும் செல்வமும் தோன்றத் திருநகர் என்று அதனைக் கூறினன். தீர்ந்தபின் - நீங்கியபின். செய்தவம் என்றது, அயோத்தியிலிருந்து நீங்கிய பின் பத்தாண்டு களுக்கு மேலாகச் செய்த தவத்தினை. தவ ஒழுக்கத்திற்குப் பகை காமம் ஆதலின் இதுகாறுஞ்செய்த தவம் யாவும் இக்காமத்தால் பயனற்றுப் போகும் என்பான், இகழ்ச்சிக்குறிப்பால், "திருநகர் தீர்ந்த பின்னர்ச் செய்தவம் பயந்தது" என்று கூறினன். நின் னலமும் நிருதர்தம் அருளும் விண்ணுலக முதலிய உலகங்களின் ஆட்சியும், எனக்கு வேண்டாவே என்பான், இகழ்ச்சிக் குறிப்பால் 'பெற்றேன், பெற்றேன்' என்ருன். வடித்த - அழகு செய்யப்பட்ட. இனிப் பயின்ற என்று பொருள்கொண்டு வில்தொழில் பயின்ற என்றும் பொருள் கூறலாம். முன் செய்த அகத்துறு நகை போலாது பற்கள் வெளித்தோன்றப் பெருகச் சிரித்தமை தோன்ற, 'வாளெயி றிலங்க நக்கான்' என்ருர். இது அவள் பேதைமைகண்டு தோன்றிய நகை. வில்வலியும் தோள்வலியும் உடையஞதலின் அவள் அண்ணன்மார்க்கு அஞ்சாது சிரித்தான் என்பார், 'வரிசிலை வடித்த தோளான்' என்ருர். (56)

## சீதை வருதல்

2885. விண்ணிடை யிம்பர் நாகர்
விரிஞ்சனே முதலோர்க் கெல்லாங்
கண்ணிடை யொளியின் பாங்கர்க்
கடிகமழ் சாலை நின்றும்
பெண்ணிடை யரசி தேவர்
பெற்றநல் வரத்தாற் பின்னர்
மண்ணிடை மணியின் வந்த
வஞ்சியே போல்வாள் வந்தாள்.

விண் இடை, இம்பர், நாகர்,
விரிஞ்சனே முதலோர்க்கு எல்லாம்
கண்ணிடை ஒளியின் பாங்கர்க்
கடி கமழ் சாலை நின்றும்
பெண்ணிடை அரசி, தேவர்
பெற்ற நல் வரத்தால், பின்னர்
மண்ணிடை மணியின் வந்த
வஞ்சியே போல்வாள் வந்தாள்.

பொ :—விண்ணுலகத்தும் இம்மண்ணுலகத்தும் நாகர் உலகத்தும் உள்ள பிரமன் முதலிய யாவர்க்கும் கண்ணிடத்து ஒளியாய் நின்று உதவும் இராமன் பக்கத்தில் உள்ள மணம் கமழ்கின்ற பன்னசாலையில் நின்றும், பெண்டிர்க்கெல்லாம் அரசியாய் (திருமகளாய்) இருந்து, தேவர்கள் திருமாலிடம் பெற்ற நல்வரத்தினுல் பின்னர்ப் பூமியில் தோன்றும் மாணிக்கம் போல ஒளியுடன் தோன்றிய வஞ்சிக்கொடி போன்றவளாகிய சீதை வந்தாள்.

கு :—விண் என்றது, விண்ணில் உள்ள பிரமனுலகம் பொன்னுலகம் முதலிய உலகங்களை. இடை - இடம்; இம்பரிடை, நாகரிடை எனப் பின்னும் கூட்டுக. நாகர் என்றது பாதலமாகிய நாகருலகத்தை. மூவுலகத்து உயிர்களையும் படைத்தவன் பிரமனே ஆதலின், அவனை முதலாக வைத்து விரிஞ்சனே முதலோர்க்கெல்லாம் என்ருர். மூவுலகத்துள்ள எல்லா உயிர்க்கும் கண்ணொளியாய் நின்று உதவுகின்றவன் திருமால் என்பது புலப்பட அவன் அவதாரமாகிய இராமனைக் ‘கண்ணிடையொளி’ என்ருர். ஒளியாய் விளங்கும் இராமனை ஆகுபெயரால் ஒளியென்ருர். “கண்மணியைக் கண்மணிக்குள் ஒளியாய் நின்ற பூரணனை” (நல்லாப்பிள்ளை பாரதம் – கடவுள் வாழ்த்து) எனக் கூறப்படுதல் காணலாம். திரு,

மகளாக இருந்தவள் என்பார், பெண்ணிடை அரசி என்றும், அவளே பின்னர்த் தேவர் வேண்டுகோளின்படி மண்ணில் பிறந் தாள் என்பார், 'பின்னர் மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே போல்வாள்' என்றும் கூறினர். ஒளியுடைய வடிவத்தோடு மண்ணில் தோன்றினள் ஆகலின் மணியை உவமை கூறினர். சூர்ப்பணகையோடு இராமன் உரையாடிக்கொண்டிருந்தபோது அவன் பக்கத்திலிருந்த பன்னசாலையில் நின்று சீதை வெளியே வந்தாள் என்க. இனி, விரிஞ்சனே முதலோர்க்கெல்லாம் கண் இடைதற்கு (கூசுதற்கு)க் காரணமான ஒளியோடு வஞ்சியே போல் வாள் வந்தாள் எனச் சீதைக்கே அடையாக்கிக் கூறலுமாம். வஞ்சியே போல்வாள், தேவர் பெற்ற நல்வரத்தால் வந்தாள் என இயைத்துக் கூறலுமாம். சீதை சூர்ப்பணகையின் கண்ணில் பட் டமை காரணமாகவே பின்னிகழ்ச்சிகள் யாவும் நிகழ்தலின் சீதையின் வருகை தேவர் பெற்ற நல்வரத்தால் நிகழ்ந்தது என் றலும் பொருந்துவதேயாம். (57)

## சூர்ப்பணகை சீதையைக் கண்டு வியத்தல் 2886–2890

**2886.** ஊன்சுட வுணங்கு பேழ்வா
யுணர்விலி யுருவ நாறும்
வான்சுடர்ச் சோதி வெள்ளம்
வந்திடை வயங்க னேக்கி
மீன்சுடர் விண்ணும் மண்ணும்
விரிந்தபோ ரரக்க ரென்னுங்
கான்சுட முளைத்த கற்பின்
கனலியைக் கண்ணிற் கண்டாள்.

ஊன் சுட உணங்கு பேழ் வாய்
உணர்வு இலி, உருவம் நாறும்
வான் சுடர்ச் சோதி வெள்ளம்
வந்து இடை வயங்கல், நோக்கி,
மீன் சுடர் விண்ணும் மண்ணும்
விரிந்த போர் அரக்கர் என்னும்
கான் சுட முளைத்த கற்பின்
கனலியைக் கண்ணின் கண்டாள்.

பொ :—(நெருப்பில் வைத்தெடுத்த) மாமிசம் வாயைச் சுடுத லால் வருந்தித் திறக்கும் பிளந்த வாயினையுடைய உணர்ச்சியில்லாத

சூர்ப்பணகை, சீதையின் உருவிலிருந்து தோன்றுகின்ற, விண்மிசை விளங்கும் ஞாயிற்றின் பேரொளிபோன்ற ஒளிப்பரப்பு வந்து இடையே துடும் என விளங்குதலை முன்னர் நோக்கிப் பின்னர், விண் மீன்கள் ஒளிவீசும் விண்ணிலும் மண்ணிலும் விரிந்து வாழ்கின்ற போர் செய்யும் இயல்புடைய அரக்கர்களாகிய காட்டைச் சுடுதற் காகவே முளைத்த கற்பினையுடைய நெருப்பாகிய சீதையைக் கண்ணில் கண்டாள்.

கு :—ஊனையுண்ணும் வாயுணர்வன்றிச் செவியிற்சுவையுணராத உணர்விலி சூர்ப்பணகை என்றவாறு. உணர்வு இலி என்று சூர்ப் பணகையை இகழ்கின்றவர், அவளுக்குள்ள உணர்வு வாயுணர்வே என்பதையும் விளக்கி "ஊன்சுட வுணங்கு பேழ்வாய்" என்றார். அவ்வாயுணர்வுதானும் நல்லனவற்றை உண்டுணர்தலின்றிச் சுட்ட ஊனை விரைந்து உண்டு வருந்துகிற உணர்வே என்று அவ் வாயுணர்வின் இழிவை யுணர்த்தியவாறு. பேழ்வாய் உணர்வின்றி வேறு உணர்வு இருந்திருப்பின் இராமனை வலியவந்து மணக்கு மாறு வேண்டாள் என்பது கருத்து. பின் 'ஊனுகர் வாழ்க்கையாள்' எனச் சீதையைக் குறிப்பிடுதற்குக் காரணம் இவள் அவ்வியல்பினைத் தானுடைமையே என்பதை உணரும்வண்ணம் முன் உரைத்த நயம் நினைக்கத்தகும். இனி இவள் வாயில் வைத்த சூட்டிறைச்சியால் வாய் வெந்தபோது வாயைத்திறப்பதுபோலச் சீதையின் ஒளிமிக்க உருவைக்கண்டு வியந்து வாயைப் பிளந்தாள் என்ற குறிப்பும் கொள்க. நாறும் - தோன்றும். வான்சுடர் என்றது சூரியனை. சூரியன் ஒளிபோன்ற ஒளிப்பரப்பைச் சோதி வெள்ளம் என்றார். சூரியன் உதிக்கும்முன் அருணோதயம் ஆதல்போலச் சீதை வருமுன் அவள் ஒளிப்பிழம்பு முன் வந்தது ஆதலின், அதை முன்னோக்கி, அதன் வாயிலாகச் சீதையைப் பின் கண்ணிற் கண்டாள் என்பது கருத்து. கற்பின் கனலி என்றது, சீதையை. அரக்கர் என்கின்ற கானைச்சுட முளைத்த கனலி என்பது, எதிர்கால நிகழ்ச்சி நோக்கிக் கவி கூறிய புனைபெயர். கனலி - நெருப்பு. சீதையின் கற்பே இராவணன் முதலிய அரக்கர் அழிதற்குக் காரணமாதலின் 'கற்பின் கனலி' என்றார். இனி, இன் தவிர்வழிச்சாரியையாகக் கொண்டு, கற்பாகிய நெருப்பையுடைய சீதை என்றலுமொன்று. அரக்கரைக் கானகவும், அவர் அழிவிற்குக் காரணமான சீதையைக் கனலாகவும் உருவகம் செய்தவாறு. 'வினையுடை யரக்கராம் இருந்தை வெந்துகச் சனகியென் றெருதழல் நடுவண் தங்கலால்' (சுந்தர. 665) எனவும், 'தீய்ந்ததவ்வெரி அவள் கற்பின் தீயினால்' (யுத்த-மீட்சிப்-85) என வும் சீதையையும் அவள் கற்பையும் நெருப்பாகப் பின்னரும் உரு வகஞ் செய்தல் காணலாம். (58)

2887. மருவொன்று கூந்த லாளை
வனத்திவன் கொண்டு வாரா
னுருவிங்கி துடைய ராக
மற்றையோர் யாரு மில்லை
யரவிந்த மலரு ணீங்கி
யடியிணை படியிற் றோயத்
திருவிங்கு வருவாள் கொல்லோ
வென்றகந் திகைத்து நின்றாள்.

'மரு ஒன்று கூந்தலாளை
வனத்து இவன் கொண்டு வாரான்;
உரு இங்கு இது உடையர் ஆக
மற்றையோர் யாரும் இல்லை;
அரவிந்த மலருள் நீங்கி,
அடி இணை படியில் தோயத்
திரு இங்கு வருவாள் கொல்லோ?'
என்று அகம் திகைத்து நின்றாள்.

பொ :—நறுமணம் பொருந்திய கூந்தலையுடைய (தன்) மனைவியை இவன் வனத்திற்கு அழைத்துக்கொண்டு வரமாட்டான்; இத்தகைய அழகு உடையராக இங்கு வேறு எந்தப் பெண்டிரும் இல்லை; திருமகள், தாமரைமலரிலிருந்து நீங்கித் திருவடிகள் இரண்டும் தரையில் பதியுமாறு இவ்விடத்திற்கு வருவாளோ? (வரமாட்டாளே) என்று எண்ணி மனம் திகைத்து நின்றாள்.

கு :—மருவொன்று கூந்தலாள் என்றது மனைவி என்னும் பொருளதாய் நின்றது. மனைவியை வனத்திற்கு அழைத்து வரமாட்டான் என்க. மரு - இயற்கை மணம். சூடிய மலராலாய செயற்கை மணம் எனலுமாம். மணம் பொருந்திய கூந்தலுடையாளை வனத்தில் பேய் முதலியன தாக்கும் என்ற அச்சத்தால் கொண்டு வாரான் என்ற குறிப்பும் தோன்ற, 'மருவொன்று கூந்தலாளை' என்றாள். இவள், மனைவியாகவும் இருக்க இயலாது; இவ்வனத்துள்ள வேறு பெண்ணாகவும் இருத்தல் இயலாது எனத் தெளிந்தவள், ஒருகால் திருமகளே வந்திருப்பாளோ என ஐயுற்று, அவளும் மென்மையான மலரில் நீங்கி வன்மையான காட்டு நிலத்தில் மெல்லடிகள் படிய வருதற்குரியகாரணமில்லையே என மனம் திகைத்து நின்றாள் என்க. சீதை அழகால் திருமகளே போல்வாள் என்பது சூர்ப்பணகையின் கருத்து. அவள் கால் நிலம் தோய்தலால் திருமகள் அல்லள் என்பதையும் உணர்த்திய

வாறு. மேலைப் பாடலில் கண்ணிற்கண்டாள் என்று காட்சி கூறி இப் பாடலில் ஐயமும் தெளிவும் தெரிவித்தவாறு எனலாம். திருவிங்கு வருவாள் கொல்லோ என்பதால் ஐயமும், அடியிணை படியில் தோய என்ற குறிப்பால் திருமகள் அல்லள் என்ற துணிவும் பெறப்படுதல் காண்க. (59)

2888. பண்புற நெடிது நோக்கிப்
படைக்குநர் சிறுமை யல்லா
லெண்பிறங் கழகிற் கெல்லை
யில்லையா மென்று நின்ருள்
கண்பிற பொருளிற் செல்லா
கருத்தெனி னஃதே கண்ட
பெண்பிறந் தேனுக் கென்ரு
லென்படும் பிறருக் கென்ருள்.

பண்பு உற நெடிது நோக்கிப்,
"படைக்குநர் சிறுமை அல்லால்,
எண் பிறங்கு அழகிற்கு எல்லை
இல்லை ஆம்" என்று நின்ருள்;
"கண் பிற பொருளில் செல்லா;
கருத்து எனின், அஃதே; கண்ட
பெண் பிறந்தேனுக்கு என்ருல்,
என்படும் பிறருக்கு?" என்ருள்.

பொ:—(கண்ட சூர்ப்பணகை,) சீதையின் அழகுப் பண்பு தன் கண்ணினும் கருத்தினும் பொருந்துமாறு நெடிது நேரம் பார்த்து விட்டு, (அழகுருவங்களைப்) படைத்துத் தருகின்றவரின் திறமைக் குறைவல்லாமல் மதிப்புமிக்க அழகிற்கு ஒரு வரம்பு இல்லை ஆம் என்று வியந்து நின்ருள்; பின், இவளைக் கண்ட பெண்ணுய்ப் பிறந்த எனக்கே என் கண்கள் வேறு பொருள்களில் செல்ல மாட்டா; என் கருத்தோ என்ருல் அதுவும் அத்தன்மையதே (பிறபொருளில் செல்லா); என்ருல் இவளைக் காணும் ஆண் பாலார்க்குக் கண்ணும் கருத்தும் என்ன பாடுபடும்? என்று கருதினுள்.

கு:—பண்பு - சீதையின் அழகுப் பண்பு. நெடிது நோக்கிய தற்குக் காரணம் கண் பிறபொருளில் செல்லாமையே என்று பின்னர் விளக்குகின்ருள். இவ்வாறு நெடிது நோக்கினமையே

பின் இராவணன்பால் சீதையின் அழகை விவரிக்கக் காரணமா யமைந்தது. அழகு என்ற பண்பிற்கு ஓரெல்லை யில்லை; படைப்பவர் திறமையால் எத்தகைய பேரழகையும் படைக்கலாம் என்ற உண்மையைச் சீதையைக் கண்டு சூர்ப்பணகை உணர்ந்தாள் என்க. இவ்வாறே இராமனும் சூர்ப்பணகையின் அழகைக் கண்டு, 'ஆருழையடங்கு மழகிற் கவதி யுண்டோ' என்று முன் வியந்தமை காண்க. எண் - மதிப்பு. "பெண்டிரின் அழகு ஆடவரைக் கவர்தல் இயல்பு; இச்சீதையின் பேரழகு பெண்ணாகிய என்னையே இப்பாடு படுத்தினால் பிறருக்கு என்படும்" என உய்த்துணர்ந்து சீதையின் அழகை வியந்தவாறு. பெண் என முன் கூறினமையின் பிறர் என்றது ஆடவரையே என்பது தெளியலாம். பிறருக்குக் கண்ணும் கருத்தும் என்படும்? என்க. பிறபொருளில் செல்லா எனவே அவள் கண்ணும் கருத்தும் சீதையின் எழிலில் தோய்ந்து நின்றமை புலப்படும். "கஞ்சத்துக்களிக்கு மின்றேன் கவர்ந்துணும் வண்டு போல, அஞ்சொற்கள் கிள்ளைக் கெல்லா மருளினள் அழகை மாந்தித், தஞ்சொற்கள் குழறித் தத்தந் தகைதடு மாறி நின்றார், மஞ்சர்க்கு மாதரார்க்கு மனமென்ப தொன்றே யன்றோ?" (1220) எனச் சீதையை அழகு செய்த பெண்டிரே அவள் பேரழகில் ஈடுபட்டமையைக் கம்பர் நாகரிகமாக முன்னர் அறிவித்துள்ளமையும் காணலாம். இதனால் இதுகாறும் அவள்கண்ட அழகுருவங்கள் யாவற்றினும் சீதையின் அழகு மேல்வரம்பாக நின்றமை யுணர்த்தியவாறு. (60)

2889. பொருதிறத் தானை நோக்கிப்
பூவையை நோக்கி நின்றாள்
கருதமற் றினிவே றில்லை
கமலத்துக் கடவு டானே
யொருதிறத் துணர நோக்கி
யுருவினுக் குலக மூன்றி
னிருதிறத் தார்க்குஞ் செய்த
வரம்பிவ ரிருவ ரென்றாள்.

'பொரு திறத்தானை நோக்கிப் பூவையை நோக்கி, நின்றாள்; கருத மற்று இனி வேறு இல்லை; கமலத்துக் கடவுள் தானே, ஒரு திறத்து உணர நோக்கி, உருவினுக்கு, உலகம் மூன்றின் இரு திறத்தார்க்கும், செய்த வரம்பு இவர் இருவர்' என்றாள்.

பொ :—போர்செய்யும் திறமுடைய இராமன் அழகையும் நாகணவாய்ப்புள் போன்ற சீதையின் அழகையும் மாறிமாறி நோக்கிநின்றவ

ளாகிய சூர்ப்பணகை, (ஒரு முடிவிற்கு வந்து) 'இனி ஆராய்ந்து காணவேண்டிய முடிபு வேறு ஒன்றுமில்லை; தாமரை மலரில் தங்கியுள்ள பிரமனே ஒப்பற்ற தன் திறமையால் தெளிய ஆராய்ந்து பார்த்து, உலக மூன்றிலும் உள்ள ஆடவர் மகளிர் என்கின்ற இருவகையினர் தம் உருவ அழகுக்கும் செய்த மேல் வரம்பாகிய உருவங்களே இவர்கள் இருவருமாவர்' என்றாள்.

கு:—இராமனைக் காமுற்று நின்ற சூர்ப்பணகை, சீதை வந்தவுடன் தன் காதலையுமறந்து அவளை வியந்து நோக்கினவள், பின் அழகொற்றுமைகாண வேண்டி மீண்டும் இராமனை நோக்கினாள் என்க. நோக்கி, நோக்கி நின்றாள் என்றமையால் அவர் இருவரையும் நெடிதுநேரம் மாறி மாறி நோக்கினமை புலனாம். பூவை - நாகணவாய்ப்புள்; உவமையாகுபெயராய் அச்சொல் சீதையையுணர்த்தியது. நோக்கி நின்றவள், கமலத்துக் கடவுள் தானே இருதிறத்தார் உருவிற்கும் மேல்வரம்பாகச் செய்த உருவங்களே இவர் இருவரும் என்ற முடிபிற்கு வந்துவிட்டமையால், 'கருதமற்றினிவேறில்லை' என்றாள். கமலத்துக்கடவுள் - பிரமன். நோக்குதல் - மனத்தான் ஆராய்தல். இருதிறத்தார், என்றது ஆடவரையும் பெண்டிரையும். இருதிறத்தார்க்கும் மேல் வரம்பான உருவங்களை அமைக்க வேண்டிய அருஞ்செயலிலீடுபடுதலால் பிரமனும் ஒருதிறத்துணர நோக்க வேண்டியதாயிற்று. இருதிறத்தாருடைய உருவினுக்கும் செய்த வரம்பு என்க. கு. ஆறன் பொருளது. உம்மை பிரித்துக் கூட்டப்படும். வரம்பு - மேல் எல்லை. பெண்களில் சீதையின் அழகே மேல் எல்லையிலிருப்பது. ஆண்களில் இராமனழகே மேல்வரம்பாகும். இவ்விருவரை ஒப்பாரோ மிக்காரோ இலர் என்பது கருத்து. "செங்கமலத்தோன் முதல் யாரும் எப்பெண்பாலுங் கொண்டுவமிப்போ ருவமிக்கும் அப்பெண்டானே ஆயினபோதிங் கயல்வேறோர் ஒப்பெங்கே கொண்டெவ்வகை நாடியுரைசெய்வேம்" (587) என முன் கூறியிருத்தலும் நினைக்க. "ஓவியத்துறை கைபோய வொருவனை யுருவின்மிக்க, காவலனொருவன் மற்றோர் கன்னி நீ தீட்டுகென்னத் தாவரு மெழிலிற் கோட்டத் தானு மந்நளனுமாக மேவர வினிது நோக்கி மெய்ம்மயிர் பொடிக்குமன்றே" (நைடதம் - அன்னத்தைக். 6) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (61)

**2890.** பொன்னைப்போற் பொருவின் மேனிப்
பூவைப்பூ வண்ணத் தானிம்
மின்னைப்போ லிடையா ளோடு
மேவுமெய் யுடைய னல்லன்

றன்னைப்போற் றகையோ ரில்லாத்
தளிரைப்போ லடியி னளு
மென்னைப்போ லிடையே வந்தா
ளிகழ்விப்பெ னிவளை யென்னா.

'பொன்னைப் போல் பொரு இல் மேனிப்
பூவைப்பூ வண்ணத்தான், இம்
மின்னைப் போல் இடையாளோடும்
மேவும் மெய் உடையன் அல்லன்;
தன்னைப் போல் தகையோர் இல்லாத்
தளிரைப் போல் அடியினாளும்,
என்னைப் போல் இடையே வந்தாள்;
இகழ்விப்பென் இவளை' என்னா.

பொ:—'பொன்னைப் போல் ஒப்பற்றுவிளங்கும் மேனி ஒளியையும் காயாம்பூப்போன்ற வண்ணத்தையும் உடைய இவன், இந்த மின்னலைப்போன்ற இடையுடைய இவளோடு பொருந்துதற்கேற்ற உடம்பின் தோற்றத்தையுடையவன் அல்லன்; ஆகலின், தன்னைப் போன்ற அழகுடையோர் இல்லாத தளிரைப் போன்று மெல்லிய அடியையுடைய இவளும், என்னைப்போல நடுவே வந்தவளாகத் தான் இருக்கவேண்டும்; இவளை இவன் இகழுமாறு செய்வேன்' என்று எண்ணி.

கு:—இராமன் மேனி ஒளிக்குப் பொன்னும், வண்ணத்திற்குப் பூவைப் பூவும் உவமைகளாம். இராமன் தவக்கோலம் பூண்டிருத்தலின் மனைவியோடு வாழ்தற்குரியன் அல்லன் என்பாள், 'இடையாளோடு மேவு மெய்யுடையனல்லன்' என்றாள். மெய் என்றது இங்கு வேடத்தையுணர்த்திநின்றது. தகை - அழகு. அழகில் தனக்குவமையில்லாதாள் என்பாள், 'தன்னைப் போற்றகையோ ரில்லாத் தளிரைப்போல் அடியினாள்' என்றாள். அடியினாளும் என்புழி உம்மை, எதிரதுதழீஇய எச்சவும்மை. இகழ்விப்பென் என்ற பிறவினைக் கேற்ப, இவளை இவன் இகழச் செய்வேன் என்று பொருள்கூறலாயிற்று. இத்தகைய பேரழகி இங்கு இருப்பின் தன் காதலுக்குத் தடையுண்டாகும் என்று கருதிய சூர்ப்பணகை, அவன் வேடத்தைக் கண்டு மணமாகாதவனாகக் கொண்டு சீதையை இடையே வந்தவளாக எண்ணி, இராமனே அவளை இகழுமாறு செய்வதே நல்ல உபாயம் எனத் தொடங்குகின்றாள் என்க. (62)

### சீதையை அரக்கியெனல்

2891. வருமிவண் மாயம் வல்லள்
வஞ்சனை யரக்கி நெஞ்சந்
தெரிவிலந் தேறுந் தன்மை
சீரியோய் செயலி தன்று
லுருவிது மெய்ய தன்று
லூனுகர் வாழ்க்கை யானை
வெருவினெ னெய்தி டாமல்
விலக்குதி வீர வென்றுள்.

வரும் இவள், மாயம் வல்லள்; வஞ்சனை அரக்கி; நெஞ்சம் தெரிவு இலம்; தேறும் தன்மை, சீரியோய்! செயல் இது அன்றுல்; உரு இது மெய்யது அன்றுல்; ஊன் நுகர் வாழ்க்கையானை வெருவினென்; எய்திடாமல் விலக்குதி, வீர! என்றுள்.

பொ:—'சிறந்த பண்புடையவனே! இதோ வருகின்ற இவள், மாயச் செயலில் வல்லவள்; வஞ்சனை செய்யும் இயல்புடைய அரக்கி, இவள் மனக் கருத்து இதுவென்று அறியோம். இவளை நல்லவள் என்று தெளியும் தன்மையாகிய இது (செய்யத்தக்க) செயலன்று. இவள் தாங்கியுள்ள இந்த உருவம் மெய்ம்மையானதன்று; ஊனையுண்டு வாழும் வாழ்க்கையுடைய இவளைக் கண்டு அஞ்சுகின்றேன்; வீர! இவள் இங்கு அணுகாவாறு விலக்குவாயாக' என்றுள்.

கு:—மேல் இகழ்விப்பன் என்றதைச் செயல்படுத்தியவாறு. சூர்ப்பணகை, தன் இயல்புகளையே சீதையின் இயல்புகளாகக் கூறி, அவளை விலக்குமாறு இராமனை வேண்டுகின்றுள். மாறுபடு புகழ் நிலை அணிபோல இது மாறுபடு இகழ்நிலையாக அமைந்துள்ளது. 'மின்னைப்போ லிடையாளோடு மேவுமெய் யுடையனல்லன்' என்றும்'என்னைப்போல் இடையே வந்தாள்'என்றும் முன் துணிந்து விட்டமையால் இவ்வாறு கூறலானுள். சீதையைச் சீரியளல்லளாகக் காட்டுகின்றவளாதலின் அவளுக்கு ஏற்றுயல்லை என்பது தோன்றச் 'சீரியோய்' என்றும், அரக்கியாகிய இவளை விலக்குதற்கேற்ற வீரமுடையை என்பது தோன்ற 'வீர' என்றும் இருமுறை விளித்துக் கூறிய நயம் காண்க. தூய்மைமிக்க சீதைக்கு ஏற்றிச் சொன்ன இழிவுகள் யாவும் சூர்ப்பணகையின்பால் உள்ளனவே என்பதை இராமன் உணர்தல் எளிதாமாறு அவள் இகழ்ச்சியுரைகள் அமைந்துள்ளமை காண்க. (63)

சூர்ப்பணகையின் பொய்யுரை கேட்டு இராமன் சிரித்தல்

2892. ஒள்ளிதுன் னுணர்வு மின்னே
யுன்னையா ரொளிக்கு மீட்டார்
தெள்ளிய நலத்தி னுலுன்
சிந்தனை தெரிந்த தம்மா
கள்ளவல் லரக்கி போலா
மிவளுநீ காண்டி யென்று
வெள்ளிய முறுவன் முத்தம்
வெளிப்பட வீர னக்கான்.

'ஒள்ளிது உன் உணர்வும் மின்னே!
உன்னை ஆர் ஒளிக்கும் மீட்டார்?
தெள்ளிய நலத்தினுல் உன்
சிந்தனை தெரிந்தது; அம்மா!
கள்ள வல் அரக்கி போலாம்
இவளும் நீ காண்டி' என்று,
வெள்ளிய முறுவல் முத்தம்
வெளிப்பட வீரன் நக்கான்.

பொ:—மின்னல் போன்றவளே! உன் உணர்வும் சிறப்புடையது; உனக்குத் தெரியாமல் தன்னை மறைக்கும் வலிமையுடையவர் யாருளர்? தெளிவாகிய நலமுடைமையினுல் உன் சிந்தனைக்குப் புலனுயிற்று! இவளும் கள்ளத்தன்மையுடைய வலிய அரக்கிதானே? நீ நன்கு பார்ப்பாயாக என்று கூறிக்கொண்டு வெண்மையான பற்களாகிய முத்துக்கள் வெளித்தோன்ற இராமன் சிரித்தான்.

கு:—நிலைபேறிலாத உருவமுடையவள் என்பது புலப்பட 'மின்னே' என்ருன். ஒள்ளிது - சிறந்தது. உருவமேயன்றி உணர்வும் ஒள்ளிது என்னும் பொருள் தருதலின் உம்மை, இறந்தது தழுவிய எச்சஉம்மை. இவள், எத்தகைய மாறுவேடம் பூண்டுவரினும் உண்மையுணரும் ஆற்றல் உனக்கு உள்ளமையால் உன்னை மறைத்தல் எளிதன்று என்பான், 'உன்னையாரொளிக்கு மீட்டார்' என்ருன். 'உரு இது மெய்யதன்று' என்று உண்மை கண்டு கூறும் ஆற்றலுடையவளாகச் சூர்ப்பணகை தன்னை நினைத்தமைக்கேற்ப, இராமன் குறிப்பால் கூறி இகழ்ச்சி புலப்படுத்தியவாறு. சிந்தனைக்கு என நான்காவது விரிக்க. தெளிவான நல முடைமையால் நின் சிந்தனைக்கு அவள் உண்மை நிலை தெரிந்தது; தெளிவில்லாத என் சிந்தனைக்கு அவ்வுண்மை தெரிய

வில்லை எனக் குறிப்பால் இகழ்ச்சி புலப்படுத்தியவாறு. 'இவளும் கள்ள வல்லரக்கிபோலாம் நீ காண்டி' என்புழி உம்மையால் நீ அரக்கிஆதலேயன்றி என்று பொருள்பட மொழிந்த திறம் காண்க. முறுவல் - பல். 'முத்தமுறுவல்' (குறள் - 1113) என்புழியும் இச் சொல் இப்பொருளதாதல் காண்க. வெளிப்பட நக்கான் என்றமையால் பெருகச் சிரித்தமை புலனும். மூவுலகாளும் இராவணன் தங்கை என்பதறிந்தும் எள்ளிநகையாடுதற்கு இராமன் வீரமே காரணமாதலின் அவனை வீரன் என்று குறித்தார். சூர்ப்பணகையின் பேதைமை கண்டு நகைத்தவாறு. ஒள்ளிதுன்னுணர்வும் என்றது முதலியன புகழ்வதுபோல இகழ்வதாகலின் இறுதியில் இராமன் பெருகச் சிரித்தான். உன் சிந்தனை தெள்ளிய நலத்தினோடு தெரிந்தது என ஆலுருபை ஒடு உருபாக்கி இயைத்து, சொற்களால் நின் உருவ நலத்தோடு சிந்தனையும் நன்கு விளங்கிற்று என்று பொருள் கூறலுமாம். (64)

### சீதைமேல் அரக்கி வெகுளல்

2893. ஆயிடை யமுதின் வந்த
வருந்ததிக் கற்பி னஞ்சொல்
வேயிடை தோளி னுளும்
வீரனைச் சேரும் வேலை
நீயிடை வந்த தென்னை
நிருதர்தம் பாவை யென்னுக்
காயெரி யனைய கள்ள
வுள்ளத்தாள் கதித்த லோடும்.

ஆயிடை, அமுதின் வந்த, அருந்ததிக் கற்பின் அம் சொல்
வேய் இடை தோளினுளும், வீரனைச் சேரும் வேலை,
'நீ இடை வந்தது என்னை? நிருதர்தம் பாவை' என்னுக்
காய் எரி அனைய கள்ள உள்ளத்தாள் கதித்தலோடும்.

பொ:—அந்தத் தருணத்தில், அமுதொடு பிறந்தவளும், அருந்ததிபோன்ற கற்பினையும் அழகிய சொல்லையும் மூங்கில் ஒப்பாகாமல் பின்னிடைதற்குக் காரணமான அழகிய தோளையும் உடையவளுமாகிய சீதை இராமனை அடையும்போது, 'அரக்கப் பெண்ணே! நீ எங்கள் பேச்சுக்கிடையில் வந்தது எதற்காக' என்று கூறி, வெதும்புகின்ற தீப்போன்ற கள்ள உள்ளமுடைய சூர்ப்பணகை உரப்புதலும்.

கு :—‘அமுதின் வந்த’ என்பதற்குத் ‘திருப்பாற்கடலில் பிறந்த’ என்று பொருள்கூறலுமாம். அமுதினெடு என ஒடு விரிக்க. அமுதின் வந்த தோளினுள் என்று இயையும். கற்பிற்கு அருந்ததியை உவமை கூறல் மரபு. ‘தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்’ (சிலம்பு - மங்கலவாழ்த்து) என்பது காண்க. மேல் இராமன் கூறிய வஞ்சப் புகழ்ச்சியை உண்மையெனக் கொண்டாளாதலின், இராமன் குறிப்புத் தனக்கு ஆக்கமானது என்ற எண்ணத்தால் சீதையை ‘நிருதர்தம் பாவை’ என விளித்தாள். சீதையின் அழகு கண்டு பொருமைத்தீயால் வெதும்புகின்ற உள்ளம் என்பது தோன்றக் ‘காயெரியனைய கள்ள உள்ளத்தாள்’ என்ருர். அவள் இருப்பின் இராமன் அவளை விரும்புவதன்றித் தன்னை விரும்பான் என்ற வஞ்சனையுள்ளத்தைக் ‘கள்ள உள்ளம்’ என்ருர். அவள் இடையில் வந்தது தன் காதல் விளையாட்டிற்குத் தடையேற்பட்டது என்ற கோபத்தால் கதித்தாள். கதித்தல் - ஒலித்தல்; உரப்புதல் - அதட்டுதல். இராமன்மேல் கொண்ட காமவேகத்தினும் சீதையின் மேல்கொண்ட சினவேகம் மிக்கது என்பதை இதனலறியலாம். இடையில் என்பதற்கு முன் தொடர்பு இன்றி நடுவே என்றும் பொருள் கூறலாம். அமுதின் வந்த தெய்வத்தையும் நிருதர்தம் பாவை என்கின்ருளே என்ற ஏக்கம் தோன்ற, ‘அமுதின்வந்த’ என்றும் இராமனுக்கு மனைவியாய் அருந்ததி போன்ற கற்பினை யுடைய சீதையை இடைவந்தவளாகக் கூறுகின்ருளே என்பது தோன்றக் ‘கற்பின்’ என்றும் அஞ்சொலாளிடத்து வன்சொலா ளாய்க் கதிக்கின்ருளே என்பது தோன்ற ‘அஞ்சொல்’ என்றும் அடைபுணர்த்தவாறு காண்க. இடைதல் - தோற்றுப் பின்வாங் குதல். முதலில் தனக்கு உரியவனுகிய இராமனிடத்தில் வர இடையில் வந்த இவளுக்கு உரிமையேது? என்பது சூர்ப்பண கையின் கருத்து. (65)

### சீதை அஞ்சி இராமனைத் தழுவுதல்

**2894.** அஞ்சின ளஞ்சி யன்ன
மின்னிடை யலச வோடிப்
பஞ்சின்மெல் லடிக ளேவப்
பதைத்தனள் பருவக் கால
மஞ்சிடை வயங்கித் தோன்றும்
பவளத்தின் வல்லி யென்னக்
குஞ்சர மனைய வீரன்
குவவுத்தோ டழுவிக் கொண்டாள்.

அஞ்சினள் ; அஞ்சி அன்னம், மின் இடை அலச ஓடிப்
பஞ்சின் மெல் அடிகள் நோவப் பதைத்தனள் ; பருவக் கால
மஞ்சு இடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லி என்னக்
குஞ்சரம் அனைய வீரன் குவவுத் தோள் தழுவிக்கொண்டாள்.

பொ :—(சூர்ப்பணகை கதித்தலோடும்) அன்னம் போன்ற சீதை அஞ்சினாள் ; அவ்வாறு அஞ்சினமையால் மின்னைப் போன்ற சிறிய இடை வருந்துமாறும், பஞ்சினைப் போன்ற மெல்லிய அடிகள் நோவுமாறும் ஓடி (உள்ளமும் உடலும்) பதைத்தனளாய், மழை பெய்யும் பருவ மேகத்திடத்துத் தோன்றும் பவளத்தின் கொடி யென்னுமாறு களிற்றுயானைபோன்ற வீரனாகிய இராமனுடைய திரட்சி பொருந்திய தோளைத் தழுவிக்கொண்டாள்.

கு :—அன்னநடை போன்ற நடையுடன் வந்தமை புலப்படச் சீதையை 'அன்னம்' என்றார். அலச, நோவ, ஓடிப் பதைத்தனள் என்க. அலசுதற்கும் நோதற்கும் காரணம் புலப்பட மின்னிடை எனவும் பஞ்சின்மெல்லடி எனவும் சிறப்பித்தார். பருவக்காலம் என்றது ஒருபொருட் பன்மொழி. நீலவண்ணனாகிய இராமன் தோளைப்பற்றி நிற்கும் செந்நிறமுடைய சீதைக்கு உவமையாக வேண்டிப் 'பருவக்கால மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லி என்ன' என்றார். இது, இல்பொருள் உவமை. மீண்டும் இராமனுக்குக் குஞ்சரத்தை உவமை கூறியது, அது பிடியைப் பாது காப்பதுபோலத் தன் மனைவியைக் காக்கும் மாண்புடையன் என்பது புலப்படவேண்டி. "எழுவுறழ் தடக்கையின் இனங்காக்கும் எழில் வேழம்" (கலி.-25-9) என்றது காண்க. குவவு - திரட்சி. சூர்ப்ப ணகையால் உளதாம் தீங்கைப் போக்கிக் காக்கவல்ல திறல் தோளுக்கே உண்மையின் அதனைச் சீதை தழுவிக்கொண்டாள் என்க. இராமனை அடைதற்கு முன் இடையில் அவ்வரக்கியால் தீங்கு நிகழ்ந்துவிடுமோ என்ற அச்சத்தால் ஓடிப் பதைத்தாள் என்க. (66)

### இராமன் சூர்ப்பணகையைக் கடிதல்

2895. வளையெயிற் றவர்க ளோடு
வரும்விளை யாட்டென் றாலும்
விளைவன தீமை யேயா
மென்பதை யுணர்ந்து வீர

ளுளவன வியற்ற லொல்லை
யுன்னிலை யுணரு மாயி
னிளையவன் முனியு நங்கை
யேகுதி விரைவி னென்ருன்.

'வளை எயிற்றவர்களோடு வரும் விளையாட்டு என்ருலும்,
விளைவன தீமையே ஆம்' என்பதை உணர்ந்து, வீரன்,
'உளைவன இயற்றல்; ஒல்லை உன் நிலை உணருமாயின்,
இளையவன் முனியும்; நங்கை! ஏகுதி விரைவின்' என்ருன்.

பொ :—வளைந்த கோரப்பல்லையுடைய அரக்கர்களோடு வருவது விளையாட்டே ஆயினும், அதனுல் விளைவன (மகிழ்ச்சியன்று) தீமையே யாகும் என்பதை இராமன் அநுபவத்தால் உணர்ந்து, 'நங்காய்! வருந்தத்தக்க செயல்களைச் செய்யாதே; உன் நிலைமையை உணருவானுயின் என் தம்பி உடனே கோபித்து ஒறுத்தல் செய்வான்; ஆதலின் விரைவாகச் சென்று விடு' என்று அச் சுறுத்திக் கூறினுன்.

கு :—எல்லா அரக்கர்களுக்கும் வளைந்த கோரப்பல் உண்டு ஆதலின் அரக்கர்களோடு என்பான், 'வளையெயிற்றவர்களோடு' என்ருன். பல் வளைந்திருப்பதுபோல அவர் உள்ளமும் கோட்ட முடையதே என்பதும் குறிப்பு. விளையாட்டு, மகிழ்ச்சியையன்றே விளைவிக்கவேண்டும்? அத்தகைய விளையாட்டும் அரக்கர்களோடு நிகழ்ந்தால் போராட்டத்தால் விளைவது போன்ற தீமையே உள தாம் என்றவாறு. விளையாட்டால் விளைவதே தீமையாயின், போராட்டத்தால் விளைவது தீமையென்பதுபற்றிக் கூறவேண்டுவ தில்லை. சூர்ப்பணகையோடு விளையாட்டாகப் பேசிய காரணத்தால் அவள் சீதையைத் துரத்தும் நிலையுண்டாயிற்று என்பதை நேரில் உணர்ந்துகொண்டமை தோன்ற, 'விளைவன தீமையேயாம் என் பதை யுணர்ந்து வீரன்' என்ருர். சூர்ப்பணகையோடு வந்த விளை யாட்டு அவள் இப்பொழுது சீதையைத் துரத்தியதாகிய தீங்கை மட்டும் பயக்கவில்லை; பின் இராவணன் கவர்ந்து செல்லுமள விற்குத் தீங்கு பயக்கவும் வல்லதாதலை மேலை நிகழ்ச்சிகளால் அறிய லாம். இராமன் பேரருளுடையனுகலின் தன் மனைக்குத் தீங்கு செய்ய முயன்ற சூர்ப்பணகையையும் வெகுண்டு கடிந்து கூறுதலும் செய்யாது, 'இளையவன் முனியும்' என்றே கூறினுன். இளை யவன் முனியும் என்றமையால் இவனுக்கு முனிவின்மை பெறப் படும். இயற்றல் - இயற்றேல்; எதிர்மறை ஏவல். நீ உளைவன இயற்றவேண்டும் என்பதில்லை; உன்னிலைமையை யுணர்ந்தால்

போதும் உடனே இளையவன் கோபித்து நீ உளைவன செய்து விடுவான்; அவன் உணர்தற்கு முன் சென்றுவிடுக என அருள் உள்ளத்தால் கூறினன் இராமன். "இன்னு செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு" (குறள்-987) என்றவாறே இராமன் தன் சால்புடைமை தோன்ற இங்ஙனம் கூறினனே அன்றி அவளை அழிக்கும் வெகுளியும் விறலும் தனக்கு இல்லை என்பதையோ, அவள்பால் தனக்குக் காதலுண்டு என்பதையோ, இவ்வாறு விளக்கினனல்லன். ஆயின் சூர்ப்பணகை தன்பால் கொண்ட காதலால் தான் இவ்வாறு கூறுகின்றான் எனக்கொண்டு மேல் பேசுகின்றாள். ஒல்லை முனியும் என இயையும். முனிதல் ஈண்டு, பயனை உணர்த்தியது. 'முனிந்து ஒறுத்தல் செய்வான்' என்பதே கருத்து. (67)

சூர்ப்பணகையின் தற்புகழ்ச்சி

2896. பொற்புடை யரக்கி பூவிற்
புனலினிற் பொருப்பில் வாழு
மற்புடை யுள்ளத் தாரு
மநங்கனு மமரர் மற்று
மெற்பெறத் தவஞ் செய்கின்று
ரென்னைநீ யிகழ்வ தென்னே
நற்பொறை நெஞ்சி னில்லாக்
கள்வியை நச்சி யென்றுள்.

பொற்பு உடை அரக்கி, 'பூவில், புனலினில், பொருப்பில், வாழும்
அற்பு உடை உள்ளத்தாரும் அநங்கனும், அமரர் மற்றும்
எற்பெறத் தவம் செய்கின்றார்; என்னை நீ இகழ்வது என்னே?
நல் பொறை நெஞ்சின் இல்லாக் கள்வியை நச்சி' என்றாள்.

பொ :—அழகை மேற்கொண்டுள்ள சூர்ப்பணகையாகிய அரக்கி, 'மலரிலும், பாற்கடலிலும், கயிலாய மலையிலும் வாழ்கின்ற காதலுடைய உள்ளத்தோராகிய அயனும், அரியும் சிவனும், அழகிற் சிறந்த மன்மதனும் மற்றுமுள்ள தேவர்களும் என்னை மனைவியாகப் பெறுதற்குத் தவம் செய்துகொண்டிருக்கின்றார்கள்; (அங்ஙனமாகவும்) பெண்களுக்கு இன்றியமையாத நல்ல பொறுமைக்குணம் நெஞ்சில் இல்லாத கள்வியாகிய இவளை விரும்பி, (எல்லா நற்குணங்களும் பேரழகும் பொருந்தியுள்ள) என்னை நீ இகழ்வது ஏன்?' என்று வினவினள்.

கு :—திருமகளின் அருளால் அழகை உடைமையாகப் பெற்றவள் என்பது புலப்படப் 'பொற்புடையரக்கி' என்றூர். தவஞ் செய்வார், மலரிலும் நீரிலும் மலையிலும் நின்று தவம் செய்தல் இயல்பு ஆதலின், அயனும் அரியும் அரனும், தாமரை மலரிலும் பாற்கடலிலும் கயிலாய மலையிலும் இருத்தலைக்கொண்டு அவ்விடங்களில் அவர்கள் தன்னைப்பெறத் தவம் செய்துகொண்டிருப்பதாகக் கற்பித்துக்கூறிய திறம் காண்க. அற்புடையுள்ளத்தார் என்றது அயன் முதல் மூவரை. 'உலகிற் சிறந்தோராகிய மும்மூர்த்திகளும் மன்மதனும் மற்றைத் தேவர்களும் என்னைப் பெறவேண்டித் தவஞ் செய்துகொண்டிருக்கவும், யான் அவர்களை விரும்பாது நின்னை விரும்பி வலிய வரவும், நீ என்னை விரும்பாது பொறுமை இல்லாத கள்வியை விரும்புவது தக்கதன்று' என்கின்றூள். மும்மூர்த்திகளும் விரும்பிப் பெறத் தவஞ் செய்யத்தக்க அழகும் பண்பும் தனக்குண்டு என்பதைக் கூறுமுகத்தால் மும்மூர்த்திகளினும் உயர்ந்தவனாக இராமனைக் கருதுகின்றமையும் புலப்படுத்தியவாறு. 'என்னை விரும்பாவிடினும் என்னைப் போன்ற ஒருத்தியை விரும்பினும் குற்றமில்லை; பொறுமைப் பண்பே இல்லாத இக்கள்வியை விரும்பலாகாது என்பது அவள் கருத்து. தான் சிறிது கதித்ததற்கே ஏதோ தீங்கு நிகழ்ந்ததுபோலப் பாவனை செய்து அலறி ஓடினாளே என்ற கருத்தால் 'நற்பொறை நெஞ்சினில்லாக்கள்வி' எனச் சீதையை இகழ்கின்றூள். (68)

சீதையோடு இராமன் பன்னசாலை புகுதல்

2897. தன்னெடுந் தொடர்வி லாதே
மென்னவுந் தவிரா டானிக்
கன்னெடு மனத்தி சொல்லுங்
கள்ளவா சகங்க ளென்னு
மின்னெடு தொடர்ந்து செல்லு
மேகம்போன் மிதிலை வேந்தன்
பொன்னெடும் புனிதன் போயப்
பூம்பொழிற் சாலை புக்கான்.

'தன்னெடும் தொடர்வு இலாதேம்
என்னவும் தவிராள்; தான் இக்
கல் நெடு மனத்தி சொல்லும்
கள்ள வாசகங்கள்' என்னு,

மின்னொடு தொடர்ந்து செல்லும்
மேகம் போல், மிதிலை வேந்தன்
பொன்னொடும் புனிதன் போய், அப்
பூம் பொழிற் சாலை புக்கான்.

பொ :—‘ இந்தக் கல் போன்ற வன்மையான நீண்ட மனத்தை யுடைய அரக்கி, தன்னொடும் தொடர்புகொள்ளும் தகுதி இல்லாதேம் என்று பன்முறை சொல்லவும், தான் சொல்லும் கள்ளத்தனமான சொற்களை விடாதவளாகவே இருக்கின்றாள் ’ என்று கருதி, தூயவனாகிய இராமன், மின்னலோடு தொடர்ந்து செல்லும் மேகத்தைப் போல மிதிலைவேந்தன் மகளாகிய சானகியோடும் அவ்விடத்தை விட்டுநீங்கி அந்த மலர் வனத்திற்கிடையேயுள்ள பன்னசாலையுள் புகுந்தான்.

கு :—தொடர்வு இலாதேம் - மணத்தொடர்பு கொள்ளுதற்குத் தகுதியில்லாதேம். அந்தணர் பாவையை அரசர் மணத்தல் அறனன்று எனவும், அரக்கர் பாவையை மானிடர் மணத்தல் பொருத்தமன்று என்று புலமையோர் புகல்வர் எனவும் சூர்ப்பணகையின் கருத்தை மறுத்தமை தோன்றத் ‘ தன்னொடுந் தொடர்விலாதேம் என்னவும் ’ என்றான். தன் என்றது சூர்ப்பணகையை. ‘ இக் கன்னெடு மனத்தி தன்னொடும் தொடர்விலாதேம் என்னவும் தான் சொல்லும் கள்ள வாசகங்கள் தவிராள் ’ என்று இயையும். தன் கொள்கையை விடாத அவள் மனவன்மையும் அம்மனத்துள் தோன்றிய ஆசையின் நெடுமையும் புலப்பட, ‘ கன்னெடு மனத்தி ’ என்றான். ‘ இக்கன்னெடு மனத்தி, தவிராளாய்க் கள்ள வாசகங்கள் சொல்லும் ’ என்று இயைப்பினுமாம். சீதை, அச்சத்தால் குவவுத் தோள் தழுவிய நிலையில் உடன்வர இராமன் பன்னசாலைக்குள் புகுந்தமை தோன்ற ‘ மின்னொடு தொடர்ந்து செல்லும் மேகம்போல் ’ என உவமை கூறினார். மின் சீதைக்கும், மேகம் இராமனுக்கும் உவமை. மிதிலைவேந்தன் - சனகன். பொன் என்றது இங்கு மகள் என்னும் பொருளில் வந்தது. சூர்ப்பணகையிடம் விளையாட்டாகப் பேசினனே யன்றி உள்ளத்தில் அவளிடம் பற்றற்றவனாகவே இருந்தான் என்பது தோன்ற, இராமனைப் ‘ புனிதன் ’ என்றார். கள்ளவாசகங்கள் என்றது அயன் முதலோர் தன்னைப் பெறத் தவஞ்செய்கின்றார் என்பது போன்றன. (69)

சூர்ப்பணகையின் காதல்நோய் 2898—2912

2898. புக்கபின் போய தென்னு
முணர்வினள் பொறையு ணீங்கி
யுக்கதா முயிர ளொன்று
முயிர்த்தில ளொடுங்கி நின்ரு
டக்கிலன் மனத்துள் யாதுந்
தழுவிலன் சலமுங் கொண்டான்
மைக்கருங் குழலி ஞண்மாட்
டன்பினில் வலிய னென்பாள்.

புக்க பின் போயது என்னும்
உணர்வினள்; பொறையுள் நீங்கி
உக்கது ஆம் உயிரள்; ஒன்றும்
உயிர்த்திலள்; ஒடுங்கிநின்ருள்;
‘ தக்கிலன்; மனத்துள் யாதும்
தழுவிலன்; சலமும் கொண்டான்;
மைக் கருங்குழலிஞள் மாட்டு
அன்பினில் வலியன்’ என்பாள்.

பொ:—(இராமன் அவ்வாறு சாலையுள்) புகுந்தபின்பு, போய் விட்டது என்று சொல்லத்தக்க உணர்வினளாய் (உணர்விழந்தவளாய்) உடம்பாகிய பாரத்திலிருந்து நீங்கிச் சிதறியது என்று சொல்லத்தக்க உயிரையுடையவளாய்ச் சிறிதும் உயிர்த்தல் செய்யாதவளாய்ப் பொறி புலன்கள் மேற்செல்லாது ஒடுங்கிநின்றவள், (பின்பு சிறிது தெளிந்து) ‘ இவன் தகுதியற்றவன்; மனத்துள் சிறிதும் என்பால் பற்றுக்கொண்டிலன்; (அதற்கு மேலும்) என்மேல் கோபமுங் கொண்டான்; இதற்குக் காரணம், மைபோன்ற கரிய கூந்தலையுடைய அவளிடத்தில் கொண்ட அன்பினில் உறுதியுள்ளவனுதலே’ என்று சிந்திப்பாளாய்,

கு:—‘போஞள்’ என மேல் முடியும். சூர்ப்பணகை இராமனைக் காணவும் இயலாமல் அவன் பன்னசாலையில் புகுந்த அளவில் உணர்விழந்தாள் என்பார், ‘போயதென்னும் உணர்வினள்’ என்ருர். முற்றும் போகவில்லை என்பது கருத்து. உக்கதாம் உயிரள் என்றதும் இக்கருத்தினதே. பொறை - உடம்பு; உயிரைத் தாங்கி நிற்கும் காரணத்தால் உடம்பிற்கு அது பெயராயிற்று; பொறுத்தல் - தாங்குதல். தன் கருத்து முற்றுப்பெருத நிலையில் தன் உடம்பும் பெரிய பாரமாய்த் தோன்றிற்று என்ற கருத்துப்

புலப்பட உடம்பைப் 'பொறை' என்ற சொல்லால் குறித்தார் எனலும் ஆம். ஒன்றும் - சிறிதும். ஒடுங்குதலாவது கண்முதலிய பொறிகள் தத்தம் புலன்கள்மேல் செல்லாது வலிகுன்றி ஒடுங்குதல். நின்ருள், என்பாள் என இயையும். நின்ருள் வினைப் பெயர். தக்கிலன் - தகுதியான பண்பு இல்லாதவன்; ஒரு பெண்ணின் விருப்பத்தை நிறைவேற்றும் தகுதியில்லாதவன் எனலுமாம். இனி, தகுதி நடுவுநிலைக்கும் பெயராதலின் நடுநிலையில்லாதவன் எனலுமாம். நடுவில் வந்த பெண்டிர் இருவரிடமும் ஒரு தன்மையனுக இல்லாமல் ஒருத்திபால் சலங்கொள்ளுதலும் ஒருத்திபால் அன்பினில் வலியனுதலும் உடையனுய் உளங்கோடுதலின் நடுநிலையற்றவன் என்று அவள் இகழ்ந்ததாகக் கொள்ளலாம். இவ்வளவு நேர உரையாடலுக்குப் பின்னும் தன்பால் ஒருசிறிதும் பற்றின்றிச் சென்றுவிட்டானே என்பாள், 'மனத்துள் யாதும் தழுவிலன்' என்ருள். சலம் - நெடிது நிற்கும் கோபம். பற்றுக் கொள்ளாமைக்குமேலும் சலமும் கொண்டான் என உம்மை இறந்தது தழுவியது. சீதையின் குழலை இகழுங் குறிப்பால் 'மைக்கருங்குழலி' என்கின்ருள்; தன் கூந்தல் செந்நிறத்ததே ஆதலின் கூந்தலுங் கூடச் செம்மையில்லாதவளைக் காதலிக்கின்ருனே என்ற இரக்கக் குறிப்பும் உண்டு. இவ்வளவு பேரழகுடைய தன்னைத் தழுவாமல் அவளைத் தழுவிச் சென்றமையால் அவன் அன்பின் வலிமை அவட்குப் புலனுயிற்று. (70)

2899. நின்றில ளவனைச் சேரு
நெறியினை நினைந்து போனு
ளின்றிவ னுகம் புல்லே
னெனினுயி ரிழப்பெ னென்னுப்
பொன்றிணி சரளச் சோலைப்
பளிக்கறைப் பொதும்பர் புக்காள்
சென்றது பரிதி மேல்பாற்
செக்கர்வந் திறுத்த தன்றே.

நின்றிலள்; அவனைச் சேரும்
நெறியினை நினைந்து போனுள்;
'இன்று இவன் ஆகம் புல்லேன்
எனின், உயிர் இழப்பென்' என்னுப்

பொன் திணி சரளச் சோலைப்
பளிக்கறைப் பொதும்பர் புக்காள் ;
சென்றது, பரிதி மேல்பால்;
செக்கர் வந்து இறுத்தது அன்றே.

பொ :—அவ்வாறு நினைந்த சூர்ப்பணகை அங்கு நில்லாதவளாய், அவ்விராமனைத் தழுவுதற்குரிய வழியினை ஆராய்ந்து கொண்டே போனாள்; அவ்வாறு போனவள், ‘இன்றைக்கு இவன் மார்பகத்தைத் தழுவவில்லை என்றால் என் உயிரை இழப்பேன்’ என்று கருதிக்கொண்டு, அழகு நிறைந்த ஒழுங்கான சோலைக்கு இடையேயுள்ள பளிங்கு அறையோடு கூடிய குறுங்காட்டில் புகுந்தாள் ; ஞாயிறு மேலைத்திசைக்குச் சென்றது; செவ்வானம் வந்து தங்கியது.

கு :—நின்றிலள், முற்றெச்சம்; நின்றிலளாய்ப் போனவள், என்னாப் பொதும்பர் புக்காள் என்று இயையும். இராமன் தன்னைப் புறக்கணித்துவிட்டு மற்றொரு மங்கையுடன் சென்றதை நினைக்க அவளுக்கு அங்கு நிற்கவும் விருப்பமில்லை என்பது தோன்ற ‘நின்றிலள்’ என்றும், இராமன்மேல் கொண்ட காதலை விடமுடியவில்லை என்பது தோன்ற, ‘அவனைச் சேரும் நெறியினை நினைந்து’ என்றும் கூறினார். ‘இன்றிவன் ஆகம் புல்லேன் எனின் உயிரிழப்பென்’ என்றது, அவள் ஒருதலைக்காமத்தின் வலிமையையுணர்த்தியதாகும். பொன் - அழகு. திணிதல் - நிறைதல். சரளம் - ஒழுங்கு; இங்கு மரங்களின் ஒழுங்கை யுணர்த்திற்று. பொன் என்பது ஆகுபெயராய்ப் பூந்தாதுகளை உணர்த்தியதாகக் கொண்டு சோலைக்கு அடையாக்கலும் ஒன்று. பளிக்கறைப் பொதும்பர் - பளிங்கு அறையினையுடைய குறுங்காடு. காமவெப்பத்தால் வெதும்பியவளாதலின் அவ்வெப்பந்தணிய அங்குச் சென்றாள். அது அவள் இயல்பாகத் தங்குமிடம் எனலும் ஆம். செஞ்ஞாயிற்றின் மறைவும் செக்கரின் வரவும் ஒருங்கே நிகழ்ந்தது என்பார் ‘சென்றது பரிதி, செக்கர்வந்திறுத்தது’ என்றார். மறையும் சூரியனுடைய கிரணங்கள் தோய்தலால் மேகம் செந்நிறமாகத் தோன்றுதல் இயல்பு; அதனையே ‘செக்கர்’ என்பர். செக்கர்-செவ்வானம். இறுத்தல்-தங்குதல். விரகதாபம் உற்றார்க்குச் செக்கர் வருத்தம் செய்யும் இயல்பு கருதி அது வந்ததைச் சிறப்பாகக் கூறினார். (71)

2900. அழிந்த சிந்தைய ளாயயர் வாள்வயின்
★ மொழிந்த காமக் கடுங்கனன் மூண்டதால்
வழிந்த நாகத்தின் வன்றொளை வாளெயிற்
றிழிந்த கார்விட மேறுவ தென்னவே.

அழிந்த சிந்தையள் ஆய் அயர்வாள் வயின்,
மொழிந்த காமக் கடுங்கனல் மூண்டதால்,
வழிந்த நாகத்தின் வன் தொளை வாள் எயிற்று
இழிந்த கார் விடம் ஏறுவது என்னவே.

பொ :—தோலுரிந்த நல்லபாம்பின் வலிய தொளையோடுகூடிய கூரிய பற்களிலிருந்து இறங்கிய கரிய விடம் உடனே தலைக்கேறிப் பெருகி வருத்துவதுபோல, நைந்துபோன மனமுடையவளாய்ச் சோர்ந்திருக்கின்ற சூர்ப்பணகையினிடத்தில் அவள் முன் கூறிய காமமாகிய கடிய நெருப்பு மூண்டு எரிந்தது.

கு :—இராமன் தன்னை ஏற்றுக்கொள்ளாது பிறளொருத்தியோடு போனது நினைந்து சூர்ப்பணகை அழிந்த சிந்தையள் ஆயினள் என்க. 'காமன் என்றொருவன் செய்யும் வன்மையைக் காத்தி' என (2873) முன் அவளே கூறியதை நினைந்து, "மொழிந்த காமக் கடுங் கனல்" என்றார். குறுகுங்கால் வெதுப்பி, நீங்கில் தண்ணென்னும் நெருப்புப் போலாது, நீங்கில் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும் முரணிய இயல்புடையது ஆதலின் 'காமக் கடுங்கனல்' எனச் சிறப்பித்தார். மூளுதல் - பெருகுதல். வாள் எயிற்று இழிந்த கார்விடம் என்க. வாள் – கூர்மை. இழிதல், பாம்பு கடித்த புண்வழி இறங்குதல். பல்லுக்கு மேலுள்ள நச்சுப்பையிலிருந்து பல்வழியே கடித்த இடத்தில் இறங்குதற்காகப் பல்லில் துளை உண்டு. வன் வாள் எயிறு என வன்மையை எயிற்றுக்கு ஏற்றுக. பாம்பின் நச்சுப்பற்கள் நான்கு; அவை :-காளி, காளாத்திரி, யமன், யமதூதி என்ப. ஓரிடத்தில் பட்ட விடம் உடம்பெல்லாம் பரவி வருத்துதல்போலச் சூர்ப்பணகையின் கண்வழி புகுந்த காம நோய் மூண்டு உடம்பெல்லாம் பரவி வருத்தியது என்க. காமக் கடுங்கனலுக்குக் கார்விடம் உவமை. வெதுப்பிக்கொல்லும் காமத்திற்கும் குளிர்ந்து கொல்லும் நச்சுக்கும் ஒப்புமை, சிறிதாய்ப் பின் பெருகிவருத்துதலால் கொள்க. சீதையின் காமநோய் பரவினமைக்குப் "பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே" (604) என்று உவமை கூறியவர், இங்குச் சூர்ப்பணகையின் காமநோய்க்கு நஞ்சைக் கூறியது ஏனெனின்? அது இருவயினொத்த காமமும், இஃது அன்னதன்றி ஒருதலைக் காமமும் ஆதல் பற்றி என்க. அது இன்பந்தரும், இது துன்பம் தரும் என்பது இவ்வுவமைகளால் புலப் படுத்தியவாறு. இனி, பாம்பு தோலுரிக்கும்போது அதன் பற்களிலுள்ள விடம் முழுவதும் வழிந்து விடும் என்பதும் அவ்விடத்தினால் பாம்பின் உடம்பு வெதும்பும் என்பதும் கொண்டு நோக்கி, சூர்ப்பணகை தன் ஒருதலைக் காமத்தால் தானே வருந்தினமைக்கு ஏற்ற உவமையாக்கலும் பொருந்தும். (72)

2901. தாட கைக்கொடி யாடட மார்பிடை
யாட வர்க்கர சன்னயி லம்புபோல்
பாட வத்தொழின் மன்மதன் பாய்கணை
யோட வுட்கி யுயிருளைந் தாளரோ.

தாடகைக் கொடியாள் தட மார்பிடை,
ஆடவர்க்கு அரசன் அயில் அம்புபோல்,
பாடவத் தொழில் மன்மதன் பாய் கணை
ஓட, உட்கி, உயிர் உளைந்தாள் அரோ!

பொ:—தாடகை என்ற பெயருடைய கொடிய அரக்கியின் பெரிய மார்பின் நடுவில் பாய்ந்த, ஆண்மக்களுள் உயர்ந்தவனுகிய இராமனுடைய கூரிய அம்பைப் போலத் திறமான தொழிலைச் செய்கின்ற மன்மதனுல் விடப்பட்டுப் பாய்ந்த மலர்க்கணை தன் மார்பில் ஊடுருவியதால் சூர்ப்பணகை அஞ்சி உயிர் வருந்தினுள்.

கு:—மன்மதன் விட்ட கணையின் கொடுமை விளக்கத் தாடகை மார்பைத் துளைத்த இராமபாணத்தை உவமை கூறினுர். தாடகையின் மார்பு எத்துணை வலியதாயினும் இராம பாணத்தின் வலிமைக்கு ஆற்ருது துளைபட்டது போலச் சூர்ப்பணகை எத்துணை வலிமை பெற்றிருந்தும் மன்மதன் கணைக்கு ஆற்ருது உயிர்வருந்தும் நிலையினள் ஆனுள் என்க. "சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம் கரியசெம்மல், அல்லொக்கும் நிறத்தினுண்மேல் விடுதலும் வயிரக் குன்றக், கல்லொக்கும் நெஞ்சில் தங்காது அப்புறங்கழன்று" (413) எனத் தாடகையின் மார்புவலிமையும் அதைத் துளைத்த இராம பாணத்தின் வலிமையும் விளக்கியிருத்தல் காண்க. புருடோத்தமன் என்ற பொருளில் இராமனை இங்கு 'ஆடவர்க்கரசன்' என்ருர். அயில் - கூர்மை. பாடவம் - திறமை. எளிதில் ஒடியத்தக்க கருப்பு வில்லையும், தொடர்ந்து வலிமை பெருத சுருப்பு நாணையும், கூர்மையற்ற மெல்லிய மலர்க்கணையையும்கொண்டு யாவரையும் புறங்காணும் திறல் மன்மதனுக்கு உண்மையின், அவனைப் 'பாடவத் தொழில் மன்மதன்' என்ருர். மன்மதன் என்னும் பெயர், மனத்தைக் கலக்குகின்றவன் என்ற காரணத்தால் வந்தது. அக்காரணம் சூர்ப்பணகையின் திறத்தும் மெய்யாயிற்று என்பதை 'மன்மதன் பாய்கணை யோடவுட்கி யுயிருளைந்தாள்' என்பதனுல் விளங்க வைத்தவாறு. உட்குதல் – அஞ்சுதல். ஓட என்றது அவள் மார்பை ஊடுருவிச் செல்ல என்றவாறு. உயிர்போகும் வருத்தத்தை அடைந்தாள் என்பார், 'உயிருளைந்தாள்' என்ருர். அரோ, அசை. இராமனைப் பகைத்து வந்த அரக்கிக்கு நேர்ந்த கதி அவனை நயந்து வந்த அரக்கிக்கும் – அவனுல் நேரவில்லையாயினும், அவனேடு

ஒத்தவண்ணமும் அழகுமுடைய மன்மதனுல்-நேர்ந்தது என்பது புலப்படுத்தியவாறு. (73)

2902. கலையு வாமதி யேகறி யாகவன்
சிலையின் மாரனைத் தின்னு நினைப்பினுண்
மலைய மாருத மாநெடுங் காலவே
லுலைய மார்பிடை யூன்றிட வோயுமால்.

கலை உவாமதியே கறி ஆக, வன்
சிலையின் மாரனைத் தின்னும் நினைப்பினுள்,
மலைய மாருதம் ஆம் நெடுங் கால வேல்
உலைய மார்பிடை ஊன்றிட, ஓயுமால்,

பொ :—கலைகள் நிறைந்த முழுமதியையே கறியாகக்கொண்டு வலிய வில்லையுடைய மன்மதனைத் தின்றுவிடவேண்டும் என்ற நினைப்பினையுடைய சூர்ப்பணகை, பொதியத் தென்றலாகிய எமனைப் போன்ற நீண்ட வேல், வருந்துமாறு தன் மார்பிடை வந்து ஊன்றுதலால் சோர்வு அடைவாள்.

கு :—திங்கள் பதினறு கலைகள் நிறையப் பெற்றவழி உவா மதியாம் தன்மை தோன்றக் 'கலையுவாமதி' என்ருர். உவாமதி - நிறைமதி; பூரணசந்திரன். சூர்ப்பணகையின் காமவேதனை மிகுதிப்பட நிறைமதியும் அன்று வாய்த்தது. தேவர் முதலியவர்களைக் காரணமின்றியே வருத்துகின்றவள், இன்று இராமன் பிரிவை ஆற்ருது வருந்தும் தன்னை வெண்ணிலவு வீசியும் தண்மலர் வாளி சொரிந்தும் மேலும் வருத்துகின்ற திங்களையும் மாரனையும் உணவாகக்கொள்ள நினைத்தது வியப்பன்று. அவ்வாறு உண்ணுங்கால் சந்திரனைக் கறியாகவும் மாரனைச் சோருகவும் கொண்டு உண்ண எண்ணினுள் ; அவ்வெண்ணம் நிறைவேருதபடி பொதியத்தென்றல் புதிய மன்றலொடு வந்து அவளை மேலும் வருத்திச் சோர்வுறச் செய்தது என்க. மதியும் மாரனும் செய்யும் கொடுமை ஆற்ருமையால் அவள் தின்ன எண்ணினுள். விண்ணிலியங்கும் தண்மதியையும் உருவு வெளிப்படாது எய்யும் மன்மதனையும் தின்ன இயலாது என்னும் உண்மை, மயக்கத்தால் அவளுக்குப் புலப்படவில்லை. தன்னை நோக்கி வெளிப்படையாக வந்து தாக்கும் மலைய மாருதத்தைத் தின்னவோ! விழுங்கவோ இயலாது, அதன் ஆற்றலுக்கு ஆற்ருது சோர்வடைந்தாள். 'கால நெடுவேல்' என மாற்றுக. மாருதமாகிய வேல் என உருவகமும் காலனைப் போன்ற வேல் என உவமையும் இணைந்து வந்தன. இறுதிக்காலத்தை யுண்டாக்கும்

வேல் எனலும் ஆம். ஒய்தல் - வலி குறைந்து மெலிதல்; உள்ளத னுணுக்கம் என்பர் தொல்காப்பியர். உள்ளத்தில் சினமும் உடம்பில் ஓய்வும் அவளுக்கு மாறுபட உண்டாயின என்றவாறு. மன்மதன் குடையாக மதியமும் தேராகத் தென்றலும் கூறப்படும். குடையை யும் அரசனையும் அழிக்க எண்ணிய அவளை அவன் தேர்வந்து அலைத்ததாகக் கூறியது பொருத்தமாதல் காணலாம். (74)

2903. அலைக்கு மாழி யடங்கிட வங்கையான்
மலைக்கு லங்களிற் றூர்க்கு மனத்தினு
ணிலைக்கு வானி னெடுமதி நீணிலா
மலைக்க நீங்கு மிடுக்கினண் மாந்துவாள்.

அலைக்கும் ஆழி அடங்கிட, அங்கையான்
மலைக் குலங்களின் தூர்க்கும் மனத்தினுள்,
நிலைக்கும் வானில் நெடுமதி நீள் நிலா
மலைக்க, நீங்கும் மிடுக்கினள் மாந்துவாள்.

பொ :—ஒலியால் தன்னை வருத்துகின்ற கடல் ஒலியடங்கி ஒழியுமாறு தன் உள்ளங்கையால் எடுத்தெறியும் மலைகளின் கூட்டத் தால் அதனைத் தூர்த்துவிட வேண்டும் என்ற எண்ணமுடைய சூர்ப்பணகை, விண்ணில் நிலைபெற்ற முழுமதியின் நெடிய நிலாக் கதிர்கள் தன்னோடு மாறுபட்டு வருத்துதலால் வலிமை நீங்கப் பெற்றவளாய்க் கருதியதை முடிக்காமல் வருந்துவாளானாள்.

கு :—அலைக்கும் ஆழி - வருத்துகின்ற கடல்; அலைவீசும் கடல் எனலுமாம். கடல் மன்மதனுக்கு முரசு என்பதற்கேற்ப அதன் ஒலி காமுகரை வருத்தும் இயல்புடையதாகும். கடலில் ஒலியடங்க வேண்டுமாயின், அது வற்றவேண்டும், அல்லது தூர்க்கப்பட வேண்டும். சூர்ப்பணகை, தன் வலிமைக்கேற்ப மலைகளைக்கொண்டு அக்கடலைத் தூர்த்து அதனாலாய துன்பத்தைத் தணிக்க எண்ணி னாள். ஆயின் அக்கடலிடைத் தோன்றிய சந்திரன் அவள் நினைவை அறிந்தவன்போல், தன் தோற்றத்திற்கு இடமாதலின் தன் தாய் போன்ற கடலுக்கு இடையூறு செய்ய எண்ணிய அவளைத் தண்கதிர் கொண்டு வெதுப்பி வலியிலள் ஆக்கினான்; ஆதலின் வருந்துவா ளாயினாள் என்க. அகங்கை, அங்கையென வந்தது. அங்கையான் மலைக்குலங்களின் என்புழி இன்ஆன் என ஏது இரண்டும் வந்தமை காணலாம். அங்கையால் தூர்க்கும், மலைக் குலங்களின் தூர்க்கும் என்க. தூர்ப்பதற்கு மலைக்குலம் கருவி; மலையெடுத்து எறிவதற்கு அங்கை கருவி. அவள் எண்ணியாங்குச் செய்யவியலாதபடி அக்

கடலொடு தொடர்புடைய மதி செய்துவிட்டது. குலம் - தொகுதி. மன்மதன் முரசுக்கு இடுக்கண் செய்ய நினைத்தவளை அவன் குடை காப்பாற்றியதாகக் கூறிய திறம் காண்க. மனத்தினுள், என்பது வினைப்பெயர். வானின் நிலக்கும் என மாறுக. மலக்க - மாறுபட்டு வருத்த. மிடுக்கு - வலிமை. நீங்கு மிடுக்கினள் என்பது, 'அருங் கேடன்' (குறள்-210.) என்பதுபோல வந்தது. மாந்துதல் - வருந்து தல். (75)

**2904.** பூவெ லாம்பொடி யாகவிப் பூமியுட்
காவெ லாமொடிப் பென்னெனக் காந்துவாள்
சேவ லோடுறை செந்தலை யன்றிலின்
நாவி னுல்வலி யெஞ்ச நடுங்குவாள்.

'பூ எலாம் பொடி ஆக, இப் பூமியுள்
கா எலாம் ஒடிப்பென்' எனக் காந்துவாள்,
சேவலோடு உறை செந்தலை அன்றிலின்
நாவினுல் வலி எஞ்ச, நடுங்குவாள்.

பொ:—'மலர்கள் எல்லாம் துகளாமாறு இந்தப் பூமியில் உள்ள மலர்ச்சோலைகள் எல்லாவற்றையும் ஒடிப்பேன்' என்று கோபித்தவளாகிய சூர்ப்பணகை, (அச்சோலையில் ஒரு மரத்தில்) சேவலோடு தங்கியுள்ள சிவந்ததலையினையுடைய அன்றிற் பறவையின் நாவில் எழுந்த ஒலியால் தன் வலிமை குறைதலால் (தன் கருத்தை முற்றுவிக்க முடியாமல்) நடுங்குவாளானுள்.

கு:—மலர்கள் மன்மதன் கணையாய் வந்து தன்னை வருத்துதலால் அவற்றை அடியோடு அழித்தலான்றித் தன்னை மீண்டும் வருத்தாதிரா என்னும் கருத்தினுல், காவெலாம் ஒடிப்பேன் என்று கருதி வெகுள்வாளாயினள்; ஆயின், அச்சோலையிலுள்ள ஒரு பனை மரத்தில் சேவலோடு தங்கி மகிழ்ச்சியால் கூவுகின்ற அன்றிலின் குரல் அவள் காமநோயை மிகுதிப் படுத்தினமையால் வலியிழந்து முன் நினைந்தாங்குச் செய்யாது நடுங்குபவளானுள். கூடியுள்ள மகிழ்ச்சியால் கூவும் அன்றிலின் குரல், கூடாது வருந்தும் சூர்ப்பணகையின் உள்ளத்திற்கு வேதனை தந்தது என்க. மன்மதன் கணையாய் வருத்துதல்பற்றி மலரை அழிப்பது மட்டும் இன்றி, அது தோன்றும் காவையும் அழிக்க - பூமியுள் இருக்கும் காவெலாம் அழிக்கத் துணிந்தவள் தன்னருகிலுள்ள பனைமரத்தில் வாழும் அன்றிற்பறவையின் குரலுக்கு ஆற்றும் வலியில்லாது நடுங்குவாளானுள். செய்வதாகச் சிந்தை செல்லுமளவு, யாக்கையால் தினைத்

துணையும் ஆவதில்லை என்ற உண்மையைச் சூர்ப்பணகையின் திறத்துக் காணலாம். 'நெருப்பினன்ன செந்தலை அன்றில்' (குறுந்-160) என அன்றிலின் தலை சிவப்பு என்பதை முன்னோரும் மொழிந்திருத்தல் காணலாம். இப்பறவை இணைபிரியாது வாழும் இயல்பினது; ஒன்றை ஒன்று பிரிந்தால் மும்முறையழைத்துப் பார்த்தும் வாரா தொழியின் உயிர்விடும் இயல்பினது என்பர். நாவில் எழுப்பும் ஒலியால் என்பார், ஆகுபெயரால் நாவினால் என்றார். அன்றிலின் மெல்லிய நாவிற்கே மெலியும் தன்னியல்பை யறியாது, 'பூமியுள் காவெலாம் ஒடிப்பென்' என்பன போன்ற எண்பது கோடி எண்ணங்களை எண்ணினாள் என அவள் பேதைமையை விளக்கியவாறு. எஞ்சுதல் - குறைதல், நடுக்கம் வலி குறைந்ததாலாயது. (76)

**2905.** அணைவி றிங்களை நுங்க வராவினைக்
கொணர்வெ னோடி யெனக்கொதித் துன்னுவாள்
பணையின் மென்முலை மேற்பனி மாருதம்
புணர வாருயிர் வெந்து புழுங்குமால்.

'அணைவு இல் திங்களை நுங்க அராவினைக்
கொணர்வென், ஓடி' எனக் கொதித்து உன்னுவாள்,
பணை இன் மென் முலை மேல் பனி மாருதம்
புணர, ஆர் உயிர் வெந்து புழுங்குவாள்.

பொ :—தன்னால் பற்றப்படுமாறு தானுள்ள 'தரையில் அணைதலின்றி விண்ணில் திரியும், சந்திரனை விழுங்குதற்கு இராகுவென்னும் பாம்பினை ஓடிப்போய்க் கொணர்வேன்' என்று மனம் கொதித்து நினைக்கின்ற சூர்ப்பணகை, பின்னர், பெருத்த இனிய மெல்லிய நகிலின்மேல் குளிர்ந்த காற்று வந்து பொருந்துதலால் அரிய உயிர் வேக உடல் புழுங்குவாளானாள்.

கு :—அணைதலாவது, தான் உள்ள இடத்தில் அணுகுதல். திங்கள், தானுள்ள இடத்தில் அணுகாமையால் அதனைத் தான் விழுங்க இயலாமை கருதி, அதனை விழுங்கும் இயல்புடைய பாம்பைக் கொணர நினைத்தாள் சூர்ப்பணகை. திங்கள் கூடினர்பால் நிழலாய்க் கூடார்பால் வெய்யதாய் இருத்தல் பற்றி அதன் வெம்மைபொருது கொதிப்படைந்து இம்முடிவிற்கு வந்தாள் என்பார், 'கொதித் துன்னுவாள்' என்றார். தனக்கு உதவி செய்யாது திங்களிலுள்ள முயலை வெகுண்ட தலைவி ஒருத்தி, "திங்களுள் தோன்றியிருந்த குறுமுயால், எங்கே ளிதனகத் துள்வழிக் காட்டீமோ, காட்டியா

யாயின் கதநாய் கொளுவுவேன், வேட்டுவ ருள்வழிச் செப்புவேன் ஆட்டி, மதியொடு பாம்பு மடுப்பேன் மதிதிரிந்த, என்னல்லல் தீரா யெனின்" (கலி-144-18-23) என இவ்வாறே மதியொடு பாம்பு மடுத்தலைக் கூறி அச்சுறுத்தியுள்ளமை இங்கு நினைதல் தகும். கிரகணகாலத்தில் சந்திரனை இராகு என்னும் பாம்பு விழுங்குவ தாகக்கொள்வது நம்நாட்டு மரபு. சேய்மையிலுள்ள சத்திரனுக்குத் தான் தீங்கு செய்ய இயலாமை எண்ணி அதன் பகையாகிய இராகு வென்னும் பாம்பைக் கொணர்ந்து விழுங்கச் செய்யலாம் எனச் சூர்ப்பணகை தான்படும் துன்பத்தால் நினைத்தாளே அன்றி, அப்பாம்பைக் கொணர்தலும் எளிதன்று என்பதை மயக்கத்தால் அவள் உணர்ந்திலள். திங்களின் வெம்மையினும் பனிமாருதத்தின் வெம்மை மிக்கது என்பதுணர்த்த 'ஆருயிர் வெந்து புழுங்குதல்' கூறினர். பணை - பெருமை; 'பணையே பிழைத்தல் பெருப்பு மாகும்' (தொல்-சொல்-339) என்பது காண்க. டனிமாருதம் - குளிர்ந்த காற்று; தென்றல். மாருதம் புணர்தலாவது, மெல்லியதாய் வந்து வீசுதல். வெந்து என்பதைச் செயவெனெச்சமாக்குக. சினைவினை முதலொடுஞ் செறிந்ததாகக் கொள்ளினுமாம். 'அணைவு இல் திங்கள்' என்பதற்கு இராமன் வந்து தன்னை அணைதற்குக் காரணமாய் அவனைக் காய்தல் இல்லாத திங்கள் என இசையெச்சமாய் வேண்டும் சொற்களை வருவித்துக் கூறலுமாம். உன்னுவாள், பெயர். (77)

**2906.** கைக ளாற்றன் கதிரிளங் கொங்கைமே
லைய தண்பனி யள்ளின ளப்பினள்
மொய்கொ டீயிடை வெந்து முருங்கிய
வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்குமால்.

கைகளால், தன் கதிர் இளங் கொங்கை மேல்
ஐய தண் பனி அள்ளினள் அப்பினள்;
மொய் கொள் தீயிடை வெந்து முருங்கிய
வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்கும் ஆல்.

பொ:—(பனிமாருதத்தால் வெந்து புழுங்கிய) தன் ஒளிவாய்ந்த இள முலைமேல், வியக்கத்தக்க குளிர்ந்த பனிக்கட்டிகளைக் கைகளால் அள்ளி அப்பினள்; அப்பிய அப்பனிக்கட்டி, நெருங்கிய நெருப்புக் கிடையில் வெந்து தீய்ந்துபோன வெப்பமுள்ள பாறையில் வைத்த வெண்ணெய்போல் வெதும்பி உருகும்.

கு :—தலைக்கொதிப்பிற்குப் பனிக்கட்டியை வைத்தல் மருத்துவ முறையில் இன்றுங் காணலாம். கொங்கையில் பனிமாருதம் பட்டவுடன் காமம் மிகுதிப்பட்டுத் தோன்றிய வெப்பத்திற்குப் பனிக் கட்டியை வைத்தால் தணியும் என்று சூர்ப்பணகை அதைச் செய்தாள்; ஆயின் அதற்கு மாறாக அக்கொங்கையின் வெப்பம் குளிர்ச்சி மிக்க பனிக்கட்டியையும் வெதுப்பி உருக்கியது என அவள் காம மிகுதியை உணர்த்தியவாறு. காமத்தீயால் வெதும்புகின்ற கொங்கைக்கு, மொய்கொள் தீயிடை வெந்து முருங்கிய வெய்ய பாறையும், அதில் அப்பிய பனிக்கட்டி வெதும்பி உருகியதற்கு வெய்யபாறையில் வைத்த வெண்ணெ உருகினமையும் உவமைகளாம். வெய்ய பாறையில் வெண்ணெயை வைத்தால் மீண்டும் எடுக்க முடியாதபடி உருகிவிடும் என்பதை: "ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்.........வெண்ணெய் உணங்கல் போலப் பரந்தன்று" (குறுந்-58) என வெள்ளிவீதியார் கூறியுள்ளமையாலும் அறியலாம். மொய் - நெருக்கம்; வலிமையுமாம். முருங்குதல் - தீய்ந்து போதல். ஐ - வியப்பு. வியக்கத்தக்கவாறு மிகக் குளிர்ந்த பனி என்க. பனிக்கட்டியும் வெண்ணெயும் குளிர்ச்சியானும் நிறத்தினும் வெப்பம் தாக்கியவழி உருகுதலானும் ஒப்புமையுடையனவாதல் காணலாம். பனிமாருதத்தால் குளிர்ச்சியடைதற்கு மாறாகக் கொதிப்படைந்த கொங்கைகள் பனிக்கட்டியால் குளிர்ச்சியடையும் என அவள் எண்ணியது அவள் காமமயக்கத்தால் நிகழ்ந்ததேயாம். (78)

**2907.** அளிக்கு மெய்யுயிர் காந்தழ லஞ்சினள்
குளிக்கு நீருங் கொதித்தெழக் கூசுமால்
விளிக்கும் வேலையை வெங்க ணநங்கனை
யொளிக்க லாமிடம் யாதென வுன்னுமால்

அளிக்கும் மெய், உயிர், காந்து அழல் அஞ்சினள்,
குளிக்கும் நீரும் கொதித்து எழக் கூசுமால்;
விளிக்கும் வேலையை, வெங்கண் அநங்கனை,
ஒளிக்கல் ஆம் இடம் யாது? என, உன்னுமால்.

பொ :—அன்போடு காப்பாற்றவேண்டிய தன் உடம்பையும் உயிரையும் எரிக்கின்ற காமநெருப்புக்கு அஞ்சினவளாய், அது தணியத் தான் குளிக்கின்ற கடல் நீரும் கொதித்துப் பொங்கி எழ நாணுவாளாயினள்; தன்னைப் மிகுமாறு பேரொலியுடன் இரைக்கும் கடலுக்கும் அம்பெய்யும் கொடிய மன்மதனுக்கும் இலக்காகாமல் ஒளித்துக்கொள்ளத்தக்க இடம் இனி யாதுளது? என்று சிந்திக்கலானாள்.

கு :—மெய்யுயிர், உம்மைத்தொகை; உடம்பையும் உயிரையும் என்க. காந்துதல் – கொளுத்துதல். அழல் என்றது காமமாகிய நெருப்பை. அழலுக்கு நீரில் குளித்தது, 'தீ முரணிய நீரும்' (புறநா-2) என்ருங்கு நெருப்புக்கு மாறுபட்ட குணத்ததாய் அதனை அவிக்கும் இயல்புடைமை கருதி. நெருப்பைத் தணிக்கவேண்டிய நீரே தன் காமத்தீயின் வெப்பத்தால் கொதித்து எழுதலால் சூர்ப் பணகை கூசியதோடு கடலின் ஓசைக்கும் மன்மதன் அம்பிற்கும் இலக்கு ஆகாமல் ஒளிக்கத்தக்க இடந்தான் இனி யாதுளது? என்று வருந்திச் சிந்திக்கலாயினள் என்க. இதனுல் 'காமம் தீயினும் அஞ்சப்படும்' என்பதைக் காட்டியவாறு. "ஓஒ கடலே, ஊர்தலைக் கொண்டு கனலுங் கடுந்தீயுள், நீர் பெய்தக் காலே சினந்தணியும் மற்றிஃதோ, ஈரமில் கேள்வ னுறீஇய காமத்தீ, நீருட்புகினுஞ் சுடும்" (கலி. 144 : 59 - 62) "நீருட்குளிப்பினுங் காமஞ்சுடுமே குன்றேறி ஒளிப்பினும் காமஞ்சுடும்" (நாலடி. 90) என்பன இங்கு ஒப்பு நோக்கத்தகும். நீருட்குளித்தும் உய்ய இயலாமை யறிந்த சூர்ப்ப ணகை, குன்றேறியேனும் ஒளிக்கலாமா என்ற கருத்தோடு 'ஒளிக்க லாமிடம் யாதென வுன்னுவாள்' ஆயினள் எனலும் ஆம். சூர்ப்ப ணகை தான் நீருட்குளித்துக்கண்ட அநுபவத்தைக் கடலுக்குச் சொல்லவேண்டும் என்று கருதினவளாய், 'ஓஒ கடலே' என வேலையை விளித்தவள், பின் அதனேடு கூறிப் பயன் என் என அதை விடுத்து அநங்கனுக்கு ஒளிக்கும் இடம் யாதேனும் உண்டோ எனச் சிந்திக்கலாயினள் எனக் கூறலுமாம். இதனுல் அவள் மனத் தடுமாற்றமும் புலனுகும். கூசுதல் - நாணுதல்; தன் காம மிகுதி யைப் புலப்படுத்துதலின் நாணுவாளாயினள். அனங்கனுக்கு என வேற்றுமை மயக்கமாக்குக. ஆல் இரண்டும் அசை. (79)

**2908.** வந்து கார்மழை தோன்றினு மாமணிக்
கந்து காணினுங் கைத்தலங் கூப்புமா
லிந்து காந்தத்தி னீர நெடுங்கலும்
வெந்து காந்த வெதுப்புறு மேனியாள்.

வந்து கார் மழை தோன்றினும், மா மணிக்
கந்து காணினும், கைத்தலம் கூப்புமால்;
இந்துகாந்தத்தின் ஈர நெடுங்கலும்
வெந்து காந்த, வெதுப்புறு மேனியாள்.

பொ :—சந்திரகாந்தம் என்கின்ற குளிர்ச்சியுடைய நெடிய கல்லும் வெந்து காந்துமாறு வெதுப்புகின்ற மேனியையுடையவ ளாகிய சூர்ப்பணகை, தன்முன் வந்து கரியமேகம் தோன்றினும்

நீலமணியால் ஆய தூணை எதிரில் கண்டாலும் அவற்றை இராமன் வடிவாகவே மதித்துத் தன் கைகளைக் குவித்து வணங்குவாள்.

கு :—கார்மழையும் நீலமணித்தூணும் இராமன் நிறத்தோடு ஒப்புமையுடையவாகலின் அவற்றைக் கண்டவழி இராமனே தனக்கு அருள்செய வந்ததாக எண்ணிக் கைகுவிப்பாளாயினள். "நன்று பெய்யும் மழைகாணில் நாரணன் வந்தானென்று ஆலும்" (திருவாய்மொழி-4; 4; 4.) "கரும்பெரு மேகங்கள் காணில் கண்ணனென்றேறப் பறக்கும்" (திருவாய்மொழி-4; 4; 9.) என்பன இங்கு ஒப்பு நோக்கத்தகும். 'ஒப்புவழி உவத்தல்' என்ற மெய்ப்பாடு (தொல்-மெய்ப்பாடு-22) இதில் அமைந்துள்ளமை காணலாம். மாமணிக் கந்து - நீலமணியாலாகிய தூண். இந்துகாந்தம்-சந்திரகாந்தக்கல். சந்திரகாந்தமாகிய ஈர நெடுங்கல் என்க. அத்தும் இன்னும் தவிர் வழிச்சாரியை. சந்திரனைக் கண்டு நீரைச் சொரியும் இயல்புடையது சந்திரகாந்தக்கல். நீரைச் சொரியும் கல்லும் வெந்து காந்துமாறு வெதும்பும் மேனி எனவே அவள் காமவெப்பத்தின் மிகுதி புலனுகும். சூர்ப்பணகை தன் உடம்பின் வெம்மை நீங்கும் என்ற எண்ணத்தால் நீண்ட சந்திரகாந்தக்கல்லில் படுத்தாளாக, அக் கல்லும் இவளுடம்பால் வெதும்பியது என்பது கருத்து. (80)

**2909.** வாம மாமதி யும்பனி வாடையுங்
காம னுந்தனைக் கண்டுண ராவகை
நாம வாளெயிற் றோர்கத நாகம்வாழ்
சேம மால்வரை யின்முழை சேருமால்.

வாம மா மதியும் பனி வாடையும்
காமனும் தனைக் கண்டு உணராவகை
நாம வாள் எயிற்று ஓர் கத நாகம் வாழ்
சேம மால் வரையின் முழை சேருமால்.

பொ :—அழகிய பெரிய நிறைமதியும், குளிர்ச்சிமிக்க வாடைக் காற்றும், மன்மதனும், தன்னைக் கண்டு உணர்ந்துகொள்ளாதபடி, அச்சம் தரத்தக்க கூரிய பற்களையுடைய ஒரு சினம்மிக்க நாகப்பாம்பு வாழ்கின்ற பாதுகாப்பான பெரிய மலைக்குகையை அடைவாளாயினுள்.

கு :—வாமம் - அழகு. நிறைமதி என்பது புலப்பட 'மாமதி' என்ருர். வாடை என்றது, காற்று என்னும் பொதுப் பொருளில் வந்துளது. வாள் - கூர்மை. சேமம் - பாதுகாப்பு. நாகம் வாழ்

முழையில் சூர்ப்பணகை நுழையக் காரணம் என்னை எனின்? கதநாகம் தன்னை விழுங்கிவிடும் என மாமதி அஞ்சி அங்கு வாராது; நாகம் தன்னை உணவாகக்கொள்ளும் என்று அஞ்சி காற்றும் அங்கு நுழையாது; பாம்பு சிவபிரானின் அணிகலமாதலின் அப்பாம்பு உள்ள இடத்தில் சிவபிரானும் இருக்கக்கூடும் என்று அஞ்சி மன்மதனும் அங்கு நெருங்கமாட்டான் என்ற கருத்தாலாகும். இனி, மலைக்குகையில் மதியின் நிலவு வீசாது என்றும் காற்று நுழையாது என்றும் அவ்விருட் குகையில் தான் இருப்பதை மன்மதன் காண இயலாது என்றும் கருதி வரையின் முழையில் சேர்ந்தாள் எனலும் ஆம். (81)

**2910.** அன்ன காலை யழன்மிகுத் தேறலு
முன்னின் மும்மடி யாய்முலை வெந்துக
வின்ன வாசெய்வ தென்றறி யாதிளம்
பொன்னின் வார்தளி ரிற்புரண் டாளரோ.

அன்ன காலை அழல் மிகுத்து ஏறலும்
முன்னின் மும்மடியாய் முலை வெந்து உக,
இன்னவா செய்வது என்று அறியாது இளம்
பொன்னின் வார் தளிரில் புரண்டாள் அரோ.

பொ :—அவள் அவ்வாறு மலைக்குகையுள் புக்கு ஒளித்தபோது, காமவெப்பம் மிக்கு வளர்ச்சியடைதலும், அவள் கொங்கை, முன்னையினும் மும்மடங்காக வெதும்பி அனலைச் சொரியாநிற்க, அவ்வெப்பந்தீர இன்னவாறு செய்வது என்று அறியாதவளாய்ப் பொன் போன்ற நிறமுடைய நீண்ட இளந் தளிர்களைப் பரப்பி அதில் புரண்டாள்.

கு :—அழல் என்றது காம அனலை; அது மிகுத்து ஏறியவழி உடம்பில் மென்மைமிக்க உறுப்பாகிய நகில்கள் வெதும்பி அனலைக் கக்கின என்க. வெண்ணிலவில் தண்ணிய தென்றலால் வெளியிடத்தில் வெதும்பியதைக் காட்டிலும் மலைக்குகையில் ஒளித்தபோது மூன்று மடங்கு அதிகமாக முலை வெந்துக்கது என்றது, 'குன்றேறி, ஒளிப்பினுங் காமஞ்சுடும்' (நாலடியார்-90) என்பதை நிறுவியவாறு. நிலவுக்கும் தென்றலுக்கும் மன்மதனுக்கும் அஞ்சி மலைக்குகையில் ஒளித்தபின்னும் வெப்பம் மிகுத்ததாகக் கூறியது அவ்வெப்பம் புறத்திலிருந்து வரவில்லை; அகத்திலிருந்தே அழற்றுகின்றது என்பதைப் புலப்படுத்தியவாறு. தளிர், நிறத்தால் பொன்னையொத்தது. தளிரின் மென்மையாலும் தண்மையாலும் தன்வெம்மை நீங்குமென்று அத்தளிரைப் பரப்பிப் புரண்டாள் என்க. (82)

2911. வீரன் மேனி வெளிப்பட வெய்யவள்
கார்கொண் மேனியைக் கண்டன ளாமெனச்
சோரும் வெள்குந் துணுக்கெனு மவ்வுருப்
பேருங் கால்வெம் பிணியிடைப் பேருமால்.

வீரன் மேனி வெளிப்பட, வெய்யவள்,
கார் கொள் மேனியைக் கண்டனளாம் எனச்
சோரும்; வெள்கும்; துணுக்கெனும்; அவ்வுருப்
பேருங்கால், வெம் பிணியிடைப் பேரும் ஆல்.

பொ :—இராமன் மேனி (உருவெளித்தோற்றமாய்) வெளிப் பட்டுக் கண்ணுக்குத்தோன்ற அதில் விருப்பமுடைய சூர்ப்பணகை, கருமுகிலின் தன்மையைக்கொண்ட அவன் உண்மையான மேனியை நேரில்கண்டவளைப்போலத் தளர்வாள்; பின்னர் நாணி நிற்பாள்; பின் திடுக்கிடுவாள்; அந்த உருவம் மறையும்பொழுது மீண்டும் காமநோயின்வாய் வீழ்வாள்.

கு :—வெய்யவள் - காமவிருப்பமுள்ளவள். விருப்பத்தால் நீடு நினைக்கும் உருவம் கண்ணெதிரே தோன்றுவது இயல்பு; இதை உருவெளித்தோற்றம் என்பர். கண்டனளாமென என்றது, உண்மையாகக் கண்டவள்போல என்றவாறு. நீலமேக வண்ணனைக்கண்டும் தழுவப்பெருமையால் சோர்வும், வெறுத்துச் சென்றவன்பால் விரும்பி நிற்கின்றேமே என்பதால் நாணமும், கொழுநனாகத்தக்க அவனுக்குரிய மரியாதை செய்யத் தவறிவிட்டோமே என்பதால் துணுக்கமும் சூர்ப்பணகையின்பால் தோன்றின. அவ்வுருப் பேர்தலாவது, மறைதல். பிணியிடைப் பேர்தலாவது, மீண்டும் முன்போலவே காமநோயால் வருந்துதல். இதனுல் உருவெளித் தோற்றத்தைக் கண்ட அச்சிறிது போழ்து அப்பிணியை நீங்கியிருந்தாள் என்பது பெறப்படும். இனி, துணுக்கெனு மவ்வுரு என்று இயைத்துத் துடும் எனத் தோன்றிய அந்த உரு எனப் பொருள்கொள்ளினுமாம். (83)

2912. ஆகக் கொங்கையி னையனென் றஞ்சன
மேகத் தைத்தழு வும்மவை வெந்தன
போகக் கண்டு புலம்புமப் புன்மையாண்
மோகத் துக்கோர் முடிவுமுண் டாங்கொலோ.

ஆகக் கொங்கையின், ஐயன் என்று, அஞ்சன
மேகத்தைத் தழுவும் ; அவை வெந்தன
போகக் கண்டு புலம்பும்; அப்புன்மையாள்
மோகத்துக்கு ஓர் முடிவும் உண்டாங்கொலோ ?

பொ :—கரியமேகத்தைக் கண்டு இராமபிரான் என்று கருதித் தன் மார்பில் அமைந்த நகில்களில் பொருந்துமாறு அதைத் தழுவு வாள்; அவளால் தழுவப் பெற்ற மேகங்கள், அவள் நகில்களின் வெப்பத்தால் வெந்து அழியக் கண்டு,(இராமனுக்குத் தீங்குநேர்ந்து விட்டதே யென்று கருதிப்) புலம்புவாள் ; அந்த இழிகுணமுடைய சூர்ப்பணகையின் மோகத்திற்கு ஒரு முடிவும் உண்டாகுமோ ?

கு :—நிற ஒப்புமையால் அஞ்சனமேகத்தை இராமன் என எண்ணித் தழுவினள். அஞ்சனம் - மை ; கருமை. கொங்கையின் ஆகத்தழுவும் என இயைத்துக் கொங்கையின் கண் படும்படி தழுவும் எனப் பொருள் கூறலுமாம். மேகம் அவள் வெப்பத்தால் வெந்தழியக் கண்டவள் இராமனுக்குத் தீங்கு நேர்ந்த தாக எண்ணினளாதலின் புலம்பலானள். புன்மையாள் - இழி குணமுடையவள். இந்நிகழ்ச்சிகள் யாவும் உயர்ந்தோர்பால் தோன்ருது, இழிகுணமுடையவர்பால் தோன்றும் பொருந்தாக் காம நிகழ்ச்சிகளே என்பார், ‘அப்புன்மையாள் மோகத்துக்கொர் முடிவு முண்டாங்கொலோ ?’ என்ருர். மோகம் என்றது மிக்க காமத்து மிடலே. நீர்கொண்ட மேகமும் வெந்து போகத்தக்க காம வெப்பம் சூர்ப்பணகையின் உடம்பிலிருந்தது என்பது இதனல் புலப் படுத்தியவாறு. மோகத்தால் அவள் செய்யும் செயலுக்கு முடி வில்லே என்றது, அச்செயல்கள் பல ; அவற்றை முழுதும் ஒழியாமற் கூறஇயலாது என்பதைத் தெரிவித்தவாறு. மோகத்தால் நிகழுஞ் செயலே மோகம் என்ருர். சூர்ப்பணகையின் மோகத்தால் நிகழ்ந்த செயலேச் சொல்லி முடித்து, அவள் காமமிக்க கழிபடர் கிளவிகளேச் சொல்லத் தொடங்குகின்ருராதலின் இங்ஙனம் கூறினர். (84)

கவிக்கூற்று

**2913.** ஊழி வெங்கன லுற்றன ளொத்துமவ்
வேழை யாவி யிறந்தில ளென்பரா
லாழி யானே யடைந்தனள் பின்னேயும்
வாழ லாமெனு மாசை மருந்தினே.

'ஊழி வெம் கனல் உற்றனள் ஒத்தும், அவ்
ஏழை ஆவி இறந்திலள்' என்பர் ஆல்;
'ஆழியானை அடைந்தனள் பின்னையும்
வாழலாம் எனும் ஆசை மருந்தினே.'

பொ :—ஊழி இறுதியில் உலகையழிக்கத் தோன்றும் கொடிய பெரிய தீயில் அகப்பட்டவளைப் போன்று, காமநோயால் வருந்தின ளாயினும், கடல்போன்ற நிறமுடைய இராமனைக் கொழுநனுக அடைந்து பின்னும் வாழலாம் என்கின்ற ஆசையாகிய மருந்தினுல், அறிவற்ற அச்சூர்ப்பணகை உயிர் நீங்காதிருந்தாள்.

கு :—இறப்பதற்குரிய நோயுற்றும் இறவாதிருந்தமைக்குக் காரணம் கூறியவாறு. ஒழுக்கத்திற் சிறந்த இராமன், தன்னை மணத்தலும் கூடும் என்று எண்ணுகின்ற அறியாமையுடைய ளாதலின், சூர்ப்பணகையை 'ஏழை' என்ற சொல்லால் குறித்தார். ஏழை - அறிவில்லாதவள். ஆல் அசைநிலை. ஆழி - கடல். இராமன் கடல் போன்ற நிறமுடையவனுதலின் ஆழியான் எனப்பட்டான்! அருளாகிய கடலையுடையவன் அல்லது அறமாகிய கடலையுடையவன் எனலுமாம். இனி முன்னைய நிலையை நினைந்து சக்கரப்படையுடையவன் என்றலும் ஒன்று. அடைந்தனளாய் வாழலாம் என முற்றெச்சமாக்கி முடிக்க. ஆசையாகிய மருந்து என உருவகமாக்குக. 'வாழலாம் எனும் ஆசை மருந்தின் அவ்வேழை ஆவி இறந்திலள்' என இயையும். (85)

சூர்ப்பணகையின் காமமிக்க கழிபடர்கிளவி 2914–2916

**2914.** வஞ்ச னைக்கொடு மாயை வளர்க்குமெ
னெஞ்சு புக்கென தாவத்தை நீக்கெனு
மஞ்ச னக்கிரி யேயரு ளாயெனு
நஞ்சு நக்கினள் போல நடுங்குவாள்.

'வஞ்சனைக் கொடு மாயை வளர்க்கும் என்
நெஞ்சு புக்கென தாவத்தை நீக்கு' எனும்;
'அஞ்சனக் கிரியே! அருளாய்' எனும்;
நஞ்சு நக்கினள் போல நடுங்குவாள்.

பொ :—நஞ்சினை யுண்டவளைப்போல விரகதாபத்தால் நடுங்கு கின்றவளாகிய சூர்ப்பணகை, 'வஞ்சனைக்கு இடமான கொடிய மாயைகளை வளர்க்கவல்ல எனது நெஞ்சில் புகுந்ததுபோலவே

என் விரகதாபத்தையும் நீக்குவாயாக' என்பாள், மைம்மலை போன்றவனே! அருள் செய்வாயாக என வேண்டுவாள்.

கு:—விரகதாபத்தால் சூர்ப்பணகை நடுங்கியது நஞ்சுண்டவழித்தோன்றும் நடுக்கம் போன்றது என்பது கருத்து. இது தற்குறிப்பேற்றம். 'நஞ்சினை நுகரென நடுங்குவாரினும் அஞ்சினன்' (2343) என்றார் முன்னும். வஞ்சனைமிக்க கொடிய மாயையைச் செய்பவள் என்று எனக்கு இரங்காமல் இருக்கின்றான் போலும் என்ற எண்ணத்தால், 'மாயை வளர்க்கும் என் நெஞ்சு புக்கென தாவத்தை நீக்கு' என்றாள். கொடிய மாயை வளர்ப்பவள் என்று புறக்கணியாது என்னெஞ்சில் புகுந்தாயன்றே? என் நெஞ்சில் புக உரிமைகொண்ட நீ என் நெஞ்சில் புகுந்தது போலவே என் விரகதாபத்தையும் நீக்குதல் நெறியாகும் என்பது அவள் கருத்து. வஞ்சனை நிறைந்த கொடியவள்; மாயைவல்லவள் என்று என்னை இகழ்வது உண்மையாயின் என்னெஞ்சில் புகாதிருத்தல் வேண்டும்; என் வஞ்சனையை யெண்ணாது நெஞ்சில் புகுந்தபோது என் ஆகத்துப் புல்லி விரகதாவத்தை நீக்குதலில் என்ன தவறு? என்றவாறு. தாவம் - விரகதாபம். அது வடசொல்லாதலின் இயல்பாயிற்று. இராமன், சூர்ப்பணகையின் நெஞ்சில் முன்னமே இருத்தலானும், நெஞ்சில் புகுந்த வழி அவள் விரகதாபத்தைப் போக்கமுடியாது ஆகலானும், 'என்னெஞ்சில் புக்கு எனது ஆவத்தை நீக்கு' என்று பிரித்துப் பொருள்கூறல் பொருந்தாமை காண்க. உருவெளித் தோற்றமாய் இராமனைக் கண்டவள்,—பின் அஞ்சனமேகத்தை ஐயன் எனத் தழுவினவள்,—பின் உண்மை உணர்ந்தவழித் தன் நெஞ்சில் மட்டும் அவன் நிலைத்திருப்பதை உணர்ந்து இவ்வாறு கூறலானாள் என்க. (86)

**2915.** காவி யோகய லோவெனுங் கண்ணிணைத்
தேவி யோதிரு மங்கையிற் செவ்வியாள்
பாவி யேனையும் பார்க்குங்கொ லோவெனு
மாவி யோயினு மாசையி னோய்விலாள்.

'காவியோ, கயலோ, எனும் கண் இணைத்
தேவியோ திருமங்கையின் செவ்வியாள்;
பாவியேனையும் பார்க்குங்கொலோ?' எனும்,
ஆவி ஓயினும், ஆசையின் ஓய்வு இலாள்.

பொ:—தன் உயிர் தேயினும் இராமன்மேல் கொண்ட ஆசையில் குறையாத சூர்ப்பணகை, (கருமையும் மலர்ச்சியும் உடைமையால்)

கருங்குவளை மலரோ? (பிறழ்ச்சியாலும் வடிவாலும்) கயல்மீனே என்று ஐயுறத்தக்க இருகண்களையுடைய மனைவியோ, திருமகளைக் காட்டிலும் அழகுடையவள்; ஆதலின், பாவியாகிய என்னையும் கண்ணெடுத்துப் பார்ப்பானோ? என்பாள்.

கு :—இராமன் அழகில் ஈடுபாடுடைய சூர்ப்பணகை, சீதையின் அழகிலும் ஈடுபாடுடையவள்போல அவள் கண்களையும் மேனி எழிலையும் புகழ்கின்றாள்; இராமன் தன்னை விரும்புதற்குத் தடையாயிருக்கின்றாளே என்ற பொறாமை எண்ணத்தால். பகைமையுடையவள், சீதை அழகைப் புகழ்தல் கூடுமோ எனின்? பகைவரும் தம் பகைமையை மறந்து புகழலாம்படி சீதையின் அழகு சிறப்புற்றிருந்தது என்பது புலப்படுத்தியவாறு. இராவணனும் தனக்குப் பகைவனாகவந்துள்ள இராமனழகில் ஈடுபாடுடையனாய், அவ் இராமனைக் கண்ட சீதையின் கண்ணுக்குத் தன்னுடைய தோற்றம் எத்தகைய எண்ணத்தை எழுப்பும் என்பதை விளக்குவானாய், "பொறையினா லுலகம் போலும், வேயெனத் தகைய தோளி இராகவன் மேனி நோக்கித் தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால், நாயெனத் தகுது மன்றே காமனும் நாமு மெல்லாம்" (யுத்த-கும்பகருணன் வதைப் : 30) எனத் தன்னை இழிவு படுத்தியும் இராமனழகை உயர்த்தியும் கூறுதலைப் பின்னர்க் காணலாம். சீதையின் அழகைக் கண்டு மகிழ்கின்ற இராமன் கண்ணுக்குத் தன் அழகு மகிழ்வூட்டாது என்ற கருத்தால், 'பாவியேனையும் பார்க்குங் கொலோ' என்கின்றாள். சீதையைத் தேவி என்றும் தன்னைப் பாவி என்றும் கூறியுள்ள பொருத்தம் நோக்கத்தகும். சீதையோடு இராமன் பன்னசாலைக்குச் சென்ற செயலே அவள் இராமன் மனைவி என்பதை யுணர்த்திற்று ஆகலின், சூர்ப்பணகை இங்குத் 'தேவி' எனத் தெளிந்து கூறினாள். 'பார்க்குங் கொலோ' என்புழிப் பார்த்தலாவது, தன்னை விரும்பிப் பார்த்தல். ஓகாரம் எதிர்மறை. இறுதியில் கூறிய அவள் எண்ணமே உண்மையாதல் பின்னிகழ்ச்சியால் காணலாம். ஓய்தல், உள்ளதனுணுக்கம்; தேய்தல். உயிரினும் நாணம் சிறந்திருத்தற்கு மாறாக இவட்கு உயிரினும் காமம் சிறந்திருந்தது என அவள் இழிவைப் புலப்படுத்தியவாறு. (87)

**2916.** மாண்ட கற்புடை யாண்மலர் மார்பக
மாண்டி ருக்குநல் லாண்மக ளென்னுமால்
வேண்ட கிற்பி னல்லாலவர் மெய்யிடைத்
தீண்ட கிற்பதன் றேதெறுங் காமமே.

'மாண்ட கற்பு உடையாள் மலர் மார்பகம்
ஆண்டு இருக்கும் நல்லாள் மகள்' என்னுமால்;
வேண்டகிற்பின் அல்லால் அவர் மெய்யிடைத்
தீண்டகிற்பது அன்றோ? தெறும் காமமே.

பொ:—மாட்சிமை வாய்ந்த கற்புடையவளாய் இராமனுடைய மலர்ந்த மார்பகத்தைத் தனக்கே யுரித்தாக ஆண்டுகொண்டிருக்கும் பேறுபெற்ற அந்நல்லவளே பெண்களுள் சிறந்த பெண்ணாவாள்; என்னை வெதுப்புங் காமம், மனத்தில் விருப்பங்கொண்டாலன்றி விருப்பங்கொள்ளாதாரின் உடம்பினிடத்துத் தீண்டுந்தன்மைய தன்றோ? என்பாள்.

கு:—மாண்ட - மாட்சிமையுடைய. மலர் மார்பகம் என்றது இராமனுடைய பரந்த மார்பகத்தை. தன் கண்முன் சீதை இராமனுடைய தோளைப் பற்றிக்கொண்டு பன்னசாலைக்குள் சென்ற காட்சியைக் கண்டாளாகலின், 'மலர்மார்பகம் ஆண்டிருக்கும் நல்லாள்' என்றாள் சூர்ப்பணகை. மார்பகத்தை ஆளுதலாவது, பிறர் யார்க்கும் பொதுவுடைமையாகாது சீதை தனக்கே தனியுரிமையாகக்கொள்ளுதல். இதனால், தான் கற்புடையளாதல் போலவே சீதை தன் கொழுநனையும் கற்புடையவனாகச் செய்துளாள் என்பது பெறப்படும். அழகிற் சிறந்தானைத் தன் கொழுநனாகப் பெற்றவளாதலின் சீதையை 'நல்லாள்' என்றும், அப்பேறு எப்பெண்டிர்க்கும் இல்லையாதலின் அவளையே 'மகள்' என்றும் சிறப்பித்தாள். 'நல்லாளே மகள்' என்பதில் ஏகாரம் தொகுத்தல். மாயையால் மாறுவேடம் பூண்டும் தான் பெறவியலாத பேற்றை, அவள் இயல்பாகவே பெற்றுள்ளாள் ஆதலின், தான் மகளல்லள் என்பதும் அவளே மகள் என்பதும் விளக்கியவாறு. இங்ஙனம் தன் பேறின்மையையும் சீதையின் பேறுண்மையையும் எண்ணியிருந்த அவள் உள்ளத்தில் துடும் என வேறுமோர் ஐயம் தோன்றிற்று; அஃதென்னையெனின்? தன்னை வெதுப்புகின்ற காமம் இராமனை ஏன் வெதுப்பவில்லை என்பது அது. அவ்வையத்தின் தெளிவாகவே பின்னிரண்டடிகள் அமைந்துள்ளன. மனத்தில் விருப்பங்கொண்டாரையன்றிக் காமம் வருத்தாது போலும். அதனாலன்றே என்னைத் தெறும் காமம் இராமனைத் தீண்டாதிருக்கின்றது? என்பது அவள் முடிபு. இதனால் காமத்தின் உண்மைத் தன்மையைச் சூர்ப்பணகை நன்கு விளக்கியுள்ளாள் என்பதறியலாம். காமுகர், சிந்தனைத் தொடர்பின்றி ஒன்று தொடங்கி ஒன்று பேசுவர் என்பதை இப்பாடலில் அமைத்துக் காட்டியவாறு. முன்னிரண்டடியில் சீதையைப் பற்றிப் பேசியவள், பின்னிரண்டடியில் காமத்தின் இயல்பு பற்றிப் பேசியவாறு காணலாம். (88)

### சூரியன் உதித்தல்

**2917.** ஆன்ற காத லஃதுற வெய்துழி
மூன்று லோகமு மூடு மரக்கரா
மேன்ற காரிரு ணீக்க விராகவன்
ரேன்றி னுனென வெய்யவன் ரேன்றினன்.

ஆன்ற காதல் அஃது உற எய்துழி,
மூன்று உலோகமும் மூடும் அரக்கராம்
ஏன்ற கார் இருள் நீக்க இராகவன்
தோன்றினன் என, வெய்யவன் தோன்றினன்.

பொ :—(சூர்ப்பணகை, அவ்வாறு) நிறைந்த காமநோயை மிகுதியாக எய்தியபோது, மூன்று உலகங்களிலும் நிறைந்துள்ள அரக்கர்களாகிய எதிர்ந்த கரிய இருளை நீக்க, இராமன் தோன்றியதுபோல, (மூன்று உலகங்களையும் மூடிக்கொண்டுள்ள கரிய இருளை நீக்க) சூரியன் உதித்தான்.

கு :—காதலஃது என்புழி அஃது பகுதிப்பொருள்விகுதி. ஆன்ற-நிறைந்த. ஏன்ற – எதிர்ந்த. அரக்கர் மூன்றுலோகமுமூடுதலாவது மூன்று உலகங்களிலும் நிறைந்திருத்தல். இருளுக்கு இயைக்கும்போது மூடுதல், மறைத்தலாகக் கொள்க. அரக்கராம் இருள் என்பது உருவகம். காரிருள் என்றது வெண்ணிலவு என்றாற்போல இனமில் அடைபெற்று வந்தது. இராமன் அரக்கரை அழிக்கக் கால்கொள்ளும் நாளும் அதுவேயாதலின், இருளை ஒழிக்கும் சூரியனுக்கு ஏற்ற உவமம் ஆயினன். சூர்ப்பணகை காமநோயினால் மிக்க துன்பம் எய்தும் நிலையில் சூரியன் உதித்தான் என்க. எங்கும் நிறைந்த கரிய அரக்கரை அழிக்கத் தோன்றிய இராமன் போல, எங்கும் நிறைந்த காரிருளை ஒழிக்கச் சூரியன் தோன்றினன் என்ற உவமை, கதைத்தொடர்புடையதாய்ச் சிறந்து விளங்கல் காணலாம். வெய்யவன் - வெப்பமுடைய சூரியன். (89)

### சூர்ப்பணகையின் எண்ணம் 2918—2920

**2918.** விடியல் காண்டலி னீண்டுதன்
★ னுயிர்கண்ட வெய்யாள்
படியி லாண்மருங் குள்ளள
வெனையவன் பாரான்

கடிதி னோடினெ னெடுத்தொல்லைக்
கரந்தவள் காதல்
வடிவி னானுடன் வாழ்வதே
மதியென மதியா.

விடியல் காண்டலின், ஈண்டு தன் உயிர் கண்ட வெய்யாள்,
'படி இலாள் மருங்கு உள்ளளவு, எனை அவன் பாரான்;
கடிதின் ஓடினென் எடுத்து, ஒல்லைக் கரந்து, அவள் காதல்
வடிவில் நான் உடன் வாழ்வதே மதி' என மதியா.

பொ :—பொழுது விடிந்ததைக் கண்டதால் உடம்பில் பொருந்திய தன் உயிர் தங்கப்பெற்றவளாய், விருப்பமிக்கவளாகிய சூர்ப்பணகை, ஒப்பில்லாத அந்த அழகி தன் பக்கத்தில் இருக்கும் வரையில் என்னை அவன் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டான்; ஆதலால், விரைந்து ஓடிச்சென்று அவளை எடுத்து விரைவில் மறைத்து வைத்துவிட்டு, அவளுடைய விரும்பத்தக்க வடிவத்தில் நான் இராமனிடம் சென்று அவனுடன் வாழ்வதே அறிவுடைமையாகும் என எண்ணி.

கு :—அடுத்த செய்யுளில் முடியும்; குளகம். காமநோய் மிகுதற்குக் காரணமான இரவு கழிந்து விடியல் வந்ததைக் கண்டவுடன் சூர்ப்பணகை காம நோய் குறையப்பெற்றாள் என்பார் 'உயிர் கண்ட' என்றார். இன்னும் சிறிதுபோழ்து விடியாதிருப்பின் அவள் உயிர் தேய்ந்து ஒய்ந்திருக்கும் என்பது கருத்து. ஈண்டுதல்-பொருந்துதல். சேய்மையில் கிழக்கு வெளுத்ததைக் கண்டவுடன் இங்குத் தன் உயிர் பிழைத்திருக்கக் கண்டவள் எனச் சுட்டாக்கி உரைத்தலுமாம். வெய்யாள் - காமவிருப்பமுடையவள் 'வெம்மை வேண்டல்' (தொல் -சொல். 334) என்பது காண்க. கொடியவள் எனலும் ஆம். படி—உவமை. படியிலாள் என்றது சீதையை; தனக்குவமையில்லாதவள் என்றவாறு. "செப்புங் காலைச் செங்கம லத்தோன் முதல் யாரும், எப்பெண் பாலும் கொண்டுவ மிப்போருவமிக்கும், அப்பெண் தானே யாயின போதிங் கயல்வேறோர், ஒப்பெங் கேகொண் டெவ்வகை நாடி யுரைசெய்வேம்" (587) என்று மிதிலைக் காட்சியில் கூறியுள்ளதும் காண்க. சூர்ப்பணகை மிக முயன்று திருமகள் அருளால் பெற்ற மாறுவேடமும் சீதையின் அழகிற்குச் சிறிதும் ஈடாகாமையை நேரிற் கண்டு உணர்ந்தவளாதலின் 'படியிலாள் மருங்குள்ள(அ)ளவு எனை அவன் பாரான்' எனத் தெளிந்து கூறினள். மிகப் பேரழகுடையவள் பக்கத்தில் இருக்கும்போது அவளினும் குறைந்த அழகுடைய என்னை விரும்பிப்பார்க்கமாட்டான் என்றவாறு. பாரான் என்றது, விரும்பான் என்னுங் கருத்தினது.

விரும்பிய வேடத்தையெடுத்துக்கொள்ள வல்லவள் ஆதலின், சீதையை மறைத்துவிட்டு, அவள் வடிவத்தைத் தான் மேற்கொண்டு சூர்ப்பணகை, இராமனோடு சீதையாகவே மறைந்து வாழலாம் என்று முடிவு செய்தாள். சீதையை எடுத்தலும் அவளை மறைத்தலும் பிறர் அறியாவாறு மிக விரைந்து நடைபெறவேண்டும் என்பது தோன்ற' 'கடிதினேடினென்' எனவும், 'ஒல்லைக்கரந்து' எனவும் ஈரிடத்தில் விரைவுணர்த்தும் சொல்லைப் பெய்தாள். அவள் வடிவில், காதல் வடிவில் என்று இயைக்க. இராமன் காதலிக்கும் வடிவு என்பாள் 'காதல் வடிவில்' என்றாள். நீள நினைந்து அரிதிற் கண்ட முடிவாதலின், 'வாழ்வதே மதி' என்று எண்ணினாள். மதி - அறிவு. சூழ்ச்சி எனலுமாம். மதித்தல் - கருதுதல். (90)

**2919.** வந்து நோக்கினள் வள்ளல்போ
யொருமணித் தடத்திற்
சந்தி நோக்கின னிருந்தது
கண்டன டம்பி
யிந்து நோக்கிய நுதலியைக்
காத்தய லிருண்ட
கந்த நோக்கிய சோலையி
லிருந்தது காணாள்.

வந்து நோக்கினள்; வள்ளல் போய் ஒரு மணித் தடத்தில்
சந்தி நோக்கினன் இருந்தது கண்டனள்; தம்பி
இந்து நோக்கிய நுதலியைக் காத்து, அயல் இருண்ட
கந்தம் நோக்கிய சோலையில் இருந்தது காணாள்.

பொ :—(சூர்ப்பணகை) வந்து அவர்கள் தங்கியுள்ள பன்னசாலையைப் பார்த்தாள்; அப்பொழுது இராமன் அங்கு நின்றும் போய்க் கோதாவரி நதியின் ஒரு தெளிந்த நீர்த்துறையில் (காலையில் செய்யத்தக்க) சந்தியா வந்தனத்தில் கருத்தைச் செலுத்தினனாய் இருந்ததைக் கண்டாள்; ஆயின், அவன் தம்பியாகிய இலக்குவன், பிறைச்சந்திரனைப் போன்ற நெற்றியை யுடைய சீதையைக் காத்துக்கொண்டு அருகே இருண்ட மணம் வீசுகின்ற சோலையில் இருந்ததைக் கண்டிலள்.

கு :—இராமனுக்குத் தம்பி ஒருவன் இங்கு உளன் என்பதை அறியாதவளாதலின் சூர்ப்பணகை அவனைப் பற்றி நினைக்கவே

வழியில்லை என்க. பன்னசாலைக்கு வந்து பார்த்த சூர்ப்பணகை, அங்கு இராமனைக்காணுமையால் சுற்றும் முற்றும் பார்த்தாளாக, அவன் சேய்மையில் ஆற்றங்கரையில் அமர்ந்து வழிபாடுசெய்து கொண்டிருந்ததைக் கண்டாள் என்பது கருத்து. மணித்தடம் என்றது, கோதாவரிநதித்துறையை. மணி - தெளிவு ; அழகுமாம். தடம் - துறை. சந்தி என்ற காலப்பெயர், அக்காலத்துச் செய்யும் வழிபாட்டையுணர்த்தியது. இரவும் பகலும் சந்திக்கின்ற காலையும் மாலையும் சந்தியெனப்படும்; இங்குக் காலைநேரத்து வழிபாட்டை யுணர்த்தியது. நோக்கினன் என்றது கருத்தால் கடவுளை நோக்கினுன் என்பதை உணர்த்திற்று. இது நோக்கல் நோக்கம். இராமன் பன்னசாலையிலின்றி மணித்தடத்தில் இருந்ததும், அங்கும் அவன் சந்தி நோக்கியிருந்ததும் சூர்ப்பணகையின் கருத்திற்குத் துணையாய் ஊக்கம் தந்தன என்க. அவள் நெருநல் கண்டது இராமனையும் சீதையுமே யாதலின் வேறும் ஒருவன் இருப்பான் என்ற எண்ண இடமில்லாமையாலும், இலக்குவன் இருந்த சோலை இருண்டிருந்தமையால் தற்செயலாக அவனைக் காணவும் இயலாமை யாலும் அவனிருந்ததைச் சூர்ப்பணகை காணுளாயினள் என்க. இந்து - சந்திரன் ; இங்குப் பிறைமதியை யுணர்த்திற்று; நுதலுக்கு உவமையாதற்கேற்றது அதுவே யாகலின். இந்து நோக்கிய என்புழி 'நோக்கிய' உவமையுருபு. தனக்கு அந்நெறியின் அழகு இல்லாமையால் சந்திரனும் விரும்பி நோக்குதற்குக் காரணமான நுதல் எனலும் ஆம். இருண்டசோலை; கந்தம் நோக்கிய சோலை என்க. (91)

2920. தனியி ருந்தனள் சமைந்ததென்
சிந்தனை தாழ்வுற்
றினியி ருந்தெனக் கெண்ணுவ
தில்லென வெண்ணுத்
துனியி ருந்தவன் மனத்தின
டோகையைத் தொடர்ந்தாள்
கனியி ரும்பொழில் காத்தய
லிருந்தவன் கண்டான்.

'தனி இருந்தனள்; சமைந்தது என் சிந்தனை ; தாழ்வுற்று இனி இருந்து எனக்கு எண்ணுவதுஇல்' என, எண்ணுத் துனி இருந்த வல் மனத்தினள் தோகையைத் தொடர்ந்தாள்; கனி இரும் பொழில், காத்து அயல் இருந்தவன் கண்டான்.

பொ :—(ஆதலின்) ‘சீதை தனியாக இருந்தாள்; என் சிந்தனை நிறைவேறிற்று; இனிக் காலம் தாழ்த்தி இருந்து ஆலோசிக்க வேண்டுவது எனக்கு இல்லை’ என்று எண்ணி, வெறுப்புக்கொண்ட வலிய மனத்தினையுடைய சூர்ப்பணகை மயில்போன்ற சீதையைப் பற்ற நெருங்கினாள்; (அவள் செயலை) பழங்கள் நிறைந்த பெரிய சோலையில் காவல் செய்துகொண்டு அருகில் இருந்த இலக்குவன் கண்டான்.

கு :—இலக்குவன் இருந்ததைக் காணாதவளாதலின் ‘தனியிருந் தனள்’ என்றாள். சமைந்தது என இறந்த காலத்தால் கூறினாள், துணிவு பற்றி. சிந்தனையாவது சீதையை யெடுத்துச்சென்று மறைத்துவைத்தல்வேண்டுமென்பது. இதனைக் ‘கடிதின் ஓடினெ னெடுத்தொல்லைக் கரந்து’ (2918) என முன் கூறியதால் அறியலாம். தாழ்வுற்று-காலம் தாழ்த்து. ‘இனித் தாழ்வுற்றிருந்து எண்ணுவது எனக்கு இல்’ எனக் கூட்டுக. துனி - வெறுப்பு; தன்னைக் காட் டிலும் அழகுடையளாயிருந்து இராமன் காதலுக்குத் தடையாயிருக் கின்றவள் என்றமையால் உண்டாயது. “படியிலாள் மருங்குள்ளள வெனையவன் பாரான்” (2918) என முன் கூறியதும் நினைக்க. தோகை - மயில். துனியிருந்த வன்மனத்தவள் தொடர்ந்தால் ஆற்றாது அஞ்சத்தக்கமென்மையள் சீதை என்பது தோன்றத் ‘தோகை’ என ஆகுபெயரால் கூறினார். தன்னை அவள் காணா ளாயினும் அவளைத் தான் கண்டான்; பொழிலின் அமைப்பு அத்தகையதாதலின் என்க. (92)

## இலக்குவன் சூர்ப்பணகையின் உறுப்புக்களை அறுத்தல் 2921-2922

**2921.** நில்ல டீஇயெனக் கடுகினன்
பெண்ணென நினைந்தான்
வில்லெ டாதவள் வயங்கெரி
யாமென விரிந்த
சில்வ லோதியைச் செங்கையிற்
றிருகுறப் பற்றி
யொல்லை யீர்த்துதைத் தொளிகிளர்
சுற்றுவா ளுருவி.

‘நில் அடீஇ’ எனக் கடுகினன், பெண் என நினைந்தான்;
வில் எடாது, அவள் வயங்கு எரி ஆம் என விரிந்த
சில் வல் ஓதியைச் செங்கையில் திருகுறப் பற்றி,
ஒல்லை ஈர்த்து, உதைத்து, ஒளி கிளர் சுற்று வாள் உருவி.

பொ :—(அவள் கொடுஞ் செயலைக் கண்ட இலக்குவன்,) அடீ! நில் என்று உரப்பிக்கொண்டு விரைந்து வந்து (அத்தீச்செயல் செய்பவள்) பெண்ணென்று அருள் உள்ளத்தால் நினைந்தவனாய், (அவளைக் கொல்லாது திருத்துங் கருத்தினனாதலின்) வில்லை எடுக்காமல், விளக்கமுடைய நெருப்பு என்னுமாறு சிவந்து விரிந்த சில வாகிய வலிய கூந்தலைத் தன் சிவந்த கையில் முறுக்கிப் பிடித்து விரைய இழுத்து, உதைத்துப் பின் ஒளிவிளங்கும் உடைவாளை உருவி.

கு :—அடுத்த செய்யுளில் முடியும்; குளகம். கொல்லவேண்டு மென்று கடுகினவன் பெண்ணென நினைந்தமையால் அது செய்ய, வில்லை எடுக்காமல் உடைவாளை யெடுத்தான் என்க. பெண்கொலை பெரும்பாவமாதலின் அது செய்திலன். இராமனும் தாடகையைக் கண்டவுடன், "பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந் தான்" (395) என முன்னர்க் கூறப்பட்டிருத்தல் காண்க. இன்று சூர்ப்பணகை தன் இயல்பான அரக்கி வடிவில் வந்தாள் ஆதலின் அவள் செம்மயிர்க் குழலுக்கு உவமையாக 'வயங்கெரி' கூறப் பட்டது. வயங்கெரி–விளக்கமமைந்த நெருப்பு. சேர்த்து முடிக்காத கூந்தல் என்பார், 'விரிந்த' என்றும், சிலவாய் வலியவாய் இருந்த ஓதி என்பார் 'சில்வலோதி' என்றும் கூறினர். அவள் வலிமை அவள் கூந்தலிலும் காணப்பட்டது என்றவாறு. திருகுறப்பற்றுத லாவது, நழுவி விடாதபடி கூந்தலை முறுக்கிப் பிடித்தல். சுற்று என்பது உடையை யுணர்த்துஞ்சொல்லாதலு முண்டாதலின், உடைவாளைச் 'சுற்றுவாள்' என்றார். உருவுதல் - உறையிலிருந்து எடுத்தல். (93)

2922. ஊக்கித் தாங்கிவிண் படர்வெனென்
றுருத்தெழு வாளை
நூக்கி நொய்தினின் வெய்திழை
யேலென நுவலா
மூக்குங் காதும்வெம் முரண்முலைக்
கண்களு முறையாற்
போக்கிப் போக்கிய சினத்தொடும்
புரிகுழல் விட்டான்.

ஊக்கித் தாங்கி, 'விண் படர்வென்' என்று உருத்து எழுவாளை நூக்கி, நொய்தினின், 'வெய்து இழையேல்' என நுவலா, மூக்கும், காதும், வெம் முரண் முலைக் கண்களும் முறையால் போக்கிப் போக்கிய சினத்தொடும், புரி குழல் விட்டான்.

பொ :—'முயன்று இவனை யேந்திக் கொண்டு விண்வழிச் செல்வேன்' என்று கோபித்து எழுகின்ற சூர்ப்பணகையை எளிதாகக் கீழே தள்ளிவிட்டுக் 'கொடுமை செய்யாதே' என அவளுக்குப் புத்தி கூறிக்கொண்டே, அவள் மூக்கையும் காதையும் கொடிய வலிய முலைக்காம்புகளையும் ஒன்றன்பின் ஒன்றாக அறுத்துப் பின் தணிந்த கோபமுடையவனாய் முறுக்கிப் பிடித்த அவள் கூந்தலை விட்டான்.

கு:—ஊக்குதல் - முயலுதல். அரக்கியாகிய சூர்ப்பணகையே 'ஊக்கித் தாங்கி' என்று எண்ணுதற்கேற்றவாறு இலக்குவன் பேராற்றலும் திண்மையும் உடையனாக இருந்தான் என்பது இதனால் புலனாம். இலக்குவனும் இராமனைப் போன்று பேரழகுடையனாக இருத்தலின் அவனுக்கு ஊறு செய்ய நினையாது தாங்கி விண்படர எண்ணினாள் காதலுள்ளத்தால். நொய்தினின் நூக்கி என்க. நொய்து - எளிமை; கனமின்மை. இலக்குவன் வலிமைக்குச் சூர்ப்பணகையைத் தள்ளுதல் எளிதாக இருந்தது என அவன் ஆற்றலைப் புலப்படுத்தியவாறு. 'வெய்திழையேல்' என்பது தண்டிக்குங்கால் கூறிய புத்திமதி. முறையால் என்றது ஒன்றன்பின் ஒன்றாக என்னும் கருத்தினது. சீதையை எடுத்துச் செல்ல முயன்ற சூர்ப்பணகையின் குற்றத்திற்குத் தண்டனை கொலையேயாயினும், பெண் என்ற காரணத்தால் அதைச் செய்யாது, அவள் உறுப்புக்களைக் குறைத்தது அவள் வாழ்நாள்வரையும் அவ்வுறுப்புக் குறைவால் நாணமுற்றுத் தன் பிழைக்கு வருந்தித் திருந்துவாள் என்ற கருத்தால் ஆகும். போக்கிய சினத்தொடும் என்றது சினம் தணிந்து என்றவாறு. "சென்று சேக்கல்லாப் புள்ள" (அகநா-42) என்பதுபோல வந்தது. புரிகுழல் இலக்குவன் கையில் முறுக்கிப் பிடித்த கூந்தல். (94)

### உறுப்பறுப்புண்ட சூர்ப்பணகையின் நிலை 2923–2925

**2923.** அக்க ணத்தவள் வாய்திறந் தரற்றிய வமலை
திக்க னைத்தினுஞ் சென்றது தேவர்தஞ் செவியும்
புக்க துற்றது புகல்வதென் மூக்கெனும் புழையூ
டுக்க சோரியி னீரமுற் றுருகிய துலகம்.

அக் கணத்து அவள் வாய் திறந்து அரற்றிய அமலை
திக்கு அனைத்தினும் சென்றது ; தேவர்தம் செவியும்
புக்கது ; உற்றது புகல்வது என் ? மூக்கு எனும் புழையூடு
உக்க சோரியின் ஈரம் உற்று, உருகியது உலகம்.

பொ :—அந்தக்கணத்தில் துன்பத்தால் அவள் வாயைத் திறந்து கொண்டு கதறிய ஓசை, எல்லாத் திக்குகளினும் சென்று பரவிற்று; அதற்குமேலும் விண்ணுலகத்துள்ள தேவர்களின் செவியிலும் சென்று புகுந்தது; என்றால், அவளுக்கு நேர்ந்த துன்பத்தைப் பற்றிச் சொல்லவேண்டுவது யாதுளது? அவள் மூக்கு என்கின்ற துளையின் வழியாகப் பெருகின இரத்தத்தால் நிலவுலகமே ஈரம் உற்றுக் கரைந்தது.

கு :—அமலை - ஓசை, திக்கனைத்தினும் என்றதால் எட்டுத் திசையும், தேவர்தம் செவியும் புக்கது என்றதால் விண்ணும், ஆக ஒன்பது திசைகளில் அவள் அரற்றிய ஓசை பரவியது என்பதும், எஞ்சியுள்ள கீழ்ப்பகுதியாகிய தரை அவள் மூக்குச் சொரிந்த இரத்தத்தால் உருகியது என்பதும் கூறிப் பத்துத் திசையும் அவள் துன்பத்தை அறிந்தமை புலப்படுத்தியவாறு. தேவர்தம் செவியும் என்புழி உம்மை, இறந்தது தழீஇயதோடு உயர்வு சிறப்பாகவும் நின்றது. உற்றது என்றது, சூர்ப்பணகையுற்ற துன்பத்தை. திக்கெட்டினையும் விண்ணையும் எட்டும் அவள் அரற்று ஒலியால் அவள் துன்பமிகுதியுணரப்படுதலின் 'உற்றது புகல்வதென்'' என்றார். உய்த்துணர்ச்சியால் பெறப்படுவதொன்றை வெளிப்படையாகச் சொல்லால் சொல்வது மிகையாம் என்பது கருத்து. புழை - துளை. மூக்கு அறுபட்டுவிட்டதாகலின் உள்துளையே மூக்காய் நின்றது என்பது தோன்ற, 'மூக்கெனும் புழை' என்றார். சோரி- இரத்தம். மண், நீரால் கரைவது இயல்பாகலின் நீர்ப்பொருளாகிய இரத்தத்தின் ஈரத்தால் உலகம் உருகியது என்றார். உருகுதல் ஈண்டுக் கரைந்துபோதல். (95)

**2924.** கொலைதுமித்துயர் கொடுங்கதிர்
வாளினக் கொடியாண்
முலைதுமித்துயர் மூக்கினை
நீக்கிய முறைமை
மலைதுமித்தென விராவணன்
மணியுடை மகுடத்
தலைதுமித்தற்கு நாட்கொண்ட
தொத்ததோர் தன்மை.

கொலை துமித்து உயர் கொடுங் கதிர் வாளின் அக் கொடியாள்
முலை துமித்து, உயர் மூக்கினை நீக்கிய முறைமை,
மலை துமித்தென, இராவணன் மணி உடை மகுடத்
தலை துமித்தற்கு நாள் கொண்டது, ஒத்தது ஓர் தன்மை.

பொ :—கொலை நிகழும்படி பகைவரை வெட்டி வெற்றியால் உயர்ந்த கொடிய ஒளிவாய்ந்த வாளினால், அந்தக் கொடிய சூர்ப்பணகையின் நகில்களை அறுத்து, உயர்ந்த மூக்கினையும் அறுத்த தன்மை, மலைச் சிகரங்களைத் துணித்தாற்போல், இராவணனுடைய மணிகள் பதித்த மகுடமணிந்த தலைகளைத் துணிப்பதற்கு நாட் கொண்டதோர் தன்மையை யொத்தது.

கு :—துமித்தல் - துணித்தல்; அறுத்தல். வாளுக்கு அடை. இனி துமித்து என்பதற்கு ஒழித்து என்று பொருள் கொண்டு சூர்ப்பணகையைக் கொலை செய்யாமல் ஒழித்து எனக் கூறலுமாம். நாட்கொள்ளுதல் என்பது குறித்த நல்ல நாளில் ஒரு செயலை முழுதும் செய்ய இயலாத நிலை ஏற்பட்டபோது அச் செயலினைத் தொடங்கிமட்டும் விடுவது. வாணாட்கோள் என்று புறத்திணையில் வருவதும் காண்க. இராம இலக்குவர் குறிக்கோள் இராவணனைக் கொல்லுதலே ஆம். அச்செயல் உடனே முடியாத நிலையில் அவன் தங்கையின் மூக்கு முதலிய உறுப்புகளை அறுத்து நாட்கொண்டது போன்றிருந்தது என்க. தற்குறிப்பேற்ற வணி. மேலும், சூர்ப்பணகையின் மூக்கறுகையே இராவணன் தலை துணிதற்குக் காரணமாயினமையும் காண்க. மலை என்றது, ஆகுபெயரால் மலைச் சிகரங்களை யுணர்த்தியது. இராவணன் தலைகளின் பெருமை தோன்ற உவமையமைந்துள்ளது. முறைமை, நாட்கொண்ட தோர் தன்மை ஒத்தது என்க. (96)

**2925.** அதிர மாநிலத் தடிபதைத்
தரற்றிய வரக்கி
கதிர்கொள் காலவேற் கரன்முத
னிருதர்வெங் கதப்போ
ரெதிரி லாதவ ரிறுதியி
னிமித்தமா வெழுந்தாண்
டுதிர மாரிபெய் கார்நிற
மேகமொத் துயர்ந்தாள்.

அதிர, மா நிலத்து, அடி பதைத்து அரற்றிய அரக்கி, கதிர் கொள் கால வேல் கரன் முதல் நிருதர், வெம் கதப் போர் எதிர் இலாதவர் இறுதியின் நிமித்தமா எழுந்து, ஆண்டு, உதிர மாரி பெய் கார் நிற மேகம் ஒத்து உயர்ந்தாள்.

பொ :—அதிர்ச்சியுண்டாகுமாறு பெரிய நிலத்தில் கிடந்து (நோய் பொறுக்காமல்) கால்களை உதறிக்கொண்டு வாய்திறந்து அழுத அரக்கியாகிய சூர்ப்பணகை, ஒளியுடையதும் பகைவர்க்கு இறுதி விளைப்பதில் காலனை போன்றதுமாகிய வேலினைத்தாங்கிய கரன் முதலாகிய, கொடிய கோபத்தோடு செய்யும் போரில் நிக ரற்றவர்களாகிய அரக்கரின் அழிவிற்குத் துன்னிமித்தமாக எழுந்து அங்கு இரத்தமாரி பெய்கின்ற கருநிறமேகத்தைப்போன்று எழுந்து உயர்ந்து தோன்றினாள்.

கு :—இலக்குவனால் தள்ளப்பட்டு உறுப்பு அறுப்புண்ட நிலையில் கால்களை உதைத்துக்கொண்டு சூர்ப்பணகை அரற்றுங்கால் அவள் அடியின் துடிப்பால் மாநிலமும் அதிர்ந்தது என்க. கரிய மேகம் உதிரமாரி பெய்வது துன்னிமித்தமாகும். சூர்ப்பணகையின் கரிய உடம்பு மேகத்திற்கும், உறுப்பு அறுப்புண்டு சொரியும் குருதி, உதிர மாரிக்கும் உவமை. இது தற்குறிப்பேற்றவுவமை. எதிரிலாதவ ராகிய நிருதர் என்க. எதிரிலாதவராகிய கரன் முதல் நிருதர் என்று இயைப்பினுமாம். கதப்போர்–கோபத்தோடு செய்யும் போர். சூர்ப்பணகை புறப்பட்டுச் சென்று கரன் முதலான அரக்கரை அழைத்துவந்து இராமனோடு போர் புரிவித்து அழி வெய்தச் செய்யப் போகின்றாளாதலின், எதிரிலாதவரிறுதியின் நிமித்தமாய் எழுந்ததாகக்கூறினார். தாடகை இறந்து வீழ்ந்ததைக் குறிக்கும்போது, “தாடகை, தலைகடோறும், முடியுடையரக்கற் கந்நாள் முந்தியுற்பாத மாகப், படியிடையற்று வீழ்ந்த வெற்றியம் பதாகையொத்தாள்” (415) எனக் கூறியுள்ளதும் காண்க. (97)

### சூர்ப்பணகையின் துன்பநிலை 2926-2928

2926. உயரும் விண்ணிடை மண்ணிடை
விழுங்கிடந் துழைக்கு
மயருங் கைகுலைத் தலமரு
மாருயிர் சோரும்
பெயரும் பெண்பிறந் தேன்பட்ட
பிழையெனப் பிதற்றுந்
துயரு மஞ்சிமுன் றொடர்ந்திலாத்
தொல்குடிப் பிறந்தாள்.

உயரும் விண்ணிடை; மண்ணிடை
விழும்; கிடந்து உழைக்கும்;
அயரும்; கை குலேத்து அலமரும்;
ஆர் உயிர் சோரும்;
பெயரும்; 'பெண் பிறந்தேன் பட்ட
பிழை' எனப் பிதற்றும்;
துயரும் அஞ்சி முன் தொடர்ந்திலாத்
தொல் குடிப் பிறந்தாள்.

பொ :—துயரந்தானும் பயந்து இதற்குமுன் ஒருபோதும் சேர்ந்தறியாத பழைய அரக்கர் குடியில் பிறந்தவளாகிய சூர்ப்பணகை, வானமளாவ எழுந்து உயர்ந்து நிற்பாள்; பின் சோர்ந்து தரையில் விழுவாள்; விழுந்து கிடந்தவாறே வருந்துவாள்; பின் தளர்ச்சியடைவாள்; (இத்துயரம் பொறுக்க முடியாது என்று) கைகளே அசைத்துக்காட்டி மனஞ்சுழலுவாள்; பின் அருமையான உயிர் சோர்ந்து மூச்சற்றுக்கிடப்பாள்; பிறகு தெளிந்து கிடக்கைவிட்டுப் பெயர்ந்து எழுவாள்; பெண்ணுகப் பிறந்த யான் பட்ட துன்பம் என்னே! என்னே! எனப் பன்முறை கூறுவாள்.

கு :—அரக்கர் குடியினர் துயரமே அறியார் என்பதை விளக்க, "துயரும் அஞ்சி முன் தொடர்ந்திலாத் தொல்குடி" எனச் சிறப்பித்தார். முன் என்றது காலமுன்; இதற்குமுன் ஒருபோதும் தொடர்ந்திலது என்றவாறு. இடமுன் ஆக்கி, துயரமும் அஞ்சித் தமக்கு முன் தொடர்ந்தறியாத தொல்குடி எனக் கூறலுமாம். தொடர்ந்திலா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் குடி என்ற செய்பொருட்பெயர் கொண்டு முடிந்தது. 'களிக்கின்ருரலால் கவல்கின்ரு ரொருவரைக் காணேன்' (சுந்தர—125) என அனுமன் நேரில்கண்டு கூறியவற்ருல் அரக்கர்பால் துயரம் தொடராமை அறியலாம். கைகுலேத்தல், ஆற்றேன் என்பதைக் 'கை அசைத்தலால்' காட்டியது. பீழை என்பது குறுகிப் 'பிழை' என நின்றது. பீழை - துன்பம். துயரம் தொடராத தொல்குடியில் பிறந்தவளாதலின், பெண் பிறந்தேன் பட்ட பீழை என்னே எனப் பிதற்றலானுள் என்க. துயருமஞ்சித்தொடராத குடியில் பிறந்தவளே, அச்சம் நீங்கி அத்துயரம் பெரிதாய்த் தொடரப் பெரிதும் வருந்தினளே என இரக்கம் தோன்றக் கூறியவாறு. (98)

**2927.** ஒற்று மூக்கினை யுலையுறு
தீயென வுயிர்க்கு
மெற்றுங் கையினை நிலத்தினி
லிணைத்தடங் கொங்கை
பற்றும் பார்க்குமெய் வெயர்க்குந்தன்
பருவலிக் காலாற்
சுற்று மோடும்போய்ச் சோரிநீர்
சொரிதரச் சோரும்.

ஒற்றும் மூக்கினை ; உலை உறு தீ என உயிர்க்கும் ; எற்றும் கையினை நிலத்தினில் ; இணைத் தடங் கொங்கை பற்றும் ; பார்க்கும் ; மெய் வெயர்க்கும் ; தன் பரு வலிக் காலால் சுற்றும் ஓடும் ; போய்ச் சோரி நீர் சொரிதரச் சோரும்.

பொ :—அறுபட்ட மூக்கினை ஆடையால் ஒற்றுவாள்; ஒற்றியும் குருதி நில்லாமை கண்டவுடன் உலைக் களத்து நெருப்புப்போல வெம்மையாகப் பெருமூச்சு விடுவாள் ; கோபத்தால் தரையைக் கைகளால் அறைவாள் ; இருபெரு நகில்களையும் கைகளால் பற்றுவாள் ; அவை அறுப்புண்ட நிலையைக் கண்களால் பார்ப்பாள் ; அந்த அவல நிலையை நினைந்து உடம்பு வியர்ப்பாள் ; பருத்த வலிய கால்களால் சுற்றிலும் ஓடுவாள் ; ஓரிடத்தில்போய் இரத்தநீர் பெருகாநிற்கச் சோர்ந்திருப்பாள்.

கு :—ஒற்றுதல், பெருகும் குருதியை நிறுத்தற் பொருட்டாம். வெம்மை மிகுதி புலப்படுத்த உலையுறு தீயைக் கூறினர், அதிலுள்ள நெருப்பு வெப்ப மிக்கதாகலின். கையினை நிலத்தினிலறைதல் உண்டு என்பது, 'நிலத்தறைந்தான் கைபிழையாதற்று' (குறள்-307) என்ற உவமையாலும் உணரலாம். மூக்கினையொற்றியும் குருதி பெருகுதல் குறையாமை கண்டு, தீயெனஉயிர்த்தாள் என்றும், கொங்கை குறைந்ததைப் பற்றிப் பார்த்தபோது மெய் வெயர்த்தாள் என்றும் கொள்க. அறுப்புண்ட புண்ணாலாய துயரினும் உறுப்பறையெனப்படும் நாணத்தாலாயதுயர் பெரிது என்பது விளக்கியவாறு. ஓடுதற்குரிய உறுப்பால் குறையில்லை என்பது தோன்றப் 'பருவலிக் காலால்' என்றார். வலிய காலிருந்தும் சோரிநீர் சொரிதலால் வலிமை குன்றினாள் என்பார், 'சோரும்' என்றார். 'போய்ச் சோரும்' என்க. சோர்தல் - தளர்ந்திருத்தல்; ஓடவியலாது ஓரிடத்துச் சோர்ந்திருந்தாள் என்றவாறு.
(99)

**2928.** ஊற்று மிக்கநீ ரருவியி
னொழுகிய குருதிச்
சேற்று வெள்ளத்துட் டிரிபவ
டேவரு மிரியக்
கூற்று முட்குந்தன் குலத்தினோர்
பெயரெலாங் கூறி
யாற்று கிற்கிலள் பற்பல
பன்னிநின் றழைத்தாள்.

ஊற்று மிக்க நீர் அருவியின் ஒழுகிய குருதிச்
சேற்று வெள்ளத்துள் திரிபவள், தேவரும் இரியக்
கூற்றும் உட்கும் தன் குலத்தினோர் பெயர் எலாம் கூறி,
ஆற்றுகிற்கிலள், பற்பல பன்னி நின்று, அழைத்தாள்.

பொ :—(மலையில்) ஊற்றுகள் மிக்கதாலாய நீர் அருவியைப் போலத் தன் உடம்பில் ஒழுகிய, குருதியாலாய சேற்றுடன் கூடிய வெள்ளத்துள் திரிகின்றவளாகிய சூர்ப்பணகை, விண்ணில் உள்ள தேவரும் அஞ்சி ஓடுமாறு, கூற்றுவனும் அஞ்சுகின்ற ஆற்றலை யுடைய தன் குலத்துப் பிறந்தோர்களின் பெயரை யெல்லாம் சொல்லித் துன்பத்திற்கு ஆற்றாதவளாய்ப் பலப்பல சொல்லி நின்று (அவர்களை) அழைத்தாள்.

கு :—சூர்ப்பணகையின் உடம்பிலிருந்து ஒழுகும் குருதிப்பெருக் கிற்கு உவமையாக வேண்டி, மலைமிசைப் பெய்த மழையாலாய அருவியைக்கூறாது, ஊற்று மிக்க நீரருவியையே கூறினார். மலை, மாரிக்கண் உண்டநீரைக் கோடைக்கண் உமிழ்தலுண்டு; அந் நீரருவியே ஊற்றுமிக்க நீரருவி எனப்பட்டது. உறுப்பற்ற வழி ஒழுகும் குருதிப் பெருக்கிற்கு ஊற்றுநீரருவி பொருந்திய உவமையாதல் காண்க. விண்ணுலகத்தில் சேய்மையிலுள்ள தேவர்களும் இரிய என்ற கருத்தை விளக்குதலின் தேவரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. கூற்றும் என்புழியும் உம்மை அப்பொருளதே; என்னை? பிற உயிரை உட்கச்செய்து தான் அஞ் சாது அவற்றைக் கவர்பவனாகிய கூற்றுவனும் என அவன் சிறப்பை விளக்குதலின் என்க. திரிபவள், ஆற்றுகிற்கிலளாய்க் குலத்தினோர் பெயரெலாங்கூறி, அழைத்தாள் என்று இயையும். பன்னுதல் - விரித்துக்கூறுதல். (100)

சூர்ப்பணகை தன் உறவினரை அழைத்தல் 2929–2941

2929. நிலையெடுத்து நெடுநிலத்து
★ நீயிருக்கத் தாபதர்கள்
சிலையெடுத்துத் திரியுமிது
சிறிதன்றோ தேவரெதிர்
தலையெடுத்து விழியாமைச்
சமைப்பதே தழலெடுத்தான்
மலையெடுத்த தனிமலையே
யிவைகாண வாராயோ.

நிலை எடுத்து, நெடு நிலத்து நீ இருக்கத் தாபதர்கள்
சிலை எடுத்துத் திரியும் இது சிறிது அன்றோ? தேவர் எதிர்
தலை எடுத்து விழியாமைச் சமைப்பதே? தழல் எடுத்தான்
மலை எடுத்த தனி மலையே! இவை காண வாராயோ?

பொ :—அனலைக் கையிலேந்திய சிவன் தங்கியுள்ள கயிலாய மலையைப் பெயர்த்தெடுத்த ஒப்பற்ற மலைபோன்றவனே! நெடிய உலகில் உயர்ந்த தலைமைநிலையை மேற்கொண்டு நீ இருக்கவும், தவவேடம் பூண்டவர்கள் வில்லையேந்திக்கொண்டு வீரராய்த் திரிவதே, நின்பெருமைக்குச் சிறுமை தருவதன்றோ? அதனோடு நில்லாமல் நமக்கு அஞ்சி வாழும் தேவர்க்கு எதிரில் தலைநிமிர்த்துப் பார்க்காதபடியும் அத்தாபதர்கள் என்னைப் பங்கப்படுத்துவதோ? இந்த என் இழிநிலையைக்காண வரமாட்டாயோ?

கு :—நிலை என்றது எவரினும் உயர்ந்த தலைமை நிலையை. எடுத்தல்—மேற்கொள்ளல். இராவணன் தலைமை தாங்கும் நாட்டில் வில்லேந்தி வீரராய்க் களித்துத் திரிபவர் உளராயின் அதுவே அவன் தலைமைக்குத் தகாததாய் இழிவு தலைத்தரும் என்பது கருத்து. தாபதர்கள் தனக்குச் செய்த தீமையைக் கூறுதற்குமுன், அவர்கள் வேடத்தால் தாபதர்களாய்ச் செயலால் வீரராய்த் திரிதலே இராவணனுக்கு இழிவைத் தரும் எனக் குற்றம் காட்டி, அது காரணமாகவே அவ் வில்வீரரைத் திரியாமல் செய்யலாம் என்பதுபடக் கூறினள்; இராவணனுக்குச் சினத்தை வளர்க்கவேண்டி. தழலெடுத்தான் – சிவபிரான். 'தாருகவனத்து முனிவர்கள் சிவபிரானோடு மாறுபட்டு அவரை அழிக்க என மந்திரசத்தியால் தழற் பிழம்பை அனுப்ப, அதனைச் சிவபிரான் இடக்கையில் தாங்கினர்' என்ற புராண வரலாற்றைக்கொண்டு கூறியது. தேவர்கள் அரக்கர்களுக்கு அஞ்சிவாழும் பகைவர் ஆதலின், அவர்கள் எதிரில் மூக்கற்ற தலையை நிமிர்த்து விழிப்பின் அவர்கள் எள்ளி நகைசெய்

வார்கள் என்ற கருத்தால், 'தேவரெதிர் தலையெடுத்து விழியாமைச் சமைப்பதே' என்றாள். சமைத்தல் - செய்தல்; மூக்கு முதலிய வற்றை அறுத்தல். மலையெடுத்தற்கு மலையினும் பெரிய வலிமை வேண்டுதலின் இராவணனை 'மலையெடுத்த தனிமலையே' என்று மலையாகக் கூறினாள். (101)

**2930.** புலிதானே புறத்தாகக்
குட்டிகோட் படாதென்ன
வொலியாழி யுலகுரைக்கு
முரைபொய்யோ வூழியினுஞ்
சலியாத மூவர்க்கும்
வானவர்க்குந் தானவர்க்கும்
வலியானே யான்பட்ட
வலிகாண வாராயோ.

"புலிதானே புறத்து ஆகக் குட்டி கோட்படாது" என்ன ஒலி ஆழி உலகு உரைக்கும் உரை பொய்யோ? ஊழியினும் சலியாத மூவர்க்கும், வானவர்க்கும், தானவர்க்கும், வலியானே! யான் பட்ட வலி காண வாராயோ?

பொ:—(நீயிருக்கவும் யான் உறுப்பு அறுப்புண்டேன் ஆதலின்) 'தாய்ப்புலி அண்மையிலின்றிப் புறத்தில் சென்றிருக்கவும் (அதன் வலிமை கருதி) அதன் குட்டி பிறவுயிர்களால் கொள்ளப்பட மாட்டாது' என்று ஒலிமிக்க கடல் சூழ்ந்த உலகத்தார் சொல்லும் பழமொழி பொய்யானதோ? ஊழிக்காலத்தும் நிலைகுலையாத வலிமையுடைய மும்மூர்த்திகட்கும், அவரைத் தொழும் தேவர்கட்கும், அவர்க்குப் பகையான அசுரர்கட்கும், மேம்பட்ட வலிமையுடைய வனே! யான்பட்ட வலியை (நோயை)க் காண வரமாட்டாயோ?

கு:—முதலடியில் கூறியது பழமொழி ஆதலின், 'உலகுரைக்கும் உரை' என்றார். புலி அண்மையிலுள்ளபோது அதன் குட்டி கோட் படாமை ஒரு சிறப்பன்று; உவமேயமாக வருவிக்கப்படுங் கருத்திலும், இராவணன் சூர்ப்பணகையின் அருகிலில்லாது சேய்மையி லுள்ளபோது, அவள் துன்புறுத்தப்பட்டமையே புலப்படுத்த வேண் டியிருத்தல் காண்க. 'புலி அண்மையில் இல்லாத வழியும் அதன் வலிமையும் சினமும் கருதி அதன் குட்டியைப் பிறவுயிர்கள்கொள்ள மாட்டா' என்பது கருத்து. "உறங்கு மாயினும் மன்னவன் தன் னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" (சீவக – 248)

என்பதும் இக்கருத்தினதே. இராவணன் மும்மூர்த்திகட்கும் மேம் பட்ட வலிமையுடையவனுதலின், அவன் அண்மையிலின்றிச் சேய் மையில் இருந்துழியும், அவன் தங்கை அவனுணையின் சிறப்பால் காக்கப்படவேண்டும் ; அங்ஙனமின்றி, எளிய மனிதரால் இப் பொழுது உறுப்பு அறுப்புண்டாளாதலின், உரைபொய்யோ? என்று வினவினுள். 'இராவணன் அண்மையிலின்றிப் புறத்தனுகவும் அவன் தங்கை சூர்ப்பணகை பிறரால் துன்புறுத்தப்படலாகாது' என்ற கருத்துப் பிறிது மொழிதல் அணிபற்றி வருவிக்கப்படும். 'குட்டியைத் தின்னலாமோ கோட்புலி புறத்ததாக' (சீவக-1134), 'புலிபுறங்காக்கும் குருளை போல' (புறநா-42:10) என்பன இங்கு ஒப்பு நோக்கத்தகும். (இப்புறப்பாட்டில், திரு. உ. வே. சாமி நாதைய்யர் குறிப்பில், 'புலிதானே புறங்காக்க' என்ற பாடம், இக் கம்பராமாயணச் செய்யுளிலிருப்பதாகக் குறிப்பிட்டுளது. அப்பாடம் கிடைத்த அச்சுப்புத்தகங்களிலும், ஏடுகளிலும் காணப்படவில்லை.) வலி இரண்டில் முன்னது வலிமை; பின்னது நோய். வலியான் வலி காணவருதல் பொருத்தமே என்றவாறு. (102)

**2931.** ஆர்த்தானைக் கரசுந்தி
யமரர்கணத் தொடுமடர்ந்த
போர்த்தானை யிந்திரனைப்
பொருதவனைப் போர்தொலைத்து
வேர்த்தானை யுயிர்கொண்டு
மீண்டானை வெரிந்பண்டு
பார்த்தானே யான்பட்ட
பழிவந்து பாராயோ.

ஆர்த்து, ஆனைக்கு அரசு உந்தி,
அமரர் கணத்தொடும் அடர்ந்த
போர்த் தானை இந்திரனைப்
பொருது, அவனைப் போர் தொலைத்து,
வேர்த்தானை, உயிர் கொண்டு
மீண்டானை, வெரிந் பண்டு
பார்த்தானே ! யான் பட்ட
பழி வந்து பாராயோ ?

பொ :—ஆரவாரித்துக்கொண்டு, யானைகட்கெல்லாம் அரசாகிய ஐராவதம் என்னும் யானையை ஏறி நடத்திக்கொண்டு, தேவர்கள்

கூட்டத்துடனே சேர்ந்து வந்து நெருங்கிய, போர் செய்யவல்ல சேனையையுடைய இந்திரனை எதிர்த்துப் போர்செய்து, அவனைப் போரில் தோல்வியுறச்செய்து, அச்சத்தால் உடம்புவியர்த்து, உயிரைக்காத்துக்கொண்டு திரும்பிச் சென்ற அவ்விந்திரனை, முன்பு முதுகு கண்டவனே! யான் பட்ட பழியை வந்து பார்க்க மாட்டாயோ?

கு:—ஆர்த்து, உந்தி, அடர்ந்த, இந்திரனைப் பொருது அவனைப் போர் தொலைத்து, வெரிந் பார்த்தானே! என்க. இந்திரன் பட்ட பழியைப் பார்த்து மகிழ்ந்த நீ, யான்பட்ட பழியைப் பார்க்க வேண்டாவோ? என்றவாறு. ஐராவதம், திருப்பாற் கடலில் பிறந்த, நான்கு கொம்புகளையுடைய வெண்ணிற யானை. அத்தகைய யானையிருந்தும் அமரர்கணமிருந்தும், போரில் வல்ல சேனையிருந்தும் இந்திரன் நின்னாற்றலுக்கு எதிர்நிற்க ஆற்றாதவனாய்த் தோற்றோடச் செய்த நீ, எனக்குப் பங்கம் விளைத்த மனிதர் இருவரை வெல்லல் அரிதோ? என்றவாறு. உயிர்கொண்டு மீண்டான் என்றமையால் மானத்தைக்கொள்ளாது விடுத்தமை பெறப்படும்; மானத்தை நோக்கியிருப்பின் உயிரைக் கொண்டு செல்ல இயலாது. 'உயிர் நீப்பர் மானம்வரின்' (குறள்-969) என்றது நினைக்க. புறங்காட்டியோடினவன்பால் மானம் யாங்ஙனம் அமையும்? வெரிந் - முதுகு. (103)

**2932.** காற்றினையும் புனலினையுங்
கனலினையும் கடுங்காலக்
கூற்றினையும் விண்ணினையுங்
கோளினையும் பணிகோடற்
காற்றினை நீ யீண்டிருவர்
மானுடவர்க் காற்றாது
மாற்றினையோ வுன்வலத்தைச்
சிவன்றடக்கை வாள்கொண்டாய்.

காற்றினையும், புனலினையும்,
கனலினையும், கடுங் காலக்
கூற்றினையும், விண்ணினையும்,
கோளினையும், பணி கோடற்கு,
ஆற்றினை நீ, ஈண்டு இருவர்,
மானுடவர்க்கு ஆற்றாது
மாற்றினையோ? உன் வலத்தைச்
சிவன் தடக்கை வாள் கொண்டாய்!

பொ :—சிவனுடைய பெரிய கையில் வாளைப்பெற்ற அண்ணு! காற்றையும், நீரையும், நெருப்பையும், கடுமையான காலத்தைப் பார்த்துக் கொல்லும் எமனையும், விண்ணுலகத்தையும், சூரியன் முதலிய நவ கோள்களையும், ஏவிப் பணிகொள்ளுதற்குரிய வலியனுய நீ, இங்கு வந்துள்ள மனிதர் இருவர்க்கும் ஆற்ருமல் உன் வலிமையை மாற்றிக்கொண்டாயோ ?

கு :—காற்று, புனல், கனல் என்பன அவற்றின் அதிதெய்வங்களாய வாயு, வருணன், அக்கினி என்பாரை யுணர்த்தி நின்றன. கூற்று, உடம்பையும் உயிரையும் பிரிக்கும் எமன். கடுங்கூற்று காலக்கூற்று என்க. உயிரின் ஆயுட்காலத்தை ஆராய்ந்து பார்த்துப் பிரிக்கும் இயல்பு பற்றிக் ' காலக்கூற்று ' என்ருர். விண் என்பது ஆகுபெயராய் விண்ணிலுள்ள தேவரை யுணர்த்திற்று. காற்று முதலிய பெரும்பூதங்களையும் தேவரையும் உயிர்கட்கு இன்ப துன்பங்களை விளைவிக்கும் நவகோள்களையும் கூற்றுவனையும் வென்று பணிகொண்ட நீ, எளிய மனிதர் இருவர்க்கு ஆற்ருது, வலியடங்கிநிற்றல் வியப்பு என்றவாறு. சிவன் தடக்கை வாள்பெற்ற, உனக்கு வலத்தை மாற்றுதல் பொருந்தாது என்றவாறு. இராவணன் கயிலையெடுக்க முயன்றபோது இறைவன் காற் பெருவிரலால் அழுத்த அவன் மலையிடையகப்பட்டு அழுதபோது முனிவர் ஒருவர் வந்து அறிவுறுத்தியவாறே அவன் தன் கையை யாழாக்கி இசை பாடச் சிவபிரான் சினம் நீங்கி அவ்விராவணனுக்கு வாளும் நாளும் கொடுத்தான் என்பது வரலாறு. (104)

2933. உருப்படிவ மன்மதனை
யொத்துளரே யாயினுமுன்
செருப்படியிற் பொடியொவ்வா
மானிடரைச் சீறுதியோ
நெருப்படியிற் பொடிசிதற
நிறைந்தமதத் திசையானை
மருப்பொடியப் பொருப்பிடியத்
தோணிமிர்த்த வலியோனே.

உருப் படிவம் மன்மதனை
ஒத்துளரே ஆயினும், உன்
செருப்பு அடியில் பொடி ஒவ்வா
மானிடரைச் சீறுதியோ ?

நெருப்பு அடியில் பொடி சிதற
நிறைந்த மதத் திசை யானை
மருப்பு ஒடியப் பொருப்பு இடியத்
தோள் நிமிர்த்த வலியோனே !

பொ:—அடிக்கீழ் அகப்பட்ட மண்பொடி நெருப்புப் பொறியாகச் சிதறுமாறு நடக்கும் நிறைந்த மதச் செருக்கினையுடைய திசையானை களின் கொம்பு ஒடியவும், மலை இடிந்து விழவும், இருபது தோள் களையும் நிமிர்த்திய வலிமையுடையவனே! தோற்றம் மிக்க வடி வழகால் மன்மதனை ஒத்துளாராயினும், உன் செருப்பின் அடியில் உள்ள மண்துகளையும் ஒவ்வாத சிறுமையுடைய மனிதரை நீ வெகுள் வாயோ? வெகுளாய்.

கு :—உரு - தோற்றம். படிவம் - வடிவழகு. தான்கண்ட இராம இலக்குவர் பேரழகை மறக்கமுடியாமையால் அவள் செய்த தீமையைக் கூறும்போதும் அவ்வழகை உடன் கூறுகின்றாள். அழகு இருக்கின்றதே யொழிய ஆற்றலில் நினக்கு நிகராகார் என்றவாறு. இராவணன் பெருமையை நோக்கின் இராம இலக் குவர் மிக இழிவாகக் கருதப்படுவர் என்பாள், 'செருப்படியில் பொடி ஒவ்வா மானிடர்' என்றாள். இனிச் 'செருப்படி' என்பதற்குப் போர்க் களம் என்று பொருள்கொண்டு போர்க்களத்தில் எதிர்த்தாராயின் இராவணன் அவர்களைச் சிறு துகளாக மதிப்பதன்றிப் பொருளாக மதியான் என்பது தோன்றக் கூறலுமாம். ஒத்தார்மாட்டன்றித் தன்னின் இழிந்தார்மாட்டுப் போர்செய்தல் முறையன்றாகலின் 'மானிடரைச் சீறுதியோ' என்றாள். யானையின் வலிய காலடி மண்ணில் வைத்து நடக்கும்போது, மண்பொடி யெல்லாம் நெருப் புப்பொடியாய்ப் பறக்கும் என்றவாறு. கயிலைமலையை எடுக்க முயன்ற செய்தியையே பொருப்பிடியத் தோள் நிமிர்த்ததாகக் கூறி னாள்; உயர்வு நவிற்சி. முன் இராம இலக்குவரொடு போர் செய்யவேண்டும் என்ற கருத்தில் இராவணனை அழைத்த சூர்ப்ப ணகை, இங்கு அவன் வந்து சீறிப் போர் செய்யாதிருப்பதற்கு அமைதி கூறியவாறு. (105)

2934. தேனுடைய நறுந்தெரியற்
றேவரையுந் தெறுமாற்ற
ருனுடைய விராவணற்குந்
தம்பியர்க்குந் தவிர்ந்ததோ

ஊனுடைய வுடம்பினரா
யெங்குலத்தோர்க் குணவாய
மானுடவர் மருங்கேபுக்
கொடுங்கினதோ வலியம்மா.

தேன் உடைய நறுந்தெரியல் தேவரையும் தெறும் ஆற்றல்
தான் உடைய இராவணற்கும், தம்பியர்க்கும், தவிர்ந்ததோ ?
ஊன் உடைய உடம்பினராய், எம் குலத்தோர்க்கு உணவு ஆய
மானுடவர் மருங்கே புக்கு ஒடுங்கினதோ வலி? அம்மா !

பொ :—வலிமை யென்பது, தேனையுடைய நறுமணமிக்க கற்பக மலர்மாலையணிந்த தேவர்களையும் அழிக்கும் ஆற்றலையுடைய இராவணனுக்கும், அவன் தம்பியர்க்கும் இன்றி நீங்கிவிட்டதோ? தசைமிகுதியாகக் கொண்ட உடம்பையுடையவராய், எம் அரக்கர் குலத்தோர்க்கு உணவுப் பொருளாகவே படைக்கப்பெற்ற மனிதரிடத்தே சென்று (அவ்வலிமை) தங்கிவிட்டதோ ?

கு :—வலி, இராவணற்கும் தம்பியர்க்கும் தவிர்ந்ததோ ? மானுடவர் மருங்கேபுக்கு ஒடுங்கினதோ? என எண்ணி வியந்தாள் என்பது தோன்ற, 'அம்மா' என்பதை இறுதியில் பெய்தார். அரக்கர்க்கு உணவாதற்குத் தகுதியுடைமை தோன்ற 'ஊனுடைய உடம்பினராய்' என்ருள். ஊன் சுமைக்கேற்ற ஆற்றல் இல்லை என்றபடி. மானிடர் ஊனை உண்ணும் அரக்கர்க்கு வலிமிகுதலும், உணவுப் பொருளாயுள்ள மானிடர்க்கு வலிமை குறைதலுமே இயல்பாகவும், அதற்கு மாருக மானிடவர்க்கு வலிமிகுதலும், அரக்கர்க்குக் குறைதலும் நிகழ்தலின் இங்ஙனம் வியந்து தானே வினவிக்கொள்கின்ருள். ஒடுங்குதல் - தங்குதல். தேவரையும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. (106)

2935 மரனேயு நெடுங்கானின்
மறைந்துறையுந் தாபதர்க
ளுரனேயோ வடலரக்க
ரோய்வேயோ வுற்றெதிர்ந்தா
ரரனேயோ வயனேயோ
வரியேயோ வெனுமாற்றற்
கரனேயோ யான்பட்ட
கையறவு காணுயோ.

மரன் ஏயும் நெடுங்கானின்
மறைந்து உறையும் தாபதர்கள்
உரனேயோ? அடல் அரக்கர்
ஓய்வேயோ? உற்று எதிர்ந்தார்
அரனேயோ? அயனேயோ?
அரியேயோ? எனும் ஆற்றல்
கரனேயோ! யான் பட்ட
கையறவு காணுயோ?

பொ:—பகைகொண்டு எதிர்த்தவர்கள், உருத்திரனே? பிரமனே? திருமாலோ? என்று ஐயுறும் (சூலமும் வேதபுத்தகமும் சக்கரமும் தாங்கிய) ஆற்றல் வாய்ந்த கரங்களையுடைய அண்ணுவே! மரங்கள் அடர்ந்த நீண்ட கானகத்தில் (பலரறியாவாறு) ஓரிடத்தில் மறைந்து வாழ்கின்ற தவவேடத்தரின் வலிமை மிகுதியாலோ? அல்லது, வெற்றிமிக்க அரக்கர் போர்மேற் செல்லாது ஓய்ந்திருக்கையாலோ? நின் தங்கையாகிய யான் பட்ட துன்பத்தை நீ வந்து பார்க்கமாட்டாயோ?

கு:—சூர்ப்பணகை, ஐயவாய்பாட்டாற்கூறிய இரண்டினுள் அரக்கர் ஓய்வு காரணமாகவே தனக்கு இந்நிலை நேர்ந்தது என்பது அவள் கருத்து. மனிதர்களின் உரங்காரணமன்று என்பாள், அவரைக் கூறுங்கால், 'மறைந்துறையும் தாபதர்கள்' என்று இழித்துக் கூறியுள்ளதும் அரக்கரை, 'அடலரக்கர்' எனச் சிறப்பித்துக் கூறியுள்ளதும் காண்க. பகைகொண்டு எதிர்ந்தவர்கள், இராவணன் கைகளிலும் மும்மூர்த்திகட்குரிய சூலப்படையும், வேதநூலும், சக்கரப்படையும் இருத்தல் கண்டு, இவன், அரனேயோ? அயனேயோ? அரியேயோ? என்று ஐயுறத்தக்க ஆற்றல் வாய்ந்த கரங்களையுடையவன் என்றவாறு. அங்ஙனமின்றி அவன் கரங்களின் ஆற்றலைக்கண்டே அங்ஙனம் ஐயுற்றனர் எனலுமாம். அவ்வாறு அவர்கள் ஐயுறுதல் அவன் கரங்களைக் கண்டே யாகலின் ஆற்றற் கரனேயோ! என்ருள். கரன் – கரங்களையுடைய இராவணன். கரன் என்ற அரக்கனை விளித்ததாகக் கூறலாகாதோ எனின், இச் செய்யுளுக்கு முன்னும் பின்னும் இராவணனையே விளித்துக் கூறுதலால் இடைநின்ற இச்செய்யுளும் இராவணனை விளித்ததாகக் கூறுதலே பொருத்தமாதலானும், கரன் என்ற அரக்கனைத் துடும் என இடையில் விளித்தல் பொருந்தாமையானும், பின் 113 ஆம் செய்யுளில் "கல்வீரும் படைத்தடக்கை யடற்கரதூ டணர்முதலா" எனத் தூடணனேடு சேர்த்துக் கரன் விளிக்கப்படுதலாலும் இங்கும் அவனை விளித்ததாகக் கூறுவது பொருந்தாமையானும், இங்குக் கரன் என்றது, ஆற்றல் மிக்க கரங்களையுடைய இராவணனையே

என்பது தெளிவாதல் காண்க. வலியானே! யான்பட்ட வலிகாண வாராயோ? என்றது போலக் "கரனேயோ யான்பட்ட கையறவு காணுயோ?" எனச் சொல் முரண் தோன்றக் கூறியதாகக் கொள்ளுதலே சிறப்புடைத்தாதலும் காண்க. (107)

2936. இந்திரனு மலரயனு
மிமையவரும் பணிகேட்பச்
சுந்தரிபல் லாண்டிசைப்ப
வுலகேழுந் தொழுதேத்தச
சந்திரன்போ றனிக்குடைக்கீழ்
நீயிருக்குஞ் சவைநடுவே
வந்தடியே ஞணுது
முகங்காட்ட வல்லேனே.

இந்திரனும், மலர் அயனும், இமையவரும், பணி கேட்பச் சுந்தரி பல்லாண்டு இசைப்ப, உலகு ஏழும் தொழுது ஏத்தச் சந்திரன் போல் தனிக் குடைக் கீழ் நீ இருக்கும் சவை நடுவே வந்து, அடியேன் நாணுது முகம் காட்ட வல்லேனே?

பொ:—தேவேந்திரனும், தாமரை மலரில் இருக்கும் பிரமனும், தேவர்களும், நின் கட்டளையைக் கேட்டுப் பணி செய்யவும், அழகிய தேவமாதர் பல்லாண்டு பாடவும், ஏழுலகத்திலும் உள்ளவர்கள் வணங்கித் துதிக்கவும், கலை நிறைந்த சந்திரனைப்போன்ற, ஒப்பற்ற வெண்குடைக்குக்கீழ் நீ வீற்றிருக்கும் சபைக்கு நடுவே வந்து, அடியேன் நாணுமல் என் முகத்தைக் காட்டும் தகுதியுடையேனே?

கு:—இராவணனுடைய திருவோலக்கச் சிறப்பை விளக்கிய வாறு. பிரமன் முதலிய தேவர்களும் குற்றேவல் செய்யும் அவையில் மூக்குமுதலிய உறுப்பு அறுப்புண்ட யான், முகங்காட்டத் தகுதியற்றவள் என்றபடி. யான் முகங்காட்டினுல் பணிசெய்யும் தேவர்கள் என்னைக் கண்டு நகை செய்வர் என்பது குறிப்பு. வட்டமும் வெண்மையும் கருதிச் சந்திரனைக் குடைக்கு உவமை கூறிய வாறு. சுந்தரி என்றது தேவமாதரை; சாதியொருமை. பல்லாண்டு இசைத்தல் என்பது, அரசன் பல்லாண்டு வாழ்க என வாழ்த்துதல். (108)

2937 உரனெரிந்து விழவென்னை
யுதைத்துருட்டி மூக்கரிந்த
நரனிருந்து தோள்பார்க்க
நானிருந்து புலம்புவதோ
கரனிருந்த வனமன்றோ
விவைபடவுங் கடவேனோ
வரனிருந்த மலையெடுத்த
வண்ணாவோ வண்ணாவோ.

உரன் நெரிந்து விழ என்னை
உதைத்து உருட்டி, மூக்கு அரிந்த
நரன் இருந்து தோள் பார்க்க,
நான் இருந்து புலம்புவதோ?
கரன் இருந்த வனம் அன்றோ?
இவை படவும் கடவேனோ?
அரன் இருந்த மலை எடுத்த
அண்ணாவோ! அண்ணாவோ!

பொ:—சிவபிரான் இருந்த வெள்ளிமலையைப் பெயர்த்தெடுத்த ஆற்றலுடைய அண்ணா ஓ! அண்ணா ஓ! மார்பு நெரிந்து விழுமாறு என்னைக் கீழே தள்ளி உதைத்துத் தரையில் புரட்டி என் மூக்கினை அரிந்த மனிதன், மகிழ்ச்சியாக இருந்துகொண்டு தன் தோளைச் செருக்கோடு பார்க்க, நான் உறுப்பு அறுப்புண்ட துன்பத்தோடு இருந்து புலம்புவதோ முறை? கரன் என்ற நம் உறவினன் காவல் காத்திருக்கும் வனமல்லவோ? இவ்விழிவையும் யான் இங்குப் பெறத்தக்கவள்தானோ?

கு:—நரன் என்றது, இலக்குவனை. 'தோள்பார்க்க' என்றது, எதிர்ப்பவர் இல்லையெனச் செருக்கால், தன் தோளின் வன்மையைப் பார்த்து மகிழ்தலை உணர்த்திற்று. வலிமையற்ற மனிதன் என்னைத் துன்புறுத்தி மகிழ, வலிமைமிக்க அரக்கர் குடியில்பிறந்த யான், இருந்து புலம்புவதோ? என்று வினவியவாறு. கரன் இருந்தவனமாயிருந்தும் இக்கொடுமை இங்கு நிகழலாமா? என்ற வினா, விரைந்து வந்து நரர்களைத் துன்புறுத்தவேண்டும் என்பதை வற்புறுத்த வந்தது. (109)

**2938.** நசையாலே மூக்கிழந்து
நாணமிலா நான்பட்ட
வசையாலே நினதுபுகழ்
மாசுண்ட தாகாதோ
திசையானை விசைகலங்கச்
செருச்செய்து மருப்பொசித்த
விசையாலே நிறைந்தபுயத்
திராவணவோ விராவணவோ.

'நசையாலே மூக்கு இழந்து,
நாணம் இலா நான் பட்ட
வசையாலே நினது புகழ்
மாசுண்டது ஆகாதோ?
திசையானை விசை கலங்கச்
செருச் செய்து, மருப்பு ஒசித்த
இசையாலே நிறைந்த புயத்து
இராவணவோ! இராவணவோ!

பொ:—எட்டுத்திசையிலும் உள்ள திக்கு யானைகள், தம் மத வேகம் குறைந்து கலங்குமாறு, அவற்ருேடு போர்செய்து அவற்றின் கொம்புகளை ஒடித்த புகழாலே நிறைவுபெற்ற தோள்களையுடைய இராவணவோ! இராவணவோ! ஆசைகாரணமாக என் மூக்கை இழந்து நாணமில்லாமல் நான்பட்ட பழியாலே, நின்னுடைய புகழ் மாசுபட்டது ஆகாதோ?

கு:—விசை – மதத்தினுலுளதாயவேகம். திசையானைகளின் மருப்புக்களை ஒடித்தமையால் உளதாகிய புகழால் நிறைவுபெற்ற புயம் என்க. தோள்வலியால் உளதாய புகழாதலின், அங்ஙனம் கூறப்பட்டது. புகழ் நிறைந்த புயத்தையுடைய நீ நான்பட்ட பழியைத் துடைக்கவில்லையாயின், என் பழியால் நின்புகழும் மாசு பட்டதாகுமே; அது கருதியேனும் வருக என்றவாறு. 'நசையாலே மூக்கிழந்து' என்றது, இருபொருள்படக் கூறியதாகும்; இராமனைத் தழுவவேண்டும் என்ற காம இச்சையாலே சீதையை யெடுக்க முயன்று மூக்கிழந்து என்பது ஒன்று; சீதையை இராவணனுக்கு மனைவியாக்கவேண்டும் என்ற விருப்பத்தால் அவளை எடுக்கப்போய் மூக்கிழந்து என்பது மற்ருென்று. பின்னது சூர்ப்பணகை இராவணன்பால் கற்பித்துக் கூறப்போகும் கருத்து; முன்னது நிகழ்ந்தது கூறியது. வசை – பழி. இசை – புகழ். நசை – விருப்பம். (110)

2939. கானமதி னிடையிருவர்
காதொடுமூக் குடனரிய
வீனமதாற் பாவியே
னிவண்மடியக் கடவேனே
தானவரைக் கருவறுத்துச்
சதமகனைத் தளையிட்டு
வானவரைப் பணிகொண்ட
மருகாவோ மருகாவோ.

'கானம் அதின் இடை இருவர், காதொடு மூக்கு உடன் அரிய,
ஈனமதால் பாவியேன், இவண் மடியக் கடவேனே?
தானவரைக் கரு அறுத்துச் சதமகனைத் தளையிட்டு
வானவரைப் பணி கொண்ட மருகாவோ! மருகாவோ!!'

பொ :—அசுரரைக் குலத்தோடு அழித்து, இந்திரனை விலங்கிட்டுச் சிறைப்படுத்தித் தேவர்களைப் பணியாளராகக் கொண்ட மருமகனே! மருமகனே!! காட்டில் வாழ்கின்ற மனிதர் இருவர், என்காதோடு மூக்கையும் அரிய, அத்தாழ்வு பொருமையால் பாவியாகிய யான் இவ்விடத்தில் தனியே மடியவேண்டியவள்தானே?

கு :—தானவர் - அசுரர்; அசுரர்களும் அரக்கர்கட்கு மாருய் நின்றவராதலின் இந்திரசித்து அவர்களைக் கருவறுத்தான். சதமகன் என்பது, நூறு பரிவேள்விகளைச் செய்தவன் என்ற காரணம்பற்றி இந்திரனுக்குப் பெயராயிற்று. தளையிட்டு என்பதால் சிறைப்படுத்தினமை பெறப்பட்டது. பணிகொள்ளுதல், ஏவிய பணி செய்யும் பணியாளராகக் கொள்ளுதல். இந்திரசித்தின் ஆற்றலைக்கூறியவாறு. இத்தகைய பேராற்றல் உடைய நீ, காட்டில் வாழும் மனிதர் இருவர்க்கு அஞ்சவேண்டுவதில்லை என்பதைப் புலப்படுத்தியவாறு. அண்ணன் மகனுகலின் இந்திரசித்தை மருகா! என விளித்தாள். இந்திரசித்து என்ற பெயர் இந்திரனை வென்றவன் என்னும் பொருளது. அப்பெயர்ப் பொருள் தோன்றவே, 'இந்திரனைத் தளையிட்டு' என்பதைக் கூறினுள். தங்குமிடத்தானும் இழிந்த தகுதியினர் என்பாள், 'கானமதினிடை' என்றும், எண்ணிக்கையாலும் குறைந்தவரே என்பாள், 'இருவர்' என்றும் கூறினுள். இராமன் செய்திலனுயினும் இலக்குவன் செயலுக்கு உடன்பட்டவனே ஆதலின் அவனையும் சேர்த்து 'இருவர்' என்ருள். முகத்துறுப்பாய் எல்லோரும் காண்டற்குரிய காதும் மூக்கும் ஒருங்கேயறுத்தமையால் பிறரிடை முகங்காட்ட முடியாத

இழிவு பொருது இக்காட்டில் தனியே மடியவேண்டியவள்தானே? என்பது, நின்னை மருகனைப்பெற்ற யான், தனியே மடியக் கடவேனல்லேன் என்னும் கருத்தினது. 'பாவியேன்' என்றது, இந்த ஈனத்தை ஏற்கவேண்டிய பாவம் செய்தேன்போலும் எனத் தன்னை இழித்துக் கூறிக்கொண்டது. ஈனம் - இழிவு; மானத்திற்கு எதிர்மொழி. இராவணனை விளித்தும் வாராமையால் அவன் மகனையேனும் விளித்துக்கூறலாம் என இந்திரசித்தை விளித்துக் கூறியவாறு. இவர்கள் யாண்டும் எளிதில் போக்குவரவு புரியும் ஆற்றலைத் தவத்தால் பெற்றவர்கள் ஆதலின் அண்மையில் ஒருகால் இருந்தால், கேட்டு வரக்கூடும் என்ற நம்பிக்கையால் இங்ஙனம் கூறினள் எனலாம். அங்ஙனமின்றித் தன் புலம்புமொழியால் தன் உறவினரின் ஆற்றலைப் புலப்படுத்தினல் அம்மனிதர்கள் அஞ்சித் தன் கருத்தை முடிக்கலாம் என்ற எண்ணத்தால் கூறியதாகவும் கொள்ளலாம். (111)

**2940.** ஒருகாலத் துலகேழு
முருத்தெதிரத் தனுவொன்ருற்
றிருகாத சினந்திருகித்
திசையனைத்துஞ் செலநூறி
யிருகாலிற் புரந்தரனை
யிருஞ்சிறையி னிடுவித்த
மருகாவோ மானிடவர்
வலிகாண வாராயோ.

'ஒரு காலத்து, உலகு ஏழும் உருத்து எதிரத் தனு ஒன்ருல்,
திருகாத சினம் திருகித் திசை அனைத்தும் செல நூறி,
இரு காலில், புரந்தரனை இருஞ் சிறையின் இடுவித்த
மருகா வோ! மானிடவர் வலி காண வாராயோ?'

பொ:—முன் ஒருகாலத்தே உலகம் ஏழும் ஒன்றுகூடிக் கோபித்து எதிர்த்துவரவும் அஞ்சாது தணியாத கோபம் முதிர்ந்து, அவ்வேழுலகத்தவரும் பத்துத்திசையினும் சிதர்ந்து ஓடுமாறு வில் ஒன்றினால் அவர்களை அழித்து, இந்திரனை இரண்டு காலிலும் விலங்கிட்டுப் பெரிய சிறையில் இடுமாறு செய்த (ஆற்றல்மிக்க) மருகனே! மானிடரின் வலிமையைக் காண வரமாட்டாயோ?

கு:—தனு - வில். திருகுதல் - தணிதல்; முறுகுதல். எட்டுத் திசையும் விண்ணும் பாதலமும் அடங்கத் 'திசையனைத்தும்'

என்றார். செல்லுதற்கு எழுவாய் ஏழுலகமும் ஆம். நூறுதல் - அழித்தல். இருகாலில் 'விலங்கிட்டு' இருஞ் சிறையின் இடுவித்த என வேண்டுஞ்சொல் இசையெச்சமாக வருவிக்கப்படும். இருகால் என்பதற்கு, 'இருமுறை' எனப் பொருள் கொள்ளின், "இகல் இந்திரன் ஈரிருகால் எனக்கே தோற்றான்" என்ற யுத்த காண்ட நாகபாசப்படலம்-10ஆம் செய்யுளோடு மாறுபடுவதாகும் என்க. ஏவுதற்கருத்தா இந்திரசித்து என்பது புலப்பட 'இடுவித்த' என்றாள். இயற்றுதற்கருத்தாவாயின் இட்ட என வரும். தேவர்தலைவனை வென்ற நீ, மனிதரின் வலிமையை அடக்குதல் எளிதன்றோ? என்றவாறு. 'வலிகாண' என்புழிக் காண்டல், அடக்கல் என்னும் பொருளது. உலகேழையும் தனுவொன்றால் நூறினான் என்றது உறுப்புக்குறைவிசேடம் என்னும் அணியாம். (112)

2941. கல்லீரும் படைத்தடக்கை
யடற்கரதூ டணர்முதலா
வல்லீருஞ் சுடர்மணிப்பூ
ணரக்கர்குலத் தவதரித்தீர்
கொல்லீரும் படைக்கும்ப
கருணனைப்போற் குவலயத்து
ளெல்லீரு முறங்குதிரோ
யானழைத்தல் கேளீரோ.

'கல் ஈரும் படைத் தடக்கை அடல், கர தூடணர் முதலா,
அல் ஈரும் சுடர் மணிப் பூண், அரக்கர் குலத்து அவதரித்தீர்!
கொல் ஈரும் படைக் கும்பகருணனைப்போல், குவலயத்துள்
எல்லீரும் உறங்குதிரோ? யான் அழைத்தல் கேளீரோ?'

பொ:—கல்லையும் பிளக்கத்தக்க வலிய படைக்கலம் தாங்கிய பெரிய கையையுடைய வலிமை வாய்ந்த கரதூடணர் முதலாக, இருளைப் பிளந்து ஓட்டுகின்ற ஒளிவாய்ந்த மணிகள் பதித்த அணிகலன்களையுடைய அரக்கர் குலத்தில் பிறந்தவர்களே! நீங்கள் எல்லோரும், கொல்லனால் அராவப்பட்ட படைகளையுடைய கும்பகருணனைப்போல இவ்வுலகத்தில் உறங்கிக்கொண்டிருக்கின்றீர்களோ? அல்லது, யான் அழைத்தலைக் கேளாமையால் வாளா இருக்கின்றீரோ?

கு :—படையின் பெருமை தோன்றக் ‘ கல்லீரும் படை ’ என்றாள். கரன் என்ற பெயரே, படைத்தடக்கை யுடைமையால் பெற்றது என்பது புலப்படுத்துவார்போலக் கரனுக்கு அதனை அடையாகப் புணர்த்தமை காண்க. கல்லையும் ஈரும் என்புழி உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. அல் - இருள். மணியின் ஒளியால் இருளகலும் என அவர்கள் அணிகலச் சிறப்பும், அதனால் அவ்வரக்கரின் செல்வச் சிறப்பும் புலப்படுத்தியவாறு. கொல்—தொழில்; ஆகுபெயராய்க் கொல்லனை யுணர்த்தியது ; படைக்கு அடை. கும்பகருணன் என்ற பெயர் குடம்போன்ற காதுடையவன் என்னும் பொருளது. கும்பகருணன் தவஞ் செய்து பிரமனிடம் நித்தியத்துவம் வேண்ட எண்ணியவன், கலைமகளின் சூழ்ச்சியால் ‘நித்திரைத்துவம்’ வேண்டும் என்றானாக, அவன் கேட்டவண்ணம் என்றும் உறங்கும் வரம்பெற்றவனாகலின், உறங்குவோர்க்கு உவமையானான். உறங்குதிரோ என்றது வெறுப்புணர்ச்சியால் கூறியது. ஒருவர், உறங்காது என் முறையீட்டைக் கேட்டிருப்பினும், அவர் மூலம் எல்லோரு மறிந்து வந்திருக்கலாம். அங்ஙனம்வாராமையின், ‘எல்லீருமுறங்குதிரோ ’ என்றாள். உம்மை, முற்றும்மை. தன் முறையீட்டைக் கேட்டு வாராமைக்குக் காரணம் உறக்கமா ? அல்லது சேய்மையிலிருப்பதால் கேளாமையோ ? என வினவியவாறு. அண்மையிலிருந்தும் உறக்கத்தால் கேளாமையும் விழித்திருந்தும் சேய்மையால் கேளாமையும் இயல்பாதல் காணலாம். ஓகாரம் இரண்டும் ஐய வினாவின்கண் வந்தன. உறங்குதிரோ? அதனால் யான் அழைத்தல் கேளிரோ ? எனக் கேளாமைக்கு உறக்கத்தைக் காரணமாக்கிப் பொருள் கூறுவாருமுளர். குரலால் நம்மவள் என்பதை யுணர்தல் எளிதாகவும், உணராதிருத்தல் நோக்கி, ‘யான்’ என்றும், பேரொலியோடு விளித்தும் கேட்டிலிரே என்பாள் ‘ அழைத்தல்’ என்றும் கூறினாள். அழைத்தல் - பெருங்குரலோடு கூப்பிடுதல். (113)

அப்பொழுது இராமன் வருதல்

2942. என்றின்ன பலபன்னி
யிகலரக்கி யழுதிரங்கிப்
பொன்றுன்னும் படியகத்துப்
புரள்கின்ற பொழுதகத்து
நின்றந்த நதியகத்து
நிறைதவத்தின் குறைமுடித்து
வன்றிண்கைச் சிலைநெடுந்தோண்
மரகதத்தின் மலைவந்தான்.

என்று, இன்ன பல பன்னி, இகல் அரக்கி அழுது இரங்கிப்
பொன் துன்னும் படியகத்துப் புரள்கின்ற பொழுதகத்து,
நின்று, அந்த நதியகத்து, நிறை தவத்தின் குறை முடித்து,
வன் திண் கைச் சிலை நெடுந்தோள் மரகதத்தின் மலை வந்தான்.

பொ :—என்று, இதுபோன்ற பல பல சொல்லிப் பகைமையுடைய சூர்ப்பணகையாகிய அரக்கி, அழுது புலம்பிப் பொன்துகள் பொருந்திய தரையில் புரள்கின்றபோது, அந்தக் கோதாவரி நதித்துறையில் நின்று, நிறைவுறச் செய்யவேண்டிய சந்தியாவந்தனமாகிய தவத்தின் குறையையும் முடித்துக்கொண்டு, வலிய திண்ணிய கையினையும் வில்லைத் தாங்கிய நீண்ட தோளினையும் உடைய மரகதமலை போன்ற இராமன் வந்தான்.

கு :—பன்னுதல் - பலகால் சொல்லுதல். இகல் - பகைமை. தன் கருத்திற்கிணங்காமையால் கொண்ட பகைமையுடையவள் ஆதலின் சூர்ப்பணகையை 'இகலரக்கி' என்றார். வலிமையுடைய அரக்கி எனலுமாம். பொன்னணுக்கள் நிறைந்த இடம் என்பார், "பொன்துன்னும்படி" என்றார். பொன் என்பதற்கு இலக்குமி எனக்கொண்டு அவள் அம்சமாகிய சீதை நடப்பதற்குரிய நல்ல இடத்தில் அரக்கிபுரண்டாள் என்பதைப் புலப்படுத்தியதாகவும் கொள்ளலாம். இனி இராமனும் சீதையும் உவகையுடன் உலாவுதற்காக இலக்குவனால் அழகாகச் செப்பஞ்செய்திருந்த நல்ல இடத்தில் அரக்கி புரள்கின்றபோது எனலும் ஆம். அந்தநதியகத்துநின்று வந்தான் என்க. காலையில் குறைவறச் செய்ய வேண்டிய சந்தியா வந்தனத்தையே 'நிறைதவம்' என்றார். அரக்கி புலம்பல், சந்தியாவந்தனம் செய்கின்ற இராமன் காதுகளுக்குக் கேட்டதாயினும், வழிபாடு முடியாமல் இருந்தமையால் உடனே வாராமல் அக்குறையை முடித்துக்கொண்டு வரக் காலம் தாழ்த்தது என்பார், 'குறைமுடித்து......வந்தான்' என்றார். எந்த நேரத்திலும் அரக்கரின் வன்செயல் நிகழலாம் என எதிர்பார்ப்பவனாகலின் சந்தியாவந்தனம்செய்து வருங்காலத்தும் வில்லேந்திய தோளினனாகவே இராமன் இருந்தான் என்க. எத்தகைய பகையையும் வெல்லும் மெய்வலியும் படைவலியும் உடைமை தோன்ற, 'வன்திண் கைச்சிலை நெடுந்தோள் மரகதத்தின்மலை' என்றார். திண்மையானும் நிறத்தானும் இராமனுக்கு மரகதமலை உவமையாம். மரகதத்தாலாகிய மலை என்க. உவமையாகுபெயராய் மலை இராமனையுணர்த்திற்று. (114)

சூர்ப்பணகை தான் பட்டதை இராமனுக்குணர்த்தல்

2943. வந்தானை முகநோக்கி
வயிறலைத்து மழைக்கண்ணீர்
செந்தாரைக் குருதிகொடு
செழுநிலத்தைச் சேருக்கி
யந்தோவுன் றிருமேனிக்
கன்பிழைத்த வன்பிழையா
லெந்தாயான் பட்டபடி
யிதுகாணென் றெதிர்விழுந்தாள்.

வந்தானை முகம் நோக்கி,
வயிறு அலைத்து, மழைக் கண்ணீர்,
செந்தாரைக் குருதி கொடு
செழுநிலத்தைச் சேறு ஆக்கி,
'அந்தோ! உன் திருமேனிக்கு
அன்பு இழைத்த வன் பிழையால்
எந்தாய்! யான் பட்டபடி
இதுகாண்' என்று எதிர் விழுந்தாள்.

பொ:—(சூர்ப்பணகை) வந்த இராமனது முகத்தைப் பார்த்துக் கைகளால் வயிற்றில் அடித்துக்கொண்டு, மழைபோன்று பொழியும் தன் கண்ணீராலும் செந்நிறத்தையுடைய தாரையாகப் புண் சொரிகின்ற இரத்தத்தாலும் செழுமையான தரையைச் சேருக்கிக் கொண்டு, 'ஐயோ! எம் தலைவனே! உன் அழகிய மேனிக்கு ஆசை வைத்ததாகிய வலிய குற்றத்தால் யான் பட்ட தன்மை இதுவாகும்; பார்ப்பாயாக' என்று அவன் எதிரில் விழுந்தாள்.

கு:—சூர்ப்பணகை, இராவணன் முதலிய தன் உறவினரையே நினைந்து நோக்கிப் புலம்பிக்கொண்டிருந்தவள் ஆகலின் அவள் துடும் என இராமனைப் பார்த்த நிலையை யுணர்த்த 'வந்தானை முகம் நோக்கி' என்ருர். உருபு மயக்கம். வயிறலைத்தல் என்பது வயிற்றில் அடித்துக்கொள்ளுதல். இது, மகளிர் துன்புற்றபோது இயல்பாக நிகழ்வது. கண்ணீராலும் புண்ணீராலும் செழுநிலத்தைச் சேருக்கினுள் என்க. உறுப்பு அறுப்புண்ட இடத்திலிருந்து, தாரை தாரையாகக் குருதி ஒழுகுவதாலும், அத்துன்பம் பொருது அரக்கி அழுவதாலும், செழுநிலம் சேருயிற்று; என்றது, கண்ணீர் மிகுதியும் புண்ணீர் மிகுதியும் புலப்படுத்தியவாறு. இலக்குவனல் அழகாகச் செப்பஞ் செய்யப்பட்ட செழுமையான இடம் அழகிழந்து சேருயிற்று

என்க. உன் திருமேனியழகுகண்டு அன்பு செய்தது தவிர வேறோர் வன்பு செய்திலேன் என்பாள், 'உன் திருமேனிக்கு அன்பிழைத்த வன்பிழையால்' என்றாள். 'வன்பிழை' என்றது குறிப்புச்சொல்; பிழையே யன்று என்றவாறு. 'அன்பு செய்தமைக்குக் கிடைத்த பயன் இது' என அறுப்புண்ட உறுப்புக்களைக் காட்டி 'இதுகாண்' என்று கூறிக்கொண்டு எதிர்வீழ்ந்தாள் என்க. சீதையை யெடுக்கச் சென்றதும் இராமன் மேனியில் வைத்த அன்பினால் நிகழ்ந்ததே என்பது அரக்கியின் கருத்து. தீங்கு செய்தார் படவேண்டிய துன்பத்தை, அன்புசெய்த யான்பட்டேன்; இது தகுமோ! என்றவாறு. யான் என்றது, 'பெண்ணாய்ப் பிறந்த யான்' என்றவாறு. உரையால் நம்பவேண்டாம்; காட்சியால் காண் என்பாள், 'இதுகாண்' என்றாள். இதைக் கண்டு குற்றஞ் செய்தானைத் தண்டித்தற் கேற்றவன் நீயே என்பது தோன்ற எதிர்விழுந்தாள் என்க. இதனால், தான் குற்றமற்றவள், அபலை என்பன புலப்படுத்தியவாறு. (115)

## இராமன் வினா

**2944.** விரிந்தாய கூந்தலாள்
வெய்யவினை யாதானும்
புரிந்தாளென் பதுதனது
பொருவரிய திருமனத்தாற்
றெரிந்தானின் றிளையானே
யிவளைநெடுஞ் செவியொடுமூக்
கரிந்தானென் பதுமுணர்ந்தா
னம்மனைநீ யாரென்றான்.

விரிந்தாய கூந்தலாள்,
வெய்ய வினை யாதானும்
புரிந்தாள் என்பது, தனது
பொரு அரிய திரு மனத்தால்
தெரிந்தான்; இன்று, இளையானே
இவளை நெடுஞ் செவியொடு மூக்கு
அரிந்தான் என்பதும் உணர்ந்தான்;
'அம்மனை! நீ யார்?' என்றான்,

பொ :—விரிந்ததாய கூந்தலையுடைய இவள், கொடிய செயல் ஏதேனும் புரிந்தவளாவள் என்பதைத் தனது ஒப்பற்ற சிறந்த

மனத்தினுல் தெரிந்துகொண்டான்; அதுவேயன்றி, இன்று, இளையவனுகிய இலக்குவனே இவ்வரக்கியை நீண்ட காதோடு மூக்கினையும் அரிந்தானுவன் என்பதையும் உணர்ந்துகொண்டான்; பின் (அவளைப்பார்த்து) 'அம்மா! நீ யார்?' என்று வினவினுன்.

கு:—இலக்குவனுல் பற்றியிழுக்கப்பட்டதாகலின் அவள் கூந்தல் விரிந்ததாய் இருந்தது என்க. தலைவிரிகோலம் துன்பத்தை யுணர்த்துவது. வெய்யவினை - கொடுஞ்செயல். உய்த்துணர்ச்சியால் நிகழ்ந்ததை யறிந்த மனமாதலின் இராமன் மனம் 'பொருவரிய திருமனம்' எனச் சிறப்பிக்கப்பெற்றது. நேரில் காண்பது சூர்ப்பணகையின் குருதிசோரும் புண்களே யாயினும், இத்தண்டனையை இவள் பெறுதற்கு வெய்யவினையேதேனும் இவள் செய்திருக்கவேண்டும் என்று தெளிந்தது, காரியத்தைக் கண்டு காரணத்தையறியும் வழியளவையாகும்; புகையைக் கண்டு நெருப்புண்மை துணிதல்போல. மேலும், இலக்குவன் குற்றஞ் செய்யாதவரைத் தண்டிக்கமாட்டான் என்ற நம்பிக்கையும் இக்கருத்துக்குத் துணைசெய்தது. தாம் வாழும் பன்னசாலைக்கு அருகில் அவள் புரண்டு அழுகின்ருள் ஆதலானும், பிறர்யாரும் அங்கு இன்மையானும், அத்தண்டனையைச் செய்தவன் இலக்குவனுகவே இருக்கவேண்டும் என்பது துணிந்தான்; சூர்ப்பணகை நெருநல் வந்ததுபோல மாறுவேடத்தோடு காணப்படாமல் இயல்பான அரக்கியாகவே காணப்படுதலின், நீயார்? என்று இராமன் வினவவேண்டியவனுனன். சீதையையெடுக்க வருகின்றபோது அரக்கியாகவே வந்தாள் என்பது முன் கூறப்பட்டது. அழுகின்றவள் முகத்தை மட்டுமே இராமன் நோக்கினுனுகலின், நகில் அரிந்ததுபற்றிக் கூறவில்லை; இதனுல் இராமனுடைய தூய ஒழுக்கம் பெற வைத்தவாறு. (116)

சூர்ப்பணகையின் விடை

**2945.** அவ்வுரைகேட் டடலரக்கி
யறியாயோ நீயென்னைத்
தெவ்வுரையென் ரேருலகு
மில்லாத சீற்றத்தான்
வெவ்விலைவே லிராவணனும்
விண்ணுலக முதலாக
வெவ்வுலகு முடையானுக்
குடன்பிறந்தேன் யானென்ருள்.

அவ் உரை கேட்டு, அடல் அரக்கி
'அறியாயோ நீ, என்னை ?
தெவ் உரை என்றோர் உலகும்
இல்லாத சீற்றத்தான் ;
வெவ் இலை வேல் இராவணனும்,
விண் உலகம் முதலாக
எவ் உலகும் உடையானுக்கு
உடன் பிறந்தேன் யான்' என்றாள்.

பொ :—அச்சொல்லைக் கேட்டு வலிய அரக்கி, 'நீ என்னை அறிந்திலேயோ ? யான், (தனக்குப்) பகை என்ற சொல் ஒருலகத்திலும் இல்லாதவாறு செய்த கோபத்தையுடையவனான, கொடிய, இலை போன்ற வேலைத்தாங்கிய இராவணனாகிய, விண்ணுலகம் முதலாக எல்லா உலகங்களையும் உடையவனுக்கு உடன் பிறந்தவள்' என்றாள்.

கு :—சீற்றத்தானாகிய இராவணனும் உடையானுக்கு என்க. இராமன் தன்னை அடையாளங்கண்டுகொண்டிருப்பான் என்ற கருத்தினளாகலின் சூர்ப்பணகை 'அறியாயோ நீ என்னை ?' என வினவினாள். 'தெவ் என்ற ஒருரை' என மாற்றுக. 'என்ற' என்பதில் அகரம் தொகுத்தல். பகை என்ற சொல்லே இல்லையானபோது பகைவர் எங்கும் இலர் என்பது தானே போதரும். பகை இல்லாதபடி செய்தது, அவன் சீற்றமே என்பது தோன்ற, 'இல்லாத சீற்றத்தான்' என்றாள். இலைவடிவாகச் செய்யப்பட்டதாகலின் இலைவேல் எனப்பட்டது. எவ்வுலகும் என்றது விண், மண், பாதலம் என்ற மூவுலகங்களையும். எவ்வுலகுமுடையான் என்பதால் அவன் செல்வப் பெருமை புலப்படுத்தியவாறு. சீற்றமும் படையும் செல்வமும் உடையானுக்குத் தங்கை என்பதால் தன் பெருமையையும் புலப்படுத்தினாள் என்க. தெவ் என்ற உரையே ஒருலகத்திலும் இல்லாத சீற்றத்தான் என்றமையால் மூவுலகத்தோரும் அவனுக்கு அடங்கினவராதல் பெறப்படுதலின் அவனைப் பகைக்க நுமக்குத் துணையாவார் எவரும் இலர் என்பதும், கோசல நாட்டுரிமையும் இழந்து காட்டில் தங்கிய நீவிர், மூவுலகும் தனக்கு உரிமையாகப் பெற்றவனை வெல்ல இயலாது என்பதும், வெவ்விலை வேல் இராவணன் என்றமையால், நும்முயிரை வாங்குதற்குரிய கொடிய படையாற் குறைவிலன் என்பதும் புலப்படுத்தினாள் என்க.
(117)

இராமன் வினவும் சூர்ப்பணகையின் விடையும் 2946-2947

**2946.** தாமிருந்த தகையரக்கர்
புகலொழியத் தவமியற்ற
யாமிருந்த நெடுஞ்சூழற்
கென்செயவந் தீரெனலும்
வேமிருந்தி லெனக்கனலும்
வெங்காம வெம்பிணிக்கு
மாமருந்தே நெருநலினும்
வந்திலனே யானென்ருள்.

'தாம் இருந்த தகை அரக்கர் புகல் ஒழியத் தவம் இயற்ற
யாம் இருந்த நெடுஞ் சூழற்கு என் செய வந்தீர் ?' எனலும்,
'வேம் இருந்தில் எனக் கனலும் வெம் காம வெம் பிணிக்கு
மா மருந்தே! நெருநலினும் வந்திலனே யான் ?' என்ருள்.

பொ :—'நீ கூறிய பெருமையெல்லாம் பொருந்திய அரக்கர் தாம் இருந்த இடத்தை விடுத்துத் தவம் செய்ய, யாம் இருந்த இந்தச் சேய்மையிலுள்ள இடத்திற்கு என்னசெய்வதற்காக வந்தீர்?' என இராமன் கேட்டலும், (சூர்ப்பணகை,) 'வேகின்ற கரிபோலக் கனலுகின்ற விரும்பத்தக்க காமமாகிய கொடிய நோய்க்குச் சிறந்த மருந்துபோல்பவனே! யான் நேற்றும் இங்கு வந்தேனில்லையோ?' என்று கூறினுள்.

கு :—தகையரக்கர்தாமிருந்த புகல் என்க. புகல் - இடம். உங்களுக்குத் தீங்கு செய்ய அன்று என்பான், 'தவமியற்ற' என்றும், நும் ஊர்க்கு அருகிலும் வரவில்லை என்பான், 'நெடுஞ் சூழற்கு' என்றும் கூறினுன். நெடுமை இங்குச் சேய்மையை யுணர்த்தியது. சூழல் - இடம். உங்கள் இருப்பிடத்திற்குச் சேய்மையில் தவமியற்றும் எம்பால் நீ வருதற்குக் காரணமே இல்லை என்பதைப் புலப்படுத்தியவாறு. "பெரிதும் நன்றப் பெருந்துறை வைகிநீர், புரிதிர்மாதவம்" (2826) எனச் சடாயு கூறியதாலும் தவமியற்றும் நோக்கமுடையர் இராம இலக்குவர் என்பதை யுணரலாம். 'என்செய வந்தீர்' என்றமையால் தீங்கு செய்யவே வந்தீர் என்பதும் புலப்படும். இருந்தில் - கரி. 'எழுந்த மலர்க் கருநீலம் இருந்தில் காட்ட' (2-10-3) என்பது பெரிய திருமொழி. தன் காமத்தீயைத் தணிப்பதற்கு இராமனையே விரும்பினவள் ஆதலின், "வெங்காம வெம்பிணிக்கு மாமருந்தே" என விளித்தாள். இவ்விளியால் தான் வந்தமைக்கும்

காரணம் புலப்படுத்தினுள். என்செய வந்தீர் என்பதற்கு இது செய்யவந்தேன் என நேர்விடைகூருது, "நெருநலினும் வந்திலனே" என்றது, நெருநல் எதைச் செய்ய வந்தேனே அதைச் செய்யவே இன்றும் வந்தேன் என்பதையும், நெருநல் பழகிய இடத்திற்கு வருதல் குற்றமன்றே என்பதையும் புலப் படுத்தியவாறு. (118)

2947. செங்கயல்போற் கருநெடுங்கட்
டேமருதா மரையுறையு
நங்கையிவ ரெனநெருந
னடந்தவரோ நாமென்னக்
கொங்கைகளுங் குழைக்காதுங்
கொடிமூக்குங் குறைத்தழித்தா
லங்கணர சேயொருவர்க்
கழியாதோ வழகென்ருள்.

' "செங்கயல் போல் கருநெடுங்கண்,
தேம்மரு தாமரை உறையும்
நங்கை இவர்'' என நெருநல்
நடந்தவரோ நாம்?' என்னக்
'கொங்கைகளும் குழைக் காதும்
கொடி மூக்கும் குறைத்து அழித்தால்,
அங்கண் அரசே! ஒருவர்க்கு
அழியாதோ அழகு?' என்ருள்.

பொ :—சிவந்த கயல்மீன் போன்று பிறழ்கின்ற கரிய நீண்ட கண்களையுடைய தேன்பொருந்திய தாமரையில் வீற்றிருக்கின்ற திருமகளே இவர்! எனக் கண்டோர் நினைக்குமாறு நேற்றுவந்தவரோ நீர்? என்று இராமன் வினவ, (சூர்ப்பணகை,) நகில்களையும் குழையணிந்த காதையும் கொடிபோன்ற மூக்கினையும் அறுத்து அழித்துவிட்டால் அழகிய கண்களையுடைய அரசே! ஒருவர்க்கு அழகு அழியாதிருக்குமோ? என்ருள்.

கு :—நெருநல்கண்ட அழகுருவத்திற்கும் இன்றுகாணும் கோர உருவத்திற்கும் எவ்வகையானும் ஒற்றுமையின்மையால் இராமன், 'நெருநல் நடந்தவரோ நாம்' என்று வினவ நேர்ந்தது. நெடுங் கண் நங்கை தாமரையுறையும் நங்கை என்க. நாம் என்றது, நீர் என்னும் பொருளது. "நாமரையாமத் தென்னே வந்து வைகி

நயந்ததுவே" (திருக்கோவையார்-164) என்ற அடியையும் அதற்குப் பேராசிரியர், 'நாம் என்னும் முன்னிலை யுளப்பாட்டுத் தன்மை, உயர்வு தோன்ற முன்னிலைக்கண் வந்தது' என்று எழுதிய உரையையும் இங்கு நினைக்க. நெருநலிருந்த அழகு இன்று இல்லாமைக்கு, அழகிய உறுப்புக்களை இலக்குவன் அறுத்து ஒழித்தமையே காரணம் ஆதலின், யான் காரணமன்று என்பதைப் புலப்படுத்தியவாறு. 'அங்கணரசே' என்றது, இராமனுடைய கண்ணழகில் ஈடுபாடுகொண்டு கூறியது. கண்ணோட்டம் உள்ள கண்ணுடையவன் என்ற கருத்தால் விளித்ததாகக்கொண்டு, கண்ணோட்டத்தால் என்னை ஏற்றுக்கொண்டு என்னை இத்துயர் செய்தானையும் ஒறுத்தல்வேண்டும் என்று குறிப்பித்தவாறாகவும் கொள்ளலாம். அழகுள்ள உறுப்புக்களை அறுத்தொழித்தால் எனக்குமட்டுமன்றி யார்க்கும் அழகு அழியும் என்பாள், 'ஒருவர்க்கு அழியாதோ அழகு?' எனப் படர்க்கையில் வைத்துக் கூறினாள். (119)

## இராமன் இலக்குவனை வினவுதல்

**2948.** மூரன்முறு வலனிளைய
மொய்ம்பினோன் முகநோக்கி
வீரவிரைந் தனையிவடன்
விடுகாதுங் கொடிமூக்கு
மீரநினைந் திவளிழைத்த
பிழையென்னென் றிறைவினவச்
சூரநெடுந் தகையவனை
யடிவணங்கிச் சொல்லுவான்.

மூரல் முறுவலன், இளைய
மொய்ம்பினோன் முகம் நோக்கி,
'வீர! விரைந்தனை, இவள்தன்
விடு காதும், கொடி மூக்கும்,
ஈர, நினைந்து இவள் இழைத்த
பிழை என்?' என்று இறை வினவச்
சூர நெடுந்தகை அவனை
அடி வணங்கிச் சொல்லுவான்:

பொ:—எல்லா உயிர்க்குந் தலைவனாகிய இராமன், புன்சிரிப்பு உடையவனாய், இளைய வீரனான இலக்குவன் முகத்தைப் பார்த்து, 'வீர இவளுடைய தொங்கும் காதையும், கொடிபோன்ற மூக்கையும்

நீ விரைந்து அறுப்பதற்கு இவள் நினைந்து செய்த பிழை யாது? என்று வினவச் சூரனாகிய பெருமைக் குணமுடைய இலக்குவன், அவ்விராமனுடைய திருவடிகளை வணங்கிச் சொல்லுவானானான்.

கு:—மூரல் முறுவல் என்பது மீமிசைச் சொல். மொய்ம்பு - வலிமை, வீரத்தை யுணர்த்தியது. விரைந்து ஈர என இயையும். பெண்களைத் துன்புறுத்தல் வீரமன்றாகவும், வீரனாகிய நீ அந்த அறத்தையும் நோக்காது பெண்பாலாகிய இவளுடைய காதும் மூக்கும் விரைந்தறுக்கலாமோ? என்பது புலப்பட, “வீர விரைந்தனை இவள் தன் விடுகாதும் கொடிமூக்கும் ஈர” என்றான். விரைந்து அவள் உறுப்பை அறுக்குமாறு இவள் செய்த பிழை யாது? என்றான். நினைவின்றிச் செய்யும் பிழை மன்னிக்கத்தக்கது ஆதலின், ‘இவள் நினைந்திழைத்த பிழை என்?’ என்றான். தன் இளவலேயாயினும், அவன் செய்த தண்டனை, காரணத்தோடு செய்யப்பட்டதா? என்று உண்மைகாணுதற்கேற்ற தகுதியுடையவன் என்பது புலப்பட, ‘இராமன் வினவ’ என்னாது, ‘இறை வினவ’ என்றார். (120)

## இலக்குவன் விடை

2949. தேட்டந்தான் வாளெயிற்றிற்
றின்னவோ தீவினையோர்
கூட்டந்தான் புறத்துளதோ
குறித்தபொரு ளுணர்ந்திலனா
னாட்டந்தா னெரியுமிழ
நல்லாண்மேற் பொல்லாதா
ளோட்டந்தா ளரிதினிவ
ளுடன்றெழுந்தா ளெனவுரைத்தான்.

‘தேட்டம் தான் வாள் எயிற்றில்
தின்னவோ? தீவினையோர்
கூட்டம் தான் புறத்து உளதோ?
குறித்த பொருள் உணர்ந்திலனால்
நாட்டம் தான் எரி உமிழ,
நல்லாள் மேல் பொல்லாதாள்
ஓட்டந்தாள்; அரிதின் இவள்
உடன்று எழுந்தாள்’ என உரைத்தான்.

பொ:—(இவள் பிராட்டியைத்) தேடிவந்ததுதான் தன் கூரிய பற்களால் தின்னுதற்கோ? அல்லது தீவினையை விரும்பிச்செய்யும் அரக்கர் கூட்டந்தான் (பிராட்டியைக் கவரப்) புறத்தேயொளிந் துளதோ? இவள் குறித்து வந்த நோக்கத்தை அறிந்திலேன்; பொல்லாதவளாகிய இவள், பிறர்க்கரிதாம் வகையில் கோபித்து எழுந்தாளாய்க் கண்கள் நெருப்பைக்கக்க நல்லாளாகிய சீதைமேல் ஓடிவந்தாள்.

கு:—தேட்டம் - தேடுதல்; தொழிற்பண்பு. அரக்கர் மனிதர் தசையைத் தின்னும் இயல்பினர் ஆதலின் 'வாளெயிற்றிற்றின்ன வோ?' என்றான். இவள் மூலம் சீதையைக் கவர எண்ணிய அரக்கர் கூட்டம் புறத்தே இருக்கலாமோ? என்ற ஐயமுண்டா தற்குக் காரணம், சூர்ப்பணகை, இராவணன் இந்திரசித்து கர தூடணர் முதலிய அரக்கரை விளித்துக் கூறியதேயாகும். அரக் கரின் இயல்பு புலப்படவேண்டித் 'தீவினையோர்' என அவர்க்குப் பெயர் கொடுத்தான். நாட்டம் - கண். ஓட்டம் தந்தாள் என்பது 'ஓட்டந்தாள்' என விகாரப்பட்டது. "ஓட்டந்தெதிரா நீயாரென" (1775) என முன்னும் இத்தொடர் வந்திருத்தல் காணலாம். பொல்லாதவளாகிய இவள், அரிதினுடன்றெழுந்து நாட்டந்தான் எரியுமிழ, நல்லாளமேல் ஓட்டந்தாள் என மாற்றிக் கூட்டுக. உடன்றெழுந்தாள், முற்றெச்சம். ஆல் அசை. ஓகாரம் இரண்டும் ஐயத்தின்கண் வந்தன. (121)

### சூர்ப்பணகை இடைமறித்துக் கூறுதல்

**2950.** ஏற்றவளை வரிசிலையோ
னியம்பாமு னிகலரக்கி
சேற்றவளை தன்கணவ
னருகிருப்பச் சினந்திருகிச்
சூற்றவளை நீருழக்குந்
துறைகெழுநீர் வளநாடா
மாற்றவளைக் கண்டக்கா
லழலாதோ மனமென்றாள்.

ஏற்ற வளை வரி சிலையோன் இயம்பாமுன், இகல் அரக்கி, 'சேற்ற வளை தன் கணவன் அருகு இருப்பச் சினம் திருகிச் சூல் தவளை, நீர் உழக்கும் துறை கெழு நீர் வள நாடா! மாற்றவளைக் கண்டக்கால் அழலாதோ மனம்?' என்றாள்.

பொ:—கையில் ஏந்திய வளைந்த கட்டமைந்த வில்லையுடையவனாகிய இலக்குவன் சொல்லி முடிப்பதற்குள், மாறுபட்ட தன்மையுடைய அரக்கி, சேற்றில் உள்ள சங்கு, தன் கணவனாகிய தவளையின் அருகில் இருப்பக் கண்டு, (தன் கணவன் சங்கினை விரும்புவதாக எண்ணிக்கொண்டு) கோபமுதிர்ந்து, கருக்கொண்டுள்ள தவளை, நீரைக் கலக்குகின்ற துறைகள் பொருந்திய நீர்நிறைந்த வள நாட்டையுடையவனே! சக்களத்தியைக் கண்டால் ஒரு பெண்ணின் மனம் கொதிக்காதோ? என்று வினவினாள்.

கு:—பகைவரை எதிர்நோக்கி வளைத்த வில்லையுடையவனாகவே இலக்குவன் இருந்தான் என்பார், 'ஏற்ற வளை வரிசிலையோன்' என்றார். இயம்பாமுன் என்றது, விரைவு குறித்து வந்தது. அவன் சொல்லி முடிப்பதற்குள் தான் சொல்லத் தொடங்கி விட்டாள் என்றபடி. 'சேற்ற' என்னும் குறிப்புப் பெயரெச்சம் இடப்பொருளில் வந்தது; சேற்றின் கண்ணுள்ள வளை என்க. ஒரு சூல்கொண்டுள்ள தவளை, தன் கணவனாகிய தவளையின் அருகில் ஒரு சங்கு இருக்கக் கண்டது; தான் சூல்கொண்டிருத்தலால் புணர்ச்சிக்குத் தகுதியில்லை என்று கருதித் தன் கணவன், அச் சங்கை விரும்பியதாக எண்ணிக்கொண்டு, தன் கோபம் புலப்படத் தண்ணீரைக் கலக்கியதாம். இந்நிகழ்ச்சி இராமனுடைய வள நாட்டில் நிகழ்வதாகக்கூறிப் பெண்டிர் இயல்பை அவன் அறிதற்கு உரியவன் என்பதுபடக் கூறினாள் சூர்ப்பணகை. மாற்றவளைக் கண்டால் மகளிர்க்கு மனம் பொருதன்றோ? என்ற பொதுப்பொருளைக்காட்டுதற்கு இராமன் நாட்டில் நிகழும் நிகழ்ச்சியையே காட்டியவாறு. பொறியறிவிற்குறைந்த தவளையே அங்ஙனம் பொருத போது, அறிவு நிறைந்த எனக்குச் சொல்லவேண்டுமோ? என்றவாறு. சூர்ப்பணகை, இராமனை விரும்பிய அளவில் அவன் தன் கணவனானான் என்பதும், இடையில் தன்போல் அவனை விரும்பி வந்த சீதை தனக்கு மாற்றவள் ஆவாள் என்பதும், இடையில் வந்த அவளைக் காணும்போது, முதலில் வந்து உரிமைபெற்ற தனக்கு மனம் அழன்று அவளைத் துரத்த முயலுதல் இயல்பே என்பதும் அவள் கருத்து. "கதிர்க்கோட்டு நந்தின் சுரிமுக வேற்றை நாகிளந் தவளையொடு பகன்மணம் புகூஉம், நீர்திகழ்கழனி" (புறநா-266) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். உண்மையை ஒத்துக் கொண்டாளாயினும் தான் செய்தது குற்றமன்று என்பதை நிறுவியவாறு. (122)

'ஓடிப்போ' என இராமன் சினந்துரைத்தல்

2951. பேடிப்போர் வல்லரக்கர்
பெருங்குலத்தை யொருங்கவிப்பான்
றேடிப்போந் தனமின்று
தீமாற்றஞ் சிலவிளம்பி
வீடிப்போ காதேயிம்
மெய்வனத்தை விட்டகல
வோடிப்போ வென்றுரைத்த
வுரைகடந்தாற் கவளுரைப்பாள்.

'பேடிப் போர் வல் அரக்கர்
பெருங்குலத்தை ஒருங்கு அவிப்பான்
தேடிப் போந்தனம்; இன்று,
தீ மாற்றம் சில விளம்பி,
வீடிப்போகாதே; இம்
மெய் வனத்தை விட்டு அகல
ஓடிப்போ' என்று உரைத்த
உரை கடந்தாற்கு, அவள் உரைப்பாள்.

பொ :—'பேடித்தன்மையுடைய போரில் வல்லவராகிய அரக்கர்களின் பெரிய குலத்தையே ஒருசேர ஒழிக்கும்பொருட்டு அவர்களைத் தேடி இங்கு வந்துளோம்; இன்றைக்குத் தீயசொற்கள் சிலவற்றைச் சொல்லி அதனால் நீ அழிந்துபோகாமல் இந்த உண்மைக்கு இடமான வனத்தை விடுத்துச் சேய்மையில் ஓடிப்போய்விடு' என்று அருளால்கூறிய சொற்களுக்கு எட்டாத கடவுளின் அமிசமான இராமனுக்கு, அச்சூர்ப்பணகை சொல்லுவாளானாள்.

கு :—ஒத்த வலிமையுடையோர்பால் போர் செய்வதே முறையாகவும், தம்மின் மெலிந்த முனிவர் முதலியோரை வருத்துதலும், நேர்நின்று போர் செய்யாமல் மாயையால் மறைந்து போர் செய்தலும் உடையர் அரக்கர் ஆதலின், அவரைப் 'பேடிப்போர் வல்லரக்கர்' என்றான். அரக்கர் குலம் பெரிதாயினும், அக்குலமுழுமையும் ஒரு காலத்து அழிக்கும் ஆற்றல் தனக்கு உண்டு என்பதை இராமன் உணர்த்தியவாறு. தம்மேம்பாட்டைக் கூறுதல் வீரர்க்கு உரித்தே ஆம்; இதை 'நெடுமொழி' என்பர். "செருக்கடையரக்கர்புரி தீமை சிதைவெய்தித், தருக்கழிதரக் கடிது கொல்வது சமைந்தேன், வருக்கமறையோ யவர் வருந்திசையின் முந்துற்று, இருக்கைநலம்" (2775) என முன் அகத்தியற்கு இராமன் கூறிய

வாறே, அவ்வனத்தில் தங்கியுள்ளமை புலப்படுத்தித் 'தேடிப்போந் தனம்' என்ருன் தீமாற்றம் என்றது, இராமனுக்குத் தான் உரிமையுள்ளவள்போலக் கூறியதும், சீதை உரிமையற்றவள் என்பதுபடக் கூறியதும் ஆகிய சொற்கள். அவளை அழித்தற்கு அவள்கூறிய மாற்றங்களே அமையும் என்பான், "தீமாற்றஞ்சில விளம்பி வீடிப்போகாதே" என்ருன். வீடுதல் – அழிதல்; மேலும் அத்தகைய மாற்றம் கூறின் அழிந்துபடுவாய் என்றவாறு. மெய்ப் பொருளை நாடித் தவஞ்செய்யத்தக்க வனமாதலானும் மெய்ம்மை யல்லது பேசாத வனமாதலானும் அவ்வனத்தை 'மெய்வனம்' என்ருன். நின்பொய்கள் இவ்வனத்துப் பயன்படா என்பதும் உணர்த்தியவாறு. அகல ஓடுதல் – சேய்மையில் ஓடிப்போதல். கடவுளின் தன்மை சொல்லால் முற்றுப்பெறக் கூறமுடியாத நிலைமையதாதல் தோன்ற, 'சொற்பதங் கடந்தோன்' என்பர்; இராமன் கடவுளின் அமிசமானவன் என்பது தோன்ற, அவ் வியல்பையேற்றி 'உரைகடந்தாற்கு' என்ருர். மாற்றம் மனங் கழிய நின்றவனிடத்தில் நம் வஞ்சகம் நிறைவேருது என்பதை யுணராது சூர்ப்பணகை மேலுங் கூறித் தன் அறியாமையைப் புலப் படுத்தப்போகின்ருள் என்பதைக் குறிப்பிட, "உரைகடந்தாற் கவளுரைப்பாள்" என்ருர். (123)

### சூர்ப்பணகையின் சொல் 2952–2962

**2952.** நரைதிரையென் றில்லாத
நான்முகனே முதலமரர்
கரையிறந்தோ ரிராவணற்குக்
கரமிறுக்குங் குடியென்ருல்
விரையுமிது நன்றன்று
வேருக யானுரைக்கு
முரையுளது நுமக்குறுதி
யுணர்வுளதே லென்றுரைப்பாள்.

'நரை திரை என்று இல்லாத
நான்முகனே முதல் அமரர்
கரை இறந்தோர், இராவணற்குக்
கரம் இறுக்கும் குடி என்ருல்,

விரையும் இது நன்று அன்று ;
வேறு ஆக யான் உரைக்கும்
உரை உளது, நுமக்கு உறுதி
உணர்வு உளதேல்' என்று உரைப்பாள்.

பொ :—'நரையும் திரையும் ஆகிய மூப்பின் இயல்புகளே தோன்றப்பெருத பிரமன் முதலிய அளவு இல்லாத தேவர்கள், இராவணனுக்குக் கப்பம் செலுத்தும் குடிமக்கள் என்ருல் (அவன் பெருமையறியாது) இவ்வாறு நீர் விரைவது நல்லதல்ல; நுமக்கு நன்மையுறவேண்டும் என்ற உணர்வு இருக்குமாயின், வேருக யான் சொல்லும் சொல் உண்டு' என்று சொல்லத் தொடங்கினுள்.

கு :—நரை - மயிர்வெளுத்தல். திரை - உடம்பின் தோல் சுருங்குதல். இவை இரண்டும் மூப்பின் இயல்புகள். 'என்று' என்னும் எண்ணிடைச்சொல் பிரிந்து வந்தது. கரை - அளவு. கரம் - இறைப்பொருள். 'அவன் பெருமையறியாது விரையுமது' என, வேண்டும் சொல் இசையெச்சமாக வருவிக்க. விரைதலாவது, வீடிப்போகாதே ஓடிப்போ என்றலும், பேடிப்போர் வல்லரக்கர் பெருங்குலத்தை ஒருங்கவிப்பான் தேடிப் போந்தனம் என்றலும் ஆம். நுமக்கு உறுதியுணர்வுளதேல், யான் வேருக உரைக்கும் உரையுளது என்று இயையும். வேருக என்றது, பிறர்க்குக் கூருத சிறப்புடையதாக என்றவாறு. உங்களைப் படைத்த பிரமன் முதலான தேவர்களே அவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் குடிமக்கள் ஆனபோது, பிணி மூப்புக்களால் துன்புறும் மனிதராகிய நீவிர், இராவணனை வெல்லுதல் எளிதாமோ? என்றவாறு. 'விரையுமிது நன்றன்று' என்றது, சாமோபாயம் ஆகும். (124)

2953. ஆக்கரிய மூக்குங்கை
யரியுண்டா ளென்ருரை
நாக்கரியுந் தயமுகனுர்
நாகரிக ரல்லாமை
மூக்கரிந்து நுங்குலத்தை
முதலரிந்தீ ரினியுமக்குப்
போக்கரிதிவ் வழகையெல்லாம்
புல்லிடையே யுகுத்தீரே.

'"ஆக்கரிய மூக்கு, உங்கை அரியுண்டாள்" என்ருரை
நாக்கு அரியும் தயமுகனுர்; நாகரிகர் அல்லாமை,

மூக்கு அரிந்து நும் குலத்தை முதல் அரிந்தீர்; இனி, உமக்குப்
போக்கு அரிது; இவ் அழகை எல்லாம் புல்லிடையே உகுத்தீரே!

பொ :—'உம் தங்கை, பிறரால் உண்டாக்க முடியாத மூக்கு அறுபட்டாள்' என்று நிகழ்ந்தது கூறியவரது நாக்கையும் அரியும் இயல்புடைய தசமுகனுராகிய இராவணனுர், கண்ணேட்டமில்லாதவர்; ஆதலால், (அத்தகைய கொடியவருடைய தங்கையாகிய என்) மூக்கை அரிந்தமையால் நுமது குலத்தை வேரொடும் அரிந்தீரானீர்; இனி அவ்விராவணனுர் கோபத்திற்கு ஆளாகாமல் தப்பிப் போதல் அரிதாகும்; எனவே இந்த நும் அழகாகிய அமிழ்தத்தை எல்லாம், தூய்மையில்லாத இடத்தில் சிந்திவிட்டீரே!

கு :—இழந்த மூக்கை எவ்வகையாலும் உண்டாக்க முடியாது என அவ்வுறுப்பின் அருமை புலப்படுத்தியவாறு. தன் தங்கையை மூக்கறுக்கும் துணிவுடையோர் இலர் என்னும் துணிவு பற்றி, அவர் கற்பனையால் கூறினர் என்ற கருத்தால், கூறிய நாக்கையே அறுக்கும் கோபமுடையவர், உண்மையாகவே என் மூக்கையறுத்த உங்களைக் கண்டால் விடுவரோ? என்றவாறு. கண்ணேட்டமுடையவராயின் காரணத்தை ஆராய்ந்து பின் தண்டிப்பர். இராவணனுர்க்கு அக்கண்ணேட்டமில்லாமையால், உங்கள் செயல் அறிந்தவுடன் உங்களைக் கொன்றுவிடுவார்; நீர் தப்பமுடியாது; இவ்வளவு பேரழகும் வீணுகப் போகப் போகின்றது என அச்சமுறுத்தியும் இரங்கியும் கூறினள். மூக்கரியுண்டும் அவர்கள் அழகைப் பாராட்டுதல் காதலால் ஆயதென்க. நாகரிகம் - கண்ணேட்டம். "முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சுமுண்பர் நனி நாகரிகர்" (நற்றிணை - 355) என்பதும் காண்க. மூக்கரிந்து என்ற வினையெச்சம் காரணப் பொருளது; 'மழைபெய்து நெல் விளைந்தது' என்புழிப்போல. புல்லிடை - புல்லிதாகிய (தூய்மையில்லாத) இடம். 'உகுத்தீர்' என்ற வினைக்கேற்ப 'அழகாகிய அமிழ்தம்' எனக் குறிப்புருவகமாக்குக. மூக்கரிந்து நுங்குலத்தை முதலரிந்தீர் என்றது பேதோபாயம் ஆகும். (125)

**2954.** வான்காப்போர் மண்காப்போர்
மாநாகர் வாழுலகந்
தான்காப்போ ரினித்தங்க
டலைகாத்து நின்றுங்க

ளூன்காக்க வுரியார்யா
　　ரென்னையுயிர் நீர்காக்கின்
யான்காப்பெ னல்லாலவ்
　　விராவணனு ருளரென்றால்.

'வான் காப்போர், மண் காப்போர்,
　　மா நாகர் வாழ் உலகம்
தான் காப்போர், இனித் தங்கள்
　　தலை காத்து நின்று, உங்கள்
ஊன் காக்க உரியார் யார்?
　　என்னை, உயிர் நீர் காக்கின்,
யான் காப்பென்; அல்லால், அவ்
　　இராவணனுர் உளர்! என்றால்.

பொ:—நீர், (என் விருப்பத்தை நிறைவேற்றி) என் உயிரைக் காப்பாற்றினுல், யான் உங்களைக் காப்பாற்றல் கூடுமேயன்றி, உங்களைக் கொல்ல இராவணனுர் இருக்கின்ருர் என்ருல், அவர்க்கு எதிராக விண்ணுலகத்தைக் காக்கும் தேவருள்ளும், மண்ணுலகத்தைக் காக்கும் அரசருள்ளும், பெருமைவாய்ந்த நாகர் வாழ்கின்ற பாதலத்தைக் காக்கும் தலைவருள்ளும் தங்கள் தலைகளை முன்னர்த் தாம் காப்பாற்றிக்கொண்டு நின்று, பின் உங்கள் உடம்பைக் காப்பாற்ற உரியவர்கள் யாருளர்? யாரும் இல்லை.

கு:—இராவணன் உமக்குப் பகையாக இருக்கின்ருன் என்ருல் இந்த மூவுலகத்திலும் உமக்குத் துணைசெய்யக்கூடிய துணிவுடையவர் எவருமிலர் என்றவாறு. அப்படி யாரேனும் துணை புரியத் துணிவாராயின் அவர்கள் தலைதுணிவர் என்பது திண்ணம் என்பாள், 'தங்கள் தலைகாத்து நின்று' என்ருள். தங்கள் தலைக்கு வரும் தீங்கையும் பொருட்படுத்தாது இராவணனுக்கு எதிராக நுமக்குத் துணைபுரிய எவரும் துணியார் என்றவாறு. இராவணனைப் பாராவிடினும் அவர் உளர் என்ற சொல்லைக் கேட்டாலே மூவுலகத்தோரும் அஞ்சுவர் என்றலும் ஒன்று. ஊன் என்பது உடம்பை. இராவணனிடத்திலிருந்து உங்களை யான் காப்பது, என்னை நீர் கருத்தறிந்து காப்பாற்றிய பின்னரே என ஒருவரையறையும் செய்து கொண்டாள். நீங்கள் உயிர்வாழ வேண்டுமாயின் என்னைக் காப்பாற்ற வேண்டும் என்றவாறு. இது தானேபாயம் ஆகும். (126)

2955. காவற்றிண் கற்பமைந்தார்
தம்பெருமை தாங்கழறு
ராவற்பே ரன்பினு
லறைகின்றே னுமன்றே
தேவர்க்கும் வலியான்றன்
றிருத்தங்கை யாளிவளீண்
டேவர்க்கும் வலியாளென்
றிளையானுக் கியம்பீரோ.

'காவல் திண் கற்பு அமைந்தார்
தம் பெருமை தாம் கழருர்;
ஆவல் பேர் அன்பினுல்,
அறைகின்றேன் ஆம் அன்றே?
"தேவர்க்கும் வலியான் தன்
திருத் தங்கையாள் இவள்; ஈண்டு
ஏவர்க்கும் வலியாள்" என்று,
இளையானுக்கு இயம்பீரோ?

பொ:—தமக்குக் காவலாகிய திண்மையான கற்பையுடைய பெண்டிர், தமது பெருமையைத் தாமே கூறமாட்டார்கள்; (அவர்களுள் யானும் ஒருத்தியே யாயினும் தங்கள்மேல் வைத்த) ஆவலாகிய பெரிய அன்பினுல் சொல்லுகின்றேன்; 'இவள், தேவர்க்கும் சிறந்த வலிமையுடையவனுகிய இராவணனின் திருத்தங்கை ஆவாள்; இவ்வுலகத்தில் எவர்க்கும் மேம்பட்ட வலிமையுடையவள்' என்றும் இளையவனுக்குச் சொல்லமாட்டீரோ?

கு:—தம் பெருமையைத் தாமே சொல்லுவது கற்புடைப் பெண்டிர்க்கு இயல்பன்று; ஆயினும், கற்புடைய யான் என் பெருமையைக் கூறிக்கொள்வது நின்மேல் வைத்த ஆவலாலாகும் என்றவாறு. ஆம், அன்று, ஓ என்பன அசைநிலை. இங்குச் சூர்ப்பணகை தன் பெருமையாகக் கூறியது, தேவர்க்கும் மேம்பட்ட வலியுடைய இராவணன் தங்கை என்பதும், இவள் எவர்க்கும் வலியாள் என்பதுமேயாம். இதை இராமன் முன்னரே உணர்வனுதலின் தன்னுறுப்புக்களை யறுத்த துணிவுடைய இளையவன் அறிதல்வேண்டும் என்பாள், 'இளையானுக்கு இயம்பீரோ' என்ருள். தன் முன்னிலையிலுள்ள இலக்குவனுக்குத் தானே கூறுதல் தன் பெண்மைக்குத் தக்கதன்று என்ற கருத்தால், இராமனை இயம்பச் சொல்கின்ருள்; இலக்குவன் பாலுள்ள அச்சத்தால் அங்ஙனம் கூறினுளுமாம். திருத்தங்கை எனத் தனக்குத்தானே திரு அமைத்துக் கூறும் தற்பெருமையும்

இங்குக் காட்டியவாறு. உறுப்பு அறுப்புண்டு தன் வலியின்மை கண்ட சூர்ப்பணகை, பெருவலியால் உறுப்புக்களேயறுத்த இலக்குவனிடம், 'ஏவர்க்கும் வலியாள்' என்று தன்னே இயம்புமாறு வேண்டுவது நகைச்சுவைக்குரியதாதல் காணலாம். கற்புடையளாகத் தன்னேக் கூறிக்கொள்வதும் அத்தகையதே. (127)

**2956.** மாப்போரிற் புறங்காப்பேன்
வான்சுமந்து செலவல்லேன்
றூப்போல்வ கனிபலவுஞ்
சுவையுடைய தரவல்லேன்
காப்போரைக் கைத்தென்னீர்
கருதியது தருவேனிப்
பூப்போலு மெல்லியலாற்
பொருளென்னே புகல்வீரே.

'மாப் போரில் புறம் காப்பேன்;
வான் சுமந்து செல வல்லேன்;
தூப் போல்வ கனி பலவும்
சுவை உடைய தர வல்லேன் ;
காப்போரைக் கைத்து என் ? நீர்
கருதியது தருவேன்; இப்
பூப் போலும் மெல்லியலால்
பொருள் என்னே? புகல்வீரே.

பொ :—பெரியபோர் நேருமாயின் அப்போரில் உங்களேப் பக்கத்தில் இருந்து காப்பாற்றுவேன் ; அங்ஙனம் காப்பாற்ற இயலாத நிலே வந்தால் உங்களேச் சுமந்துகொண்டு விண்ணில் புகுவேன்; மாமிசம் போன்ற சுவையுடைய கனிகள் பலவற்றையும் கொணர்ந்து (நும்பசி தீரத்) தரவல்லேன் ; கனிகளே யன்றி நீர் கருதியது யாதாயினும், அதைக் கொணர்ந்து தருவேன் ; இவ்வாறெல்லாம் காப்பாற்றுவோரை வெறுத்துப் பெறுவது என்? பூப்போன்ற மென்மையுடைய இவளால் உங்களுக்குப் பயன் என்ன? சொல்வீர்களாக.

கு :—சுவைமிக்கதாகத் தான் கண்டது மாமிசமே யாதலின் சுவைமிக்க கனியைக் கூறவந்தவள், 'தூப்போல்வ' என்று உவமை கூறினள். தூப்போல்வ சுவையுடைய கனி என்க. கருதியபொருள் யாதாயினும் தருதல் அரிதாயினும், அதைச் செய்வேன் என்ருள் ; தன் காதல் நிறைவேற. கைத்தல் - வெறுத்தல். தன்னே வெறுக்

கின்ருர்கள் என்பதை யுணர்ந்த சூர்ப்பணகை, தனக்கு அவர்களைக் காக்கும் ஆற்றல் உண்டென்பதுகூறி, அங்ஙனம் காக்கும் தன்னை வெறுத்துப் பெறுவது யாது? என்பாள், காப்போரைக்கைத்து என்? எனத் தன்னைப் பிறர்போல் கூறியவாறு. மென்மை பெண்டிர்க்குச் சிறப்பாகக் கருதப்படினும் வன்மைமிக்க சூர்ப்பணகையின் நோக்கத் திற்கு அதுவே இழிவாகக் காணப்படுகின்றது; என்னை? போரில் புறங்காத்தலும், வான்சுமந்து செல்லுதலும், கனி பலவும் கொணர்த லும், கருதியது தருதலும் மென்மையுடைய சீதைக்கு இயலாதன்றே? இங்ஙனம் ஒருபயனும் இல்லாத சீதையால் நீவிர் பெறுவது யாது? எனவே அவளை விடுத்து என்னைச் சேர்த்துக்கொள்ளுங்கள் என்பது அவள் கருத்து. இதுவும் தாஞேபாயத்தால் கூறியதே. (128)

**2957.** குலத்தாலு நலத்தாலுங்
குறித்தனவே கொணர்தக்க
வலத்தாலு மதியாலும்
வடிவாலு மடத்தாலு
நிலத்தாரும் விசும்பாரு
நேரிழையா ரென்னைப்போற்
சொலத்தானிங் குரியாரைச்
சொல்லீரோ வல்லீரேல்.

'குலத்தாலும், நலத்தாலும், குறித்தனவே கொணர்தக்க
வலத்தாலும், மதியாலும், வடிவாலும், மடத்தாலும்,
நிலத்தாரும், விசும்பாரும், நேரிழையார், என்னைப்போல்
சொலத்தான் இங்கு உரியாரைச் சொல்லீரோ, வல்லீரேல்?

பொ:—குலப்பிறப்பாலும், குணநலத்தாலும், நினைத்ததைக் கொணரத்தக்க வன்மையாலும், அறிவாலும், வடிவழகாலும், இளமையாலும், நிலத்தில் வாழ்பவரும் விண்ணுலகில் வாழ்பவரு மாகிய பெண்டிருள், என்னைப் போல்பவர் என்று சொல்லுதற்குரிய வரை இங்கு வல்லீரேல் சொல்லமாட்டீரோ?

கு:—மண்ணுலகிலும், விண்ணுலகிலும், தன்னைப்போன்ற சிறப் புடைய பெண்டிர் இலர் எனத் தன் பெருமையைக் கூறியவாறு. தன் கருத்தை இராமஇலக்குவரும் உடன்பட்டவரே என்பாள், 'என்னைப்போல் சொலத்தானிங்கு உரியாரைச் சொல்லீரோ வல்லீ ரேல்?' என்ருள். என்னைப் போன்றவர் விண்ணினும் மண்ணினும் உளராக யாரையும் நீர் கூருமையால் அத்தகையோர் இலர்

என்பதே தேற்றம் என்றவாறு. நேரிழையாருள் என்னைப் போல்ப வர் எனச் சொலற்குரியாரை என்க. இங்குச் சொல்லீரோ? என்று இயையும். ஒரு பெண், தன் அழகைப் பாராட்டிக் கூறும் இவ் விடத்து என்னைப் போன்றவர் இருந்தால் சொல்லியிருப்பீர்கள் என்பது கருத்து. எல்லா வகையாலும் தன்னேரில்லாத் தலைவி தானே என்பதைச் சூர்ப்பணகை நிறுவியவாறு. (129)

**2958.** போக்கினீ ரென்னாசி
போய்த்தென்னீர் பொறுக்கிலிரே
லாக்குவெனோர் நொடிவரையி
னழகமைவெ னருள்கூரும்
பாக்கியமுண் டெனினதனாற்
பெண்மைக்கோர் பழுதுண்டோ
மேக்குயரு நெடுமூக்கு
மடந்தையர்க்கு மிகையன்றே.

‘போக்கினீர் என் நாசி;
போய்த்து என்? நீர் பொறுக்கிலிரேல்,
ஆக்குவென் ஓர் நொடி வரையின்;
அழகு அமைவென்; அருள்கூரும்
பாக்கியம் உண்டு எனின், அதனால்,
பெண்மைக்கு ஓர் பழுது உண்டோ?
மேக்கு உயரும் நெடு மூக்கு
மடந்தையர்க்கு மிகை அன்றே?

பொ:—என் மூக்கை அறுத்துப் போக்கிவிட்டீர்கள்; அதனால் கெட்டுப்போனது என்ன? ஒன்றுமில்லை; என் அறுப்புண்ட முகத் தைப் பார்க்கச் சகிக்கவில்லை யென்றால், ஒரு நொடிப் பொழுதில் மூக்கை ஆக்குவேன்; அழகும் அமையப் பெறுவேன்; என்பால் அருள்கூர்ந்து நீர் நோக்குகின்ற பாக்கியம் எனக்கு உண்டு என்றால், மூக்கறுப்புண்டதனால் என் பெண்மைக்கு ஏதேனும் பழு துண்டாகுமோ? முகத்தின்மேல் உயர்ந்து தோன்றும் நீண்ட மூக்குப் பெண்டிர்க்கு வேண்டாதது ஒன்றே அன்றோ?

கு:—மூக்குப் போனதனால் எனக்குக் கவலையில்லை; உங்களுக்கு மூக்கிழந்த முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லையென்றால், ஒரு நொடியில் அம்மூக்கை யுண்டாக்கிக் கொள்வேன்; அழகும் அமையப்பெறுவேன் என்றாள்; தன் மந்திர செபத்தால் உண்டாக்க

லாம் என்ற துணிவால். "செங்கயல் போல் கருநெடுங்கண், தேமரு தாமரையுறையும், நங்கையிவர் எனநெருநல் நடந்தவரோ? நாம்?" (2947) என முன் எள்ளுங்குறிப்பால் இராமன் கூறியது கொண்டு, தன் வடிவை வெறுக்கின்றூர்கள் என்று உணர்ந்தவளாதலின், 'பொறுக்கிலிரேல்' என்ருள். அருள்கூரும் பாக்கியம் உண்டாயின் அதுபோதும், மூக்கிழந்தமையினுல் பெண்மைக்குப் பழுதில்லை; என்றது, மூக்கறுத்ததற்காக யான் வருந்தவில்லை; நின்னருளைப் பெருமையால்தான் வருந்துகின்றேன் என்பதைப் புலப்படுத்திய வாறு. மேக்குயரும் நெடுமூக்கு மடந்தையர்க்கு மிகையன்ருே? என்றதும் தன் வருத்தமின்மையைப் புலப்படுத்தவேயாம். மூக்கறுத் ததும் நல்லதே ஆயிற்று என அவர் செயலைப் பாராட்டுவாளாய், 'மேக்குயரும் நெடுமூக்கு' எனவும் 'மடந்தையர்க்கு மிகையன்ருே' எனவும் மூக்கை இழித்துக் கூறினுள். (130)

**2959.** விண்டாரே யல்லாரோ
வேண்டாதார் நான்வேண்டி
னுண்டாய காதலினென்
னுயிரென்ப துமதன்ருே
கண்டாரே காதலிக்குங்
கட்டழகும் விடமன்ருே
கொண்டாரே கொண்டாடு
முருப்பெற்ருற் கொள்ளீரோ.

'விண்டாரே அல்லாரோ
வேண்டாதார் நான் வேண்டின்?
உண்டாய காதலின், என்
உயிர் என்பது உமது அன்ருே?
கண்டாரே காதலிக்கும்
கட்டழகும் விடம் அன்ருே?
கொண்டாரே கொண்டாடும்
உருப்பெற்ருல், கொள்ளீரோ?

பொ:—பேரழகியாகிய யான் விரும்பின் என்னை விரும்பாதார் உளராயின் அவர் ஆண்மை நீங்கினவரே அல்லரோ? உம்மைக் கண்டு என்னுள்ளத்தில் உண்டான காதலினுல் என் உயிரையும் உமதாக்கிவிட்டேன் அன்ருே? கண்டவர் யாவராலும் காதலிக்கப் படுகின்ற வடிவழகும் நஞ்சுபோன்றதல்லவோ? கொண்ட கணவர்

மட்டும் பாராட்டுகின்ற உருவைப் பெற்ருல் ஏற்றுக்கொள்ள மாட்டீர்களோ ?

கு :—மூன்ருமடியால் சீதையைக் குறிப்பால் இகழ்ந்து, இரண்டாமடியாலும் நான்காமடியாலும் சூர்ப்பணகை, தானே மணந்து கொள்ளுதற்குரிய காதலும் வடிவும் உடையவள் என்பதை வற்புறுத்துகின்ருள். 'பேடியரன்றே பெற்றியினின்றிடின்' (மணிமே-3-25) என்பதை அடியொற்றி முதலடி அமைந்துளது. தான் விரும்பிஞல் விரும்பாதார் உலகத்து இலர் என்பது கருத்து. "உம்மைக் கண்டு உண்டாய காதலால் என் உயிரையும் உமக்கே உரிமை செய்துவிட்ட என்னை விரும்புதல் முறையே'' என்று சூர்ப்பணகை வற்புறுத்தியவாறு. "அழகுமிக்க சீதை, கண்டாரால் காதலிக்கப் பட்டு நஞ்சுபோல் உம்மைத் துன்புறுத்தற்குரியவள்; அழகின்மையாலும், உறுப்புக்குறைந்ததாலும், கண்டாரால் காதலிக்கப்படாது, 'காக்கைக்கும் தன் குஞ்சு பொன்குஞ்சு' என்றவாறு கொண்ட கணவரால் மட்டும் கொண்டாடக்கூடிய உருவமுடைய யானே உம்மை இன்புறுத்தற்குரியவள்" என்பது பின்னிரண்டடிகளின் கருத்து. மூன்ருமடியில் கூறிய நெறியின்படி, பேரழகுடைய சீதை, தன்னைக் கண்ட இராவணனுல் காதலிக்கப்பட்டுக் கவரப்படுவதும், அது காரணமாக இராமன் அளவிடலாகா அல்லலுறுவதும், பின்னர்க் காணலாம். இதனுல் கட்டழகு விடமாயதையுணரலாம். கட்டழகு - பேரழகு; இதற்குமேல் அழகு இல்லை யென வரம்பு கட்டிய அழகு என்றவாறு. கட்டழகும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. காண்பதற்கினிதாய அழகும், பயனுல் நஞ்சுபோல் வருத்தும் இயல்பினது என்க. (131)

**2960.** சிவனுமலர்த் திசைமுகனுந்
திருமாலுந் தெறுகுலிசத்
தவனுமடுத் தொன்ருகி
நின்றன்ன வுருவோனே
புவனமனைத் தையுமொருதன்
பூங்கணையா லுயிர்வாங்கு
மவனுமுனக் கிளையானே
விவனேபோ லருளிலனுல்.

'சிவனும், மலர்த் திசைமுகனும்,
திருமாலும், தெறு குலிசத்து
அவனும், அடுத்து ஒன்ருகி
நின்றன்ன உருவோனே !

புவனம் அனைத்தையும், ஒரு தன்
பூங்கணையால் உயிர் வாங்கும்
அவனும், உனக்கு இளையானே?
இவனே போல் அருள் இலனால்.

பொ :—சிவனும் தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும், பகைவரை அழிக்கும் வச்சிரப்படையையுடைய இந்திரனும் சேர்ந்து ஒருருவாய் நின்றாற்போன்ற உருவத்தையுடையவனே! உலகனைத்திலும் உள்ள உயிர்களையெல்லாம் ஒப்பற்ற தன் மலர் அம்பினால் உயிர் நீக்கினாற்போன்ற வருத்தத்தைச் செய்யும் அம் மன்மதனும் உனக்கு இளையவன்தானே? கருணையற்று என் உறுப்புக்களை அறுத்த இவ்விளையானைப் போலவே அருளில்லாமல் என்னை வருத்துகின்றானே.

கு :—மன்மதன் அருளற்றவனாக இருக்கின்றான்; அவன் கொடுமையினின்றும் என்னைக் காப்பாற்றுக என்றவாறு. மும்மூர்த்திகளும் இந்திரனும் சேர்ந்து ஒருவடிவு கொண்டாற்போன்ற ஆற்றலும் அறிவும் அருளும் ஆட்சியுமுடையவன் இராமன் என்று புகழ்கின்றாள். இதனைப் பூவைநிலை என்பர். "வாசவன் மாயன் மற்றை மலருளோன் மழுவாளங்கை, ஈசனென் றினையதன்மை யிளிவரு மிவராலன்றி, நாசம்வந் துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன்." (கும்பகருணன் வதைப்-31) என இராமன் ஆற்றலைக்கண்ட இராவணன் இந் நாற்பெருந் தெய்வத்திற்கும் இராமன் மேம்பட்டவன் என்று கூறுவதைப் பின்னர்க் காணலாம். மன்மதன் என்று பெயர் சொல்லவும் அஞ்சினளாய், 'பூங்கணையால் உயிர் வாங்கும் அவன்' என்றாள். உயிர்வாங்குதல் என்றது, உயிர் நீக்குதல் போன்ற துன்பஞ் செய்தலை. "முழுநீலம் கொல்லும் மதன் அம்பின் குணம்" என்பதற்கேற்ப, நீலமலராகிய ஒரு பூங்கணையால் உயிர் வாங்கும் எனலும் ஆம். 'அவனும் இவனேபோல் அருளிலனால்' என்றமையால், மன்மதனும் இலக்குவனும் அருளிலர் என்பது பெற வைத்தவாறு. ஒரு தம்பி கொடியனாய் அருளிலாதிருப்பதைக் கண்டவள், மன்மதன் அருளின்றித் தன்னை வருத்துதல் கண்டு, அவனும் நினக்குத் தம்பியோ என அவ்விருவரின் கொடுமையையும் உடனுணர்த்தியவாறு. இளையான் அருளிலன் என்றதால் இராமன் அருளுடையன் என்பதும் அருளுடைமை தோன்றத் தன்னைக் காக்க வேண்டும் என்பதும் குறிப்பு. இச்செய்யுள் இராமனை மட்டும் விளித்துக்கூறியது. (132)

2961. பொன்னுருவப் பொருகழலீர் புழைகாண
★ மூக்கரிவான் பொருள்வே றுண்டோ
வின்னுருவ மிதுகொண்டிங் கிருந்தொழியு
நம்மருங்கே யேகா ளப்பாற்
பின்னிவளை யயலொருவர் பாராரென்
றேயரிந்தீர் பிழைசெய் தீரோ
வன்னதனை யறிந்தன்றோ வன்பிரட்டி
பூண்டதுநா னறிவி லேனோ.

'பொன் உருவப் பொரு கழலீர்! புழை காண,
மூக்கு அரிவான் பொருள் வேறு உண்டோ?
"இன் உருவம் இது கொண்டு, இங்கு இருந்தொழியும்
நம் மருங்கே; ஏகாள் அப்பால்;
பின், இவளை அயல் ஒருவர் பாரார்" என்
றே அரிந்தீர்; பிழை செய்தீரோ?
அன்னதனை அறிந்து அன்றோ, அன்பு இரட்டி
பூண்டது? நான் அறிவிலேனோ?

பொ:—'பொன்னால் ஆகிய அழகிய' போர்செய்தற்கு அடையாள மாகிய வீரக்கழலை அணிந்தவர்களே! துளை வெளித்தோன்றுமாறு என் மூக்கை அரிதற்குக் காரணம் வேறுண்டோ? "காண்டற்கினிய உருவமாகிய இதனைக்கொண்டு இங்கு நம்மிடத்தே இருந்து விடுவாள்; அப்பால் செல்லமாட்டாள்; பிறகு இவளை அயலவர் ஒருவரும் பார்க்கமாட்டார்கள்" என்ற நல்ல எண்ணத்தினாலேயே அரிந்தீர்கள்; எனக்குப் பிழை செய்தீராவீர்களோ? உங்களுடைய அக்குறிப்பை அறிந்தன்றோ உங்களிடத்தில் அன்பு இருமடங்காகப் பெருக்கிக்கொண்டது? தீங்கு செய்தாரிடத்து அன்பு செய்தற்கு நான் அறிவு இல்லாதவளோ?

கு:—மேல் (2958) மூக்கரிந்தது நல்லதாயிற்று என்றவள், இங்குக் காதலால் செய்ததேயாம் என்பதை திறுவுகின்றாள். பொருள் - காரணம். இவள் மிக்க பேரழகு உடையவள்; இவளழகைக் கண்டால் எவரும் விரும்பி யேற்றுக்கொள்வர்; இவளைச் சிறிது குறைபடுத்திவிட்டால், பின் அறுபட்ட உறுப்போடு வெளியில் பிறர்காணச் செல்லமாட்டாள்; நம்மிடத்திலேயே தங்கி விடுவாள்; அதுவேயன்றி இவளை அயலார் ஒருவரும் பார்க்கவும் மாட்டார்கள் என்ற நல்ல எண்ணந்தான் என் மூக்கையரிதற்குக் காரணம். இத்தகைய நல்ல எண்ணத்தால் செய்தது தீங்கு செய்த தாகுமோ? உம் கருத்தை யறிந்துதான் உம்மிடத்து முன்னை

யினும் இருமடங்கு அன்புகொண்டேன்; இது என் அறிவுடைமை யால் செய்தது என்பது சூர்ப்பணகையின் கருத்து. மூக்கரிந்ததால் இரண்டு பயன் விளைந்தன என்கின்றாள்; ஒன்று, பேரழகுடைய இவள் அப்பால் செல்லாமல் நம்மிடத்திலேயே தங்கி யிருப்பாள் என்பது. மற்றொன்று, நம் மனைவியாகிய இவளை அயலவர் யாரும் பார்க்கமாட்டார்கள் என்பது. இவ்விரண்டுமே எத்தகைய கீழ்மை யான நினைவுகள் என்பது கூறவேண்டா. அரக்கியின் இயல்புக் கேற்ப இவ்வெண்ணங்களைச் சிறப்பாக எண்ணிக் கூறுகின்றாள். 'நான் அறிவிலேனோ' என்றதும் அத்தகையதே. (133)

2962. வெப்பழியா நெடுவெகுளி வேலரக்க
ரீதறிந்து வெகுண்டு நோக்கி
னப்பழியா லுலகனைத்து நும்பொருட்டா
லழிந்தனவா மறத்தை நோக்கி
யொப்பழியச் செய்கிலா ருயர்குலத்துத்
தோன்றினோ ருணர்ந்து நோக்கி
யிப்பழியைத் துடைத்துதவி யினிதிருத்தி
ரென்னொடுமென் றிறைஞ்சி நின்றாள்.

'வெப்பு அழியா நெடு வெகுளி வேல் அரக்கர்
ஈது அறிந்து வெகுண்டு நோக்கின்,
அப்பழியால், உலகு அனைத்தும், நும் பொருட்டால்
அழிந்தனவாம்; அறத்தை நோக்கி,
ஒப்பு அழியச் செய்கிலார் உயர் குலத்துத்
தோன்றினோர்; உணர்ந்து நோக்கி,
இப்பழியைத் துடைத்து உதவி, இனிது இருத்திர்,
என்னொடும்' என்று, இறைஞ்சி நின்றாள்.

பொ:—"வெம்மை மாறுத பெரிய கோபத்தையுடைய, வேல் தாங்கிய அரக்கர்கள் (என் உறுப்பரிந்த) இந்நிகழ்ச்சியை அறிந்து வெகுண்டு பார்ப்பாராயின், அந்தப் பழியைச் செய்தமையால் நும் காரணமாக உலகம் அனைத்தும் அவர்கள் கோபத்தால் அழிந்தன வாகும்; உயர்குலத்துப் பிறந்தவர்கள், தருமம் நோக்கி உலகமெல் லாம் ஒருங்கே அழியச்செய்ய மாட்டார்கள்; உயர்குலத்துப் பிறந்த நீவிரும், இதை ஆராய்ந்து பார்த்து, நுமக்கு வரும் இப்பழியையும் துடைத்து, உலகத்திற்கும் உதவி, என்னோடும் இனிதாக இருங்கள்" என்றுகூறி வணங்கி நின்றாள்.

கு:—சினங்கொண்டவர் உடம்பு வெம்மைமிகும் இயல்பு தோன்ற, 'வெப்பழியா நெடுவெகுளி' என்ருள். பகையழித்தற்குரிய வெகுளியாலும் படையாலும் குறைவிலர் என்பதுணர்த்த, 'நெடுவெகுளிவேலரக்கர்' எனச் சிறப்பித்தாள். இயல்பாகவே நெடுவெகுளியுடையவர், நீங்கள் செய்த பழியை யறிந்து மேலும் வெகுண்டு பார்ப்பார்களாயின், நும்மோடு இவ்வுலகமே அழிந்துவிடும்; அவர்கள் வெகுளி அத்தகையது! என அச்சுறுத்தியவாறு. குற்றம் செய்த உம்மை அழிக்கத் தொடங்கிய அரக்கரின் கோப மிகுதியால் உலகனைத்துமே அழியும் என்றபடி. உயர்குலத்துத் தோன்றினேர்க்கு அருள் இயல்பாதலின் அவர் உலக அழிவைச் செய்யார் என மேலோர் ஒழுக்கம் கூறி, நீங்களும் உயர்குலத்தோர் ஆதலின், நம்பொருட்டால் உலகமும் அழியுமே என்பதை ஆராய்ந்து பார்த்து, என்னை மணந்துகொள்க என்றது, தண்டோபாயத்தால் கூறியது. என்னை ஏற்றுக்கொள்வதால் உங்களுக்கு வரும் பழியையும் துடைத்துக்கொள்கின்றீர்கள்; உலகத்திற்கும் உதவி செய்தவருமாகின்றீர்கள்; நீங்களும் இன்பமுறுகின்றீர்கள் என்பாள், "இப்பழியைத் துடைத்து, உதவி, இனிதிருத்திர் என்னுெடும்" என்ருள். (134)

### இராமன் வெகுண்டு அச்சுறுத்தியது 2963–2965

**2963.** நாடறியாத் துயரிழைத்த நவையரக்கி
நின்னன்னை தன்னை நல்குந்
தாடகையை யுயிர்கவர்ந்த சரமிருந்த
தன்றியுநான் றவமேற் கொண்டு
தோடகைய துறுமலர்த்தா ரிகலரக்கர்
குலந்தொலைப்பான் ருேன்றி நின்றேன்
போடகலப் புல்லொழுக்கை வல்லரக்கி
யென்றிறைவன் புகலும் பின்னும்.

'நாடு அறியாத் துயர் இழைத்த நவை அரக்கி,
நின் அன்னை தன்னை நல்கும்
தாடகையை, உயிர் கவர்ந்த சரம் இருந்தது;
அன்றியும், நான் தவம் மேற்கொண்டு,
தோள் தகைய துறு மலர்த் தார் இகல் அரக்கர்
குலம் தொலைப்பான், தோன்றி நின்றேன்;
போடு, அகலப் புல் ஒழுக்கை; வல் அரக்கி!'
என்று இறைவன் புகலும் பின்னும்.

பொ :—“வலிய அரக்கியே! உலகத்து உயிர்கள் இதுகாறும் அறிந்திராத பெருந்துயர் செய்த குற்றமுள்ள அரக்கியாகிய, நின் தாயைப்பெற்ற தாடகையை உயிர்வாங்கிய அம்பு, என்கையில் இருக்கின்றது; அதுவன்றியும், நான் தவத்தை மேற்கொண்டு, தோளில் அழகுடைய நெருங்கிய மலர்களாலாய மாலே அணிந்த மாறுபாட்டையுடைய அரக்கர் குலத்தை அடியோடு தொலேப்பதற் காகவே இவ் வனத்தில் வந்து தங்கியுள்ளேன்; உன் புல்லிய ஒழுக் கத்தைத் தொலேவில் எறிந்துவிடு” என்று இராமன் மேலும் சொல்லுவாளுனன்.

கு :—நவையரக்கியாகிய தாடகை என்க. தாடகை செய்த துயரின் கடுமை தோன்ற, ‘நாடறியாத்துயர்’ என்ருன். இரா வணன் தாயாகிய கேகசியைத் தாடகை பெருளாயினும் இரா வணன், தனக்குப் பாட்டி முறையில் வைத்திருந்தமை தோன்ற உப சாரமாக, ‘நின்னன்னே தன்னே நல்கும் தாடகை’ என்ருன். நீ பெண் என்ற காரணத்தால் கொல்லேன் என்று எண்ணுதே என்பான், உன்னேவிடக் கொடியவளாய தாடகையை உயிர்கவர்ந்த சரமிருந்தது என்ருன். தகை - அழகு. தகைய தார் என்க. தோன்றி நின்றேன் என்றது, ‘இவ்வனத்தில் வந்து தங்கினேன்’ என்ற பொதுப் பொருளோடு, “மசரதமனேயவர் வரமும் வாழ்வுமோர் நிசரத கணேகளால் நீறுசெய்ய யாம்......தசரதன் மதலேயாய் வருதுந் தாரணி” என்றுகூறி அவதரித்த இரகசியத்தையும் குறிப்பான் உணர்த்தியது. தன்னேக் காதலித்ததாகக் கூறியதையே ‘புல் லொழுக்கு’ என்ருன். அகலப்போடு என்றது, அவ்வொழுக் கத்தைத் தூரத்தில் விட்டு ஒழி என்றவாறு. தன் அவதாரத்தின் உண்மையும் சிறிது புலப்படுத்திய இயல்பு பற்றிப் பழைய நிலேயை நினேந்து, ‘இறைவன்’ என்றுகவி கூறினுர் போலும். (135)

**2964.** தரையளித்த தனிநேமித் தயரதன்றன்
புதல்வரியாந் தாய்சொற் ருங்கி
விரையளித்த கான்புகுந்தேம் வேதியரு
மாதவரும் வேண்ட நீண்டு
கரையளித்தற் கரியபடைக் கடலரக்கர்
குலந்தொலேத்துக் கண்டாய் பண்டை
வரையளித்த குலமாட நகர்புகுவே
மிவைதெரிய மனக்கொ ளென்ருன்.

'தரை அளித்த தனி நேமித் தயரதன் தன்
புதல்வர் யாம்; தாய்சொல் தாங்கி,
விரை அளித்த கான் புகுந்தேம்; வேதியரும்
மாதவரும் வேண்ட, நீண்டு
கரை அளித்தற்கு அரிய படைக் கடல் அரக்கர்
குலம் தொலைத்துக் கண்டாய், பண்டை
வரை அளித்த குல மாட நகர் புகுவேம்;
இவை தெரிய மனக்கொள்' என்றான்.

பொ:—'இவ்வுலக முழுதையும் அரசாண்ட ஏகச்சக்கராதிபதியாகிய தசரதனுடைய புதல்வர்கள் நாங்கள்; எம் தாயின் கட்டளையைத் தலைமேற்கொண்டு மணம் வீசுகின்ற காட்டிற்கு வந்தோம்; இங்குள்ள வேதம்வல்ல அந்தணர்களும், பெருந்தவ முனிவர்களும் வேண்டிக்கொண்டதால், மிகப்பரந்த அளவிடற்கரிய படையாகிய கடலையுடைய அரக்கரின் குலத்தை அடியோடு தொலைத்துவிட்டுத் தான், பழையதாகிய மலைபோன்ற சிறந்த மாடங்களையுடைய அயோத்தி நகரத்திற்குச் செல்வோம்; இவற்றைத் தெளிவாக மனத்தில் கொள்வாயாக' என்று கூறினான்.

கு:—வேதியர் என்பார், வேதம் வல்லவராய பிராமணர் ஆவார். வேதியரும் மாதவரும் அரக்கர் செய்யும் அல்லலை இராமனுக்குக்கூறி, அவர்களை அழித்துத் தம்மை அளிக்குமாறு வேண்டிக்கொண்டதையும், இராமன், "ஆறத்தினொடு அன்றி நின்றாரவர், வேறுப்பென் வெருவன்மின் நீர்" (2743) என அபயமளித்ததையும், அகத்தியப் படலத்தில் காணலாம். மேற்பாடலில், அரக்கர்குலம் தொலைப்பதாகக் கூறியதற்கு இங்குக் காரணம் கூறியவாறு. படைக் கடல் என்றது உருவகம். கரை அளித்தலாவது, அளவிடல். குலம் தொலைத்தலாவது, அரக்கரை வேரறுத்தல். 'கண்டாய்' என்பது, முன்னிலையசை. அரக்கர்குலம் தொலைத்தன்றி நகர் புகமாட்டேம் என்றவாறு. அயோத்தியின் பழமையுணர்த்தப் 'பண்டைநகர்' என்றார். அளித்த என்பது உவமஉருபு. குலம் - சிறப்பு. மாடங்களுக்கு மலையை உவமையாகக் கூறுதல் உயர்வும் அகலமும் திட்பமும் தோன்றுதற்கென்க. 'மலைபுரை மாடத்துக் கொழுநிழல்' (மதுரைக் - 406) என்றதும் காண்க. இவை தெரிய மனக்கொள் என்றது, சூர்ப்பணகையின் அச்சுறுத்தலுக்குச் சிறிதும் அஞ்சாதவர் என்பதை யுணர்த்தியவாறு. (136)

**2965.** நெறித்தாரை செல்லாத நிருதரெதிர்
நில்லாதே நெடிய தேவர்
மறித்தாரீண் டிவரிருவர் மானிடவ
ரென்னுது வல்லை யாகின்
வெறித்தாரை வேலரக்கர் விறலியக்கர்
முதலினர்நீ மிடலோ ரென்று
குறித்தாரை யாவரையுங் கொணருதியே
னின்னெதிரே கோறு மென்றான்.

' "நெறித் தாரை செல்லாத நிருதர் எதிர்
நில்லாதே, நெடிய தேவர்
மறித்தார்; ஈண்டு இவர் இருவர் ; மானிடவர் "
என்னுது, வல்லை ஆகின்,
வெறித் தாரை வேல் அரக்கர், விறல் இயக்கர்
முதலினர், நீ மிடலோர் என்று
குறித்தாரை யாவரையும், கொணருதியேல்,
நின் எதிரே கோறும்' என்றான்.

பொ:—ஒழுக்க நெறியின் ஒழுங்கில் ஒழுகாத அரக்கர்களின் எதிரில் எதிர்த்துநிற்கமுடியாமல் பெரிய தேவர்களும் தோற்றுப் புறங்காட்டி ஓடினார்கள்; இங்குள்ள இவர் இருவரும் மானிடர் தாமே! (என்ன செய்ய இயலும்?) என்று நினையாமல் நீ வல்லவள் ஆயின், புலால் நாற்றம் வீசுகின்ற கூரிய வேலைத் தாங்கிய அரக்கர், வெற்றிவாய்ந்த இயக்கர் முதலானவர்களாய் நீ வலிமை மிக்கவர் என்று குறிப்பிட்டவர்கள் எல்லோரையும் கொணர்வாயாயின் நின் கண்ணெதிரில் அவரைக் கொன்று குவிப்போம் என்று கூறினான்.

கு:—நெறி என்றது, நல்லொழுக்க நெறியினை. தாரை - ஒழுங்கு; வழி. செல்லாத - ஒழுகாத. அரக்கரைக்கொல்வேம் என விரதமேற்கொண்டமைக்குக் காரணம், அவர்கள் ஒழுக்க நெறியில் ஒழுகாமையே என்பது புலப்பட, 'நெறித்தாரை செல்லாத நிருதர்' என அடைகொடுத்தார். நெடிய தேவர் என்றது, பிரமன் முதலாய பெரிய தேவரை. நெடிய தேவரே எதிர்நில்லாது மறித்தபோது சிறிய மனிதர் என்செய இயலும் என்ற எண்ணம் அவளுக்குண்டு என்பது, அவள் புலம்பி முறையிட்ட கூற்றால் உணர்ந்தானாகலின், மானிடவர் என்னுது என்றான். வெறி - புலால் நாற்றம்; தாரை - கூர்மை; இரண்டும் வேலுக்கு அடை. பகைவெல்லுதற்குரிய படையும் வலியும் உடையராயினும், எம்மால்

கொல்லப்படுதல் உறுதி என்பது தோன்ற, 'வேலரக்கர் விறலியக்கர்' என்று சிறப்பித்தார். மிடலோர் - வலிமை மிக்கவர். இயக்கரையும் உடன் கூறியதற்குக் காரணம், சூர்ப்பணகை, இயக்கனாகிய குபேரனுக்கும் தங்கையென்று முன்கூறிய உறவை நினைந்ததேயாம். 'யாவரையும் கோறும்' எனப் பின்னும் இயையும். கோறும் - கொல்லுதும். எங்கள் ஆற்றலைப்பற்றி ஐயுறுகின்ற நீ கண்ணுற்காணக் கொல்லுகின்றோம் என்றவாறு. அரக்கர் அல்லல் ஆற்றாத முனிவர்களிடமும், இங்ஙனமே, 'நிவந்த வேதியர் நீவிருந் தீயவர், கவந்தபந்தக் களிநடங் கண்டிட' (2741) எனக் காணுதலை வற்புறுத்தியுள்ளமை காண்க. (137)

## சூர்ப்பணகை மீண்டும் வற்புறுத்தல் 2966-2969

2966. கொல்லலா மாயங்கள் குறித்தனவே
கொள்ளலாங் கொற்ற முற்ற
வெல்லலா மவரியற்றும் வினையெல்லாங்
கடக்கலா மேல்வாய் நீங்கிப்
பல்லெலா முறத்தோன்றும் பகுவாய
ளென்னுது பார்த்தி யாயி
னெல்லெலாஞ் சுரந்தளிக்கு நீர்நாட
கேளென்று நிருதி கூறும்.

'கொல்லலாம்; மாயங்கள் குறித்தனவே
கொள்ளலாம் ; கொற்றம் முற்ற
வெல்லலாம்; அவர் இயற்றும் வினை எல்லாம்
கடக்கலாம்; "மேல்வாய் நீங்கிப்
பல் எலாம் உறத் தோன்றும் பகுவாயள் "
என்னுது, பார்த்தி ஆயின்,
நெல் எலாம் சுரந்து அளிக்கும் நீர் நாட!
கேள்' என்று, நிருதி கூறும்.

பொ :—'இவ்வுலகத்திற்கு வேண்டிய நெல் எல்லாவற்றையும் விளைவித்துக்கொடுக்கும் நீர்வளமிக்க கோசலநாட்டையுடையவனே! யான் சொல்வதைக்கேள்; மூக்கோடு மேல்வாய் நீங்கப் பெற்றமையால் பற்கள் எல்லாம் நன்கு வெளித்தோன்றுகின்ற அளவுக்குமேல் திறந்த பெரிய வாயையுடையவள்தானே! என இகழாமல், அன்போடு என்னைப் பார்ப்பாயானுல், நீ கூறியவாறு அரக்கர் எல்லோரையும் கொல்லலாம்; அவர்கள் குறித்துச் செய்வன

வாகிய மாயங்களை முன்னரே அறிந்துகொள்ளலாம்; அவர்கள் வெற்றியெல்லாம் முடிவு பெறுமாறு அவர்களை வெல்லலாம்; நம்மை வெல்ல அவர்கள் செய்கின்ற சூழ்ச்சிகளையெல்லாம் கடந்து விடலாம்' என்று அரக்கி மேலும் கூறத் தொடங்குவாளாயினள்.

கு :—மூக்கறுபட்டபோது மேல்வாயும் உடன் அறுப்புண்டது என்பதும், அதனால் பல்லெல்லாம் வெளித்தோன்றக் கோரரூப மாகக் காணப்பட்டாள் என்பதும் இதனால் அறியலாம். அழகை நோக்காது திறமையை நோக்கி மணந்துகொள்க என்பாள், 'பகுவாயள் என்னாது பார்த்தியாயின்' என்றாள். பார்த்தல் இங்கு காதல் நோக்கோடு பார்த்து மணத்தலைக் குறிப்பால் உணர்த்தி நின்றது. என் உறவினரேயாயினும், நின்னை மணந்த பின் நின்பகைவர் என் பகைவரே ஆதலின், உங்கட்குத் துணையாய் நின்று அவ்வரக்கரைக் கொல்லுவேன் என்பாள், கொல்லலாம் என்றாள். அரக்கர் செய்யும் மாயங்களை முன்கூட்டியுணர யானே தகுதியுடையவள் என்பது புலப்பட, மாயங்கள் குறித்தனவே கொள்ளலாம் என்றாள். செய்வதற்குமுன் அவர்கள் நினைக்கும் மாயங்களையும் உணர்ந்து கொள்ளுதல் அரக்கியாகிய அவளுக்கே இயல்வதாகும். இதைப் பின்னும் கூறுதல் காணலாம். மற்று, பிறிது என்னும் பொருளில் வந்தது. நீர் இயற்றும் இடையூற்றிற்குப் பிறிதாய் அரக்கர் இயற்றும் சூழ்ச்சி என்று பொருள்படுதல் காண்க. வினை - சூழ்ச்சி. பிறநாட்டு மக்களுக்கும் நெல்லை விளைத்துக் கொடுத்து உயிரை அளிக்கும் நாட்டை யுடையவனாதலின், 'எனக்கு நின் அன்பைக் கொடுத்து என் உயிர் அளித்தற்கு நீ உரியவனே' என்பதைக் குறிப்பிட்டவாறு. (138)

2967. காம்பறியுந் தோளாளைக் கைவிடீ
 ரெனினும்யான் மிகையோ கள்வ
ராம்பொறியி லடலரக்க ரவரோடே
 செருச்செய்வா னமைந்தீ ராயிற்
ரும்பொறியிற் பலமாயந் தரும்பொறிக
 ளறிந்தவற்றைத் தடுப்பெ னன்றே
பாம்பறியும் பாம்பின்கா லெனமொழியும்
 பழமொழியும் பார்க்கி லீரோ.

'காம்பு அறியும் தோளாளைக் கைவிடீர்
 எனினும், யான் மிகையோ? கள்வர்
ஆம், பொறி இல் அடல் அரக்கர் அவரோடே
 செருச் செய்வான் அமைந்தீராயின்,

தாம் பொறியின் பல மாயம் தரும் பொறிகள்
அறிந்து, அவற்றைத் தடுப்பென் அன்றே ?
"பாம்பு அறியும் பாம்பின்கால்" என மொழியும்
பழமொழியும் பார்க்கிலீரோ ?

பொ :—மூங்கிலைப் போன்ற தோளையுடையவளைக் கைவிட மாட்டீர்களாயினும், யான் உங்களுக்கு அதிகமாவேனோ? கள்வ ராகிய, அறிவு இல்லாத அரக்கர்களாகிய அவரோடு நீர், போர் செய்ய ஆயத்தம் ஆனால், அவர்கள் தாம், அறிவினால் இயற்றிய பல மாயங்களை உண்டாக்கும் எந்திரங்களை அறிந்து, அவற்றைச் செயல்படுத்தாவாறு தடுத்து, உங்களுக்கு உதவுவேன் அன்றோ? பாம்பு தங்குமிடத்தைப் பாம்புதான் அறியும், (பிறரறியார்) என உலகம் சொல்லும் பழமொழியையும் அறிந்திலிரோ ?

கு :—காம்பு - மூங்கில். அறியும் உவம உருபு. மகளிர் தோளுக்கு மூங்கிலை உவமை கூறுதல் மரபு; வடிவாலும் அள வாலும் பளபளப்பாலும் அவை தம்முள் ஒப்பனவாம். மூங்கில் போன்ற மெல்லிய தோளையுடையவள் நுமக்குப் பயன்படமாட்டாள் என்ற குறிப்புப் புலப்படக் 'காம்பறியுந் தோளாளைக் கைவிடீர் எனினும்' என்றாள். பயனற்ற அவளைக் கைவிட மனமில்லையா யினும் என்றது, அவளைக் கைவிடவேண்டும் என்ற தன் கருத்தை நன்கு புலப்படுத்தியதாகும். அவளை ஏற்றுக்கொண்டதுபோல என்னையும் ஏற்றுக்கொள்ளுங்கள் என்பாள், 'யான் மிகையோ' என்றாள். மிகையோ என்றது, பலமனைவியரை மணக்கும் உரிமை ஆடவர்க்கு இருத்தலின், இரண்டாவது ஒருத்தியை மணத்தல் அதிகமன்று என்றவாறு. அரக்கர்களை இகழ்ந்து கூறினும், தன்னை ஏற்றுக்கொள்ளமாட்டானோ? என்ற கருத்தினளாதலின், 'கள்வராம் பொறியில், அடல் அரக்கர்' என்றாள். அரக்கர்க்கு அடையாகக் கூறிய கள்ளத்தன்மையும் அறிவுகெட்ட தன்மையும் தனக்கும் சாருமே என்பதையும் மறந்தவளாய்க் காதல்மிக்கு இராமன் சார்பில் பேசுகின்றாள். பொறி - அறிவு; எந்திரம். அரக்கர் செய்யும் மாய எந்திரங்களை அரக்கியே அறிய இயலும் என்பதை, நான்காமடி பிறிது மொழிதலாய் விளக்குதல் காணலாம். 'பாம் பறியும் பாம்பினகால்' (பழமொழி - 7) என வருதல் காண்க. அறிந்திலிரோ? என்றது, அறிவீரன்றே என்றவாறு. நீங்கள் அறி யாத எந்திரங்களைக்கண்டு உங்களுக்கு இடையூறுவாராது தடுத்து நிறுத்தும் ஆற்றலுடைய என்னை மணப்பது மிகையன்று என்றபடி. பாம்பின்கால் - பாம்பு தங்கும் இடம். பார்த்தல் இங்கு அறிதல் என்னும் பொருளது. மெல்லியலாளைக் கைவிடாமல், வலியளாகிய என்னையும் மணத்தல் குற்றமாகாது; மணந்தால் இன்ன உதவி

செய்வேன் என வற்புறுத்தியவாறு. இதுவும் தானோபாயத்தால் கூறியது. (139)

**2968.** உளங்கோட லுனையிழைத்தா ளுளளொருத்தி
யென்னுதியே னிருத ரோடுங்
களங்கோடற் குரியசெருக் கண்ணியக்கா
லொருமூவேங் கலந்த காலைக்
குளங்கோடு மென்றிதுவு முறுகோளே
யென்றுணருங் குறிக்கோ ளில்லா
விளங்கோவோ டெனையிருத்தி னிருகோளுஞ்
சிறைவைத்தாற் கிளையே னென்றாள்.

'உளம் கோடல் உனை இழைத்தாள் உளள் ஒருத்தி
என்னுதியேல், நிருதரோடும்
களம் கோடற்கு உரிய செருக் கண்ணியக்கால்
ஒரு மூவேம் கலந்த காலைக்
குளம் கோடும் என்றிதுவும் உறுகோளே ?
என்று உணரும் குறிக்கோள் இல்லா
இளங்கோவோடு எனை இருத்தின் இருகோளும்
சிறைவைத்தாற்கு இளையேன்' என்றாள்.

பொ :—உள்ளத்தில் வைத்துக்கொள்ளும்படி உன்னை விரும்பச் செய்தவள் ஒருத்தி இருக்கின்றாள் என்று கூறி என்னை மறுப்பாயானால், அரக்கரோடும் - போர்க்களத்தை இடமாகக் கொள்ளுதற்குரிய போரைச் செய்ய நினைத்தால், அப்பொழுது, நாம் மூவரும் ஒருங்கு சேர்ந்தால், அப்பகைவரைக் குழிபறித்துவிடுவோம் (ஒழித்துவிடுவேம்) என்று யான் கூறுகின்ற இதுவும் துன்பஞ்செய்ததாகுமோ ? (ஆகாதே) என்று உண்மை உணரும் குறிக்கோள் இல்லாத இளங்கோவோடு என்னை இருக்கச் செய்வாயாக ; அவ்வாறு செய்யின், இருகோள்களையும் சிறையில் வைத்தவனாகிய இராவணனுக்கு (போரில்) இளைக்கமாட்டேன்' என்று சொன்னாள்.

கு :—சீதை, தன்னழகால் இராமன் உள்ளத்தில் வைத்துக் கொள்ளுமாறு செய்தவள் என்பது கருத்து. 'இருவருமாறிப்புக் கிதயமெய்தினர்' (600) என்றதும் நினைக்க. ஒருத்திக்குரிய உள்ளத்தால் பிறளொருத்தியை விரும்பேன் என ஏகதாரவிரதம் மேற்கொண்டாயாயின் உன் இளவலோடு என்னை இருக்கச் செய்வாயாக ; அங்ஙனம் செய்யின், இராவணனைப் போரில் வெல்லு

தற்கு இளைக்கமாட்டேன்; வெல்லுவேன். என்னை இளையவனுவது மணந்துகொண்டால் நீங்கள் நினைத்த இராவணவதத்தை யானே செய்வேன் என்று அவர் குறிப்பறிந்து ஆசைவார்த்தை கூறிய வாறு. தான் சொல்வதைக் கேட்டு இலக்குவன் கோபத்தால் துடித்துக்கொண்டிருப்பதைக் கண்டாளாகலின், அவனை விளையாட்டால் இகழ்ந்து கூறுவாளாய், 'நிருதரோடும்.....செருக்கண்ணியக் கால், - ஒரு மூவேங்கலந்த காலைக் குளங்கோடும் என்ற இதுவும் உறுகோளே? என்று உணருங் குறிக்கோளில்லா இளங்கோ' என்று அடைகொடுத்துக் கூறினள். என்ற இதுவும் என்பது அகரம் தொக்கு என்றிதுவும் என்ருயிற்று. சீதையை யான் தூக்கச் சென்றதுதான் உறுகோளாகுமேயன்றிப் பகைவரை அழிக்க உதவி செய்வதாகக் கூறுகின்ற இதுவும் உறுகோளாகுமோ? ஆகாது என்று பொருள்படுதலின், உம்மை இறந்தது தழிஇய எச்சப்பொருளிலும் எதிர்மறைப் பொருளிலும் வந்தது. 'ஒரு மூவேம் கலந்தகாலை' என்றது, போர்செய்தற்கு, இராம இலக்கு வரும் சூர்ப்பணகையும் ஆகிய மூவரும் சேர்ந்தால் என்னும் பொருளது. குளங்கோடல் என்றது குழிபறித்தல்; அதாவது ஒழித்தல் என்னும் பொருளது. உறுகோள் - துன்பம். இருகோள் - சூரிய சந்திரர். தேவரைச் சிறைசெய்தபோது இவ்விருவரும் அடங் கலின், என்றும் இயங்குமியல்பினராய இருகோளையும் சிறைவைத் ததைச் சிறப்பாகக் கூறியவாறு. "கோளினையும் பணிகோடற்காற் றினை நீ" (2932) என்றதும் நினைக்க. இளையேன் என்றது, இராவ ணனுக்கு இளையவள் என்னும் பொருள் தந்து ஏமாற்றுந் தொட ராகவும் அமைந்தது. (140)

2969. பெருங்குலா வுறுநகர்க்கே யேகுநாள்
வேண்டுமுருப் பிடிப்பே னன்றே
யருங்கலா முற்றரிந்தா னென்னினுமீங்
கிளையவன்ரு னரிந்த நாசி
யொருங்கிலா விவளோடு முறைவேனே
வென்பானே லிறைவ வொன்றும்
மருங்கிலா தவளோடு மன்ருே நீ
நெடுங்காலம் வாழ்ந்த தென்பாய்.

'பெருங்குலா உறு நகர்க்கே ஏகும் நாள்
வேண்டும் உருப் பிடிப்பேன் நன்றே;
அருங்கலாம் உற்று அரிந்தான் என்னினும் ஈங்கு,
இளையவன்தான் அரிந்த நாசி

ஒருங்கு இலா இவளோடும் உறைவேனோ?
என்பானேல் இறைவ! ஒன்றும்
மருங்கு இலாதவளோடும் அன்றோ நீ
நெடுங்காலம் வாழ்ந்தது? என்பாய்.

பொ:—பெரிய மகிழ்ச்சிமிக்க அயோத்திநகரத்திற்குச் செல்லும் நாளில், (நீங்கள்) வேண்டும் உருவத்தை நன்கு மேற்கொள்வேன்; தணித்தற்கரிய கோபமுற்று முன் தானே அரிந்தான் ஆயினும், இப்பொழுது அவ்விளையவனே, 'அரியப்பட்ட மூக்கு முழுவதும் இல்லாதவளாகிய இவளோடும் யான் வாழ்வேனோ?' என்று மறுத்துக் கூறுவானாயின், அரசனே! நீ சிறிதும் இடையில்லாதவளோடு அன்றோ நெடுங்காலம் வாழ்ந்தது? என்பதை எடுத்துக்காட்டி அமைதி கூறுவாயாக.

கு:—குலாவு - மகிழ்ச்சி; கொண்டாட்டம். வேண்டும் உரு நன்றே பிடிப்பேன் என்க. கலாம் - கோபம். முன் கோபமுற்று அரிந்த அவனே, அரிந்த நாசி ஒருங்கிலா இவளோடும் உறைவேனோ? என்று மறுத்தல் ஆகாது என்பாள், 'அரிந்தான் என்னினும்...என்பானேல்' என்றாள். ஓருறுப்பு இல்லாமையினால் குறையில்லை; நெடுங்காலமாக யான் இடையென்னும் உறுப்பே இல்லாதவளோடு வாழவில்லையா? நீ மூக்கில்லாதவளோடு வாழ்ந்தால் தவறாகாது என்று இராமனையே அமைதிகூறச் சொல்லுகின்றாள். இறைவ! என்றது இராமனைச் சூர்ப்பணகை விளித்தது. நீ என்றதும் இராமனையே. நீ வாழ்ந்த நிகழ்ச்சியையே நின் இளவலுக்கு எடுத்துக்காட்டுக என்கிறாள். மருங்கிலாதவள் எனச் சீதையைக் கூறியது இடையின் சிறுமை நோக்கி. மருங்கிலா நங்கையும் (601) என்றதும் காண்க. இடையின்மை அழகை மிகுதிப்படுத்த, மூக்கின்மை அழகின்மையை மிகுதிப்படுத்தல் இங்கு உளங்கொளற்குரியது. முன்னது இயற்கை; பின்னது செயற்கை. இராமனை விரும்பிய சூர்ப்பணகை, அவன் விரும்பவில்லை என்பதை யறிந்தவுடன் அவனை விடுத்து, இலக்குவனை விரும்புவதும், தன் உறுப்பை அறுத்தவன் தன்னையேற்றுக் கொள்ளான் என்பதறியாமல் இராமன் மூலம் வற்புறுத்தச் செய்வதும், அவள் காதலின் இழிவை எடுத்துக்காட்டுவன. இலக்குவன் இவளை எல்லாவற்றானும் விரும்பி, மூக்கற்ற ஒன்றால்தான் விரும்பலன் என்பது நகைச்சுவை பயக்கு மொழியாகும். மூக்கில்லாமை, அரிந்தவன் குற்றமே யன்றி அரியப்பட்ட தன் குற்றமன்று என்பாள்போல, 'அருங்கலாமுற்றரிந்தான் என்னினும்' என்றாள். 'நகர்க்கே யேகுநாள் வேண்டுமுருப் பிடிப்பேன் நன்றே' என்றது, வெறும் ஏமாற்றமே யன்றி உண்மை

யன்று; உறுப்பறுப்புண்ட நிலையை மாற்றி வேண்டு முருப்பிடிக்க இயலுமாயின் அதை இப்பொழுதே செய்திருக்கலாம் அன்றோ? (141)

### இலக்குவன் அவளைக் கொல்ல எண்ணுதல்

2970. என்றவண்மே லிளையவன்ற னிலங்கிலைவேல்
கடைக்கணியா விவளை யீண்டுக்
கொன்றுகளை யேமென்ற னெடிதலைக்கு
மருளென்கொல் கோவே யென்ன
நன்றதுவே யாமன்றோ போகாளே
லாகவென நாதன் கூற
வொன்றுமிவ ரெனக்கிரங்கா ருயிரிழப்பெ
னிற்கினென வரக்கி யுன்னா.

என்றவள்மேல், இளையவன்தான் இலங்கு இலைவேல்
கடைக்கணியா, 'இவளை ஈண்டுக்
கொன்று களையேம் என்றால், நெடிது அலைக்கும்;
அருள் என் கொல்? கோவே!' என்ன,
'நன்று, அதுவே ஆம் அன்றோ? போகாளேல்
ஆக!' என நாதன் கூற,
'ஒன்றும் இவர் எனக்கு இரங்கார்; உயிர் இழப்பென்,
நிற்கின்' என, அரக்கி உன்னா.

பொ:—என்று கூறிய சூர்ப்பணகைமேல், ஏவுவதாக இலக்குவன் விளக்கமுடைய இலைவடிவாகிய வேலினைக் கடைக்கண்ணால் நோக்கி, 'இவளை இப்பொழுது கொன்று ஒழித்திடோமானால், நெடுங்காலம் வரையில் நம்மை வருத்திக்கொண்டே இருப்பாள்; எம்மரசே! நின் கட்டளை என்னையோ?' என்று கேட்ப, தலைவனாகிய இராமன், 'நீ கூறியதுவே நல்லதாகும்; இப்பொழுது இவள் போகவில்லையானால் அது செய்க' என்று சொல்ல, 'இவர் எனக்குச் சிறிதும் இரங்கமாட்டார்கள்; இங்கு நின்றால் உயிரை இழப்பேன்' என்று சூர்ப்பணகை நினைத்து.

கு:—குளகம்; போனாள் என்று அடுத்த செய்யுளில் முடியும். அவள் சேய்மையில் இன்றி அண்மையிலிருத்தலின் வில்லைக் கடைக்கணியாது வேலைக் கடைக்கணித்தான். அண்மையிலுள்ள அவளைக் கொல்லுதற்கு அதுவே போதுமாதலின். ஈண்டு -

இப்பொழுது. நெடிது என்றது கால நெடுமையை. கட்டளை என்கொல் என்பான் 'அருளென் கொல்' என்ருன். அன்று, ஓ அசை நிலை. 'இம்முறை போகவில்லையாயின் கொன்றுகளைக' என்பான், 'போகாளேலாக' என்ருன். ஒன்றும் - சிறிதும்; ஒன்றுமிவர் என்று இயைத்து ஒற்றுமையுள்ள இவர் எனலும் ஆம். அவர்கள் உரையாடலைக் கேட்டாளாகலின், 'உயிரிழப்பேன் நிற்கின்' என்ற முடிவிற்கு வந்தாள். கொடியளாயினும் இராமன் கட்டளையின்றிக் கொல்லலாகாது என்ற பெருங் கொள்கையால், 'அருளென்கொல்' என்ருன் இலக்குவன். (142)

## சூர்ப்பணகை அவர்களை அச்சுறுத்திச் செல்லுதல்

2971. ஏற்றநெடுங் கொடிமூக்கு மிருகாது
முலையிரண்டு மிழந்தும் வாழ
வாற்றுவனே வஞ்சனையா லுமையுள்ள
பரிசறிவா னமைந்த தன்ரே
காற்றினிலுங் கனலினிலுங் கடியானைக்
கொடியானைக் கரனை யுங்கள்
கூற்றுவனை யிப்பொழுதே கொணர்கின்றே
னென்றுசலங் கொண்டு போனுள்.

'ஏற்ற நெடுங் கொடி மூக்கும், இரு காதும்
முலை இரண்டும், இழந்தும் வாழ
ஆற்றுவனே? வஞ்சனையால், உமை உள்ள
பரிசு அறிவான் அமைந்தது அன்ரே?
காற்றினிலும் கனலினிலும் கடியானைக்
கொடியானைக் கரனை, உங்கள்
கூற்றுவனை, இப்பொழுதே கொணர்கின்றேன்'
என்று சலம் கொண்டு போனுள்.

பொ:—'என் முகத்திற்கு ஏற்ற அழகுடன் அமைந்திருந்த நீண்ட கொடிபோன்ற மூக்கையும், இருகாதுகளையும், முலை இரண்டையும், உங்களால் இழந்த பின்னரும், உங்களுடன் வாழச் சகிப்பேனே? இதுகாறும் கூறியனயாவும் உங்கள் நிலையை உள்ளவாறு அறிவதற்காக வஞ்சனையால் பேசியதேயன்ரே? காற்றைக் காட்டிலும் கடியவனை, - கனலைக் காட்டிலும் கொடியவனை - கரனை - உங்களுக்கு எமன் போன்றவனை இப்பொழுதே கொணர்கின்றேன்' என்று சொல்லி வயிரங்கொண்டு போனுள்.

கு :—'மேக்குயரும் நெடுமூக்கு மடந்தையர்க்கு மிகையன்றே" என்று அவரை வயப்படுத்த இகழ்ந்து கூறிய அவளே, இங்கு அவரைப் பயப்படுத்தவேண்டி 'ஏற்ற நெடுங் கொடிமூக்கு' என்று புகழ்ந்து கூறும் திறம் காணத்தக்கது. தன் சொற்கள் வஞ்சனை யாகப் பேசப்பெற்றவையே என்பதைத் தானே கூறுகின்றவள், அது வஞ்சனைச் சொல்லே என்பதற்குச் சான்றாக மூக்கும், இரு காதும், முலைஇரண்டும் இழந்தும் வாழ ஆற்றுவனோ? என்றாள். உறுப்புக்களை இழந்து வாழ்தலே இயலாது, அதனோடு உறுப்புக்களை வெறுப்புடன் அறுத்த பகைவரோடு கூடிவாழ்தல் எங்ஙனம் இயலும்? எனவே கூடிவாழ விரும்புவதாகக் கூறியன யாவும், வஞ்சனைச் சொற்களே என்றவாறு. இராம இலக்குவரின் நிலையை யுள்ளவாறறிதற்கு வஞ்சனையால் ஆசைமொழி பல கூறியும் அவர்கள் சிறிதும் விரும்பாமையோடு, அரக்கர்குலம் தொலைப்பான். தோன்றி நின்றதையும் உரைத்தார்கள்; ஆதலின், அவர்கள் நிலையை உள்ளவாறு உணர்ந்துகொண்டே சென்றாள் சூர்ப்ப ணகை என்க. தான் சென்று கூறியவுடன் வருதற்குரியவன் என் பதுணர்த்த, 'காற்றினிலும் கடியானை' என்றும், உங்களை அழித்தற் கேற்ற ஆற்றலுடையவன் என்பதுணர்த்த, 'கனலினிலும் கொடி யானை' 'உங்கள் கூற்றுவனை' என்றும், அவன் பெயர் இன்னது என்பது தோன்ற, 'கரனை' என்றும் கூறினாள். சலம், நெடிது நிற்கும் சினம்; வயிரம். காற்றினிலும் கடியானை, கனலினிலும் கொடியானை என முறை நிரனிறையாக்குக. காதல்கொண்டு வந்தவள், அது முற்றுப் பெருமையால் சலங்கொண்டு போனாள் என்க. இவள் கொண்ட சலமே, இராவணன் முதலிய இனத்தையும் சுட்டது என்பது பின்னர் அறியலாம். (143)

இச்செய்யுளின்பின் ஒரு சுவடியில் அடியிற்கண்ட பாடல் காணப்படுகின்றது.

2971 (1) மண்கிடந்து சிதலரிப்ப மறைபுக்க
வள்ளுகிரால் கதுவி நீய
வெண்கிடந்தா ரும்மையன் தலைதெறிக்க
வெய்கின்றே னிமையோர் காணக்
கண்குடைந்த பனைநொங்கின் மூக்கிழந்த
பகுவாயாற் கதறி மற்றுப்
புண்கிடந்த புலால்முகத்துப் புலைச்சீபோய்ப்
புலம்பாதே புகல்வா யென்றான்.

சூர்ப்பணகைப்படலம் முற்றிற்று.

# 6. கரன்வதைப் படலம்

கரனைக்கொன்ற செய்தி பேசுதலின் கரன்வதைப் படலம் என்று பெயராயிற்று. இப்படலத்துள்ள செய்யுள் 192. பயின்ற சந்தம் 11. புகுந்தமிகைச் செய்யுள் 5. 192 செய்யுட்களும் கரன்வதைப் படலம் என்ற தலைப்பிலேயே பெரும்பான்மையான சுவடிகளில் வரையப் பட்டுள்ளன. பழைய பதிப்புக்களிலும் அவ்வாறே உளது. கரதூட ணுதியர் வதைப்படலம் எனவும், கரதூடணுதிவதைப்படலம் எனவும், கரன் தூடணன் திரிசிரன் வதைப் படலம் எனவும் சிற்சில சுவடி களில் தலைப்பு வரையப்பட்டுளது.

மற்றும் சில சுவடிகளில் முதல் 111 செய்யுட்கள், கரன் படைத் தலைவர் வதைப்படலம் என்ற தலைப்பின் கீழும், 112 முதல் 140–ஆம் செய்யுள் முடியத் திரிசிரா வதைப் படலம் என்ற தலைப்பின் கீழும், 141-முதல் 161-ஆம் செய்யுள் முடியத் தூடணன் வதைப்படலம் என்ற தலைப்பின் கீழும், 162 முதல் 192-ஆம் செய்யுள் முடியக் கரன்வதைப்படலம் என்ற தலைப்பின் கீழும் நான்கு படலமாகப் பிரித்து எழுதப்பட்டுள்ளன. வேறு சில சுவடிகளில் முதல் 141 செய் யுட்களும் திரிசிராவதைப் படலமாக, அதற்குமேல் தூடணன் வதைப் படலமும் கரன் வதைப்படலமும் மேற்கூறியவாறு அமைய மூன்று படலமாகப் பிரித்து வரையப்பட்டுள்ளன. எனினும், தலைவனை கரன் அழிவு கூறவே, மற்றவர் அழிவும் பெறப்படும் ஆதலின் 192 செய்யுளும் கரன்வதைப்படலம் என்ற ஒரே தலைப்பின்கீழ்ப் பதிக்கலாயிற்று.

வான்மீகத்துள், கரன்வதம் ஆரணியகாண்டத்து 19-ஆம் சருக்கம் முதல் 30-ஆம் சருக்கம் முடியப் பன்னிரண்டு சருக்கங்களில் பேசப்பட்டுள்ளது. முன்னே தூடணனும் அடுத்துத் திரிசிராவும் இறுதியில் கரனும் இராமனுடன் போர்செய்து மாண்டதாக வான் மீகம் கூறும். முன்னே திரிசிராவும் அடுத்துத் தூடணனும் முடிவில் கரனும் இராமனுடன் போர்செய்து மாண்டதாக இராமாவதார நூல் கூறுகிறது.

கரன் இராவணனுக்குத் தம்பி முறையினன். பிரமன் புதல்வன் புலத்தியன்; புலத்தியன் புதல்வன் விச்சிரவசு; விச்சிரவசுவுக்கு இரண்டு மனைவியர்; இருவரும் உடன் பிறந்தோர்; ஒருத்தி கேகசி; மற்றொருத்தி கும்பீனசி; இராவணன் கும்பகருணன் சூர்ப் பணகை விபீடணன் என்போர் விச்சிரவசுவுக்குக் கேகசிபாற் பிறந்த

மக்கள்; கரனும் தூடணனும் விச்சிரவசுவுக்குக் கும்பீனசிபாற் பிறந்த மக்கள்; ஆகவே, கரனும் தூடணனும், தாய்வழியாலும் தந்தைவழியாலும் இராவணனுக்குத் தம்பியராதல் புலனாகும். திரிசிரா, கரனுடைய படைக்கு ஒரு தனித் தலைவன். காலகேயரொடு இராவணன் செய்த போரில் சூர்ப்பணகையின் கணவன் இராவணனால் கொல்லப்பட்டான். கணவனை இழந்த சூர்ப்பணகை விரும்பியவாறு மகிழ்ந்துவாழும்படி இராவணன் தண்டகாரணியத்தில் ஜனஸ்தானம் என்ற நாட்டை உண்டாக்கி, அங்கே அவளை இருத்தினான். அவளுக்கு உதவியாகக் கரதூடணர்களும் பெரும்படையுடன் இராவணனால் அனுப்பப்பட்டனர். கரன் தடுப்பரிய பேராற்றல் வாய்ந்தவன்; அவனுடைய பெரும்படையுள் வீரர் தொகைமட்டும் அறுபது லட்சம்; (3009) அவனுடன் சென்று இராமனை எதிர்த்த தேர்வீரர் தொகை பதினான்காயிரம்; (சுந்தர 351) அவர் ஊர்ந்த தேர்கள் வெண்கலத்தாலாயவை என்றும் கூறுவர். இவன் படை இயக்கரையும் அவுணரையும் தேவரையும் புறங்கண்ட வீறுடையது.

சூர்ப்பணகை, இராமலக்குமணரால் தான் மூக்கறுப்புண்டது கூறி முறையிடலும், கரன் வெகுண்டு போர்க்கு எழுகிறான் அது கண்ட அவன் படைவீரருள் பதினால்வர் தாமே சென்று இராம இலக்குவரைக் கொன்றுவருவதாகக் கூறிச் சூர்ப்பணகை வழி காட்டச் சென்று இராமனொடுபொருது மாளுகின்றனர். அவர் மாண்டதனைச் சூர்ப்பணகையால் அறிந்த கரன், இராமனுடன் பொருதற்குத் தன்தம்பி தூடணனும் தன் படைப்பெருந் தலைவரும் படைகளும் சூழப் புறப்படுகிறான். தீயநிமித்தங்கள் தோன்றுகின்றன. நிமித்திகனான அகம்பன் தீய நிமித்தங்களின் விளைவை விளக்கிக் கூறித் தடுக்கவும், அவனுரைகொள்ளாமல் போர்க்குச் செல்லுகிறான்.

முன்னே படைத்தலைவர் பதினால்வரும் இராமனொடு பொருது மடிகின்றனர். அதன்பின் திரிசிராவும் இராமன் கணைகளுக்கு இரையாகிறான். அப்பால் தூடணன் அஞ்சியோடிய படைகளைத் தடுத்து நிறுத்தி இராமனொடு பொருது தலையறுபட்டு இறக்கின்றான். தம்பியாகிய தூடணன் இறந்தது அறிந்து கரன் சினந்தெழுந்து எஞ்சிய படையுடன் சென்று போர் செய்வானாயினன். இராமன், 'இப்பொழுதே இவனைக் கொல்வேன்' என்று வாளியை வில்லில் ஏறிட்டு இழுத்தெய்ய முற்பட்ட அளவில், இராமன் வில் ஒடிந்தது. 'தேவரும் என்ன நேருமோ' என்று அஞ்சினர். வில்லற்ற நிலையில் இராமன் தன் கையைப் பின்னே நீட்டினான். இராமன், முன்பு பரசுராமனை வென்று பெற்று வருணன்பால் வைத்த வில்லை அவன்

அப்பொழுது இராமன் கையில் கொடுத்தனன். அதை வளைத்து இராமன் நூறுபாணங்களால் கரன் தேரைச் சிதைவித்தான். தேரழிதலும் கரன் வானிடை நின்று இராமன் தோள்மலைகளில் அம்பு மழை பொழிந்தனன். இராமன் கரன் ஏவிய அம்புகளைத் தன் அம்புகளால் சிதைவித்ததன்றி அவன் வலக்கரத்தையும் தோளுடன் துண்டித்து வீழ்த்தினன். வலக்கை அறுபடவே, கரன் இடக்கையால் ஓர் உலக்கையினை இராமன்மேல் எறிந்தான். இராமன் அதனை ஓர் அம்பால் ஒழிவித்தான். உலக்கை ஊறு பட்டது கண்ட கரன் சினந்து ஒரு மராமரங்கொண்டு இராமனைத் தாக்க முற்பட்டான். இராமன் ஒரு கணையை ஏவினன். இராவணன் தன் வரபலத்தாலும் மாயப் போராற்றலாலும் செருக்குற்று உலகம் எல்லாவற்றுள்ளும் வாழ்வாரைப் பெரிதும் வருத்திய பாவத்தால் அவன் வலக்கரம் அற்றாற்போலக் கரன் அற்றான் என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கம்.

இக்காண்டத்துப் பேசப்படும் போர் இரண்டு; ஒன்று இராமன் விராதனொடு நிகழ்த்தியது ; மற்றொன்று கரனோடு நிகழ்த்தியது. இரண்டும் பிராட்டிகாண நிகழ்ந்தவை ; பிராட்டியால் பாராட்டப் பட்டவை (சுந்தர. 358. 351). கரனை இராமன், அவன் பெரும்படையோடும் துணைவரோடும் மூன்று நாழிகையளவிற் கொன்றனன் ; (சுந்தர. 351) கரனழிவு இராவணன் மரபின் அழிவின் தொடக்கமாகும். இப்படலத்துப் போர் வருணனையும் போர்க்கள வருணனையும் படித்தின்புறத்தக்கவை. தோற்று அஞ்சியோடும் அரக்கரை நோக்கித் தூடணன் கூறுவனவாக அமைந்த செய்யுட்கள் வீராவேசத்தை மிருவிப்பனவாக உள்ளன.

---

# 6. கரன்வதைப் படலம்

சூர்ப்பணகை கரன் முன் விழுந்து புரளுதல் 2972–2973

2972. இருந்த மாக்கரன் றாளிணை யின்மிசைச்
★ சொரிந்த சோரியள் கூந்தல டூம்பெனத்
தெரிந்த மூக்கினள் வாயினள் செக்கர்மேல்
விரிந்த மேக மெனவிழுந் தாளரோ.

இருந்த மாக் கரன் தாள் இணையின் மிசைச்
சொரிந்த சோரியள், கூந்தலள், தூம்பு எனத்
தெரிந்த மூக்கினள், வாயினள், செக்கர் மேல்
விரிந்த மேகம் என விழுந்தாள்; அரோ.

பொ :—(போன சூர்ப்பணகை,) பெருக்கெடுத்துச் சிந்தும் குருதியையுடையவளும் அவிழ்ந்து தொங்கும் கூந்தலையுடையவளும் மதகின் துளைபோன்று காணப்படுகின்ற மூக்கையும் வாயையும் உடையவளும் ஆகி, தன் நகரில் இருந்த கரனுடைய அடியிணையின் மிசை, செவ்வானம் மேலே பரவிய (கரிய) மேகம் (விழுந்தது)போல் விழுந்தாள்.

கு :—போன சூர்ப்பணகை என்பது முன்படலத்திறுதிச் செய்யுளினின்று கொள்ளப்பட்டது. சோரியள், கூந்தலள், மூக்கினள், வாயினள், கரன் தாளிணையின் மிசை, செக்கர் மேல் விரிந்த மேகம் என விழுந்தாள் என இயைக்க. சோரி - குருதி. தூம்பு - மதகின் துளை. செக்கர் - செவ்வானம். குருதி பரவிப்படிந்த சூர்ப்பணகையின் கரிய பெரிய வுருவுக்கு, மேலே செவ்வானம் பரவநின்ற மேகம் உவமை. (1)

2973. அழுங்கு நாளிதென் றந்தக னாணையாற்
றழங்கு பேரி யெனத்தனித் தேங்குவாண்
முழங்கு மேக மிடித்தவெந் தீயினாற்
புழுங்கு நாக மெனப்புரண் டாளரோ.

'அழுங்கும் நாள் இது' என்று அந்தகன் ஆணையால்
தழங்கு பேரி எனத் தனித்து ஏங்குவாள்,

முழங்கும் மேகம் இடித்த வெம் தீயினுல்
புழுங்கும் நாகம் எனப் புரண்டாள் அரோ !

பொ :—'இது, (அரக்கர்) அழியும் நாள்' என்று இயமன் கட்டளையால் முழங்குகின்ற பேரிகையின் ஒலிபோலத் தனித்து நின்று அழுபவளான சூர்ப்பணகை, ஒலிக்கின்ற மேகத்தினின்றும் வெளிப்பட்ட இடியின்கண் உளதாகிய கொடிய நெருப்பினுல் வெதும்பிய பாம்புபோலப் புரண்டாள்.

கு :—அழுங்குதல் - அழிதல். அந்தகன் - இயமன். தழங்குதல் - முழங்குதல். ஏங்குதல் - அழுதல். புழுங்குதல் - வெதும்புதல். சூர்ப்பணகையின் அழுகுரலுக்குப் பேரிகையின் ஒலி உவமை. சூர்ப்பணகையின் அழுகுரல், பின் நிகழ இருக்கும் அரக்கரழிவை முன் அறிவிக்கும் தீய நிமித்தமாயிற்று என்றவாறு. அரோ அசை. (2)

கரன் வினவுதல்

2974. வாக்கிற் கோபப் புகைமுந்து வாயினு
ஞேக்கிக் கூசலர் நுன்னையித் தன்மையை
யாக்கிப் போனவ ரார்கொலென் ருனவண்
மூக்கிற் சோரி முழீஇக்கொண்ட கண்ணினுன்

வாக்கின் கோபப் புகை முந்து வாயினுன்,
நோக்கிக் 'கூசலர், நுன்னை இத்தன்மையை
ஆக்கிப் போனவர், ஆர்கொல் ?' என்ருன் ; அவள்
மூக்கின் சோரி முழீஇக்கொண்ட கண்ணினுன்.

பொ :—அச்சூர்ப்பணகையின் மூக்கினின்று பெருகிய இரத்தத்திற் பதிந்த கண்களையுடையவனும் சுடுசொல்லினும் சினத்தீயினுல் மூண்ட புகை முந்தியெழுகின்ற வாயினையுடையவனுமான கரன், அவளை நோக்கிச் 'சிறிதும் அஞ்சாமல் உன்னை இவ்வாறு மானமழியும்படி செய்து போனவர் யார் ?' என்று வினவினுன்.

கு :—கண்ணினுன் வாயினுன் நோக்கி, நுன்னை இத்தன்மையை ஆக்கிப்போனவர் ஆர்? என்ருன் என இயையும். சோரி - இரத்தம். முழீஇக் கொள்ளுதல் - முழுகிப்பதிதல். வாக்கின் - வாக்கினும். வாக்கு - சொல். நுன்னை - உன்னை. கொல், அசை. வாக்கிற் கோபப் புகைமுந்து வாயினுன் என்றது கரன் வெகுண்டு நின்ற நிலையினைப் புலப்படுத்தியவாறு. (3)

## சூர்ப்பணகை கூறுதல் 2975-2978

**2975.** இருவர் மானிடர் தாபத ரேந்திய
வரிவில் வாட்கையர் மன்மதன் மேனியர்
தரும நீரர் தயரதன் காதலர்
செருவி னேரு நிருதரைத் தேடுவார்.

இருவர், மானிடர், தாபதர், ஏந்திய
வரி வில் வாள் கையர், மன்மதன் மேனியர்,
தரும நீரர், தயரதன் காதலர்,
செருவில் நேரும் நிருதரைத் தேடுவார்.

பொ :—இரண்டு மனிதர், தவநிலை மேற்கொண்டவர், கட்டமைந்த வில்லும் கத்தியும் தாங்கிய கைத்தலமுடையோர், மன்மதனையொத்த (அழகிய) உடலுடையார், அறத்தின் தன்மை உடையார், தசரத சக்கரவர்த்தியின் மக்கள், போரில் எதிர்ப்படும் அரக்கரைத் தேடுவோர்.

கு :—கரன் வினவுக்குச் சூர்ப்பணகை கூறும் மறுமொழி, இச்செய்யுள் முதல் நான்கு செய்யுள் வரை குளகமாய்த் தொடர்ந்து சென்று 'சொல்லினள்' என்று முற்றுப்பெறும். செரு - போர். நேர்தல் - எதிர்ப்படுதல். நிருதர் - அரக்கர். நிருதரைத் தேடுவது அவரை அழித்தற்கென்பது சூர்ப்பணகைப்படலம் 135-137 பாடல்களால் புலனாகும். (4)

**2976.** ஒன்று நோக்கல ருன்வலி யோங்கற
நின்று நோக்கி நிறுத்து நினைப்பினர்
வென்றி வேற்கை நிருதரை வேரறக்
கொன்று நீக்குது மென்றுணர் கொள்கையார்.

ஒன்றும் நோக்கலர் உன் வலி, ஓங்கு அறம்
நின்று நோக்கி நிறுத்தும் நினைப்பினர்,
'வென்றி வேல் கை நிருதரை வேர் அறக்
கொன்று நீக்குதும்' என்று உணர் கொள்கையார்.

பொ :—சிறந்த அறத்தைச் சிறிதும் நழுவாது நின்று பாதுகாத்து (உலகெங்கும்) நிலை நிற்கச் செய்யும் நினைவுடையார்; உன் ஆற்றலைச் சற்றும் எண்ணாமல், வெற்றிபெற்ற வேலைக் கைக்கொண்ட அரக்கரை (யெல்லாம்) கால்வழியின்றி அழியும்படி கொன்றொழிப்போமென்று உறுதிபூண்ட கொள்கையுடையார்.

கு :—நிற்றல் - நிலைபிறழாது தங்குதல். நோக்குதல் - பாது காத்தல். நிறுத்தல் - நிலைநாட்டுதல். இவ்விரண்டு செய்யுளாலும் தன்னை இத்தன்மை ஆக்கினர் இவர் என்பதும், அவருடைய ஆற்றலும் தோற்றமும் நோக்கமும் இவை என்பதும் கூறியவாறு. (5)

2977. மண்ணி னோக்கரு வானினின் மற்றினி
னெண்ணி னோக்குறின் யாவரு நேர்கிலாப்
பெண்ணி னோக்குடை யாளொரு பேதையென்
கண்ணி னோக்கி யுரைப்பருங் காட்சியாள்.

மண்ணில் நோக்கரு வானினில் மற்றினின்
எண்ணில் நோக்கு உறின் யாவரும் நேர்கிலாப்
பெண்ணின் நோக்கு உடையாள் ஒரு பேதை, என்
கண்ணின் நோக்கி உரைப்பருங் காட்சியாள்.

பொ :—நிலவுலகத்திலும் காண்டற்கரிய விண்ணுலகத்திலும் மற்றும் உள்ள உலகங்களிலும் ஆராய்ந்துபார்க்குங்கால் ஒருவரும் ஒப்பாகாத பெண்களுக்குரிய அழகெல்லாம் ஒருங்குடையாளாகிய ஒரு பெண், என் கண்ணால் காண்டற்கும் உரைத்தற்கும் இயலாத தோற்றப்பொலிவுடையாள் (அவர்பால் உளள்.)

கு :—நேர்தல் - ஒத்தல். நோக்கு - அழகு. காட்சி - தோற்றப் பொலிவு. ‘ஒரு பேதையேன் கண்ணில் நோக்கி’ என்று பாடங் கொண்டு ‘சிறிதும் அறிவற்றவளாகிய என் கண்ணால் நோக்கி’ என்று பொருளுரைத்தலும் ஆம். ‘யாவரும் நேர்கிலாப் பெண்ணின் நோக்குடையாள்’, ‘உரைப்பருங் காட்சியாள்’ என்பவற்றோடு ‘ஒலிகடல் உலகினில் உம்பர் நாகரில் பொலிவது மற்றிவள் பொற்பு’ (1326), ‘அயல்வேறு ஓர் ஒப்பு எங்கே கொண்டு எவ்வகை நாடி உரைசெய்வேம்’ (587), ‘கமையாள் மேனிகண்டவர் காட்சிக் கரைகாணார்’ (588) என ஆசிரியர் முன்னே கூறினமையும் நோக் கத்தகும். அவர்பால் உளள் என வேண்டும் சொற்கள் வருவித் துரைக்கப்பட்டன. (6)

2978. கண்டு நோக்கருங் காரிகை யாடனைக்
கொண்டு போவ னிலங்கையர் கோக்கென
விண்டு மேல்விழுந் தேனை வெகுண்டவர்
துண்ட மாக்கினர் மூக்கெனச் சொல்லினாள்.

"கண்டு, நோக்கரும் காரிகையாள் தனைக்
கொண்டு போவன் இலங்கையர் கோக்கு எனு
விண்டு மேல் விழுந்தேனை, வெகுண்டு, அவர்,
துண்டம் ஆக்கினர் மூக்கு' எனச் சொல்லினுள்.

பொ :—அவளைப் பார்த்துக் காண்டற்கரிய அழகுடையாளாகிய இவளை இலங்கையரசனுகிய இராவணனுக்காக எடுத்துச் செல்வேனென்று கருதி, அவள்மேற் பாய்ந்த என்னைச் சினந்து மூக்கைத் துண்டித்தனர்' என்று (சூர்ப்பணகை) கூறினுள்.

கு :—காரிகை - அழகு. கோக்கு - கோவுக்கு. விண்டு-சொல்லி. துண்டம் - துண்டு. மூக்கிழந்தமை கூறவே, தனமும் காதும் ஆகிய பிறவுறுப்புக்களையிழந்தமையும் பெறப்படும். (7)

இங்கு 2, 4, 45, 52 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

2978 (a) ஆற்றே னுற்றே னதுகெட்டே
னறுத்தா னறுத்தா னென்மூக்கைக்
கூற்றே கூற்றே யென்னுடலைக்
குலையுங் குலையு மதுகண்டீர்
காற்றே தீயே யெனத்திரியுங்
கரனே கரனுக் கிளையோரே
தோற்றேன் றோற்றேன் வல்லபங்க
ளெல்லா வகையுந் தோற்றேனே.

## கரன் வெகுண்டெழுதல் 2979-2980

2979. கேட்ட னன்னுரை கண்டனன் கண்ணிறற்
றோட்ட நுங்கிற் றொளையுறு மூக்கினைக்
காட்டெ னுவெழுந் தானெதிர் கண்டவர்
நாட்டந் தீய வுலகை நடுக்குவான்.

கேட்டனன் உரை; கண்டனன், கண்ணிறல்
தோட்ட நுங்கில் தொளை உறும் மூக்கினை;
'காட்டு' எனு எழுந்தான்; எதிர் கண்டவர்
நாட்டம் தீய உலகை நடுக்குவான்.

பொ :—உலகமெல்லாம் நடுக்கம் அடையும்படி செய்பவனை கரன், அவள் கூறிய சொற்களைக் கேட்டு, நுங்கு தோண்டி யெடுக்கப்

பட்ட பனங்காய்போலத் தொளையுற்ற சூர்ப்பணகையின் மூக்கைத் தன் கண்ணால் கண்டான்; (உன்னை இத்தன்மை செய்தாரைக்) 'காட்டுக' என்று எதிர் கண்டாருடைய கண்கள் தீயும்படி (சினந்து) எழுந்தான்.

கு:—உலகை நடுக்குவான், உரை கேட்டனன்; மூக்கினைக் கண்ணினால் கண்டனன்; 'காட்டு' என எதிர்கண்டவர் நாட்டம் தீய எழுந்தான் என இயைக்க. தோட்ட - தோண்டியெடுக்கப் பட்ட. நுங்கு என்றது, பனங்காயினை.. நாட்டம் - கண். தீதல் - அழிதல். தன் தங்கையை மானிடர் மூக்கறுக்கக் கண்டிருந்தது குற்றமாதலின் எதிர்கண்டவர் கண்களைப் பறிக்கும் சினத்தோடெழுந் தான் என்க. (8)

2980. எழுந்து நின்றுல கேழு மெரிந்துகப்
பொழிந்த கோபக் கனலுகப் பொங்குவான்
கழிந்து போயினர் மானிட ரென்னுங்கா
லழிந்த தோவிவ் வரும்பழி யென்னுமால்.

எழுந்து நின்று, உலகு ஏழும் எரிந்து உகப்
பொழிந்த கோபக் கனல் உகப் பொங்குவான்,
'"கழிந்துபோயினர் மானிடர்" என்னுங்கால்,
அழிந்ததோ? இவ் அரும்பழி' என்னுமால்.

பொ:—(கரன்) எழுந்துநின்று ஏழுலோகமும் எரிந்து கெடும்படி நிறைந்த சினத்தீச் சிந்தக் கொதிப்பவனாய், (நின்னை இத்தன்மை செய்த) மானிடர் இறந்தொழிந்தனர் என்னும் சொல் எழுந்த காலத்தும் இந்நீங்காத பழி அழிந்ததாகுமோ? (ஆகாதே) என்று கூறினான்.

கு:—உகுதல் - கெடுதல்; அழிதல். பொழிதல் - நிறைதல்; 'பொழிந்த மணித்தண்டு' (உஞ்சைக். 47. 110) என்பது பெருங் கதை. அழிந்ததோ என்பதனுள் ஓகாரம் எதிர்மறை. பின்னிரண் டடிகளால், இக்குறை செய்த மானிடர் ஒழிந்தாலும் இராவணன் தங்கை மூக்கறை என்னும் பழிச்சொல் ஒழியாதே என்று கரன் இரங்கியவாறு. (9)

கரன் போர்க்கு எழ, அடுத்திருந்த வீரர் பதினால்வர் போர்ப்பணி தமக்குத் தருமாறு வேண்டல் 2981-2983

2981. வருக தேரெனு மாத்திரை மாடுளோ
ரிருகை மால்வரை யேழினெ டேழனு
ரொருகை யாலுல கேந்து முரத்தினர்
தருக விப்பணி யெம்வயிற் றானென்றார்.

'வருக தேர்' எனும் மாத்திரை மாடு உளோர்,
இரு கை மால் வரை ஏழினொடு ஏழ் அனர்,
ஒரு கையால் உலகு ஏந்தும் உரத்தினர்,
'தருக இப்பணி எம் வயின்' தான் என்றார்.

பொ :—'(என்) தேர் வருக' என்று கரன் கூறிய அளவில், அவன் பக்கத்தே இருந்தவரும் ஒருகையால் உலகத்தைத் தாங்கும் ஆற்றலுடையவரும் இரண்டுகையினையுடைய பெரிய மலைகளைப் போன்றவருமாகிய பதினான்கு வீரர்கள், 'இப்பணியை எங்களிடம் தருக' என்று கூறினர்.

கு :—மாடுளோர், உரத்தினர், வரை ஏழினொடேழனர் 'இப்பணி எம்வயிற்றருக' என்றார் என இயையும். மாடு - பக்கம். மாத்திரை - அளவு. இருகை மால்வரை ஏழினொடேழனர் என்பது இல்பொருளுவமை. (10)

2982. சூலம் வாண்மழுத் தோமரஞ் சக்கரங்
கால பாசங் கதைபொரு கையினர்
வேலை ஞாலம் வெருவுறு மார்ப்பின
ரால காலந் திரண்டன்ன வாக்கையார்.

சூலம் வாள் மழுத் தோமரம் சக்கரம்
காலபாசம் கதை பொரு கையினர்;
வேலை ஞாலம் வெரு உறும் ஆர்ப்பினர்;
ஆலகாலம் திரண்டன்ன ஆக்கையார்.

பொ :—சூலம் வாள் கோடாலி உலக்கை சக்கரம் காலபாசம் தண்டம் என்னும் படைகள் பொருந்திய கைகளையுடையவரும், கடல் சூழ்ந்த உலகம் அஞ்சும் ஆரவாரத்தையுடையவரும், ஆலகாலவிடம் திரண்டு உருவுகொண்டாலன்ன உடலுடையவரும்,

கு :—தோமரம் - உலக்கை. காலபாசம் என்பது ஒருவகைக் கயிறு. இயமனுடைய பாசம்போல உயிர்களைக் கவர்தலின் கால பாசம் என்றார். கதை - தண்டாயுதம். பொருதல் - பொருந்துதல்; 'பொய்பொருமுடங்குகை' (15.50) என்பது சிலப்பதிகாரம். திரண் டாலன்ன என்பது திரண்டன்ன என விகாரப்பட்டு நின்றது, இதுவும் பின்வருஞ் செய்யுளும் ஒருதொடர். கையினர் ஆக்கை யார், ஆர்ப்பினர், கனலர் விலக்கினர் என முடியும். (11)

2983. வெம்பு கோபக் கனலர் விலக்கினர்
நம்பி யெம்மடி மைத்தொழி னன்றெனு
வும்பர் மேலின் றுருத்தனை போதியோ
விம்பர் மேலினி யாமுளெ மோவென்றார்.

வெம்பு கோபக் கனலர் விலக்கினர்;
'நம்பி! எம் அடிமைத்தொழில் நன்று!' எனு
'உம்பர்மேல் இன்று உருத்தனை போதியோ?
இம்பர்மேல் இனி யாம் உளெமோ?' என்றார்.

பொ :—கொதிக்கின்ற சினக்கனலையுடையவரும் ஆகிய அப்பதி னால்வரும், (கரனைநோக்கி) 'நம்பி! எங்கள் அடிமைப்பணி நன்று!' என்று கூறி, 'நீ இன்று தேவர் மேலோ சினந்து (போர் செயச்) செல்லுகின்றாய்? அன்றே, (மனிதர் மேலாயின்) இத்தரை மேல் இனி யாங்கள் உள்ளேமாவேமோ? ஆகோம்' என்று கூறினவ ராய், அவன் செலவைத் தடுப்பாராயினர்.

கு:—நம்பி அண்மைவிளி. 'எம் அடிமைத் தொழில் நன்று' என்றது, அவர்கள், தம் அடிமைப் பணியை இகழ்ந்து கூறியவாறு. அவர்கள் இருக்கவும், அவர்களை ஏவாது, தான் போர்க்குச் செல்ல முற்பட்டமையால், அவர்களடிமைப்பணி பயனற்றதாயிற்று என்று கருதி அவ்வாறு கூறுவாராயினர். போதியோ? உளெமோ? என்பவற்றுள் ஓகாரம் எதிர்மறைப்பொருளிற் பயின்றது. நீ தேவர் மேற் போர்க்குச் சென்றால் அது தகும்; அவர்மேற் செல்லவில்லை; மானிடர் மேற்செல்ல முற்பட்டனை; யாம் இருக்கவும் எங்களை ஏவாது நீ செல்லுதலால் யாங்கள் இருந்தும் இறந்தோமானோம். என்றவாறு. உம்பர் - வானுலகு; இங்கு ஆகுபெயராய்த் தேவரை உணர்த்திற்று. உருத்தல் - வெகுளுதல். இம்பர் - இவ்வுலகம். மேல் - ஏழனுருபு. என்றார் என்பது முற்றெச்சம். இனி 'உம்பர் மேலும் உருத்தனை போதியோ' என்ற பாடம் கொண்டு, தேவர் மாட்டும் எங்களை ஏவாது நீ சினந்து செல்வாயோ? செல்லாய்.

இன்று மானிடர் மாட்டும் எங்களை ஏவாது நீ செல்லுதலால் யாங்கள் இருந்தும் இறந்தோம் ஆனோம் என்று பொருளுரைத்தலும் அமையும். (12)

## கரன், வீரர் வேண்டுகோட்கு இசைதல்

2984. நன்று சொல்லினிர் நானிச் சிறுர்கண்மேற்
சென்று போர்செயிற் றேவர் சிரிப்பராற்
கொன்று சோரி குடித்தவர் கொள்கையை
வென்று மீளுதிர் மெல்லிய லோடென்றுன்.

'நன்று சொல்லினிர்! நான் இச் சிறுர்கள் மேல்
சென்று போர் செயின், தேவர் சிரிப்பரால்;
கொன்று, சோரி குடித்து, அவர் கொள்கையை
வென்று, மீளுதிர் மெல்லியலோடு' என்றுன்.

பொ:—கரன், (வீரர் பதினுல்வரையும் நோக்கி) 'நல்லது சொன்னீர்; யான் இந்தச் சிறியவர்மேற்சென்று போர்செய்தால் தேவர்கள் சிரிப்பர்; (நீங்களே சென்று அச்சிறியோரைக்)கொன்று அவர்களுடைய குருதியைக் குடித்து அவர்களுடைய கோட்பாட்டை ஒழித்து மென்மைத்தன்மையுடையாளொடு திரும்புவீராக' என்று கூறினுன்.

கு:—வலியார் மெலியார்மேற் செல்வது, தகாது; பகைவர் பரிகசித்தற்கு இடமாகும்; ஆதலால் தேவர் சிரிப்பர் என்று கூறுவானுயினன். அவர் கொள்கை என்றது, 'வென்றி வேற்கை நிருதரை வேரறக்கொன்று நீக்குதும் என்றுணர் கொள்கையார்' என்று 2976ஆம் பாட்டிற் கூறியதனை. வெல்லுதல் - அழித்தல். 'மெல்லியலோடு மீளுதிர்' என்றது, சீதாபிராட்டியையும் சிறைப்பிடித்து வருக என்றவாறு. மெல்லியல் என்றது சீதாபிராட்டியை; சூர்ப்பணகையை என்பாரும் உண்டு. (13)

## கரன் வீரர் பதினுல்வரும் இராமனிருக்குமிடம் அடைதல்

2985. என்ன லோடும் விரும்பி யிறைஞ்சினுர்
சொன்ன நாணிலி யந்தகன் றூதென
வன்னள் பிற்படர் வாரென வாயினுர்
மன்னன் காதலர் வைகிட நண்ணினுர்.

என்னலோடும் விரும்பி இறைஞ்சினர்,
சொன்ன நாண் இலி அந்தகன் தூது என,
அன்னள் பின் படர்வார் என ஆயினர்,
மன்னன் காதலர் வைகு இடம் நண்ணினர்.

பொ :—என்று கரன் கூறுதலும், விரும்பி (அவனை) வணங்கியவரான வீரர், (அவன்பால் வந்து தன் துயர்நிலை) கூறிய நாணற்றவளான சூர்ப்பணகை இயமன் ஏவிய தூதாக, அவள் பின் செல்பவர்களாய்த் தசரத மன்னனுடைய காதற்புதல்வராகிய இராம இலக்குவர் தங்கியிருந்த வனத்தை அடைந்தார்கள்.

கு :—நாண் இலி - வெட்கம் அற்றவள் ; கணவனை யிழந்தமையால் மங்கலநாண் அற்றவளான சூர்ப்பணகை என்று கொள்ளலும் ஆம். அந்தகன் - இயமன். படர்தல் - செல்லுதல். ஆயினர் முற்றெச்சம். நாணிலி அந்தகன் தூதென அன்னள் பிற்படர்வாரென ஆயினர் என்றது, அவர் வென்று மீளார், மாண்டொழிவர் என்பது உணர நின்றது. மன்னன் என்றது தசரதசக்கரவர்த்தியை. காதல் - அன்பு. (14)

### சூர்ப்பணகை வீரர்க்கு இராமனைக் காட்டுதல்

2986. துமிலப் போர்வல் லரக்கர்க்குச் சுட்டின
ளமலத் தொல்பெய ராயிரத் தாழியா
னிமலப் பாத நினைவி னிருந்தவக்
கமலக் கண்ணனைக் கையினிற் காட்டினள்.

துமிலப் போர் வல் அரக்கர்க்குச் சுட்டினள்,
அமலத் தொல் பெயர் ஆயிரத்து ஆழியான்
நிமலப் பாதம் நினைவின் இருந்த அக்
கமலக் கண்ணனைக் கையினில் காட்டினள்.

பொ :—குற்றம் அற்ற பழமையான ஆயிரம் பெயர்களையும் சக்கரப் படையினையும் உடைய திருமாலின் குறையில்லாத திருவடிகளை நினைவிற்கொண்டு இருந்த, தாமரை மலர்போலும் கண்களையுடைய அவ்விராமனைப் பேராரவாரத்தோடு போர் புரிதலில் வல்லவரான கரன்வீரர்க்கு(ச் சூர்ப்பணகை தன்) கையாற் சுட்டிக்காட்டினள்.

கு :—கமலக்கண்ணனை அரக்கர்க்குச் சுட்டினள் காட்டினள் என இயையும். துமிலம் - பேராரவாரம். கமலக்கண்ணன் என்றது

இங்கே இராமனைக் குறித்தது. சுட்டினுள் என்பது முற்றெச்சம். அமலத்தொல் பெயராயிரத்தாழியான் என்றது இராமனுடைய குல தெய்வமான அரங்கநகரப்பனை; 'கோதறு தவத்துத் தன் குலத்துளோர் தொழும் ஆதியஞ்சோதியை அடிவணங்கினன்' (1294) என்றதும் நோக்கத்தகும். இக்கவியமைப்பு 'அமலனாதிபிரான்' என்னும் பெரியார் அருளிச் செயலை நினைவூட்டுகிறது. (15)

### கரன்வீரர் இராமனை வளைதல்

2987. எற்று வாம்பிடித் தேந்தின மென்குநர்
பற்று வாநெடும் பாசத்தி னென்குநர்
முற்று வாமிறை சொன்முறை யாலெனாச்
சுற்றி னார்வரை சூழ்ந்தன்ன தோற்றத்தார்.

'எற்றுவாம் பிடித்து ஏந்தினம்' என்குநர்,
'பற்றுவாம் நெடும் பாசத்தின்' என்குநர்,
'முற்றுவாம் இறை சொல் முறையால்' எனாச்
சுற்றினார் வரை சூழ்ந்தன்ன தோற்றத்தார்.

பொ:—(சூர்ப்பணகை சுட்டிக்காட்ட இராமனைக் கண்ட கரன் வீரர், 'இவனைப்) பிடித்து ஓங்கி எற்றுவோம்' என்பாரும், 'பெரிய பாசம் என்னும் படையால் கட்டிக் கைக்கொள்வோம்' என்பாரும் ஆகி, 'நம் தலைவ(னான கர)ன் சொற்படி நிறைவேற்றுவோம்' என்று மலைகள் வளைந்தாற்போன்ற தோற்றத்தை யுடையராய் இராமனை வளைந்தார்கள்.

கு:—எற்றுதல் - மோதுதல். ஏந்துதல் - ஓங்குதல். ஏந்தினம் முற்றெச்சம். பாசம் - ஒருவகைப்படை; பகைவரைப் பிணித்தற்கு உதவுவது. இறை யென்றது கரனை. இறை சொல் முறை என்றது, 'கொன்று சோரி குடித்தவர் கொள்கையை, வென்று மீளுதிர் மெல்லியலோடு' என்று 13-ஆம் பாட்டிற் கூறியதனை. (16)

### இராமன் போர்க்கு எழுதல்

2988. ஏத்து வாய்மை யிராம னிளவலைக்
காத்தி தையலை யென்றுதன் கற்பகம்
பூத்த தன்ன பொருவி றடக்கையா
லாத்த நாணி னருவரை வாங்கினான்.

ஏத்து வாய்மை இராமன், இளவலைக்
'காத்தி தையலை' என்று, தன் கற்பகம்
பூத்தது அன்ன பொரு இல் தடக்கையால்
ஆத்த நாணின் அருவரை வாங்கினான்.

பொ :—போற்றத்தக்க வாய்மையாளனான இராமன், தம்பியை நோக்கி, 'சீதையைக் காத்தி' என்று கூறி, ஒப்பற்ற கற்பகம் விளங்கியது போன்ற தடுத்தல் அரிய பெரிய தன் கையினால், கட்டப்பட்ட நாணினையுடைய சிறந்த மலைபோலும் வில்லைக்கொண்டான்.

கு :—இளவல் - தம்பி; இலக்குவன். தையலைக் காத்தி என இயையும். தையல் என்றது சீதாபிராட்டியை. பூத்தல் - விளங்குதல். தன்கை, கற்பகம் பூத்ததன்ன கை, பொரு இல் கை, தடக்கை என்க. இராமன் கைக்குக் கற்பகம் உவமை. 'கற்பகக் காவு பற்பல வன்ன......தோளாயிரம் தழைத்த நெடியோய்' (திவ். திருவாசிரியம், 5.), 'கற்பகக்காவன நற்பல தோளற்கு' (திருவாய் மொழி, 6. 6. 6.) என்றார் பெரியாரும். பொரு - தடை. 'உருவாகிய ஆறு சமயங்கட்கெல்லாம் பொருவாகி நின்றான்.' (9. 4. 8) என்னும் திருவாய்மொழியுள், பொரு தடை என்னும் பொருளிற் பயின்றது. ஆத்தல் - பிணித்தல், கட்டுதல்; இஃது இப்பொருள் தருதல், 'ஆத்தமனையாள்' (திருமந்திரம். 244), 'ஆத்த பொறிய', 'ஆத்த அறிவின்' (நாலடி. 290, 351) 'தண்டாரணியத்துளங்காத்திருந்தானை' (சீவகசிந்தாமணி. 1882) என்பவற்றால் அறியலாம். இராமன் வில்லுக்கு மலை உவமை. (17)

### இராமன் கரன் வீரரொடு பொருதல் 2989–2990

2989. வாங்கி வாளொடு வாளிபெய் புட்டிலுந்
தாங்கித் தாமரைக் கண்ணனச் சாலையை
நீங்கி யிவ்வழி நேர்மின டாவெனா
வீங்கு தோளன் மலைதலை மேயினான்.

வாங்கி, வாளொடு வாளி பெய் புட்டிலும்
தாங்கித் தாமரைக் கண்ணன், அச் சாலையை
நீங்கி, 'இவ்வழி நேர்மின் அடா' எனா,
வீங்கு தோளன், மலைதலை மேயினான்.

பொ :—தாமரை மலர்போலுங் கண்களையுடைய இராமன், (போர் நேர்ந்தமையால்) பூரித்த தோள்களையுடையவனாகி, (தான்கொண்ட வில்லை) வளைத்து, உடைவாளையும் அம்புகள் வைத்துள்ள தூணி

யையும் தரித்து, (தான் தங்கியிருந்த) அந்தச் சாலையை விட்டு நீங்கிப் புறப்பட்டு, 'அடா! இவ்விடம் போர்க்கு வாருங்கள்' என்று போர் செய்யத் தொடங்கினன்.

கு :—வாங்குதல் - வளைத்தல். வாளி - அம்பு. பெய்தல் - செருகி வைத்தல். புட்டில் - தூணி; அம்புகளை வைக்கும் கருவி. பெய்தல்- பொழிதல் என்றுகொண்டு வாளி பெய் புட்டில் என்பதற்கு அம்புகளை அளவிறந்துதரும் அம்பு அருத்தூணி என்று பொருள் கொள்ளுதலும் ஆம். இவ்வழி – இவ்விடம். நேர்தல் - எதிர்தல். நேர்மின் அடா என்பது, செறலின்கட் பால் மயங்கி வழுவமைதி யாயிற்று. தாமரைக் கண்ணன், வீங்குதோளன் (ஆகி), வாங்கி, தாங்கி, நீங்கி, மலைதலைமேயினன் என முடியும். (18)

2990. மழுவும் வாளும் வயங்கொளி முச்சிகைக்
கழுவுங் காலவெந் தீயன்ன காட்சியா
ரெழுவி னீடடக் கையெழு நான்கையுந்
தழுவும் வாளிக ளாற்றலஞ் சார்த்தினன்.

மழுவும், வாளும், வயங்கு ஒளி முச்சிகைக்
கழுவும், கால வெம் தீ அன்ன காட்சியார்
எழுவின் நீள் தடக் கை எழு நான்கையும்,
தழுவும் வாளிகளால் தலம் சார்த்தினன்.

பொ :—(போர் செய்யத் தொடங்கிய இராமன்), ஊழிக் கால(த்தில் உலகை அழித்தற்கு எழும்) கொடிய நெருப்பினை யொத்த தோற்றம் பொருந்திய அவ்வீரருடைய கோடாலியையும் கத்தியையும் மிக்க ஒளிவாய்ந்த முத்தலைச் சூலத்தையும் (அவற்றைத் தாங்கிய) தூணைப்போலத் திரண்டு நீண்ட பெரிய இருபத்தெட்டுக் கைகளையும், பொருந்திய அம்புகளால் (துணித்து) நிலத்தில் வீழ்த்தினன்.

கு :—மழு - கோடாலி. முச்சிகைக் கழு - முத்தலைச் சூலம். மழுவையும் வாளையும் கழுவையும் என ஐயுருபு விரிக்க. காலம் இங்கு ஊழி என்னும் பொருள்பட நின்றது. காட்சி - தோற்றம். எழு - தூண். இன் உவமவுருபு. எழுநான்கு - இருபத்தெட்டு; இராமன் மேல் போர்க்குவந்த வீரர் பதினல்வராதலின் அவருடைய கைகள் இருபத்தெட்டாயின. தலம் - நிலம். சார்த்தல் - அடைவித்தல். (19)

வீரர் இறந்துபடச் சூர்ப்பணகை கரனிடம் செல்லுதல்

2991. மரங்கள் போனெடு வாளொடு தோள்விழ
வுரங்க ளானடர்ந் தாருர வோன்விடு
சரங்க ளோடின தைக்க வரக்கர்தஞ்
சிரங்க ளோடின தீயவ ளோடினாள்.

மரங்கள்போல் நெடு வாளொடு தோள் விழ,
உரங்களான் அடர்ந்தார்; உரவோன் விடு
சரங்கள் ஓடின தைக்க, அரக்கர்தம்
சிரங்கள் ஓடின; தீயவள் ஓடினாள்.

பொ :—அவ்வரக்கர்கள் தம்முடைய நீண்ட வாட்படைகளோடு தோள்களும் மரங்கள்போல அற்று விழுந்துவிட்டமையால், மார்பினால் (தாக்க) நெருங்கினர்; பேராற்றலனான இராமன் ஏவிய அம்புகள் விரைந்து சென்று பாய்ந்தமையால், அவர்களுடைய தலைகளும் (உடலினின்று) நீங்கி (நெடுந்தூரத்தே விழுந்த)ன; (அது கண்ட) கொடியவளான சூர்ப்பணகையும் (கரன்பால்) ஓடுவாளாயினாள்.

கு :—உரம் - மார்பு. அடர்தல் - நெருங்குதல். உரவோன் என்றது இராமனை. சரம் - அம்பு. ஓடின முற்றெச்சம். சிரம் - தலை. தீயவள் என்றது சூர்ப்பணகையை. (20)

வீரர் இறந்தமை சூர்ப்பணகை கரன்பாற் கூறல்

2992. ஒளிறு வேற்கரற் குற்ற துணர்த்தினாள்
குளிறு கோபவெங் கோளரி மாவடக்
களிறெ லாம்படக் கைதலை மேலுறப்
பிளிறி யோடும் பிடியன்ன பெற்றியாள்.

ஒளிறு வேல் கரற்கு உற்றது உணர்த்தினாள்;
குளிறு கோப வெம் கோள் அரிமா அடக்
களிறு எலாம் படக் கை தலைமேல் உறப்
பிளிறி ஓடும் பிடி அன்ன பெற்றியாள்.

பொ :—முழங்குகின்ற சினத்தையுடைய கொடிய வலிமிக்க சிங்கம் கொல்லக் களிறுகளெல்லாம் இறந்தொழியத் துதிக்கை தலைமேல் பொருந்தப் பேரொலி செய்துகொண்டு ஓடுகின்ற பெட்டை

யானை போன்ற தன்மையுடையவளான சூர்ப்பணகை, விளங்குகின்ற வேற்படையினையுடைய கரனிடம் நிகழ்ந்ததைத் தெரிவித்தாள்.

கு :—கோளரிமா இராமனுக்கும் களிறுகள் சூர்ப்பணகையொடு வந்த கரன்படை வீரர்க்கும் பிடி சூர்ப்பணகைக்கும் உவமை. பெற்றியாள் உணர்த்தினள் என முடியும். ஒளிறுதல் - விளங்குதல். உற்றது - கரன்படை வீரர் பதினால்வரும் இராமனால் கொல்லப்பட்டமை. குளிறுதல் பிளிறுதல் என்பவை முழங்குதல் என்னும் பொருளன. கோள் - வலிமை. அரிமா - சிங்கம். அடுதல் - கொல்லல். படுதல் - சாதல். (21)

## கரன் வெகுளுதல்

2993. அங்க ரக்க ரவிந்தொழிந் தாரெனப்
பொங்க ரத்தம் விழிவழி போந்துக
வெங்க ரப்பெய ரோன்வெகுண் டான்விடைச்
சங்க ரற்குந் தடுப்பருந் தன்மையான்.

'அங்கு அரக்கர் அவிந்து ஒழிந்தார்' எனப்
பொங்கு அரத்தம் விழி வழி போந்து உக
வெம் கரப் பெயரோன் வெகுண்டான்; விடைச்
சங்கரற்கும் தடுப்பருந் தன்மையான்.

பொ :—'அங்கே அரக்கர் மாண்டொழிந்தனர்' என்று (சூர்ப்பணகை) கூற, காளையை வாகனமாக உடைய உருத்திரனாலும் தடுத்தற்கரிய தன்மையினையுடைய கொடிய கரன் என்னும் பெயருடைய அரக்கன், கண்ணினின்று குருதி பொங்கி வந்து சிந்தச் சினந்தான்.

கு :—'அரக்கர் அவிந்தொழிந்தார்' என, தடுப்பருந் தன்மையான், கரப்பெயரோன் அரத்தம் விழிவழி உகச் சினந்தான் என இயைக்க. அங்கு என்பது இராமன் உள்ள இடத்தைச் சுட்டியது. 'அங்கு அரக்கர் அவிந்தொழிந்தார்' என்பது சூர்ப்பணகை கூற்று. அவிதல் - சாதல். விடை - காளை. சங்கரற்கும் என்பதனுள் கு உருபுமயக்கம். சங்கரற்குந் தடுப்பருந்தன்மையான் என்றது, அழித்தற் கடவுளான உருத்திரமூர்த்தியாலும் தடுத்தற்கரியதன்மையுடையான் என்று கரனுடைய பேராற்றல் கூறியவாறு. உம்மை உயர்வுசிறப்பு. அரத்தம் - குருதி. போந்து - வந்து. உகுதல் - சிந்துதல். (22)

### கரன் கட்டளை

2994. அழையென் றேறெனக் காக்குவன் போர்ப்படை
யுழைய ரோடி யொருநொடி யோங்கன்மேன்
மழையின் மாமுர செற்றுதிர் வல்லென்றான்
முழையின் வாளரி யஞ்ச முழங்குவான்.

'அழை என் தேர்'; 'எனக்கு ஆக்கு வன் போர்ப் படை';
'உழையர் ஓடி, ஒரு நொடி ஓங்கல் மேல்
மழையின் மா முரசு எற்றுதிர் வல்;' என்றான்,
முழையின் வாள் அரி அஞ்ச முழங்குவான்.

பொ :—குகையிலுள்ள கொடிய சிங்கமும் அஞ்சும்படி (சினந்து) முழங்குகின்ற கரன், 'என்தேரை அழை', 'எனக்கு வலிய போர்க்குரிய படைக்கலங்களை ஆக்கு', 'அடுத்திருக்கும் பணியாளர் நொடிப் பொழுதுள் ஓடி, யானைமேல் மேகம்போன்ற முழக்கத்தையுடைய போர்ப்பறையினை விரைந்தேற்றி அறைமின்': என்றான்.

கு :—முழங்குவான் என்றான் என இயையும். முழை - குகை. அரி - சிங்கம். 'அழை என்தேர்', 'எனக்கு ஆக்கு வன் போர்ப்படை', 'முரசு எற்றுதிர்' என்பவை உழையரை நோக்கிக் கரன் கூறியவை. போர்ப்படை - போர்க்குரிய படைக்கலம். உழையர் - அடுத்திருந்து பணி செய்வோர். ஓங்கல் - யானை. எற்றுதல் - அறைதல்; அடித்தல். வல் - விரைவு. (23)

### தேர்ப்படை திரளுதல்

2995. பேரி யோசை பிறத்தலும் பெட்புறு
மாரி மேகம் வரம்பில வந்தெனத்
தேரின் சேனை திரண்டது தேவர்த
மூரு நாக ருலகு முலைந்தவே.

பேரி ஓசை பிறத்தலும், பெட்பு உறும்
மாரி மேகம் வரம்பு இல வந்தெனத்
தேரின் சேனை திரண்டது; தேவர்தம்
ஊரும் நாகர் உலகும் உலைந்தவே.

பொ :—பறை முழக்கம் எழுந்த அளவில், பெருமை பொருந்திய மழைபொழியும் மேகங்கள் எல்லையற்றனவாய்வந்தாற்போலத் தேர்ப் படை திரண்டது; (அவ்வாறு திரண்டமையால்) தேவர் (வாழும்)

இடமாகிய மேலுலகும், நாகர் (வாழும்) இடமாகிய கீழுலகும், நிலை குலைந்தன.

கு :—பேரி - போர்ப்பறை. பெட்பு - பெருமை. மாரி - மழை. வரம்பு - எல்லை. தேரின் சேனை - தேர்ப்படை. நாகர் உலகு எனப் பின் வந்தமைக்கேற்பத் தேவர்தம் ஊரும் என்பதற்குத் தேவருலகும் என்று பொருள் கொள்ளலாயிற்று. உலைதல் - நிலை குலைதல். இப்படை திரளுதலால் தங்களுக்கு என்ன தீங்கு நேருமோ என்று தேவரும் நாகரும் கலங்கினர் என்றவாறு. மேலுலகும் கீழுலகும் நிலை குலைந்தமை கூறவே, இடையிலுள்ள மண்ணுலகும் நிலை குலைந்தமை பெறப்படும். (24)

## காலாட்படை திரளுதல். 2996–3000

**2996.** போர்ப்பெ ரும்படை பொம்மென் முழக்கமா
நீர்த்த ரங்க நெடுந்தடந் தோள்களா
வார்த்தெ ழுந்த திறுதியி ஞர்கலிக்
கார்க்க ருங்கடல் கால்கிளர்ந் தென்னவே.

போர்ப் பெரும் படை, பொம்மென் முழக்கமா
நீர்த் தரங்கம் நெடுந்தடம் தோள்களா
ஆர்த்து எழுந்தது; இறுதியின் ஆர்கலிக்
கார்க் கருங்கடல் கால் கிளர்ந்தென்னவே.

பொ :—போர்க்குரிய பெரிய காலாட்படை, பொம் என்று (சங்க) முழக்கம் எழ, நீண்ட பெரிய தோள்கள் கடலலைகளாக, உலகம் அழியும் ஊழியில் மிக்க ஒலியினையுடைய மேகத்தொடுகூடிய பெரிய கடலானது காற்றால் பொங்கியெழுதல்போல ஆரவாரித்து எழுந்தது.

கு :—பொம் எனல் ஒலிக்குறிப்பு. பொம்மென் முழக்கம் - சங்க முழக்கம். முழக்கம் ஆக என்பது முழக்கமா என நின்றது விகாரம். நீர் என்பது கடல் என்னும் பொருள்பட நின்றது. தரங்கம் - அலை. இறுதி - உலகம் அழியும் ஊழிக்காலம். ஆர்கலி - மிக்க ஒலி. கால் - காற்று. கிளர்தல் - பொங்கியெழுதல். காலாட்படைக்குக் கடலும், பறையொலியால் காலாட்படை பொங்கியெழுதற்குக் காற்றால் கடல் பொங்கியெழலும் உவமை. இச்செய்யுளும் இதன் பின்வரும் நான்கு செய்யுளும் ஒரு தொடர்; காலாட்படை திரண்ட செய்தி பேசுவன. ‘நீர்த்தரங்கம் நெடுந்தடந் தோள்களா’ என்பதனுடன் ‘மால்கடல் அலைகளை நகுநெடுந் தோளர்’ (சுந்தர. 885) எனப் பின் கூறுவதும் நோக்கத்தகும். (25)

2997. காடு துன்றி விசும்பு கரந்தென
நீடி யெங்கு நிரந்த நெடுங்கொடி
யோடு மெங்கள் பசியென் றுவந்தெழுந்
தாடு கின்ற வலகையி னுடவே.

காடு துன்றி விசும்பு கரந்தென
நீடி, எங்கும் நிரந்த நெடுங்கொடி,
'ஓடும் எங்கள் பசி' என்று உவந்து, எழுந்து,
ஆடுகின்ற அலகையின் ஆடவே.

பொ :—வனத்தில் நெருங்கி, வானம் மறைய நீண்டு எங்கும் பரவிய பெரிய கொடிகள், 'எங்கள் பசி நீங்கிவிடும்' என்று மகிழ்ந்து எழுந்து ஆடுகின்ற பேய்கள்போல அசைய.

கு :—துன்றுதல் - நெருங்குதல். விசும்பு - வானம். கரந்தென - கரக்க ; மறைய. நீடி - நீண்டு. நிரத்தல் - பரவுதல். 'ஓடும் எங்கள் பசி' என்பது அலகைகளின் கூற்று. அலகை - பேய். கொடிகள் காற்றுல் ஆடுதற்குப் பேய்கள் களிப்பால் ஆடுதல் உவமை. படை திரளுதலால் போர் மூளுதலும், போரில் பிணங்கள் வீழ்தலும், அவற்றை யுண்ணுதலால் தங்கள் பசி தீர்தலும், நிகழு மென்று பேய்கள் மகிழ்ந்து ஆடுவனவாயின. கொடி ஆடப் பெரும் படை எழுந்தது என முன்கவியொடு இயையும். (26)

2998. தறியி னீங்கிய தாழ்தடக் கைத்துணைக்
குறிகொ ளாமத வேழக் குழுவனூர்
செறிவின் வாளொடு வாளிடை தேய்ந்துகும்
பொறியிற் கானெங்கும் வெங்கனல் பொங்கவே.

தறியின் நீங்கிய தாழ் தடக் கைத் துணைக்
குறி கொளா மத வேழக் குழு அனூர்
செறிவின் வாளொடு வாள் இடை தேய்ந்து உகும்
பொறியின் கான் எங்கும் வெம் கனல் பொங்கவே.

பொ :—கட்டுத்தறியினின்று நீங்கிய, தாழ்ந்த பெரிய இரண்டு கைகளையுடைய, பாகர் கூறும் குறிப்புமொழிகளைக் கொள்ளாத, மதம்பிடித்த, யானைக்கூட்டத்தை ஒத்த வீரர் நெருங்கினமையால் அவர்கள் பிடித்த வாள்கள் ஒன்றுடன் ஒன்று உராய்ந்து சிந்திய பொறியினுல் காடுமுழுதும் கொடிய நெருப்பு மூள.

கு :—தறி - யானைகட்டும் தூண். தாழ்தடக்கைத்துணை வேழம் அனுர் என்றது இல்பொருளுவமை. 'இருகையில் கரிநிகர் எண்ணிறந்தவர்' (1868) என்ருர் முன்னும். துணைக்கை - இரண்டுகை. கான் எங்கும் வெங்கனல் பொங்கப் போர்ப்பெரும்படை ஆர்த்தெழுந்தது என 25-ஆம் பாடலோடியைந்து முடிவுகொள்ளும். (27)

2999. முருடி ரண்டு முழங்குறத் தாக்கொலி
யுருடி ரண்டெழுந் தேரொலி யுட்புக
வருடி ரண்ட வருக்கன்றன் மேலழன்
றிருடி ரண்டுவந் தீண்டிய தென்னவே.

முருடு இரண்டும் முழங்குறத் தாக்கு ஒலி,
உருள் திரண்டு எழும் தேர் ஒலியுள் புக,
அருள் திரண்ட அருக்கன்றன் மேல் அழன்று
இருள் திரண்டு வந்து ஈண்டியது என்னவே.

பொ :—முருடு என்னும் பறையின் இரு கண்ணினும் முழங்கும்படி தாக்குதலால் எழுந்த ஒலியானது, திரண்டெழுந்த தேருருளையின் ஒலியுள் மறையும்படி, கருணையே திரண்டு உருப்பெற்ற சூரியனுகிய இராமன்மேல் இருள் சினந்து திரண்டு வந்து நெருங்கியதுபோல.

கு: —முருடு - ஒருவகைப்பறை. இரண்டு என்றது அப்பறையின் இரண்டு கண்களையும். உருள் - தேர்ச்சக்கரம். திரண்டெழும் தேருருளொலி என இயைக்க. முருடு தாக்கொலி, தேருருளொலியுட்புக என்றமையால் தேரின் மிகுதி பெறப்படும். அருக்கன் - சூரியன். அருள்திரண்ட அருக்கன் என்றது இராமனை; 'இராமதிவாகரன்' என்று பெரியோர் கூறுவதும்* இங்கு நோக்கத்தகும். சுடுங்கிரணமுடைமையால் வெய்யவன் என்று பெயர் பெற்ற அருக்கனை விலக்குதற்கு அருள்திரண்டவருக்கன் என்ருர். வெறுப்பின்றி எங்கும் ஒருதன்மைத்தாகிய வெயிலின் முன் என்பில்லது தன்னியல்பாற் சென்று கெடுமாறு போலத் தண்ணளியே உருவான இராமன் முன்செல்லும் அரக்கரழிவும் அவரியல்பால் நிகழும் என்பது குறிப்பு. ஈண்டியதென்ன ஆர்த்தெழுந்தது என 25-ஆம் பாடலுடன் இணைந்து முடியும். (28)

* ஆசார்யஹிருதயம், முதல் ப்ரகரணம், 83-ஆம் சூர்ணிகை.

3000. தலையின் மாசுணந் தாங்கிய தாரணி
நிலைநி லாது முதுகை நெளிப்புற
வுலைவி லேழுல கத்தினு மோங்கிய
மலையெ லாமொரு மாடுதொக் கென்னவே.

தலையில் மாசுணம் தாங்கிய தாரணி
நிலை நிலாது முதுகை நெளிப்பு உற,
உலைவு இல் ஏழ் உலகத்தினும் ஓங்கிய
மலை எலாம் ஒரு மாடு தொக்கென்னவே.

பொ :—ஆதிசேடன் தலையினால் தாங்கிய பூமி, ஒரு நிலையில் நில்லாமல் முதுகை நெளிக்கும்படி, கெடாத ஏழுலோகத்தினும் ஓங்கியவையாய் உள்ள மலைகளெல்லாம் ஒரு பக்கத்தே குழுமினாற் போல.

கு :—மாசுணம் தலையில் தாங்கிய தாரணி என இயையும். மாசுணம் - பாம்பு; ஆதிசேடன். அரக்கர் ஓரிடத்தே குழுமுதலால் உண்டான பாரத்தைத் தாங்க முடியாமல் பூமி முதுகை நெளித்தது என்றவாறு. தாரணி தலையில் தாங்கிய மாசுணம் நிலைநிலாது முதுகை நெளிப்புற என்று கொண்டு நிலப்பொறையைத் தலையால் சுமந்து நின்ற ஆதிசேடன், ஒருபக்கத்தே அரக்கர் திரண்டமையாலுளதாகிய மிக்க பாரத்தால் முதுகை நெளிக்க என்று கோடலும் அமையும். மாடு - பக்கம். அரக்கருடைய பேருருவுகளுக்கு மலைகள் உவமை. தொக்கென ஆர்த்தெழுந்தது என 25-ஆம் பாடலுடன் முடியும். (29)

## வீரர் தோற்றமும் தொகையும்

3001. வல்லியக் குழாங்களோ மழையி னீட்டமோ
☆ வொல்லிபத் தொகுதியோ வோங்கு மோங்கலோ
வல்லமற் றரிகளி னனிக மேயெனப்
பல்பதி னாயிரம் படைக்கை வீரரே.

வல்லியக் குழாங்களோ ? மழையின் ஈட்டமோ ?
ஒல் இபத் தொகுதியோ ? ஓங்கும் ஓங்கலோ ?
அல்ல, மற்று அரிகளின் அனிகமே எனப்
பல் பதினாயிரம் படைக் கை வீரரே.

பொ :—புலிக்கூட்டமோ ? மேகக் கூட்டமோ ? பொருந்திய யானைக்கூட்டமோ ? உயர்ந்த மலைகளோ ? (இவையெல்லாம்)

அல்ல ; சிங்கங்களின் கூட்டமே என்று (கண்டோர்) துணியும்படி, படைக்கலங்களைத் தாங்கிய கையினையுடை பல்பதினாயிரம் வீரர் (திரண்டனர்).

கு :—அரக்க வீரரைக் கண்டோர், அவர்பாலமைந்த பாய்ந்து தாக்குந்தன்மையால் புலிக்கூட்டமோ ? என்றும், கரிய பெரிய வடிவமும் பெரு முழக்கமும் அம்புபொழிந்தழிக்கும் ஆற்றலும் உடைமையால் மேகக்கூட்டமோ ? என்றும், பேருருவும் பெருமுழக் கமும் தறுகண்மையும் உடைமையால் யானைக்கூட்டமோ ? என்றும், பேருருவொடு பிறரால் அசைத்தற்கரிய திண்மையும் உடைமையால் மலைகளோ ? என்றும் ஐயுற்று, அவற்றின்பால் அமைந்த சிறப் பியல்புகளோடு அவற்றுக்கெல்லாம் இல்லாமல் அரிகளின்பால் அமைந்த பீடுநடையும் அவ்வீரர்பால் அமைந்தமைகொண்டு அவரை அரிகளின் அனிகமே எனத் துணிவாராயினர் என்க. திரண்டனர் என ஒரு சொல் வருவித்து, பல்பதினாயிரம் படைக்கை வீரர் திரண்டனர் என முற்றுவிக்க. வல்லியம் - புலி. குழாம், ஈட்டம், தொகுதி, அனிகம் என்பவை கூட்டம் என்னும் ஒரு பொரு ளுடையன. மழை - மேகம். ஒல்லுதல் - பொருந்துதல். இபம் - யானை. ஓங்கல் - மலை. அரி - சிங்கம். (30)

## தேர்களின் அமைதி 3002–3003

**3002.** ஆளிகள் பூண்டன வரிகள் பூண்டன
மீளிகள் பூண்டன வேங்கை பூண்டன
ஞாளிகள் பூண்டன நரிகள் பூண்டன
கூளிகள் பூண்டன குதிரை பூண்டன.

ஆளிகள் பூண்டன, அரிகள் பூண்டன,
மீளிகள் பூண்டன, வேங்கை பூண்டன,
ஞாளிகள் பூண்டன, நரிகள் பூண்டன,
கூளிகள் பூண்டன, குதிரை பூண்டன.

பொ :—யாளிகள் கட்டப்பட்டனவும், சிங்கங்கள் கட்டப்பட்டன வும், பேய்கள் பூட்டப்பட்டனவும், புலிகள் பூட்டப்பட்டனவும், நாய்கள் பூட்டப்பட்டனவும், நரிகள் பூட்டப்பட்டனவும், பூதங்கள் பூட்டப்பட்டனவும், குதிரைகள் பூட்டப்பட்டனவும்,

கு :—இச்செய்யுளும் பின்வரும் இரண்டு செய்யுளும் ஒருதொடர். பூண்டனதேர் என 33--ஆம் பாடலுடன் இணைந்து முற்றுப்பெறும். பூணுதல் - பூட்டுதல், கட்டுதல். ஆளி - யாளி. வேங்கை - புலி

பினத்துள் ஒன்று. ஞாளி - நாய். கூளி - பூதம். மீளிகள் பூண்டன என்பதற்கு வன்மையுடைய வீரரை மேற்கொண்டன என்று பொருளுரைத்தலும் ஆம். (31)

3003. ஏற்றின மார்த்தன வேன மார்த்தன
காற்றின மார்த்தன கழுதை யார்த்தன
தோற்றின மாத்திரத் துலகு சூழ்வரும்
பாற்றின மார்த்தன பணில மார்த்தன.

ஏற்றினம் ஆர்த்தன, ஏனம் ஆர்த்தன,
காற்று இனம் ஆர்த்தன கழுதை ஆர்த்தன,
தோற்றின மாத்திரத்து உலகு சூழ்வரும்
பாற்றினம் ஆர்த்தன, பணிலம் ஆர்த்தன.

பொ :—காளைகள் பூட்டப்பட்டனவும், பன்றிகள் கட்டப்பட்டனவும், காற்றின் கூட்டத்தைக் கட்டினாற்போன்ற கழுதைகள் கட்டப்பட்டனவும், பிறந்த அளவில் உலகைச் சுற்றிவரும் பறவைகள் கட்டப்பட்டனவும், சங்குகள் முழங்கப்பெற்றனவும்.

கு :—ஆர்த்தல் - கட்டுதல். பூண்டனவும் - ஆர்த்தனவும் ஆன தேர் என முன் செய்யுளும் இச்செய்யுளும் பின்வரும் பாடலுடன் இயைந்து முடிவுகொள்ளும். ஏற்றினம் - காளைக்கூட்டம். ஏறு - காளை. இனம் - கூட்டம். ஏனம் - பன்றி. காற்றினம் - காற்றின் கூட்டம். விரைவு பற்றிக் 'காற்றினம் ஆர்த்த(ன்)ன கழுதை' என்றார். இங்கு, 'வான்வழங்கியற்கை வளி பூட்டினையோ? மானுருவாக நின் மனம் பூட்டினையோ?' (அகநானூறு. 384) என்பதும் நோக்கத்தகும். பாற்றினம் - பருந்தின் கூட்டம்; பாறு - பருந்து. பணிலம் - சங்கு. ஆர்த்தல் - முழங்குதல். தேரிலுள்ள வீரர் சங்கங்களைத் தாங்கி முழக்குதலின் பணிலமார்த்தன (தேர்) என்றார். (32)

நால்வகைப் படையும் பெயர்தல்

3004. தேரினந் துவன்றின சிறுகட் செம்முகக்
காரின நெருங்கின காலிற் கால்வரு
தாரினங் குழுமின தடையில் கூற்றன்ன
பேரினங் கடலெனப் பெயருங் காலையே.

தேரினம் துவன்றின,—சிறுகண் செம்முகக்
காரினம் நெருங்கின, காலின் கால் வரு
தாரினம் குழுமின, தடை இல் கூற்று அன்ன
பேர் இனம் கடல் எனப் பெயருங்காலையே.

பொ :—தேர்த்தொகுதிகள் நெருங்கின; சிறிய கண்களையும் செம்மைவாய்ந்த முகத்தினையும் உடைய மேகங்கள் போன்ற யானைக் கூட்டங்கள் நெருங்கின; காற்றைப்போலக் காலால் விரைந்து வரும் குதிரைப் படைத் தொகுதியும் நெருங்கின; தடுத்தலரிய காலனையொத்த பெரிய காலாள்களின் தொகுதி கடல் போலப் புறப்பட்டபொழுது.

கு :—துவன்றின குழுமின என்பவை நெருங்கின என்னும் ஒரு பொருளுடையன; நெருங்கினவாக என எச்சப் பொருள்பட நின்றன. தேரினமும் காரினமும் தாரினமும் நெருங்கின (ஆக), கூற்றன்ன பேரினம் பெயருங்காலை, மழுக்களும்......பாசமும் ஆதிய, சோதிய, துன்னிய, வேய்ந்தன ஏதிகள் மிடைந்தன என 36-ஆம் பாடல் வரை தொடர்ந்து முடிபுகொள்ளும். சிறுகட் செம்முகக்கார் எனவே யானை என்பது பெறப்படும். கால் - காற்று. இன் உவமவுருபு. காலிற்கால்வருதார் என்றது குதிரைப் படையினை. தடை - தடுத்தல். தடையில் கூற்றன்ன பேரினம் - காலாட்படை. கூற்று - இயமன். பெயர்தல் - புறப்படுதல். (33)

## படைக்கலங்கள் செறிதல் 3005-3007

3005. மழுக்களு மயில்களும் வயிர வாள்களு
மெழுக்களுந் தோமரத் தொகையு மீட்டியு
முழுக்கலு முசுண்டியுந் தண்டு முத்தலைக்
கழுக்களு முலக்கையுங் கால பாசமும்.

மழுக்களும் அயில்களும் வயிர வாள்களும்
எழுக்களும் தோமரத் தொகையும் ஈட்டியும்
முழுக் கலும் முசுண்டியும் தண்டும் முத்தலைக்
கழுக்களும் உலக்கையும் காலபாசமும்.

பொ :—கோடாலிகளும், வேல்களும், வன்மைமிக்க வாள்களும், குத்துக்கோல்களும், வளைதடிகளும், ஈட்டிகளும், சிதைவுபடாத (உருண்டையான) கற்களும், முசுண்டிகளும், தண்டாயுதங்களும், முத்தலைச் சூலங்களும், உலக்கைகளும், காலனையொத்த பாசங்களும்.

கு :—இச்செய்யுளும் இதன் பின்வரும் இரண்டு செய்யுளும் ஒரு தொடர். மழுக்களும்......காலபாசமும், குந்தமும்.........பாசமும், ஆதிய ஏதிகள் மிடைந்தன என 36-ஆம் பாடலில் முடிவுறும். மழு - கோடாலி. அயில் - வேல். வயிரம் - வன்மை. எழு - குத்துக் கோல். தோமரம் - இருப்புலக்கை. கல், கவணில் வைத்துப் பகைவர் மேல் எறியப்படுவது. முசுண்டி - ஆயுதவகையுள் ஒன்று. தண்டு - தண்டாயுதம். முத்தலைக்கழு - முத்தலைச்சூலம். காலபாசம் - காலனைப்போன்று பிணித்துக்கொல்லும் கயிற்று வடிவானதொரு படை. (34)

3006. குந்தமுங் குலிசமுங் கோலும் பாலமு
மந்தமில் சாபமுஞ் சரமு மாழியும்
வெந்தொழில் வலயமும் விளங்கு சங்கமும்
பந்தமுங் கப்பணப் படையும் பாசமும்.

குந்தமும் குலிசமும் கோலும் பாலமும்
அந்தம் இல் சாபமும் சரமும் ஆழியும்
வெம் தொழில் வலயமும் விளங்கு சங்கமும்
பந்தமும் கப்பணப் படையும் பாசமும்.

பொ :—எறிகோலும், வச்சிரமும், கம்பும், பிண்டிபாலம் என்னும் எறிபடையும், அழிவற்ற வில்லும், அம்பும், சக்கரமும், கொடுந் தொழில் செய்யவல்ல வளையும், ஒளிவாய்ந்த சங்கமும், தீப்பந்தமும், கப்பணமும், பாசமும்.

கு :—குந்தம் - எறிகோல். குலிசம் - ஆயுதவகையில் ஒன்று. கோல் - கம்பு. பாலம் - பிண்டிபாலம் என்னும் ஒருவகை எறிபடை. அந்தம் - அழிவு. சாபம் - வில். சரம் - அம்பு. ஆழி - சக்கரப் படை. வலயம் - வளை; ஒருவ்கை எறிபடை. பந்தம் - தீப்பந்தம். கப்பணம் - ஆனைநெருஞ்சி முள் வடிவாக இரும்பாற்செய்ததொரு கருவி. பாசம் - கயிற்றேணி. முன்பாட்டில், காலபாசம் என்ப தற்குக் காலனைப் போன்று பிணித்துக்கொல்லும் கயிற்று வடிவான தொரு படையென்று பொருள்கொண்டமையால் இங்கே பாசம் என்பதற்குக் கயிற்றேணி என்று பொருள் கொள்ளலாயிற்று. (35)

45, 52 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இதன்பின்,

3006 (a) பத்துட னுலெனப் பகுத்த வாயிரம்
வித்தக வரக்கர்கள் வீர வேள்வியில்
முத்தலைக் குரிசிலுக் கன்று முக்கணன்
அத்துணை படைத்தவ னருள வுற்றுளார்

என்று ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

3007 ஆதிய வருக்கனு மனலு மஞ்சுறுஞ்
சோதிய சோரியுந் தூவுந் துன்னிய
வேதிகண் மிடைந்தன விமைய வர்க்கெலாம்
வேதனை கொடுத்தன வாகை வேய்ந்தன.

ஆதிய, அருக்கனும் அனலும் அஞ்சுறும்
சோதிய, சோரியும் தூவும் துன்னிய,
ஏதிகள் மிடைந்தன; இமையவர்க்கெலாம்
வேதனை கொடுத்தன வாகை வேய்ந்தன.

பொ :—முதலியனவும், சூரியனும் எரிக்கடவுளும் அஞ்சும் விளக்கமுடையனவும், குருதியும் நிணமும் செறிந்தனவும், தேவர்களுக்கெல்லாம் துன்பந்தந்தனவும், வெற்றி மாலை சூட்டப்பட்டனவும் ஆன படைக்கலங்கள் செறிந்தன.

கு :—அருக்கன் - சூரியன். அனல் - எரிக்கடவுள். சோரி - குருதி. தூ - நிணம். போரில் பகைவருடலில் பாய்ந்து பாய்ந்து, படைக்கலங்கள், சோரியும் தூவும் துன்னினவாயின. ஏதிகள் - ஆயுதங்கள். வேதனை - துன்பம். (36)

சேனைத்தலைவர் திறலும் தொகையும்

3008. ஆயிர மாயிரங் களிற்றி னாற்றலர்
மாயிரு ஞாலத்தை விழுங்கும் வாயினர்
தீயெரி விழியினர் நிருதர் சேனையி
னாயகர் பதின்மரோ டடுத்த நால்வரே.

ஆயிரம் ஆயிரம் களிற்றின் ஆற்றலர்,
மாயிரு ஞாலத்தை விழுங்கும் வாயினர்,
தீ எரி விழியினர், நிருதர் சேனையின்
நாயகர், பதின்மரோடு அடுத்த நால்வரே.

பொ :—பல்லாயிரம் களிற்றியானைகளின் ஆற்றலையுடையவரும், மிகப் பெரிய மண்ணுலகை உட்கொள்ளும் வாயையுடையவரும், சினக்கனல் மிக்கு எரியும் கண்களையுடையவரும் ஆகிய பதினான்கு அரக்கர், அந்தப் படைக்குத் தலைவர்.

கு :—மாயிருஞாலம் - மிகப் பெரிய நிலவுலகு. நிருதர்-அரக்கர். ஆற்றலர், வாயினர், விழியினர், பதின்மரோடு அடுத்த நால்வர் நிருதர் சேனையின் நாயகர் என இயைக்க. (37)

## திரண்ட சேனையின் அளவு

**3009.** ஆறினோ டாயிர மமைந்த வாயிரங்
கூறின வொருபடை குறித்த வப்படை
யேறின தேழின திரட்டி யென்பரா
லூறின சேனையின் றொகுதி யுன்னுவார்.

'ஆறினோடு ஆயிரம் அமைந்த ஆயிரம்
கூறின ஒரு படை; குறித்த அப்படை
ஏறினது ஏழினது இரட்டி' என்பரால்,
ஊறின சேனையின் தொகுதி உன்னுவார்.

பொ :—(அளவிட) நினைவார், 'சொல்லிய ஒருபடை அறுபது லட்சம்; சொல்லப்பட்ட அப்படையிற் பதினான்கு மடங்கு கூடியது, அங்கே மிக்குத் திரண்ட (கரன்) படையின் மொத்த எண்' என்பர்.

கு :—உன்னுவார், கூறின ஒருபடை ஆறினோடாயிரம் அமைந்த ஆயிரம்; குறித்த அப்படை ஏழினதிரட்டி ஏறினது, ஊறின சேனையின் தொகுதி என்பர்: என இயைக்க. ஆல் அசை. ஆறினோடு ஆயிரம் அமைந்த ஆயிரம் - அறுபது லட்சம். குறித்த அப்படை ஏழினதிரட்டி ஏறினது என்றது, அறுபது லட்சமென்று கணக்கிட்ட அப்படையிற் பதினான்கு மடங்கு கூடியது என்றவாறு. எனவே அங்கே திரண்ட படையின் மொத்தஎண் 840 லக்ஷம் என்பது பெறப்படும். குறித்தல் - சொல்லுதல். ஏழினது இரட்டி - பதினான்கு. படைகள் பதினான்கு தலைவர்களின் கீழ்ப் பகுத்துவைக்கப்பட்டமையால் ஏழின திரட்டி என்றார். ஊறுதல் - மிகுதல். தொகுதி - மொத்த எண். (38)

45, 52 என்னும் குறியீடுள்ளவற்றில், இச்செய்யுளின்பின்,

3009 (a) ஆறுநூ றுயிரங் கோடி யாழித்தேர்
கூறிய வவற்றினுக் கிரட்டி குஞ்சரம்
ஏறிய பரியவற் றிரட்டி வெள்ளநூ
றீறிலாள் கரன்படைத் தொகுதி யென்பரால்.

என ஒரு மிகைச் செய்யுள் காணப்படுகிறது.

## சேனை வீரர் திறம் 3010–3017

**3010.** உரத்தின ருருமென வுரறும் வாயினர்
கரத்தெறி படையினர் கமலத் தோன்றரும்

வரத்தினர் மலையென மழைது யின்றெழு
சிரத்தினர் தருக்கினர் செருக்குஞ் சிந்தையார்.

உரத்தினர், உருமென உரறும் வாயினர்,
கரத்து எறி படையினர், கமலத்தோன் தரும்
வரத்தினர், மலை என மழை துயின்று எழு
சிரத்தினர், தருக்கினர், செருக்கும் சிந்தையார்.

பொ :—(அப்படை வீரர்) வலிமையுடையார், இடியைப் போல முழங்கும் வாயினையுடையார், தாக்கும் படைக்கலங்களைத்தாங்கிய கையினையுடையார், பிரமன் தந்த வரத்தினையுடையார், மலையென்று மேகம் உறங்கியெழும் தலையினையுடையார், அகந்தை மிக்கவர், களிக்கும் மனம் உடையார்.

கு :—உரம் - வலிமை. உருமு - இடி. உரறுதல் - முழங்குதல். கரம்-கை. படை - ஆயுதம். கமலத்தோன் - பிரமன். மழை - மேகம். சிரம்-தலை. தருக்கு - அகந்தை. செருக்கு - களிப்பு. சிந்தை - மனம். (39)

3011. விண்ணள விடநிமிர்ந் துயர்ந்த மேனியர்
கண்ணள விடலரு மார்பர் காலினன்
மண்ணள விடுநெடு வலத்தர் வானிடை
யெண்ணள விடலருஞ் செருவென் றேறினர்.

விண் அளவிட நிமிர்ந்து உயர்ந்த மேனியர்,
கண் அளவிடல் அரு மார்பர், காலினல்
மண் அளவிடும் நெடுவலத்தர், வானிடை
எண் அளவிடல் அரும் செரு வென்று ஏறினர்.

பொ :—வானளாவ ஓங்கியுயர்ந்த உடலுடையார், கண்களால் அளவிட்டறிதற்கரிய பெரிய மார்புடையார், அடியால் நிலவுலகத்தை அளக்கும் பெருவலியுடையார், விண்ணுலகத்தில் நிகழ்ந்த அளவிடற்கரிய போர்களில் வென்று மேம்பட்டவர்.

கு :—அளவிட-அளாவ; தொட. அளவிடல்-அளத்தல். செரு-போர். ஏறுதல் - மேம்படுதல். (40)

3012. இந்திரன் முதலினே ரெறிந்த மாப்படை
சிந்தின தெறித்துகச் செறிந்த தோளினு
ரந்தக னடிதொழு தடங்கு மாணையார்
வெந்தழ லுருவுகொண் டனைய மேனியார்.

இந்திரன் முதலினோர் எறிந்த மாப் படை,
சிந்தின தெறித்து உகச் செறிந்த தோளினர் ;
அந்தகன் அடி தொழுது அடங்கும் ஆணையார் ;
வெம் தழல் உருவுகொண்டனைய மேனியார்.

பொ :—இந்திரன் முதலிய தேவர் எறிந்த சிறந்த படைக் கலங்கள் தெறித்துச் சிந்தி வலிகெடும்படி திண்ணியவான தோள்களையுடையார் ; இயமனும் அடியில் விழுந்து வணங்கி அடங்கும் ஆணையினையுடையார் ; கொடிய வடவைத்தீயே உருவெடுத்து வந்தாற்போன்ற உடம்பு உடையார்.

கு :—தெறித்துச் சிந்தின உக என இயையும். சிந்தின - சிந்தினவாகி; முற்றெச்சம். செறிதல் - திண்ணியவாதல். அந்தகனும் என உம்மை விரிக்க. ஆணை - கட்டளை. வெம் தழல் என்றமையால் வடவையென்று கொள்ளலாயிற்று. மேனி - உடம்பு. (41)

3013. சூலமும் பாசமுந் தொடர்ந்த செம்மயிர்ச்
சாலமுந் தறுகணு மெயிறுந் தாங்கினு
ராலமும் வெளிதெனு நிறத்த ராற்றலாற்
காலனுங் காலனென் றயிர்க்குங் காட்சியார்.

சூலமும் பாசமும் தொடர்ந்த செம் மயிர்ச்
சாலமும் தறுகணும் எயிறும் தாங்கினர்,
ஆலமும் வெளிது எனும் நிறத்தர், ஆற்றலால்
காலனும் காலன் என்று அயிர்க்கும் காட்சியார்.

பொ :—சூலத்தையும், பாசத்தையும், மிக்க செந்நிறம் வாய்ந்த உரோமத் தொகுதியையும், தறுகண்மையினையும், கோரப்பற்களையும் உடையார் ; விடமும் வெண்ணிறமுடையதென்று சொல்லும்படியமைந்த கருநிறமுடையார் ; வலிமையால் இயமனும் இயமனே என்று ஐயுறுந் தோற்றம் உடையார்.

கு :—சாலம் - திரள். தறுகண்மை - அஞ்சாமை. எயிறு என்றது கோரப்பல்லினை. ஆலம் - விடம். ஆலகாலவிடமும் ஆம். ஆலமும்

வெளிதெனும் நிறத்தர் என்றது அரக்கருடலின் கருமை மிகுதி கூறியவாறு. படைவீரரான அரக்கருடலின் கருமை விடத்தின் கருமையும் வெண்மையென்று சொல்லும்படி யிருந்தது என்க. (42)

**3014.** கழலினர் தாரினர் கவச மார்பினர்
நிழலுறு பூணினர் நெறித்த நெற்றிய
ரழலுறு குஞ்சிய ரமரை வேட்டுவந்
தெழலுறு மனத்தின ரொருமை யெய்தினர்.

கழலினர், தாரினர், கவச மார்பினர்,
நிழல் உறு பூணினர், நெறித்த நெற்றியர்,
அழல் உறு குஞ்சியர், அமரை வேட்டு உவந்து
எழல் உறும் மனத்தினர், ஒருமை எய்தினர்.

பொ :—வீரக்கழல் பூண்டவர், மாலையணிந்தவர், கவசம் தரித்த மார்பினையுடையார், ஒளிபொருந்திய அணிகலன்களைப் பூண்டவர், வளைத்த புருவத்தையுடையார், நெருப்பை ஒத்த தலையுரோமம் உடையவர், போரை விரும்பி மகிழ்ந்து கிளர்கின்ற மனம் உடையவர், ஒருதன்மையுடையார்.

கு :—கழல் - வீரர் காலில் அணியும் தண்டை. தார் - மாலை. கவசம் - பகைவர் படைக்கலங்களால் வீரர் மார்பில் ஊறு ஏற்படாதவாறு காக்குங் கருவி. நிழல் - ஒளி. நெறித்தல் - வளைத்தல்; நெற்றி என்பது புருவம் என்ற பொருளிற் பயின்றது. சினம் மிக்கவர் என்பது தோன்ற நெறித்த நெற்றியர் என்றார். அழல் - நெருப்பு. அமர்-போர். வேட்டல் - விரும்புதல். உவத்தல் - மகிழ்தல். எழல் - எழுதல்; கிளர்தல். ஒருமை - ஒருதன்மை; ஒற்றுமையுமாம். (43)

**3015.** மருப்பிரு மதக்களிற் றமரர் மன்னனும்
விருப்புரு முகத்தெதிர் விழிக்கின் வெந்நிடு
முருப்பொரு துலைவுறு முலக மூன்றினுஞ்
செருப்பெருத் தினவுறு சிகரத் தோளினர்.

மருப்பு இரு மதக் களிற்று அமரர் மன்னனும்,
விருப்பு உரு முகத்து எதிர் விழிக்கின், வெந்நிடும்;
உருப் பொருது உலைவுறும் உலகம்; ஊன் தினும்
செருப் பெருத் தினவு உறு சிகரத் தோளினர்.

பொ :—உடம்பை அழிக்கும் போரைப் பெருமையால் தினவு கொண்ட மலைபோலும் தோள்களையுடைய அவ்வீரர், வெறுப்புற்ற முகத்தோடு எதிர்த்து நோக்கினால் (அவ்வளவிலே), ஒடியாத கொம்புகளையுடைய (அயிராவதம் என்னும்) மதயானையை ஊர்ப வனான இந்திரனும், முதுகுகாட்டி ஓடுவான்; அவருடைய உடம் பைத் தாங்கும் ஆற்றலின்றி உலகம் நிலைகுலையும்.

கு :—ஊன் தினும் செருப் பெருத் தினவுறும் சிகரத்தோளினர் விருப்புறு முகத்து எதிர் விழிக்கின், அமரர்மன்னனும் வெந்நிடும்; உலகம் உருப்பொரு வுலைவு உறும் என இயைக்க. ஊன் - உடம்பு. தின்னும் என்பது தினும் என நின்றது விகாரம். தின்னுதல் - அழித் தல். செரு-போர். பெருத்தினவு - பெருமையால் உண்டான தினவு. தினவு - அரிப்பு. சிகரம் - மலை. திண்மையாலும் பெருமையாலும் மலை தோளுக்கு உவமையாயிற்று. சிகரம் - மலையின் முடியுமாம். விருப்புறுமுகமென்றது (விருப்பின் மறுதலையான) வெறுப்புற்ற முகம் என்றவாறு. இருமருப்பு என மாற்றிக்கூட்டுக. இருத என்னும் பெயரெச்சத்திறுதியெழுத்துக்கெட்டது. மருப்பு - கொம்பு. இறுதல்- ஒடிதல். இருமருப்பு என்றதனால் பகையழித்தற்கேற்ற ஊர்தியின் உறுப்புவலி கூறியவாறு. களிறு என்றது அயிராவதத்தை. அமரர் மன்னன் - தேவர்க்கு அரசன்; இந்திரன். உம்மை உயர்வு சிறப் புணர நின்றது. அமரர் மன்னனும் வெந்நிடும் எனவே, மற்றை யோர்நிலை கூறவேண்டாதாயிற்று. வெந் - முதுகு. வெந்நிடல் - முதுகிடல்; தோற்றல். மருப்பு இரு மதக்களிற் றமரர் மன்னனும் வெந்நிடும் என்பதற்கு ஊர்தியான மதக்களிற்றின் மருப்பும் இற்று, ஊர்பவனான இந்திரனும் முதுகிடுவான் என்று பொருள் கூறலும் ஆம். இப்பொருள் கொள்ளுங்கால் இரு என்பது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாய் வெந்நிடும் என்னும் முதல் வினை கொண்டு முடியும். இனி உலகம் மூன்றினும் செருப்பெருத் தின வுறும் சிகரத் தோளினர் என்றுகொண்டு, விண்ணும் மண்ணும் பாதாளமும் ஆகிய மூன்றுலகத்திலும் தம்மொடு எதிர்த்துப் போர் செய்வாரைப் பெருமையால் தினவுகொண்ட தோளையுடையார் என்றும், விருப்புறு முகத்தெதிர்விழிக்கின் அமரர் மன்னனும் வெந் நிடும்; உருப்பொரு வுலைவுறும் என்றுகொண்டு, அவ்வீரர் வெறுத்த முகத்தோடு எதிர்நின்று நோக்கினால் இந்திரனும் தோல்வி யுறுவான்; அவர் சினத்தைத் தாங்கும் ஆற்றலின்றி நிலைகுலைவான் என்று பொருள்கூறலும் ஆம். இப்பொருளில் உரு, முதனிலை யளவாய் நின்றது. உருத்தல் - சினத்தல்; 'ஒள்வாட்டானை உருத் தெழுந்தன்று' என்பது புறப்பொருள் வெண்பாமாலை (3.2). (44)

**3016.** குஞ்சரங் குதிரைபேய் குரங்கு கோளரி
வெஞ்சினக் கரடிநாய் வேங்கை யாளியென்
றஞ்சுறக் கனல்புரை முகத்த ரார்கலி
நஞ்சுதொக் கெனப்புரை நயனத் தார்களும்.

குஞ்சரம் குதிரை பேய் குரங்கு கோள் அரி
வெம் சினக் கரடி நாய் வேங்கை யாளி என்று
அஞ்சுறக் கனல் புரை முகத்தர், ஆர்கலி
நஞ்சு தொக்கெனப் புரை நயனத்தார்களும்.

பொ :—யானையும் குதிரையும் குரங்கும் வலிய சிங்கமும் கொடுஞ் சினமுடைய கரடியும் நாயும் புலியும் யாளியும் அஞ்சும்படி சினக்கின்ற பெரிய முகத்தையுடையவர்களும் கடலில் தோன்றிய விடம் திரண்டாற்போலப் பொருந்திய கண்களையுடையவர்களும்.

கு :—குஞ்சரம் - யானை. என்று எண்ணுப்பொருளில் வந்த இடைச்சொல். கனலுதல் - சினத்தல். புரை - பருமை. ஆர்கலி என்றது பாற்கடலை. தொகுதல் - திரளுதல். புரைதல் - பொருந்துதல். நயனம் - கண். குஞ்சரம்......யாளியென்று அஞ்சுறக் கனல்புரை முகத்தர் என்பதற்கு யானை......யாளி என்று, கண்டோர் அஞ்சும்படி கனல்கின்ற பெரிய முகத்தையுடையார், எனப் பொருள் கொள்ளலுமாம் ; அவ்வரக்கர் கண்டோர் அஞ்சும்படி சினந்த பெரிய யானை முகமும் குதிரை முகமும்......யாளி முகமும் உடையவர் என்றவாறு. நயனத்தார்களும் உலப்பிலார்களும், அவர் தாங்கிய கொடி முதலியனவும் மிடைதலின் எனப் பின்வரும் 49-ஆம் பாடலோடு இயையும். (45)

**3017.** எண்கைய ரெழுகைய ரேழு மெட்டுமாய்க்
கண்கனல் சொரிதரு முகத்தர் காலினர்
வண்கையின் வளைத்துயிர் வாரி வாயினிட்
டுண்கையி னுவகைய ருலப்பி லார்களும்.

என் கையர், எழு கையர், ஏழும் எட்டும் ஆய்க்
கண் கனல் சொரிதரும் முகத்தர், காலினர்,
வண் கையின் வளைத்து, உயிர் வாரி, வாயின் இட்டு
உண் கையின் உவகையர், உலப்பு இலார்களும்.

பொ :—எட்டுக்கையுடையாரும், ஏழுகையுடையாரும், நெருப்பைச் சொரிகின்ற கண்களையுடைய ஏழும் எட்டுமான முகங்களை

யுடையவர்களும், ஏழும் எட்டுமான கால்களையுடையவர்களும், வலிய கைகளால் வளைத்து, உயிருடையவற்றையெல்லாம் அள்ளி வாயிற் பெய்துண்ணுதலால் செருக்குற்றவர்களும், அழிவற்றவர்களும்.

கு :—ஏழும் எட்டும் என்பது காலினேடும் கூட்டப்பட்டது. வண்மை - வலிமை (பிங்). உவகை - செருக்கு. உலப்பு - அழிவு. இதனுலும் முன் செய்யுளாலும் அவ்வரக்கர்களின் அஞ்சுதரு தோற்றத்த உருவநிலை கூறியவாறு. (46)

கொடி முதலியவை செறிந்தமை 3018-3019

3018. இயக்கரிற் பறித்தன வவுண ரிட்டன
மயக்குறுத் தமரரை வலியின் வாங்கின
துயக்கில்கந் தர்ப்பரைத் துரந்து வாரின
நயப்புறு சித்தரை நலிந்து வவ்வின.

இயக்கரில் பறித்தன, அவுணர் இட்டன,
மயக்கு உறுத்து அமரரை வலியின் வாங்கின,
துயக்கு இல் கந்தர்ப்பரைத் துரந்து வாரின,
நயப்பு உறு சித்தரை நலிந்து வவ்வின.

பொ :—இயக்கரை வென்று அவரிடமிருந்து பறித்துக் கொண்டனவும், (தோற்ற) அசுரர் (களத்திலே) இட்டோடப் பெற்றனவும், ஆற்றலால் தேவர்களை மயங்கச்செய்து கொண்டனவும், குற்றமற்ற கந்தருவரைத் தோற்ேடு விரட்டிக் கொண்டனவும், அன்புடைய சித்தர்களை வருத்திக் கவர்ந்தனவும்.

கு :—இயக்கர், அமரர், கந்தர்ப்பர், சித்தர் என்போர் தேவருள் ஓரொரு பிரிவினர். அவுணர் - அசுரர். துயக்கு - குற்றம். துரத்தல் - ஓட்டுதல். நயப்பு - அன்பு; ‘நல்லாளோடு நயப்புற வெய்தியும்’ (2. 12.) என்பது திருவாசகம். நலிதல் - வருத்துதல். பறித்தன, வாங்கின, வாரின, வவ்வின என்பவை வலிந்துகொள்ளப்பட்டன என்னும் ஒரு பொருளிற் பயின்றன, பறித்தனவும், இட்டனவும், வாங்கினவும், வாரினவும், வவ்வினவும் (ஆன) கொடி தழை கவிகை......விதானம் எனப் பின்வரும் பாடலுடன் இயையும். (47)

3019. கொடிதழை கவிகைவான் ஞெங்கல் குஞ்சரம்
படியுறு பதாகைமீ விதானம் பல்வகை

யிடையிலா தெங்கணு மிசைய மீமிசை
மிடைதலி னுலகெலாம் வெயிலி ழக்கவே.

கொடி, தழை, கவிகை, வான் தொங்கல், குஞ்சரம்
படியுறு பதாகை, மீ விதானம், பல்வகை
இடை இலாது எங்கணும் இசைய, மீமிசை
மிடைதலின், உலகு எலாம் வெயில் இழக்கவே.

பொ :—கொடிகளும், மயிற்பீலிக்குடைகளும், குடைகளும், சிறந்த குஞ்சங்களும், யானைகளின் மேலே பொருந்த எடுத்த பெருங்கொடிகளும், மேற்கட்டிகளும், பல வகைப்பட்டனவாக வானப் பரப்பெங்கும் இடைவெளியில்லாதவாறு பொருந்த நெருங்கினமையால் நிலப்பரப்பு முழுதும் ஒளியிழக்க.

கு :—பல்வகை என்பது கொடி முதலிய எல்லாவற்றோடும் இயையும். மீமிசையெங்கணும் இடையிலாது இசைய மிடைதலின் எனக் கூட்டுக. வீரர் தத்தம் ஆற்றல் முதலியவை பிறர்க்குத் தெரியும்படி எடுத்தவை கொடி எனவும், பல நிறத்துகிலில் அழகுற எடுத்த பெருங்கொடிகள் பதாகை எனவும் கொள்ளலாம். 'நன்பல, பல்வேறு குழூஉக்கொடி பதாகை நிலைஇப், பெருவரை மருங்கின் அருவியின் நுடங்க' (மதுரைக் காஞ்சி. 374, 375), 'நறவுநொடைக் கொடியோடு, பிறபிறவு நனிவிரைஇப், பல்வேறுருவிற் பதாகை நீழற், செல்கதிர் நுழையாச் செழுநகர்' (பட்டினப்பாலை. 180—183) என்பனவும் இங்கு நோக்கத்தகும். தழை - மயிற்பீலிக்குடை. கவிகை - குடை. தொங்கல் - குஞ்சம். படிதல் - பொருந்துதல். விதானம் - மேற்கட்டி. (48)

### சேனைத் தலைவர் திறம் 3020–3021

3020. எழுவரொ டெழுவரா முலக மேழொடேழ்
தழுவிய வென்றியர் தலைவர் தானையர்
மழுவினர் வாளினர் வயங்கு சூலத்த
ருழுவையொ டரியென வுடற்றுஞ் சீற்றத்தார்.

எழுவரொடு எழுவர், ஆம் உலகம் ஏழொடு ஏழ்
தழுவிய வென்றியர், தலைவர் தானையர்,
மழுவினர், வாளினர், வயங்கு சூலத்தர்,
உழுவையொடு அரியென உடற்றும் சீற்றத்தார்.

பொ :—பதினல்வர், பதினன்கு உலகங்களிலும் பரவிய வெற்றியை உடையார், படையாளர்க்குத் தலைவர், மழுவினை ஏந்தியவர், வாளைத் தாங்கியவர், விளக்கம் மிக்க சூலப்படையைத் தரித்தவர், புலியும் சிங்கமும் போலப் பகைவலியழிக்கும் சினம் மிக்கவர்.

கு :—எழுவராம் என்பதனுள் ஆம் அசை. தானையர் தலைவர் என இயையும். தானையர் - படையாள்வோர். உடற்றுதல் - கெடுத்தல். எழுவரொடெழுவர்......சீற்றத்தார், வில்லினர்,...... நெஞ்சினர் திசைதொறும் புல்லினர் எனப் பின்வரும் செய்யுளோடு இயையும். (49)

3021. வில்லினர் வாளின ரிதழின் மீதிடு
பல்லினர் மேருவைப் பறிக்கு மாற்றலர்
புல்லினர் திசைதொறும் புரவித் தேரினர்
சொல்லின முடிக்குறுந் துணிவி னெஞ்சினர்.

வில்லினர், வாளினர், இதழின்மீது இடு
பல்லினர், மேருவைப் பறிக்கும் ஆற்றலர்,
புல்லினர், திசைதொறும்; புரவித் தேரினர்
சொல்லின முடிக்குறும் துணிவின் நெஞ்சினர்.

பொ :—விற்பிடித்தவர், வாளைத்தரித்தவர், சினத்தால் உதட்டின் மேற் பதிந்த பற்களையுடையவர், மகாமேருவையும் பெயர்க்கும் ஆற்றலுடையார், குதிரைகளைப் பூட்டிப் போர்க்கு ஆயத்தமாக்கிய தேரினையுடையார், சொல்லியவற்றைச் சொல்லியபடியே செய்து முடிக்கும் உறுதி வாய்ந்த மனமுடையவர், (ஆகிய தானைத்தலைவர் எல்லாத் திசையினும்) கரனைச் சூழ வந்தடைந்தனர்.

கு :—இதழ் - உதடு. இதழின்மேற் பல்பதிதல் வெகுளி எழுங்கால் நிகழும் மெய்ப்பாடு. சொல்லின என்பது, தலைவன் சொன்னவற்றை என்றும், அவ்வீரர் தாமே சொல்லியவற்றை என்றும் பொருள்கொள்ள நின்றது. துணிவு - திட்பம். இன் சாரியை. (50)

கரனைத் தூடணன் முதலியோர் சூழ்தல்

3022. தூடணன் றிரிசிராத் தோன்ற லாதியர்
கோடணை முரசினங் குளிறு சேனைய
ராடவ ருயிர்கவ ரலங்கல் வேலினர்
பாடவ நிலையினர் பலருஞ் சுற்றினர்.

தூடணன் திரிசிராத் தோன்றல் ஆதியர்,
கோடு அணை முரசினம் குளிறு சேனையர்,
ஆடவர் உயிர் கவர் அலங்கல் வேலினர்,
பாடவ நிலையினர், பலரும் சுற்றினர்.

பொ :—எதிர்ந்த வீரருயிரைக் கொள்ளைகொள்ளும் மாலை சூட்டிய வேற்படையினையுடையவரும், களிப்புமிக்க நிலையினரும், சங்கங்களும் பொருந்திய முரசினங்களும் முழங்கும் சேனையையுடையவர்களும் ஆகிய தூடணன் திரிசிரா என்னும் வீரன் முதலியோர் பலரும் கரனைச் சூழ்ந்தார்கள்.

கு :—வேலினர், நிலையினர், சேனையர், ஆதியர் பலரும் சுற்றினர் என இயையும். தூடணனும் திரிசிராவும் கரனுக்குத் தம்பியர். கோடு - சங்கு. அணைதல் - பொருந்துதல். குளிறுதல் - முழங்குதல். அலங்கல் - மாலை. பாடவம் - களிப்பு. (51)

### படை சூழநின்ற கரனுடைய தோற்றம்

3023. ஆன்றமை யெறிபடை யழுவத் தார்கலி
வான்றொடர் மேருவை வளைத்த தாமென
வூன்றின தேரின னுயர்ந்த தோளினன்
ரோன்றினன் யாவருந் துணுக்க மெய்தவே.

ஆன்று அமை எறி படை அழுவத்து, ஆர்கலி
வான் தொடர் மேருவை வளைத்ததாம் என,
ஊன்றின தேரினன், உயர்ந்த தோளினன்,
தோன்றினன் ; யாவரும் துணுக்கம் எய்தவே.

பொ :—கடல், வானளாவ வளர்ந்த மேருமலையை வளைந்தாற் போல, நிறைந்து விளங்குகின்ற மாற்றாரை யழிக்கவல்ல படைப் பரப்பினிடையே நிறுத்தப்பட்ட தேரையுடையவனும் உயர்ந்த தோள்களையுடையவனும் ஆன கரன், கண்டோர் எல்லோரும் அஞ்சும்படி தோன்றினன்.

கு :—கரன் என்னும் எழுவாய் வருவித்துரைக்கலாயிற்று. ஆன்றல் - நிறைதல். அமைதல் - எல்லாவகையாலும் செவ்விதாதல். எறிதல் - அழித்தல். அழுவம் - பரப்பு; நடுவும் ஆம். ஆர்கலி - கடல். துணுக்கம் - அச்சம். தேரினன் தோளினன் (ஆன கரன்) யாவரும் துணுக்கம் எய்தத் தோன்றினன் என

இயையும். கரன் தேர்க்கு மேருவும், அத்தேரைப் படைகள் சூழ்ந்து நின்ற நிலைக்கு மேருவைக் கடல் சூழ்ந்து நின்ற நிலையும் உவமை. (52)

## கரன்படை இராமனிருக்கும் இடம் நோக்கிச் செல்லுதல் 3024–3028

**3024.** அசும்புறு மதகரி புரவி யாடகத்
தசும்புறு சயந்தன மரக்கர் தாடர
விசும்புறு தூளியான் வெண்மை மேயின
பசும்பரி பகலவன் பைம்பொற் றேரரோ.

அசும்பு உறு மத கரி, புரவி, ஆடகத்
தசும்பு உறு சயந்தனம், அரக்கர், தாள் தர
விசும்பு உறு தூளியான் வெண்மை மேயின
பசும் பரி பகலவன் பைம்பொன் தேர் அரோ.

பொ :—மதநீர் கசிகின்ற யானைகளும் குதிரைகளும் பொற் கலசம் அமைந்த தேர்களும் காலாட்களாகிய அரக்கர்களும் ஆகிய நால்வகைப் படைகளின் கால்கள் தருதலால் வானிடை அடைந்த தூசியால் சூரியனுடைய பச்சைக் குதிரைகளும் பசும்பொன்னால் இயன்ற தேரும் வெண்மை நிறம் உடையவாயின.

கு :—அசும்பு - கசிவு. ஆடகம் - பொன். தசும்பு - கலசம். சயந்தனம் - தேர். அரக்கர் என்றது காலாட்களை. தாள் - கால். தேர்க்குக் கால் சக்கரம். தாள் தருதலாவது நடத்தலால் உண்டாக்குதல். பகலவன் - சூரியன். சூரியன் குதிரைகள் பச்சை நிறம் உடையவை. ‘பாழிமா முகட்டுச்சிப் பச்சைமா ஏழும்’ (340) என்றார் முன்னும். பகலவன் பசும்பரியும், பைம்பொன் தேரும் என உம்மை விரிக்க. (53)

**3025.** வனந்துகள் பட்டன மலையின் வானுயர்
கனந்துகள் பட்டன கடல்க டூர்ந்தன
வினந்தொகு தூளியா லிசைப்ப தென்னினிச்
சினந்தொகு நெடுங்கடற் சேனை செல்லவே.

வனம் துகள் பட்டன ; மலையின் வான் உயர்
கனம் துகள் பட்டன ; கடல்கள் தூர்ந்தன ;

இனம் தொகு தூளியால், இசைப்பது என்? இனிச்
சினம் தொகு நெடுங் கடல் சேனை செல்லவே.

பொ :—சினம் மிக்க பெரிய கடல்போன்ற படை செல்ல, மிகுதியாகத் திரண்டெழுந்த புழுதியால், அந்தக் காடுகள் தூசி படிந்தன; மலையின் மேலும் வானின் மீதும் எழுந்த மேகங்களும் தூசிபடிந்தன; கடல்களும் மேடிட்டன; (எனின்) தூளியின் மிகுதி பற்றி இனியென்ன சொல்லுவது?

கு :—கனம் - மேகம். தொகுதல் - திரளுதல். (54)

3026. நிலமிசை விசும்பிடை நெருக்க லானெடு
மலைமிசை மலையினம் வருவ போன்மலைத்
தலைமிசைத் தலைமிசைத் தாவிச் சென்றனர்
கொலைமிசை நஞ்செனக் கொதிக்கு நெஞ்சினர்.

நிலை மிசை விசும்பிடை நெருக்கலால், நெடு
மலைமிசை, மலையினம் வருவ போல், மலைத்
தலைமிசைத் தலைமிசைத் தாவிச் சென்றனர்;
கொலை மிசை நஞ்சு எனக் கொதிக்கும் நெஞ்சினர்.

பொ :—கொலைத் தொழி(லைப்புரித)லில் விடத்தைப்போலக் கொதிக்கும் மனமுடைய கரன்படை வீரர், மண்ணிலும் விண்ணிலும் (வெற்றிடமின்றிப் படை திரண்டு) நெருக்குதலால், பெரிய மலைகளின்மேல் மலைகள் வருதல்போல, மலைச்சிகரங்கள் தோறும் அடி வைத்துத் தாவிச் செல்வாராயினர்.

கு :—நிலை - பூமி (பிங்). கொலைமிசை - கொலைத்தொழிலில். படைகள் விண்மிசையும் மண்மிசையும் நெருங்கி நெருக்கினமையால் வழிபெறுமல் அரக்கர்கள் மலைகளின்மீது தாவித் தாவிச் செல்வாராயினர். பேருருவுடைய அரக்கர் மலைகளின் மீது தாவிச் செல்லுதல் மலைகளின்மேல் மலைகள் தாவிச் செல்வது போன்றிருந்தது என்றவாறு. (55)

3027. வந்தது சேனை வெள்ளம்
★ வள்ளியோன் மருங்கு மாயா
பந்தமா வினையம் மாளப்
பற்றறு பெற்றி யோர்க்கு

முந்தரு நிலைய தாகி
யுடனுறைந் துயிர்க டம்மை
யந்தகற் களிக்கு நோய்போ
லரக்கிமுன் னாக வம்மா.

வந்தது சேனை வெள்ளம்
வள்ளியோன் மருங்கு ; மாயா
பந்த மா வினையம் மாளப்
பற்று அறு பெற்றியோர்க்கும்
உந்தரு நிலையது ஆகி,
உடன் உறைந்து, உயிர்கள் தம்மை
அந்தகற்கு அளிக்கும் நோய் போல்
அரக்கி முன் ஆக, அம்மா !

பொ :—மாயையின் விளைவாகிய பிணிக்கின்ற பெரிய வினைகள் ஒழியும்படி பற்றுக்களையொழித்த தகுதிவாய்ந்த துறவியராலும் நீக்குதற்கரிய நிலையினதாய், உயிர்களோடு தோன்றி அவற்றேடு தங்கி அவ்வுயிர்களை இயமனுக்குக் கொடுக்கின்ற நோயைப் போன்றவளாகிய சூர்ப்பணகை முன்னாகக் கரனுடைய படைத்திரள் இராமனிடம் வந்தது.

கு :—சேனை வெள்ளம், அரக்கி முன்னாக வள்ளியோன் மருங்கு வந்தது என இயையும். அரக்கி என்றது சூர்ப்பணகையினை ; வள்ளியோன் என்றது இராமபிரானை ; 'வள்ளல் போய் ஒரு மணித்தடத்திற் சந்திநோக்கினன்' (3009) என்ருர் முன். 'கோசலநாடுடைவள்ளல்' (யுத்த. முதற்போர். 256) என்பர் பின்பும். கரன் முதலியோரொடு தோன்றி, அவர்களோடு உறைந்து, அவர் அழிவுக்கும் காரணமான சூர்ப்பணகைக்கு, உயிர்கள் தோன்றுங்கால் உடன்ருேன்றி அவற்ருெடு தங்கி அவ்வுயிர்களை அழிக்கும் நோயை உவமை கூறினர். உயிர்கள் என்றது இங்கே உடலொடு கூடியவற்றை. உயிர்களை அந்தகற்கு அளித்தலாவது உயிர்களை உடலினின்று நீக்குதல். 'பற்றறு பெற்றியோர்க்கும் உந்தரு நிலையதாகி' என்றது பற்றிய வுயிரை அழித்தல்லது நீங்காத நோயின் வலிமிகுதி கூறியவாறு. ஆகாமியமும் சஞ்சிதமும் போலன்றிப் பிராரத்தவினைப் பயனை நோய் துய்த்தே கழிக்கத் தக்கதாதலின் வினையமாளப் பற்றறு பெற்றியோர்க்கும் உந்தரு நிலையதாகி என்ருர். வினையம் என்றது நன்றும் தீதுமான பழவினைகளை. பற்று என்றது யான் எனது என்னும் உணர்வினை. வினைகள் மாயையின் விளைவாதலின் மாயா பந்த மாவினையம் என்ருர். பற்றறு பெற்றியோர் என்றது துறவியரை. உந்துதல் - நீக்குதல். (56)

3028. தூரியக் குரலின் வானின்
முகிற்குலந் துணுக்கங் கொள்ள
வார்சிலை யொலியி னஞ்சி
யுருமெலா மறுக்கங் கொள்ள
வார்கலி யார்ப்பி னுட்கி
யசைவுற வரக்கர் சேனை
போர்வனத் திருந்த வீர
ருறைவிடம் புக்க தன்றே.

தூரியக் குரலின் வானின்
முகில் குலம் துணுக்கம் கொள்ள,
வார் சிலை ஒலியின் அஞ்சி,
உருமெலாம் மறுக்கம் கொள்ள
ஆர்கலி ஆர்ப்பின் உட்கி,
அசைவு உற, அரக்கர் சேனை,
போர் வனத்து இருந்த வீரர்
உறைவிடம் புக்கது அன்றே.

பொ :—பேரிகைகளின் ஒலியால் வானிலுள்ள மேகக்கூட்டம் நடுங்குமாறும், பெரிய வில்லின் நாணொலியால் இடியெல்லாம் அஞ்சி நடுக்கமடையுமாறும், படைகளின் ஆரவாரத்தால் கடலும் அஞ்சித் தளர்வுறுமாறும், இராக்கதர் சேனை, செறிந்த மரங்களை யுடைய அத்தண்டகவனத்தில் தங்கியிருந்த வீரராகிய இராமஇலக்கு. வர் உறையுமிடத்தை அடைந்தது.

கு :—அரக்கர் சேனை, முகிற்கணம் துணுக்கங்கொள்ள, உருமெலாம் மறுக்கங்கொள்ள, ஆர்கலி அசைவுற, வீரர் உறைவிடம் புக்கது என இயையும். தூரியம் - பேரிகை. குரல் - ஓசை. கனம் - கூட்டம். துணுக்கம் - நடுக்கம். வார் - நீட்சி. சிலையொலி - வில்லின் நாணோசை. உருமு - இடி. மறுக்கம் - கலக்கம். ஆர்ப்பு - ஆரவாரம். உட்கு - அச்சம். அசைவு - தளர்வு. போர் - செறிவு. படைகள் செல்லுங்கால், பேரிகை முழக்கம் மேக முழக்கத்தினும், வில்லின் நாணொலி இடி முழக்கத்தினும், படையினர் ஆரவாரம் கடல் முழக்கத்தினும் மிக்கெழுந்தன என்றவாறு. (57)

### கரன் படைவரவுகண்ட புள் விலங்கு முதலியவற்றின் தோற்றம்

3029. வாய்புலர்ந் தழிந்த மெய்யின்
வருத்தத்த வழியின் யாண்டு
மோய்வில நிமிர்ந்து வீங்கு
முயிர்ப்பின வுலைந்த கண்ண
தீயவர் சேனை வந்து
சேர்ந்தமை தெரியச் சென்று
வேய்தெரிந் துரைப்ப போன்ற
புள்ளொடு விலங்கு மம்மா.

வாய் புலர்ந்து அழிந்த, மெய்யின்
வருத்தத்த, வழியின் யாண்டும்
ஓய்வு இல, நிமிர்ந்து வீங்கும்
உயிர்ப்பின, உலைந்த கண்ண,
தீயவர் சேனை வந்து
சேர்ந்தமை, தெரியச் சென்று,
வேய் தெரிந்து உரைப்ப போன்ற
புள்ளொடு விலங்கும் அம்மா!

பொ :—(அத் தண்டகவனத்துள்ள) பறவைகளும் விலங்குகளும், நாவுலர்ந்து சோர்ந்தனவாகியும் உடல் வருந்தினவாகியும் வழியில் எங்கும் ஓய்வு பெருதனவாகியும் மிக்க நெட்டுயிர்ப்புடையனவாகியும் ஒளி மழுங்கிய கண்களையுடையனவாகியும் சென்று, கொடிய அரக்கர் படை வந்து சேர்ந்த செய்தியை இராமஇலக்குவர் அறியும்படி தெரிந்துரைக்கும் ஒற்றரை ஒத்தன.

கு :—புள்ளொடு விலங்கும், அழிந்த, வருத்தத்த, ஓய்வில, உயிர்ப்பின, கண்ண, சென்று, தீயவர் சேனைவந்து சேர்ந்தமை தெரியத் தெரிந்துரைப்ப(னவான) வேய் போன்றன என இயையும். வாய்புலர்தலும் மெய்வருத்தமும் ஓய்வின்மையும் நெடிதுயிர்த்தலும் கண் உலைதலும் புட்களோடு விலங்குகளுக்கும் வேய்க்கும் பொதுவான தன்மைகள். வேய் - ஒற்று. அம்மா, வியப்பிடைச்சொல். (58)

கரன் சேனையின் வரவறிந்து இலக்குவன் போர்க்கு எழ இராமன் அவனைத் தடுத்துத் தானே போர்க்கு எழுதல் 3030-3036

**3030.** தூளியின் படலை வந்து
தொடர்வுற மரமுந் தூறுந்
தாளிடை யொடியு மோசை
சடசட வொலிப்பக் கானத்
தாளியு மரியு மஞ்சி
யிரிதரு மமலை நோக்கி
மீளிமொய்ம் பினருஞ் சேனை
மேல்வந்த துளதென் றுன்னா.

தூளியின் படலை வந்து
தொடர்வுற, மரமும் தூறும்
தாளிடை ஒடியும் ஓசை,
சடசட ஒலிப்பக் கானத்து
ஆளியும் அரியும் அஞ்சி,
இரிதரும் அமலை நோக்கி,
மீளி மொய்ம்பின் அருஞ்சேனை
மேல்வந்தது உளது என்று உன்னா.

பொ :—தூசியின் திரள் வந்து படிய, மரங்களும் தூறுகளும் (படைகளின்) கால்களால் ஒடிகின்ற ஓசை சடசட என்று ஒலிப்ப, அதனால் வனத்திலுள்ள யாளிகளும் சிங்கங்களும் அஞ்சி ஓடுதலால் எழுந்த ஒலியைக்கேட்டு, தடுத்தற்கரிய மிக்க வலியினையுடைய படை தம்மேல் வந்ததுண்டு என்று நினைந்து,

கு :—தூளி - தூசி. படலை - திரள். தாளிடை - கால்களால். சடசட, ஒலிக்குறிப்பு. இரிதரல் - ஓடுதல். அமலை - ஆரவாரம். மீளி மொய்ம்பு என்பவை வலிமை யென்னும் பொருளை உணர்த்தும் மீமிசைச் சொல்லாய் மிக்க வலிமையென்பதுபட நின்றன உன்னா முன்னின்ற பின் வந்தோனை நோக்கினன் மொழியலுற்றான் : எனப் பின்வருஞ் செய்யுளுடன் இயைந்து முடிவுகொள்ளும். (59)

**3031.** மின்னின்ற சிலையன் வீரக்
கவசத்தன் விசித்த வாளன்
பொன்னின்ற வடிம்பின் வாளிப்
புட்டிலன் புகையு நெஞ்ச

னின்னின்று காண்டி யான்செய்
நிலையென விரும்பி நேரா
முன்னின்ற பின்வந் தோனை
நோக்கினன் மொழிய லுற்ருன்.

மின் நின்ற சிலையன் வீரக்
கவசத்தன் விசித்த வாளன்
பொன் நின்ற வடிம்பின் வாளிப்
புட்டிலன் புகையும் நெஞ்சன்,
'நில்; நின்று காண்டி; யான் செய்
நிலை;' என விரும்பி நேரா
முன் நின்ற பின் வந்தோனை
நோக்கினன், மொழியலுற்ருன்.

பொ :—ஒளிதங்கிய வில்லைத்தாங்கி, உறுதிவாய்ந்த கவசத்தை அணிந்து, வாளை இடையில் கட்டிக்கொண்டு, பொன்னுல் வரிக் கோலம் இழைத்த விளிம்பினையுடைய அம்புகள் நிறைந்த தூணியைப் பூண்டு, சினந்த மனம் உடையனுய், (இராமனை நோக்கி), 'நீ போர்க்குச் செல்லற்க; இங்கு நின்றே யான் செய்கின்ற போரின் நிலைமையைக் காண்பாயாக' என்று கூறிப் போரை விரும்பி மேற்கொண்டு, முன்னே நின்ற இளையவனை நோக்கி (இராமன்) சொல்லுவானுயினன்.

கு :—மின் - ஒளி. சிலை - வில். கவசத்துக்கு வீரமாவது, பகைவர் படைக்கலங்களாற் சிதைவு படாமை. விசித்தல் - கட்டுதல். பொன் நின்ற வடிம்பின் வாளி - பொன்னுல் வரிக்கோலம் இழைக்கப்பட்ட விளிம்பினையுடைய வாளி. 'பொன் வடிம் பிழைத்த வான் பகழி' (2501) என்றதும் காணலாம். புகைதல் - சினத்தல். 'நில்; நின்று காண்டி; யான் செய்நிலை' என்றது இராமனை நோக்கி இலக்குவன் கூறியது. (60)

**3032.** நெறிக்கொண்மா தவர்க்கு முன்னே
நேர்ந்தனெ னிருத ராவி
பறிக்குவென் யானே யென்ற
பழமொழி பழுது ருமே

வெறிக்கொள்பூங் குழலி ஞளை
வீரநீ வேண்டி னேன்யான்
குறிக்கொடு காத்தி யின்னே
கொல்வெனிக் குழுவை யென்ஞ.

"நெறிக் கொள் மாதவர்க்கு முன்னே
நேர்ந்தனென் 'நிருதர் ஆவி
பறிக்குவென் யானே' என்ற
பழமொழி பழுது உருமே,
வெறிக் கொள் பூங்குழலிஞளை,
வீர!நீ வேண்டினேன் யான்;
குறிக்கொடு காத்தி; இன்னே
கொல்வென் இக்குழுவை" என்ஞ.

பொ:—'வீரனே! வீட்டு நெறியையே குறிக்கோளாகக் கொண்ட சிறந்த தவத்தினர்பால், 'யானே அரக்கரைக் கொல் வேன்' என்று முன்னே யான் இசைந்துசொன்ன சொல் தவறு படாமல் இந்த அரக்கர் கூட்டத்தை இப்பொழுதே கொல்வேன்; நீ நறுமணம் வாய்ந்த பூவை யணிந்த கூந்தலேயுடைய சீதையைக் கருத்தூன்றி நின்று காப்பாயாக (இதனையே) யான் விரும்பி னேன்' என்று கூறி.

கு:—நெறி என்றது வீட்டு நெறியினை. முன், ஏழன் உருபு. நேர்தல் - இசைதல். நிருதர் - அரக்கர். பழமொழி - முன்னே கூறிய சொல். வெறி - நறுமணம். வேண்டுதல் - விரும்புதல். குறிக்கொளல் - கருத்திற்கொள்ளல். இன்னே - இப்பொழுதே. 'வீர! மாதவர்க்குமுன் யானே நிருதர் ஆவி பறிக்குவென்' என்ற பழமொழி பழுதுருமே இன்னே இக்குழுவைக் கொல்வேன்; நீ குழலிஞளைக் குறிக்கொடுகாத்தி, யான் வேண்டினேன்; என்ஞ என இயையும். இதுவும் பின்வருஞ் செய்யுளும் ஒரு தொடர். என்ஞ, எண்ணி கட்டி, தரித்தான், ஆர்த்தான் என முடிவு கொள்ளும். (61)

3033. மரம்படர் கான மெங்கு
மதர்பட வந்த சேனை
கரன்படை யென்ப தெண்ணிக்
கருநிறக் கமலக் கண்ணன்

சரம்படர் புட்டில் கட்டிச்
சாபமுந் தரித்தான் றள்ளா
வுரம்படர் தோளின் மீளாக்
கவசமிட் டுடைவா ளார்த்தான்.

மரம் படர் கானம் எங்கும்
அதர் பட வந்த சேனை
கரன் படை என்பது எண்ணிக்
கரு நிறக் கமலக் கண்ணன்,
சரம் படர் புட்டில் கட்டிச்
சாபமும் தரித்தான், தள்ளா
உரம் படர் தோளின் மீளாக்
கவசம் இட்டு, உடைவாள் ஆர்த்தான்.

பொ :—கரிய நிறமும் தாமரை மலர்போன்ற கண்களும் உடைய இராமன், மரங்கள் பரவிய காடுமுழுதும் வழியாகும்படி வந்த சேனை கரனுடைய படை என்பதை நினைந்து, (மார்பில்) நிலைபெயராத கவசத்தை அணிந்து, நீங்காத வலிமிக்க தோளில் அம்புகள் மிக்க தூணியைக்கட்டி, கையில் வில்லையும் தாங்கி, (அரையில்) உடைவாளைக் கட்டிக்கொண்டான்.

கு :—படர்தல் - பரவுதல்; மிகுதல். அதர் - வழி. கமலம் ஆகுபெயராய்ப் பூவை உணர்த்திற்று. புட்டில் - அம்பருத் தூணி. சாபம் - வில். தரித்தல் - தாங்குதல். தள்ளா - நீங்காத. உரம் - வலிமை. மீளுதல் - நிலைபெயர்தல். கவசம் - மெய்யுறை. ஆர்த்தல் - கட்டுதல். தோளில் புட்டில்கட்டி எனக்கூட்டுக. கண்ணன் எண்ணி, இட்டு, கட்டி, தரித்து, ஆர்த்தான் என இயையும். ஆர்த்தான் முற்றெச்சம். என்றான், எனப் பின்வரும் பாடலுடன் முடியும். (62)

**3034.** மீளருஞ் செருவில் விண்ணு
மண்ணுமென் மேல்வந் தாலு
நாளுலந் தழியு மன்றே
நானுனக் குரைப்ப தென்னே
யாளியின் றுப்பி னுயிவ்
வமரெனக் கருளி நின்றென்
ஞேளினைத் தின்னு கின்ற
சோம்பினைத் துடைத்தி யென்றான்.

'மீளருஞ் செருவில் விண்ணும்
மண்ணும் என்மேல் வந்தாலும்,
நாள் உலந்து அழியுமன்றே!
நான் உனக்கு உரைப்பது என்னே ?
ஆளியின் துப்பினாய்! இவ்
அமர் எனக்கு அருளிநின்று, என்
தோளினைத் தின்னுகின்ற
சோம்பினைத் துடைத்தி' என்றான்.

பொ :—'ஆளிபோலும் வலிமையுடையாய்! விண்ணுலகும் மண்ணுலகும் (இணைந்து) என்மேல் (போர் கருதி) வந்தாலும், மீளுதற்கரிய போரில் வாழ்நாள் கெட்டு அழியும்; (இதனை) யான் உனக்கு உரைக்கவேண்டா; இப்போரை எனக்குக் கொடுத்துநின்று என் தோளை வருத்துகின்ற சோம்பலைப் போக்குவாயாக' என்று கூறினான்.

கு :—மீளருஞ்செரு - உயிர்கொடு திரும்புதற்கரிய போர். விண் மண் என்பன ஆகுபெயராய் அவற்றுள் வாழ்வோரை யுணர்த்தின. அஃறிணைவாய்பாடுபட விண் மண் என்றமைக்கேற்ப ஒழியும் என்றார். அன்று ஏ என்பன அசைநிலைகள். கரன்படை மட்டுமன்றி, விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் கூடி என்மேல் போர்க்குவந்தாலும் அவர்கள் இறந்தொழிவர் என்றவாறு. நாள் - வாழும் நாள்; ஆயுள். உலத்தல் - கெடுதல். நான் உனக்கு உரைப்பது என் என்றது, நான் சொல்லாமலே நீ அறிவாய் என்றவாறு. ஆளியின் துப்பினாய் என்றது இலக்குவனை இராமன் விளித்தது. அருளி – கொடுத்து. 'ஏற்றவர்க்கு மாற்றாதருள் செங்கை வாணன்' (தஞ்சைவாணன் கோவை. 126.) என்பதனுள் அருளுதல்-கொடுத்தல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். இச்செய்யுள் இராமனை நோக்கி இலக்குவன் கூறியதாகக்கொண்டு பொருள் வரைந்தாரும் உண்டு. இராமனை இலக்குவன் 'ஆளியின் றுப்பினாய்!' என்று விளிப்பதும், 'விண்ணும் மண்ணும் என்மேல் வந்தாலும் நாளுலந்து அழியும் நான் உனக்கு உரைப்பதென்' என்று கூறுவதும் அமைவுடையவாகா. பின்வந்தோனை நோக்கி னன் மொழியலுற்றவன், (60) 'வீர! நிருதர் ஆவி யானே பறிக்கு வென் என்ற பழமொழி பழுதுறாமே இக்குழுவை யான் கொல்வேன்; நீ குழலினாளைக் குறிக்கொடு காத்தி (இதனையே) விரும்பினேன்' என்று, (61) எண்ணி, கவசமிட்டு, உடைவாள் ஆர்த்து, புட்டில் கட்டி, சாபமும் தரித்து, (62) துப்பினாய்! இவ்வமர் எனக்கு அருளி நின்று, என் சோம்பினைத் துடைத்தி' என்றான் என இராமன்

கூற்ருக்குதலே தொடர்பும் அமைவும் உடையதாகும். 'உன்னை நீ என்பொருட்டுதவுவாயென்ருன்' (1845) என இலக்குவனிடம் இராமன் முன்னே கூறியதும் நோக்கத்தகும். (63)

**3035.** என்றலு மிளைய வீர
னிசைந்தன னிராம னேந்துங்
குன்றன தோளி னாற்ற
லுள்ளத்தி னுணரக் கொண்டா
னன்றியு மண்ண லாணை
மறுக்கில னங்கை கூப்பி
நின்றன னிருந்து கண்ணீர்
நிலனுறப் புலர்கின் ருள்பால்.

என்றலும், இளைய வீரன்
இசைந்தனன் ; இராமன் ஏந்தும்
குன்று அன தோளின் ஆற்றல்
உள்ளத்தின் உணரக் கொண்டான்,
அன்றியும், அண்ணல் ஆணை
மறுக்கிலன், அம் கை கூப்பி
நின்றனன்; இருந்து கண்ணீர்
நிலன் உறப் புலர்கின்ருள்பால்.

பொ :—என்று இராமன் கூறிய அளவில், இலக்குவன், இராமனுடைய ஓங்கிய மலைபோன்ற தோள்களின் வலிமையை மனத்துத் தெரிய நினைந்து, மேலும், பெரியோனுன இராமன் கட்டளையை மறுக்காமல் உடன்பட்டுத் தன் அழகிய கைத்தலங்களைக் குவித்து இராமனை வணங்கி, (பன்னசாலையுள்) இருந்து (இராமனுக்கு என்ன தீங்கு நேருமோ என்று அஞ்சிக்) கண்ணினின்று பெருகுகின்ற நீர் நிலத்தையடையும்படி வருந்துகின்ற சீதாபிராட்டி பக்கலில் (காத்து) நின்ருன்.

கு :—இளையவீரன் என்றது இலக்குவனை. இராமன் தோள், ஏந்தும் தோள், குன்றன்னதோள் எனத் தோளுக்கு அடையாக்குக. ஏந்துதல் - ஓங்குதல் ; 'நிலனேந்திய விசும்பும்' (2. 2) என்பது புறநானூறு. அண்ணல் என்றது இராமனை. புலர்தல் - வருந்துதல். என்றலும் இளையவீரன் இராமன் தோளினுற்றல் உள்ளத்தின் உணரக்கொண்டான், அன்றியும், அண்ணல் ஆணை மறுக்கிலன், இசைந்தனன்; அங்கை கூப்பி, இருந்து கண்ணீர் நிலன் உறப்

புலர்கின்ருள்பால் நின்றனன் என இயையும். இசைந்தனன், கொண்டான் மறுக்கிலன் என்பவை முற்றெச்சங்கள். (64)

**3036.** குழையுறு மதியம் பூத்த
கொம்பனுள் குழைந்து சோரத்
தழையுறு சாலே நின்றுந்
தனிச்சிலே தரித்த மேரு
மழையென முழங்கு கின்ற
வாளெயிற் றரக்கர் காண
முழையினின் றெழுந்து செல்லு
மடங்கலின் முனிந்து சென்ருன்.

குழை உறு மதியம் பூத்த
கொம்பு அனுள் குழைந்து சோரத்
தழை உறு சாலே நின்றும்
தனிச் சிலே தரித்த மேரு
மழை என முழங்குகின்ற
வாளெயிற் றரக்கர் காண
முழையில் நின்று எழுந்து செல்லும்
மடங்கலின் முனிந்து சென்ருன்.

பொ :—ஒப்பற்ற வில்லேத் தாங்கிய மேருமலே போல்பவனுன இராமன், குண்டலம் பூண்ட மதியினேப்பூத்த கொம்புபோல் வாளான சீதாபிராட்டி மனங்கரைந்து தளருமாறும், மேகம்போல் ஆரவாரிக்கின்ற, கொடிய பற்களேயுடைய அரக்கர் காணுமாறும் குகையினின்று எழுந்து செல்லும் சிங்கம்போல இலேகளால் வேயப் பட்ட சாலேயினின்று முனிந்து சென்ருன்.

கு :—குழை - குண்டலம், தழை என்னும் இருபொருளும் தந்து நின்றது. குழையுறு மதியம் எனவும் குழையுறு கொம்பு எனவும் இயையும். குழையுறுமதியம் பூத்த கொம்பு தனிச் சிலே தரித்த மேரு என்பவை இல்பொருள் உவமை. பிராட்டியின் திருமேனிக்குக் கொம்பும் குண்டலம் பூண்ட முகத்துக்குக் குழையுறு மதியும் உவமை யாகும். முழை – மலேக்குகை. மடங்கல் - சிங்கம். பன்னசாலேயி னின்று எழுந்து சினந்து செல்லும் இராமனுக்கு மலேக்குகையி னின்று எழுந்து சினந்து செல்லும் சிங்கம் உவமை. 'முழையி னின்றெழுந்து செல்லும் மடங்கலின்' என்பது "மாரிமலே முழைஞ் சில் மன்னிக் கிடந்துறங்கும், சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து,

வேரிமயிர் பொங்க வெப்பாடும் பேர்ந்துதறி, மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப், போதருமாபோலே " (திருப்பாவை. 23) என்னும் அருளிச்செயலை அடியொற்றியெழுந்தது. (65)

### சூர்ப்பணகை கரனுக்கு இராமனைக் காட்டுதல்

3037. தோன்றிய தோன்ற றன்னைச்
சுட்டினள் காட்டிச் சொன்னாள்
வான்றொடர் மூங்கி றந்த
வயங்குவெந் தீயி தென்னத்
தான்றொடர் குலத்தை யெல்லாந்
தொலைக்குமா சமைந்து நின்றா
ளேன்றுவந் தெதிர்ந்த வீர
னிவனிக லிராம னென்றே.

தோன்றிய தோன்றல் தன்னைச்
சுட்டினள் காட்டிச் சொன்னாள் ;
வான்தொடர் மூங்கில் தந்த
வயங்கு வெம் தீ இது என்னத்
தான் தொடர் குலத்தையெல்லாம்
தொலைக்குமா சமைந்துநின்றாள்,
"ஏன்று வந்து எதிர்ந்த வீரன்
இவன் இகல் இராமன் " என்றே.

பொ :—ஆகாயம் அளாவ வளர்ந்த மூங்கில் (ஒன்றோடொன்று உராய்தலால்) தோற்றுவித்த விளக்கம்மிக்க கொடிய நெருப்பு (அம் மூங்கிற்காடு முழுவதையும் அழித்தலை)ப் போலத் தான் தொடர்பு கொண்ட (அரக்கர்) குலம் முழுவதையும் அழிக்குமாறு அமைந்து நின்ற சூர்ப்பணகை, (பன்னசாலையினின்று) வெளிப்பட்ட இராமனை(க் கரனுக்கு)ச் சுட்டிக்காட்டிப் 'போரை மேற்கொண்டு வந்து எதிர்ப்பட்ட வீரனாகிய இவன் வலிமைவாய்ந்த இராமன்' என்று சொன்னாள்.

கு :—தோன்றல் என்றது இராமனை. சுட்டினள் முற்றெச்சம். சமைதல் - அமைதல். ஏன்று - மேற்கொண்டு. இகல் - வலிமை. நின்றாள், தோன்றல் தன்னைச் சுட்டிக்காட்டி, இவன் இராமன் என்றாள் : என இயையும். (66)

படையினரை நோக்கிக் கரன் கூறல் 3038-3039

3038. கண்டனன் கனகத் தேர்மேற்
கதிரவன் கலங்கி நீங்க
விண்டனி னின்ற வென்றிக்
கரனெனும் விலங்கற் றோளான்
மண்டமர் யானே செய்திம்
மானிடன் வலியை நீக்கிக்
கொண்டனன் வாகை யென்று
படைஞரைக் குறித்துச் சொன்னான்.

கண்டனன் கனகத் தேர்மேல்,
கதிரவன் கலங்கி நீங்க,
விண்தனில் நின்ற வென்றிக்
கரனெனும் விலங்கல் தோளான்,
'மண்டு அமர் யானே செய்து, இம்
மானிடன் வலியை நீக்கிக்
கொண்டனன் வாகை' என்று
படைஞரைக் குறித்துச் சொன்னான்.

பொ :—சூரியனும் கலங்கி விலகும்படி ஆகாயத்தே பொற்றேர் மீது ஓங்கிநின்ற வெற்றியையுடைய கரன் என்று சொல்லப்படும் மலைபோன்ற தோள்களையுடையான், இராமனைக் கண்டு தன் படை வீரரை நோக்கி, 'யானே நெருங்கிய போரைச்செய்து இந்த மனிதன் வலிமையைப் போக்கி வெற்றிகொள்வேன்' என்று கூறினான்.

கு :—கண்டனன் - கண்டு ; முற்றெச்சம். கனகம் - பொன். கதிரவன் - சூரியன். கதிரவனும் என உம்மை விரிக்க. விண் - ஆகாயம். விலங்கல் - மலை. மண்டுதல் - நெருங்குதல், அமர் - போர். மானிடன் - மனிதன். வாகை - வெற்றி. குறித்தல் - நோக்குதல். கண்டனன், படைஞரைக் குறித்து, யானே மண்டமர் செய்து இம் மானிடன் வலியை நீக்கி வாகைகொண்டனன் என்று சொன்னான் என இயையும். கொள்வேன் என்னாது கொண்டனன் என்றது, தெளிவு பற்றி வந்த காலவழுவமைதி. (67)

3039. மானிட னொருவன் வந்த
வலிகெழு சேனைக் கம்மா
கானிட மில்லை யென்னுங்
கட்டுரை கலந்த காலை

யானுடை வென்றி யென்னும்
 யாவருங் கண்டு நிற்றி
ரூனுடை யிவனை யானே
 யுண்குவெ னுயிரை யென்றான்.

'"மானிடன்; ஒருவன்; வந்த
 வலி கெழு சேனைக்கு, அம்மா!
கான் இடம் இல்லை" என்னும்
 கட்டுரை கலந்த காலை
யான் உடை வென்றி என்னும்?
 யாவரும் கண்டு நிற்றிர்;
ஊன் உடை இவனை யானே,
 உண்குவென் உயிரை' என்றான்.

பொ:—'"(பகைத்து நிற்பவனே) மனிதன்; ஒருவன்; (அவன் மேல் போர்கருதி) வந்த ஆற்றல் மிக்க (அரக்கர்) படைக்கு (நிற்றற்கும்) தண்டகம் என்னும் (பெரிய) வனத்திலும் இடமில்லை" என்று உலகத்தார் பேச்சு நிகழ்ந்தால், என்னுடைய வெற்றி என்னாகும்? எல்லோரும் பார்த்து நிற்பீராக; தசையுடல் உடைய இவன் உயிரை யானே உண்பேன்' என்று கூறினான்.

கு:—வலிகெழு சேனை - ஆற்றல் நிறைந்த படை. அம்மா வியப்பிடைச்சொல். கான் என்றது தண்டகவனத்தை. கட்டுரை - உறுதிப் பேச்சு. கலத்தல் - பரவுதல். யானுடை வென்றி என்னும் என்றது என் வெற்றி பழிக்கப்படும் என்றவாறு. (68)

## தீயகுறிகளைக் கண்ட அகம்பன் அறிவுரை கூறுதல் 3040-3044

**3040.** அவ்வுரை கேட்டு வந்தா
 னகம்பனென் றமைந்த கல்விச்
செவ்வியோ னொருவ னைய
 செப்புவென் செருவிற் சால
வெவ்விய ராத லன்றே
 வீரரு ளாண்மை வீர
விவ்வயி னுளவாந் தீய
 நிமித்தமென் றியம்ப லுற்றான்.

அவ் உரை கேட்டு வந்தான்,
அகம்பன், என்று அமைந்த கல்விச்
செவ்வியோன் ஒருவன், 'ஐய!
செப்புவென்; செருவில் சால
வெவ்வியராதல் நன்றே!
வீரருள் ஆண்மை வீர!
இவ்வயின் உளவாம் தீய
நிமித்தம்' என்று இயம்பலுற்ருன்.

பொ:—கரன் கூறியவுரைகளைக் கேட்டு (அவன் பக்கல்) வந்தவனுகிய அகம்பன் என்று பெயர் பொருந்திய சிறந்த கல்வியுடையாளுெரு நிமித்திகன், 'ஐய! வீரர்க்குள் ஆண்மையால் மேம்பட்ட வீரனே! யான் (ஒன்று) சொல்லுவேன்; (கேட்டருள்) போரில் வீரர் மிகவும் விரைவுடையராதல் நல்லதே; (ஆயினும்) இப்பொழுது தீயகுறிகள் உளவாகின்றன என்று கூறுவாளுயினன்.

கு:—'அவ்வுரை கேட்டு வந்தான் அகம்பன் என்று அமைந்த கல்விச் செவ்வியோன் ஒருவன், ஐய! வீரரில் ஆண்மைவீர! செப்புவென்; செருவில் சாலவெவ்வியராதல் நன்றே; (ஆயினும்) இவ்வயின் தீயநிமித்தம் உளவாம்' என்று இயம்பலுற்ருன் என இயையும். வந்தான் - வினையாலணையும் பெயர். வெவ்வியராதல் - விரைவுடையராதல். வெம்மை - கடுமை; விரைவு. செருவிற்சால வெவ்வியராதல் நன்று என்றது, வீரர் போரில் விரைவுடையராய் முற்படுதல் நன்று என்று வீரர்க்குரிய அமைதி கூறுவார்போல் நீயும் அவ்வாறு விரைவுடையையாய் முற்பட்டனை; அது, நன்று; ஆயினும் என்றவாறு. (69)

3041. குருதி மாமழை சொரிந்தன
★ மேகங்கள் குமுறிப்
பருதி வானவ னூர்வளைப்
புண்டது பாராய்
கருது வீரநின் கொடிமிசைக்
காக்கையின் கணங்கள்
பொருது வீழ்வன புலம்புவ
நிலம்படப் புரள்வ.

குருதி மா மழை சொரிந்தன மேகங்கள் குமுறிப்
பருதி வானவன் ஊர் வளைப்புண்டது பாராய்!

கருது வீர! நின் கொடி மிசைக்காக்கையின் கணங்கள்
பொருது வீழ்வன புலம்புவ நிலம்படப் புரள்வ.

பொ :—நினையத்தக்க வீரனே! மேகங்கள் முழங்கி இரத்த மழை பொழிந்ததனைப்பார்; சூரியன் பரிவேடத்தாற் சூழப்பட்டதனைப் பார்; உன் கொடியின்மீது, காக்கைக் கூட்டம் சண்டையிட்டு வீழ்கின்றன; கத்துகின்றன; நிலத்தில் விழுந்து புரள்கின்றன; பார்.

கு :—மேகங்கள் குமுறிக் குருதிமாமழை சொரிந்தன பாராய் என இயையும். பாராய் என்பது முன்னும் பின்னும் கூட்டப்பட்டது. பருதியாகிய வானவன் என்க. பருதி - சூரியன். வானவன் - தேவன். ஊர் - பரிவேடம்; சந்திர சூரியர்களைச் சுற்றித்தோன்றும் வட்டம். (70)

3042. வாளின் வாய்களை யீவளைக்
கின்றன வயவர்
தோளு நாட்டமு மிடந்துடிக்
கின்றன தூங்கி
மீளி மொய்ம்புடை யிவுளிவீழ்
கின்றன விரவி
ஞாளி யோடுநின் றுளைக்கின்ற
நரிக்குலம் பலவால்.

வாளின் வாய்களை ஈ வளைக்கின்றன; வயவர்
தோளும் நாட்டமும் இடம் துடிக்கின்றன; தூங்கி
மீளி மொய்ம்பு உடை இவுளி வீழ்கின்றன; விரவி
ஞாளியோடு நின்று உளைக்கின்ற நரிக் குலம் பல, ஆல்.

பொ :—வாள்களின் வாய்களில் ஈக்கள் சூழ்ந்து மொய்க்கின்றன; வீரருடைய இடத்தோளும் இடக்கண்ணும் துடிக்கின்றன. மிக்க வலியுடைய குதிரைகள் தூங்கி விழுகின்றன; பல நரிக்கூட்டங்கள், நாய்களோடு கலந்து நின்று ஊளையிடுகின்றன.

கு :—இவுளி தூங்கி விழுகின்றன எனவும் ஞாளியோடு விரவி நின்று எனவும் இயையும். வயவர் - வீரர். நாட்டம் - கண். இவுளி - குதிரை. விரவுதல் - கலத்தல். ஞாளி - நாய். உளைத்தல் - ஊளையிடுதல். நரிக்குலம் - நரிக்கூட்டம். முன் பாட்டிலுள்ள

பாராய் என்பது இச்செய்யுளிலும் பின்வரும் செய்யுளிலும் கூட்டிக் கொள்ள நின்றது. (71)

**3043.** பிடியெ லாமதம் பெய்திடப்
பெருங்கவுள் வேழ
மொடியு மான்மருப் புலகமுங்
கம்பிக்கு முயர்வா
னிடியும் வீழ்ந்திடு மெரிந்திடும்
பெருந்திசை யெவர்க்கு
முடியின் மாலைகள் புலாலொடு
முழுமுடை நாறும்.

பிடியெலாம் மதம் பெய்திடப் பெருங்கவுள் வேழம்
ஒடியுமால் மருப்பு ; உலகமும் கம்பிக்கும்; உயர் வான்
இடியும் வீழ்ந்திடும் ; எரிந்திடும் பெருந்திசை ; எவர்க்கும்
முடியின் மாலைகள் புலாலொடு முழுமுடை நாறும்.

பொ :—பெண் யானைகளெல்லாம் மதநீரைப் பெருகவிட, பெரிய கன்னங்களையுடைய களிற்றியானைகள் கொம்பு ஒடிபடும் ; உலகம் நடுங்கும் ; பெரிய திசைகளில் தீ எரியும் ; வீரர் யாவருக்கும் அவர் தலையிலணிந்த மாலைகள் புலால் நாற்றமும் முடை நாற்றமும் உடையவாகும்.

கு :—கவுள் - கன்னம். வேழம் மருப்பு ஒடியும் என இயையும் ; சினைவினை முதலொடும் செறிந்து முடிந்தது. ஆல் அசை. கம்பித்தல்- நடுங்குதல். புலால் என்றது இறைச்சியினின்று எழும் நாற்றத்தை. முடை - முடை நாற்றம் ; நீண்ட நாள் உடல் கழுவாத நிலையிலும், தயிர், மோர், வெண்ணெய் முதலியவை பதனழிந்த நிலையிலும் எழும் தீயநாற்றம். (72)

**3044.** இனைய வாகலின் மானிட
ஞெருவனென் றிவனை
நினைய லாவதொன் றன்றது
நீதியா நின்ற

வினையெ லாஞ்செய்தும் வெல்லலாந்
தன்மைய னல்லன்
புனையும் வாகையாய் பொறுத்தியென்
னுரையெனப் புகன்றான்.

"இனைய ஆகலின், மானிடன்
ஒருவன் என்று இவனை
நினையல்; ஆவதொன்று அன்று அது;
நீதியா நின்ற
வினை எலாம் செய்தும் வெல்லலாம்
தன்மையன் அல்லன்;
புனையும் வாகையாய்! பொறுத்தி
என் உரை" எனப் புகன்றான்.

பொ :—'விளைந்த போர்தொறும் வெற்றிமாலை யணிந்தவனே! இத்தன்மையினவான தீய குறிகள் தோன்றுதலால், இவ்விராமனை மனிதன், ஒருவன் என்று எண்ணற்க; அவ்வாறு நினைதல் பொருந்துவதொன்றன்று; மெய்யான போர்கள் எல்லாவற்றையும் செய்தும் இவன் வெல்லத்தக்கவனல்லன், இவ்வாறு கூறும் என் உரையைப் பொறுத்துக்கொள்ளுக' என்று கூறினான்.

கு :—இனைய - இத்தன்மையவான தீயகுறிகள்; என்றது முன் செய்யுட்களிற் கூறிய தீக்குறிகளை. இவன் மானிடன், ஒருவன் என்று நினையல்! அது ஆவது ஒன்று அன்று என இயைக்க. நினையல் என்பது அல்லீற்று எதிர்மறை வியங்கோள். அது - அவ்வாறு நினைதல்; மானிடன் என்றும் ஒருவன் என்றும் எண்ணுதல். மானிடன் ஒருவன் என்றது 68-ஆம் பாட்டில் கரன் கூறியதனை எடுத்து மொழிந்தவாறு. நீதி – மெய் (பிங்). வினை - போர். வெல்லலாந்தன்மையனல்லன்; புனையும் வாகை; ஆய்! என்றுகொண்டு இவன் நம்மால் வெல்லத்தக்கவனல்லன்; நம்மை வென்று வெற்றி மாலை சூடுவான்; நீ இதனை ஆய்க என்று பொருளுரைக்கும்படியும் அமைந்தமை நோக்கத்தகும். (73)

நிமித்திகன் கூறியதுகேட்ட கரன் கூறுதல்

3045. உரைத்த வாசகங் கேட்டலு
முலகெலா முலையச்
சிரித்து நன்றுநஞ் சேவகந்
தெவ்வரைத் தேய

வரைத்த வம்மியா மலங்கெழிற்
றோளமர் வேண்டி
யிரைத்து வீங்குவ மானிடற்
கெளியவோ வென்றான்.

உரைத்த வாசகம் கேட்டலும், உலகு எலாம் உலையச்
சிரித்து, 'நன்று நம் சேவகம், தெவ்வரைத் தேய
அரைத்த அம்மியாம் அலங்கு எழில் தோள், அமர்வேண்டி
இரைத்து வீங்குவ, மானிடற்கு எளியவோ?' என்றான்.

பொ :—(நிமித்திகன்) கூறிய சொற்களைக் கேட்ட அளவில் கரன், உலகமெல்லாம் நிலை குலையும்படி சிரித்து, 'நம் வீரம் நன்று' பகைவர் அழியும்படி அரைத்த அம்மியாகிய விளங்குகின்ற அழகிய என் தோள்கள் போரை விரும்பி (அதுகிட்டாமையால்) சீறிப் பூரித்துள்ளவை, மனிதர்க்கு எளிய ஆவனவோ? (ஆகா) என்றான்.

கு :—வாசகம் - சொல். உலைதல் - நிலைகுலைதல். சேவகம் - வீரம். அலங்குதல் - விளங்குதல். நன்று என்பது இகழ்ச்சிக் குறிப்பு. இரைத்தல் - சீறுதல்; 'இரைக்கின்ற பாம்பு' (பதினோராந் திருமுறை. திருவிரட்டை. 7.) என்பது காரைக்காலம்மையார் பாசுரம். (74)

கரன் கூறியது கேட்ட படையினர் இராமனை வளைதல்

3046. என்னு மாத்திரத் தேயெறி
பிடியென விடியா
மன்னர் மன்னவன் மதலையை
வளைந்தன வனத்து
மின்னும் வாலுளை மடங்கலை
முனிந்தன வேழந்
துன்னி ளுலெனச் சுடுசினத்
தரக்கர்தந் தொகுதி.

என்னும் மாத்திரத்தே 'எறி பிடி' என இடியா,
மன்னர் மன்னவன் மதலையை வளைந்தன; வனத்து,
மின்னும் வால் உளை மடங்கலை முனிந்தன வேழம்
துன்னினால் எனச் சுடு சினத்து அரக்கர்தம் தொகுதி.

பொ:—என்று கரன் கூறிய அளவில், கொதிக்கும் சினமுடைய அரக்கர்திரள், 'எறி, பிடி' என்று முழங்கிக்கொண்டு, காட்டின்கண் விளங்கும் வெள்ளிய பிடரிமயிரையுடைய சிங்கம் ஒன்றை யானைகள் வெகுண்டு நெருங்கினாற்போல, அரசர்க்கரச(னான தசரத)ன் புதல்வனை வளைந்தன.

கு:—'எறி, பிடி' என்பவை கரன் படை வீரர் கூற்று; 'பிடி யெறி பட'வென்று (2403) குகன் கூறியதும் நோக்கத்தகும். இடித்தல் - முழங்குதல். வளைந்து மின்னும் வாலுளை மடங்கல் என்னும் பாடத்திற்கு வளைந்து விளங்கும் வாலினையும் பிடரி மயிரையும் உடைய சிங்கம் என்று பொருள் கொள்ளலாம். .வால் என்பது, வெண்மை, வால் என்னும் உறுப்பு என இருபொருளும்பட நின்றது. உளை - பிடரிமயிர். மடங்கல் - சிங்கம். முனிந்தன - வெகுண்டன வாகி; முற்றெச்சம். துன்னுதல் - நெருங்குதல், தொகுதி - கூட்டம். என்னும் மாத்திரத்து, அரக்கர்தம் தொகுதி, 'எறி', 'பிடி' என இடியா, மடங்கலை வேழம் முனிந்தன துன்னினாலென. மன்னர் மன்னவன் மதலையை வளைந்தன என இயையும், மன்னர் மன்னவன் என்றது தசரதனை. மன்னர் மன்னவன் மதலை என்றது இராமனை. (75)

## இராமன் பொருதமையால் கரன்படை அழிதல் 3047-3066

**3047.** வளைந்த காலையில் வளைந்ததவ்
விராமன்கை வரிவில்
விளைந்த போரையு மாவதும்
விளம்புதும் விசையால்
புளைந்த பாய்பரி புரண்டன
புகர்முகப் பூட்கை
யுளைந்த மால்வரை யுருமிடி
படவொடிந் தென்ன.

வளைந்தகாலையில் வளைந்தது அவ் இராமன் கை வரிவில்;
விளைந்த போரையும் ஆவதும் விளம்புதும்; விசையால்
புளைந்த பாய் பரி புரண்டன; புகர்முகப் பூட்கை
உளைந்த மால் வரை உரும் இடி பட ஒடிந்தென்ன.

பொ:—கரன்படை வளைந்தபொழுது, அவ்விராமனுடைய கட்டமைந்த வில்லும் வளைந்தது; நிகழ்ந்த போரையும் அதன் விளைவையும் சொல்லுவோம்; தாவிச் செல்லுங் குதிரைகள், விரைந்து

பாயும் இராமனம்புகளால் துளையுண்டனவாய் விழுந்து புரண்டன; புள்ளிகள் பொருந்திய முகத்தையுடைய யானைகள், முழங்குகின்ற இடி விழுதலால் பெரிய மலைகள் சிதைந்தாற்போல(ச் சிதைந்து) வருந்தின.

கு :—வரிவில் - கட்டமைந்த வில். ஆவது-போரால் விளைவது. விசை என்பது ஆகுபெயராய் விசையுடைய அம்பினை உணர்த்திற்று. புளைதல் - துளைபடல். புகர் – புள்ளி. பூட்கை - யானை. உளைதல் - வருந்துதல். உருமுதல் - முழங்குதல். படுதல் - விழுதல். யானைகளுக்கு மலைகளும் இராமபாணங்களுக்கு இடியும் உவமை. (76)

3048. சூல மற்றன வற்றன சுடர்மழுத் தொகைவாண்
மூல மற்றன வற்றன முரட்டண்டு பிண்டி
பால மற்றன வற்றன பகழிவெம் பகுவாய்
வேலு மற்றன வற்றன வில்லொடு பல்லம்.

சூலம் அற்றன; அற்றன சுடர் மழுத் தொகை; வாள்
மூலம் அற்றன; அற்றன முரண் தண்டு; பிண்டி
பாலம் அற்றன; அற்றன பகழி, வெம் பகுவாய்
வேலும் அற்றன; அற்றன வில்லொடு பல்லம்.

பொ :—இராமனம்புகளால் சூலங்கள் ஒடிந்தன; ஒளிர்கின்ற மழுப்படைகளின் திரள் ஒடிந்தன; வாள்கள் அடியறுபட்டன; வலியுள்ள தண்டுகளும் பிண்டி பாலம் என்னும் படைக்கலங்களும் ஒடிந்தன; அம்புகள் ஒடிந்தன; கொடிய (பகைவருடலைப்) பிளக்கும் வாயினையுடைய வேலாயுதங்களும் அற்றன; வில்லும் பல்லம் என்னும் படையும் ஒடிந்தன.

கு :—இராமனம்புகளால் என ஏது வருவித்துரைக்கப்பட்டது. மழு - கோடரி வடிவினையுடையதொரு படைக்கலம். தொகை – திரள். வாளுக்கு மூலமாவது கைப்பிடி. முரண் - வலிமை. தண்டு - தண்டம்; கழி. பிண்டிபாலம் - ஒருவகை யெறிபடை. பகழி - அம்பு. பல்லம் - கணைவகையினொன்று. அடிதோறும் அற்றன என்னும் சொல்லே பயின்றமையால் இது சொற்பொருட் பின்வருநிலையணி தழுவியமைந்ததாகும். (77)

3049. தொடி துணிந்தன தோளொடு
தோமரந் துணிந்த
வடி துணிந்தன கடகளி
றச்சொடு நெடுந்தேர்
கொடி துணிந்தன குரகதந்
துணிந்தன குலமா
முடி துணிந்தன முளையொடு
துணிந்தன முசலம்.

தொடி துணிந்தன தோளொடு; தோமரம் துணிந்த;
அடி துணிந்தன கட களிறு; அச்சொடு நெடுந்தேர்,
கொடி துணிந்தன; குரகதம் துணிந்தன; குல மா
முடி துணிந்தன; முளையொடு துணிந்தன முசலம்.

பொ:—தோள்வளைகள் தோளொடு துணிந்தன; தோமரங்கள் துணிந்தன; மதயானைகள் கால்கள் அறுபட்டன; பெரிய தேர்கள் அச்சும் கொடியும் அறுபட்டன; குதிரைகள் துணிந்தன. (வீர ருடைய) கூட்டமான பெரிய தலைகள் அறுபட்டன; தண்டாயுதத் தொடு உலக்கைகளும் அறுபட்டன.

கு:—தொடி - தோள்வளை. துணிந்தன - அறுபட்டன. தோமரம்- கைவேல். (பிங்கலம்). கடம் - மதம். குரகதம் - குதிரை. குலம் - கூட்டம். முளை - தண்டாயுதம். முசலம் - உலக்கை. இதுவும் சொற்பொருட் பின்வருநிலையணி தழுவியது. (78)

3050. கருவி மாவொடு கார்மதக்
கைம்மலைக் கணத்தூ
டுருவி மாதிரத் தோடின
சுடுசர முதிர
மருவி மாலையிற் பிறங்கின
தவனியி லரக்கர்
திருவின் மார்பகந் திறந்தன
துறந்தன சிரங்கள்.

கருவி மாவொடு கார் மதக் கைம்மலைக் கணத்தூடு
உருவி மாதிரத்து ஓடின சுடு சரம்; உதிரம்

அருவி மாலையில் பிறங்கினது அவனியில்; அரக்கர்
திரு இல் மார்பகம் திறந்தன துறந்தன சிரங்கள்.

பொ :—(இராமன் ஏவிய) வெய்ய கணைகள், சேணம் பூண்ட குதிரைகளையும், கரிய மதநீரையும் கையையும் உடைய மலைபோன்ற யானைக் கூட்டங்களையும் ஊடுருவித் திசைகளில் ஓடின; அவ் வம்புகள் உருவித் துளைத்தமையால் அவற்றினின்று சிந்தும் குருதி யானது, அருவி யொழுங்குபோல நிலத்தில் பெருகியது. இராக்கத ருடைய திருஅற்ற மார்புகள் பிளந்தன; அவருடைய தலைகள் உடலைவிட்டு நீங்கின.

கு :—கருவி - சேணம். கார் - கருமை. கைம்மலை - யானை. கணம் – கூட்டம்; திரள். மாதிரம் - திசை. சுடுசரம், மாவொடு கைம்மலைக் கணத்தூடு உருவி, மாதிரத்து ஓடின என இயையும். மாலை - ஒழுங்கு. பிறங்குதல் - பெருகுதல். அவனி - பூமி. திருவில் மார்பகம் என்று கொண்டு, அழகிய ஒளிபொருந்திய மார்பு என்று பொருள் கூறலும் ஆம். துறத்தல் - நீங்குதல். சிரம் – தலை. (79)

**3051.** ஒன்று பத்துநூ றுயிரங்
கோடியென் றுணராத்
துன்று பத்திய விராகவன்
சுடுசரந் துரப்பச்
சென்று பத்திரத் தலையென
மலைதிரண் டென்னக்
கொன்று பத்தியிற் குவித்தன
பிணப்பெருங் குன்றம்.

ஒன்று பத்து நூறுயிரம் கோடி என்று உணராத்
துன்று பத்திய, இராகவன் சுடுசரம் துரப்பச்
சென்று பத்திரத் தலை என மலை திரண்டென்னக்
கொன்று பத்தியில் குவித்தன பிணப் பெருங்குன்றம்.

பொ :—ஒன்று பத்து நூறு ஆயிரம் லட்சம் கோடி என்று வரை யறுத்தறிய இயலாத நெருங்கிய வரிசையான கொடிய அம்புகள் இராமன் செலுத்தச் சென்று, கரன் படையைக் கொன்று மலைச் சிகரம் போலவும் மலைகள் பல திரண்டாற்போலவும் பெரிய பிண மலைகளை வரிசையாகக் குவித்தன.

கு:—நூருயிரம் என்பது, நூறு ஆயிரம் எனப் பிரித்து இரண் டெண்களாகவும், நூருயிரம் என ஓர் எண்ணுகவும் கொள்ள நின்றது. துன்றுதல் - நெருங்குதல். பத்தி - வரிசை. துரப்ப - செலுத்த. பத்திரம் - மலே. இராகவன் - இரகுவின் வழிவந்தோன்; இராமன். இராகவன் துரப்பச் சரம் சென்று, பிணப் பெருங்குன்றம் குவித்தன என இயையும். (80)

3052. காடு கொண்டகா ருலவைகள்
கதழெரி கதுவச்
சூடு கொண்டன வெனத்தொடர்
குருதிமீத் தோன்ற
வாடு கின்றன வறுகுறை
யயிலம்பு விண்மே
லோடு கின்றன வுயிரையுந்
தொடர்வன வொத்த.

காடு கொண்ட கார் உலவைகள் கதழ் எரி கதுவச்
சூடு கொண்டன எனத் தொடர் குருதி மீத் தோன்ற,
ஆடுகின்றன, அறுகுறை; அயில் அம்பு விண் மேல்
ஓடுகின்றன, உயிரையும் தொடர்வன ஒத்த.

பொ:—காட்டில் உள்ள கரிய பட்டமரங்கள், கிளர்ந்தெரி கின்ற நெருப்புப் பற்ற எரிவனபோல, தலேயற்ற உடல்கள், இடை யருது பெருகும் குருதி மேலே தோன்ற ஆடுகின்றன; கூரிய அம்புகள் விண்மீது ஓடுகின்றவை, (அரக்கர் தலேகளே அறுத்ததோடு அமையாமல்) அவருயிரையும் பற்றத் தொடர்வன போன்றன.

கு:—இராமன் அம்புகள், அரக்கர் தலேகளே அறுத்துத் தள்ளி யதன்மேலும் வேகம் குறையாமல் விண்மீது செல்லுகின்றன. அந் நிலேயில், தலேயற்ற குறையுடல்கள், மேலே குருதி பீறிட்டெழ நின்று ஆடுதல், காட்டில் மேற்கிளேயற்ற பட்ட நிலேமரங்கள் நெருப் புப்பற்றி யெரிவனபோல் தோன்ற, விண்மீது செல்லுகின்ற அம்புகள், அரக்கர் தலேகளே யறுத்ததோடமையாமல், அவருயிரையும் (தொடர்ந்து) பற்றச்செல்வன ஒத்தன என்றவாறு. அரக்கருடைய தலேயற்ற கரிய பெரிய உடலுக்குக் காட்டிலுள்ள மேற்கிளேயற்ற பட்ட மரங்களும், அரக்கருடல்களினின்று பீறிட்டு மேலெழுகின்ற குருதிக்குக் காட்டிலுள்ள மேற்கிளேயற்ற பட்ட மரங்களிற் பற்றி யெரியும் நெருப்பும் உவமை. போரில் இறந்தோர் உயிர் மேலுலகம்

அடையும் என்னும் வழக்குப்பற்றி, 'அயிலம்பு விண்மேல் ஓடு கின்றன உயிரையும் தொடர்வன வொத்த' என்ருர். இது தற்குறிப் பேற்றவுவமை. உலவை - பட்டமரம். கதழ்தல்-மூளுதல்; கிளர்தல். கதுவுதல் - பற்றுதல். சூடுகொள்ளல் - எரிதல். தொடர்தல் - இடை யருது வருதல்; மிகுதலும் ஆம். மீ-மேல். அறுகுறை - தலையற்ற குறையுடல்; கவந்தம். அயில் - கூர்மை. (81)

3053. கைகள் வாளொடு களம்படக்
கழுத்தறக் கவச
மெய்கள் போழ்படத் தாள்விழ
மிகநெடு நிருதர்
செய்ய மாத்தலை சிந்திடத்
திசையுறச் சென்ற
தைய லார்நெடு விழியெனக்
கொடியன சரங்கள்.

கைகள் வாளொடு களம் படக் கழுத்து அறக் கவச
மெய்கள் போழ்படத் தாள் விழ மிக நெடு நிருதர்
செய்ய மாத் தலை சிந்திடத் திசை உறச் சென்ற
தையலார் நெடு விழி எனக் கொடியன சரங்கள்.

பொ:—மகளிருடைய நீண்ட கண்களைப் போலக் கொடியன வாகிய (இராமன்) அம்புகள், மிகவும் நெடியவரான அரக்கருடைய கைகள் வாள்களோடு போர்க்களத்தில் (அற்று) விழ, கழுத்துக்கள் அறுபட, கவசமும் மார்பும் பிளவுபட, கால்கள் அறுபட, செந்நிற முடைய பெரிய தலைகள் அறுபட்டுச் சிந்தத் திசைகளின் முடிவை அடையச் சென்றன.

கு:—சரங்கள், பட, அற, பட, விழ, சிந்திடச் சென்ற என இயைந்து முடிவுகொள்ளும். கூர்மையும், இலக்கில் தைத்தழுந்தி வருத்துதலும் மகளிர் விழிக்கும் அம்புக்கும் பொதுத்தன்மை. எதிர் நிலை என்னும் அணிபற்றி உவமானமான அம்பினை உவமேயமாக்கிக் கூறினர். போழ்படல் - பிளத்தல். தாள் - கால். செம்பங்கியுடை மையால் அரக்கர் தலையினைச் செய்ய மாத்தலை என்ருர். (82)

3054. மாரி யாக்கிய வடிக்கணை
வரைபுரை நிருதர்
பேரி யாக்கையின் பெருங்கரை
வயின்றொறும் பிறங்க
வேரி யாக்கின வாறுக
ளியற்றின நிறையச்
சோரி யாக்கின போக்கின
வனமெனுந் தொன்மை.

மாரி ஆக்கிய வடிக் கணை, வரை புரை நிருதர்
பேர் இயாக்கையின் பெருங்கரை வயின் தொறும் பிறங்க,
ஏரி ஆக்கின ; ஆறுகள் இயற்றின ; நிறையச்
சோரி ஆக்கின ; போக்கின வனம் எனும் தொன்மை.

பொ :—மழையின் தன்மையைச்செய்த கூரிய அம்புகள், மலை போன்ற அரக்கருடைய பெரிய உடல்களால் பெரிய கரைகள் இடந் தோறும் உயர்ந்துதோன்ற, குளங்களை உண்டாக்கின ; ஆறுகளை உண்டாக்கின ; அவை நிறையும்படி இரத்தப்பெருக்கையும் உண் டாக்கின ; வனம் என்னும் பழைய நிலையைப் போக்கிவிட்டன.

கு :—இராமனம்புகளால் தடிந்திடப்பெற்ற அரக்கருடல்கள், அங்கங்கே ஒதுங்கிக் கரைபோல் உயர்ந்துதோன்ற இடையே தேங்கிய செந்நீர் ஏரிகளாகவும், பெருக்கெடுத்துச் செல்லும் குருதி ஆறுகளாகவும் காணப்பட்டன என்றவாறு. இடைவிடாது சொரி தலால் மழையின்றன்மையை அம்பின் மேலேற்றி மாரியாக்கிய வடிக்கணை என்றமைக் கேற்ப ஏரிகளையும் ஆறுகளையும் நிரப்புத லாகிய மழையின் செயலையும் அம்புகள் செய்ததாகக் கூறினர். மாரி - மழை. ஆக்குதல் - செய்தல். வடி - கூர்மை. புரை - உவமவுருபு. பேரியாக்கை - பெரியவுடல். பிறங்குதல் - உயர்தல் ; விளங்குதலும் ஆம். ஏரி - குளம். சோரி - இரத்தம். தொன்மை - பழையநிலை. (83)

3055. அலைமி தந்தன குருதியின் பெருங்கட லரக்கர்
தலைமி தந்தன நெடுந்தடி மிதந்தன தடக்கை
மலைமி தந்தன வாம்பரி மிதந்தன வயப்போர்ச்
சிலைமி தந்தன மிதந்தன கொடிநெடுந் தேர்கள்.

அலை மிதந்தன குருதியின் பெருங்கடல், அரக்கர்
தலை மிதந்தன ; நெடுந்தடி மிதந்தன ; தடக்கை
மலை மிதந்தன ; வாம் பரி மிதந்தன ; வயப் போர்ச்
சிலை மிதந்தன ; மிதந்தன கொடி நெடுந்தேர்கள்.

பொ:—அலைகள் மிக்க இரத்தப் பெருங்கடலில் அரக்கருடைய தலைகள் மிதந்தன ; நெடிய தண்டாயுதங்கள் மிதந்தன ; பெரிய கைகளாகிய மலைகள் மிதந்தன ; தாவிச் செல்லும் குதிரைகள் மிதந்தன ; வலிய போர் புரிதற்குரிய விற்கள் மிதந்தன ; கொடி கட்டிய தேர்கள் மிதந்தன.

கு :—இராமன் ஏவிய அம்புகளால் அரக்கர்படை ஊறுபட்டுச் சிந்திய குருதி கடல் போலப் பெருகியது. அதில் அரக்கருடைய தலைகளும் தோள்களும் தண்டாயுதங்களும் விற்களும் குதிரைகளும் தேர்களும் மிதந்தன என்றவாறு. மிதத்தல் - மிகுதல், நீர் முதலியவற்றின் மேற்பரப்பில் தங்குதல் என்னும் இருபொருளும் பட நின்றது. தடி - தண்டாயுதம் ; தசையும் ஆம். வாவும் பரி என்பது வாம்பரி என்ருனது, விகாரம். வாவுதல் - தாவுதல். பரி - குதிரை. வயம் - வலிமை. சிலை - வில். (84)

**3056.** ஆய காலையி னனல்விழித்
தார்த்திக லரக்கர்
தீய வார்கணை முதலிய
தெறுசினப் படைகண்
மேய மால்வரை யொன்றினை
வளைத்தன மேகந்
தூய தாரைகள் சொரிவன
வாமெனச் சொரிந்தார்.

ஆய காலையின் அனல் விழித்து, ஆர்த்து இகல் அரக்கர்
தீய வார் கணை முதலிய தெறு சினப் படைகள்,
மேய மால் வரை ஒன்றினை வளைத்தன, மேகம்
தூய தாரைகள் சொரிவனவாம் எனச் சொரிந்தார்.

பொ :—அவ்வாறு ஆனபொழுது வலிய அரக்கர்கள், நெருப்பு (எழ) விழித்து, ஆரவாரித்து, பொருந்திய பெரிய மலையொன்றினை மேகங்கள் சூழ்ந்து, நல்ல மழைத்தாரைகளைச் சொரிந்தாற்போலக் கொடிய நீண்ட அம்பு முதலிய கொல்லும் சினப்படைக்கலங்களைச் சொரிந்தார்கள்.

கு :—ஆயகாலேயென்றது முன்பாடல்களிற் சொல்லியவாறு படையழிவு நேர்ந்தபொழுது என்றவாறு. இராமனுக்கு மலேயும் இராமனே வளேத்து நின்ற அரக்கர்க்கு மலேயை வளேத்து நின்ற மேகக்கூட்டமும், அரக்கர் முழக்கத்துக்கு மேக முழக்கமும், அரக்கர் எய்த சரதாரைகளுக்கு மேகங்கள் பொழிந்த நீர்த்தாரைகளும் உவமை. மேகங்கள் வளேத்து நின்று பெய்த நீர்த்தாரைகளால் மலே ஊறுபடாததுபோல அரக்கர் ஏவிய சரதாரைகளால் இராமன் ஊறுபட்டிலன் என்பதும் இவ்வுவமையுள் அடங்கி நின்றமை காணலாம். கொலேக் கருவியாதலின் தீயவார்கணே என்ருர். உடையானது சினத்தை உடைமையின்மேல் ஏற்றித் தெறு சினப் படையென்ருர். (85)

**3057.** சொரிந்த பல்படை துணிபடத்
துணிபடச் சரத்தா
லரிந்து போந்தன சிந்திடத்
திசைதிசை யகற்றி
நெரிந்து பார்மகண் நெளிவுற
வனமுற்று நிறைய
விரிந்த செம்மயிர்க் கருந்தலே
மலேயென வீழ்த்தான்.

சொரிந்த பல் படை துணி படத் துணி படச் சரத்தால்
அரிந்து, போந்தன சிந்திடத் திசைதிசை அகற்றி,
நெரிந்து பார்மகள் நெளிவுற, வனம் முற்றும் நிறைய,
விரிந்த செம் மயிர்க் கருந்தலே மலே என வீழ்த்தான்.

பொ :—இராமன், அரக்கர் பொழிந்த பலவகைப் படைக்கலங்களேயும் அம்பினல் முறிபடும்படி முறிபடும்படி அறுத்து, மேலும் தன்மேல் வந்தவற்றைத் திசைதொறும் திசைதொறும் சிதறும்படி போக்கி, நிலமடந்தை (முதுகு நெரிந்து) நெளியுமாறும் அந்த வனம் முழுதும் நிறையுமாறும், பரவிய செம்பங்கியினேயுடைய பெரிய அரக்கர் தலேகளே மலேபோல (அறுத்து) வீழ்த்தினன்.

கு :—படை - படைக்கலங்கள். இடைவிடாமல் ஏவியமையால் சொரிந்த பல் படை என்ருர். துணிபடல் - துண்டு படுதல்; முறிதல். அரிதல் - அறுத்தல். பார்மகள் (முதுகு) நெரிந்து நெளிவுற என இயைக்க. (86)

3058. கவந்த பந்தங்கள் களித்தன
குளித்தகைம் மலைகள்
சிவந்து பாய்ந்தவெங் குருதியிற்
றிருகிய சினத்தா
னிவந்த வெந்தொழி னிருதர்த
நெடுநிணந் தெவிட்டி
யுவந்த வன்கழு துயிர்சுமந்
துளுக்கிய தும்பர்.

கவந்த பந்தங்கள் களித்தன, குளித்த கைம் மலைகள்
சிவந்து பாய்ந்த வெம் குருதியில்; திருகிய சினத்தால்
நிவந்த வெம் தொழில் நிருதர்தம் நெடு நிணம் தெவிட்டி,
உவந்த, வன் கழுது; உயிர் சுமந்து உளுக்கியது உம்பர்.

பொ :—செந்நிறத்தொடு விரைந்து ஓடிய வெவ்விய இரத்தப் பெருக்கில், தலையற்றவுடல்கள் மகிழ்ந்து கூத்தாடின; கையை யுடைய மலைபோன்ற யானைகள் முழுகின; மாறுபட்ட வெகுளியால் ஓங்கிய கொடிய போர் (த்தொழில் புரிந்து இறந்த அரக்க) வீர ருடைய நெடிய வுடற்றசையை யுண்டு வெறுத்து வலிய பேய்கள் மகிழ்ந்தன; விண்ணுலகு போர்க்களத்திற் செத்தாருயிரைச் சுமந்து முதுகு நெரிந்தது.

கு :—கவந்தம் - தலையற்றவுடல். பந்தம் - திரள். திருகுதல் - மாறுபடுதல். நிவத்தல் - ஓங்குதல். தொழில் என்றது போரினை. நிணம் - தசை. தெவிட்டுதல் - அளவின் மிகவுண்டு வெறுப்புறல். கழுது - பேய. உம்பர் - விண்ணுலகு. (87)

3059. மருட ருங்களி வஞ்சனை
வளையெயிற் றரக்கர்
கருட னஞ்சுறு கண்மணி
காகமுங் கவர்ந்த
விருட ரும்புரத் திழுதையர்
பழுதுரைக் கெளிதோ
வருட ருந்திறத் தறனன்றி
வலியதுண் டாமோ.

மருள் தரும் களி வஞ்சனை வளை எயிற்று அரக்கர்,
கருடன் அஞ்சுறு கண்மணி காகமும் கவர்ந்த;
இருள் தரும் புரத்து இழுதையர் பழுது உரைக்கு எளிதோ,
அருள் தரும் திறத்து அறன் அன்றி, வலியது உண்டாமோ?

பொ:—மயக்கத்தைத் தரும் களிப்பும் வஞ்சமும் வளைந்த பற்களும் பொருந்திய அரக்கருடைய, கருடனும் அஞ்சும் கண்ணின் மணிகளைக் காக்கைகளும் கவர்ந்துண்டன; இருள்போலும் கரிய உடலுள்ள அறிவிலிகளான அரக்கர் உறும் தீங்கு சொல்லற்கு எளியதோ? அருள்விளைக்கும் இயல்பினதாகிய அறத்தை ஒழிய வலியது வேறொன்று உண்டாகுமோ? (உண்டாகாது)

கு:—மருள் - மயக்கம். களி - களிப்பு; செருக்கு. எயிறு - பல். கருடனும் என உயர்வுசிறப்பும்மை விரிக்க. காகமும் என்பதனுள், உம்மை இழிவு சிறிப்புணர நின்றது. உயிரோடிருந்த நிலையில், பெருவலியனாய்ப் பறவையரசனுமான கருடனும் அஞ்சும்படி விளங்கிய அரக்கர் கண்கள், அவர்கள் போர்க்களத்துள் இறந்து வீழ்ந்த நிலையில், ஒரு கண்ணே யுடையதும், பறவைகளுள் இழிந்ததும் ஆன காக்கையும் கவர்ந்துண்ணும்படி எளியவாயின என்றவாறு. இருள் கருமை என்று பொருள்பட நின்றது. புரம் - உடல். இழுதையர் - (செய்வன தவிர்வனவற்றை அறியும்) அறிவில்லாதவர்; அரக்கர். பழுது - தீங்கு. திறம் - தன்மை. அறநெறி நின்ற இராமன் வலிமைவாய்ந்தவனாயினான்; அந்நெறி நில்லாது மறநெறி நின்ற அரக்கர் வலியற்றவராய் அழிவுற்றனர் என்னும் சிறப்புப் பொருள் நிறுவ நின்றமையின் இறுதியடி வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணி தழுவியமைந்ததாகும். (88)

**3060.** பல்லாயிர மிருள்கீறிய
☆ பகலோனென வொளிரும்
வில்லாளனை முனியாவெயி
லயிலாமென விழியாக்
கல்லார்மழை கணமாமுகில்
கடைநாள்விழு வனபோ
லெல்லாமொரு தொடையாவுட
னெய்தார்வினை செய்தார்.

பல்லாயிரம் இருள் கீறிய பகலோன் என ஒளிரும்
வில்லாளனை முனியா, வெயில் அயில் ஆம் என விழியாக்

கல் ஆர் மழை, கண மா முகில் கடைநாள், விழுவன போல்
எல்லாம் ஒரு தொடையா உடன் எய்தார்; வினை செய்தார்.

பொ :—(போர்க்களத்தில் இறவாது நின்ற அரக்கர்,) பல ஆயிரமாகத் தொக்க இருட்டொகுதிகளைப் பிளந்தொழித்த சூரியனைப் போல விளங்குகின்ற வில்லாளியான இராமனை முனிந்து, விளக்கம் அமைந்த வேலைப்போல விழித்து, ஊழிக்காலத்துத் திரண்ட மேகக் கூட்டம் கல்மாரி பொழிவதுபோலத் தம் படைக்கலங்கள் எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் ஒருசேர இராமன்மேல் எய்து போர் செய்வாராயினர்.

கு :—இருட்டொகுதி அரக்கர்திரளுக்கும், இருட்டொகுதியை ஒழிக்கும் சூரியன், அரக்கர் திரளையழித்த இராமனுக்கும், உக முடிவில் ஒருங்கு திரண்டுநின்று கன்மாரி பொழிகின்ற மேகங்கள், ஒருங்கு திரண்டுநின்று இராமன்மேல் படைமாரி பொழிகின்ற அரக்கர்க்கும் உவமை. பகலோன் - சூரியன். ஒளிர்தல் - விளங்குதல். வெயில் - ஒளி. அயில் - வேல். கல் ஆர் மழை - கல்மழை. கணம் - கூட்டம். கடைநாள் - உகமுடிவு (ஊழிக்) காலம். விடுதல் – சொரிதல். வினை – போர். (89)

**3061.** எறிந்தாரென வெய்தாரென
நினைந்தாரென வெறிய
வறிந்தாரென வறியாவகை
யயில்வாளியி னறுத்தான்
செறிந்தாரையும் பிறிந்தாரையுஞ்
செறுத்தாரையுஞ் சினத்தான்
மறிந்தாரையும் வலித்தாரையு
மடித்தான்சிலை பிடித்தான்.

எறிந்தார் என, எய்தார் என, நினைந்தார் என, எறிய
அறிந்தார் என அறியாவகை அயில் வாளியின் அறுத்தான்;
செறிந்தாரையும், பிறிந்தாரையும், செறுத்தாரையும், சினத்தால்
மறிந்தாரையும், வலித்தாரையும், மடித்தான் சிலை பிடித்தான்.

பொ :—வில்லைக் கைக்கொண்டவனான இராமன், கூட்டமாகத் தன்னை நெருங்கினவர்களையும், கூட்டத்தினின்று பிரிந்து (தன்னைத் தாக்க) வந்தவர்களையும், தன்னைச் சினந்தவரையும், சினந்து தன்னை மேற்செல்லவிடாது தடுத்தவர்களையும், தன்னை வளைத்துக்கொண்டவர்களையும், இவர் படையினை எறிந்தார் எனவும், இவர் அம்பு

எய்தார் எனவும், இவர் அம்பெய்ய நினைந்தார் எனவும் இவர் படைக்கலம் எறிய எண்ணினர் எனவும் பிறர் அறியாதவாறு கூரிய அம்புகளால் அறுத்துக் கொன்றான்.

கு:—சிலை பிடித்தான், அறுத்தான் மடித்தான் என இயைந்து முடியும். அயில் - கூர்மை. வாளி - அம்பு. செறிதல் - நெருங்குதல். செறுத்தல் – சினத்தல். மறித்தல் - தடுத்தல். மறித்தார் என்பது எதுகை நோக்கி மறிந்தார் என்றானது, விகாரம். வலித்தல்-வளைத்தல் (சூடாமணி). (90)

3062. வானத்தன கடலின்புற
வலயத்தன மதிசூழ்
மீனத்தன மிளிர்குண்டல
மிதுனத்தன மிடல்வெங்
கானத்தன மலையத்தன
திசைசுற்றிய கரியின்
றானத்தன காகுத்தன
சரமுந்திய சிரமே.

வானத்தன, கடலின் புற வலயத்தன, மதி சூழ்
மீனத்தன, மிளிர் குண்டல மிதுனத்தன, மிடல் வெம்
கானத்தன, மலையத்தன, திசை சுற்றிய கரியின்
தானத்தன, காகுத்தன சரம் உந்திய சிரமே.

பொ:—இராமனம்பினால் (அறுத்துத்) தள்ளப்பட்ட அரக்கர் தலைகள், மேகமண்டலத்தை உற்றன; (உலகைச் சூழ்ந்துகிடக்கும்) கடற்கப்பாலுள்ள சக்கரவாளகிரியை உற்றன; சந்திரனைச் சூழ்ந்துள்ள (உரோகிணி முதலிய) நட்சத்திரமண்டலத்தையுற்றன; விளக்கம் மிக்க ஆகாயத்தின்கண் உள்ள மிதுன(ம் என்னும் ராசி மண்டல)த்தை உற்றன; வலிய கொடிய காட்டையுற்றன; மலைகளை உற்றன; உலகை வளைந்த திசைகளிலுள்ள யானைகளின் இடத்தை அடைந்தன.

கு:—காகுத்தன சரம் உந்திப சிரம், வானத்தன, வலயத்தன, மீனத்தன, மிதுனத்தன, கானத்தன, மலையத்தன, கரியின் தானத்தன என இயைந்து முடிவுகொள்ளும். கடலின்புறவலயம் என்றது உலகைச் சூழ்ந்துள்ள சக்கரவாளகிரியை. மதிசூழ்மீன் - உரோகிணி முதலியன. வியாழமும் வெள்ளியும் ஆம். இங்கே, 'சேண்மதிகவைஇ அகலாமீன்' (திருமுருகாற்றுப்படை 87, 88)

என்பதற்கு நச்சினார்க்கினியரெழுதியவுரையும் நோக்கத்தகும். மிளிர்தல் - விளங்குதல். குண்டலம் - ஆகாயம் (பிங்கலம்). மிதுனம்- மிதுனராசி. மிடல் - வலிமை. சுற்றிய திசைக்கரியின் தானம் என இயைக்க. காகுத்தன் - ககுத்தன் என்னும் அரசன் வழிவந்தோன்; இராமன். சரம் - அம்பு. உந்துதல் - செலுத்துதல். சிரம் - தலை. மிதுனத்தன என்றாரேனும் பிற ராசி மண்டலங்களிலும் சென் றடைந்தன என்பது உபலக்கணத்தால் பெறலாம். (91)

3063. மண்மேலன மலைமேலன
மழைமேலன மதிதோய்
விண்மேலன நெடுவேலையின்
மேல்கீழன மிடலோர்
புண்மேலன குருதிப்பொரு
திரையாறுகள் பொங்கத்
திண்மேருவை நகுமார்பினை
யுருவித்திரி சரமே.

மண் மேலன, மலை மேலன, மழை மேலன, மதி தோய்
விண் மேலன, நெடு வேலையின் மேல் கீழன, மிடலோர்
புண் மேலன, குருதிப் பொரு திரை யாறுகள் பொங்கத்
திண் மேருவை நகும் மார்பினை உருவித் திரி சரமே.

பொ :—மோதுகின்ற அலைகளையுடைய இரத்த ஆறுகள் பெருகும் படி, வலிய மேருமலையினையும் வன்மையற்றதென்று பரிகசிக்கும் அரக்கருடைய மார்பை உருவித் திரிகின்ற (இராமனுடைய) அம்புகள், நிலத்திற் பதிந்தனவும், மலைகளிற் பாய்ந்தனவும், மேக மண்டலத்தே புக்கனவும், சந்திரன் பொருந்திய ஆகாயத்தே சென் றனவும், பெரிய கடலின் மேற்பரப்பிலும் அடியிலும் உற்றனவும், வலிய வீரருடலிற் புண்மேல் நின்றனவும் ஆயின.

கு :—வேலை - கடல். மிடல் - வலிமை. நகுதல் - பரிகசித்தல். மேருவை நகுதலாவது மேருவினும் இடப்பரப்பும் வன்மையும் உடையதாதல். (92)

3064. பொலந்தாரின ரனலின்சிகை
பொதிகண்ணின ரெவரும்
வலந்தாங்கிய வடிவெம்படை
விடுவார்சர மழையா

லுலந்தாருடல் கடலோடுற
வுலவாவுட லுற்ரு
ரலந்தார்நிசி சரராமென
விமையோரொடு மார்த்தார்.

பொலம் தாரினர் அனலின் சிகை
பொதி கண்ணினர் எவரும்,
வலம் தாங்கிய வடி வெம் படை
விடுவார், சர மழையால்
உலந்தார் ; உடல் கடலோடு உற
உலவா உடல் உற்ருர்;
அலந்தார் நிசிசரர் ஆம் என
இமையோரொடும் ஆர்த்தார்.

பொ :—பொன்மாலை அணிந்தவரும், தீக்கொழுந்துகள் பொதிந்த கண்களை உடையவரும், வெற்றியைக்கொண்ட கூரிய கொடிய படைக்கலங்களை ஏவுகின்றவருமான அரக்கரெல்லாம், இராமன் ஏவிய அம்புமழையால் இறந்து, (தம்) உடல் (இரத்த வெள்ளத்தோடு சென்று) கடலிற்புக(த் தாம் வீரசொர்க்கம் அடைந்து) அழியாத உடலுற்றவராகித் தேவரொடுகூடி, 'அரக்கர் வலிகெட்டு வருந்தினர்' என்று ஆரவாரிப்பாராயினர்

கு :—பொலம் - பொன். தார் - மாலை. அனலின் சிகை - தீக் கொழுந்து. அனலின் சிகை பொதிகண் - தீக்கொழுந்துகளை உள் ளடக்கிக்கொண்ட கண்கள். வலம் - வெற்றி. வடி - கூர்மை. உலத்தல் - அழிதல். அலத்தல் - வருந்துதல். நிசிசரர் - இரவில் திரிவோர்; அரக்கர். ஆம் அசை நிலை. தாரினர் கண்ணினர் படைவிடுவார் எவரும், உலவாவுடலுற்ருராய் இமையொரொடும் ஆர்த்தார் என்க. இராமனெடு பகைத்துப் போர்க்களத்தில் எதிரம்பு கோத்து நின்ற அரக்கரே, இராமனம்பால் இறந்து வீரசொர்க்கம் புக்குத் தேவரான நிலையில் தம் பண்டைநிலை மறந்து, 'அலந்தார் நிசிசரர்' என இமையோரொடு மார்த்தார் என்று நகைச்சுவை தோன்றப் புணர்த்தமை நோக்கத்தகும். (93)

3065. ஈரற்செறி கமலத்தன
விரதத்திரள் புளினம்
வீரக்கரி முதலைக்குல
மிதக்கின்றன வுதிக்கும்

பாரக்குடர் மிடைபாசடை
படர்கின்றன பலவான்
மூரித்திரை யுதிரக்கடன்
முழுகிக்கழு தெழுமே.

ஈரல் செறி கமலத்தன, இரதத் திரள் புளினம்,
வீரக் கரி முதலைக் குலம் மிதக்கின்றன, உதிக்கும்
பாரக் குடர் மிடை பாசடை படர்கின்றன, பல வால்
மூரித் திரை உதிரக் கடல் முழுகிக் கழுது எழுமே.

பொ:—ஈரலாகிய நெருங்கிய தாமரை மலர்களையுடையனவும், தேர்த்திரளாகிய மணற்குன்றுகளையுடையனவும், வலிமையுள்ள யானைகளாகிய முதலைக்கூட்டம் மிதக்கின்றனவும், தோன்றுகின்ற பெரிய குடல்களாகிய அடர்ந்த பசிய இலைகள் படர்கின்ற கொடிகளையுடையனவும் ஆன மிக்க பெரிய அலைகளையுடைய பல உதிரக் கடல்களில் பேய்கள் முழுகியெழும்.

கு:—இராமன் ஏவிய கணைகளால் கரன்படை சின்னபின்னமாய் மடியக் குருதிபெருகிக் கடலாகத் தேங்கியது என்றவாறு. நன்னீர்க்குளத்துக்குரிய தாமரைக்கொடியும் இலையும் மலரும் மணற்குன்றும் முதலையும் உருவகவாய்பாட்டால் உதிரக்கடலும் பெறக் கூறினர். ஈரல் - வயிற்றகத்ததோருறுப்பு. புளினம் - மணற்குன்று. குலம் - கூட்டம். உதித்தல் - தோன்றுதல். பாரம் - பெருமை. குடர் - குடல்; போலி. மிடைதல் - செறிதல். பாசடை - பசியஇலை. வால் மூரித் திரை - மிக்க பெரிய அலை. வால் - மிகுதி. மூரி - பெருமை. திரை - அலை. உதிரக்கடல் - இரத்தக்கடல். கழுது - பேய். உதிரக் கடலில் கழுது முழுகி எழும் என்க. (94)

3066. அழைத்தார்சில ரயர்த்தார்சில
ரழிந்தார்சிலர் கழிந்தா
ருழைத்தார்சில ருயிர்த்தார்சில
ருருண்டார்சிலர் புரண்டார்
குழைத்தாழ்திரைக் குருதிக்கடற்
குளித்தார்சிலர் கொலைவாய்
மழைத்தாரைகள் படப்பாரிடை
மடிந்தார்சில ருடைந்தார்.

அழைத்தார் சிலர், அயர்த்தார் சிலர்,
அழிந்தார் சிலர், கழிந்தார்,
உழைத்தார் சிலர், உயிர்த்தார் சிலர்,
உருண்டார் சிலர், புரண்டார்
குழைத்து ஆழ் திரைக் குருதிக் கடல்
குளித்தார் சிலர், கொலைவாய்
மழைத்தாரைகள் படப் பாரிடை
மடிந்தார் சிலர் உடைந்தார்.

பொ :—இராமனுடைய கொலைத்தொழில் வாய்ந்த சரமழைபடுதலால், அரக்க வீரருள்ளே சிலர் (தம்மொடு போர்க்களத்துக்கு வந்தோரை) அழைத்தார்கள்; சிலர், போரில் ஆற்றாது சோர்வுற்றனர்; சிலர் வலியற்றவராய்ப் போர்க்களத்தைவிட்டு ஓடினர்; சிலர் வருந்தினார்கள்; சிலர் நெடுமூச்செறிந்தனர்; சிலர் நிலத்தில் உருண்டு புரண்டனர்; சிலர் நிண முதலியவை கலக்கப்பட்டு ஆழம் உடையதாயிருக்கிற இரத்தக் கடலில் முழுகினர்; சிலர் வலியழிந்தவராய் நிலத்தில் விழுந்து இறந்தனர்.

கு :—அழைத்தல் - விளித்தல்; கூப்பிடல். அயர்த்தல் - சோர்வுறுதல். அழிந்தார் - வலியழிந்தவராய். அழிந்தார் சிலர் கழிந்தார், உருண்டார் சிலர் புரண்டார், மடிந்தார் சிலருடைந்தார் என்பவற்றுள் அழிந்தார் உருண்டார் உடைந்தார் என்பவை எச்சப் பொருளிற் பயின்றன. உழைத்தல் - வருந்தல். உயிர்த்தல் - நெடுமூச்செறிதல். (95)

### கரன்படைத்தலைவர் பதினால்வரும் இராமனோடு பொருதல் 3067 - 3079

**3067.** உடைந்தார்களை நகைசெய்தன
ருருடேரின ருடனு
யடைந்தார்படைத் தலைவீரர்கள்
பதினால்வரு மயில்வாண்
மிடைந்தார்நெடுங் கடற்றானையர்
மிடல்வில்லினர் விரிநீர்
கடைந்தார்வெரு வுறமீதெழு
கடுவாமெனக் கொடியார்.

உடைந்தார்களை நகை செய்தனர்,
உருள் தேரினர், உடன் ஆய்
அடைந்தார், படைத் தலைவீரர்கள்
பதினால்வரும்; அயில் வாள்
மிடைந்து ஆர் நெடுங்கடல் தானையர்,
மிடல் வில்லினர், விரி நீர்
கடைந்தார் வெரு உற மீது எழு
கடு ஆம் ஏனக் கொடியார்.

பொ :—வேற்படையும் வாட்படையும் செறிந்து பொருந்திய பெரிய கடல் போன்ற படையினையுடையவரும், வலிய வில்லை ஏந்திய வரும், பரந்த (பாற்) கடலைக் கடைந்தவர்கள் அஞ்சும்படி அக் கடலில் தோன்றிய நஞ்சுபோலக் கொடுமைவாய்ந்தவருமான (கர னுடைய) சிறந்த படைத்தலைவர் பதினால்வரும் செல்லுகின்ற தேரையுடையராய்த் தோற்றோடும் அரக்கரைப் பரிகசித்து, ஒருவ ரோடொருவர் இணைந்து இராமனை அடைந்தனர்.

கு :—உடைதல் - வலியழிதல். உருளுதல் - செல்லுதல். உட னுதல் - இயைதல். வெரு - அச்சம். கடைந்தார் என்று பின்வரு தலால் விரிநீர் என்பது பாற்கடல் என்று பொருள்பட நின்றது. கடு - விடம். (96)

**3068.** நாகத்தனி யொருவில்லியை
நளிர்முப்புரர் முன்னாண்
மாகத்திடை வளைவுற்றன
ரெனவள்ளலை மதியா
ராகத்தெழு கனல்கண்வழி
யுகவுற்றெதி ரழன்றார்
மேகத்தினை நிகர்வில்லியை
வளைத்தார்செரு விளைத்தார்.

நாகத் தனி ஒரு வில்லியை, நளிர் முப்புரர், முன்னாள்,
மாகத்திடை வளைவுற்றனர் என, வள்ளலை மதியார்,
ஆகத்து எழு கனல் கண்வழி உக, உற்று எதிர் அழன்றார்;
மேகத்தினை நிகர் வில்லியை வளைத்தார், செரு விளைத்தார்.

பொ :—அகத்திலே தோன்றிய (சினமாகிய) நெருப்பு கண் வழியே சிந்த நெருங்கி எதிரே வெகுண்டு நின்ற (படைத்தலை)வர்.

பெருவள்ளியோனுன இராமனை மதியாமல், (பொன்) மலையாகிய ஒப்பற்றதொரு வில்லையுடைய சிவபெருமானை, செறிந்த திரிபுரத்தார், முற்காலத்தில் ஆகாயத்தே வளைந்தாற்போல, மேகத்தை ஒத்த வில்லாளியான அவ்விராமனை வளைத்துப் போர்செய்தனர்.

கு :—நாகம் - மலை; மேரு. நளிர்தல் - செறிதல். மாகம் - ஆகாயம். மேகத்தினை நிகர்வில்லி என்பது அவ்விராமன் எனச் சுட்டளவாய் நின்றது. மேகத்தை வில்லுக்கு உவமையாக்கலும் ஆம். இராமனுக்கு உவமையாக்குங்கால், கரிய நிறமும் கைம்மாறு கருதாது உதவுதலும் பொதுத்தன்மைகள். வில்லுக்கு உவமை யாக்குங்கால், இடையருதுபொழிதல் பொதுத்தன்மை. வளைத்தார் - வளைத்து ; முற்றெச்சம். செரு - போர். (97)

3069. எய்தார்பல ரெறிந்தார்பலர்
மழுவோச்சின ரெழுவாற்
பொய்தார்பலர் புடைத்தார்பலர்
கிடைத்தார்பலர் பொருப்பாற்
பெய்தார்மழை பிதிர்த்தாரெரி
பிறைவாளெயிற் றரக்கர்
வைதார்பலர் தெழித்தார்பலர்
மலையாமென வளைத்தார்.

எய்தார் பலர், எறிந்தார் பலர்,
மழு ஓச்சினர், எழுவால்
பொய்தார் பலர், புடைத்தார் பலர்,
கிடைத்தார் பலர், பொருப்பால்
பெய்தார் மழை, பிதிர்த்தார் எரி,
பிறை வாள் எயிற்று அரக்கர்
வைதார் பலர், தெழித்தார் பலர்,
மலையாம் என வளைத்தார்.

பொ :—பிறைச்சந்திரன் போன்ற (வளைந்த) ஒளியுள்ள பற்களை யுடைய அரக்கர் பலர், இராமன்மேல் அம்பு முதலியவற்றை எய்தனர்; பலர் வேல் சூலம் முதலியவற்றை எறிந்தனர்; பலர் கோடரியால் எறிந்தனர்; பலர் இருப்புலக்கையால் தாக்கினர்; பலர் (கைகளால்) அடித்தனர்; பலர் இராமனை நெருங்கினர்; பலர் மலைகளால் கன்மாரி பொழிந்தனர்; பலர் (சின) நெருப்பைச் சிந்தி

ஞர்கள் ; பலர் இராமனை நிந்தித்தனர் ; பலர் அதட்டினார்கள் ; பலர் மலைபோல வளைத்தனர்.

கு :—மழு - கோடாலி. ஓச்சுதல் - எறிதல். எழு-இருப்புலக்கை. பொய்தல் - தாக்குதல் ; 'அவை பார்சேரப் பொய்தான்' (சுந்தர. 962) என்பர் பின்னும். கிடைத்தல் - கிட்டுதல் ; 'கிடந்தானைக் கிடைத்து' (கிட்கிந்தா. கிட்கிந்தைப். 23) என்று பின்னும் கூறுதல் காண்க. எரி - நெருப்பு. பிதிர்த்தல் - சிந்துதல். தெழித்தல் - அதட்டுதல். அரக்கர் பலர், எய்தார், எறிந்தார், ஓச்சினர், பொய்தார், புடைத்தார், கிடைத்தார், பெய்தார், பிதிர்த்தார், வைதார், தெழித்தார், வளைத்தார் என இயைந்து முடியும் (98)

3070. தேர்பூண்டன விலங்கியாவையுஞ்
சிலைபூண்டெழு கொலையாற்
பார்பூண்டன மதமாகரி
பலிபூண்டன பரிமாத்
தார்பூண்டன வுடல்பூண்டில
தலைவெங்கதிர் தழிவந்
தூர்பூண்டன பிரிந்தாலென
விரிந்தாருயி ருலைந்தார்.

தேர் பூண்டன விலங்கு யாவையும்,
சிலை பூண்டு எழு கொலையால்,
பார் பூண்டன ; மத மா கரி
பலி பூண்டன ; பரி மாத்
தார் பூண்டன, உடல் பூண்டில
தலை ; வெம் கதிர் தழிவந்து
ஊர் பூண்டன பிரிந்தாலென,
இரிந்தார் உயிர் உலைந்தார்.

பொ :—இராமன் வில்லொடு பொருந்தி வளர்ந்த கொலைத் தொழிலால், அரக்கர் தேரில் கட்டப்பட்ட விலங்குகளெல்லாம் இறந்து நிலத்தைப் பற்றிக்கொண்டு கிடந்தன ; மதத்தினையுடைய பெரிய யானைகள் கொல்லப்பட்டன ; மாலையணிந்த விரைவுடைய குதிரைகள் உடலில் தலைபொருந்தாதவையாயின ; சூரியனைச் சூழ வளைத்துக் கொண்ட பரிவேடம் நீங்கினாற்போல, இராமனை வளைத்துக்கொண்ட அரக்கர் உயிருலைந்தவராய் நிலைகெட்டோடினர்.

கு :—தேர் பூண்டன விலங்கு என்றது முன் 3002, 3003-ஆம் பாடல்களிற் கூறியவற்றை, தார்பூண்டன பரிமா உடல் தலை பூண்டில எனவும், வெங்கதிர் தழிவந்து பூண்டன ஊர் எனவும் இயையும். தார் - கிண்கிணிமாலை. மூன்றும் அடியில் பூண்டன பூண்டில என்பது முரண்டொடை. கிண்கிணி மாலைபூண்ட குதிரைகள் இராமனம்பால் தலையற்றனவாயின என்றவாறு. பரிமா - விரைவுடைய குதிரை. ஊர் - ஊர்கோள்; சூரியனைச் சுற்றிக் காணப்படும் வட்டம். இரிதல் - ஓடுதல். இராமனுக்குச் சூரியனும், அவனைச் சூழ்ந்து வளைந்த அரக்கர்க்குச் சூரியனைச் சூழ்ந்து வளைந்த ஊர் கோளும், அரக்கர் வலிகெட்டு நிலைகெட்டோடினமைக்குச் சூரியனைச் சூழ்ந்த ஊர்கோள் நீங்கினமையும் உவமையாகும். (99)

3071. மால்பொத்தின மறவோருடன்
மழைபொத்தின வழிசெம்
பால்பொத்தின நதியிற்கிளர்
படிபொத்தின படர்வான்
மேல்பொத்தின குழுவிண்ணவர்
விழிபொத்தினர் விரைவெங்
கால்பொத்தினர் நமன்றூதுவர்
கடிதுற்றுயிர் கவர்வார்.

மால் பொத்தின மறவோர் உடல்
மழை பொத்தின; வழி செம்
பால் பொத்தின நதியில் கிளர்
படி பொத்தின; படர் வான்
மேல் பொத்தின குழு விண்ணவர்
விழி பொத்தினர்; விரை வெம்
கால் பொத்தினர் நமன் தூதுவர்
கடிது உற்று உயிர் கவர்வார்.

பொ :—மயக்கம் நிறைந்த மனமுடைய தீவினையாளரான அரக்கருடலினின்று மழையின்றன்மை நிறைந்து சிந்திய குருதிகள், பெருக்காறுபோல விளக்கம் மிக்க நிலங்களை மறைத்தன; பரந்த வான்மேல் நிறைந்த கூட்டமான தேவர் விளைந்த கொடிய போரைப் பார்க்கக் கூசியவராய்(க் கைகளால்), கண்ணைப் பொத்திக் கொண்டனர்; விரைந்து சென்று உயிர் கவரும் எமனுடைய தூதர், கொடிய விரைவுடைய தம் கால்களை (வலி நீங்க)ப் பிடித்துக்கொண்டனர்.

கு:—மால் - மயக்கம். பொத்துதல் என்ற சொல் நிறைதல், கலத்தல், மறைத்தல், மூடுதல், பிடித்தல் என்னும் பொருள்களிற் பயின்றது. மறவோர்-தீவினையாளர்; அரக்கர். செம்பால் - இரத்தம். கடிதுற்றுயிர்கவர்வார் நமன்றூதுவர் விரை வெம் கால் பொத்தினர் என இயையும். (100)

3072. பேயேறின செருவேட்டெழு
பித்தேறினர் பிலவாய்
நாயேறின தலைமேனெடு
நரியேறின வெரிகால்
வாயேறின வடிவாளியின்
வானேறினர் வந்தார்
தீயேறிக லரியேறென
முகிலேறெனச் செறிந்தார்.

பேய் ஏறின செரு வேட்டு எழு பித்து ஏறினர், பில வாய்
நாய் ஏறின; தலை மேல் நெடு நரி ஏறின; எரி கால்
வாய் ஏறின வடி வாளியின் வான் ஏறினர்; வந்தார்
தீ ஏறு இகல் அரியேறு என, முகிலேறு எனச் செறிந்தார்.

பொ:—பேய்கள் மிக்க போர்க்களத்தை விரும்பியெழுந்த மயக்கம் மிக்க அரக்க வீரர், தம் வாயில் தைத்த நெருப்பைச் சிந்துகின்ற கூரிய பாணங்களால் விண்ணுலகு புகுந்தனர்; அவருடைய குகைபோலும் வாயின்கண் நாய்கள் ஏறின; தலையின்மேல் பெரிய நரிகள் ஏறின; (மேலும் போர்கருதி) வந்த அரக்கர் கொடுமை மிக்க வலிய சிங்க ஏறுபோலவும் சிறந்த காளமேகம் போலவும் போர்க்களத்தில் நெருங்கினர்.

கு:—போர்க்களத்தே பிணங்களை உண்ணும் பொருட்டுப் பேய்கள் நெருங்குதலின், 'பேயேறின செரு' என்றார். செரு - போர்க்களம். பித்து - மயக்கம். இராமனுடைய பேராற்றலறியாது, அவனை வென்று களங்கொள்ளுங் கருத்தொடு எழுந்தவராதலின் பித்தேறினர் என்றார். பிலம் - குகை. பிலவாய் என்றமையால் அரக்கர் பேருருவு குறிக்கப்பட்டது. எரி கால் வாளி, வாய் ஏறின வாளி, வடிவாளி என்க. பித்தேறினர் (இராமன்) வாளியின், வானேறினர்; அவர் வாயின்கண் நாயேறின; அவர் தலைமேல் நரியேறின; வந்தார் செறிந்தார் என முடிக்க. எரி - நெருப்பு. காலுதல் - சிந்துதல். வடி - கூர்மை. தீ - கொடுமை. ஏறுதல் -

மிகுதல். இகல் - வலி. கொடுமை வலிமை முழக்கங்களால் அரி யேறும், கருநிறத்தாலும் கணைமாரி பொழிதலாலும் முகிலேறும் அரக்கர்க்கு உவமையாயின. (101)

3073. தலைசிந்தின விழிசிந்தின
தழல்சிந்தின தரைமேன்
மலைசிந்தின படிசிந்தின
வருசிந்துர மழைபோற்
சிலைசிந்தின கணைசிந்தின
திசைசிந்தின திசையூ
டுலைசிந்தின பொறிசிந்தின
வுயிர்சிந்தின வுடலம்.

தலை சிந்தின, விழி சிந்தின, தழல் சிந்தின, தரை மேல், மலை சிந்தினபடி சிந்தின வரு சிந்துரம்; மழை போல் சிலை சிந்தின கணை சிந்தின; திசை சிந்தின. திசையூடு உலை சிந்தின பொறி சிந்தின உயிர் சிந்தின உடலம்.

பொ :—போர்க்களத்துவந்த யானைகள், தலைகள் சிதறினவாகியும், கண்ணினின்று சிந்தின தழலைத் தரைமீது சிதறினவாகியும் மலைகள் இடிந்து சிதறின போலச் சிந்தின; வில் சிந்திய கணைகள் மழைபோலச் சிதறின; (அதனால்) திசைகள் சிதறின; உயிர் உக்க உடல்களினின்று, உலைக்கூடத்துச் சிதறுவனபோலும் நெருப்புப் பொறிகள் சிந்தின.

கு :—வரு சிந்துரம், தலைசிந்தின விழிசிந்தின தழல் தரை மேல் சிந்தின (வாய்) மலை சிந்தினபடி சிந்தின; சிலை சிந்தின கணை மழைபோல் சிந்தின; திசை சிந்தின; உயிர் சிந்தினவுடலம் உலைசிந்தின பொறி திசையூடு சிந்தின என இயையும். தழல் - நெருப்பு. சிந்துரம் - யானை. திசையென்றது, திசையிலுள்ள வற்றை. இதனுள், சிந்தின என்னும் ஒரு சொல்லே பலமுறை பயின்றமையால் இது சொற்பொருட் பின்வருநிலை என்னும் அணி தழுவியதாகும். (102)

3074. படைப்பெருந் தலைவரும் படைத்த தேர்களு
★ முடைத்தடம் படைகளு மொழிய வுற்றெதிர்
விடைத்தடர்ந் ததிர்த்தவர் வீரன் வாளியான்
முடைத்தடங் குருதியின் கடலின் மூழ்கினர்.

படைப் பெருந்தலைவரும் படைத்த தேர்களும்
உடைத் தடம் படைகளும் ஒழிய, உற்று எதிர்
விடைத்து அடர்ந்து எதிர்த்தவர், வீரன் வாளியால்
முடைத் தடங் குருதியின் கடலின் மூழ்கினர்.

பொ :—பெரிய சேனைத்தலைவரும், அவர்க்குரிய தேர்களும், அவருடைய பெரிய படைக்கலங்களும் தவிர, இராமனெதிர்வந்து பெருஞ்சினங்கொண்டு நெருங்கியெதிர்த்த அரக்கர், இராமனம்புகளால் முடை நாற்றம்மிக்க பெரிய குருதிக்கடலின் மூழ்கினர்கள்.

கு :—விடைத்தல் -பெருஞ்சினங்கொள்ளுதல் (சூடா). அடர்ந்து-நெருங்கி. (103)

கரன் படைத்தலைவர் இராமனை வளைதல்

3075. சுற்றுற நோக்கினர் தொடர்ந்த சேனையி
லற்றில தலையெனு மாக்கை கண்டிலர்
தெற்றின ரெயிறுக டிருகி னர்சின
முற்றின ரிராமனை முடுகு தேரினர்.

சுற்று உற நோக்கினர், தொடர்ந்த சேனையில்
அற்றில தலை எனும் ஆக்கை கண்டிலர் ;
தெற்றினர் எயிறுகள், திருகினர் சினம்,
முற்றினர் இராமனை முடுகு தேரினர்.

பொ :—(படைத்தலைவர்) போர்க்களச் சூழலை நன்கு பார்த்துத் தம்மைப் பின்பற்றிவந்த படையுள் தலை அறுபடவில்லை என்று சொல்லத்தக்க உடலைக் காணாதவராய்ச் சினம் மிக்குப் பல்லைக் கடித்து, விரைந்த தேரை ஊர்ந்தவராய் இராமனை வளைந்தனர்.

கு :—சுற்று - சூழல். தெற்றுதல் - கடித்தல். எயிறு - பல். திருகுதல் - மிகுதல். முற்றுதல் - வளைத்தல். முடுகுதல் - விரைதல். (104)

படைத்தலைவர் தேர் பதினான்கும் அழிதல்

3076. ஏழிரு தேரும்வந் திமைப்பின் முன்பிடைச்
சூழவன் கணைகளாற் றுணிய நூறிஞ
ஞழியும் புரவியு மாளு மற்றவை
யூழிவெங் காலெறி யோங்க லொத்தவே.

ஏழிரு தேரும் வந்து, இமைப்பின் முன்பு இடைச்
சூழ, வன் கணைகளால் துணிய நூறினான் ;
ஆழியும் புரவியும் ஆளும் அற்று, அவை,
ஊழி வெம் கால் எறி ஓங்கல் ஒத்தவே.

பொ :—இமைப்பொழுதினுள்ளே பதினான்கு தேரும் வந்து வளைய, (இராமன்) வலிய அம்புகளால் (அவை) சிதையும்படி அழித்தான்; சக்கரங்களும் குதிரைகளும் பாகனும் அழிந்து, அத்தேர்கள் ஊழிக்காலத்துக் கொடிய காற்றால் மோதப்பட்ட மலைகளை ஒத்தன.

கு :—நூறுதல் - அழித்தல். ஆழி - தேர்ச்சக்கரம். ஆள் என்றது பாகனை. கால் - காற்று. ஓங்கல் - மலை. (105)

படைத்தலைவர் தரையினின்று விற்போர் புரிதல்

3077. அழிந்தன தேரவ
ரவனி கீண்டுக
விழிந்தனர் வரிசிலை
யெடுத்த கையின
ரொழிந்திலர் சரங்களை
யுருமி னேறெனப்
பொழிந்தனர் பொழிகனல்
பொடிக்குங் கண்ணினர்.

அழிந்தன தேர், அவர், அவனி கீண்டு உக
இழிந்தனர், வரி சிலை எடுத்த கையினர்,
ஒழிந்திலர், சரங்களை உருமின் ஏறு எனப்
பொழிந்தனர் பொழி கனல் பொடிக்கும் கண்ணினர்.

பொ :—தேர்கள் அழிந்தனவாக, அப்படைத்தலைவர் நிலம் பிளந்து கெடும்படி தேர்விட்டிறங்கிக் கட்டமைந்த வில்லைக் கையில் எடுத்து, நிறைந்த கனலைத் தோற்றுவிக்குங் கண்களையுடையராய், இடியேறு போலும் அம்புகளை ஒழியாமல் சொரிந்தனர்.

கு :—கீண்டு - பிளந்து, உக - கெட. இழிதல் - இறங்குதல். வரிசிலை - கட்டமைந்த வில். பொழிதல் - நிறைதல் ; ‘பொழிந்துகு காதல்’ (1496) என்பது சீவகசிந்தாமணி. பொடித்தல் - தோற்றுவித்தல். இழிந்தனர், ஒழிந்திலர் என்பவை எச்சப்பொருள்பட நின்றன. (106)

### படைத்தலைவர் விற்களை இராமன் துண்டித்தல்

3078. நூறிய சரமெலா
நுறுங்க வாளியா
லீறுசெய் தவர்சிலை
யேழொ டேழையு
மாறினொ டாறுமோ
ரிரண்டு மம்பினாற்
கூறுசெய் தமர்த்தொழிற்
கொதிப்பை நீக்கினான்.

நூறிய சரம் எலாம் நுறுங்க வாளியால்
ஈறு செய்து, அவர் சிலை ஏழொடு ஏழையும்,
ஆறினொடு ஆறும் ஓர் இரண்டும் அம்பினால்
கூறுசெய்து, அமர்த் தொழிற் கொதிப்பை நீக்கினான்.

பொ :—(இராமன், தன்) அம்புகளால் (படைத்தலைவர் ஏவிய) அம்புகளெல்லாம் அழிந்தனவாய் நொறுங்க முடித்து, அவருடைய பதினான்கு விற்களையும் பதினான்கு கணைகளால் துண்டித்து, அவருடைய போர்த்தொழிற் கடுமையை நீக்கினான்.

கு :—சரமெலாம் நூறிய நுறுங்க என இயையும். இராமன் என்னும் எழுவாய் தொக்குநின்றது. இராமன் ஈறு செய்து கூறு செய்து நீக்கினான் என்க. நூறுதல் - அழிதல். நுறுங்குதல் - பொடியாதல். ஈறுசெய்து - முடித்து. ஏழொடு ஏழ் - பதினான்கு. ஆறினொடு ஆறும் ஓர் இரண்டும் என்றது பதினான்கு என்றபடி. கூறுசெய்து - துண்டித்து. (107)

### படைத்தலைவர் மலைகொண்டு பொருதல்

3079. வில்லிழந் தனைவரும் வெகுளி மீக்கொளக்
கல்லுயர் நெடுவரை கடிதி னேந்தினா
ரொல்லையி னுருத்துயர் விசும்பி னோங்கிநின்
றெல்லுயர் பொறியுக வெறிதன் மேயினார்.

வில் இழந்து, அனைவரும் வெகுளி மீக்கொளக்
கல் உயர் நெடு வரை கடிதின் ஏந்தினார்,
ஒல்லையின் உருத்து, உயர் விசும்பின் ஓங்கி நின்று,
எல் உயர் பொறி உக, எறிதல் மேயினார்.

பொ :—(படைத்தலைவர்) எல்லோரும், வில் இழந்தமையால் சினம் மிகக் கற்களையும் உயர்ந்த ஓங்கிய மலைகளையும் விரைந்து தாங்கி, மிக்குயர்ந்த ஆகாயத்தின்கண் விரைந்து ஓங்கிநின்று, ஒளி மிக்க அனற்பொறிகள் சிந்தும்படி எறியத்தொடங்கினர்.

கு :—வெகுளி - சினம். கடிதின் - விரைவில். ஒல்லை - விரைவு. உருத்து - மிக்கு. எல் - ஒளி. (108)

## படைத்தலைவர் பதினால்வரும் இறத்தல்

**3080.** கலைகளின் பெருங்கடல்
கடந்த கல்வியா
னிலைகொள்வெம் பகழியே
ழிரண்டு வாங்கினான்
கொலைகொள்வெஞ் சிலையொடு
புருவங் கோட்டினான்
மலைகளுந் தலைகளும்
விழுந்த மண்ணினே.

கலைகளின் பெருங்கடல் கடந்த கல்வியான்,
இலை கொள் வெம் பகழி ஏழிரண்டு வாங்கினான்,
கொலை கொள் வெம் சிலையொடு புருவம் கோட்டினான்,
மலைகளும் தலைகளும் விழுந்த, மண்ணினே.

பொ :—கலைகளாகிய பெரிய கடல்களைக் கடந்த கல்வியாளனான இராமன், கொலைத்தொழிலையுடைய வில்லொடு புருவத்தினையும் வளைத்து, (நுனியில்) இலை வடிவுடைய பதினான்கு அம்புகளைக் கைக் கொண்டானாக, (எதிர்த்த படைத்தலைவர் கைக்கொண்ட) மலைகளும் அவர் தலைகளும் மண்ணின்மேல் விழுந்தன.

கு :—கல்வியான், சிலையொடு புருவம் கோட்டினான், பகழி ஏழிரண்டு வாங்கினான், மலைகளும் தலைகளும் விழுந்த என இயையும், இராமனைத் 'தென் சொற்கடந்தான் வடசொற்கலைக் கெல்லை தேர்ந்தான்' (1831) என்றார் முன்னும். கோட்டுதல் - வளைத்தல். புருவம் வளைத்தது சினத்தினால். 'பகழி ஏழிரண்டு வாங்கினான், மலைகளும் தலைகளும் விழுந்த மண்ணின்மேல் என்பது விரைவுயர்வு நவிற்சியணி தழுவியது. இங்கு, 'மனுக்கோட்டம் தவிர்த்தருளும் வளவர்பிரான் திருப்புருவத் - தனுக்கோட்ட நமன் கோட்டம் பட்டது சக்கரக் கோட்டம்' (கலிங்கத்துப்பரணி. 254) என்னும் சயங்

கொண்டார் வாக்கும் நோக்கத்தகும். வாங்கினன், கோட்டினன் என்பவை எச்சப்பொருளிற் பயின்றன. (109)

## திரிசிரன்படை இராமனோடு பொருதல் 3081–3083

3081. படைத்தலைத் தலைவர்கள் படலும் பல்படை
புடைத்தடர்ந் தெதிரழல் புரையுங் கண்ணினர்
கிடைத்தன ரரக்கர்கள் கீழு மேலுமொய்த்
தடைத்தனர் திசைகளை யமர ரஞ்சினர்.

படைத் தலைத் தலைவர்கள் படலும், பல் படை
புடைத்து, அடர்ந்து, எதிர் அழல் புரையும் கண்ணினர்,
கிடைத்தனர், அரக்கர்கள், கீழும் மேலும் மொய்த்து
அடைத்தனர் திசைகளை, அமரர் அஞ்சினர்.

பொ :—சிறந்த படைத்தலைவர் பதினால்வரும் இறந்த அளவில், அரக்கர்கள் பலவகைப் படைக்கலங்களையும் ஒன்றோடொன்று தாக்கி நெருங்கி இராமனெதிர் அனல் பொருந்திய கண்ணினராய்க் கிட்டி, மண்ணிலும் வானினும் மொய்த்துத் திசைகளையெல்லாம் மறைக்க, தேவரும் அஞ்சுவராயினர்.

கு :—புரைதல் - பொருந்துதல். கிடைத்தல் - கிட்டுதல். அரக்கர் என்றது திரிசிராவின் படை வீரரை. கிடைத்தனர் அடைத்தனர் என்பவை எச்சப்பொருளிற் பயின்றன. அமரரும் என உம்மை விரிக்க. (110)

3082. முழங்கின பெரும்பணை மூரி மால்கரி
முழங்கின வரிசிலை முடுகு நாணொலி
முழங்கின சங்கொடு புரவி மொய்த்துற
முழங்கின வரக்கர்த முகிலி னார்ப்பரோ.

முழங்கின பெரும் பணை, மூரி மால் கரி ;
முழங்கின வரி சிலை முடுகும் நாண் ஒலி ;
முழங்கின சங்கொடு புரவி ; மொய்த்து உற
முழங்கின அரக்கர்தம் முகிலின் ஆர்ப்பு அரோ.

பொ :—பெரிய போர்ப்பறைகளும் மதமயக்கத்தையுடைய பெரிய யானைகளும் முழங்கின ; கட்டமைந்த வில்லில் விரைந்து நாண் பூட்டலால் எழும் ஒலிகள் முழங்கின ; சங்கங்களும் குதிரைகளும்

முழங்கின ; அரக்கவீரருடைய மேக முழக்கம்போலும் ஆரவாரங்கள் எங்கும் செறிந்து மிக முழங்கின.

கு :—பணை - பறை. அரக்கர்தம் முகிலினுர்ப்பு மொய்த்து உற முழங்கின என்க. உற - மிகவும். (111)

26, 29, 30, 44 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இச்செய்யுளின் பின் 'கரன் படைத்தலைவர் வதைப்படலம் முற்றும்' என்று வரையப் பட்டுள்ளது.

3083. வெம்படை நிருதர் வீச
★ விண்ணிடை மிடைந்த வீர
னம்பிடை யறுக்கச் சிந்தி
யற்றன படுமென் றஞ்சி
யும்பரு மிரியல் போனு
ருலகெலா முலைந்து சாய்ந்த
கம்பமி றிசையி னின்ற
களிறுங்கண் ணிமைத்த வன்றே.

'வெம் படை நிருதர் வீச,
விண்ணிடை மிடைந்த, வீரன்
அம்பு இடை அறுக்கச் சிந்தி
அற்றன படும், என்று அஞ்சி
உம்பரும் இரியல் போனுர் ;
உலகு எலாம் உலைந்து சாய்ந்த ;
கம்பம் இல் திசையில் நின்ற
களிறும் கண் இமைத்த அன்று ஏ.

பொ :—கொடிய படைக்கலங்கள் அரக்கவீரர் எறிதலால் ஆகாயத்தே செறிந்தனவாய், இராமனம்பு நடுவே துண்டிக்க அற்றுச் சிந்தினவை, தம்மேல் விழுமென்று அஞ்சித் தேவரும் நிலைகெட்டு ஓடினர் ; உலகங்களெல்லாம் வலியழிந்து சாய்ந்தன ; நிலைபெயராது நின்ற திசை யானைகளும் கண்களை இமைத்தன.

கு :—நிருதர் - அரக்கர். வீரன் என்றது இராமனை. இரியல் போதல் - நிலைகெட்டோடுதல். கம்பம் - அசைவு. உம்மை உயர்வு சிறப்புணர நின்றது. இவை மூன்று பாட்டாலும் திரிசிராவுடன் வந்த படையின் போர் நிலை கூறப்பட்டது. (112)

26, 29 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இச்செய்யுளின் முன், 'தூடணன் வதைப்படலம்' என்றும், 44ல் திரிசிராவதப்படலம் என்றும் வரையப்பட்டுளது.

### திரிசிரா வருதல்

3084. அத்தலைத் தானையி னளவி லாற்றலன்
★ முத்தலைக் குரிசில்பொன் முடியன் முக்கணன்
கைத்தலைச் சூலமே யனைய காட்சியான்
வைத்தலைப் பகழியான் மழைசெய் வில்லினன்.

அத்தலைத் தானையின், அளவு இல் ஆற்றலன்,
முத்தலைக் குரிசில், பொன் முடியன், முக்கணன்
கைத்தலைச் சூலமே அனைய காட்சியான்,
வைத் தலைப் பகழியால் மழைசெய் வில்லினன்.

பொ :—அளவில்லாத வலிமையுடையவனும், பொன்னாலாகிய முடியை அணிந்தவனும், சிவபெருமான் கையிலுள்ள முத்தலைச் சூலம் போன்ற தோற்றம் உடையவனும், கூரிய நுனியினையுடைய கணைகளால் மழை பெய்விக்கின்ற வில்லையுடையவனும் (ஆன) திரிசிரா (என்பவன்) அப்பொழுது அப்படையுள் (எய்தினன்).

கு :—அத்தலை - அப்பொழுது. தானை - படை. காட்சி - தோற்றம். வை - கூர்மை. மூன்றுதலைகளையுடைமையாலும் அழித்தற்றொழிலாலும் முத்தலைச் சூலம் திரிசிராவுக்கு உவமையாயிற்று. ஆற்றலன், முடியன், காட்சியான், வில்லினன் (ஆன) முத்தலைக்குரிசில், அத்தலைத் தானையின் (எய்தினன்) என இயைக்க. எய்தினன் என்பது வருவித்துரைக்கப்பட்டது. (113)

### அரக்கர் படையிடை இராமன் தோற்றம்

3085. அன்னவ னடுவுற வூழி யாழியீ
தென்னவந் தெங்கணு மிரைத்த சேனையுட்
டன்னிகர் வீரனுந் தமியன் வில்லினன்
றுன்னிரு ளிடையதோர் விளக்கிற் றோன்றினன்.

அன்னவன் நடு உற, ஊழி ஆழி ஈது
என்ன வந்து எங்கணும் இரைத்த சேனையுள்,

தன் நிகர் வீரனும் தமியன் வில்லினன்
துன் இருள் இடையது ஓர் விளக்கில் தோன்றினன்.

பொ:—திரிசிரா நடுவே நிற்க, இது பிரளயகாலக்கடல் என்று சொல்லும்படி (பொங்கியெழுந்து) வந்து எங்கும் ஆரவாரித்துநின்ற படையுள், தமியனும் வில்லேந்தியவனும் தனக்கு நிகர் தானே யானவனும் ஆகிய இராமனும், செறிந்த இருளிடையுள்ளதொரு விளக்கைப் போலத் தோன்றினன்.

கு:—அன்னவன் - அவன், திரிசிரா. இரைத்தல் - ஆரவாரித்தல். அரக்கர்க்கு இருளும் இராமனுக்கு விளக்கும் உவமை. விளக்கின்முன் இருள் அழிதல்போல இராமன்முன் திரிசிரா முதலிய அரக்கர் அழிந்தொழிவர் என்றவாறு. (114)

### இராமன் திரிசிரன் படையை எதிர்த்துநிற்றல்

**3086.** ஓங்கிய வாளின னுருமி னார்ப்பினன்
வீங்கிய கவசத்தன் வெய்ய கண்ணின
னாங்கவ னணிக்கெதி ரணிக ளாகநேர்
தாங்கின னிராமனுஞ் சரத்தின் றானையால்.

ஓங்கிய வாளினன், உருமின் ஆர்ப்பினன்,
வீங்கிய கவசத்தன், வெய்ய கண்ணினன்,
ஆங்கு அவன் அணிக்கு எதிர் அணிகள் ஆக, நேர்
தாங்கினன் இராமனும் சரத்தின் தானையால்.

பொ:—ஓங்கிய வாட்படையுடையவனும், இடிமுழக்கம் போலும் ஆரவாரம் உடையவனும், பருத்த கவசம் அணிந்தவனும், கொடிய கண்ணையுடையவனும் ஆகிய அத்திரிசிராவின் படைவகுப்புக்கு எதிர் அணி வகுப்பாக, இராமனும் அம்புகளாகிய படையால் எதிரூன்றி நின்றான்.

கு:—ஆங்கு அசை. அவன் என்றது திரிசிராவை. அணி - படை வகுப்பு. சரம் - அம்பு. அத்தும் இன்னும் சாரியை. (115)

### இராமன் சரத்தால் அரக்கர்படை அழிதல் 3087–3090

**3087.** தாளிடை யற்றன தலையு மற்றன
தோளிடை யற்றன தொடையு மற்றன

வாளிடை யற்றன மழுவு மற்றன
கோளிடை யற்றன குடையு மற்றன.

தாள் இடை அற்றன ; தலையும் அற்றன ;
தோள் இடை அற்றன ; தொடையும் அற்றன ;
வாள் இடை அற்றன ; மழுவும் அற்றன ;
கோள் இடை அற்றன ; குடையும் அற்றன.

பொ:—(இராமனம்புகளால்) போர்க்களத்தே(அரக்கவீரருடைய) கால்கள் இடையே அறுபட்டன; தலைகளும் அறுபட்டன ; தோள்கள் இடையே அற்றன; தொடையென்னும் உறுப்புக்களும் அற்றன ; வாள்கள் இடையே அற்றன; மழுப்படைகளும் அற்றன; வலிமைகள் அற்றன; குடைகளும் அற்றன.

கு:—தாள் - அடி. தாள் தலை, தோள் தொடை என்பவை மறுதலையுறுப்புக்கள். கோள் - வலிமை. கோள் இடை என்று கொண்டு வலிய இடை (என்னும் உறுப்பு) என்று பொருள் கூறுவாரும் உண்டு. (116)

3088. கொடியொடு கொடிஞ்சறப் புரவிக் கூட்டறப்
படியொடு படிந்தன பருதித் தேர்ப்பணை
நெடியவன் கடகரி புரண்ட நெற்றியி
னிடியொடு முறிந்துவீழ் சிகர மென்னவே.

கொடியொடு கொடிஞ்சு அறப் புரவிக் கூட்டு அறப்
படியொடு படிந்தன பருதித் தேர்ப்பணை ;
நெடிய வன் கட கரி புரண்ட, நெற்றியின்
இடியொடு முறிந்து வீழ் சிகரம் என்னவே.

பொ :—உருளொடு கூடிய தேர்களின் தொகுதிகள், கொடிகளும் கொடிஞ்சும் அறக் குதிரைகளைப் பிணிக்கும் நுகமும் அறுதலால் மண்ணிற் புதைந்தன ; உயர்ந்த வலிய மதயானைகள், நெற்றியில் தாக்கிய இடியால் சிதைந்து விழுகின்ற மலைகள்போல மண்மிசைப் புரண்டன.

கு :—கொடி கொடிஞ்சு புரவிக்கூட்டு பருதி என்பவை தேரின் உறுப்புக்கள். கொடிஞ்சு - தேர்த்தட்டின் மேற்கட்டி. புரவிக் கூட்டு - குதிரைகளைப் பூட்டும் நுகம். பருதி - தேருருள். சிகரம் - மலை (சூடா). இதனால் தேர்களும் யானைகளும் அழிந்தமை கூற

லாயிற்று. பின்னிரண்டடியொடு, 'தரைமேல் மலை சிந்தினபடி சிந்தின வருசிந்துரம்' (3073) என்று முற்கூறியதும் நோக்கத்தகும். (117)

**3089.** அற்றன சிரமென வறித றேற்றலர்
கொற்றவெஞ் சிலைச்சரங் கோத்து வாங்குவா
ரிற்றவ ரிருதவ ரெழுந்து விண்ணினைப்
பற்றின மழையெனப் படை வழங்குவார்.

அற்றன சிரம் என அறிதல் தேற்றலர்
கொற்ற வெம் சிலைச் சரம் கோத்து வாங்குவார்
இற்றவர் ; இருதவர் எழுந்து விண்ணினைப்
பற்றின மழை எனப் படை வழங்குவார்.

பொ :—தலை அற்ற அரக்கர், தங்கள் தலைகள் அற்றுவிட்டன என்று அறியாராய், வெற்றிவாய்ந்த கொடிய வில்லின்கண் அம்பைத் தொடுத்துக் காதுவரை யிழுத்தெய்ய முற்படுவர்; தலை அறுபடாதவர் ஊக்கங்கொண்டு படைக்கலவகைகளை வானிலே தங்கிய மேகம்போலப் பொழிவர்.

கு :—தேற்றுதல் - தெளிதல். இற்றவர் வாங்குவர், இருதவர் வழங்குவார் என்க. (118)

**3090.** கேடகத் தடக்கைய கிரியின் றோற்றத்த
வாடகக் கவசத்த கவந்த மாடுவ
பாடகத் தரம்பையர் மருளப் பல்வித
நாடகத் தொழிலினை நடிப்ப வொத்தவே.

கேடகத் தடக்கைய, கிரியின் தோற்றத்த,
ஆடகக் கவசத்த, கவந்தம் ஆடுவ,
பாடகத்து அரம்பையர் மருளப் பல் வித
நாடகத் தொழிலினை நடிப்ப ஒத்தவே.

பொ :—கேடகம் தாங்கிய பெரிய கையினையுடையனவும், மலை போன்ற தோற்றமுடையனவும், பொற்கவசம் பூண்டனவுமான கவந்தங்கள் ஆடுபவை, பாடகம் பூண்ட தெய்வ மகளிர் மயங்கும்படி பலவகை நடனத் தொழில்களை நடித்துக்காட்டுவன போன்றன.

கு :—கேடகம் - பகைவர் படைவீச்சுத் தம்மேல் தாக்காதபடி வீரர் இடக்கையில் தாங்கும் வட்டப் பலகை வடிவுள்ளதொரு படை விசேடம். ஆடகம் - பொன். கவந்தம் - தலையற்றவுடல். பாடகம் - காலணியுள் ஒருவகை. மருள - மயங்க. (119)

## குருதியாறு பெருகுதல்

3091. கவரிவெண் குடையெனு நுரைய கைம்மலைச்
சுவரின கவந்தமாழ் சுழிய தண்டுறைப்
பவரினப் படுமணி குவிக்கும் பண்ணைய
வுவரியைப் புதுக்கின வுதிர வாறரோ.

கவரி வெண் குடை எனும் நுரைய, கைம்மலைச்
சுவரின, கவந்தம் ஆழ் சுழிய, தண் துறைப்
பவர் இனப் படு மணி குவிக்கும் பண்ணைய,
உவரியைப் புதுக்கின உதிர ஆறு அரோ.

பொ :—சாமரை வெண்கொற்றக் குடை என்னும் நுரையினை யுடையனவும், யானைகளாகிய அணைக்கட்டு மதில்களையுடையனவும், கவந்தங்கள் ஆழும் சுழிகளையுடையனவும், செறிந்த பலவகைப்பட்ட மணிகளைக் குவிக்கும் துறைகளையும் வயல்களையும் உடையனவும் ஆன குருதியாறுகள், கடலைப் புதியனவாக்கின.

கு :—கவரி - சாமரை. கைம்மலை - யானை. சுவர் - அணைக்கட்டு மதில். மணிகுவிக்கும் தண்துறைய, பண்ணைய என இயைக்க. பவர் - செறிவு. பண்ணை - வயல்கள். உவரி - கடல். புதுக்குதலாவது பண்டை நிறம் நீங்கி வேற்று நிறம் பெறச் செய்தலாம். இரத்த ஆறுகள் பாய்ந்தமையால் கடல் தன் பண்டைக் கரு நிறம் நீங்கிச் செந்நிறமுடையதாயிற்று என்றவாறு. குருதிப் பெருக்கை ஆறாக உருவகித்தமையால், அதற்குப் புனலாற்றுக்குரிய நுரை, அணைக்கட்டுமதில், சுழி, துறை, பண்ணை என்னும் உறுப்புக் களும் ஏற்றபெற்றி கற்பிக்கப்பட்டன. (120)

## போர்க்களக் காட்சி 3092-3097

3092. சண்டவெங் கடுங்கணை தடியத் தாஞ்சில
திண்டிறல் வளையெயிற் றரக்கர் தேவராய்
வண்டுழல் புரிகுழன் மடந்தை மாரொடுங்
கண்டனர் தம்முடற் கவந்த நாடகம்.

சண்ட வெம் கடுங்கணை தடியத் தாம் சில
திண் திறல் வளை எயிற்று அரக்கர், தேவர் ஆய்,
வண்டு உழல் புரிகுழல் மடந்தைமாரொடும்
கண்டனர் தம் உடற் கவந்த நாடகம்.

பொ :—வலிய கொடிய விரைவுடைய இராமனம்புகள் குறைத்தழித்தலால், மிக்க ஆற்றலையும் வளைந்த பற்களையும் உடைய சில அரக்கர், (இறந்து) தேவராய், வண்டுகள் மொய்க்கின்ற சுருண்ட கூந்தலையுடைய தம் மனைவிமாரொடுகூடித் தம் உடலின் கவந்தம் நடிக்கின்ற நாடகத்தைக் கண்டார்.

கு :—சண்டம் - வலிமை. கடுமை - விரைவு. தடிதல் - குறைத்தல். தாம் அசை. சில அரக்கர் என்க. மடந்தைமார் என்பதற்கு அரம்பையர் என்று பொருள் கொண்டாரும் உண்டு. அரமகளிர் கூந்தலில் வண்டு மூசா; ஆதலின் அவரை வண்டுழல் புரிகுழல் மடந்தைமார் என்பது பொருந்தாது. மறக்குடிப் பெண்டிர் தம் கணவரோடு ஆவியொக்கவிட்டு விண்ணுலகில் தம் கணவரைக் கூடுவராதலின், மடந்தைமார் என்பதற்கு அவ்வரக்கர் மனைவியர் என்று பொருள் கூறலாயிற்று. பின்வரும் செய்யுளில், ஆய்வளை மகளிர் என்பதும் இப்பொருளிற் பயின்றது. வீரமகளிர் தம் கணவரொடு ஒக்க உயிர்துறந்து விண்ணுலகில் தம் கணவரொடு கூடுவர் என்பது, 'ஓடினு ருயிர்கணு டுடல்கள்போல் உதவியால், வீடினுர் வீடினுர் மிடையுடற் குவைகள்வாய், நாடினுர் மடநலார் நவையிலா நண்பரைக், கூடினு ரூடினுர் உம்பர்வாழ் கொம்பனுர் (சுந்தர. 974) என்று ஆசிரியர் பின் கூறுதலாலும், 'தரைமகடன் கொழுநன்றன் னுடலந்தன்னைத் தாங்காமற் றன்னுடலாற் ருங்கி விண்ணுட்,டரமகளிரவ்வுயிரைப் புணராமுன்னம் ஆவியொக்க விடுவாளைக் காண்மின் காண்மின்' (483) என்னும் கலிங்கத்துப் பரணித் தாழிசையாலும் அறியத்தகும். அரக்கராய் நின்றநிலையில் இராமனெடு சினந்து போர் மேற்கொண்டவர்தாமே, இராமனுற் கொல்லப்பட்டுத் தேவரான நிலையில் தம் உடற் கவந்த நாடகங்கண்டு களிப்பாராயினர் என்றவாறு. (121)

3093. ஆய்வளை மகளிரொ டமர ரீட்டத்தர்
தூயவெங் கடுங்கணை துணித்த தங்கடோள்
பேயொரு தலைகொளப் பிணங்கி வாய்விடா
நாயொரு தலைகொள நகையுற் ருர்சிலர்.

ஆய் வளை மகளிரொடு அமரர் ஈட்டத்தர்,
தூய வெம் கடுங்கணை துணித்த தங்கள் தோள்,
பேய் ஒருதலை கொளப் பிணங்கி வாய் விடா
நாய் ஒரு தலைகொள நகை உற்ருர் சிலர்.

பொ :—அரக்கர் சிலர், (இறந்து) சிறந்த வளைகளை அணிந்த தம் மனைவியரோடு தேவர்கூட்டத்தில் உற்றவராய், தூயகொடிய விரைவுடைய இராமனம்புகளால் துண்டிக்கப்பட்ட தங்களுடைய தோள்களை, ஒருபக்கம் பேய் பற்றிக்கொள்ள, அதனெடு மாறுபட்டு மற்றெரு பக்கத்தை வாயினின்று விடாதனவாய் நாய்கள் கௌவிக் கொள்ள, அது கண்டு நகைப்பாராயினர்.

கு :—ஆய்வளை - சிறந்த வளை. ஈட்டம் - கூட்டம். ஒருதலை - ஒருபக்கம். பிணங்குதல் - மாறுபடுதல்- (122)

3094. தெரிகணை மூழ்கலிற் றிறந்த மார்பின
ரிருவினை கடந்துபோ யும்ப ரெய்தினர்
நிருதர்தம் பெரும்படை நெடிது நின்றவ
ஞெருவனென் றுள்ளத்தி னுலைவுற் ருர்சிலர்.

தெரி கணை மூழ்கலின் திறந்த மார்பினர்
இருவினை கடந்துபோய் உம்பர் எய்தினர்,
' நிருதர்தம் பெரும் படை நெடிது நின்றவன்
ஒருவன் ' என்று உள்ளத்தின் உலைவுற்ருர் சிலர்.

பொ :—தேர்ந்துகொண்டு ஏவிய அம்புகள் அழுந்தியமையால் பிளந்த மார்பையுடையராய் (இறந்து), மிக்க தீவினையின் நீங்கி விண்ணுடுபுக்க சிலர், ' அரக்கருடைய பெரிய படை அளவற்றது; அதை எதிர்த்து நின்றவனே ஒருவன் ' என்று மனம் அழிந்தனர்.

கு :—பகைவராற்றலறிந்து ஏவப்பட்ட கணையாதலின், ' தெரி கணை ' என்ருர். இருவினை - பெரிய (மிக்க) தீவினை. உம்பர் - மேலுலகு. இராமபாணத்தால் அடியுண்டிறந்தாராதலின் அரக்கர் வினையின் நீங்கினுராயினர். ' வஞ்சகத் தரக்கரை வளைத்து வள்ள ருன், செஞ்சரத் தூய்மையால் தேவராக்கினன் ' (3096) என்று ஆசிரியர் கூறுவதும் நோக்குக. (123)

3095. கைக்கரி யன்னவன் பகழி கண்டகர்
மெய்க்குலம் வேரொடுந் துணித்து வீழ்த்தின

மைக்கரு மனத்தொரு வஞ்சன் மாண்பிலன்
பொய்க்கரி கூறிய கொடுஞ்சொற் போலவே.

கைக் கரி அன்னவன் பகழி, கண்டகர்
மெய்க் குலம் வேரொடுந் துணித்து வீழ்த்தின;
மைக் கரு மனத்து ஒரு வஞ்சன் மாண்பு இலன்
பொய்க் கரி கூறிய கொடுஞ்சொற் போலவே.

பொ :—நற்குண நற்செய்கைகள் அற்றவனும், மைபோலும் கரிய மனத்தையுடைய வஞ்சகனும் ஆகிய ஒருவன் கூறிய கொடிய பொய்ச்சான்றுரை, (கூறிய அவன் குலத்தை வேரோடு அறுத் தழித்தல்) போலக் கையையுடைய யானைபோல்வானுன இராமன் அம்புகள், கொடியவரான அரக்கருடைய உடற்றெகுதிகளை வேரோடு அறுத்துவீழ்த்தின.

கு :—கைக்கரியன்னவன் என்பதனேடு, 'இருகை வேழத்திரா கவன்' (காப்பு. 30) என்பதும் நோக்கத்தகும். கண்டகர் - கொடியவர், அரக்கர். குலம் - கூட்டம். மாண்பு - நற்குண நற்செய்கைகள். கரி - சான்று. பொய்ச்சான்றுரை, கூறியவர் குலத்தை வேருடன் அறுத்து வீழ்த்துதல்போல், இராமன் அம்புகள் அரக்கர் மெய்க்குலமடங்க வேரொடறுத்து வீழ்த்தின என்றவாறு. குலம் வேரொடும் துணித்து வீழ்த்தல் மட்டும் உவமைகொள்ளத்தகும். (124)

3096. அஞ்சிறை யறுபத மடைந்த கீடத்தைத்
தஞ்செனத் தன்மய மாக்குந் தன்மைபோல்
வஞ்சகத் தரக்கரை வளைத்து வள்ளருன்
செஞ்சரத் தூய்மையாற் றேவ ராக்கினுன்.

அம் சிறை அறுபதம் அடைந்த கீடத்தைத்
தஞ்சு எனத் தன்மயம் ஆக்கும் தன்மைபோல்,
வஞ்சகத்து அரக்கரை வளைத்து, வள்ளல்தான்,
செஞ்சரத் தூய்மையால் தேவ ராக்கினுன்.

பொ :—அழகிய இறக்கைகளையுடைய குளவி என்னும் வண்டானது, தன்னைக் கிட்டிய புழுவை எளியதென்று (கொட்டிக் கொட்டித்) தன் தன்மையடையச் செய்யுமாறு போல, இராமன் வஞ்சகராகிய அரக்கரை வளைத்துத் தன் செந்நிறம் வாய்ந்த அம்புகளின் தூய்மையால் அவர்களைத் தேவராக்கினுன்.

கு :—சிறை - இறக்கை. அறுபதம் - ஆறுகால்களையுடையது, வண்டு; இங்கே குளவியை உணர்த்திநின்றது. கீடம் - புழு. தஞ்சு -எளிது. தன் மயம் - தன்றன்மை. குளவி தன் எதிர்ப்பட்ட புழுவை வளைத்துத் தன் கொடுக்கிஞல் கொட்டி அதனைத் தன் வடிவம் அடையச் செய்வதுபோல, இராமனும் தன்முன் வந்தெதிர்ந்த அரக்கரை வளைத்துத் தன் அம்புகளால் அவர்களை அறுத்தொழித்துத் தேவராக்கினன் என்றவாறு. நிலை மாறுதலளவில் உவமம் கொள்ளத்தகும். (125)

3097. வலங்கொள்போர் மானிடன்
வலிந்து கொன்றமை
யலங்கல்வே லிராவணற்
கறிவிப் பாமெனச்
சலங்கொள்போ ரரக்கர்த
முருக்க டாங்கின
விலங்கையி னுற்றவக்
குருதி யாறரோ.

வலம் கொள் போர் மானிடன், வலிந்து கொன்றமை,
அலங்கல் வேல் இராவணற்கு அறிவிப்பாம் எனச்
சலம் கொள் போர் அரக்கர்தம் உருக்கள் தாங்கின
இலங்கையின் உற்ற அக் குருதியாறு அரோ.

பொ :—வெற்றிகொள்ளும் போர்த்தொழிலாற்றலுள்ள மானிடனை இராமன், (அரக்கர்பலரை) வன்மைசெய்து கொன்ற செய்தியை, மாலையணிந்த வேற்படையினையுடைய இராவணனுக்கு அறிவிப்போமென்று செல்வனபோலச் சினங்கொண்ட போரில் இறந்த அரக்கருடைய உடல்களைத் தாங்கினவாய்க் குருதியாறுகள் இலங்கையிற்புக்கன.

கு :—வலம் - வெற்றி. வலிந்து - வன்மைசெய்து. அலங்கல் - மாலை. சலம் - சினம். உருக்கள் - உடல்கள். (126)

திரிசிரா இராமஞெடு பொருதல் 3098–3099

3098. சூழ்ந்ததார் நெடும்படை பகழி சுற்றுறப்
போழ்ந்துயிர் குடித்தலிற் புரளப் பொங்கிஞன்

ருழ்ந்திலன் முத்தலைத் தலைவன் சோரியி
ளுழ்ந்ததே ரம்பரத் தோட்டி யார்க்கின்ருன்.

சூழ்ந்த தார் நெடும் படை பகழி சுற்றுறப்
போழ்ந்து உயிர் குடித்தலின், புரளப் பொங்கினுன்,
தாழ்ந்திலன், முத்தலைத் தலைவன், சோரியின்
ஆழ்ந்த தேர் அம்பரத்து ஓட்டி ஆர்க்கின்ருன்.

பொ :—இராமனை வளைந்த அணியாக வகுக்கப்பட்ட பெரிய படைகளை அவன் வாளி எங்கும் பிளந்து உயிரைக் குடித்தலால், அப்படைகள் விழுந்து புரள, அது கண்ட திரிசிரா, சினம் மிக்கவனுய்த் தாமதியாமல், குருதிச் சேற்றில் ஆழ்ந்த தன் தேரை ஆகாயத்திலே செலுத்தி ஆரவாரிக்கின்றவனுய்.

கு :—தார் - படைவகுப்பு. போர்வீரர் சூடும் அடையாள மாலையுமாம். பொங்குதல் - சினம் மிகுதல். முத்தலைத்தலைவன் - திரிசிரா. அம்பரம் - ஆகாயம். தேர்ச்சக்கரம் குருதிச் சேற்றிற்பதிந்து மேற்செல்லமாட்டாமையால், தேரைத் தன் மாயவித்தையால் ஆகாயத்தே செலுத்துவாளுயினன். ஆர்க்கின்ருன் என்பது முற்றெச்சம். ஆர்க்கின்ருன், ஊன்றிய தேரினன், தூவினுன் எனப் பின் வரும் பாடலுடன் இயைந்து முடியும். (127)

**3099.** ஊன்றிய தேரின னுருமின் வெங்கணை
வான்ருெடர் மழையென வாய்மை யாவர்க்குஞ்
சான்றென நின்றவத் தரும மன்னவன்
ரோன்றறன் றிருவுரு மறையத் தூவினுன்.

ஊன்றிய தேரினன், உருமின் வெம் கணை,
வான் தொடர் மழை என, வாய்மை யாவர்க்கும்
சான்று என நின்ற அத் தருமம் அன்னவன்
தோன்றல்தன் திரு உரு மறையத் தூவினுன்.

பொ :—முன் நிறுத்திய தேரினனுய், வாய்மையால் யாவர்க்கும் சாட்சியாய் நின்றவனும் தருமம் போல்பவனுமான தசரத சக்கரவர்த்தியின் மகனுன இராமன் திருமேனி மறையும்படி, இடிபோற் கொடிய அம்புகளை வானிற்பொருந்திய மேகம்போல மிகப் பொழிவானுயினன்.

கு :—ஊன்றுதல் - நிறுத்துதல். உருமு - இடி. வாய்மையால் என உருபுவிரிக்க. சான்று - சாட்சி; எடுத்துக்காட்டும் ஆம். தருமம் அன்னவன் - தருமம் போல்பவன், தசரதசக்கரவர்த்தி; 'நல்லற மூர்த்தியன்னான்' (168) என்றார் முன்னும். தோன்றல் - மகன். (128)

திரிசரன் தேரும் பாகனும் அழிதல்

3100. தூவிய சரமெலாந் துணிய வெங்கணை
யேவின னிராமனு மேவி யேழிரு
பூவியல் வாளியாற் பொலங்கொ டேரழித்
தாவிவெம் பாகனை யழித்து மாற்றினான்.

தூவிய சரம் எலாம் துணிய, வெம் கணை
ஏவினன் இராமனும், ஏவி, ஏழிரு
பூ இயல் வாளியால் பொலம் கொள் தேர் அழித்து,
ஆவி வெம் பாகனை அழித்து மாற்றினான்.

பொ :—திரிசிரன் தூவிய அம்புகளெல்லாம் அறும்படி, இராமனும் கொடிய அம்புகளை ஏவினான்; அவ்வாறு ஏவியதன் மேலும், பூக்கள் பொறிக்கப்பட்ட பதினான்கு அம்புகளால் அவனுடைய பொன்னால் அலங்கரிக்கப்பட்ட தேரையழித்துக் கொடிய பாகனையும் உயிரைப்போக்கி ஒழித்தான்.

கு :—பொலம் - பொன். ஆவி - உயிர். வெம்பாகனை ஆவி அழித்து மாற்றினான் என இயையும். ஆவி வெம்பாகன் என்பதற்கு உயிர்போல் விரும்பத்தக்க பாகன் என்று பொருள் கூறலும் அமையும். (129)

திரிசிரன் தலைகளுள் இரண்டு அறுபடல்

3101. அன்றியு மகக்கணத் தமர ரார்த்தெழப்
பொன்றெரி வடிம்புடைப் பொருவில் வாளியால்
வன்றொழிற் றீயவன் மகுட மாத்தலை
யொன்றொழித் திரண்டையு முருட்டி னானரோ.

அன்றியும், அக்கணத்து அமரர் ஆர்த்து எழப்
பொன் தெரி வடிம்பு உடைப் பொரு இல் வாளியால்,

வன் தொழில் தீயவன் மகுட மாத் தலை
ஒன்று ஒழித்து, இரண்டையும் உருட்டினன் அரோ.

பொ :—மேலும், அப்பொழுதே தேவர் ஆரவாரித்தெழும்படி, பொன்விளங்கும் விளிம்பினையுடைய ஒப்பற்ற அம்புகளால், (இராமன்) கொடுந்தொழிற் றீயவனாகிய திரிசிராவின் கிரீடமணிந்த பெரிய ஒருதலையை விடுத்து மற்றை இரண்டுதலைகளையும் அறுத்து உருட்டினன்.

கு :—வடிம்பு - விளிம்பு. பொரு - ஒப்பு. அம்புகளின் விளிம்புகளில் பொன்னால் வரிக்கோலம் இழைக்கப்பட்டிருக்குமாதலால், 'பொன் தெரிவடிம்புடை......வாளி' என்றார். (130)

## திரிசிரன் ஒருதலையொடு பொருதல்

**3102.** தேரழிந் தவ்வழித் திரிசி ராவெனும்
பேரழிந் ததனினு மறம்பி ழைத்திலன்
வாரழிந் திமிழ்சிலை வளைய நாட்டுழிக்
காரழிந் தாலெனக் கணைவ ழங்கினன்.

தேர் அழிந்து, அவ்வழித் திரிசிரா எனும்
பேர் அழிந்ததனினும் மறம் பிழைத்திலன்,
வார் அழிந்து இமிழ் சிலை வளைய நாட்டுழிக்
கார் அழிந்தால் எனக் கணை வழங்கினன்.

பொ :—தேர்சிதைந்து, அப்பொழுதே திரிசரன் என்னும் பேரும் அழிந்ததனாலும் வீரத்தில் தவறாதவனாய், ஒலிக்கின்ற வில்லை நீட்சியொழிந்து வளையும்படி ஊன்றிய நிலையில் மேகத்தில் மழை பெருகினாற்போல அம்புகளை மிகச் சொரிவானாயினன்.

கு :—அவ்வழி - அப்பொழுதே. மூன்றுதலையுள் இரண்டுதலை அற்றமையால் திரிசிரா எனும் பேர் அழிந்து என்றார். வார் - நீட்சி. இமிழ்தல் - ஒலித்தல். அழிதல் - பெருகுதல் ; 'அழியும்புனலஞ்சன மாநதியே' (1193) என்பது சீவகசிந்தாமணி. (131)

## திரிசிரன்வில் துண்டமாதல்

**3103.** ஏற்றிய நுதலின னிருண்ட கார்மழை
தோற்றிய வில்லொடுந் தொடர மீமிசைக்

காற்றிடை யழித்தெனக் கார்மு கத்தையு
மாற்றரும் பகழியா லறுத்து மாற்றினான்.

ஏற்றிய நுதலினன், இருண்ட கார் மழை
தோற்றிய வில்லொடும் தொடர, மீமிசைக்
காற்று இடை அழித்தெனக் கார்முகத்தையும்
மாற்றரும் பகழியால் அறுத்து மாற்றினான்.

பொ :—வெகுண்டு, நெற்றியில் ஏற்றின புருவமுடையனான திரிசிரன், கரியமேகத்தின் இயல்பைத் தோற்றுவித்த வில்லோடு தொடர, மிக உயர்ந்த வானின்கண், காற்று, இடையே அம் மேகத்தை அழித்தாற்போல, இராமன் திரசிரன் கைப்பற்றிய வில்லையும் தடுத்தற்கரிய அம்புகளால் அறுத்து அவன் போர்வலியையும் நீக்கினான்.

கு:—புருவத்தை நெற்றியில் ஏற்றியது, வெகுளியின் விளைவு. வில்லொடு கணைமழைபெய்து வந்த திரிசிரனுக்கு வானவில்லோடு புனல் மழை பெய்துவந்த மேகம் உவமை. திரிசிரனை வலியழித்து அவன் கைக்கொண்ட வில்லையும் அறுத்துநின்ற இராமனுக்கு மேகத்தை வானவில்லொடு சிதைவிக்கும் காற்று உவமை. (132)

வில்லிழந்த நிலையினும் திரிசரன் போர்புரிதல்

3104. வில்லி ழந்தன னென்னினும்
★ விழித்தவாண் முகத்தி
னெல்லி ழந்தில னிழந்திலன்
வெங்கத மிடிக்குஞ்
சொல்லி ழந்திலன் றோள்வலி
யிழந்திலன் சொரியுங்
கல்லி ழந்தில னிழந்திலன்
கறங்கெனத் திரிதல்.

வில் இழந்தனன் என்னினும், விழித்த வாள் முகத்தின்
எல் இழந்திலன் ; இழந்திலன் வெம் கதம் ; இடிக்கும்
சொல் இழந்திலன் ; தோள் வலி இழந்திலன் ; சொரியும்
கல் இழந்திலன் ; இழந்திலன் கறங்கு எனத் திரிதல்.

பொ :—(திரிசிரன், தான் கைக்கொண்ட) வில்லை இழந்தானென்றாலும் சினந்த நோக்கினையுடைய கொடிய முகத்தின் ஒளியினை

இழந்தானல்லன்; கொடிய சினம் நீங்கினனல்லன்; (பகைவனைத்) தாக்கிப்பேசும் பேச்சு ஒழிந்தானில்லை; புயவலி அற்றனல்லன்; கல்மாரி பொழிதலை ஒழிந்தானல்லன்; காற்றுடிபோலச் சுழலுதல் ஒழிந்தானல்லன்.

கு:—திரிசிரனது செருக்குமிகுதிதோன்ற, விழித்த வாண் முகத்தின் எல் இழந்திலன் என்றார்; 'விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின் ஓட்டன்றோ வன்கணவர்க்கு' (775) என்பது திருக்குறள். எல் - ஒளி. கதம் - சினம். இடித்தல் - தாக்குதல். கறங்கு - காற்றுடி. (133)

திரிசிரன் தாளும் தோளும் அறுதல்

3105. ஆளி ரண்டுநூ றுளவென
வந்தரத் தொருவன்
மூளி ரும்பெரு மாயவெஞ்
செருமுயல் வானைத்
தாளி ரண்டையு மிரண்டுவெங்
கணைகளாற் றடிந்து
தோளி ரண்டையு மிரண்டுவெங்
கணைகளாற் றுணித்தான்.

ஆள் இரண்டு நூறு உள என, அந்தரத்து ஒருவன்
மூள் இரும் பெரு மாய வெம் செரு முயல்வானைத்
தாள் இரண்டையும் இரண்டு வெம் கணைகளால் தடிந்து,
தோள் இரண்டையும் இரண்டு வெம் கணைகளால் துணித்தான்.

பொ:—ஆகாயத்தில் துணையற்றவனாய் நின்று, இருநூறு ஆட்கள் உள்ளன என்று சொல்லும்படி விளைந்த மிகப்பெரிய மாயமான கொடிய போரைச் செய்கின்ற திரிசிரனை இராமன், இரண்டு கால்களையும் இரண்டு கொடிய அம்புகளால் துணித்து, இரண்டு தோள்களையும் மேலும் இரண்டு கொடிய அம்புகளால் அறுத்தான்.

கு:—ஆள் என்றது வீரரை. மூளுதல் - விளைதல். தடிதல் - அறுத்தல். (134)

திரிசிரன் ஒருதலையுமிழந்து இறந்துபடல்

**3106.** அற்ற தாளொடு தோளின
னயிலெயி றிலங்கப்
பொற்றை மாமுழைப் புலாலுடை
வாயினிற் புகுந்து
பற்ற வாதரிப் பான்றனை
நோக்கினன் பரியான்
கொற்ற வார்சரத் தொழிந்ததோர்
தலையையும் குறைத்தான்.

அற்ற தாளொடு தோளினன், அயில் எயிறு இலங்கப்
பொற்றை மா முழைப் புலால் உடை வாயினின் புகுந்து,
பற்ற ஆதரிப்பான்தனை நோக்கினன், பரியான்,
கொற்ற வார் சரத்து ஒழிந்தது ஓர் தலையையும் குறைத்தான்.

பொ :—தாளும் தோளும் அற்றவனான திரிசிரன், இராமன் பாற் புகுந்து, கூரிய பற்கள் புறத்தே விளங்கித் தோன்றப் பெரிய மலைக் குகைபோன்ற புலால்நாற்றம் உள்ள தன் வாயினால் பற்ற விரும்பியவனை நோக்கி, இராமன் இரங்காதவனாகி, வெற்றிவாய்ந்த நெடிய வில்லினின்றெழுந்த அம்பினால் மற்றொருதலையையும் அறுத்தான்.

கு :—பொற்றை - மலை. முழை - குகை. ஆதரித்தல் - விரும்புதல். பரிதல் - இரங்குதல். (135)

திரிசிரன்படை சிதறியோடுதல் 3107-3111

**3107.** திரிசி ராவெனுஞ் சிகரமண்
சேர்தலுஞ் சிந்தி
நிருத ரோடினர் தூடணன்
விலக்கவு நில்லார்
பரிதி வாளினர் கேடகத்
தடக்கையர் பரந்த
குருதி நீரிடை வார்கழல்
கொழுங்குடர் தொடக்க.

திரிசிரா எனும் சிகரம் மண் சேர்தலும், சிந்தி,
நிருதர் ஓடினர், தூடணன் விலக்கவும் நில்லார்,

பரிதி வாளினர், கேடகத் தடக்கையர், பரந்த
குருதி நீரிடை, வார்கழல் கொழுங்குடர் தொடக்க.

பொ :—திரிசிரா என்கின்ற மலை சிதைந்து மண்ணிடை விழுந்த அளவில், விளக்கம்மிக்க வாளேந்தியவரும் கேடகம் தாங்கிய பெரிய கையினையுடையவரும் ஆகிய அரக்கர், தூடணன் தடுத்து நிறுத்தவும் நில்லாதவராய்ப் பரவிய இரத்தவெள்ளத்தில் இறந்துபட்ட வீரருடைய கொழுத்த குடல்கள், தங்கள் நீண்ட கால்களைத் தடுக்கும்படி ஓடினர்.

கு :—சிகரம் சிந்தி மண்சேர்தலும், வாளினர் கையர் நிருதர், தூடணன் விலக்கவும் நில்லார், குருதிநீரிடை குடர் கழல் தொடக்க ஓடினர் என இயையும். சிகரம் - மலை ; மலையுச்சியும் ஆம். சிந்துதல் - சிதறுதல். பரிதி - விளக்கம். கழல் - கால். குடர் - குடல் ; போலி. தொடக்குதல் - தளைத்தல். போர் செய்தற்குரிய படைக்கலந் தாங்கியவராயிருந்தும், தூடணன் தடுக்கவும் நில்லாதவராய் ஓடினர் என்றது அரக்கர் ஆற்றலழிந்தமை கூறியவாறு. குடர் கழல் தொடக்க என்றது தம் இனத்தவர் குடலே தாம் ஓடி உய்யாதவாறு தம் காலைத் தளைக்க என்றவாறு. (136)

3108. கணத்தின் மேனின்ற வானவர்
கைபுடைத் தார்ப்பப்
பணத்தின் மேனிலங் குழியுறக்
கால்கொடு பதைப்பார்
நிணத்தின் மேல்விழுந் தழுந்தினர்
சிலர்சிலர் நிவந்த
பிணத்தின் மேல்விழுந் துருண்டன
ருயிர்கொடு பிழைப்பார்.

கணத்தின் மேல் நின்ற வானவர் கை புடைத் தார்ப்பப்
பணத்தின் மேல் நிலம் குழி உறக் கால்கொடு பதைப்பார்,
நிணத்தின் மேல் விழுந்து அழுந்தினர் சிலர்; சிலர், நிவந்த
பிணத்தின்மேல் விழுந்து உருண்டனர் உயிர்கொடு பிழைப்பார்.

பொ :—அரக்கர் சிலர், ஆகாயத்தே போர் காணவந்து திரண்டு நின்ற தேவர்கள் கைகொட்டி ஆரவாரிக்கும்படி, (ஆதிசேடனாகிய) பாம்பின் படத்தின்மேலுள்ள நிலம் குழியும்படி நடந்து நடுங்குவாராய், நிணத்தின்மேல் விழுந்து அழுந்துவாராயினர் ; வேறு சிலர்,

உயர்ந்த பிணக்குவியலின் மேல் விழுந்து உருண்டு தம் உயிர் கொண்டு பிழைத்துப்போவாராயினர்.

கு :—சிலர் வானவர் ஆர்ப்ப, கால்கொடு பதைப்பார், அழுந்தினர்; சிலர் விழுந்துருண்டனர், பிழைப்பார் என இயையும். கணம் - கூட்டம். அத்து இன் என்பன சாரியை. அரக்கர் தோற்றோடுதல்கண்டமையால் வானவர் கைபுடைத்தார்ப்பாராயினர். பணம் - படம். பூமியை ஆதிசேடன் தன் படத்தில் தாங்குவதாகக் கூறுதல் கவிமரபு. கால்கொள்ளல் - நடத்தல். பதைத்தல் - நடுங்குதல். நிவத்தல் - உயர்தல். (137)

3109. வேய்ந்த வாளொடு வேலிடை
மிடைதலி னோட்ட
மோய்ந்து ளார்சில ருலந்தன
ருதிரநீ ராற்றிற்
பாய்ந்து கால்பறிந் தொழுகினர்
சிலர்சிலர் பயத்தா
னீந்தி னார்நெடுங் குருதியங்
கடல்புக்கு நிலையார்.

வேய்ந்த வாளொடு வேல் இடை மிடைதலின் ஓட்டம்
ஓய்ந்துளார் சிலர்; உலந்தனர் உதிரநீர் ஆற்றில்
பாய்ந்து, கால் பறிந்து ஒழுகினர் சிலர்; சிலர் பயத்தால்
நீந்தினார், நெடுங் குருதியங் கடல் புக்கு நிலையார்.

பொ :—வீரர் மாலை சூட்டிக் கைக்கொண்ட வாளும் வேலும் அவர் மாய்தலால் போர்க்களத்தில் விழுந்து செறிந்து கிடத்தலின், அரக்கர் சிலர் ஓட்டமும் ஓய்ந்தவராயினர்; மற்றும் சிலர், இறந்தோருடைய வுடலினின்று பெருகிய இரத்தவெள்ளத்திற் கால் நிலை பெறாது வீழ்ந்து, இரத்த வெள்ளத்தோடு செல்வாராயினர்; மேலும் சிலர், இராமன்பால் உண்டாகிய அச்சத்தால் இரத்த வெள்ளத்திலே நீந்தியவராய்ப் பெரிய குருதிக் கடலிற் புகுந்து அழுந்துவாராயினர்.

கு :—வேய்தல் - சூட்டுதல். வீரர் வாள் வேல் முதலிய படைக்கலங்களுக்கு மாலைசூட்டிக் கைக்கொள்ளுதல் மரபு. உலத்தல் - சாதல். பறிதல் - வழுக்குதல். (138)

3110. கச்சும் வாளுந்தங் காறொடர்ந்
தீர்வன காணு
ரச்ச மென்பதொன் றுருவுகொண்
டாலென வழிவா
ருச்ச வீரன்கைச் சுடுசர
நிருதர்நெஞ் சுருவத்
தச்சு நின்றன கண்டன
ரவ்வழித் தவிர்ந்தார்.

கச்சும் வாளும் தம் கால் தொடர்ந்து ஈர்வன காணார்,
அச்சம் என்பது ஒன்று உருவுகொண்டால் என, அழிவார்;
உச்ச வீரன் கைச் சுடுசரம் நிருதர் நெஞ்சு உருவத்
தச்சு நிற்பன கண்டனர், அவ் வழித் தவிர்ந்தார்.

பொ:—கச்சும் வாளும் முறையே தம்முடைய தாளைத் தளைத்து அறுப்பனவற்றை நோக்காதவராய், அச்சமென்று சொல்லப்படுவ தொன்று உருவுகொண்டாற்போல வருந்துபவராய், . உயர்ந்த வீரனான இராமன் கையினின்று புறப்பட்ட வருத்துந்தன்மைய வான அம்புகள் அரக்கர் மார்பின்கண் உருவும்படி தைத்து நின்ற வற்றைக் கண்டு, அவ்விடத்தே செயலற்றவராயினர்.

கு:—கச்சு - அரைப்பட்டிகை; 'மள்ளர்......யாத்த பூங்கச்சு' (16) என்பது சீவகசிந்தாமணி. ஈர்தல் என்பது இழுத்தல் அறுத்தல் என இருபொருள் பயந்தது. கச்சு தம் கால்தொடர்ந்து ஈர்வன எனவும், வாள் தம் கால்தொடர்ந்து ஈர்வன எனவும் இயையும். கச்சு கால் தொடர்ந்து ஈர்தலாவது இறந்த வீரருடைய அரைப்பட்டிகை போர்க்களத்தைவிட்டு ஓடுவாருடைய காலைத் தொடக்கி இழுத்தலாம். வாள் கால் தொடர்ந்து ஈர்தலாவது ஓடுவாருடைய கால்களை இறந்தாருடையவாள்கள் தொடக்கி அறுத்தலாம். உச்சம் - உயர்வு (திவா). (139)

17-19, 22, 23, 26, 43, 49, 56 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இச்செய்யுளின்பின், 'திரிசிராவதைப்படலம் முற்றும்' என்று வரையப்பட்டுளது.

3111. மண்டி யோடினர் சிலர்நெடுங்
கடகரி வயிற்றுப்
புண்டி றந்தமா முழையிடை
வாளொடும் புகுவார்

தொண்டை நீங்கிய கவந்தத்தைத்
துணைவநீ யெம்மைக்
கண்டி லேனெனப் புகலெனக்
கைதலைக் கொள்வார்.

மண்டி ஓடினர் சிலர், நெடுங் கட கரி வயிற்றுப்
புண் திறந்த மா முழையிடை வாளொடும் புகுவார்,
தொண்டை நீங்கிய கவந்தத்தைத் "துணைவ! நீ எம்மைக்
'கண்டிலேன்' எனப் புகல்" எனக் கை தலைக் கொள்வார்.

பொ :—சிலர் விரைந்து ஓடிப் பெரிய மதயானையின் வயிற்றுப் புண்பட்டுத் திறந்த பெரிய தொளைவழி வாளொடு நுழைவாராய்க் கழுத்தறுபட்ட கவந்தத்தை நோக்கித் "துணைவ! நீ எம்மைக் 'கண்டிலேன்' எனக் கூறுக" என்று வணங்குவராயினர்.

கு :—மண்டுதல் - விரைதல். முழை - தொளை. தம்மைப் பற்றத் தொடர்ந்துவருவர் என்னும் அச்சமிகுதியால், அரக்கர், தலையற்றமையால் பேசுமாற்றலற்றது என்பதையும் மறந்து, கவந்தத்தை நோக்கி, "துணைவ! நீ எம்மைக் 'கண்டிலேன்' எனப்புகல்" என்பாராயினர். கைதலைக் கொள்ளல் - தலைமேற் கை குவித்து வணங்குதல். (140)

27, 29, 41, 52 ஆம் சுவடிகளில் இச்செய்யுளின் பின், 'திரிசிரா வதைப்படலம் முற்றும்' என்று வரையப்பட்டுளது.

அஞ்சி ஓடிய படையினரை நோக்கித் தூடணன் கூறுதல்
3112–3118

3112. அனைய ராகிய வரக்கரை
யாண்டொழிற் கமைந்த
வினைய நீங்கிய மனத்தரை
வெருவன்மி னென்னு
நினையும் யானுமக் குரைப்பது
முண்டென்று நின்முன்
றுனையும் வாம்பரித் தேரினன்
றூடணன் சொன்னன்.

அனையர் ஆகிய அரக்கரை ஆண் தொழிற்கு அமைந்த
வினையம் நீங்கிய மனத்தரை 'வெருவன்மின்' என்னு,

நினையும் 'யான் உமக்கு உரைப்பதும் உண்டு' என்று நின்றான்,
துனையும் வாம் பரித் தேரினன் தூடணன் சொன்னான்.

பொ :—மிக விரைந்து செல்லும் குதிரைபூட்டிய தேரையுடைய தூடணன், அத்தன்மையரான அரக்கரை நோக்கி, 'யான் உமக்கு உரைப்பதும் உண்டு' என்று கூறி, 'ஆண்மை வெளிப்படும் போர்த்தொழிற் பயிற்சியற்ற மனமுடைய மனிதர்க்கு அஞ்சன்மின்' எனவும் சொல்லி நின்றான்.

கு :—அனையர் என்றது, பிழைப்பார், நிலையார், அழிவார், தவிர்ந்தார், கைதலைக்கொள்வார் என்று முன் செய்யுட்களிற் கூறிய அரக்கரை. ஆண்டொழிற்கு அமைந்த வினையம் நீங்கிய மனத்தர் என்பதனை அரக்கர்க்கு ஏற்றியுரைத்தலும் ஆம். வெரு - அச்சம். துனைதல் - விரைதல். (141)

3113. பச்சை யாமெனப் பயமனத்
துண்டென வாழுங்
கொச்சை மாந்தரைக் கோல்வளை
மகளிருங் கூடார்
நிச்ச யம்மெனுங் கவசந்தா
னிலைநிற்ப தன்றி
யச்ச மென்னுமீ தாருயிர்க்
கருந்துணை யாமோ.

பச்சை ஆம் எனப் பயம் மனத்து உண்டு என வாழும்
கொச்சை மாந்தரைக் கோல் வளை மகளிரும் கூடார்;
நிச்சயம் எனும் கவசம் தான் நிலைநிற்பதன்றி,
அச்சம் என்னும் ஈது ஆர் உயிர்க்கு அருந்துணையாமோ?

பொ :—இளையரென்று சொல்லும்படியும், நெஞ்சில் அச்சம் உண்டு என்று சொல்லும்படியும் வாழும் இழிந்த மாந்தரைத் திரண்ட வளைகளை அணிந்த மகளிரும் சேரார்; உறுதி என்று சொல்லப்படும் கவசந்தான் அரிய உயிர்க்கு சிறந்த துணையாக நிலைத்து நிற்பதன்றி அச்சம் என்று சொல்லப்படும் இது, அரிய உயிர்க்குச் சிறந்த (நிலைத்து நிற்பதாகிய) துணையாகாது.

கு :—பச்சை - இளமை. கொச்சை - இழிவு. கோல் - திரட்சி. நிச்சயம் எனும் கவசம் என்றது உருவகம். நிச்சயம் எனும் கவசந் தான் ஆருயிர்க்கு அருந்துணையா நிலைநிற்பதன்றி, அச்சம்

என்னும் ஈது ஆருயிர்க்கு அருந்துணையாமோ என இயையும். உருவும் திருவும் ஆகிய புறத்தோற்றங் கண்ட அளவில் அன்பு செய்பவரான மகளிரும் அஞ்சினரைச் சேரார் எனவே பிறர் அவரைச் சேராமை பெறப்படும். முன்னிரண்டடிகளால் அஞ்சினரை அனைவரும் வெறுப்பர் என்பதும், பின்னிரண்டடிகளால் அச்சம் உயிர்க்குத் துணையாகாது ; அஞ்சாமையே உயிர்க்குத் துணையாவது என்பதும் விளக்கியவாறு. அரக்கர் முதுகிட்டோடுதலால் அவர்பால் அச்சம் வெளிப்பட்டதாதலின், அச்சம் என்னும் ஈது என்று சுட்டுவானாயினன். (142)

3114. பூவ ராவுவேற் புரந்தர
 னோடுதான் பொன்று
மூவ ரோடுதான் முன்னின்று
 முட்டிய முனையி
லேவ ரோடினு ரிராக்கதர்
 நுமக்கிடைந் தோடுந்
தேவ ரோடுகற் றறிந்துளி
 ரோமனந் திகைத்தீர்.

பூ அராவு வேல் புரந்தரனோடுதான், பொன்று
மூவரோடுதான், முன்னின்று முட்டிய முனையில்
ஏவர் ஓடினர் இராக்கதர் ? நுமக்கு இடைந்து ஓடும்
தேவரோடு கற்று அறிந்துளிரோ ? மனம் திகைத்தீர்.

பொ :—மனம் திகைத்தவர்களே ! கூர்மையாக அராவப்பட்ட வேற்படையினையுடைய இந்திரனோடும், அழிவற்ற மூவராகிய தேவர் தலைவரோடும் எதிர்நின்று தாக்கிய போரில், அரக்கருள் எவரும் தோற்றோடினரில்லை. நுமக்குத் தோற்றோடும் தேவர்பால் இவ்வாறு தோற்றோடக் கற்றறிந்தீர்களோ !

கு :—பூ – கூர்மை ; ‘பூவாட்கோவலர்’ (224) என்பது புறநானூறு. அராவுதல் – தேய்த்தல். புரந்தரன் - இந்திரன். பொன்றுதல் – அழிதல். தான் இரண்டும் அசை. முனை - போர். எவர் என்பது ஏவர்என முதல் நீண்டது. இடைதல் - மெலிதல். (143)

3115. இங்கொர் மானிடற் கித்தனை
வீரர்க ளிடைந்தீ
ருங்கை வாளொடு புகழிழந்
தூர்புக லுற்றீர்
கொங்கை மார்பிடைக் குளிப்புறக்
களிப்புறு கொழுங்கண்
ணங்கை மார்களைப் புல்லுதி
ரோநல நுகர்வீர்.

இங்கு ஓர் மானிடற்கு இத்தனை வீரர்கள் இடைந்தீர்,
உம் கை வாளொடு புகழ் இழந்து ஊர் புகல் உற்றீர்,
கொங்கை மார்பிடைக் குளிப்புறக் களிப்பு உறு கொழுங்கண்
நங்கைமார்களைப் புல்லுதிரோ ? நலம் நுகர்வீர்.

பொ :—இன்பம் நுகர்தற்குரியீர் ! இங்கே ஒரு மனிதனுக்கு இவ்வளவு (பெருந்தொகையினரான) வீரர்கள் தோல்வியுற்றீராய், உங்கள் கையில் தாங்கிய வாட்படையோடு புகழையும் இழந்து, ஊருட் புகுதலைச் செய்தீர் ; (அங்கே) உங்களுடைய மகிழ்ச்சிமிக்க செழித்தகண்களையுடைய மனைவி மார்தனங்கள் உங்கள் மார்பிடையழுந்தத் தழுவுவீரோ !

கு :—இடைதல் - தோல்வியுறுதல். போரிலே எதிர்நின்று விழுப்புண்பட்ட வீரரையன்றித் தோற்றோடி ஊர்புக்கவரை வீரமகளிர் தழுவாராதலின் நங்கைமார்களைப் புல்லுதிரோ? என்றான். (144)

3116. செம்பு காட்டிய கண்ணிணை
பாலெனத் தெளிந்தீர்
வெம்பு காட்டிடை நுழைதொறும்
வெரிநுறப் பாய்ந்த
கொம்பு காட்டுதி ரோதட
மார்பிடைக் குளித்த
வம்பு காட்டுதி ரோகுல
மங்கையர்க் கம்மா.

செம்பு காட்டிய கண் இணை பால் எனத் தெளிந்தீர் !
வெம்பு காட்டிடை நுழைதொறும், வெரிந் உறப் பாய்ந்த
கொம்பு காட்டுதிரோ ? தட மார்பிடைக் குளித்த
அம்பு காட்டுதிரோ ? குல மங்கையர்க்கு அம்மா !

பொ :—உருக்கிய செம்பின் இயல்பைத் தோற்றுவித்த இரு கண்களும் பால்போல் வெளுத்து விளங்கப்பெற்றீர்! உங்கள் சிறந்த மனைவியர்க்கு நீங்கள் கொதிக்கின்ற காட்டிடை நுழைந்து செல்லுந் தோறும் உங்கள் முதுகிற்பாய்ந்த கொம்புகளாலாகிய வடுவைக் காட்டுவீரோ! அல்லது பெரிய மார்பிலே அழுந்திய அம்புகளாலாகிய புண்களைக் காட்டுவீரோ!

கு :—செம்பு - செம்புக்குழம்பு. செம்பு காட்டிய கண் என்றது, உருக்கிய செம்புக்குழம்புபோல வெம்மையுடையவாய்ச் சிவந்தகண் என்றவாறு. பால் எனத் தெளிதலாவது பால்போல் வெளுத்துத் தோற்றுவதாம். ஆள்வழக்கற்ற நிலத்துப் புதருள் மறைந்து தவழ்ந்து செல்ல வேண்டுதலின், வெம்புகாடு என்றும், வெரிநுறப் பாய்ந்த கொம்பு என்றும் கூறுவானாயினன். கொம்பு அம்பு என்பவை கொம்புகளாலும் அம்புகளாலும் விளைந்த புண்களை உணர்த்தி நின்றன. குளித்தல் - முழுகுதல். (145)

**3117.** ஏக்க மிங்கிதன் மேலுமுண்
டேயிகன் மனித
னாக்கும் வெஞ்சமத் தாண்மையவ்
வமரர்க்கு மரிதாத்
தாக்க ரும்புயத் துங்குலத்
தலைமகன் றங்கை
மூக்கொ டன்றியும் முதுகொடும்
போம்பழி முயன்றீர்.

ஏக்கம் இங்கு இதன் மேலும் உண்டே? இகல் மனிதன்
ஆக்கும் வெம் சமத்து, ஆண்மை அவ் அமரர்க்கும் அரிதாத்
தாக்கரும் புயத்து உம் குலத் தலைமகன் தங்கை
மூக்கொடு அன்றி, உம் முதுகொடும் போம் பழி முயன்றீர்.

பொ :—பகைமனிதன் செய்யும் கொடிய போரில், அத்தேவர்க்கும் ஆண்மையால் அரிதின் முயன்றும் தாக்குதற்கரிய புயவலி வாய்ந்த உங்கள் குலத்தலைவனுடைய தங்கையின் மூக்கற்றதோடன்றி உங்கள் தோல்வியோடு முடியும் பழிச்செயலைச் செய்தீர்; இதன் மேலும் ஏக்கம் உண்டோ?

கு :—மனிதன் ஆக்கும் வெஞ்சமத்துப் பழிமுயன்றீர்; இங்கு இதன்மேலும் ஏக்கம் உண்டே என இயைந்து முடிவுறும். ஆண்மையினையுடைய அத்தேவராலும் அரிதின் முயன்றும் தாக்குதற்கரிய

புயம் என்க. உம் குலத் தலைமகன் என்றது இராவணனை. ஏக்கம் - இழிவு. (146)

3118. ஆர வாழ்க்கையின் வணிகரா
யமைதிரோ வயில்வேல்
வீர வாட்கொழு வெனமடுத்
துழுதிரோ வெறிப்போர்த்
தீர வாழ்க்கையிற் றெவ்வரைச்
செருவிடைப் பறித்த
வீர வாட்கையீ ரெங்ஙனம்
வாழ்திரோ விளம்பீர்.

ஆர் அ வாழ்க்கையின் வணிகராய் அமைதிரோ? அயில் வேல்
வீர வாள் கொழு என மடுத்து உழுதிரோ? வெறிப் போர்த்
தீர வாழ்க்கையின் தெவ்வரைச் செருவிடைப் பறித்த
வீர வாள் கையீர்! எங்ஙனம் வாழ்திரோ? விளம்பீர்.

பொ :—ஆவேசத்தொடு கூடிய போராண்மையொடுவாழும் வாழ்வில் போரிலே பகைவரிடம் பறித்துக்கொண்ட வீரவாளைக் கையிற்கொண்டீர்! உம்முடைய கூரிய வேற்படையினையும் வீர வாளையும் துலாக்கோலாகவைத்து, நிரம்பிய அச்செல்வத்தோடு கூடிய வணிகராயிருந்து வாணிபஞ்செய்து வாழ்திரோ? அன்றி அந்த வேலையும் வாளையும் கொழுவாகக் கலப்பையிற் செறித்து உழுதொழிலைப் புரிந்து வேளாளராக வாழ்திரோ? எப்படி வாழ்திர்? சொல்லுமின்.

கு :—ஆர் - நிறைவு. வாழ்க்கை - செல்வம். கொழுவெனமடுத்து என்று பிற் கூறியதற்கிசைய, முன்னே, ‘துலாக்கோலாகக் கொண்டு’ என்பது வருவித்துரைக்கப் பட்டது. கொழு - கலப்பையின் நுனியிற்செறிக்கப்படும்இரும்பு. மடுத்தல் - செறித்தல். (147)

## தூடணனும் இராமனும் போர்புரிதல் 3119-3131

3119. என்று தானுந்தன் னெறிகடற்
சேனையு மிறைநீர்
நின்று காண்டிரென் னெடுஞ்சிலை
வலியென நேராச்

சென்று தாக்கினன் றேவரு
மருள்கொண்டு திகைத்தார்
நன்று காத்தியென் றிராமனு
மெதிர்செல நடந்தான்.

என்று, தானும், தன் எறி கடற் சேனையும், 'இறை, நீர் நின்று காண்டிர் என் நெடுஞ்சிலை வலி' என நேராச் சென்று தாக்கினன்; தேவரும் மருள்கொண்டு திகைத்தார்; 'நன்று காத்தி' என்று, இராமனும் எதிர்செல நடந்தான்.

பொ:—என்று (அஞ்சியோடிய படையினரை நோக்கிக்) கூறி, 'நீவிர் சிறிது பொழுது நின்று என்னுடைய பெரிய வில்லாற்றலைக் காண்மின்' என்று தானும் அலைமோதும் கடல்போலும் தன் படையுமாகச் சென்று இராமனைத் தாக்கினன்; (அதுகண்டு) இராமனுக்கு என்ன நேருமோ? என்று தேவரும் மயங்கித் திகைத்தனர்; இராமனும் (தூடணனை நோக்கி, உன்னையும் உன்படைகளையும்) 'நன்கு காத்துக்கொள்க' என்றுகூறி அவனை எதிர்த்துச் சென்றான்.

கு:—இறை - சிறிது. (148)

41, 45, 52-ஆம் சுவடிகளில் இச்செய்யுளின்பின் ஒரு அதிகப் பாடல் காணப்படுகிறது. அது வருமாறு:—

3119 (a) நடந்து தன்னிரு கரத்தினி னலம்பெறுஞ் சிலைவாய்த்
தொடர்ந்த நாணொலி யெழுப்பினன் றொகைப்படு மண்டம்
இடிந்த தென்னநின் றதிர்ந்ததங் கிறைவனு மிமைப்பின்
மிடைந்த வெஞ்சர மழைவிடு தாரையின் விதைத்தான்.

## தூடணன் படை அழிதல் 3120–3125

3120. ஊட றுப்புண்ட மொய்படை
கையொடு முயர்ந்த
கோடறுப்புண்ட குஞ்சரங்
கொடிஞ்சொடு கொடியின்
காடறுப்புண்ட காலிய
றேர்கதிர்ச் சாலி
சூடறுப்புண்ட வெனக்கழுத்
தறுப்புண்ட துரகம்.

ஊடு அறுப்புண்ட மொய்படை; கையொடும் உயர்ந்த
கோடு அறுப்புண்ட குஞ்சரம்; கொடிஞ்சொடு கொடியின்
காடு அறுப்புண்ட கால் இயல் தேர்; கதிர்ச் சாலி
சூடு அறுப்புண்ட எனக் கழுத்து அறுப்புண்ட துரகம்.

பொ:—செறிந்த காலாட்படைகள் இடையே துண்டிக்கப் பட்டன; யானைகள் துதிக்கையொடு நீண்ட கொம்புகளும் அறுக்கப் பட்டன; காற்றுப்போல (விரைந்து) செல்லும் தேர்கள் மேற்கட்டியும் மிகுதியான கொடிகளும் அறுக்கப்பட்டன; நெற்கதிர் உச்சியில் அறுப்புண்டனபோலக் குதிரைகள் கழுத்து அறுப்புண்டன.

கு:—மொய்த்தல் - செறிதல். படை என்றது காலாட்படையினை. கோடு - கொம்பு. கொடிஞ்சு - தேரின் மேற்கட்டி. கால் - காற்று. இயலுதல் - செல்லுதல். சாலி - நெல். சூடு - உச்சி. துரகம் - குதிரை. (149)

3121. துருவி யோடின வுயிர்நிலை சுடுசரந் துரந்த
கருவி யோடின கச்சையுங் கவசமுங் கழல
வருவி யோடின வெனவழி குருதியா றொழுக
வுருவி யோடின கேடகத் தட்டொடு முடலம்.

துருவி ஓடின உயிர்நிலை சுடுசரம்; துரந்த
கருவி ஓடின கச்சையும் கவசமும் கழல
அருவி ஓடின எனஅழி குருதியாறு ஒழுக
உருவி ஓடின கேடகத் தட்டொடும் உடலம்.

பொ:—(இராமன்) ஏவிய தகிக்கும் அம்புகள் அரக்கர் உயிர் நிலையைக் குடைந்து சென்றன; பிற படைக்கலங்கள், கச்சையும் கவசமும் அற்று விழும்படி சென்றனவாய், அருவிகள் பாய்ந்தாற் போல இரத்தவெள்ளம் உடலினின்று சிந்திப் பெருகும்படி கேடகமாகிய தட்டையும் உடலையும் ஊடுருவிச் சென்றன.

கு:—துரந்த சரம் உயிர்நிலை துருவியோடின என இயையும். துருவுதல் - குடைதல். துரந்த என்பது, இடைநிலை விளக்காய்த் துரந்த சரம் எனவும் துரந்த கருவி எனவும் கூட்டிகொள்ள நின்றது. கருவி - அம்பல்லாத வாள் வேல் முதலிய படைக் கலங்கள். கச்சை - அரைப்பட்டிகை. அழிதல் - சிந்துதல். (150)

3122. ஆய்ந்த கங்கபத் திரங்கள்புக்
கரக்கர தாவி
தோய்ந்த தோய்விலாப் பிறைமுகச்
சரஞ்சிரந் துமித்த
காய்ந்த வெஞ்சர நிருதர்தங்
கவசமார் புருவப்
பாய்ந்த வஞ்சக ரிதயமும்
பிளந்தன பல்லம்.

ஆய்ந்த கங்கபத்திரங்கள் புக்கு, அரக்கரது ஆவி
தோய்ந்த; தோய்வு இலாப் பிறைமுகச் சரம் சிரம் துமித்த;
காய்ந்த வெம் சரம் நிருதர்தம் கவச மார்பு உருவப்
பாய்ந்த; வஞ்சகர் இதயமும் பிளந்தன, பல்லம்.

பொ :—சிறந்தனவென்று ஆராய்ந்துகொண்ட கங்கபத்திரம் என்னும் அம்புகள், அரக்கருடலிற் புகுந்து அவருயிரைப் பொருந்தின; அரக்கருடலிற் புகாத பிறைமுகக்கணைகள் அவர்களுடைய சிரத்தைத் துணித்தன; சினந்த கொடிய வேறு சரங்கள் அரக்கருடைய கவசம் அணிந்த மார்புருவப் பாய்ந்தன; பல்லம் என்னும் அம்புகள் வஞ்சகராகிய அரக்கருடைய மனத்தையும் பிளந்தன.

கு :—சிரம் - தலை. துமித்தல் - துணித்தல். கங்கபத்திரம், பிறைமுகச்சரம், சரம் பல்லம் என்பவை அம்புவகைகள். (151)

3123. தூட ணன்விடு சுடுசரம்
யாவையுந் துணியா
மாடு நின்றவர் வழங்கிய
படைகளு மாற்ரு
வாடல் கொண்டன னளப்பரும்
பெருவலி யரக்கர்
கூடி நின்றவக் குரைகடல்
வறள்படக் குறைத்தான்.

தூடணன் விடு சுடுசரம் யாவையும் துணியா,
மாடு நின்றவர் வழங்கிய படைகளும் மாற்ரு,
ஆடல் கொண்டனன், அளப்பரும் பெருவலி அரக்கர்
கூடிநின்ற அக் குரை கடல் வறள்படக் குறைத்தான்.

பொ :—தூடணன் ஏவிய கொடிய அம்புகளையெல்லாம் துண்டித்து, அவன் பக்கத்தே நின்றவர் ஏவிய ஆயுதங்களையும் மாற்றி, வெற்றிகொண்டு, அளவிடற்கரிய பேராற்றல்வாய்ந்த அரக்கர் தொக்குநின்ற படையாகிய அக்கடல் வற்றும்படி குறைத்தான்.

கு :—மாடு - பக்கம். வழங்குதல் - ஏவுதல். மாற்றுதல் - செயலற்றதாக்குதல். ஆடல் - வெற்றி. கொண்டனன் - கொண்டு, குரை - ஒலி. வறள்படல் - வற்றுதல். (152)

3124. ஆர்த்தெ ழுந்தனர் வானவ
ரருவரை மரத்தோ
டீர்த்தெ ழுந்தன குருதியின்
பெருநதி யிராமன்
றூர்த்த செஞ்சரந் திசைதொறுந்
திசைதொறுந் தொடர்ந்து
போர்த்த வெஞ்சினத் தரக்கரைப்
புரட்டின புவியில்.

ஆர்த்து எழுந்தனர் வானவர் ; அருவரை மரத்தோடு
ஈர்த்து எழுந்தன குருதியின் பெரு நதி ; இராமன்
தூர்த்த செஞ்சரம் திசைதொறும் திசைதொறும் தொடர்ந்து,
போர்த்த வெஞ்சினத் தரக்கரைப் புரட்டின, புவியில்.

பொ :—இராமன் மிகுதியாக ஏவிய செந்நிறம் வாய்ந்த அம்புகள், அறிவை மறைத்த கொடிய சினத்தையுடைய அரக்கரை அவர் சென்ற திசைதொறும் திசைதொறும் தொடர்ந்து சென்று (தாக்கி) அவருடலை மண் மீது புரட்டின ; அவருடலினின்று பெருகிய குருதிப் பேராறுகள், பெரிய மலைகளை மரத்தொடு இழுத்துச்சென்றன; (அது கண்ட) தேவர்கள் ஆரவாரித் தெழுந்தனர்.

கு :—இராமன் சரம் அரக்கரைப் புவியில் புரட்டின ; (அவருடலினின்று பெருகிய) குருதிப் பெருநதி வரை மரத்தொடு ஈர்த்து எழுந்தன; (அதுகண்ட) வானவர் ஆர்த்தெழுந்தனர் என இயைந்து முடியும். (153)

3125. தோன்று மால்வரைத் தொகையெனத்
துவன்றிய நிணச்சே
றூன்ற பாழ்வயிற் றலகையைப்
புகல்வதெ னமர்வேட்

டுன்றி ஞரெலா முலைந்தன
ரொல்லையி லொழிந்தார்.
கான்ற வின்னுயிர் காலனுங்
கவர்ந்துமெய்ம் மறந்தான்.

தோன்றும் மால்வரைத் தொகை எனத்
துவன்றிய நிணச்சேறு
ஆன்ற பாழ் வயிற்று அலகையைப்
புகல்வது என்? அமர்வேட்டு
ஊன்றினர் எலாம் உலைந்தனர்,
ஒல்லையில் ஒழிந்தார்;
கான்ற இன்னுயிர் காலனும்
கவர்ந்து, மெய் மறந்தான்.

பொ :—போரை விரும்பிவந்து நின்ற அரக்கரெல்லாம் விரைவில் வலியழிந்து மாண்டனர்; அவருடலினின்று வெளிப்பட்ட இனிய வுயிரைக் கவர்ந்து (சோர்ந்து) எமனும் தன்னை மறந்தான்; எனின், தெரிகின்ற பெரிய மலைத்தொகுதிபோலக் குவிந்த நிணச்சேறு நிரம்பிய பாழ்வயிற்றையுடைய பேய்களைப் பற்றிப் பேசுவது என்?

கு :—துவன்றுதல் - குவிதல். ஆன்ற - நிரம்பிய. அலகை - பேய். வேட்டு - விரும்பி. ஊன்றுதல் - முன்நிற்றல். உலைதல் - வலியழிதல். ஒல்லை - விரைவு. கான்ற - கக்கிய. (154)

தூடணன் கொதித்தெழுதல்

3126. களிறு தேர்பரி கடுத்தவர்
முடித்தலை கவந்த
மொளிறு பல்படை தங்குலத்
தரக்கர்த முடலம்
வெளிறு சேர்நிணம் பிறங்கிய
வடுக்கலின் மீதாக்
குளிறு தேர்கடி தோட்டினன்
றூடணன் கொதித்தான்.

களிறு, தேர், பரி, கடுத்தவர் முடித்தலை, கவந்தம், ஒளிறு பல் படை, தம் குலத்து அரக்கர்தம் உடலம்,

வெளிறு சேர் நிணம், பிறங்கிய அடுக்கலின் மீதாக்
குளிறு தேர் கடிது ஓட்டினன், தூடணன், கொதித்தான்.

பொ :—யானைகளும் தேர்களும் குதிரைகளும் சினந்த அரக்கருடைய குடுமித்தலைகளும் கவந்தங்களும் விளங்குகின்ற பல படைக் கலங்களும் தம் மரபில்வந்த அரக்கருடல்களும் வெண்மையான நிணங்களுமாக விளங்கிய மலைகளின்மேல் முழங்குகின்ற தேரை விரைந்து செலுத்தித் தூடணன் கொதிப்பானுயினன்.

கு :—கடுத்தல் - சினத்தல். முடி – குடுமி. ஒளிறுதல் - விளங்குதல். வெளிறு - வெண்மை. பிறங்குதல் - விளங்குதல். அடுக்கல்– மலை. குளிறுதல் - முழங்குதல். (155)

தூடணன் தேரின் செலவு

3127. அறங்கொ ளாதவ ராக்கைக
ளடுக்கிய வடுக்கல்
பிறங்கி நீண்டன கணிப்பில
பெருங்கடு விசையாற்
கறங்கு போன்றுள தாயினும்
பிணப்பெருங் காட்டி
லிறங்கு மேறுமத் தேர்பட்ட
தியாதென விசைப்பாம்.

அறம் கொளாதவர் ஆக்கைகள் அடுக்கிய அடுக்கல்
பிறங்கி நீண்டன, கணிப்பில ; பெருங்கடு விசையால்
கறங்கு போன்று உளது ஆயினும், பிணப் பெருங்காட்டில்
இறங்கும், ஏறும் ; அத்தேர் பட்டது யாது என இசைப்பாம்.

பொ :—அறத்தை மனத்திற் கொள்ளாத அரக்கருடல்கள் அடுக்கிய மலைகள் அளவற்றனவாய் விளங்கி நீண்டன ; (தூடணன் தேர்) பெரிய கடிய வேகத்தோடு காற்ருடிபோலச் சுழன்றதாயினும், பிணங்கள் மிக்க போர்க்களத்தில் பள்ளத்தே இறங்கும்; மேட்டிலே ஏறும்; அத்தேர் பட்ட இடர்ப்பாட்டினை என்னென்று சொல்லுவோம்.

கு :—அறங்கொளாதவர் என்றது அரக்கரை. ஆக்கை - உடல். கணிப்பு - அளவு. கறங்கு - காற்ருடி. (156)

### தூடணன் இராமனை எதிர்தல்

**3128.** அரிதி னெய்தின னையைந்து
கொய்யுளைப் பரியா
லுருளு மாழிய தொருதனித்
தேரினன் மேகத்
திருளி னீங்கிய விந்துவிற்
பொலிகின்ற விராமன்
றெருளும் வார்கணைக் கூற்றெதி
ராவிசென் றென்ன.

அரிதின் எய்தினன் ஐயைந்து கொய் உளைப் பரியால்
உருளும் ஆழியது ஒரு தனித் தேரினன், மேகத்து
இருளின் நீங்கிய இந்துவின் பொலிகின்ற இராமன்
தெருளும் வார் கணைக் கூற்று எதிர், ஆவி சென்றென்ன.

பொ :—(தூடணன்,) கத்தரிக்கப்பட்ட பிடரிமயிரையுடைய இருபத்தைந்து குதிரைகளோடு உருளும் சக்கரத்தையும் உடைய ஒப்பற்ற ஒரே தேரினையுடையவனாய், மேக மறைப்பினின்று நீங்கிய சந்திரன்போல விளங்குகின்ற இராமனுடைய தெளிந்த பெரிய அம்பாகிய எமனுக்கு எதிர் உயிர் சென்றாற்போல அரிதின் அடைந்தான்.

கு :—கூற்று உயிரைத் தேடியடைதலே இயல்பு; அங்ஙனமின்றி இயமனை உயிர் தானே வலியத் தேடியடைந்தாற்போல இராமனைத் தூடணன் எய்தினான் என்றவாறு. பிணமலை தடுத்தலின் அரிதின் எய்தினன் என்றார். உளை - பிடரி மயிர். ஆழி - சக்கரம். இந்து - சந்திரன். தெருள் - தெளிவு. கணைக்கூற்று உருவகம். (157)

### தூடணன் அம்பு இராமன் வீரபட்டத்தில் தாக்குதல் 3129–3130

**3129.** சென்ற தேரையுஞ் சிலையுடை
மலையெனத் தேர்மே
னின்ற தூடணன் றன்னையு
நேருற நோக்கி
நன்று நன்றுநின் னிலையென
வருளிறை நயந்தா
னென்ற காலத்தவ் வெய்யவன்
பகழிமூன் றெய்தான்.

சென்ற தேரையும், சிலை உடை மலை எனத் தேர்மேல்
நின்ற தூடணன் றன்னையும் நேருற நோக்கி
'நன்று நன்று நின் நிலை' என அருள் இறை நயந்தான்;
என்ற காலத்து, அவ் வெய்யவன் பகழி மூன்று எய்தான்.

பொ :—சென்ற தேரையும் அத்தேர்மேல் வில்லேந்திய மலைபோல நின்ற தூடணனையும் எதிரே நன்ருகப் பார்த்து, அருளுடைய தலைவஞன இராமன், 'நின்நிலைமை நன்று நன்று' என்று கூறினன். அப்போது, கொடியோஞகிய அத்தூடணன் மூன்று அம்புகளை ஏவிஞன். (158)

3130. தூர வட்டவெண் டிசைகளைத்
தனித்தனி சுமக்கும்
பார வெட்டினே டிரண்டினி
லொன்றுபார் புரக்கப்
பேர விட்டவ னுதலணி
யோடையிற் பிறங்கும்
வீர பட்டத்திற் பட்டன
விண்ணவர் வெருவ.

தூர வட்ட எண் திசைகளைத் தனித்தனி சுமக்கும்
பார எட்டினேடு இரண்டினில் ஒன்று, பார் புரக்கப்
பேர விட்டவன் நுதல் அணி ஓடையில் பிறங்கும்
வீர பட்டத்தில் பட்டன, விண்ணவர் வெருவ.

பொ :—சேய்மையும் வட்டமுமான எட்டுத்திசைகளையும் தனித் தனியே சுமக்கும் பெரிய எட்டு யானைகளுடன் ஆதிசேஷன், ஆதி கூர்மம் என்று சொல்லப்படுகிற இரண்டுள் ஒன்ருகிய ஆதிசேஷாமிச மான திருவடிநிலையினை, உலகுகாத்தாற்பொருட்டு அயோத்தி நோக்கிச் செல்லவிட்ட இராமனுடைய நெற்றியிலணிந்த பட்டம் போல விளங்குகின்ற வீரபட்டத்தில் தூடணன் ஏவிய அம்புகள் தேவர்கள் அஞ்சும்படி தாக்கின.

கு :—எட்டுத் திசைகளிலும் எட்டு யானைகளும் நடுவே ஆதி கூர்மமும் ஆதிசேஷனும் பூமியைப் பாதுகாத்து நிற்பதாகக் கூறுவது கவிமரபு. எட்டு என்றது எட்டுத் திசையானைகளை. இரண்டு என்றது ஆதிகூர்மம், ஆதிசேஷன் என்பவற்றை, இரண்டினில் ஒன்று ஆதிசேஷன். அது இங்கே ஆதிசேஷாமிசமான பாதுகையை

(அடிநிலையை)ச் சுட்டி நின்றது. அடிநிலை ஆதிசேஷாமிசமானது என்பது, 'சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம், நின்றால் மரவடியாம் நீள் கடலுள் - என்றும், புணையாம் மணி விளக்காம் பூம் பட்டாம் புல்கும், அணையாம் திருமாற்கு அரவு' (பொய்கையார், 53.) என்னும் ஆன்றோர் கூற்றாலும் புலனும். நுதல் - நெற்றி. ஓடை - நெற்றிப்பட்டம். பரதன் சித்திரகூட வரைசென்று இராமனை வணங்கி, அயோத்தி மீண்டு அரசுபுரியுமாறு வேண்ட, அதற்கு இசையாத இராமன் தன் அடிநிலையினைப் பரதனுக்குக் கொடுத்து அயோத்திக்கு மீளவிட, பரதன் அங்கே சென்று இராமன் அடிநிலைகட்கு முடிசூட்டி அதன் வழிநின்று அரசுபுரிந்தமை இங்கே கூறப்பட்டது. (159)

### தூடணன் தேரும் வில்லும் கவசமும் அழிதல்

3131. எய்த காலமும் வலியுநன்
றெனநினைந் திராமன்
செய்த சேயொளி முறுவலன்
கடுங்கணை தெரிந்தா
னெய்தி லங்கவ னெறிற்பரித்
தேர்பட நூறிக்
கையில் வெஞ்சிலை யறுத்தொளிர்
கவசமுங் கடிந்தான்.

'எய்த காலமும் வலியும் நன்று' என நினைந்து, இராமன், செய்த சேயொளி முறுவலன், கடுங்கணை தெரிந்தான்; நொய்தில் அங்கு அவன் நொறில் பரித் தேர் பட நூறிக் கையில் வெம் சிலை அறுத்து, ஒளிர் கவசமும் கடிந்தான்.

பொ:—இராமன், 'இவன் கணைகளை ஏவிய காலமும் இவனாற்றலும் நன்று' என்று நினைந்து, செய்ய முறுவல் செய்து, விரைவுடைய அம்புகளைத் தேர்ந்து ஏவி, எளிதில் தூடணனுடைய விரைந்த குதிரைகள் பூட்டிய தேர் அழியும்படிசெய்து, அவன் கையிலுள்ள வில்லையும் துண்டித்து, அவனுடைய விளக்கமிக்க கவசத்தினையும் அறுத்தொழித்தான்.

கு:—முறுவல் - புன்சிரிப்பு. நொய்து - எளிது. நொறில் - விரைவு. நூறுதல் - அழித்தல். 'எய்த காலமும் வலியும் நன்று' என்பது இராமன் நினைவு கூறியவாறு. (160)

### தூடணன் தலையறுபட்டு மாய்தல்

3132. தேவ ரார்த்தெழ முனிவர்க
டிசைதொறுஞ் சிலம்பு
மோவில் வாழ்த்தொலி கார்க்கடன்
முழக்கென வோங்கக்
காவ டாவிது வல்லையே
னீயெனக் கணையொன்
றேவி னனவ னெயிறுடை
நெடுந்தலை யிழந்தான்.

தேவர் ஆர்த்து எழ, முனிவர்கள் திசைதொறும் சிலம்பும் ஓவு இல் வாழ்த்தொலி கார்க்கடல் முழக்கு என ஓங்கக் 'கா அடா! இது, வல்லையேல் நீ' எனக் கணை ஒன்று ஏவினன்; அவன், எயிறு உடை நெடுந்தலை இழந்தான்.

பொ :—தேவர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரித்தெழ, முனிவர்கள் திசைதொறும் முழங்கும் ஒழியாத வாழ்த்தொலிகள் மேகத்தோடு கூடிய கடல் முழக்கம்போல் ஓங்க, (இராமன் தூடணனை நோக்கி) 'அடா! நீ ஆற்றலுடையையாயின் இவ்வம்பைத் தடுத்து உன்னைக் காத்துக்கொள்ளுக' என்று கூறி, ஒரு கணையை ஏவினன்; தூடணன் கோரப்பற்களோடுகூடிய பெரிய தலையினை இழந்தான்.

கு :—சிலம்புதல் - ஒலித்தல். எயிறு என்றது கோரப்பற்களை. (161)

45, 52 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இச்செய்யுளின்பின் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

3132 (a) விழுந்த வெம்படை தூடணன் சிரமென வெருவுற்
றழிந்த சிந்தையர் திசைதிசை யோடின ரரக்கர்
எழுந்த காதலி னிடைவிடா திமையவர் முனிவர்
பொழிந்து பூமழை போற்றினர் இறைவனைப் புகழ்ந்தார்.

### கரன் இராமனொடு பொருதல் 3133–3155

3133. தம்பிதலை யற்றபடி யுந்தய ரதன்சே
★ யம்புபடை யைத்துணி படுத்தது மறிந்தான்
வெம்புபடை விற்கைவிச யக்கரன் வெகுண்டான்
கொம்புதலை கட்டிய கொலைக்கரி கடுப்பான்.

தம்பி தலையற்றபடியும், தயரதன் சேய்
அம்பு படையைத் துணிபடுத்ததும், அறிந்தான்;
வெம்பு படை விற்கை விசயக் கரன் வெகுண்டான்;
கொம்புதலை கட்டிய கொலைக்கரி கடுப்பான்.

பொ:—கொம்புகள் தலையில் உறுதியாக அமைக்கப்பட்ட கொலைத்தொழிலை மேற்கொண்ட மதயானையை ஒத்தவனும், கொதிக்கின்ற படையினையும் விற்பிடித்தகையினையும் வெற்றியினையும் உடையவனும் ஆகிய கரன், தன் தம்பி தூடணன் தலையற்ற தன்மையினையும், தசரதன் மகனாகிய இராமனுடைய அம்புகள் தன்படைகளைத் துணித்ததனையும் அறிந்து, சினந்து,

கு:—அறிந்தான் வெகுண்டான் என்பவை முற்றெச்சம். கரன் அறிந்து வெகுண்டு வளைத்தான் எனப் பின்வரும் செய்யுளோடிணைந்து முடியும். தம்பி என்றது தூடணனை. சேய் - மகன். விசயம் - வெற்றி. கொம்பு தலைகட்டிய என்பதற்கு மரக்கிளைகளை ஒடித்துத் தன் தலை மீது (பதிய)வைத்துக்கொண்ட என்று பொருள் கூறலுமாம். கடுத்தல் - ஒத்தல். (162)

3134. அந்தகனு முட்கிட வரக்கர்கட லோடுஞ்
சிந்துரம் வயப்புரவி தேர்திசை பரப்பி
இந்துவை வளைக்குமெழி லிக்குல மெனத்தான்
வந்துவரி விற்கைமத யானையை வளைத்தான்.

அந்தகனும் உட்கிட, அரக்கர் கடலோடும்
சிந்துரம் வயப் புரவி தேர்திசை பரப்பி,
இந்துவை வளைக்கும் எழிலிக்குலம் எனத் தான்
வந்து வரி வில் கை மதயானையை வளைத்தான்.

பொ:—யானைப்படை வெற்றிவாய்ந்த குதிரைப்படை தேர்ப் படைகளைத் திசைதொறும் திசைதொறும் பரவிநிற்கச்செய்து, இயமனும் அஞ்சும்படி, அரக்கர்கூட்டமாகிய கடலுடன் வந்து, சந்திரனை வளைக்கும் மேகக்கூட்டம்போலக் கட்டமைந்த வில்லைக் கையிலேந்திய மதயானை போல்வானை இராமனை வளைத்தான்.

கு:—அந்தகன் - இயமன். உட்கு - அச்சம். அரக்கர் கடல் என்றது உருவகம். சிந்துரம் - யானை. வயம்-வெற்றி. எழிலிக்குலம்- மேகக்கூட்டம். (163)

3135. அடங்கலில் கொடுந்தொழி
லரக்கரவ் வனந்தன்
படங்கிழி தரப்படித
னிற்பல விதப்போர்
கடங்கலுழ் தடங்களிறு
தேர்பரி கடாவித்
தொடங்கினர் நெடுந்தகையும்
வெங்கணை துரந்தான்.

அடங்கல் இல் கொடுந்தொழில் அரக்கர், அவ் அனந்தன்
படம் கிழிதரப் படிதனில் பலவிதப் போர்,
கடம் கலுழ் தடங்களிறு தேர் பரி கடாவித்
தொடங்கினர், நெடுந்தகையும் வெம் கணை துரந்தான்.

பொ :—அடங்குதல் இல்லாத தீய செயலாளராகிய அரக்கர், அந்த ஆதிசேடனுடைய படம் கிழியும்படி நிலத்தே மதப்பெருக்கு மிக்க பெரிய யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் செலுத்திப் பலவகைப் போர்களைத் தொடங்கினர்; பெருந்தன்மையினனான இராமனும் கொடிய அம்புகளை அவர்மீது செலுத்தினான்.

கு :—அனந்தன் - ஆதிசேடன். படைப்பெருக்கினாலாகிய பாரம் தாங்கலாற்றாது ஆதிசேடனது படம் கிழிவுற்றது என்க. கடம் - மதம். கலுழ்தல் - சிந்துதல். நெடுந்தகை என்றது இராமனை. துரத்தல் - செலுத்துதல். (164)

இராமன் கரன்படையைக் கொன்றொழித்தல் 3136-3139

3136. துடித்தன கடக்கரி துடித்தன பரித்தேர்
துடித்தன முடித்தலை துடித்தன தொடித்தோ
டுடித்தன மணிக்குடர் துடித்தன தசைத்தோ
றுடித்தன கழற்றுணை துடித்தன விடத்தோள்.

துடித்தன கடக் கரி, துடித்தன பரித் தேர்,
துடித்தன முடித் தலை, துடித்தன தொடித் தோள்,
துடித்தன மணிக் குடர், துடித்தன தசைத் தோல்
துடித்தன கழல் துணை, துடித்தன இடத்தோள்.

பொ :—(இராமனம்புகள் படுதலால்) மதயானைகள் (உறுப்பு அறுபட்டுத்) துடித்தன; தேரிற் பூட்டிய குதிரைகள் துடித்தன; மயிர் முடியினையுடைய அரக்கர் தலைகள் துடித்தன; தொடியணிந்த தோள்கள் துடித்தன; மணிக்குடல்கள் துடித்தன; தசையொடு கூடிய தோல்கள் துடித்தன; கால்கள் இரண்டும் துடித்தன; இடத் தோள்கள் துடித்தன.

கு :—துடித்தன என்ற பொருளுடைய ஒரு சொல்லே பல முறை பயின்றமையால் இச்செய்யுள் சொற்பொருட் பின்வரு நிலை என்னும் அணி தழுவியதாகும். முடி–மயிர்முடி. தொடி–தோள்வளை. தொடித் தோள் என்பது வலத்தோளை உணர்த்தியது. கழல் - கால். துணை - இரண்டு. (165)

**3137.** வாளின்வனம் வேலின்வனம் வார்சிலை வனந்திண்
டோளின்வன மென்றிவை துவன்றிநிரு தப்பே
ராளின்வன நின்றதனை யம்பின்வன மென்னுங்
கோளின்வன வன்குழுவி னிற்குறை படுத்தான்.

வாளின் வனம், வேலின் வனம், வார் சிலை வனம், திண்
தோளின் வனம் என்று இவை துவன்றி, நிருதப் பேர்
ஆளின் வனம் நின்றதனை, அம்பின் வனம் என்னும்
கோளின் வன வன் குழுவினில் குறை படுத்தான்.

பொ :—அரக்கராகிய பெரிய காலாட்களின் காடு, வாளின்காடும் வேலின்காடும் பெரிய வில்லின் காடும் வலியதோளின்காடும் என்று சொல்லப்பட்ட இவை செறிந்து நின்றதை, அம்பின்காடு என்று சொல்லப்படும் கொடிய அழகிய வலிய குழுவினால் வெட்டியழித்தான்.

கு :—மிகுதி தோன்ற வனம் என்றார். துவன்றுதல் - நிறைதல். வாளின் வனம் என்பதனுள் இன் சாரியை. பிறவும் அன்ன. நிருதப்பேர் ஆளின்வனம்–அரக்கர் காலாட்படையாகிய பெரியகாடு. கோள் - கொடுமை. வனம்–அழகு. குறைபடுத்தல் - அழித்தல். (166)

**3138.** தானுருவு கொண்டதரு மந்தெரி சரந்தான்
மீனுருவு மேருவை விலங்குருவு மேலாம்
வானுருவு மண்ணுருவும் வாளுருவி வந்தா
ரூனுருவு மென்னுமி துணர்த்தவு முரித்தோ.

தான் உருவு கொண்ட தருமம் தெரி சரம் தான்,
மீன் உருவும், மேருவை விலங்கு உருவும், மேலாம்
வான் உருவும், மண் உருவும், வாள் உருவி வந்தார்
ஊன் உருவும் என்னும் இது உணர்த்தவும் உரித்தோ.

பொ :—வடிவுகொண்ட தருமம் போல்பவனை இராமன் தெரிந்துவிடும் அம்புகள், நட்சத்திர மண்டலங்களை ஊடுருவிச்செல்லும்; மேருமலையைக் குறுக்கே உருவிச்செல்லும்; உயர்ந்த வான முகட்டை உருவிச்செல்லும்; நிலத்தினை உருவிச் செல்லும்; எனின், வாளை உறையினின்று உருவிக்கொண்டு போர்க்குவந்த அரக்கருடலை உருவும் என்பது சொல்லவும் வேண்டுமோ?

கு :—தான் இரண்டும் அசை. மீன் - நட்சத்திரம். விலங்கு - குறுக்கு. ஊன் என்றது அதனாலான உடலை. (167)

3139. அன்றிடை வளைந்தவர்
குலங்களொ டடங்கச்
சென்றுலை வுறும்படி
தெரிந்துகணை சிந்தா
மன்றிடை நலிந்துவலி
யோர்களெளி யோரைக்
கொன்றனர் நுகர்ந்தபொரு
ளிற்கடிது கொன்றான்.

அன்று இடை வளைந்தவர் குலங்களொடு அடங்கச்
சென்று உலைவுறும்படி தெரிந்து கணை சிந்தா,
மன்றிடை நலிந்து வலியோர்கள் எளியோரைக்
கொன்றனர் நுகர்ந்த பொருளில் கடிது கொன்றான்.

பொ :—அப்பொழுது, இராமன், போர்க்களத்தே தன்னை வளைத்த அரக்கர் தம் குலங்களோடு முழுதும் தொலைந்து கெடும்படி, அம்புகளை ஆராய்ந்து பொழிந்து, நீதிமன்றத்தே ஆற்றலுடையார் அஃதில்லாரை வருத்திக் கவர்ந்தபொருள், கவர்ந்தாரை அழித்தல் போல விரைந்து அழித்தான்.

கு :—உலைவுறுதல் - கெடுதல். சிந்தா - சிந்தி. மன்று, மன்றம் என்பன வழக்காராயும் இடமாகும். கொன்றனர் முற்றெச்சம். கொல்லுதல் - வருத்துதல். (168)

### கரன் தமியனாய்ச் சினந்து நிற்றல்

3140. கடுங்கர னெனப்பெயர் படைத்தகழல் வீர
னடங்கலு மரக்கரழி வுற்றிட வழன்ரு
ஞெடுங்கலி னிணக்குருதி யோதமதி னுள்ளா
னெடுங்கடலின் மந்தர மெனத்தமிய னின்ருன்.

கடுங் கரன் எனப் பெயர் படைத்த கழல் வீரன்,
அடங்கலும் அரக்கர் அழிவுற்றிட அழன்ருன்,
ஒடுங்கல் இல் நிணக் குருதி ஓதம் அதின் உள்ளான்,
நெடுங் கடலின் மந்தரம் எனத் தமியன் நின்ருன்.

பொ :—கொடிய கரன் எனப் பெயர்பூண்ட வீரக்கழலணிந்த வீரன், அரக்கர் அனைவரும் அழிய, அதனல் சினந்து, குறையாத நிணத்தொடுகூடிய குருதிவெள்ளத்தே உள்ளவனாய், பெரிய கடலிலே மந்தரமலைபோலத் தனித்து நின்ருன்.

கு :—அடங்கலும் - எல்லாம், அரக்கரடங்கலும் என மாற்றுக. அழலுதல் - கொதித்தல். ஓதம் - வெள்ளம் ; கடலும் ஆம். பாற் கடலைத் தாழியாகக்கொண்டு, மந்தரமலையை மத்தாக அதில் நாட்டி அமுதெழக் கடைத்தபோது மந்தரம் ஆழ்ந்து சுழலாதாக, அது கண்ட தேவர், செயலழிந்து ஒதுங்கினர் ; பின்னர்த் தேவர் வேண்டு தலால் திருமால் கூர்மமாகித் தாங்க மந்தரமலை சுழன்றது என்பது புராணகதை. கடலிடைத் தனித்து நின்ற மந்தரம், தன்னெடுவந்த படைமுழுதும் இறந்துபட இரத்தவெள்ளத்தில் தனித்துநின்ற கரனுக்கு உவமை. (169)

### கரன் தேரூர்ந்து போர்க்கு வருதல்

3141. செங்கணெரி சிந்தவரி விற்பகழி சிந்தப்
பொங்குகுரு திப்புணரி யுட்புகையு நெஞ்சன்
கங்கமொடு காகமிடை யக்கடலி ஞேடும்
வங்கமென லாயதொரு தேரின்மிசை வந்தான்.

செங்கண் எரி சிந்த, வரி வில் பகழி சிந்தப்
பொங்கு குருதிப் புணரியுள் புகையும் நெஞ்சன்,
கங்கமொடு காகம் மிடையக் கடலின் ஓடும்
வங்கம் எனலாயது ஒரு தேரின்மிசை வந்தான்.

பொ :—நின்ற கரன், தன் சிவந்த கண்கள் நெருப்பைச் சிதற, கட்டமைந்த வில் அம்புகளைப் பொழியக் கனலும் மனமுடையனுய்ப் பருந்தும் காக்கைகளும் நெருங்கப் பெருக்கெடுத்த இரத்தக்கடலுள், கடலிற் செல்லும் மரக்கலம்போன்றதொரு தேரின்மேல் இராமனே நோக்கி வந்தான்.

கு :—குருதி வெள்ளத்திடைப் பருந்தும் காக்கையும் நெருங்கி வர விரைந்து செல்லும் தேர்க்கு, கடலிடைப் பருந்தும் காக்கையும் மொய்க்க விரைந்து செல்லும் கப்பல் உவமை. கங்கம் - கழுகு. மிடைதல் - நெருங்குதல். வங்கம் - கப்பல். கழுகும் காகமும் இறைச்சி முதலியவற்றை யுண்ணும் விருப்பால் மொய்த்தன என்க. (170)

### இராமன் கரனை எதிர்தல்

3142. செறுத்திறுதி யிற்புவனி
தீயவெழு தீயின்
மறத்தின்வயி ரத்தொருவன்
வந்தணுகு முந்தைக்
கறுத்தமணி கண்டர்கட
வுட்சிலை கரத்தா
லிறுத்தவனும் வெங்கணை
தெரிந்தன னெதிர்ந்தான்.

செறுத்து இறுதியில் புவனி தீய எழு தீயின்
மறத்தின் வயிரத்து ஒருவன் வந்து அணுகும் முந்தைக்
கறுத்த மணிகண்டர் கடவுட் சிலை கரத்தால்
இறுத்தவனும், வெம் கணை தெரிந்தனன் எதிர்ந்தான்.

பொ :—ஊழிக்காலத்தில் உலகம் அழியச் சினந்தெழும் நெருப்புப்போல, வீரத்தோடும் வெகுளியோடும் தனியனுய்க் கரன் வந்து தன்னை நெருங்கு முன்னே, கறுத்த அழகிய கழுத்தினையுடைய சிவபெருமானுக்குரிய தெய்வத்தன்மை வாய்ந்த வில்லைத் தன் கையால் (வளைத்து) ஒடித்த இராமனும் கொடிய அம்புகளை ஆய்ந்து தொடுத்துக் கொண்டு அவனை எதிர்ந்தான்.

கு :—செறுத்து - சினந்து. இறுதி - ஊழிக்காலம். வயிரம் - சினம்; பகைமையும் ஆம். ஒருவன் என்றது கரனை. முந்தை - முன்னே. மணிகண்டர் என்றது சிவபெருமானை. சிலை - வில்.

இறுத்தல் - ஒடித்தல். தெரிதல் - ஆராய்தல். கரனுக்கு ஊழித்தீ உவமை. இச்செய்யுளிற் சுட்டிய வில்லிறுத்த செய்தி பாலகாண்டத்துக் கார்முகப் படலத்துப் பேசப்பட்டது. (171)

### கரனும் இராமனும் பொருதல் 3143–3144

**3143.** தீயுருவ கால்விசைய செவ்வியன வெவ்வா
யாயிரம் வடிக்கணை யரக்கர்பதி யெய்தான்
றீயுருவ கால்விசைய செவ்வியன வெவ்வா
யாயிரம் வடிக்கணை யிராமனு மறுத்தான்.

தீ உருவ, கால் விசைய, செவ்வியன, வெவ்வாய்
ஆயிரம் வடிக்கணை அரக்கர்பதி எய்தான்;
தீ உருவ, கால் விசைய, செவ்வியன, வெவ் வாய்
ஆயிரம் வடிக் கணை இராமனும் அறுத்தான்.

பொ :—அரக்கர் தலைவனான கரன், நெருப்பின் உருவுடையனவும், காற்றின் விரைவுடையனவும், கோட்டம் அற்றனவும், கொடியவாயினையுடையனவும் ஆன ஆயிரம் கூர்மைவாய்ந்த அம்புகளை இராமன்மேல் எய்தானாக, இராமனும், அவற்றை நெருப்பின் உருவுடையனவும் காற்றின் விரைவுடையனவும் கோட்டம் அற்றனவும் கொடிய வாயினையுடையனவும் ஆகிய கூரிய ஆயிரம் அம்புகளால் துணித்தான்.

கு :—உருவ - உருவம் உடையவை. கால் - காற்று. விசை - விரைவு. வடி - கூர்மை. (172)

**3144.** ஊழியெரி யிற்கொடிய பாய்பகழி யொன்பா
னேழுல கினுக்குமொரு நாயகனு மெய்தான்
சூழ்சுடர் வடிக்கணை யவற்றெதிர் தொடுத்தே
யாழிவரி விற்கரனு மன்னவை யறுத்தான்.

ஊழி எரியில் கொடிய பாய் பகழி ஒன்பான்
ஏழ் உலகினுக்கும் ஒரு நாயகனும் எய்தான்;
சூழ் சுடர் வடிக்கணை அவற்று எதிர் தொடுத்தே
ஆழி வரி வில் கரனும் அன்னவை அறுத்தான்

பொ :—ஏழுலோகங்களுக்கும் ஒரே தலைவனான இராமனும், ஊழித்தீயினும் கொடிய விரைந்துசெல்லும் ஒன்பது அம்புகளை(க் கரன்மேல்) எய்தான்; வளைந்த கட்டமைந்த வில்லையுடைய கரனும், இராமன் கணைகளுக்கு எதிராக ஒளிவளைத்த கூரிய அம்புகளை எய்து அவ்வொன்பது அம்புகளையும் துணித்தான்.

கு :—ஊழி - உலக முடிவு காலம். ஊழியெரி - உலகமுடிவு காலத்தில் எழும் நெருப்பு. ஒன்பான் - ஒன்பது. இராமனை, இறைவனமிசமாகக் கருதி, 'ஏழுலகினுக்குமொரு நாயகன்' என்றார். ஆழி- வட்டம்; அஃது இங்கே வளைவை உணர்த்தி நின்றது. (173)

## கரன் கணைமாரியால் இராமனை மறைக்க, இராமன் வெகுளுதல்

**3145.** கள்ளவினை மாயவமர் கல்வியின் விளைத்தான்
வள்ளலுரு வைப்பகழி மாரியின் மறைத்தா
னுள்ளமுலை வுற்றமர ரோடின ரொளித்தார்
வெள்ளெயி றிதழ்ப்பிறழ வீரனும் வெகுண்டான்.

கள்ள வினை மாய அமர் கல்வியின் விளைத்தான்,
வள்ளல் உருவைப் பகழிமாரியின் மறைத்தான்;
உள்ளம் உலைவுற்று அமரர் ஓடினர், ஒளித்தார்;
வெள் எயிறு இதழ்ப் பிறழ வீரனும் வெகுண்டான்.

பொ :—(கரன் தான் பயின்ற) கல்வியால் வஞ்சகச் செயலொடு கூடிய மாயப்போரைச் செய்து, இராமனுடலை அம்பு மழையால் மறைத்தான்; அதுகண்ட தேவர்கள் மனம் மடிந்து ஓடி ஒளித்தனர்; இராமனும் வெள்ளிய பற்கள் உதட்டின்மேல் பெயரச் சினந்து,

கு :—வள்ளல் வீரன் என்றது இராமனை. பகழிமாரி - அம்புமழை. பிறழ - பெயர. வெகுண்டான் என்பது, தோளுற வாங்கினான் என வரும் பாட்டொடு தொடர்ந்து முடியும். (174)

## இராமன் வில் ஒடிதல்

**3146.** முடிப்பெ னின்றொரு மொய்கணை யாலெனத்
★ தொடுத்து நின்றுயர் தோளுற வாங்கினான்
பிடித்த திண்சிலை பேரகல் வானிடை
யிடிப்பி னோசை படக்கடி திற்றதே.

முடிப்பென் இன்று ஒரு மொய் கணையால் எனத்
தொடுத்து நின்று, உயர் தோள் உற வாங்கினன்;
பிடித்த திண் சிலை, பேர் அகல் வானிடை
இடிப்பின் ஓசை படக் கடிது இற்றதே.

பொ :—'இப்பொழுதே வலிய ஓர் அம்பால் இவனைக் கொல்வேன்' என்று நினைந்து, அம்பினை நாண்கயிற்றில் இணைத்துத் தோள் அளவும் வர இழுக்க, (அவ்வளவில்) இராமன் பிடித்த வலிய வில், பெரிய அகன்ற வானின்கண் இடிமுழக்கம்போல் ஒலியெழும்படி விரைவில் ஒடிந்தது.

கு :—முடித்தல் - அழித்தல், கொல்லல். மொய் - வலிமை. இடிப்பு - இடிமுழக்கம். இறுதல் - ஒடிதல். (175)

இராமனிலைகண்ட தேவர் துயருறல்

3147. வெற்றி கூறிய வானவர் வீரன்வி
லிற்ற போது துணுக்கமுற் றேங்கினர்
மற்றோர் வெஞ்சிலை யின்மை மனக்கொளா
வற்ற தாலெம் வலியென வஞ்சினர்.

வெற்றி கூறிய வானவர், வீரன் வில்
இற்றபோது, துணுக்கம் உற்று ஏங்கினர்,
மற்று ஓர் வெம் சிலை இன்மை மனக்கொளா,
'அற்றதால் எம் வலி' என அஞ்சினர்.

பொ :—இராமன் வெற்றியை (முன்) பாராட்டிப் பேசிய தேவர்கள், அவன் வில் ஒடிந்தபொழுது, நடுங்கி நிலைகுலைந்தவராய், அவன்பால் வேறொருவில் இல்லாமையை நினைந்து, 'எங்கள் ஆற்றல் ஒழிந்தது' என்று அஞ்சுவாராயினர்.

கு :—துணுக்கம் - நடுக்கம். ஏக்கம் - மனக்கலக்கம். (176)

வருணன் கொடுத்த வில்லை இராமன் பெறுதல் 3148–3150

3148. என்னு மாத்திரத் தேந்திய கார்முகஞ்
சின்ன மென்றுந் தனியென்றுஞ் சிந்தியான்
மன்னர் மன்னவன் செம்மன் மரபினற்
பின்னு றத்தன் பெருங்கர நீட்டினன்.

என்னும் மாத்திரத்து, ஏந்திய கார்முகம்
சின்னம் என்றும், தனி என்றும், சிந்தியான்,
மன்னர் மன்னவன் செம்மல், மரபினுல்
பின் உறத் தன் பெருங்கரம் நீட்டினுன்.

பொ :—'எம் வலி அற்றது' என்று தேவர் கூறின அளவில், அரசர்க்கரசனுன தசரதன் மகன் இராமன், தான் கைக்கொண்ட வில் ஒடிபட்டமையும் தான் தனியனுயினமையும் நினையாமல், முறையால் தன் பெரிய கையினைப் பின்னே பொருந்த நீட்டினுன்.

கு :—கார்முகம் - வில். சின்னம் - சிதைவு. மன்னர் மன்னவன் - அரசர்க்கரசனுன தசரதன். மரபாவது போர்செய்யும் வீரர் தம் கைப்படை அற்ற நிலையில், தன் பின் நின்று அவ்வப்போது வேண்டும் படைக்கலங்களை உதவும் பணியாளன் பக்கம் கைநீட்டி வேண்டும் படைக்கலங்களைப் பெறும் முறையாம். (177)

**3149.** கண்டு நின்று கருத்துணர்ந் தானென
வண்டர் நாதன் றடக்கையி னத்துணை
பண்டு போர்மழு வாளியைப் பண்பினுற்
கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்.

கண்டு நின்று, கருத்து உணர்ந்தான் என,
அண்டர் நாதன் தடக் கையின், அத்துணை,
பண்டு போர் மழுவாளியைப் பண்பினுல்
கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்.

பொ :—(அவ்வாறு இராமன் கைநீட்டியதனைக்) கண்டு, (அவன் பின்)நின்று, இராமன் கருத்தினை அறிந்தவன்போல, அப்பொழுதே, தேவர் தலைவனுன இராமனுடைய பெரிய கையில், முன்னெரு நாள் போரில் மழுப்படையை ஆள்பவனுன பரசுராமனை வீரப்பாட்டினுல் இராமன் வென்று கொண்டவில்லை வருணன் கொடுத்தான்.

கு :—இறைவனமிசமாதலின் இராமனை, 'அண்டர் நாதன்' என்ருர் ; முன் 'ஏழுலகினுக்குமொருநாயகன்' (3144) என்று ஆசிரியர் கூறியதும் இங்கு நோக்கத்தகும். அத்துணை - அப் பொழுதே. மழு ஆளி - மழுப்படையை ஆள்பவன் ; பரசுராமன். பண்பு - வீரப்பாடு. இராமன் பரசுராமனிடம் கொண்ட வில்லை வருணனிடம் கொடுத்த செய்தி, 'வாமவேல் வருணனை மான வெஞ்சிலை, சேமியென் றுதவித்தன் சேனை யார்த்தெழ, நாமநீ

ரயோத்திமா நகரநண்ணினன்' என்று முன் (1393) பேசப் பட்டது. (178)

3150. கொடுத்த வில்லையக் கொண்ட னிறத்தின
னெடுத்து வாங்கி வலங்கொண் டிடக்கையிற்
பிடித்த போது நெறிபிழைத் தோர்க்கெலாந்
துடித்த வாலிடக் கண்ணொடு தோளுமே.

கொடுத்த வில்லை, அக் கொண்டல் நிறத்தினன்,
எடுத்து வாங்கி, வலம்கொண்டு, இடக்கையில்
பிடித்த போது, நெறி பிழைத்தோர்க்கு எலாம்
துடித்தவால், இடக் கண்ணொடு தோளுமே.

பொ :—மேகம்போன்ற நிறமுடைய இராமன், வருணன் கொடுத்தவில்லை வலக்கையில் வாங்கி மேற்கொண்டு, இடக்கையால் பிடித்தபோது நெறிதவறினோர்க்கெல்லாம் இடக்கண்ணும் இடத் தோளும் துடித்தன.

கு :—கொண்டல் நிறத்தினன் என்றது இராமனை. வலம் - வலக்கை. நெறிபிழைத்தோர் என்றது அரக்கரை. இடக்கண்ணும் இடத்தோளும் துடித்தல், பின் நிகழ இருக்கும் தீமையை முன் அறி விக்கும் குறி. (179)

இராமன் கணைகளால் கரன்தேர் அழிதல்

3151. ஏற்றி னனிமை யாமு னெடுத்தது
கூற்றினருங் குனிக்கக் குனித்தெதி
ராற்றி னடலாழியந் தேர்சர
நூற்றின னுண் பொடிபட நூறினன்.

ஏற்றினன் இமையாமுன் எடுத்தது,
கூற்றினரும் குனிக்கக் குனித்து, எதிர்
ஆற்றினன், அடல் ஆழியந்தேர் சரம்
நூற்றினல் நுண் பொடி பட நூறினன்.

பொ :—(இராமன்) கைக்கொண்ட அவ்வில்லைக் கண் இமைக்கு முன்னே, கூற்றுவனும் மகிழ்ந்து கூத்தாட வளைத்து, நாணேற்றி, பகைத்துப் போர்செய்த கரனுடைய சக்கரம் பூண்ட தேரை, நூறு கணைகளால் நுண்ணிய துகளாகும்படி அழித்தான்.

கு :—கூற்றினரும் குனிக்க, இமையாமுன் எடுத்தது குனித்து ஏற்றினன் என இயையும். ஏற்றினன் முற்றெச்சம். குனிக்க - கூத்தாட. குனித்து - வளைத்து. கூற்றினர் குனித்தது, தான் வருந்திக் கைக்கொள்ளவேண்டிய உயிர்களெல்லாம் இராமனம்பு களால் எளிதே தன் பால் வந்தடைவதோர் வாய்ப்பு வந்தமையால். எதிர்ஆற்றினன் - பகைத்துப் போர் செய்த கரன். நூறுதல் - அழித்தல். (180)

கரன் வானிடை நின்று பொருதல்

3152. எந்தி ரத்தடந் தேரிழந் தானிழிந்
தந்த ரத்திடை யார்த்தெழுந் தம்பெலாஞ்
சுந்த ரத்தனி வில்லிதன் றோளெனு
மந்தரத்தின் மழையின் வழங்கினன்.

எந்திரத் தடம் தேர் இழந்தான், இழிந்து,
அந்தரத்திடை ஆர்த்து எழுந்து, அம்பெலாம்
சுந்தரத் தனி வில்லிதன் தோள் எனும்
மந்தரத்தில் மழையின் வழங்கினன்.

பொ :—பெரிய எந்திரத் தேரினை இழந்த கரன், அத்தேரி னின்று இறங்கி, ஆகாயத்திலே ஆரவாரித்தெழுந்து, அழகிய ஒப் பற்ற வில்லாளியான இராமனுடைய தோள் என்னும் மந்தரமலையில், அம்புவகைகளையெல்லாம் மழைபோலப் பொழிந்தான்.

கு :—இழிந்து - இறங்கி. அந்தரம் - ஆகாயம். வில்லி என்றது இராமனை. எழுந்து வழங்கினன் என்க. தோள் எனும் மந்தரம் என்றது உருவகம். (181)

இராமன் வாளியால் கரன் வலக்கை அறுபடுதல்

3153. தாங்கி நின்ற தயரத ராமனுந்
தூங்கு தூணியி டைச்சுடு செஞ்சரம்
வாங்கு கின்ற வலக்கையொர் வாளியால்
வீங்கு தோளொடு பாரிடை வீழ்த்தினன்.

தாங்கி நின்ற தயரத ராமனும்,
தூங்கு தூணியிடைச் சுடு செஞ்சரம்

வாங்குகின்ற வலக்கை ஓர் வாளியால்
வீங்கு தோளொடு பாரிடை வீழ்த்தினன்.

பொ :—கரன் ஏவிய அம்பு மழையினைத் தாங்கிக்கொண்டு (ஆற்றல் அழியாது) நின்ற தயரதராமனும், அம்புப்புட்டிலில் தங்கிய கொடிய அம்புகளை எடுக்கின்ற கரனுடைய வலக்கையை ஓர் அம்பினால் பருத்த தோளோடு அறுத்து நிலத்தில் வீழ்த்தினன்.

கு :—தூணி - அம்புக்கூடு. தூங்குதல் - தங்குதல்' தூணியிடைத் தூங்கு செஞ்சரம் என மாறிக்கூட்டுக. (182)

### கரன் இடக்கையால் போர் செய்தல் 3154-3155

3154. வலக்கை வீழ்தலு மற்றைக்கை யால்வெற்றி
யுலக்கை வானத் துருமென வோச்சின
னிலக்கு வற்குமுன் வந்தவி ராமனும்
விலக்கி னனொரு வெங்கதிர் வாளியால்.

வலக்கை வீழ்தலும், மற்றைக் கையால், வெற்றி
உலக்கை, வானத்து உரும் என ஓச்சினன் ;
இலக்குவற்கு முன் வந்த இராமனும்,
விலக்கினன் ஒரு வெம் கதிர் வாளியால்.

பொ :—கரன், தன் வலக்கை அற்று வீழ்தலும், இடக்கையால், வானினின்று தாக்கும் இடிபோல உலக்கையை எறிந்தான் ; இலக்குவன் முன் பிறந்த இராமனும், கொடிய விளக்கமுள்ள ஓர் அம்பால், அவ்வுலக்கை வீச்சை மாற்றினன்.

கு :—ஓச்சுதல் - எறிதல். (183)

3155. விராவ ருங்கடு வெள்ளெயி றிற்றபின்
னராவ ழன்ற தனையவ னாற்றலான்
மராம ரங்கையில் வாங்கிவந் தெய்தின
னிராம னங்கொர் தனிக்கணை யேவினன்.

விராவு அரும் கடு வெள் எயிறு இற்ற பின்
அரா அழன்றது அனையவன், ஆற்றலால்
மராமரம் கையில் வாங்கி வந்து எய்தினன்,
இராமன் அங்கு ஓர் தனிக் கணை ஏவினன்.

பொ :—நஞ்சுபொருந்திய அரிய வெள்ளிய பற்களை இழந்த நிலையில் வெகுண்ட பாம்புபோல்பவனான கரன், வல்லமையால் ஒரு மராமரத்தைப் பேர்த்து எடுத்துக்கொண்டு இராமனெதிர்வந்து கிட்டினான் ; அப்போது இராமன் ஒப்பற்ற ஓர் அம்பினை ஏவினான்.

கு :—கடு விராவு அரும் வெள்ளெயிறு என இயையும். கடு - நஞ்சு, விராவுதல் - பொருந்துதல். எயிறு - பல். அரா - பாம்பு. அழலுதல் - சினத்தல். (184)

## கரன் இறந்துபடுதல்

**3156.** வரம ரக்கன் படைத்தலின் மாயையி
னுரமு டைத்தன்மை யாலுல கேழையும்
பரமு ருக்கிய பாவத்தி னால்வலக்
கரமெ னக்கரன் கண்டமுற் றானரோ.

வரம் அரக்கன் படைத்தலின், மாயையின்
உரம் உடைத் தன்மையால், உலகு ஏழையும்
பரம் முருக்கிய பாவத்தினால், வலக்
கரம் எனக் கரன் கண்டம் உற்றான் அரோ.

பொ :—வரம்படைத்தமையாலும், மாயப் பேராற்றலுடைமையாலும், இராவணன், ஏழுலகத்துமுள்ள உயிர்களை முன் வருத்திய பாவத்தினால், அவன் வலக்கரம் அற்றாற்போலக் கரன் கழுத்து அறுபட்டான்.

கு :—அரக்கன் என்றது இராவணனை. வரம்படைத்தலின் மாயையின் உரமுடைத்தன்மையால் உலகேழையும் பரமுருக்கிய பாவத்தினால் என்று கூறுதலால், அரக்கன் என்பதற்கு இராவணன் என்று பொருள் வரையலாயிற்று. முன் தாடகை இறந்து வீழ்ந்ததனைக் கூறுமிடத்து, 'தலைகள் தோறும் முடியுடையரக்கற்கு அந்நாள் முந்தி உற்பாதமாகப் படியிடையற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்.' ( 415) எனவும், சூர்ப்பணகை மூக்கு முதலியவற்றை இளையவன் நீக்கியதனைக் கூறுமிடத்து, 'மூக்கினை நீக்கிய முறைமை...இராவணன் மகுடத் தலைதுமித்தற்கு நாட்கொண்டதொத்ததோர் தன்மை' (2924) எனவும் கூறியதுபோல இங்கும் 'அரக்கன் வலக்கரம் எனக் கரன் கண்டம் உற்றான்' என்றார், பரம் - முன். முருக்குதல் - அழித்தல். கண்டம் - கழுத்து. (185)

### வானவர் மலர்மழை பொழிய இராமன் விளங்குதல்

3157. ஆர்த்தெ ழுந்தன ராடினர் பாடினர்
தூர்த்த மைந்தனர் வானவர் தூமலர்
தீர்த்த னும்பொலிந் தான்கதி ரோன்றிசை
போர்த்த மென்பனி போக்கிய தென்னவே.

ஆர்த்து எழுந்தனர், ஆடினர், பாடினர்,
தூர்த்து அமைந்தனர் வானவர் தூமலர்;
தீர்த்தனும் பொலிந்தான், கதிரோன் திசை
போர்த்த மென் பனி போக்கியது என்னவே.

பொ :—(கரன் கழுத்தறுபட்டதுகண்ட) தேவர், மகிழ்ச்சி மிகுதியால் ஆரவாரித்தெழுந்து ஆடிப் பாடித் தூய கற்பக மலர்களை (இராமன்மேல்) சொரிந்து வாழ்த்தி அமைவாராயினர்; தூயவனான இராமனும், சூரியன் திசைதொறும் பரவி மறைத்த மெல்லிய பனியைப் போக்கினாற்போல (அரக்கரைப்போக்கி) விளங்குவானாயினன்.

கு :—வானவர், எழுந்தனர் ஆடினர் பாடினர் தூமலர் தூர்த்து அமைந்தனர்; தீர்த்தனும் கதிரோன் பனிபோக்கிய தென்னப் பொலிந்தான் என இயையும். எழுந்தனர் ஆடினர் பாடினர் என்பவை முற்றெச்சம். தீர்த்தன் - தூயோன்; இராமன். பரவி மறைத்த அரக்கர்க்குப் பனியும், பகைபோக்கி விளங்கிய இராமனுக்குப் பனி போக்கி விளங்கிய கதிரோனும் உவமை. (186)

### இராமன் சீதையை அணுகுதல்

3158. முனிவர் வந்து முறைமுறை மொய்ப்புற
வினிய சிந்தை யிராமனு மேகினா
னனிக வெஞ்சமத் தாருயிர் போகத்தான்
றனியி ருந்த வுடலன்ன தையல்பால்.

முனிவர் வந்து முறை முறை மொய்ப்புற,
இனிய சிந்தை இராமனும், ஏகினான்;
அனிக வெம் சமத்து ஆர் உயிர் போகத் தான்
தனி இருந்த உடல் அன்ன தையல்பால்.

பொ :—நன்மனம் உடைய இராமனும், முனிவர்கள் முறைமுறை வந்து நெருங்க, படை வகுப்போடுகூடிய போர்க்களத்திலே உயிர் போகத் தனித்திருந்த உடல்போல்பவளான சீதையிடம் சென்றான்.

கு :—இனிமை - நன்மை. சிந்தை - நினைவு; அறிவும் ஆம். அனிகம் - படை. இராமனும் முனிவர் மொய்ப்புற, தையல் பால் ஏகினான் என இயையும். (187)

இளவலும் சீதையும் இராமனைப் போற்றல்

3159. விண்ணி னீங்கிய வெய்யவர் மேனியிற்
புண்ணி னீரும் பொடிகளும் போயுக
வண்ணல் வீரனைத் தம்பியு மன்னமுங்
கண்ணி னீரினிற் பாதங் கழுவினார்.

விண்ணில் நீங்கிய வெய்யவர் மேனியில்
புண்ணின் நீரும் பொடிகளும் போய் உக,
அண்ணல் வீரனைத் தம்பியும் அன்னமும்
கண்ணின் நீரினில் பாதம் கழுவினார்.

பொ :—மேலுலகிற்சென்ற கொடிய அரக்கருடைய உடற்புண்ணிலிருந்து பெருகிய குருதியும் புழுதியும் நீங்கிக் கழியும்படி, பெருமையிற் சிறந்த வீரனான இராமனைத் தம்பியாகிய இலக்குவனும் அன்னம்போல்பவளான சீதையும் தங்கள் கண்ணீரால் திருவடி விளக்குவாராயினர்.

கு :—இலக்குவனும் சீதையும், போரில் இராமன் திருமேனியில் உண்டான புண்களை யெண்ணி, அவலக்கண்ணீரும் கன்னல் மூன்றில் கரன் மடிய வென்ற இராமன் வின்னலங்கண்டு உவகைக் கண்ணீரும் உகுப்பாராயினர் என்றவாறு. (188)

விண்ணவர்போற்ற வீரன் இருந்தமை

3160. மூத்த மொன்றின் முடிந்தவர் மொய்புணீர்
நீத்த மோடி நெடுந்திரை நேருறக்
கோத்த வேலைக் குரலென வானவ
ரேத்த வீர னினிதிருந் தானரோ.

மூத்தம் ஒன்றில் முடிந்தவர் மொய் புண் நீர்
நீத்தம், ஓடி நெடுந்திரை நேர் உறக்
கோத்த வேலைக் குரல் என வானவர்
ஏத்த, வீரன் இனிது இருந்தான் அரோ.

பொ :—ஒரு முகூர்த்த காலத்துள் (தன்னேடெதிர்த்து) இறந்த அரக்கருடைய செறிந்த புண்ணினின்று பெருகிய குருதி வெள்ளம், பெருங்கடலிற் சென்று பொருந்த, (அரக்கரழிவுகண்டு) தேவர்கள் இணைந்த கடலொலிபோலத் துதிக்க, இராமன் இனிதுதங்கினன்.

கு :—மூத்தம் - முகூர்த்தம் என்பதன்திரிபு; இது மூன்றே முக்கால் நாழிகைகொண்டது என்பர். இராமன், கரனை அவன் படையொடு மூன்று நாழிகையளவில் அழித்து வெற்றிகொண்டனன் என்பது, 'கரன் முதற் கானவீரர், எல்லொன்று கமலச் செங்கண் இராமனென் றியைந்த வேந்தல், வில்லொன்றிற் கடிகை மூன்றில் ஏறினர் விண்ணில் என்ருள்' (மாரீசன் வதைப். 64), 'இன்னல் அம்பர வேந்தற்கியற்றிய, பன்னலம் பதினுலாயிரப்படை, கன்னல் மூன்றிற் களப்படக் கால்வனே, வின்னலம்' (சுந்தர. 351) என்று ஆசிரியர் பின் கூறுதலால் அறியப்படும். கரன்வதை ஒன்றரை முகூர்த்த காலத்துள் நிகழ்ந்ததென்று வான்மீகம் கூறும். முடிதல் - சாதல். மொய் புண் - செறிந்த புண். நீத்தம் - வெள்ளம். நேர்தல்- பொருந்துதல். கோத்தல் - இணைத்தல். வேலை - கடல். குரல் - ஒலி. (189)

## சூர்ப்பணகை கரனுடலைத்தழுவி அழுதல்

3161. இங்கு நின்ற துரைத்து மிராவணன்
றங்கை தன்கை வயிறு தகர்த்தனள்
கங்கு லன்ன கரனைத் தழீஇநெடும்
பொங்கு வெங்குரு திப்புரண் டாளரோ.

இங்கு நின்றது உரைத்தும்; இராவணன்
தங்கை, தன்கை வயிறு தகர்த்தனள்,
கங்குல் அன்ன கரனைத் தழீஇ, நெடும்
பொங்கு வெம் குருதிப் புரண்டாள் அரோ.

பொ :—இவ்விடத்து எஞ்சிய நிகழ்ச்சிகளையும் கூறுவோம், இராவணன் தங்கையாகிய சூர்ப்பணகை, தன் கைகளால் வயிற்றில் அடித்துக்கொண்டு, இருள்போன்ற கரிய நிறமுடைய கரனுடலைத் தழுவிப் பெரிய மிக்கெழுகின்ற வெய்ய குருதியிற் புரள்வாளாயினள்.

கு :—'இங்கு நின்றது உரைத்தும்' என்பது கவிக்கூற்று. நின்றது - எஞ்சியது; மேல்நிகழ்ச்சி. உரைத்தும் - உரைப்போம். கரன் என்றது கரனுடலை. புரண்டாள் போயினள் என அடுத்து வரும் பாடலொடு முடியும். அரோ - அசை. (190)

### சூர்ப்பணகை போதல்

3162. ஆக்கி னேன்மனத் தாசையவ் வாசையென்
மூக்கி ேனாடு முடிய முடிந்திலேன்
வாக்கி னுலுங்கள் வாழ்வையும் நாளையும்
போக்கி னேன்கொடி யேனென்று போயினாள்.

'ஆக்கினேன் மனத்து ஆசை; அவ் ஆசை, என்
மூக்கினோடு முடிய, முடிந்திலேன்;
வாக்கினால் உங்கள் வாழ்வையும் நாளையும்
போக்கினேன் கொடியேன்' என்று போயினாள்.

பொ:—'கொடியேன் மனத்தில் ஆசைகொண்டேன். அவ் வாசை என் மூக்கொடு அழிய, நான் இறந்துபடாமல், என்வாக்கினால் உங்கள் இன்ப வாழ்வையும் வாணாளையும் போக்கினேன்' என்று சென்றாள்.

கு:—'வாக்கினால் உங்கள் வாழ்வையும் நாளையும் போக்கினேன்' என்றது, கரன் முதலியோருடலை நோக்கிச் சூர்ப்பணகை கூறியது. சூர்ப்பணகை என்னும் எழுவாய் முன்பாடலிற் பயின்ற 'இராவணன் தங்கை' என்ற தொடரால் பெறப்படும். (191)

### சூர்ப்பணகை இலங்கையை அடைதல்

3163. அலங்கல் வேற்கை யரக்கரை யாசறக்
குலங்கள் வேரறுப் பான்குறித் தாளுயிர்
கலங்கு சூறைவன் போர்நெடுங் காலென
விலங்கை மாநகர் நொய்திற்சென் றெய்தினாள்.

அலங்கல் வேல் கை அரக்கரை ஆசு அறக்
குலங்கள் வேர் அறுப்பான் குறித்தாள், உயிர்
கலங்கு சூறை வன் போர் நெடுங் கால் என
இலங்கை மாநகர் நொய்தின் சென்று எய்தினாள்.

பொ:—மாலைசூட்டிய வேற்படையேந்திய கையினையுடைய அரக்கர்களைப் பற்றுக்கோடழியக் குலங்களோடு வேரறுத்தொழிக்

கும்படி எண்ணியவளாகிய சூர்ப்பணகை, உயிர்கள் நிலைகலங்கும் சூறை என்னும் பேரினையுடைய வலிய நெடிய காற்றைப்போல இலங்கையென்னும் பெரிய நகரத்தை விரைந்துசென்று அடைந்தாள்.

கு:—அலங்கல் - மாலை. ஆசு - பற்றுக்கோடு. அரக்கர் அடியோடழிதற்குச் சூர்ப்பணகையே மூலகாரணமாய் நின்றமையின், அவளை, 'அரக்கரை யாசறக் குலங்கள் வேரறுப்பான் குறித்தாள்' என்றார். கால் - காற்று. நொய்து - விரைவு. (192)

கரன்வதைப் படலம் முற்றிற்று.

---

## ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும், அச்சுப்பிரதிகளும் அவற்றின் குறியீடுகளும்

| குறியீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | தஞ்சை சரஸ்வதி மகால் | 367–8 | |
| 2 | ,, | 369 | |
| 3 | ,, | 370 | |
| 4 | ,, | 371 | |
| *5 | ,, | 372 | |
| 8 | ,, | 378 | |
| 12 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 30 | |
| 13 | ,, | 42 | |
| 15 | ,, | 471 | |
| 16 | ,, | 472 | |
| 17 | ,, | 672 | |
| 18 | ,, | 677 | |
| 19 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 20 | ,, | | |
| 21 | ,, | | |
| 22 | ,, | | |
| 23 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1150 | |
| 24 | திரு. C. கணேசையர், யாழ்ப்பாணம். | | |
| 25 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | சடாயுகாண் படலம் 31-ஆம் பாடல் வரை உள்ளது. |
| 26 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 27 | |
| 27 | ,, | 28 | |

* 6, 7, 9-11, 14, 32-38, 48, 50, 51, 54ஆம் பிரதிகளில் ஆரணிய காண்டம் இல்லை.

| குறியீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 28 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 33 | |
| 29 | ,, | 41 | |
| 30 | ,, | 540 | |
| 31 | அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலே, சென்னே. | 514 | |
| 39 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 40 | |
| 40 | | | ஆழ்வார் திருநகரி ப்ரதிகளின் படி பெரியன் ஸ்ரீநிவாசையங்கார் பதிப்பித்தது 1942. |
| 41 | | | வை. மு. கோபாலகிருஷ்ண மாசாரியர் உரைப்பதிப்பு.1955 |
| 42 | | | கவித்தலம் துரைசாமி மூப்பஞர் பதிப்பு 1888. |
| 43 | அண்ணுமலேப் பல்கலேக் கழகம் | T.R.D.L. 1147 | |
| 44 | ,, | T.R.D.L. 1148 | |
| 45 | | | உ. வே. சாமிநாதையர் நூல் நிலேயப் பதிப்பு, அடையாறு. |
| 46 | | | பூமகள் விலாசம் பதிப்பு 1928 |
| 47 | அண்ணுமலேப் பல்கலேக் கழகம் | | |
| 49 | ,, | T.R.D.L. 1149 | |
| 52 | | | மலிவுப் பதிப்பு (எஸ். ராஜம் வெளியிட்டது) 1958. |
| 53 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 38 | |
| 55 | | | திரு. வேங்கடாசல முதலியார் பதிப்பு 1845. |
| 56 | திரு. சாத்தான் குட்டிப் பிள்ளே அவர்கள், தெங்கம்புதூர். | | |

# குறிப்பு

இப்பதிப்பில் மூலத்தில் எடுத்துக்கொண்ட பாடங்கள், செய்யுட்களின் தொடரெண் முறைப்படி அடிமுறையாகவும் சீர்முறையாகவும் தடித்த முதலெழுத்தோடு முன்னே காட்டப்பெற்றுள்ளன. அவற்ருேடு வேறுபட்ட பாடங்கள் அவற்றின்பின் முறையே சேர்க்கப்பெற்றுள்ளன. பாடங்களின் பின்னே குறிக்கப்பட்டுள்ள எண்கள், அப்பாடங்கள் உள்ள சுவடிகளின் குறியீடுகள். 40, 41, 45 என்ற எண்கள், அக்குறியீடுள்ள அச்சுப்புத்தகங்களிலுள்ள மூலபாடங்களுக்கும், அப்புத்தகங்களில் பிரதிபேதங்களாகக் காட்டப்பட்ட பாடங்களுக்கும் உரியன. '46—' என்னும் குறியீடு, 46 என்னும் எண் இட்டுக்காட்டிய அச்சுப்புத்தகத்தோடு ஒத்த பாடம் உடைய ஏடுகளின் எண்களையும் குறிக்கும். பிழைபட்ட பாடங்களும் அவற்றைக் காட்டும் சுவடிகளின் எண்களும், சிதைந்த சுவடிகளின் எண்களும் விரிவஞ்சிக் குறிக்கப்படவில்லை.

---

# 3. ஆரணிய காண்டம்

## பாட வேறுபாடு

### 1. விராதன் வதைப் படலம்

2605

I பேதியாதுநிமிர்; 46—
பேதியாதநிமிர்; 49.
பேதியாதுதிகழ்; 16.

பேதவுருவம்; 46—
பேதவுயிரும்; 27.
வேதவுருவம்; 1, 2, 4, 8, 49.

பிறழ்கிலா; 46—
பிறழ்கிலாது; 1, 2, 4, 5, 8, 13, 15, 16, 18, 19, 22, 24; 25, 27-29, 31, 40, 41, 43-45, 47, 56.
பிறழ்கிலார்; 26.

II ஓதியோதி; 46—
ஓதவோத; 49.
ஓதவோதி; 20.

III வேதம்வேதியர்; 46—
வேதவேதியர்; 1-5, 8, 12, 13, 15, 16, 18, 22, 23, 26-28, 31, 39, 43, 44, 47, 49.
வேதவேதியன்; 24, 25.
வேதாவேதியர்; 19, 21, 29.

முதலோர்; 46—
முதலாகிய; 27.
முதலாய்; 15.
முதலியோர்; 52.

தெரிகிலா; 46—
தெரிகலா; 12, 31, 39, 43.
அளவிடா; 16.
அறிகிலா; 49.
விண்ணோர்க்கு; 27.
வெளியிட; 20.
வெளியிடா; 5, 13, 17-19, 21, 22, 24, 25, 28, 29, 40, 41, 45, 56.
வெளிவிடா; 15.

IV நாதரவரெம்; 17, 18, 24, 40, 41, 45, 56.
தேவரவரெம்; 46—
தேவரவர்நம்; 1-5, 8, 12, 13, 20, 23, 26-28, 43-45, 47, 49.
நாதனவனம்; 29.

அறிவரோ; 46—
அறிவரே; 4, 15, 17, 18, 40, 41, 56.
அறிவனே; 19, 21, 22, 25, 29.

2606

I முத்திருத்தியதிருத்தியன; 19, 21, 22, 25, 28, 29.
முத்திருத்தியவ்விருந்தனைய; 46—
முத்திருத்தியவிருந்தனைய; 45.
முத்திருத்தியதிருத்தகைய; 45.
முத்திருத்தியதிருத்த மெனும்; 13.
முத்திருத்தியதிருத்தனகை; 49.
முத்திருத்தியதிருத்தனைய; 4, 5, 17, 18, 24, 27, 40, 45, 47, 56.

முத்திருத்தியதிருத்தியென; 23, 43.
முத்திருத்தியதிருத்தி யெனும்; 1, 8, 26, 44.
முத்திருத்தியதிருந்தனைய; 2–5, 16.
முத்திருத்தியதெனத்திக ழும்; 41, 45.
முத்திருத்தியனமென்ன னைய; 15.

மொய்ந்நகையொடும்; 21, 41, 45, 52.
மொய்நகையொடும்; 46—
மொய்நகையொடு; 12.
மொய்குழலொடும்; 15, 49.

II சித்திரக்குனிசிலைக்; 46—
சித்திரக்குருசிலைக்; 1, 8.

III அத்திரிப்பெயர்; 46—
அத்திருப்பெயர்; 15, 49.

அருந்தவன்; 46—
அருந்தவர்; 26.

இருந்த; 46—
அமைந்த; 17, 18, 40, 41, 45, 56,

IV பத்திரப்பழுமரப்பொழில்; 46—
பத்திரப்பழுமரப்பொழில; 27.
பத்திரப்படுமரப்பொழில்; 39.
பத்திரப்புதுமரப்பொழில்; 3, 47.

துவன்றுபழுவம்; 19, 21, 22, 25, 29, 41, 45, 52.
துவன்றபழுவம்; 46—
நற்பழுவமாம்; 27.

## 2607

I செறிபரந்தெரிய; 46—
செறிபரந்தணிய; 21, 22, 25, 29, 45, 52.
செறிமரந்தெரிய; 4, 12, 15, 17, 18, 40, 41, 49, 56.
செறிமறந்தெரிய; 41, 45.

நின்ற; 46—
நின்று; 25, 29.

திரள்பொற்; 46—
திரள்போர்க்; 2, 5.
திரளில்; 45.

II குறுங்கண்மலைபோற்குமரர்; 46—
குறுங்கண்வரைபோற் குமரர்; 13, 15, 20, 28.
குறுங்கணமலைக்குமரர்; 1, 4, 5, 8, 26, 44.
குறுங்கணவரைக்குமரர்; 19, 21, 22.
குறுங்கணிமலைக்குமரர்; 2.
குறுங்கணேமலைக்குமரர்; 3, 24, 47, 49.
குறுங்கவண்மலைக்குமரர்; 27.
குறுங்கனவரைக்குமரர்; 29.
குறுஞ்சிலைகொள்போர்க் குமரர்; 45.

முதலாம்; 1–5, 8, 12, 13, 15, 17–24, 26, 40–45, 49, 52, 55, 56.
முதலாய்; 46—

III எறிந்தவினைவான்முனி வனைப்; 46—
எறிந்தருளுமம்முனிவனைப்; 12.
எறிந்ததவமாமுனிவனைப்; 45.
எறிந்தவனையாண்முனி வனைப்; 25.
எறிந்தவினையான்முனி வனைப்; 3–5, 23, 24, 27, 43, 45, 47, 49.
எறிந்தவினையாண்முனி வனைப்; 19, 21, 22, 29, 45.
எறிந்தவினைவாண்முனி வனைப்; 15, 20.
எறிந்தவினைவாண்முனை வனைப்; 13.
எறிந்தவினைவான்முனை வனைப்; 17, 56.

IV அருந்தவனும்வந்துபுகலும்; 1, 2, 8, 12, 13, 15-22, 24-26, 40, 41, 44, 45, 49, 56.
அருந்தவனுவந்துபுகலும்; 46—
அருந்தவனுயர்ந்துபுகலும்; 23, 43.
அறிந்தவனும் வந்துபுகலும்; 3-5, 27, 29, 39, 47.
அறிந்தவனுவந்துபுகலும்; 41, 45.
அறிந்தவனுவந்துபுகல் வான்; 45.

## 2608

I குமரர்; 46—
குமர; 44.

நீரிவண்; 46—
நீயிவண்; 26.

II வந்தவளவோ; 1, 3-5, 8, 15, 21-28, 31, 39, 43-45, 47.
வந்தவளவே; 46—
வந்ததலவோ; 13, 16-18, 40, 41, 45, 52, 56.
வந்ததளவோ; 19, 20, 29, 49.
வந்தவலவோ; 12.
வந்துமளவோ; 45.

III எமரின்; 46—
எமரில்; 1-5, 8, 12, 13, 15-27, 43, 44, 47, 49, 56.

தவமுயன்றனர்கள்; 13, 17-22, 25, 29, 40, 41, 45, 49, 56.
தவமுயன்றவர்கள்; 46—
தவமுயர்ந்தவர்கள்; 1-4, 8, 15, 23, 24, 26, 27, 43-45, 47.

உருகினன்; 46—
உருகினுன்; 3, 24, 28, 47.

IV உவந்தனையதன்மை; 13, 15-20, 24, 28, 29, 40, 45, 52, 56.
உகந்தனையதான; 46—
உகந்தனையதன்மை; 5, 12, 21-23, 25, 27, 41, 43.
உகந்தனையதாய; 1, 2, 8.

## 2608 (a)

I அமர்ந்தவளை; 29—
அமர்ந்தவனை; 23, 43, 52.

அணையா; 29—
அனையா; 25, 43.

II ஏதிலின்ன; 29—
ஏதிலின்னல்; 52.

இறைஞ்ச; 29—
இறைஞ்சி; 25.

III வெறிப்பருபுவி; 29—
வெறிப்பதுபுவி; 23, 25, 43.
வெறிப்பொதுபுவி; 52.

IV பிறவியோனமதி; 29—
பிறவியொண்மதி; 52.

## 2608 (b)

I உன்நலங்கிளரவோகிமேல்; 29—
உன்னவங்கிதரயோகி பெலை; 25, 52.
உன்னவங்கிதரவோகி பெலை; 43.

யோகசயனன்; 29—
யோகிசயனன்; 25, 43.

II சரிதத்தயல்; 29—
சரிதத்தையல்; 52.

வினையின்; 29—
வினையின்று; 52.

III கீதமதுர; 29—
கீதமதுரத்; 25, 43, 52.

IV உவந்த; 29—
உகந்து; 52.
உவந்து; 25, 43.

பரன்வேகம்; 29—
மனவேகம்; 25, 43, 52.

### 2608 (c)

I பருதி; 29—
பருவி; 23, 43.

பதத்தருசைகை; 29—
பதத்தருசையை; 25.
பதத்தனுசனைக்; 52.
பதத்தனுசைகைக்; 23.

II கவந்தமலேயோய்; 29—
கவந்தபெலேயோய்; 25, 43, 52.

III கொளெனுத்; 29—
கொள்ளெனு; 52.

IV தருதிலங்கணை; 29—
தருதலங்கணை; 25, 43.
தருதவங்களைச்; 52.

### 2608 (d)

I பாற்கடற்பணிப்; 29—
பாறகடல்பணிய; 52.

பாம்பணைப்; 29—
பாம்பணை; 52.

II எதிரலாற்கவண்; 29—
எதிரவாற்கலன்; 25, 43, 52.

III கரத்தில்; 29—
கரத்தின்; 52.

IV ஊர்க்க; 29.
ஆற்க; 52.
ஊற்க; 23.

### 2608 (e)

I அன்றறக்கடல்; 29—
அன்றதக்கடல்; 52.

அழித்தகல; 29—
அளித்தகல; 52.

நின்றனிதரோ; 29—
நின்றணிதரோ; 23.
நின்றளிதரோ; 52.

II தக்கபனி; 29—
தக்கபணி; 43, 52.

திறத்தெனினரோ; 29—
திறத்தெணினரோ; 43.

III வென்றிகற்கு; 29—
வென்றிதற்கு; 43.

வேண்டுதலிரோ; 29—
வேண்டுதலரோ; 52.

IV இதற்கொரிறையெல்லே; 29—
இதற்குமொரெல்லே; 9.
இதற்குமோரெல்லே; 52.

பொருளள்ளுமுளரோ; 29—
பொருளாருமுளரோ; 23, 43.
பொருளுள்ளுளுளரோ; 52.

### 2609

I அவணுறைந்தவனரும்; 46—
அவனுறைந்தவனரும்; 2, 4, 16, 21, 22, 24, 44, 49, 56.
அவணுறைந்தவனிரும்; 29.
அவனுறைந்தவனிரும்; 25.

II அனசூயை; 1–3, 5, 8, 15–20, 41, 43–45, 56.
அநுசூயை; 46—
அணிசூயை; 4
அனுசூயை; 45.
உயர்சூயை; 45.

பணியால்; 46—
அணியால்; 26.

அணிகலன்; 46—
அணிகலம்; 1–5, 8, 12, 13, 15–22, 24, 25, 28, 29, 43, 49, 56.

III தூசினெடு; 46—
தூசிவை; 45.

சந்திவை; 46—
சொரிந்தனள்; 45.

சுமந்த; 46—
சுமந்து; 13, 45, 49.

IV அவர்; 5, 27.
உயர்; 46—

## 2609 (a)

II பத்தரிடர்; 29—
பத்திரிடர்; 52.

பற்றற; 29—
பற்றுற; 25.

IV அவண்; 29—
அவன்; 25.

## 2609 (b)

II எய்தியது; 29—
எய்தியத; 43.

நாதமெனலும்; 29—
நாதமெனிலும்; 25.
நாமமெனலும்; 52.

III ஓதியோயுளர்ப்; 29—
சோதியோயுளர்; 23, 43.
சோதியோவுள; 52.
சோதியோவுளர்; 25.

புரந்தரரதுட்சி; 29—
புரந்தரதுடர்ச்சி; 25, 52.
புரந்தரர்தொடர்ச்சி; 23, 43.

IV மாண்டவியன்; 29—
மண்டவியன்; 23, 43.
மாண்டவையின்; 52.

## 2609 (c)

II முனிவனேடுமெனல்; 29—
முனிவனுடுமென; 52.

அப்பினடமாம்; 29—
அப்பிநடமாம்; 52.

III இறைஞ்சியவணின்; 29—
இறைஞ்சவவணின்; 25.
இறைஞ்சியவனின்; 52.

IV நண்ணிவைகினர்; 29—
அண்ணுவைகினர்; 52.

## 2610

I மதமா; 46—
மதமால்; 12, 13, 15, 17, 18, 20, 24, 39, 41, 45, 56.
அரிமா; 46—
கதமா; 25.
மதமா; 21, 22, 26.
வயமா; 13, 17, 18, 40, 41, 45, 56.

II வட்ட; 46—
விட்ட; 24.

வெங்கண்வரை; 46—
வெங்கணரி; 1, 8.

பதினறு; 46—
பதினறும்; 47.
பதினலு; 1, 2, 5, 8, 12, 24, 45.
பதினலும்; 3, 4.

வலியின்; 4, 5, 12, 13, 15, 17–20, 23, 25, 27–29, 40, 41, 43, 45, 49, 56.
வகையில்; 46—
வறையின்; 16.

III கிட்டவிட்டிடை; 46—
கிட்டிவிட்டிடை; 3, 12, 24.
கிட்டியிட்டிடை; 1, 2, 8, 13, 15, 19–22, 25, 26, 29, 44.

கிடந்தன; 46—
செறிந்தன; 1, 2, 8, 13, 15–18, 20, 26, 40, 44, 45, 56.
கிடந்தது; 41.

செறிந்தவொருகை; 46—
செறிந்ததொருகை; 12, 24, 27, 28, 31, 39, 47.
செறிந்ததொருகைத்; 3–5, 20–23, 43, 45, 49, 52.
கிடந்ததொருகை; 1, 2, 8, 13, 15-18, 26, 40, 44, 45, 56.
கிடந்ததொருகைத்; 20, 45.

IV அயிற்ரெழில்; 1–5, 8, 12, 13, 15, 17, 18, 20–25, 27–29, 41, 43–45, 56.
அயிற்ரெகை, 46—
அயற்ரெழில்; 45.
அயிற்செறி; 45.
அயிற்படை; 49.
அயிற்றலை; 16.

கழுவொடே; 46—
கணுவொடே; 19.

## 2611

I செறிமயிர்ச்சுருள்; 46—
சொரிமயிர்ச்சுருள்; 28.

செறிந்த; 46—
தெரிந்த; 1, 2, 4, 8, 26, 39, 43–45.
இலங்கு; 24, 45.
கிடந்த; 19, 21, 22, 25, 29, 45.

செனியன்; 46—
செனிய; 44.
செனியின்; 15.

II வெற்புருவு; 24, 41, 45, 52.
தட்டுருவு; 46—
தொட்டுருவு; 2, 17, 18, 20, 23, 27, 41, 43, 45, 49, 57.
தொட்டுருமு; 12.
உறுப்புருவு; 21, 22.
உறப்புருவு; 19, 25, 29.
கட்டுருவும்; 4.
கட்டுருவு; 3, 16, 26, 28, 44, 45, 47.
கெட்டுருவு; 1, 5, 8.
வேற்றுருவு; 15.

பெற்றிடை; 46—
பெற்றியின்; 45.
ஏற்றிடை; 4.

நடந்ததெனமா; 46—
நடந்ததெனமால்; 12, 13.
நடந்ததெனலாம்; 2.
கிடந்ததெனமா; 45.

III சுற்றிய; 46—
சுட்டிய; 5, 15, 24, 27, 29, 31, 39.
கட்டிய; 12, 13, 19–22, 28, 45.
கட்டின; 16.
கிட்டிய; 3, 25, 45, 47, 49.
தட்டரின்; 4.
தட்டிய; 17, 18, 40, 41, 56.
தட்டிடை; 1, 2, 8.
தட்டின; 26, 44, 45.

வயங்குகிரி; 46—
வயங்குகரி; 15, 27.
வயங்குநிமிர்; 20.
வயக்கிரிகள்; 24.

வாதவிசையில்; 5, 13, 17, 18, 20, 40, 41, 45, 52.
வாதவிசையின்; 15.
பாதவிசையில்; 46—
பாதவிசையால்; 4.

IV பட்டது; 46—
பட்டிட; 27.

படப்படியின்மேல்; 46—
படப்படியின்முன்; 45.
நடந்தபடிமேல்; 27.

## 2612

I துளங்கியன; 46—
துளங்கிய; 40.

கனல்பொங்க; 46—
அனல்பொங்க; 1–4, 8, 40, 41, 45, 47, 56.
எரிபொங்க; 13, 20, 28, 49.

மழைசூழ்; 46—
மழைநீள்; 20, 28.
எழில்சூழ்; 3, 47.

III கண்டுளங்கதி; 1–5, 8, 12, 13, 15–19, 23–26, 28, 29, 40, 41, 43–45, 47, 49, 56.
கண்டுளங்கதிர்; 46—

குறைந்திட; 46—
குமைந்திட; 52.
குழைந்திட; 41, 45.
உறைந்திட; 21, 22, 45.

சுலாம்; 46—
சுலா; 45.
சுலாய்; 3, 5, 12, 15–18, 27, 31, 39–41, 47, 49, 56.
குலா; 45.
குலாம்; 13, 21, 22, 25, 26, 29, 41.
குலாய்; 23, 24, 43.

